# ரோமாபுரிப் பாண்டியன்

கலைஞர்
மு. கருணாநிதி




பாரதி பதிப்பகம்
126 / 108, உஸ்மான் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
த.பெ.எண்.4984
போன் : 2434 02 05

விலை : ரூ. 400.00

❑ ROMAPURIP PAANDIYAN ❑ Historical Novel By: Dr. Kalaingnar M.Karunanidhi ❑ Revised Fourth Edition Dec 1995 ❑ Fifth Edition : Dec 2007❑ Sixth Edition : Dec 2014❑ Price : Rs.400.00 ❑  ❑ Published By: BHARATHI PATHIPPAGAM, 126/108, Usman Road, T-Nagar, Chennai - 600 017. ❑ Email ID: bharathipathippagam@gmail.com ❑ P.B. No. 4984 ❑ ✆ 044 - 24340205 ❑ Printed at : Sivakami Printo graphics, 4/56, V.N. Doss Street, Chennai-600002. ❑ Cell : 9381201696. ❑

மூன்றாம் பதிப்பின்

# முன்னுரை

**"ரோமாபுரிப் பாண்டியன்"** மீண்டும் இப்போது வெளிவருகிறது. தமிழ்க்கனிப் பதிப்பகத்தாரிடம் இந்தப் பதிப்புக்கான உரிமை பெற்று வெளியிடும் பாரதி பதிப்பகத்தாருக்கு என் நன்றி !

1974ல் இந்த நூலை வெளியிட்டபொழுது தலைமையேற்றுப் பேருரையாற்றிய மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களும், நூலை வெளியிட்டுச் சிறப்புரையாற்றிய தலைமை நீதிபதி அனந்த நாராயணன் ஐ.சி.எஸ். அவர்களும் நூலின் முதற்படி யினைப் பெற்றுக்கொண்டு அன்புரையாற்றிய கவியரசு கண்ணதாசன் அவர்களும் இன்றில்லை! முதற் பதிப்பில் இடம் பெற்றிருந்த அவர்களின் உரைகள் இந்தப் பதிப்பிலும் இடம் பெற்றுள்ளன. அவர்களும் என் நெஞ்சில் இடம் பெற்றிருக்கிறார்கள். வாழ்க அவர்களின் புகழ் !

அன்புள்ள

மு.கருணாநிதி

சென்னை

# காணிக்கை

இளமைக் காலந்தொட்டு எழுதுவதில் எனக்குத் தனி ஆசை. 1939ம் ஆண்டில் என் கைப்பட எழுதிய கதை. அதன் பெயர் " செல்வ சந்திரா". எங்கேயோ அழுக் கேறிக் கிடந்த அந்தக் கையெழுத்துப் பிரதி அண்மை யில் கிடைத்தது. கடலில் மூழ்கிவிட்ட காவிரிப்பூம் பட்டினத்தின் மேல் எனக்கு இளமைப் பருவத்திலேயே ஒரு இடம் நெஞ்சில் உண்டு என்பதற்கு எடுத்துக்காட் டாக அந்தக் கதையைப் பின்வருமாறு தொடங்கி யிருந்தேன்.

**"நீர்வளம் நிலவளம் தங்கிய திராவிட நாட்டின் கண் காவிரிப்பூம்பட்டினமெனும் நகரில் ..."**

இன்று தமிழகத்தை ஆட்சி புரியும் முதலமைச்சர் பொறுப்பையேற்று அதற்குப் பிறகு காவிரிப்பூம்பட் டினத்தில் 'பூம்புகார்' உருவாக்க வேண்டுமென்று நான் புதிதாகக் கருதியதாக யாரும் நினைக்கக் கூடாது.

தமிழகத்தின் வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களும், புகழ் பரப்பிய தமிழ் வீரர்களின் பெயர்களும், பிஞ்சு வயது முதல் என் நெஞ்சில் நிலை பெற்றவைகளாகும்.

அந்த ஆழமான வேர்களின் அடிப்படையில் எழுந்ததுதான் இந்த வரலாற்றுக் கற்பனை.

"முரசொலி" கிழமை இதழாக இருந்தபோது 'ரோமாபுரிப் பாண்டியனை'த் தொடங்கினேன். பின் முரசொலி நாளிதழாக மாறிவிட்டது. அதன் பிறகு 'குமுதம்' இதழில் 'ரோமாபுரிப் பாண்டியன்' தொடர்ந்து வெளிவந்தது.

கற்பனை வேகத்தில் வரலாறு சிதைந்துவிடாமல் எச்சரிக்கையாக இருக்கவேண்டியிருந்தது. கதையாக மட்டுமன்றி அன்றைய தமிழகத்தின் சரித்திர சித்திர மாகவும் இதனைத் தீட்டியிருக்கிறேன்.

துணையாக இருந்து குறிப்புகள் தந்து உதவிய நண்பர் மறைமலை யான் மெத்தவும் பயன்பட்டார். அவருக்கும் இந்த பெரிய நூலை அச்சியற்றப் பணியாற்றிய அருமை நண்பர் கவிஞர் ஆனந்தம் அவர்கட்கும் தமிழ்க்கனிப் பதிப்பகத்தாருக்கும் விற்பனை உரிமை பெற்றுள்ள பாரி நிலையத்தாருக்கும் என் நன்றியும் அன்பும் என்றும் உண்டு.

இதனைப் படித்துத் தமிழர்கள் தங்கள் கருத்துக்களை அவ்வப்போது வழங்கி என்னை ஊக்கப்படுத்தியிருக்கி றார்கள். அவர்களுக்கு என் வணக்கம்.

என் ஒவ்வொரு எழுத்தையும் சுவைத்துப் படித்துப் பிறரையும் படிக்கச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்த என் அன்புத் தந்தை **முத்துவேலருக்கு** இந்த நூல் காணிக்கை.

அன்புள்ள,

சென்னை

மு.கருணாநிதி

# பதிப்புரை

**"ரோமாபுரிப் பாண்டியன்"** என்ற இவ்வரிய வரலாற்று நவீனத்தைக் கலைஞர் சிறப்பாகப் படைத்து அளித்துள்ளார்கள். இதன்கண் தமிழ்நாட்டுக்கும், ரோமாபுரிக்கும் இருந்த வணிகத் தொடர்பையும் தமிழர்தம் பண்டை நாகரிகத்தையும் வீரத்தையும் பற்றி தனக்கேயுரிய அழகு தமிழ் நடையிலே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். சுவை குன்றாது படிப்போர்க்கு விறுவிறுப்பை ஊட்டும் வகையில் இப்புதினம் உருவாகி யிருப்பதை நாம் உணரலாம்.

இப்பெரிய நவீனத்தை வெளியிட எங்கட்கு அனுமதி அளித்த தமிழ்க்கனிப் பதிப்பகத்தார்க்கும், கலைஞர் அவர்கட்கும் நன்றி!

இந்நூலினை ஏற்று எங்களைத் தொடர்ந்து ஊக்குவித்து வரும் தமிழ்ப் பெருமக்களுக்கும், ஆர்வத்துடன் அச்சிட்ட அச்சகத்தாருக்கும் எங்கள் உளம் நிறைந்த நன்றி!

**பழ.சிதம்பரம்**
பாரதி பதிப்பகம்

## கலைஞரின் "ரோமாபுரிப் பாண்டியன்"

**நூல் வெளியீட்டு விழா சென்னை, கலைவாணர் அரங்கத்தில் 9.6.1974 ஞாயிறு மாலை 6 மணியளவில் நடைபெற்றது.**

**தலைமை ஏற்ற மொழி நூலறிஞர்**

**திரு. ஞா. தேவநேயப் பாவாணர்** அவர்கள் ஆற்றிய

**தலைமை உரை :**

நம் தமிழ்நாட்டு முதலமைச்சர் மாண்புமிகு கருணாநிதியார் என்னும் அருட் செல்வனாரின் பொன்விழாவையொட்டி அவர்கள் எழுதியுள்ள "ரோமாபுரிப் பாண்டியன்" என்னும் புதினமும், "மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று" என்னும் ஒரு கட்டுரைத் திரட்டும் ஆகிய இரு புத்தகங்களின் அரங்கேற்ற விழா அல்லது வெளியீட்டு விழா இன்று நிகழ்கின்றது.

அந்த இரு நூல்களில் 'ரோமாபுரிப் பாண்டியன்' என்னும் புதினத்தை நம் ஓய்வு பெற்ற தலைமை நடுவர் உயர்திரு அனந்தநாராயணன் அவர்கள் வெளியிடுவார்கள். அதைப் பாவரசு கண்ணதாசன் அவர்கள் பெறுவார்கள். அதன்பின்பு அந்தக் கட்டுரைத் திரட்டை மாண்புமிகு புலவர் கா.கோவிந்தனார் வெளியிடுவார். அதைப் பெரும் புலவர் கி.வா.ஜகந்நாதன் பெறுவார். இப்போது இந்த 'ரோமாபுரிப் பாண்டியன்' என்கின்ற புதினத்தைப் பற்றிச் சிறப்பாக ஒன்றும் பேச வேண்டுவதில்லை. ஏனென்றால் பேசுவதற்கு ஒரு பெருஞ் சொற்கொண்டல் இங்கே காத்திருக்கின்றது.

அது ஒரு புதினம்; அதாவது நாவல்; வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு மிகத் திறம்பட எழுதப்பட்ட ஒரு புதினம். ஒரு புது வரிவான கதை. ரோமாபுரித் தொடக்கத்தில் இருந்து அந்தக் கதை எடுத்துக் கூறுகின்றது. அது கி.மு. 753 என்று சொல்லப்படுகின்றது. இதை நினைக்கும்போது ஒரு சிலர் – அதாவது ஆராய்ச்சி இல்லாதவர்கள், இவ்வளவு பழமையானதா என்றுகூடச் சற்று வியக்கலாம்.

ஆனால் தமிழ், அதற்கும் முந்தினது. இந்த ரோமாபுரியோடு தமிழ்நாடு வணிகத் தொடர்புடையது மட்டுமன்று, இன்னும் சொல்லப்போனால் அதற்கு முந்தி மொழித் தொடர்பே உடையது. அந்த வணிகத்தினால் இணைக்கப்பட்ட சில பொருட்களின் பெயர்கள் மட்டுமல்ல, அந்த மொழியிலேயே பல அடிப்படைச் சொற்களே தமிழாக இருக்கும். அவற்றை எல்லாம் இப்போது

சொல்ல நேரமில்லை. வேறு சமயம் வாய்க்கும்போது சொல்வேன். ரோமா புரிப் பாண்டியனுடைய கதை இது. இதைத் திறம்பட நம்முடைய முதலமைச்சர் அவர்கள் எழுதி இருக்கின்றார்கள். ஒரு புதினம் என்கிற காவியம் எழுதப்படும் போது அந்தக் கதையானது நான்கு வகையாகப் பிரித்துச் சொல்லப்படும்.

இதிலே இவர்கள், உள்ளோன் தலைவனாக, உள்ளதும் இல்லதும் புணர்த்து அழகாக எழுதி இருக்கிறார்கள். இதைப் பார்க்கும்போது இவர்கள் பிறப்பிலேயே இதற்குரிய திறன் அமைந்தவர்கள் என்று நினைக்கும்படியாக இருக்கின்றது. கரிகால் வளவனே திரும்ப நம் கருணாநிதியாராகப் பிறந்தானோ என்றுகூட நாம் நம்பும்படியாக இருக்கின்றது. அந்தக் கரிகால் வளவனும் இந்தக் காவிரி நாட்டிலேயேதான் பிறந்தான். இவரும் அந்த நாட்டிலேதான். அந்தப் பூம்புகாரை அவன் வளப்படுத்தினான். இவரும் இப்போது அதைப் புதுப்பித்து வருகின்றார். காவிரிக்கு அவன் கரை கட்டினான். இவரும் காவிரி நீருக்கு ஒரு வரப்பு கட்டுவதற்கு இயன்றவரை முயல்கின்றார். அவன் இளமையிலேயே பகைவராலே இடர்ப்பட்டுத் துன்பப்பட்டு அதிலிருந்து தப்பினான். அப்படியே இவரும் போன பொதுத் தேர்தலிலே எப்படியோ பகைவரிடத்தில் அகப்பட்டுத் தப்பினார் என்பது எல்லோருக்கும் தெரிந்த செய்தி. இந்தப் பெயரைப் பார்த்தால்கூட அந்த முதல் எழுத்து கரிகாலன்; கருணாநிதி என்கிற முதல் அசைகூடக் கொஞ்சம் ஒத்துவருகிறது. இனி அந்தக் காலத்திலேயே அவரைப்பற்றி ஏதாவது ஒரு புகைப் படமோ, பூச்சுப்படமோ இருந்திருந்தால் இவர் முகச்சாடைகூட ஒத்துப்போகுமோ என்றுகூட நாம் நினைக்கும்படியாக இருக்கிறது. அந்த அளவிற்கு இவர்களுடைய உள்ளம் முழுவதும், இவர்களுடைய அறிவு, நினைவு, மதி மூன்றும், அந்தப் பூம்புகாரைப் புதுப்பிப்பது, காவிரியை வளப்படுத்துவது இவற்றிலேயே முனைந்திருக்கின்றது.

இவர்கள் இப்போது அதிகார முறையிலே, ஓர் அரசன் நிலையிலே, ஆளுகின்ற அரசன் நிலையிலே இருக்கின்றார்கள்.

**அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.**

**தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலனாள் பவர்க்கு.**

**சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு**
**தாழ்ச்சியுள் தங்குதல் தீது.**

**தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க**
**தூங்காது செய்யும் வினை.**

இப்படி பல திருக்குறளைப் பார்த்தால் அவற்றிற்கெல்லாம் ஒரு சிறந்த இலக்கியமாக இவர்கள் விளங்குகிறார்கள். பண்டை நாளிலே பாண்டிய நாட்டிலே மூன்று கழகங்கள் இருந்தன, தமிழை வளர்ப்பதற்கு. இவற்றுள்ளே

முதல் கழகத்திலே எழுவர் பாவரங்கேறினர். பா என்றால் செய்யுள். இரண்டாவது கழகத்திலே இடைக்காலத்திலே ஐவர் பாவரங்கேறினார்கள். கடைக் கழகத்திலே மூவர் பாவரங்கேறினார்கள் என்று சொல்லப்படுகிறது. ஈராண்டுகளுக்கு முன்பு இதே இடத்திலே இவர்கள் பாவரங்கேறினார்கள் என்பது உங்களில் பலருக்குத் தெரிந்திருக்கும். அதிலேதான் இவர்களுக்கு "தமிழ்வேள்" என்ற பட்டமும் பேராசிரியர்களால் அளிக்கப்பட்டது. இந்தத் தமிழகம் முழுவதும் மட்டுமின்றித் திராவிட நாடுகளிலிருந்தும்கூட எல்லாத் தமிழ்ப் பேராசிரியர்களும் இங்கு அன்று குழுமியிருந்தார்கள். அவர்களுடைய சார்பிலே அவர்களால் "தமிழ்வேள்" என்ற பட்டமானது இவர்களுக்கு வழங்கப்பட்டது. அதிலே இவர்கள் பாவரங்கேறினார்கள் என்றுதான் சொல்லவேண்டும். இவர்களுடைய பாடல்கள் எல்லாம் சிறந்த ஆராய்ச்சி முறையிலே தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடப்பட்டன. இப்பொழுது அடுத்தபடியாக உரைநடை. பண்டைக் காலத்திலே நம்முடைய புலவர்கள் வழக்கிலே, எல்லாம் செய்யுள் வழக்காகத்தான் இருந்தது. பொதுமக்கள்தான் நம்போலப் பேச்சுக்கள்– உரைநடை என்கிற–'புரோஸ்' என்று சொல்லப்படுகிற – வகையிலே பேசி வந்தார்கள். பிற மக்கள், அதாவது புலவர்கள் எல்லாம் எழுதுவது மட்டுமல்ல, பேசுவதுகூடச் செய்யுளாகவே இருந்தது. அந்தக் காலத்திலே! இப்பொழுது ஆங்கிலத்திலே 'கலோக்கியல்', 'லிட்டரரி' என்று பிரிப்பார்கள். நாம் இப்பொழுது உலக வழக்கு, இலக்கிய வழக்கு என்றே சொல்கிறோம். ஆனால் பண்டைக் காலத்திலே எல்லாம் உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்றுதான் சொன்னார்கள். பண்டை மக்கள் என்று சொல்லும்போது நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன்.

அவர்கள் தெற்கே முழுகிப்போன குமரி நாட்டிலே இருந்தார்கள். தமிழர் வெளிநாட்டில் இருந்து வந்தவர்கள் அல்லர்; சிலர் பலர் கருதுகிறபடி! தென்னாட்டுப் பழங்குடி மக்கள்; அந்தத் தமிழும் தென்னாட்டிலே தோன்றியது. தமிழைச் சிறப்பாக ஒருவர் ஆராய்ந்திருந்தால் – வரலாற்று அடிப்படையிலே ஆராய்ந்திருந்தால் – அதன் உண்மையை அறிவார்கள். தமிழ் வெளிநாட்டிலிருந்து வந்தது என்று எவராவது சொல்வதாய் இருந்தால், ஒன்று அவர்கள் தமிழைச் சரியாக அறியவில்லை என்பது; அல்லது அவர்கள் தமிழ்ப் பகைவர்கள் என்பது; இந்த இரண்டில் ஒன்று என்ற அந்த முடிவுக்குத்தான் வரமுடியும். தமிழ் தென்னாட்டிலே தோன்றிய மொழி. ஆகையினால் இந்த ரோமாபுரித் தொடர்புக்கு முன்னாலேயே அது இருந்தது. அந்தத் தமிழ்நாட்டு வரலாறு, இந்த ரோமாபுரித் தொடர்பு என்றால், ரோமர்களுடையது இந்த கி.மு.8ம் நூற்றாண்டு. அதற்கு முன்னாலேயே எகிப்து நாட்டோடும் சுமேரிய நாட்டோடும் தொடர்பு இருந்தது.

அடுத்து 'ரோமாபுரிப் பாண்டியன்' என்ற புதினம் இந்த அரங்கத்தில் இப்போது வெளியிடப்பெறும்.

நூலை வெளியிட்டு
ஓய்வுபெற்ற தலைமை நீதிபதி
**திரு.அனந்தநாராயணன்** ஐ.சி.எஸ்.
அவர்கள் பாராட்டிப் பேசியது :

மேல்நாட்டில் சிறுவரைப்பற்றி ஒரு பழமொழி உண்டு. அதாவது 'சிறுவரைப் பார்க்கலாம், அவர்கள் ஒலியைக் கேட்கக்கூடாது' என்று. "Children should be seen, not heard". இதே பழமொழி நீதிபதிகளுக்கும் அதிகமாகப் பொருந்தும் என்று எனக்குத் தோன்றுகிறது. நீதிபதிகளைப் பார்க்கலாம் நீதிமன்றங்களைத் தவிர்த்து மற்ற இடங்களில் அதிகம் கேட்கக்கூடாது. ஓய்வுபெற்ற நீதிபதிகள் இன்னும் அடக்க ஒடுக்கமாக இருக்கவேண்டுமென்பது என்னுடைய முடிவு. நம்முடைய இலக்கிய மரபில் ஒரு தொடர் வருகிறது. "மூலையில் இருந்தாரை முற்றத்தே விட்டார்" என்று. மூலையில் இருந்த என்னை முற்றத்தில் ஏன் விட்டார்கள்? எனக்கு என்ன தகுதி? என்று நான் சிறிது யோசித்துப் பார்த்தேன். அதில் எனக்கு ஒரு தகுதி தோன்றிற்று. அதை கூறுகிறேன்; தமிழில் எனக்கு இலக்கியப் பற்று உண்டு, சிறு வயதிலிருந்து. ஆனால் என்னைவிட அதிக இலக்கியப் பற்று உள்ளவர்கள் இங்கு இருக்கிறார்கள். என்னைவிட வாழ்நாளை எல்லாம் தமிழ் இலக்கிய மரபிலே, இலக்கிய ஆய்விலே செலுத்தியவர்கள் இருக்கிறார்கள்.

தமிழில் நவீனம் என்று தோன்றியது? 19–ஆவது நூற்றாண்டில்தான் (அதற்கு முன்பு பெஸ்கி என்ற வீரமாமுனிவர் 'பரமார்த்த குரு கதை' போன்ற சிறு வசனம் எழுதினார்). அதற்கு முன்புள்ள இறையனார் அகப்பொருள் உரை, அடியார்க்கு நல்லார் உரை, பரிமேலழகர் உரை–இவைகள் எல்லாம் உரைநடை என்று சொல்ல முடியாதவாறு கடினமாக இருந்தன. பிரதாப முதலியார் சரித்திரம் என்று வேதநாயகம் பிள்ளை எழுதிய நூல் (இதை நுட்பமாகக் குறித்தல் வேண்டும்). ஆங்கில இலக்கிய சரித்திரத்தில் கோல்டுஸ்மித் (Goldsmith) எழுதிய 'விகார் ஆஃப் வேஃக்பீல்டு' (Vicar of Wakefield) என்ற நூலுக்கு எடை சமமாக இருக்கிறது. அதாவது பாதி நீதி நூல், மீதி நவீனம். இன்னும் நவீனம் முற்றும் மிளிரவில்லை. அதன்பிறகு காலஞ் சென்ற ராஜம் ஐயர் அவர்களும், என்னுடைய தந்தையார் காலஞ்சென்ற மாதவையா அவர்களும், முறையே கமலாம்பாள் சரித்திரம், பத்மாவதி சரித்திரம் என்ற 2 நவீனங்களை எழுதினார்கள். அந்த நவீனங்களை அடிப்படையாகக் கொண்டுதான் இப்போது நவீனங்கள் பெருகி வந்திருக்கின்

றன. அதுவும் வரலாற்று அடிப்படையான நவீனங்கள் 20 ஆண்டுகளாகத் தமிழகத்தில் புறப்பட்டு வருகின்றன. என் தந்தையார் பிறந்த நூறாவது ஆண்டு 1974. இந்தத் தகுதி ஒன்றைப் பற்றியே நான் இந்த நூலை வெளியிடத் தகுதி உள்ளவன் என்று நினைக்கிறேன். ஏனென்றால் தமிழில் இலக்கியச் சரித்திரத்தின் நவீனகர்த்தாக்கள் மூவரில் ஒருவராக அவர் இருந்தார் என்பது சிறிதேனும் ஐயமில்லாமல் ஏற்பட்டுவிட்டது. அவரைக் குறித்து நான் சிறப்பாகப் பேசுவது தகுதியல்ல.

இப்போது இந்த வரலாற்றுச் சான்றாக உள்ள நவீனத்திற்கு என்ன இலக்கணம் என்று சிறிது ஆராயவேண்டும். இதை எழுதிய டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார்கள். இன்னின்ன வரலாற்றுச் சான்றுகளைக்கொண்டு இந்த 'ரோமாபுரிப் பாண்டியன்' என்ற நவீனத்தை நான் கற்பனை செய்து சிருஷ்டித்தேன் என்று காட்டியிருக்கிறார். உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். சர் மார்டிமர் வீலர் என்ற புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர் ஒருவர் இருந்தார். அவர் புதுச்சேரிப் பக்கத்தில் உள்ள அரிக்கமேடு என்ற இடத்தில் உலாவும்போது அகஸ்டஸ் சீசருடைய பொன் நாணயங்கள் சில ஒரு புதையலில் கிடைத்தன. அது இம்முன்னுரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் மற்றொரு செய்தி முன்னுரையில் குறிப்பிடப்படவில்லை. அதாவது ஒரு பானையின் ஒரு பாகம் என்று கூறுவார்களே, அதுவும் கிடைத்தது. ரோமாபுரியில் அகஸ்டஸ் சீசர் ஆண்ட காலத்தில் உள்ள ஒரு தொழிற்சாலையின் முத்திரை அதில் இருந்தது. அதைப் பார்த்து சர் மார்டிமர் வீலர் மிகவும் வியப்படைந்ததாக எழுதியிருக்கிறார். அதாவது நாவாய்ப் போக்குவரத்து, வணிகம் இவைகள் எல்லாம் ரோமாபுரிக்கும், தமிழகத்திற்கும் மிகமிக விரைவாகவும், மிகமிகச் சுறுசுறுப்பாகவும் அந்தக் காலத்தில் நடந்தன என்பது ஐயமின்றித் தெளிவாகின்றது. ஆகவே, வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டுதான் இந்த நூல் எழுதப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்த நூலில் எழுதப்பட்டிருக்கிற பெருவழுதிப் பாண்டியன் என்பவன்தானா ரோமாபுரிக்குச் செழியன் என்பவனைத் தூது ஆக அனுப்பினான்? இதற்கு வரலாற்றுச் சான்று என்ன? என்று கேட்கக்கூடாது. ஏன் என்றால் வரலாற்றுச் சான்றுகளைத் தழுவிய நவீனத்திற்கு, ஆசிரியனுக்கும் கற்பனைக்கும் ஒரு இடம் கொடுக்கவேண்டும். கற்பனைக்கு இடம் கொடுக்காவிட்டால் அது வரலாற்றுப் புத்தகமாகி விடுமேயொழிய நவீனமாகி விடாது. ஆகவே முதல் இலக்கணம் என்னவென்றால் வரலாற்றுச் சான்றுகள் இருக்கவேண்டும். ஆனால் கற்பனையும் இருக்கவேண்டும். விளக்கமாக, ஜூனோ என்ற அகஸ்டஸ் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் எகிப்தில் ஒரு யவனக் கிழவரிடம் தமிழ் கற்றுக்கொண்டு தமிழில் பேசியதாக இதில் இருக்கிறது. இதற்கு எங்கே வரலாற்றுச் சான்று என்று நீங்கள் கேட்கக்கூடாது. நடந்திருக்கக்கூடியதுதான். அதை கலைஞர் கற்பனை செய்திருக்கிறார். நடந்திருப்பதுடன் அது ஒத்திருப்பதால் அதை நாம் ஏற்க வேண்டும்.

கற்பனையே வறட்சியாக இருக்கவேண்டுமென்றால் நூல் உருவாகியிருக்காது. இதை நீங்கள் சிறிது மனதில் வாங்கிக் கொள்ள வேண்டும். இது இந்த நூலின் ஒரு சிறந்த அம்சம். பல வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டது. ஆனால் கற்பனையினால் பெருகியிருப்பது. கற்பனை ஒன்றும் வரலாற்றுச் சான்றுக்குப் புறம்பாகவோ எதிர்த்தோ இல்லை. அதற்கு ஒரு சிறு இலக்கணம் கூறலாம். அதற்கு ஆங்கிலத்தில் Anachronismஎன்று சொல்கிறார்கள். நான் தமிழாக்கம் செய்தால் 'இடம், பொருள், ஏவல், முரண்பாடு' என்று கூறுவேன். இடம், பொருள், ஏவல், முரண்பாடு இருக்கக்கூடாது. வரலாற்றுச் சான்று தழுவிய நவீனத்தில், இங்கு இருந்த ஒரு பாண்டியன் ஒரு மோட்டார் காரை ஓட்டிக்கொண்டு போனான் என்று எழுதினால் அதை ஒத்துக்கொள்ள முடியாது. அந்தக் காலத்தில் ரோமாபுரியிலும், தமிழிலும் ஒருவருக்கும் புலப்படாத ஒரு விஞ்ஞானச் செய்தியோ, மற்றச் செய்தியோ இதில் புகுந்தால் இடம், பொருள், ஏவல், முரண்பாடு ஆகும். அந்த முரண்பாடுகள் சிறிதும் இல்லாமல் கலைஞர் மிகத் திறமையாக இதை எழுதியிருக்கிறார். ஆனால் இதுவும் ஒரு இல்லாமையின் குணம், குற்றம், 'நெகடிவ் வர்ச்சு'(Negative Virtue) என்று கூறலாம். இதில் சிறப்பான குணங்கள் என்ன என்று நீங்கள் கேட்கலாம். நான் சிறிது கூறுகிறேன். நான் அதிகமாகப் பேச விரும்பவில்லை, சிறிதே கூறுகிறேன். இதில் முதல் சிறப்பான குணம் என்னவென்றால் வரலாற்றுச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்ட, முழ்வதும் நடந்திருக்கக் கூடிய கதாபாத்திரங்களும், 'கருவூலம்' (பிளாட் என்று சொல்கிறோம் அல்லவா?) அதுவும் கூடிய இந்த நூல் மிகத் திறமையாக எழுதப்பட்டதில் அந்தக் காலத்துத் தமிழர்வளம், தமிழர் பண்பு, தமிழர் குணம், தமிழர் வீரம், பெண்மையின் திண்மை இவைகள் எல்லாம் விளக்கப்பட்டிருக்கின்றன. இவை எல்லாம் ஓரளவு கற்பனையாக இருக்கிறதே, அந்த நாட்களிலும் பல குறைகள் இருந்திருக்க வேண்டுமே என்று சிலர் நினைக்கலாம்.

அண்மையில் சில அமெரிக்கர்களுக்கு நான் தமிழ்நாட்டின் சிறப்புக் குறித்து, அதாவது கி.மு. 2 முதல் கி.பி.2 வரை தமிழ்நாட்டில் உள்ள வளங்களைப் பற்றிப் பேச வேண்டியிருந்தது. அப்போது பல நூல்களைப் படித்துத் தமிழிலிருந்து ஆங்கில ஆக்கம் செய்து அவர்களுக்கு விளக்கிக் காட்டினேன். அப்போது முக்கியமாக எனக்குப்பட்டது என்னவென்றால் தமிழில் நாம் அகம், புறம் என்று கூறுகிறோம். அதாவது, ஆண்–பெண்ணிடையில் வயது வந்த பிறகு முதலில் குறை குற்றம் இல்லாமல் ஒருவருக்கு ஒருவர் நேசமாக நேரிடும் அன்பு என்னும் காதலின் மாண்பு; இரண்டாவது வீரம். போரில் வீரம், போர்க்களத்தில் வீரம், போர்க்கள வீரனின் தாய்மாரின் வீரம். இவை இரண்டும் தமிழில்– தமிழ் இலக்கியத்தில் – பெரும் சுவைகளாக அமைந்திருக்கின்றன. இவை இரண்டும் இந்த நூலிலும் மிகப் பெரிய சுவைகளாக அமைந்திருக்கின்றன. ஆகையால் மிகையாகக் கூறல் என்ற (அதிக யுக்தி என்று சொல்வார்கள் வடமொழியில்) அந்தக் குற்றத்திற்கு இந்த நாவலாசிரியர் ஆளாகவில்லை என்பது என்னுடைய நீதிமன்ற அபிப்பிராயம் என்று கூறலாம்.

ஆம். இங்கு முத்துநகை என்று ஒரு பெண் வருகிறாளே, அவள் என்ன ஆண் வேடம் தரித்துப் போகிறாளே; சிறிதும் அச்சம் இல்லாமல் குதிரை மீதேறிச் செல்கிறாளே; பயங்கரமான கட்டங்களில் சிக்கித் தவிக்கிறாளே என்றால், அவைகள் தமிழ் மரபுக்கு ஒத்தவை அல்ல என்று நாம் கூறிவிட முடியாது. நான் இங்கு இலக்கியத்திலிருந்து எடுத்துக் காட்டினால் காலம் ஆகிவிடும். அந்த அமெரிக்கர்களிடம் கூறினேன்: புறநானூற்றில் இருந்து. ஒன்றில் தாய் கூறுகிறாள்; என்னுடைய மகனைத் தேட வேண்டுமா? என்னுடைய மகன் என் கர்ப்பப் பை ஆகிய குகையில் சிறு காலம் தங்கிய புலி. (எவ்வளவு அழகான உவமை!) அந்தப் புலி சென்றுவிட்டது! அதைப் போர்க்களத்தில் முதுகில் ரணம் இல்லாமல் மல்லாக்கப் பார்க்கலாம் என்கிறாள்.

ஆகையால் மறம், வீரம் இவைகள் உண்மையாகவே தமிழ்நாட்டில் மிகவும் செறிந்த நயங்கள் என்பது நமக்குச் சிறிதேனும் ஐயமில்லாமல் தெரிகின்றது. மற்றொன்று எனக்கு மிகச் சுவையாகப் பட்டது. ஒரு பெண் ஆண் வேடம் தரிப்பதோ, அந்த ஆண் வேடம் தரித்த பெண்ணை மற்றொரு பெண் காதலிப்பதோ, இது நேரிடக்கூடியதா? ஆண் என்று நினைத்து மயங்கிக் காதலிப்பது நேரிடக்கூடியதா என்று நான் நினைத்த அளவில் ஷேக்ஸ்பியர் மகாகவியின் இரண்டு நாடகங்களில் – 'As you like it' 'Twelfth Night' என்ற இந்த இரண்டு நாடகங்களிலும் இது முக்கிய கட்டமாக வந்திருக்கிறது. பெண் ஆண் வேடம் தரிக்கிறாள். அந்த ஆண்வேடம் தரித்த பெண்ணை மற்றொரு பெண் காதலிக்கிறாள்! ஆனால் ஷேக்ஸ்பியர் ஒன்றை விட்டுவிட்டார். நம்முடைய கலைஞரை ஒப்பிட்டுப் பார்த்தால் ஷேக்ஸ்பியர் சிறிது கவனம் இல்லாமல் இருந்திருக்கிறார். குரல் வெளிப்பட்டு விடுமே என்ற ஒரு செய்தி! எவ்வளவுதான் உடை உடுத்தி, பெண் ஆணாக நடித்தாலும், குரலினால் அறிமுகப்படுத்தப்பட்டு விடுவாளோ என்ற ஒரு செய்தி இருக்கிறது அல்லவா? அதில் கலைஞர் மிகவும் கவனம் செலுத்தி, "இந்த முத்துநகை என்ற பெண் ஆண் குரலில் பேசிப் பழகிக் கொண்டாள்" என்று எழுதியிருக்கிறார். எனக்குச் சிறிது வியப்பாக இருந்தது. அடடே நல்ல வேளை, இவர் ஒரு வழக்கறிஞராக ஆகி, நீதி மன்றங்களில் வந்திருந்தால், நமக்கு மிகத் தொல்லையாக இருந்திருக்குமே; இவ்வளவு நுட்பமாக ஷேக்ஸ்பியர் மகாகவி கவனிக்காது விட்டதைக்கூட இவர் கவனித்து இருக்கிறாரே என்று உண்மையில் நான் அதை மிகவும் மெச்சினேன். மற்றொன்றைக் கூறவேண்டும். இதில் ஒரு பிரெஞ்சு மொழியை நான் உபயோகிக்கக் கடமைப்பட்டுள்ளேன். சிலருக்கு அது தெரியாமல் இருக்கலாம். அதற்குத் தமிழாக்கம் கூறுகிறேன். இப்போது புதிய இலக்கணம் இருக்கிறதே, இதில் நான் சிறிது உழல வேண்டியிருக்கிறது.

புதிய இலக்கிய வட்டங்களில் 'அவமகாம்' என்ற பிரெஞ்சு மொழி உபயோகிக்கப்படுகிறது. அதற்கு, 'முன்னணி வகுப்பு' என்று பொருள். முன்னணி வகுப்பு எழுத்தாளர்க்கு ஒரு முக்கிய லட்சணம் என்னவென்றால், பால் அல்லது இன உணர்ச்சி அதாவது ஆண் மகன் பெண்ணால் கவரப்படுதல், பெண் ஆண்

மகனால் கவரப்படுதல். இதைப் பச்சைப் பச்சையாக-எவ்வளவு பச்சையாக என்றால், உங்கள் வீட்டிற்குக் கொண்டு போனால் குழந்தைகளிடமோ, மனைவியிடமோ, அக்காள் தங்கைகளிடமோ காட்டமுடியாதபடி எழுதுதலாகும். இது பேரிலக்கியம்! அல்லது பேரிலக்கியத்திற்கு ஒரு சான்று. இந்த எண்ணம் எப்படி உதித்ததோ எனக்குத் தெரியவில்லை. இதில் என்ன இருக்கிறது என்றும் தெரியவில்லை. ஏனென்றால் விலங்கினங்களுடன் சமமாக நாம் பங்கிட்டுக் கொள்வது இந்தப் பால் உணர்ச்சி. ஆனால் மனிதனுக்கு மனது என்ற ஒன்று இருக்கின்றது. அவனுக்கு உயிர் இருக்கின்றது, சிந்தனை இருக்கின்றது, ஆண்பால், பெண் பால் என்ற வித்தியாசத்தில் முழு அன்பையும் செலுத்த முடியும். அந்த முழு அன்பையும் செலுத்தும் காதலில் தூய்மையான காதல் இந்தப் பால் உணர்ச்சியில் ஒரு பங்கு பெறுகிறது. அப்போது அதற்குத் தனியாக ஒரு அழகு, சோபிதம் இருக்கிறது. இதைப் பிரித்து விட்டு உணர்ச்சியாக, பச்சையாக வெளிப்படுத்தினால் அது மிக ரசக் குறைவாக, மிகச் சுவைக் குறைவாக இருக்கும். இதை ஏன் இலக்கியமாகக் கருதுகிறார்கள் என்று இன்னும் எனக்குப் புரியவில்லை. உண்மையில் எனக்குத் தடுமாற்றமாகத்தான் இருக்கிறது.

நமது கலைஞர் எழுதியிருக்கிற இந்த நூலில் இன்பச் சுவை (சிருங்காரம் என்று வடமொழியில் கூறுவார்கள்) அது மிக அடிப்படையானது. அவலச் சுவை (சோகரசம்), இன்ப ரசம் (சிருங்காரம்), நகைச்சுவை (ஹாஸ்யம்) இவை மூன்றும் இல்லாமல் இலக்கியங்களை இயற்றுவதே நல்லதல்ல. இவர் இன்பச் சுவையை எடுத்துக் கையாண்டு இருக்கிறார். ஆனால் தூய்மையான காதலாகவே கையாண்டிருக்கிறார். அந்தக் காதலில் இன உணர்ச்சி, பாலு ணர்ச்சி, கவர்ச்சி இருக்கிறது. ஆனால் அதில் பதுங்கி மறைந்து இருக்கின்றது. இந்தப் புத்தகத்தை நீங்கள் – நான் நீதிபதியாக இருந்து சொல்கிறேன்–தங்கு தடை இல்லாமல் உங்கள் தங்கைமார்கள், மனைவி, குழந்தைகளிடம் வழங்க லாம். இதில் ஒரு வாசகமாவது, ஒரு சொல்லாவது அவர்களுக்கு ஒரு அசிங்க உணர்ச்சியையோ, ஒரு வெட்கத்தையோ கொடுக்கும் சொல்லாக இல்லை. இதை நான் மெச்ச வேண்டியதுதான். ஏனென்றால் இது வேண்டாம், பச்சை பச்சையாகத்தான் நான் எழுதுவேன். எங்களுக்கு உரிமை உண்டு என்றும் (யாருக்கு என்ன உரிமை இருக்கிறது என்று இப்போது ஒன்றும் தெரியாமல் கலங்கலாக இருக்கிறது!) அடிபட உரிமை, அடிக்க உரிமை, இரண்டும் கேட்கிறார்கள். அடிபட உரிமை உண்டா? அடிக்கும் உரிமை உண்டா? இது எங்கு போய் முடியும்? விபரீதமாக இருக்கிறது.

மிகத் தூய்மையான காதலை இதில் கலைஞர் கையாண்டு இருக்கிறார். ஆகையினால் அந்த அளவிலும் இந்த நூல் மிகவும் சிறப்புக்குரியது. உரைநடை யைப்பற்றி ஒன்று கூறலாம். நீதிபதி என்றால் ஒரு குறை கூறாமல் தீர்ப்புக் கூற முடியாது. அவர் உரைநடை மிக எளிமையாக எழுதியிருக்கிறார். ஆனால் இலக்கிய மரபை மிகவும் தழுவி எழுதிவிட்டார். ஆகையால் சில சில

இடங்களில் அவ்வளவு தமிழ் அறிவு எல்லோருக்கும் இருக்குமோ என்று எனக்கு ஒரு ஐயப்பாடு எழுகிறது. சில இடங்களில் சங்க காலத் தொடர்களையே எழுதியிருக்கிறார். சில இடங்களில் அவர் 'கழறினார்' என்று எழுதியிருக்கிறார். கூறினார், பேசினார், சொன்னார் என்று எவ்வளவு வகைகளிலே சொல்லலாம். கழறினார் என்ற சொல்லைச் சிறிது இலக்கியம் படித்தவர்கள்தான் அறிவார்கள். இது ஒன்று, நான் சொல்ல வேண்டியது. மற்றொன்று, கடைசியாக ஒன்றைக் கூறுகிறேன். நானாகக் கண்டுபிடித்தது இது. ஆகையால் இதைச் சொல்லிவிட்டு நான் முடித்துக் கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

எனக்குச் சில வேளைகளில் தோன்றுகிறது. தனி மனிதனின் கற்பனை என்பதே ஓரளவு நாம் தவறாக எண்ணுவதோ என்று எனக்குத் தோன்றுகிறது. அதாவது கற்பனைக் கடல் என்பது தனி மனிதனை மாத்திரம் குறித்தது அல்ல. இந்தக் கற்பனைக் கடல் உலகெங்கும் பரவியிருக்கிறது. எல்லா மனிதர் உள்ளத்திலும் இருக்கிறது. ஆகையால் ஏதோ ஒரு நூற்றாண்டில் வாழ்ந்த ஏதோ ஒரு புலவனுடைய கருத்து, அவனைச் சிறிதும் அறியாத மற்றொரு நூற்றாண்டில் வாழ்ந்த மற்றொரு கவிஞனின் கவிதையில் மிளிர்வதைப் பார்த்தால் இந்தக் கவிதை உள்ளம் என்பது ஒருவருக்கு மட்டும் சொந்தம் இல்லையோ என்று எனக்குத் தோன்றுகிறது. இதற்கு ஒரு சிறு விளக்கம் கூறு வேன். அந்த விளக்கம் ஏன் என்றால் நமது கலைஞருக்கு மிகவும் பிடித்தமான கலிங்கத்துப்பரணி என்ற நூலில் இருந்து எடுத்தது. செயங்கொண்டான் என்ற குலோத்துங்கச் சோழனின் அவைப் புலவர் எழுதியிருக்கிறார். போர்க் களத்தை விவரிக்கும்போது இந்தப் பாட்டு வருகிறது.

"தரைமகளும் தன்கொழு நன் உடலந் தன்னைத்
தாங்காமல் தன் கரத்தால் தாங்கி விண்ணாட்(டு)
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்"

அந்தக் கற்பரசியானவள் பூமாதேவி தன் கணவனுடைய சவத்தை அவள் மடியில் வைத்துக்கொள்ளக்கூடாது என்று, தன் மடியில் வைத்து, அவன் உயிர் தேவலோகத்துக்குப் போனால் தேவ அணங்கினர் தழுவி விடுவார்களோ என்று, உயிரைக் கூடவே விடுகிறாள் என்று வர்ணித்துக் கூறுகிறார். இவர் 8–ஆவது நூற்றாண்டில் (எனக்குச் சரியாக வரலாறு தெரியவில்லை, மறந்துபோய்விட்டது) குலோத்துங்கச் சோழன் காலத்தில் வாழ்ந்த அவைப் புலவர். அதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை. 15ஆவது 16ஆவது நூற்றாண்டில் மகாகவி ஷேக்ஸ்பியர், அந்தோணியும் கிளியோபாட்ராவும் என்ற நாடகத்தை எழுதியிருக்கிறார். அவருக்குச் செயங்கொண்டான் என்றால் யார் என்றே தெரியாது. தமிழும் தெரியாது. இந்தியாவும் தெரியாது. அவர் எழுதும்போது, இந்தக் கிளியோபாட்ரா என்பவள் ஒரு நாகத்தை மார்பில் தீண்ட வைத்துத் தற்கொலை புரிந்து கொள்கிறாள். ஐராத் என்ற அவளது பணிப்பெண்ணும் அது

மாதிரித் தற்கொலை புரிந்து கொள்கிறாள். கிளியோபாட்ரா இறக்கும் முன்னரே அவளை நாகம் கடித்து விட்டது. உடனே அந்தப் பணிப்பெண் சவமாகி விடுகிறாள்.

'அவள் முதலில் என்னுடைய காதலனாகிய அந்தோணியைத் தேவ லோகத்தில் சந்தித்தால் அந்த அதர முத்தத்தை அவன் முதலில் பெற்று விடுவான். நாம் முதலில் சாகவேண்டும்' என்று எண்ணுகிறாளாம்! செயங் கொண்டானின் கருத்து அந்த ஷேக்ஸ்பியருக்கு எப்படி வந்தது? அதே கற்பனையை இவர் எப்படி விவரித்தார்? அவர் எப்படி விவரித்தார்? இவ்வகையாகப் பலப்பல தொடர்புகளை – பல இலக்கியங்களைப் பார்க்கும் போது கவிஞர் உள்ளம் என்பது பெருங்கடல். அதில் தனித்தனிக் கவிஞர்கள் மிதக்கிறார்களேயொழிய அது ஒரே கவிஞனுக்கு உறைவிடம் என்று கூறமுடி யாது என்று சொல்லலாம்.

நான் முன்பு குறிப்பிட்டேனே: ஷேக்ஸ்பியர் மகாகவியின் கருத்தும், நம் கலைஞரின் கருத்தும் இப்படித்தானே ஒத்து வருகின்றன.

எனவேதான் இந்த நூலை வெளியிடுவதில் நான் மிகப்பெருமை கொண்டு வெளியிடுகிறேன்.

வணக்கம்.

நூலின் முதற்படியினைப் பெற்றுக்கொண்டு
**கவியரசு கண்ணதாசன்** அவர்கள் ஆற்றிய உரை

இங்கே நீதிபதி திரு. அனந்தநாராயணன் அவர்கள் வெளியிட்ட இந்த 'ரோமாபுரிப் பாண்டியன்' என்கிற நூலின் முதல் பிரதியைப் பெற்றுக்கொள்வதிலே நான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்.

முன்னால் பேசிய நீதிபதி அவர்கள் எவ்வளவு தெளிவாக இந்த நூலைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ அவ்வளவும் சொல்லியிருக்கிறார்கள். 'தீர்ப்பு'க்குப் பின்னாலே வாதம் என்பது நியாயமில்லாததொன்றாகும். அது ஏற்றுக்கொள்ளப்பட முடியாத ஒன்றாகும். இங்கே இரு தரப்பு வக்கீல்களுடைய ஆர்குமெண்ட்டையும் அவர்களே செய்து தீர்ப்பையும் அவர்களே வழங்கியிருக்கிறார்கள். ஆகவே, அவர்கள் சொன்னதுதான் முற்றும் முடிந்த உண்மையான மதிப்பீடாகும்.

கலைஞர் கருணாநிதி அவர்கள் சரித்திர நாவல் எழுதுவதிலே நீண்ட நாட்களாகவே ஆர்வம் காட்டியவர்கள். அவருக்கும், அவரைப் போன்ற தமிழார்வம் உள்ளவர்களுக்கும், சரித்திரத்தில் எங்காவது ஒரு தடயம்– இன்ன காலத்தில் இன்னார் வாழ்ந்தார் என்று கிடைத்தாலே போதும் – அவர்களைப் பின் தொடர்ந்து போய், முடியுமானால் ரோமாபுரி வரைக்கும் போய், அந்த வரலாற்றுக்குப் புதிய மெருகைக் கொடுத்துவிட – அந்த ஆர்வம் அவர்களை உந்தித் தள்ளுகின்றது. அதிலேயும், எந்த ஒரு எழுத்தாளனுக்கும் மிகவும் இன்றியமையாதது ஒன்றைப் பார்க்கும்போது இன்னொன்று தோன்றுவதாகும். அது பெரும்பாலான எழுத்தாளர்களுக்குத் தோன்றாததால்தான் அவர்களுடைய எழுத்துக்களை நாம் படிக்கும்போது அவர்களே முன்னால் நிற்கின்றார்களே தவிர அவர்களுடைய எழுத்து முன்னால் நிற்பதில்லை. ஆனால் இவரைப் பொறுத்தவரை ஒரு பொருளைக் காணும்போது, அவருக்கு வேறு பொருள் தோன்றுகிறது.

ஒன்றைப் பார்க்கும்போது இன்னொன்று விரிவது என்பது ஒரு நல்ல கற்பனையாளனுக்கு உள்ள நியாயமாகும். அது இல்லையென்றால், பெண்ணைப் பார்க்கும் ஒருவன் கண்ணைக் கண் என்றுதான் சொல்லுவான். வாயை வாய் என்றுதான் சொல்லுவான். கண்ணைக் குவளை என்று சொல்ல ஒருவனுக்குத் தோன்றிற்று, வாயைக் கோவை என்று சொல்லத் தோன்றிற்று என்றால் ஒன்றை நோக்கி இன்னொன்று விரிகின்றது. அது சற்றுக் கற்பனையாக

அதிகமாக விரிகின்றது. ஆகவே, ரோமாபுரிக்கும், நம்முடைய நாட்டுக்கும் இடையிலே உறவு இருந்தது என்ற ஒன்றை அடிப்படையாகக்கொண்டு, அதற்கு என்னென்ன வரலாற்றுச் சான்றுகள் கிடைக்குமோ அவ்வளவையும் சேர்த்து ஒரு நல்ல பெரிய நாவலாகக் கலைஞர் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். சரித்திர நவீனம் எழுதுவதிலே ஒரு கஷ்டம் உண்டு. எத்தனை கதாபாத்திரங் களை எடுத்துக் கொள்கிறோமோ அவர்கள் எல்லாம் எங்கெங்கே இருக்கிறார்கள் என்று அடிக்கடி ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் நாம் அடுத்தாற்போல் எழுதும்போது அது தலைகீழாகப் போய்விடும்.

நான் பாண்டிமாதேவி என்று ஒரு காவியம் எழுதத் தொடங்கினேன். அந்தக் காவியம் எழுதத் தொடங்கி 12 வருடம் ஆகின்றது. பாண்டிமாதேவி என்றுதான் அதற்குத் தலைப்பு. நான் பின்தொடர்ந்து போனது சேரமாதேவியை. அவள் இலங்கையில் இருக்கிறாள் இப்போது. அவளை எப்படித் திரும்பக் கொண்டு வருவது என்று தெரியாமல் 12 ஆண்டு காலமாக பாண்டிமாதேவி நடுத் தெருவிலே நின்றுகொண்டிருக்கிறாள். கதாபாத்திரங்களைக் கொண்டு செலுத் துகின்ற பாணி என்பது நினைவிலே நிறுத்தி வைத்துக் கொண்டு போக வேண் டும். ரோமாபுரிக்குப் பாண்டியன் போனான், ராணி இங்கே தமிழ்நாட்டிலே இருந்தாள் என்றால் இரண்டு பேருக்குமிடையே உள்ள சம்பவங்கள் ஞாபகத்தோடு வரையப்பட வேண்டும். ஆகவே முன்னாலே சொன்னது போன்ற பாத்திரங்களைப் பின்தொடரும்போது மிக ஜாக்கிரதை யாகப் பின் தொடர வேண்டும். அதிலும் பாத்திரப் படைப்பு, பாத்திரங்களுடைய குணங்கள் என்பது மிகவும் முக்கியமாகக் கருதப்பட வேண்டும். அதை ரோமாபுரிப் பாண்டியனிலும் கலைஞர் அவர்கள் மிக அழகாகக் கையாண்டு இருக்கிறார் கள். பொதுவாக மனிதனுக்கு ஒன்பது குணங்கள் இருக்கலாம். ஆனால் ஒரு மனிதனைப் பாத்திரமாகப் படைக்கும் போது அவனுக்கு ஒரு குணம்தான் இருக்கவேண்டும். அது போலவே எந்தச் சிறப்பான நாவல், நாடகங்களில் பார்த்தாலும் அந்த கேரக்டர் என்பது ஒன்றாக இருக்க வேண்டும்.

கதாபாத்திரங்களைப் படைப்பது என்பது, படைக்கின்ற போதே கதையின் உருவகமும், கண்ணிலே கிடைக்க வேண்டுமென்பதற்கு இந்த ரோமாபுரிப் பாண்டியனை ஏறக்குறைய நான் 200 பக்கங்கள் படித்தேன். அது ஒரு நல்ல சாட்சியாக அமைந்திருக்கிறது. தமிழிலே, தமிழ்நாட்டு மக்களுடைய வீர மரபுகள் பற்றிய ஏராளமான கதைகள் உண்டு. தமிழ்நாட்டு மக்கள் அந்நாளிலே வாழ்ந்தது அகத்துறையும், புறத்துறையும் நமக்குக் காட்டுகின்றன. கலைஞர் கருணாநிதியின் இந்த நூல் அகம்புறம் இரண்டையும் முழுமை செய்கிறது. இந்த இரண்டு துறைகளுக்குள்ளே தான் அன்றைய தமிழனுடைய வாழ்நாள் முழுவதும் அடங்கியிருந்தது. ஆகவே, முழுவதும் இங்கே அவர்கள் தெளிவாகக் காட்டியிருக்கிறார்கள். இத்தனைக்கும் அவரும் என்னைப் போலவேதான் வாராவாரம் பத்திரிகையிலே கதை எழுதினார். இந்த வாரம்

நிறுத்தும்போது கதாசிரியனுடைய – தொடர் கதையாசிரியனுடைய பலவீனம், ஜனங்களுடைய பலவீனம் என்று நினைத்துக் கொள்வது என்னவென்றால், நிறுத்துகிற இடத்தைப் பொறுத்துத்தான் அடுத்த வாரப் பத்திரிகையின் விற்பனை என்று.

கலைஞர் கருணாநிதி அவர்கள் எழுதிய தொடர்கதை விழுந்து எழாமல், நிமிர்ந்தே நின்றுகொண்டு இருப்பதற்குக் காரணம் அவர் எடுத்துக் கொண்ட சரித்திரத்தினுடைய பலமான பின்னணி என்பதுதான் மிக முக்கியமானதாகும்.

தமிழர்கள் ரோமாபுரிக்குப் போனதாக வரலாறு உண்டு. அப்படிப் போனவர்கள் எவ்வளவு பேர் இருப்பார்கள்; எப்படியெல்லாம் இருப்பார்கள் என்று அவர் நினைத்துப் பார்த்திருக்கிறார். பூம்புகார் கடற்கரையிலே போய் நின்றுகொண்டு, இது முன்னாலே எப்படி இருந்திருக்கும் என்று கற்பனை செய்ய அவருக்கு மட்டும்தான் தெரிந்திருக்கிறது என்பதிலிருந்து, பழங்கால வரலாற்றை அவர் படிக்கும்போது, அது எப்படி இருந்திருக்கும்– எப்படிப் போயிருப்பார்கள் என்று கற்பனை செய்து இருக்கக் கூடும். அதை அவர் பெருமையாகக் கருதியிருக்கக்கூடும்.

உண்மையிலேயே நான், சிங்கப்பூர் போயிருந்தபோது அதனுடைய வரலாற்றைப் படித்தேன். சிங்கப்பூர் எப்போது தோன்றியது என்று எழுதியிருக்கிறார்கள். இந்தோனேஷியாவை ஆண்டு கொண்டிருந்த ஒரு தமிழ் மன்னன் அங்கிருந்து தனது விரோதியான வேறொரு தமிழ் மன்னனாலே துரத்தப்பட்டு அந்தத் தீவுக்கு வந்த போது அங்கே ஒரு சிங்கத்தைக் கண்டான். அதற்குச் சிங்கபுரம் என்று பெயரிட்டான். அதுதான் அந்தத் தீவின் முதல் வரலாறு என்று சிங்கப்பூர் அரசாங்கம் வெளியிட்ட வரலாற்றுக் குறிப்பில் இருக்கிறது என்பதனை நான் கண்டேன். அங்கு அது மட்டுமல்லாது, மலேசியாவில் இருக்கின்ற முஸ்லீம் வமிசாவழியினருக்கு முதன் முறையிலே முஸ்லீமாக மாறியவன் மலாக்காவை ஆண்டு வந்த ஒரு தமிழ் மன்னன் என்பது மலேசியாவினுடைய வரலாறு.

ஆக, தமிழன் எங்கெங்கோ போய் விதை போட்டிருக்கிறான். ஆனால் அறுவடை செய்யாமல் திரும்பி வந்திருக்கிறான். அதுதான் நமக்கு அவன் செய்த துயரமாகும். ஆக, எங்கெங்கோ அவனுடைய வரலாறு இருக்கிறது. கம்போடியாவில் ஒரு பிரம்மாண்டமான கோயில். பிரம்மாவுக்கு வேறு எங்கேயும் கோயில் இல்லை. அங்கே இருக்கிறது. அதிலே இருக்கின்ற சித்திரங்களை எல்லாம் கொண்டு வந்து, மலேசியாவில் பிரிண்ட் செய்து விற்றுக்கொண்டிருக்கிறார்கள். பாற்கடலைக் கடைந்தது, விஷம் வந்தது, அவ்வளவும் இருக்கிறது அங்கே! கிட்டத்தட்ட ஒரு மைல் தூரத்திற்கு அதனுடைய சுற்றளவு இருக்கிறது. அவ்வளவு பெரிய கோயில். அந்தக் கோயிலைக் கட்டிக் கொண்டிருந்தவர்கள் தமிழ்நாட்டு ஸ்தபதிகள். அவர்கள்தான் கட்டிக்கொண்டி ருந்தார்கள் என்று கம்போடிய வரலாறு கூறுகின்றது. ஆனால் காலரா போன்ற

வியாதியினாலேயே அவர்கள் அதை முடிக்காமல் போனார்களா, வேறு வகையினாலே போனார்களா என்பது தெரியவில்லை என்று வரலாறு குறிக்கிறது. ஆக, தென்கிழக்கு ஆசியா முழுவதையும் பார்த்தால் நம்முடைய நாகரிகம் எப்படிப் பரவியிருக்கிறது; நம்முடைய மன்னர்கள் எவ்வளவு தூரம் அங்கே போய் இருக்கிறார்கள் என்பது தெரியும்.

கடாரங்கொண்டான், கங்கை கொண்டான் என்கிற வரலாறுகளை நாம் இன்றைக்குக் கேட்கிறோம். அதிலும் ரோமாபுரிக்குப் போவது, தமிழ் நாட்டிலேயிருந்து போவது ரொம்ப வசதியாகும். பருவக்காற்று தோதாக அடித்தால் நீங்கள் பாயை இறக்கிவிட்டு பேசாமல் இருக்கலாம். அது நேரே இத்தாலிக்குத்தான் போகுமே தவிர வேறு எங்கேயும் போகாது. ஆகவே பருவக் காற்றினுடைய துணையைக் கொண்டு அவர்கள் போயிருக்கிறார்கள். அதை வரலாறாகக் கண்டு நண்பர் கருணாநிதி அவர்கள் வாராவாரம் எழுதும்போது, அது இவ்வளவு பெரிய புத்தகமாக வருமா என்பது அவருக்கே தெரியாது. வாராவாரம் எழுதினார். சமயங்களிலே கல்கிகூடத் திருத்தம் போடுவதுண்டு. சென்ற வாரம் எழுதியதிலிருந்து இதை இப்படி மாற்றிப் படித்துக்கொள்ளுங்கள் என்று. இவர் அப்படியில்லாமல், இரண்டு தடவை வேறு வேறு பத்திரிக்கையிலே எழுதி ஒரு நல்ல நூலாக ஆக்கியிருக்கிறார். இவ்வளவு வேலைகளுக்கு இடையிலேயும்கூட அவருடைய பேனா தெளிவாக ஓடிக்கொண்டிருக்கிறது என்பதற்கு இந்த நூலும் ஒரு சான்றாகும்.

இந்த முதல் நூலைப் பெற்றுக் கொள்வதிலேயே நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். ஏனென்றால், கலைஞரிடமிருந்து நான் முதன்முதலாகப் பெற்றுக்கொண்டதுதான் கவிஞர் என்ற அடைமொழி. அப்போது இரண்டே இரண்டு கவிதை மட்டும் எழுதியிருந்த என்னைப் பொள்ளாச்சிக்கு அழைத்துக் கொண்டுபோய் "கவிஞர் கண்ணதாசன் அவர்கள் பேசுவார்கள்" என்று அவர் சொன்னவுடனே, எனக்கே என்னவோ மாதிரி இருந்தது.

ஆக அவரிடமிருந்து அப்போது நான் அந்த விருதைப் பெற்றுக் கொண்டேன்; இப்போது இந்த நூலைப் பெற்றுக் கொள்கிறேன். இதுபோன்ற பல நூல்களையும் நான் அவரிடமிருந்து பெற முடியும். இந்தப் பதவியே போனாலும்கூட அவர் கையிலே இருக்கிற பேனா இந்த நாட்டைச் சுழன்றடிக்கின்ற சூறாவளியாக இயங்கும். இந்தப் பதவியை யாராவது பறித்துக் கொண்டாலும் அவர்களை அந்தப் பேனாதான் பதம் பார்க்கும். அந்த அளவுக்குச் சக்தியுள்ள அந்தப் பேனா இன்னும் தொடரட்டும் என்கின்ற என்னுடைய வாழ்த்துக்களோடு இதனை நான் பெற்றுக்கொள்கிறேன்.

வணக்கம்




மாவீரன் பாம்பே– மாவீரர்களை மண்டியிட வைத்த சீசர்– சீசர் வளர்த்த சிங்கம் அந்தோணி – அந்தோணியை அடக்கிய அகஸ்டஸ் – இப்படி வீரத் திருவிளக்குகளின் ஒளி மழையால் எழில் கொண்டு விளங்கிய பூமி ரோமாபுரி.

அது வாழ்ந்த விதமும் தாழ்ந்த கதையும் யாரும் அறியாத ரகசியமல்ல. ரசவல்லிகளின் மைவிழிகள்–மதுக்கிண்ணங்கள் இவைகளே அந்தத் திருநாட்டின் பெரு வீழ்ச்சிக்குக் காரணம் என்ற விளக்கத்தை வரலாறு புலம்பிக் காட்டுகிறது. ஏற்றமும் பொலிவும் குலுங்க என்றைக்கோ ஒரு நாள் மலையில் ஏற்றிவைத்த தீபம்போல் அந்தச் சின்னஞ்சிறு சிங்காரப் பொன்னாடு எட்டுத்திக்கும் புகழ் பரப்பிக் கொண்டிருந்தது. அதன் மெருகு குலைந்து அடித்தளமும் ஆட்டங்கொடுத்துப் புழுதியில் வீசப்பட்ட வீணையென ஆகிவிட்ட காலத்தை, கி.பி.1453 என்று கணக்கிட்டுக் கூறுவார்கள், சரித்திர ஆசிரியர்கள்.

ரோமானியப் பேரரசை உலகுக்கு முதன் முதல் அறிமுகப் படுத்திய பெருமை யாருக்கு உரியதாக இருந்தாலும், அந்தப் பிஞ்சுக் குழந்தையைப் பெற்றெடுத்த கௌரவம் முழுமையும் 'ரோமுலஸ்' என்பவனையே சாரும்.

கி.மு. 753–ல் இத்தாலியிலே லத்தீன் மொழி பேசிக் கொண்டு ஒரு கூட்டம் நுழைந்தது. அந்தக் கூட்டத்தினர் 'தைபர்' ஆற்றங்கரையில் சிறு நகர் ஒன்றைத் தோற்றுவித்தார்கள். நகரைச் சுற்றி ஏழு குன்றுகள்– நடுவிலே நகரம். நகரை அமைத்த கூட்டத்தின் தலைவன்தான் ரோமுலஸ். அவன் பெயரே அந்த நகருக்கு வழங்கலாயிற்று.

பற்பல ஆபத்துக்களைச் சந்தித்து, உலகத்தின் கண்ணெதிரே நிமிர்ந்து நிற்க வேண்டுமென்று ரோமாபுரி நெஞ்சை உயர்த்திக் கொஞ்சங் கொஞ்சமாக எழுந்தது. அந்த எழுச்சிக்கு ஊக்கமளித்தவர்கள்தான் உரம் வாய்ந்த பெரு வீரர்களான பாம்பே, சீசர், அந்தோணி, அகஸ்டஸ் போன்றவர்கள்!

பாம்பேயின் தலையை எகிப்துக் கடற்கரையின் மணல்மீது நறுக்கிப் போட்டனர் – ஆனால், அதே மணல் வெளியில் சீசரின் மடியில் தலைவைத்து இன்ப சுகம் அனுபவித்தாள் பேரழகி கிளியோபாத்ரா! இது நடந்தது ஏறத்தாழ கி.மு. 48–ல். அந்தச் சீசரைப் பாம்பேயின் சிலை அருகே குத்திக் கொன்றனர், ரோமாபுரிப் பெருந்தகையினர் சிலர். அதன் பின்னர் அந்தோணிக்குச் சொந்தமானாள் எகிப்தின் அழகு ராணி கிளியோபாத்ரா. சீசரின் வளர்ப்பு மகன் ஆக்டேவியசுக்கு ரோமாபுரியைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு

வரவேண்டுமென்ற ஆசை வளரத் தொடங்கிற்று. அதன் விளைவாக ரோம் நாட்டுப் பாராளுமன்றத்தினர் அந்தோணியை விரோதியென்று விளம்பரப் படுத்தினர்.

போர்க்கொடி இரத்தச் சாயத்துடன் விண்ணை எட்டியது! இரு பெரும் தீரர்களும் ரணகளத்தில் இறங்கினர். போர்க்களத்தில் புரண்டு கொண்டிருந்த அந்தோணிக்குப் போர்க்களம் உற்சாகம் வழங்கவில்லை. புறமுதுகிட்டுத் திரும்பினான். ரோமாபுரியின் முதலாவது மன்னர் மன்னனாக மணிமகுடம் அணிந்து கொண்டான் ஆக்டேவியஸ்! "மகிமை பொருந்திய மாவீரன்" என்ற வீர வாசகத்தின் சுருக்கமான பெயராக "அகஸ்டஸ்" என்ற பட்டத்தை ரோமாபுரிப் பாராளுமன்றம் ஆக்டேவியசுக்குப் பூரிப்போடு சூட்டி மகிழ்ந்தது.

அகஸ்டஸ் சீசர் அரிமாவென நின்று ஆர்ப்பரித்தான் – அந்தோணியோ அந்தப்புரத்தில் சுருண்டு கிடந்தான். இந்த நிலைக்குரிய காலம் ஏறத்தாழ கி.மு.30 என்று கூறலாம்.

அந்தக் காலத்திலேதான் நமது பழம்பெரும் தமிழகத்தின் முப்பேரரசுகளின் கொடி நிழல் கொற்றம் தழைத்துக் கொண்டிருந்தது எனவும், சோழ மண்டலத்தில் திருமாவளவன் இரண்டாம் கரிகாற் பெருவளத்தான் ஆண்டு கொண்டிருந்தான் எனவும் வரலாற்றுப் பெரியவர்கள் வரையறுத்துள்ளார்கள். இந்தக் கரிகாலனின் காலம் கி.மு 60 முதல் கி.மு.10 வரை என்பதாகத் தமிழ்ச் சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

ரோமாபுரியிரே கோலோச்சிய அகஸ்டஸ் சீசரின்பால் பாண்டிய மன்னன் தனது தூதுவரை அனுப்பியிருந்தான் என்றும், அது கி.மு. 20 என்றும் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

அங்ஙனமாயின் அந்தத் தூதுவரை ரோமாபுரி அகஸ்டஸ் மன்னனிடம் அனுப்பி வைத்த பாண்டிய அரசன் யார்?

இந்தக் கேள்விக்கு விடையினைக் கூறுவோர் பலவிதக் குழப்பங்களையே பதிலாகத் தந்திருக்கின்றனர், இதுவரையில்!

கரிகால் பெருவளத்தானுக்குக் "குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவன்" என்ற ஒரு பெயருண்டு. இந்தப் பெயர் அவன் மறைந்த பிறகு இடப்பட்ட தாகும். இவன் 'திருவிடைக் கழி' அல்லது 'குராப்பள்ளி' என்னும் இடத்தில் உயிர் நீத்ததால் அப்பெயர் பெற்றான். இவனைப் பற்றிய புறப்பாட்டு ஒன்றைப் பாடிய காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் எனும் புலவர், அந்தப் பாட்டில் பாண்டிய மன்னன் ஒருவனையும் இணைத்துப் பாடியிருக்கிறார். அந்த மன்னனின் பெயர் பெருவழுதி. இவன் "வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி" என்று அழைக்கப்பட்டான்; மறைந்த பிறகு!

"நீ அறந்தங்கும் உறையூரின்கண் அரசன்; இவனோ தமிழ் குலுங்கும் மதுரையில் குளிர்ந்த செங்கோலையுடைய வேந்தன் ! நீ, தண்புனல் காவிரிக்கு

உரியவன்; இவனோ போரின் கண் மாட்சிமைப்பட்ட பாண்டியர் குடியில் ஏறு போன்றவன்; பொதிகைமலைச் சந்தனமும், திரைகடல் முத்தும், மும்முரசமும் கொண்டவன். நீவிர் இரு பெருந் தெய்வங்கள் ஒழுங்கு நின்றாற்போல் காட்சி தருகின்றீர்! இன்றுபோல் என்றும் நிலைத்திடுக நுமது நட்பு! வென்று வென்று போர்க்களத்தில் மேம்படுக உமது வேல்! புலி, கயல் பொறித்து, உம் வெற்றியைப் பிற நாட்டுக் குன்றுகளில் செதுக்கிடுவீராக!"

புறம் ஐம்பத்தெட்டாவது பாடலில் இந்த அழகிய கருத்தினைத் தந்து காரியக்கண்ணனார், சோழன் கரிகாலனையும், பாண்டியன் பெருவழுதியை யும் ஒருசேர வாழ்த்துகிறார்.

இதனைக் கொண்டு கரிகாலன் காலத்துப் பாண்டியன் பெருவழுதியென்று முடிவு கட்டுகிறோம். கரிகாலன் காலமோ கி.மு. 60 முதல் கி.மு. 10 வரையில்

அந்தக் காலத்திலேதான் ரோமாபுரியில் அகஸ்டஸ் சீசர் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறான். அதாவது கி.மு. 39 முதல் கி.பி.14 வரையில்.

இந்தக் காலக் கணக்கை ஆராய்வதிலிருந்து அகஸ்டஸ் சீசருடன் நட்புறவு கொண்டு தூதுவரை அனுப்பிவைத்த பாண்டியன் பெருவழுதியாகத்தான் இருக்க முடியும் என்ற முடிவுக்கே நாம் வரவேண்டியவர்களாகிறோம்.

ரோமாபுரிக்கும், தென்னகத்திற்கும் இந்தக் காலத்திற்கு முன்பே வாணிபத் தொடர்புகள் ஏற்பட்டு, இரு நாட்டுக்காரர்களும் அளவளாவி மகிழ்ந்தனர். கரிகாலனும், பெருவழுதிப் பாண்டியனும் மகுடம் புனைந்த பிறகு ரோமாபுரித் தொடர்பு வேகமாகத் தழைத்து வளரலாயிற்று. அகஸ்டஸ் சீசர் காலத்தில் ஓங்கி எழுந்த அந்த உறவு பல ஆண்டுக்காலம் நீடித்தது. நீரோ மன்னனின் ஆட்சிக் காலத்திற்குப் பிறகுதான் அந்த உறவு சிறிது சிறிதாகத் தேய்ந்து மாய்ந்தது என்று கூறலாம்.

தமிழமும், ரோமும் கொண்டிருந்த தொடர்புகளுக்குச் சான்று பகரும் வகையில் புதைபொருள் ஆராய்ச்சிகள் துணை நிற்கின்றன.

கிரேக்கரையும், ரோமானியரையும் யவனர்கள் என்ற பெயரால் அழைத்து, அந்த யவனர்களைத் தங்கள் அரண்மனைகளில் காவல் வீரர்களாக வைத்தி ருந்தனர் தமிழ்மன்னர்கள் என்பதற்கு இலக்கியங்கள் சாட்சி கூறுகின்றன. "கடிமதில் வாயிற் காவலிற் சிறந்த – அடல்வாள் யவனர்" என்ற சிலப்பதிகாரப் பாட்டு தக்க எடுத்துக்காட்டாகும்.

நக்கீரனார் பாடிய ஐம்பத்தாறாவது புறப்பாட்டில் "யவனர், நன்கலம் தந்த தண்கமழ் தேறல்" எனக் காணும் வரி, யவனர்கள் தமிழகத்தில் மது வகைகளைக் கொணர்ந்து விற்று வந்தனர் என்பதை உணர்த்துவதாகும்.

தென்னகத்திலிருந்து ரோமாபுரிக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட உணவுப் பொருள்களில் மிக முக்கியமானது மிளகு. அலாரிக் என்பவன் ஒரு காலத்தில் ரோமை வெற்றி கண்ட போது, நஷ்ட ஈட்டுத் தொகையில் மூவாயிரம் பவுண்டு தமிழ்நாட்டு மிளகும் தரவேண்டுமென்று உடன்படிக்கை செய்து கொண்டா

னாம். முசிறிக்குத் தெற்காக இருக்கும் குளச்சல் என்னுமிடத்தில், மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதிகள் மூழ்கி எடுத்த முத்துக்களும் ரோமுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

டாலமி என்பவன், ரோமுடன் தொடர்பு கொண்டிருந்த தமிழ்நாட்டுத் துறைமுகங்களில் ஒன்றாக "கொபெரிஸ்" துறைமுகம் என்ற ஒரு பெயரையும் எழுதிக்காட்டுகிறான், காவிரிப்பூம்பட்டினத்தையே அவ்வாறு அழைத்திருக்கக் கூடுமெனக் கூறுவர் அறிஞர். அவன் "புடோக்கி" என்று ஒரு துறைமுகத்தைக் குறிப்பிடுகிறான். அது அநேகமாகப் புதுவையாக இருக்கவேண்டுமெனக் கூறுகிறார்கள். பாண்டிநாட்டுக் கொற்கைப் பெருந்துறைக்கு அருகில் முத்துக்களும், சங்குகளும் மிக அதிகமாகக் கிடைத்து, அவைகள் உலகில் எல்லாப் பகுதியினராலும் பாராட்டப் பெற்றன. கொற்கை முத்துக்கு ஈடு இணை இல்லையென்பதை

**"மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும்**
**கொற்கையும் பெருந்துறை முத்து"**

என்ற அகப்பாட்டு அழகுற விளக்குகிறது.

முத்தும், நுண்ணிய பருத்தி ஆடைகளும், எலிமயிராலும், பட்டாலும் நெய்யப்பட்ட உடைகளும். ரோமாபுரி போன்ற நாடுகளுக்கு அனுப்பப்பட்டு, அங்கிருந்து குதிரைகளும், மதுவகைகளும், கண்ணாடிச் சாமான்களும் கொற்கைப் பெருந்துறையில் வந்து இறங்கியவண்ணமிருந்தன.

அழகாக கப்பல்களில் தங்கத்தை ஏற்றிக்கொண்டு யவனர்கள் வருவார்களாம். பிறகு மிளகை ஏற்றிக்கொண்டு திரும்புவார்களாம். முசிறித் துறை முழுவதும் அந்தக் கப்பல்களின் பேரொலி கேட்கும் என்று சங்க இலக்கியங்கள் பெருமை பேசுகின்றன.

புகார் துறைமுகத்தில் எல்லா நாடுகளைச் சேர்ந்த வணிகர்களும், மாலுமிகளும் வந்திறங்குவார்கள்; அவர்கள் எல்லோரும் ஒரே இனத்தவர் போல் ஒற்றுமையாகப் பழகுவார்கள் – என்று தமிழிலக்கியம் கூறுகிறது. யவனர்கள் பலர் தமிழ் மன்னர்களின் மெய்க்காப்பாளர்களாகவும் இருந்திருக் கின்றனர் என்ற செய்தியொன்றே இருசாராரிடையிருந்த நல்லெண்ணத்தை விளக்கும் கண்ணாடியாகும்.

இத்தகைய தொடர்புகளை இன்று மெய்ப்பித்துக் காட்டுவது போலப் புதுவை மாநகருக்குப் பக்கத்தில் "அரிக்கமேடு" என்னுமிடத்தில் நடைபெற்ற ஆராய்ச்சியில் ரோமானியருக்குரிய பலவகைப் பொருள்கள் கண்டெடுக்கப் ..ட்டுள்ளன. அவர்கள் உபயோகித்த பாத்திரங்கள், விளக்குகள், நாணயங்கள் போன்ற பலவற்றைத் தமிழகத்தில் காணமுடிகிறது. அரிக்கமேட்டில் சில சிறுவர்கள் அகஸ்டஸ் சீசரின் உருவம் பதிக்கப்பட்ட ஒரு விலை உயர்ந்த கல்லைக் கண்டெடுத்தனர். ஆனால் அது இப்போது காணாமல் போய்விட்ட தாகச் சொல்லப்படுகிறது.

ரோம் நாட்டுத் தங்க நாணயங்கள் இந்தியா, பாகிஸ்தான் உட்பட அறுபத்தெட்டு இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டன. அந்த அறுபத்தெட்டு இடங்களில் ஐம்பத்தேழு இடங்கள் விந்தியத்திற்குத் தெற்கே இருக்கின்றன என்பதைக் கேட்கும்போது ரோமுக்கும், தென்னகத்திற்கும் இருந்து வந்த பழைய தொடர்பை எண்ணி எண்ணிப் பெருமூச்செறிகிறோம் நாம்.

அந்த நாணயங்களில் பெரும்பாலானவை அகஸ்டஸ் காலத்தவையும், டைபீரியஸ் என்பவனின் காலத்தவையுந்தான்! நீரோ காலத்து நாணயங்கள் அவனைப் போலவே தரக் குறைவாகவும், தங்கத்துடன் வெள்ளி கலந்ததாகவும் காணப்படுகின்றன. ரோம் பாராளுமன்றத்தில் பேசிய டைபீரியஸ், வெளிநாடு களுக்கு ரோம் நாட்டுப் பணம் போவதைக் கண்டித்துப் பேசினான் என்று சரித்திரம் செப்புகிறது.

கோவை மாவட்டத்திலே குவியல் குவியலாக ரோமர் நாணயங்கள் கிடைப்பதற்கு என்ன காரணம் என்று ஆராய்ந்தார்கள். கிழக்குக் கடற்கரை யிலிருந்து ரோமாபுரிக்கு மேற்குக் கடற்கரை வழியாகப் பொருள்களை அனுப்ப வேண்டுமானால் ஒன்று கன்னியாகுமரியைச் சுற்றிக்கொண்டு போகவேண்டும் – அல்லது கிழக்குத் தொடர்ச்சி மலையும், மேற்குத் தொடர்ச்சி மலையும் சந்தித்து வழி விட்டிருக்கும் குறுக்குப் பாதை வழியாகத்தான் செல்ல வேண்டும். இன்று அதிக அளவில் அந்தப் பகுதியில் காணப்படும் நாணயக் குவியல்களுக்கு அதையும் ஒரு காரணம் காட்டுவோரும் உளர்.

எப்படியோ தமிழகமும், ரோமும் எல்லா வகையிலும் உ றவாடியிருக்கக் கூடும் என்பதற்கான சான்றுகள் புதைபொருள் ஆராய்ச்சி மூலமும், இலக்கியங்கள் வாயிலாகவும் வரலாற்றிலிருந்தும் வெகுவாகக் கிடைத்திருக் கின்றன.

இந்தப் பழைய தொடர்பினை மையமாக வைத்துதான் "ரோமாபுரிப் பாண்டியனை" உருவாக்கிடத் துணிவு பெற்றுள்ளேன்.

அகஸ்டஸ் சீசர் காலம் கி.மு. 39 முதல் கி.பி.14 வரை! கரிகாலன் காலம் கி.மு. 60 முதல் கி.மு. 10 வரை. பாண்டியன் பெருவழுதி கரிகாலனின் நண்பன் மட்டுமல்ல. ரோமுடன் நட்புக் கொண்டிருந்தவன்– தூதரை அனுப்பியவன்.

அகஸ்டசும் அந்தோணியும் போர்க்களத்திலே சந்தித்துத் திரும்பியிருக் கிறார்கள்! அந்தோணியின் முடிவு இன்னும் சொல்லப்படவில்லை; கிளியோ பாத்ராவின் சோக முடிவினையும் எழுதிடவில்லை! நமது கற்பனைக் கதாநாயகி எங்கிருந்து வரப்போகிறாள் என்பதும் அறிவிக்கப்படவில்லை. அவள் கற்பனைக் கதாநாயகிதானா? அல்லது சரித்திர நூலின் வரிகளில் ஒளிந்து கொண்டு இதுவரை அறிமுகமாகாத ஆரணங்கா? ரோமாபுரிப் பாண்டியன் யார்? இந்த விசித்திரமான தலைப்பு புரிய வைக்கப்போகும் பொருள் என்ன?

இதுவும் புதிராகவே இருக்கிறதல்லவா? இருக்கட்டும்! இருக்கட்டும்! முதலில் ரோமாபுரிக்கும், தமிழகத்துக்கும் உள்ள தொடர்புகளும், காலக் குறிப்புகளும், சமகால மன்னர்களின் பெயர்களும் ஐயமின்றித் தெரிந்தால் போதும். அவை தெளிவாகத் தெரிந்துவிட்டன இப்போது!

இனி, கதையைத் தொடரலாம் அல்லவா?




# கரிகாற் சோழனும் பெருவழுதிப் பாண்டியனும்



கி.மு. 20-ஆம் ஆண்டின் துவக்கத்தில் ஒருநாள் சோழப் பெருமன்னன் கரிகாலன் திருநகரம் பூம்புகார்ப் பட்டினம் புதிய பொலிவு பெற்றுத் திகழ்ந்தது. மருவூர்ப் பாக்கத்தில் கடற்கரையையொட்டி அமைந்திருந்த வான்முட்டும் மாட மாளிகைகளில் எல்லாம் சோழனது கொடியும் பாண்டியனது கொடியும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டு பறந்தன. யவனப் பெருமக்களின் மாளிகைகளில் எழில் நிறைந்த தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. ''வாழ்க சோழ பாண்டியர் உறவு!'' என்ற எழுத்துக்களை முத்துக்களால் பதித்த கம்பீரமான நுழைவு வாயில்கள் பட்டினப்பாக்கமெங்கும் காட்சி தந்து கொண்டிருந்தன.

மருவூர்ப் பாக்கத்தில் வாழும் வணிகர், பட்டாடை, பருத்தியாடை, கம்பள ஆடை நெய்வோர், பொற்கொல்லர், பூக்கட்டுவோர், ஓவியர், சிற்பிகள், மாலுமிகள் அனைவரும் புத்தாடை புனைந்து அரச வீதி நோக்கி விரைந்தனர். நிலக்கிழார், மருத்துவர், மறையவர், அரண்மனை அலுவலர், பாணர், இசைவாணர், புலவர் பெருமக்கள் அனைவரும் தாம் வாழ்கின்ற பட்டினப்பாக்கத்தையே விழாக்கோலம் பூணச்செய்து, தங்கள் தங்கள் வீடுகளில் இருந்தவாறு அரச வீதியை இமைகொட்டாது ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். உலகமே வறுமைக் காடாக மாறிவிட்டாலும் பூம்புகார் வறுமைக் கோலம் கொள்ளாது என்று முழங்கிக் கொண்டிருந்த புகார்த் துறைமுகப்பட்டினத்தின் கலங்கரை விளக்கத்தின் உச்சியில் புலியுடன் மீன் கொடியும் சேர்ந்து பறந்த பெருமைக்குரிய காட்சியை அனைவரும் கண்டு பூரிப்புக் கொண்டனர். கரிகால் பெருவளத்தானுக்கு மகத நாட்டு மன்னன் வழங்கிய பட்டி மண்டபம் ஒளிமயமாக விளங்கிற்று. வச்சிர நாட்டான் அளித்த கொற்றப் பந்தர், அழகின் சிகரமாக அமைந்திருந்தது. அவந்தி நாட்டு மன்னன் தந்த 'தோரண வாயில்' 'மதுரைக் கொற்றவனே வருக! வாழ்க!' என்று முழங்கிக் கொண்டிருந்தது.

எழில்சேர் மங்கையர் யானைகளின் மீதமர்ந்து முன் செல்ல, பூம்புகார்ப்பட்டினம் அதுவரை காணாத மாபெரும் பவனியொன்று அந்த மாநகரில் நடைபெற்றது. தானைத் தலைவர்களும் நாற்படை வீரர்களும் அணிவகுத்து வர - இரு யானைகளின்மீது மாமன்னர்

இருவர் அமர்ந்திருக்க - அன்று நடைபெற்ற அந்தப் பவனி கண்டு தமிழ்த் தரணியே வியப்பு மேலீட்டால் விழித்து நின்றது.

ஒரு யானையின்மீது சோழப் பேரரசன் கரிகாலன் வீற்றிருந்தான். அதனையொட்டி மெல்ல நடைபோட்டு வரும் மற்றொரு யானையின் மீது பாண்டிய நாட்டு வேந்தன் பெருவழுதி அமர்ந்திருந்தான்.

''வாழ்க கரிகால் மன்னர்''

''வாழ்க பெருவழுதிப் பாண்டியர்!''

''வளர்க சோழ, பாண்டியர் உறவு!'' - என்ற முழக்கம் விண்ணதிரக் கிளம்பிற்று.

காவிரியாற்று நீரையள்ளித் தெளித்து விளையாடியவாறு பூம்புகாரின் வாலிபரும் மாதரும் விழாக்கொண்டாடினர். தெருவெங் கும் மலர்களைத் தூவினர். ''தேன் தமிழ் வெல்க!'' என்று கூவினர். எங்கு திரும்பினும் விழாக்காட்சி! இசை முழக்கம்! அகமுழவு எல்லாம் ஒலித்தன. இடக்கை, உடுக்கை, பேரிகை, படகம் எனப்படும் தோற்கருவிகள் அனைத்தும் ஆர்த்தெழுந்தன. குழல், வாக்கியம் என்னும் துளைக்கருவிகளும், சகோடயாழ், பேரியாழ், மகரயாழ் போன்ற நரம்புக்கருவிகளும் பவனியினூடே உற்சாகத்தை வாரியிறைத் துக் கொண்டிருந்தன. மக்களின் வாழ்த்துக்களைப் புன்னகையோடு ஏற்றுக் கொண்டு ஒருவரைப் பார்த்து ஒருவர் முறுவல் செய்தவாறு கரிகாலனும் பெருவழுதியும் யானைமீது கம்பீரமாக அமர்ந்திருந்தனர்.

அரசவீதிகளைக் கடந்து அணிதேர்ப்புரவி ஆட்பெரும் படையுடன் அழகுற நடந்த அந்தப் பவனியின் சிறப்பை எண்ணி எண்ணி மகிழ்ந்தனர், சோழநாட்டுத் தானைத் தலைவர்கள்.

சோழப் பெருங்குடி மக்கள் பாண்டியன் பெருவழுதியின் தோற்றங் கண்டு அவனுக்குத் தாங்கள் மரியாதை செலுத்தக் கடமைப்பட்டவர் களே என்பதை உணர்ந்தனர். எடுப்பான உடற்கட்டும் மிடுக்கான விழி நோக்கும் பெற்று, அகன்ற மார்பில் கொற்கை முத்துக்களால் கோத்த ஆரங்களை அணிந்து மணிமுடியின் மதிப்பைக் காப்பாற்றும் பெருமை வாய்ந்த வேந்தனே தான் என்று சோழர் குடியினர் எண்ணிப் புகழ்ந்திடுமளவுக்குப் பவனி வந்தான் பெருவழுதி.

''இமயத்தை முட்டிக் கலக்கிய தோள்களன்றோ அவைகள்! எதிர்த்து வந்த மன்னாதி மன்னர்களையெல்லாம் தூளாக்கிய வேலன்றோ கையில் பிடித்திருப்பது! நாடு காக்கும் மறக்குலத் தன்மையன்றோ முகத்தில் ஒளி விடுவது! இவரைத் தலைவனாகப் பெற்ற நாமன்றோ பெரும்பேறு

பெற்றவர்கள்!'' என்று கரிகால்மன்னவனைப் பவனியிலே கண்ட அனைவரும் பாராட்டி மகிழ்ந்தனர்.

முதியவர் வாழ்த்தினர். இளையவர் தங்கள் நாடு வாழ்க என அதிர்ந்தனர்.

அரச வீதிகளிலே அழகேற்றியவாறு அந்த மன்னர்களின் ஊர்வலம் நகர்ந்தது மெல்ல மெல்ல!

இருபெரும் வேந்தர்களையும் நோக்கிய தலைநகரத்து மாந்தரது விழிகள், பாண்டிய மன்னனையொட்டி வெள்ளைப் புரவியொன்றில் அமர்ந்து வெற்றிப் புன்னகை காட்டியவாறு ஊர்வலத்தில் சென்ற பாண்டிய நாட்டு வீரன் ஒருவனைக் காணத் தவறவில்லை. அவன் குதிரையில் வீற்றிருந்த அழகே தனியாக இருந்தது. கடிவாளத்தைக் கரத்தில் ஏந்தியிருந்த பாவனையே எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்தது. சிறிய இளம் முறுக்கு மீசை, சுருண்டு காய்ந்த மிளகாய்கள் போலச் சுருள் சுருளான தலைமுடி! ஒவ்வொரு அசைவிலும் வீரந் துள்ளுவது போன்ற காட்சி! புன்னகையிலே ஒரு தனிக் கவர்ச்சி! யானைமீது வரும் அரசர்களையும் புரவிமீது வரும் அந்த வாலிபனையும் மாறி மாறிப் பார்த்தவாறு மக்கட் பெருங்கடல் உற்சாகத்தோடு நகர்ந்து கொண்டிருந்தது.

பட்டினப்பாக்கத்திலுள்ள புலவர் தெருக்களை அணுகியது ஊர்வலம். தமிழ் வளர்க்கும் காவலர்கள் அரசர்கட்கு மாலை அணிவித்து மகிழ்ந்த னர். அரசன் கரிகாலன் ஆவலோடு புலவர் கூட்டத்தை நோக்கினான்.

அவனது வாள் போன்ற கண்கள் அந்தக் குழுவில் யாரையோ மிக அக்கறையோடு தேடுகின்றன என்பதை தமிழ்ச் சான்றோர் புரிந்து கொண்டு, ''என்ன மன்னவா?'' எனக் கேட்டனர்.

கரிகாலன் கேட்டான், ''காரிக்கண்ணனார் எங்கே?'' என்று!

''அவர் தனது இல்லத்தின் வாயிலில் காத்து நிற்கிறார்'' என்று பதில் மொழிந்தனர் புலவர்கள்.

காரிக்கண்ணனார் தனது வீட்டு வாயிற்புறத்தில் நின்று கொண்டிருந்தார். அவரது அகமகிழ்ச்சி முகத்தில் பீரிட்டெழுவது கண்டு கரிகாலன் நன்றியுடன் அவரைப் பார்த்தான். புலவரின் கண்கள் குளமாகிவிட்டன. அந்த ஆனந்தக் கண்ணீரில் ஒத்தியெடுக்கப்பட்ட இருமலர்களைச் சோழனுக்கும் பாண்டியனுக்கும் அளித்தார். மன்னர்கள் அவற்றைப் பெற்றுத் தம் மணிமுடியில் வைத்துக் கொண்டனர். எல்லாப் புலவரிடத்தும் காட்டுகின்ற அன்பையும் மரியாதையையும் விடக்

காரிக்கண்ணனாரிடத்தில் கரிகாலன் அதிக அளவு அன்பையும் மரியாதையையும் காட்டுவதைப் பாண்டியன் உணர்ந்து, தன் கழுத்திலே யிருந்த முத்தாரம் ஒன்றினைக் கழற்றிப் புலவருக்கு அணிவித்து மகிழ்ந்தான்.

''புலவரே! அரண்மனை சேர்ந்ததும் ஆள் அனுப்புகிறேன். வந்து எம்மைத் தமிழால் வாழ்த்துவீராக!'' என்று கேட்டுக் கொண்டான் சோழநாட்டு வேந்தர் பெருந்தகை!

''வருகிறேன் அரசே! வாழ்க!'' எனக் கூறி வணக்கம் தெரிவித்தார் புலவர்.

அப்போது, யானை மீதிருந்த பாண்டியன் பெருவழுதியின் கண்கள், காரிக்கண்ணனார் வீட்டுக்குள்ளே பாய்ந்தன. அதே சமயம், பாண்டிய னுக்கு அண்மையில் புரவியில் அமர்ந்திருந்த வாலிப வீரனின் கண்க ளும் வீட்டுப்புறமாகத் தாவிச் சென்றன. புலவர் வீட்டு வாயிற்கதவின் ஓரமாக ஒளிந்து நின்றவாறு முழுநிலா முகத்தை மட்டும் வெளியே நீட்டிக் கொண்டிருந்தாள் ஒரு வடிவழகி. தன்னைப் பிறர் பார்த்து விட்டனர் என்பதை உணர்ந்ததுதான் தாமதம்! உடனே உள்ளே தன்னையிழுத்துக் கொண்டாள். பாண்டிய மன்னன் பார்வை அந்தக் கதவோரத்தைவிட்டு மீள்வதற்குச் சற்றுத் தயங்கிற்று. கரிகாலனோ மற்றவர்களோ தன்னைப் பார்க்கிறார்களோ என்ற பயத்தோடு சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டான் பெருவழுதி!' ''சே! என்னஇது'' என்று தன்னைத் தானே இடித்துரைத்துக் கொண்டான். புரவியிலிருந்த வாலிபன், காரிக்கண்ணனாரையும் அவரது வீட்டையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு பவனியிலே தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டான்.

எழுந்த நிலவு அறுந்து வீழ்ந்தது போல் மறைந்து விட்டது அந்தச் சுந்தரமுகம்! பவனியின் சிறப்பைக் கண்டு களித்தவாறு அது அந்தத் தெருவை விட்டு அகலும் வரையில் அங்கேயே நின்று கொண்டிருந்து விட்டுக் கடைசியாகத் தன் வீட்டுக்குள் நுழைந்தார், காரிக்கண்ணனார்.

நுழைந்தவர் ''முத்துநகை! முத்துநகை!'' என்று அன்பைக் குழைத்து பெயரை உச்சரித்து அழைத்தார்.

''அப்பா! என்ன வேண்டும்?'' என்றவாறு அவள் ஓடி வந்தாள்.

ஆமாம்!; அவள்தான்! பவனி சென்ற மன்னர்களை ஒளிந்திருந்து நோக்கிய அந்தப் பருவக் கிள்ளைதான்!

அவளைக் கண்டதும் புலவர் ''பார்த்தாயா முத்துநகை, உனக்கொரு முத்துநகை!'' என்று தன் கழுத்திலே பாண்டியன் அணிவித்த முத்

தாரத்தையெடுத்து அவள் கரத்திலே தந்தார். அவள் அதை ஆசையுடன் வாங்கிக் கொண்டாள்.

''பாண்டிய நாட்டு முத்துக்கள் என்றாலே அவைகளுக்குத் தனி ஒளிதான்! இல்லையா அப்பா?'' என்று கேட்டாள் முத்துநகை.

''ஆம் அம்மா! அதிலென்ன ஐயப்பாடு! கொற்கை முத்துக்களுக்கு ஈடான முத்துக்கள் உலகத்திலே வேறெங்கும் கிடையாது! ஏறத்தாழ பத்து ஆண்டுகளுக்கு முன்பு, எகிப்து நாட்டை அரசாண்டு பரிதாபகரமாகச் செத்தும் போனாளே கிளியோபாத்ரா என்ற அழகி, அவளுக்கு இந்த முத்துக்கள் இல்லாவிட்டால் கள்ளே அருந்த முடியாதாம். மதுக் கிண்ணங்களில் இந்த முத்துக்கள் எழுப்பும் ஓசைதான் அவளுக்குப் பிடித்தமான சங்கீதமாம்! ரோமாபுரியிலே இருக்கிற மக்களுக்குப் பாண்டிய நாட்டு முத்துக்கள் என்றால் உயிர்! அவர்களது ஆடை அணிகள் ஒவ்வொன்றிலும் இந்த முத்துக்கள் சுடர்விட்டுக் கொண்டிருக்கின்றன!''

''ஏனப்பா ! பாண்டிய மன்னருக்கும் சோழ மன்னருக்கும் இன்றைய தினம் நடைபெறுகிற நட்புறவு ஒப்பந்தம் வெற்றிகரமாக ஆகிவிடுமல்லவா!''

''என்ன இப்படிக் கேட்கிறாய்? இப்படியொரு உறவு ஏற்பட வேண்டுமென்று மன்னர் கரிகால் திருமாவளவனை இத்தனை நாளும் வற்புறுத்தியதே நான்தான்! எனக்கு நம்பிக்கையிருக்கிறது, சோழர் பாண்டியர் உறவு நீடிக்குமென்று!''

''இந்த உறவை எப்படியும் முறித்துவிட வேண்டுமென்று யாரோ சில சிற்றரசர்கள் முயல்வதாகக் கூறினீர்களே!'''

''அதெல்லாம் இனிமேல் முடியாது! உறுதிப்பட்டு விட்ட உறவு இது! நமது சோழ மன்னரிடம் தோற்றோடிப்போன சிற்றரசன் இருங்கோவேள் என்பவன்தான் ஏதாவது குந்தகம் விளைவிக்கக் கூடும். அதற்காக யாரும் பயப்படத் தேவையில்லை.''

இதைக் காரிக்கண்ணனார் தன் மகளிடம் கூறிக் கொண்டிருக்கும்போதே தெருவிலே பெருத்த ஆரவார ஒலி கேட்டது. திடுக்கிட்டார் புலவர்.

முத்துநகை கதவுப்புறம் ஓடினாள்! ஓடியவள். ''அப்பா! அப்பா! இங்கே வாருங்கள்!'' என்று கூவினாள்.

புலவர் தெருப்பக்கம் விரைந்தார். தெருவிலே இரண்டு குதிரை வீரர்கள் ஆவேசமாகப் போரிட்டுக் கொண்டிருந்தனர். குதிரைகள்

ஒன்றன் மீதொன்று பாய்ந்து பாய்ந்து சண்டையிட்டன. அவைகளின் மீது அமர்ந்திருந்த வீரர்களோ தங்கள் கைகளில் தாங்கிய ஈட்டிகளைக் கொண்டு யார் உயிரை யார் முதலில் போக்குவதென்று உணர்ச்சிக் கொந்தளிப்போடு போரிட்டனர். புலவர் அவர்களை உற்றுக் கவனித்தார். ஒருவனை அவரால் அடையாளம் புரிந்து கொள்ள முடிந்தது. பாண்டியன் பெருவழுதியின் பக்கத்தில் குதிரையில் அமர்ந்து பவனியிற் சென்ற பாண்டிய நாட்டு வீரன்தான் அவன்.

மற்றொருவன் யார்? அவருக்குப் புரியவில்லை. ஆனால் அவனும் பாண்டிய நாட்டு வீரர்களின் உடையிலேதான் இருந்தான்.

இந்தப் போராட்டம் எப்படி முடியுமோ தெரியவில்லையே என்று ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்தனர் கூடியிருந்தவர்கள். ஒருவன் புலியெனப் பாய்கிறான்; மற்றவன் சிங்கமென உறுமுகிறான். இருவர் ஈட்டிகளும் ஒன்றையொன்று அதனதன் கூர்மையான முனைகளில் தொட்டுத் தாக்குகின்றன என்றால், குறிபார்த்து எதிரியைக் கொன்று தீர்ப்பதில் அவர்கள் எவ்வளவு வல்லவர்களாய் இருந்திட வேண்டும்! இறுதியில் ஈட்டி முனைக்குத் தன் மார்பகத்தைக் காட்டி ஒரு மறவன் தெருவில் வீழ்ந்தான். வீழ்ந்தவனின் உடையைக் கிழித்துப் பார்த்தான் பெருவழுதியுடன் வந்த வீரன், மேலே அணிந்திருந்தது தான் பாண்டிய நாட்டு உடை! உள்ளே அவனது உண்மையான உடையிருந்தது. சோழனின் எதிரியான இருங்கோவேள் என்பவனின் தானைத் தலைவன் அவன் என்பது தெரிந்துவிட்டது.

எதிரியின் தானைத் தலைவன் பிணமாக வீழ்ந்து விட்டான். அவனை வீழ்த்திய வீரன், போரிட்ட களைப்பால் மயக்கமுற்றுப் புலவர் வீட்டுப் படிக்கட்டில் சாய்ந்தான்.

புலவர், பரபரப்புடன் அவனை உள்ளே அழைத்துச் சென்று மயக்கம் தெளிவிக்கும் முயற்சிகளில் ஈடுபட்டார். அவன் நெஞ்சிலே பலமான காயங்கள் இருந்தன. நெற்றியிலே எதிரியின் ஈட்டி உண்டாக்கிய புண்ணிலேயிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்தது! புலவரும் முத்துநகையும் ஓடியாடி அவனுக்குச் சிகிச்சைகள் செய்தனர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் மயக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தான். காயங்களின் வலி பொறுக்க முடியவில்லை. உடம்பை நெளித்துநெளித்துத் துவண்டான். கொதிக்க வைத்த மஞ்சளை ஊமைக்காயங்களில் போட்டாள் முத்துநகை. ஏதேதோ மருந்துகளைத் தேடியெடுத்து இரத்தங்கசியும் புண்களில் தடவினார் புலவர் பெருமான்.

''நீ யாரப்பா?''

''நான் பாண்டிய நாட்டுக்காரன், பெருவழுதி மன்னரின் ஊழியன்!'

''பெயர்?''

''செழியன்''

''போரிலே வீழ்ந்து விட்டவன் யார்?''

''அவன் சோழ மன்னரின் எதிரி - கரிகால்வளவனைக் கொல்ல வந்த துரோகி - சிற்றரசன் இருங்கோவேளின் தானைத் தலைவன் வில்லவன்.

பவனியில் செல்லும் சோழரைப் பின்னிருந்து தாக்கி, ஓடி ஒளிந்து கொள்ள வந்த கோழை! அவன் ஈட்டியைக் கரிகால் மன்னன் மீது எறிய முனையும்போது நான் பார்த்து விட்டேன். ஊர்வலத்திலிருந்து மெது வாக நழுவி அவனைத் தொடர்ந்தேன். அவன் என்னைப் புரிந்து கொண்டு ஓடத் தொடங்கினான். துரத்தி வந்து இங்கே வளைத்துக் கொண்டேன். தொலைந்தான் துரோகி!'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டான் செழியன்.

''நல்லவேளை-எங்கள் மன்னர் தப்பினார்! வீரனே! உன்னைக் காவிரி அன்னை வாழ்த்துவாளாக! தமிழ்த்தாயின் வீரமகனே! உன் ஆற்றலைக் கண்டு நான் வியக்கிறேன். வேங்கையெனப் பாய்ந்து நீ வெற்றி விளைவித்த நிகழ்ச்சியை நான் சாகும்வரை மறக்க மாட்டேன். புகார்ப்பட்டினத்து மக்கள் உனக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக் கின்றனர். எம் மன்னரைக் காத்த உனக்கு, மன்னர் திரு முன்னிலையில் தகுந்த பரிசு வழங்க இப்போதே போய் ஏற்பாடு செய்கிறேன்'' என்று துள்ளிக் குதித்தார் தமிழை அள்ளி வழங்கும் புலவர் பெருந்தகை!

''வேண்டாம் புலவரே! வேண்டாம்! இப்படியொரு நிகழ்ச்சி ஏற்பட்டதே இரு மன்னர்களுக்கும் தெரிய வேண்டாம். நட்புறவு விழாக் கொண்டாடும் நேரத்தில் அதைக் குலைக்கும் முயற்சிகள் நடைபெற்றதாகச் செய்திகள் வருவது அவ்வளவு நல்லதல்ல! தயவு செய்து இந்தச் செய்தி நம்மோடு அழிந்து போகட்டும். யாரோ இரு வீரர்கள் போரிட்டனர். ஒருவன் செத்தான், ஒருவன் பிழைத்தான் என்ற அளவோடு இது நிற்கட்டும்!'' என்று கேட்டுக் கொண்டான் செழியன்.

அப்போது வாயிற்புறத்தில் இருந்து யாரோ அழைத்தார்கள், ''புலவர் பெருமானே! புலவர் பெருமானே!'' என்று.

புலவர் தெருப்பக்கம் சென்றார். அரண்மனை வீரர் இருவர் புலவரை வணங்கி நின்றனர்.

''தங்களை அழைத்து வருமாறு மன்னர் ஆணையிட்டிருக்கிறார்'' என்று கூறினர் வீரர்கள். கூறியவர்கள், ''தெருவிலே ஒரு பிணம் கிடக்கிறதே, என்ன நடந்தது?'' என்றும் பதைப்போடு கேட்டார்கள்.

''ஆமாம், யாரோ இரு பாண்டிய நாட்டு வீரர்கள் ஒருவரையொருவர் ஈட்டி கொண்டு தாக்கிப் போரிட்டனர். ஒருவன் வீழ்ந்தான். அவ்வளவுதான்! நான் அரசரிடம் போகிறேன், நீங்கள் இந்தப் பிணத்தை அகற்ற ஏற்பாடு செய்யுங்கள்'' எனக்கூறியவாறு புலவர் உள்ளே வந்து செழியனிடம் செய்தியைச் சொன்னார். செழியனும் விடைபெற்றுக் கொண்டு எழுந்தான். ஆனால் அவனால் எழமுடியவில்லை.

புலவர் அவனைப் பிடித்து உட்கார வைத்து, ''நீ இங்கேயே இரு! முத்துநகை உன்னைக் கவனித்துக்கொள்வாள். நான் அரண்மனைக்குப் போய் உடனேயே திரும்பிவிடுகிறேன்!'' என்று புறப்பட்டார் புலவர்.

செழியனால் அதைத் தடுத்துப் பேச இயலவில்லை! காரணம் அவரோ பெரும்புலவர்; வலியோ தாங்கமுடியாமல் இருக்கிறது; சரியென்று உட்கார்ந்து கொண்டான்.

''முத்துநகை! பத்திரமாகக் கவனித்துக்கொள்ளம்மா!'' எனக்கூறிப் புலவர் வெளியில் சென்றுவிட்டார்.

தெருவில் நின்றிருந்த புரவி பூட்டிய பல்லக்கு வண்டியில் அவர் ஏறிக்கொண்டார். அந்த அழகிய வண்டி அரண்மனை நோக்கிப் புறப்பட்டது.

கரிகாலனும், பெருவழுதியும் புலவரை எதிர்கொண்டழைத்து இருக்கையில் அமரச் செய்தனர். புலவர் பெருமான், இருவரையும் ஒருசேரக்கண்டு உவகை கொண்டார். கரிகாலனுக்கு வரவிருந்த ஆபத்தையும், அது தவிர்க்கப்பட்டதையும் எண்ணுகின்றபோது அவரை யறியாமல் ஓர் அச்சம் அவரை ஆட்டிப்படைத்தது.

அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல், ''அழைத்த காரணம் யாதோ?'' என வினவினார்.

''எமது நட்புறவை வாழ்த்துவதற்கே தங்களை அழைத்தோம்!'' என்றான் சோழர்திலகம்.

புலவர் சற்றுக் கண்மூடி அமைதியாக இருந்தார். அவரது இதழ்கள் அசைந்தன. ''தமிழ் வாழ்க!'' என்றார். அதனைத் தொடர்ந்து தமிழ்மழை பொழிந்தது.

''நீயே, தண்புனல் காவிரிக்
கிழவனை; யிவனே.....''

என்று பாட ஆரம்பித்தார்.

"நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென
வரைய சாந்தமும் திரைய முத்தமும்
இமிழ் குரல் முரசும் மூன்றுடன் ஆளுந்
தமிழ்கெழு கூடல் தண்கோல்வேந்தே!"

"ஒற்றுமை குலைக்கப் பகைவர்கள் பல வழியும் முயல்வர். நண்பரைப் போலவும் நல்லன தேடுவார் போலவும் பேசி இருவரிடமுள்ள ஒற்றுமையை மாய்க்கத் திட்டம் போடுவர். அவைகளுக்கு இடந்தராமல் இருவரும் நட்புக் கொள்வீராக!" என்று அறிவுரை கூறினார். தன் வீட்டின் முன்னே நடந்த நிகழ்ச்சியை மனத்தில் வைத்துக்கொண்டுதான் புலவர் அங்ஙனம் கூறினார்.

"இன்று போல் என்றும் உமது உறவு தழைக்கட்டும்! நுமது வேல் வென்று வென்று போர்க்களத்தில் புகழொளி வீசட்டும்! நமது புலியும் கயலும் பகை நாட்டுக் குன்றுகளிலே செதுக்கப்படட்டும்!"

எனப் புலவர் தன் நெஞ்சைத் திறந்து காட்டியபோது இரு மன்னர்களும் புலவரைத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

பேரரசர்களின் அணைப்பிலே அகமகிழ்ந்த புலவர் பெருமான், "தமிழ் வாழ்க! தாயகம் மேன்மேலும் வெற்றிபெறுக!" எனத் தழுதழுத்த குரலில் கூறினார். அவரது கண்கள் அவரையும் அறியாமல் குளமாகிவிட்டன. "என்னுடைய பலநாள் ஆசை இன்று நிறைவேறியது. பாண்டியரும் சோழரும் என்றைக்குப் பகைத்துக் கொள்வார்கள்; நேரம் பார்த்துப் போர் தொடுக்கலாம் என ஏங்கிக் காத்திருக்கும் வேளிர்குடித் தலைவர்களும், ஒளி நாரகர்களும் இடை நிலங்களில் வாழும் பொதுவரும் இந்தநாள் விழா நிகழ்ச்சி கேட்டு ஏமாற்றத்தைத் தழுவிக் கொண்டிருப்பார்கள்" என்று காரிக்கண்ணனார் விழிகளை அகலத்திறந்தவாறு புதிய துடிப்புடன் முழங்கினார்.

"எல்லாம் உங்கள் கரிகால் மன்னரின் அரசியல் அறிவு நுட்பத்தால் விளைந்த முடிவுகள்" என்று புன்முறுவலோடு கூறினான் பாண்டிய மன்னன்.

"இல்லை; இல்லை! அதெல்லாம் ஒன்றுமில்லை... ஏதோ நடக்கவேண்டுமென்றிருந்தது; நடந்துவிட்டது!" என்றான் கரிகாலன்.

புலவர், பெருமிதத்தோடு பேசினார்: "ஏன் மன்னவா மறைக்க வேண்டும்? தங்களின் அரசியல் அறிவைப் பாராட்டி எழுதுவதற்குச் சுவடிகள் போதாது என்பதை நாடறியும்; நானறிவேன். இன்றல்ல, இளமைப் பருவத்திலேயே தாங்கள் சாதித்த காரியங்கள், ஒப்பிடுவதற்

கரிய உயரிய காரியங்கள் என்று அறிஞர் குழாம் இன்றும் சிறப்பித்துக் கூறுவதை என் செவிகள் கேட்டுச் சிந்தையில் குளிரேற்று கின்றன. மதுரைக் காவலனே! எம் சோழ மன்னரின் திறமைக்கும், அரசியல் அறிவுக்கும் ஒரு சிறு உதாரணம் கூறுகிறேன் கேளுங்கள்!

''சோழரது இளமைப் பருவத்தில் கொலு மண்டபத்திலே முறையிட வேண்டி, வயதேறிய இரண்டு கிழவர்கள் வந்தார்கள். வந்த முதியவர்கள் அரசரது இளமைத் தோற்றங்கண்டு இந்த இளைஞரா முறையீட்டைக் கேட்டு நீதி வழங்கக் கூடியவர் என்று திகைப்படைந்தார்கள். கரிகாலரது வயது கண்டு அந்தப் பெரியவர்கள் அவ்வளவு அலட்சியமாகக் கருதிவிட்டனர். சிறுவனிடம் நீதி கிடைக்காது என்று திரும்பிட எண்ணினர். அதை எப்படியோ மன்னர் புரிந்துகொண்டார். முறையிட வந்த முதியவர்களிடம் தக்க நீதியளிக்கத் தகுதி மிக்க ஒருவரை அழைத்து வருவதாகக் கூறிப் போய்விட்டார் மன்னர். பின்னர் கொலு மண்டபம் கூடிற்று. முறையிட வந்த முதியோர் வந்தனர். தள்ளாடித் தண்டூன்றிய கிழவர் ஒருவர் அரியாசனத்தில் அமர்ந்து நீதி விசாரணையைத் துவக்கினார். வழக்கு முடிந்தது. நல்ல தீர்ப்பு வழங்கப்பட்டது. அந்த நேர்மையான தீர்ப்புக்கண்டு முறையிடவந்தவர்கள் மனங்களித்தனர். கிழவரை வாழ்த்தினர். கிழவரின் தாடி கீழே விழுந்தது. நரைத்த தலைமுடி கழன்றது. கிழவர் வேடத்தில் வந்து நீதி வழங்கியவர் இளைஞர் கரிகாலரே என்ற உண்மை வெளியாயிற்று. நாடு மகிழ்ந்தது; கரிகாலரை வாழ்த்தியது. அப்படிப்பட்ட திறமை கொண்டவர் எங்கள் மன்னர்'' என்று புலவர் புகழ்ந்துரைத்தார்.

கரிகாலன், புகழுரைகளைக் கேட்க மனமின்றித் தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டான். பாண்டியனும் புலவரோடு சேர்ந்து கொண்டு புகழ்மாலை சூட்ட ஆரம்பித்தான்.

''இளம் வயதில் எதிரிகளால் சூழப்பட்டுச் சிறையில் சிக்கிவிட்ட சிங்கமாம் கரிகாலரின் உயிரைக் குடிக்கத் திட்டமிட்ட கொடியவர் களையும் நான் அறிவேன். எதிரிகள் சிறைக் கோட்டத்திற்குத் தீ மூட்டினர். அந்த எரி நெருப்பிலேயிருந்து இவர் தப்பியிருக்காவிட்டால் தமிழகம் மாவீரர் ஒருவரை இழந்திருக்கும்; நான் போற்றுதற்குரிய ஒரு நண்பரைப் பெறாமலே போயிருப்பேன்; பூம்புகாரின் பொலிவு என்றைக்கோ அழிந்து போயிருக்கும்.''

பாண்டியனும் புலவரும் மாறிமாறித் தன்னைப்பற்றிப் பேசுவது கண்ட கரிகாலன், ''போதும்! தயவுசெய்து நிறுத்துங்கள்! ஏற்கனவே இந்த மணிமுடியால் என் தலை கனத்திருக்கிறது; மேலும் கனத்துப் போகச் செய்யாதீர்கள்!'' என்றான் கனிவாக.

''கனத்துவிட்டது என்பதற்கு அடையாளமாகக் கழுத்திலே நிற்க முடியாமல் தங்கள் தலை கீழே தொங்குகிறது மன்னா! எவ்வளவு அடக்கப் பண்பு தங்கள் தலையிலே நிரம்பிக் கொண்டேயிருக்கிறது!'' என்று புலவர் கூறினார்.

''தமிழ் மணம் பரப்பும் மலர்க்கொடி நீங்கள்! எங்கணும் மணம் பரவச் செய்து, கொடிகளுக்கு வேலி அமைத்துப் பாதுகாக்கும் பைந்தமிழ்க்காவலர் பாண்டியர்! நீங்கள் இருவருமே என்னைப் புகழ்ந்து கூறிவிட்டீர்கள் என்கிறபோது தமிழன்னையே என்னைத் தழுவி முத்தமிட்டு வாழ்த்தியதுபோல் ஆகிவிட்டது. இனி என்ன குறை எனக்கு?''எனச் சொல்லிக் கரிகாலன் உள்ளத்து உணர்ச்சிகளை வெளிக்கொட்டினான்.

தமிழ்க்காவலரும் பாவலரும் மனம் திறந்து மடைதிறந்த தமிழாற்றில் நீந்திக் கொண்டிருக்கும்போது, அரண்மனை உட்கோயிலில் காவல் புரியும் கிரேக்க நாட்டுக் காவலன் ஒருவன் கரிகால் மன்னன் எதிரே வந்து நின்று வணங்கி நிமிர்ந்தான்.

'' என்ன?'' -கரிகாலன் வினவினான்.

''மன்னர்கள் பவனி முடிந்ததும் முடியாததுமாக ஒரு சம்பவம் நடந்துவிட்டது. யாரோ இரு பாண்டிய நாட்டு வீரர்கள் ஒருவருக் கொருவர் போரிட்டுக்கொண்டனர். ஒருவன் மடிந்தான்; மற்றவன் போன இடம் தெரியவில்லை. இருவரில் ஒருவன் பெயர் செழியன் என்கிறார்கள்.''

காவலன் இதைச் சொல்லி முடிப்பதற்குள் பெருவழுதிப் பாண்டியன் துடித்துவிட்டான். ''ஆ! செழியனா! மடிந்தவன் பெயர் செழியனா? காவலனே சரியாகச் சொல்! மடிந்தவன் செழியனா?'' - பெருவழுதி ஆவலோடு கேட்டான்.

''இருவரில் யார் செழியன் என்று எனக்குத் தெரியாது. ஆனால் போராட்டம் நடந்தது புலவர் வீட்டு எதிரில்தானாம்! இறந்தவன் பிணம் அரண்மனைக்குப் பின்புறமுள்ள பாழ்மண்டபத்தில் கிடத்தப்பட்டிருக் கிறது! மன்னர் விரும்பினால் பார்வையிட ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக் கின்றன'' என்று காவலன் பதில் சொன்னான்.

புலவருக்கு ஒரே திகைப்பு! நடந்தவைகளைச் சொல்லிவிடலாமா என்று இரண்டு மூன்று தடவை நாவை அசைத்தார். ஆனால் வார்த்தைகள் வெளிப்படவில்லை. செழியன் அவரிடம் கேட்டுக் கொண்டிருக்கிறான், யாரிடமும் அந்தச் செய்தியைச் சொல்லக்கூடா தென்று! மௌனமே சிறந்தது எனக்கண்டார்.

கரிகால் மன்னன், புலவரிடம் ''உங்கள் வீட்டுக்கெதிரில்தானே நடந்ததாம்; உங்களுக்கு ஒன்றுமே விவரம் தெரியாதா?'' என்று திடீரென்று கேட்டுவிட்டான்.

''நான்தான் இங்கு வந்துவிட்டேனே!'' என்றார் புலவர்.

''அய்யோ - செழியன் செத்திருக்கக் கூடாது! செத்திருக்கக் கூடாது! சோழ மன்னரே! நான் உடனே போய் அந்த வீரனின் சடலத்தைக் காணவேண்டும்; இறந்தது யார் என்பதை அறியவேண்டும்!'' என்று பரபரப்போடு கேட்டுக்கொண்டான் பெருவழுதி.

''இதோ, ஆவன செய்கிறேன். நானும் வருகிறேன்!'' என்று விடை பகர்ந்த கரிகாலன், காவலனிடம் ஏற்பாடுகளைச் செய்யக் கட்டளை பிறப்பித்தான்.

புலவர் கரங்கூப்பி விடைபெற்றுக் கொண்டார். அவருக்குத் தெரியும்; பாண்டியனின் அன்புக்குப் பாத்திரமான செழியன் சாகவில்லையென்று! அதனால் அவரது முகத்தில் எந்த மாறுதலும் ஏற்படவில்லை. கரிகாலன், புலவருடன் ஏழடித் தூரம் நடந்து சென்று வழியனுப்பிவிட்டுப் பாண்டியனை அழைத்துக்கொண்டு அரண்மனைக்குப் பின்புறமுள்ள பாழ்மண்டபம் நோக்கி விரைந்தான். பெருவழுதிப் பாண்டியனின் உள்ளம், அவனையும் முந்திக்கொண்டு பாழ்மண்டபத்துக்கு ஓட முயன்றது. அரண்மனையின் அழகு குலுங்கும் பல பகுதிகளைக் கடந்து இரு மன்னர்களும் குறிப்பிட்ட மண்டபம் நோக்கி நடந்தனர்.

செல்லும்போதே அருகிருந்த வீரர்களிடம் கரிகாலன் கேட்டான்: ''மண்டபத்தைச் சுற்றிக் காவல் போடப்பட்டிருக்கிறதா?''

வீரர் தலைவன் சொன்னான்: ''பிணம்தானே, ஓடியாபோய்விடும்? எதற்கும் இருக்கட்டும் என்று நான்கைந்து வீரர்கள் காவல் இருக்கிறார்கள் அரசே!''

மன்னர்கள் மண்டபத்தருகே வந்தனர். வந்தவர்கள் திடுக்கிட்டனர். மண்டபத்தைக் காவல் புரிந்த வீரர்கள் ஐவர் படுகாயமுற்றுச் சாய்ந்து கிடந்தனர், சவமாக!

அந்தக் கொடுமையான காட்சியைக் கண்டான் கரிகாலன். ''நாம் காணவந்தது ஒரே ஒரு சவத்தைத் தானே?'' என்று பதைபதைப்புடன் கேட்டான். ஆத்திரம் தாங்கமாட்டாதவனாய் மண்டபத்துக்குள்ளே வெகுவேகமாக நுழைந்தான்.

உள்ளே பிணம் மூடப்பட்டுக் கிடந்தது. பாண்டியநாட்டு உடைதான் போர்த்தப்பட்டிருந்தது. ''பாண்டிய மன்னரே; நீங்கள் குறிப்பிடும்

செழியனா என்று பாருங்கள்!'' எனக் கூறிப் பிணத்தின்மீது மூடப்பட்டிருந்த துணியை விலக்கினான் கரிகாலன். துணி மறைவில் பிணம் கிடந்தது உண்மைதான். ஆனால் அது மனிதனின் உயிரற்ற உடல் அல்ல. ஒரு கோவேறு கழுதையின் அழுகிப்போன சடலம்!

திடுக்கிட்டனர் இரு வேந்தர்களும்! ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். கரிகாலனுக்கு யாரை என்ன சொல்வதென்றே புரியவில்லை.

''இந்த அவமானம் எப்படி நடந்தது? அனுமதித்தவர்கள் யார் யார்?'' என்று கர்ச்சித்தான்.

எல்லா வீரர்களும் நடுங்கியவாறு நின்றனர். கிரேக்கக் காவலனை அருகே அழைத்தான் சோழ மன்னன்.

''நீ அந்த வீரனின் பிணத்தைப் பார்த்தாயல்லவா?''

''பார்த்தேன் அரசே!''

''இந்தப் பாழ்மண்டபத்தில் அந்தச் சவத்தைப் பாதுகாப்பாக வைத்ததும் நீதானே?''

''நானும் மற்ற வீரர்களும்தான் அரசே!''

''பிறகு எப்படிப் போர்வீரனுக்குப் பதிலாகக் கோவேறு கழுதை வந்தது?''

''அதுதான் மன்னா மர்மமாக இருக்கிறது!''

''கோழைகள்! குருடர்கள்! நம் கோட்டைக்குள்ளேயே எதிரி விளையாடியிருக்கிறான்- அதை அனுமதித்து ஏமாந்திருக்கிறீர்கள்; ஏமாளிகள்!''

கரிகாலனின் கோபம் எல்லை மீறியது. பாண்டியனைப் பார்த்து ''நண்பரே! என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்'' என்று மெல்லிய தொனியில் கேட்டுக்கொண்டான்! அப்போது அவன் கண்களில் கனல் பறந்து கொண்டிருந்தது.

''இறந்தவன் செழியன் அல்லன் என்ற இன்பச் செய்தி எனக்குக் கிடைத்தாலே போதும்!'' என்று கண்கலங்கியவாறு கூறினான் பெருவழுதிப் பாண்டியன்.

''யார் அந்தச் செழியன்? அவருக்காக மிகவும் கவலைப்படுகிறீர்களே!'' என்று விசாரித்தான் சோழன்.

''செழியன் - அவன் பெயர் எனக்குச் செந்தேன். செழுந்தமிழன்! செருமுனைக்காளை! சிந்தனையாளன்! சித்திரக் கவிதைகள் பாடும் இளம்புலவன்! அவனின்றி நான் வாழ முடியாது- அவன் என் உயிர்!''

செழியனைப் பற்றிப் பாண்டியன் தீட்டிய ஓவியம் கண்டு சோழன் வியப்பிலாழ்ந்தான். ''அவனுக்கும் தங்களுக்கும் என்ன உறவு?'' என்று கேட்டவாறு கரிகாலன் மண்டபத்தை விட்டு வெளியேறத் தொடங்கினான்.

''அவனைப் பற்றிய முழுவிவரம் பெரிய கதை. அதைப் பிறிதொரு சமயம் கூறுகிறேன். இப்போது எனக்கு வேண்டியதெல்லாம் அவனைப் பற்றிய தகவல்கள்தான்!'' என்றான் பாண்டியன்.

உடனே கரிகாலன், தன் வீரர்களை அழைத்துச் செழியனைப் பற்றிய சிறு செய்தி கிடைத்தாலும் உடனே கொண்டு வருமாறு ஆணையிட்டான். அந்தப் பொறுப்பு முழுவதையும் தான் ஏற்றுக் கொள்வதாகக் கரிகாலன், பாண்டியனிடம் வாக்களித்தான்.

''விழா நிகழ்ச்சிகளில் ஏற்பட்ட களைப்பும் அதனைத் தொடர்ந்து வந்த கவலையும் தங்கள் உள்ளத்தில் அமைதியின்மையை உண்டாக்கியிருக்கக்கூடும். அதனால் தங்களுக்கென ஏற்பாடு செய்யப்பட்டுள்ள மாளிகையில் ஓய்வு பெறுங்கள்!'' என்று கரிகாலன் கேட்டுக்கொண்டான். பாண்டியனும் சம்மதித்துக் கரிகாலனை விட்டுப் பிரிந்து தனி மாளிகை நோக்கிப் புறப்பட்டான்.

பெருவழுதியின் உள்ளத்தைப் புயலாக்கிவிட்டுச் செழியன் நிம்மதியாகப் புலவர் காரிக்கண்ணனார் வீட்டில் சாய்ந்திருந்தான். முத்துநகையின் அன்பு கமழும் உபசாரங்கள் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவள் தயாரித்துக்கொடுத்த மிளகுநீர் மிகவும் உற்சாகத்தை அளித்ததாகப் பெருமை பாராட்டிப் பேசினான். அவளுடைய குடும்ப வரலாறுகளைப் பற்றியெல்லாம் தெரிந்துகொள்ள செழியனுக்குப் பேராவல் எழுந்தது.

''உன் தாயார் பெயர் என்ன?'' என்று கேட்டான்.

''தாமரைக்கண்ணியார்! ஆனால் என் தாயின் முகத்தை நான் பார்த்ததே இல்லை! தாயைக் கொன்றுவிட்டுப் பிறந்த சேய் நான்!'' என அழுதுகொண்டே பதிலிறுத்தாள் முத்துநகை.

மெல்ல முத்துநகை செழியனின் தாய் தந்தை பற்றி வினவினாள்.

செழியன் அதற்கு, ''இருக்கிறார்கள்!''என்றான்.

''எங்கேயிருக்கிறார்கள்!''

''என் இருதயத்தில் ''

''தாயின் பெயர்?''

''தமிழ்''

''தந்தை?''

''பாண்டிய நாடு!''

''என்ன சொல்லுகிறீர்கள்?''

''ஆமாம் முத்துநகை!'' பாண்டியநாட்டுத் தந்தையும் தமிழ்த்தாயும் பெற்றெடுத்த மகன்தான் நான்!''

''நான் சொன்னது போலச் சரியாகச் சொல்லுங்கள்!''

''சரியாகச் சொல்ல என்னால் இயலாது! எப்படியோ எனக்கு ஒரு தாயும் தந்தையும் இருந்திருக்கவேண்டும், அது நிச்சயம்!''

"அவர்கள் யார்? அவர்கள் பெயர்?"

"தயவு செய்து கேட்காதே- என்னால் சொல்ல இயலாது! அதனால் எனக்குத் தாய் தந்தையே கிடையாது என்று கருதிவிடாதே! தாமரையிலும், அல்லியிலும் திடீரென குழந்தைகள் தோன்றுவதாகக் கதை கட்டுகிறார்களே; அப்படிப்பட்ட தெய்வப் பிறவியல்ல நான்! தாய் வயிற்றில் உதித்த மனிதப் பிறவிதான்!"

அவனுடைய பேச்சு நயங்கண்டு முத்துநகை மகிழ்ச்சி கொண்டாள்; தாயைப் பற்றிய நினைவு அவளுக்குத் துயரத்தை உண்டு பண்ணியிருந்த போதிலும் அவனது பதில்களில் உள்ள சுவை கண்டு சோகத்தையும் ஒருவாறு மறந்தாள்.

இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போது தெருப்புறத்திலேயிருந்து "அன்பே சிவம்! அன்பே சிவம்! பண்பே சைவம்!" என்ற முழக்கம் கேட்டது.

சிவனடியார்கள் வந்திருப்பதாகச் செழியனிடம் தெரிவித்துவிட்டு, முத்துநகை தெருப்பக்கத்துக் கதவைத் திறந்தாள். பதினைந்துக்கு மேற்பட்ட அடியார் கூட்டத்தினர், அவள் கதவைத் திறப்பதற்குள் மளமளவென்று உள்ளே நுழைந்தனர். முத்துநகைக்கு ஒரே புதுமையாக இருந்தது. தெரு வழியே செல்லும் அடியார் கூட்டம் திடீரென வீட்டுக்குள் நுழைந்தது கண்டு திடுக்கிட்டுக் கலங்கினாள்.

அவர்கள் அவளைப் பொருட்படுத்தவில்லை. "அன்பே சிவம்! பண்பே சைவம்!" என்று கூறியவாறு அவர்கள் செழியனின் படுக்கைப் பக்கம் பாய்ந்தனர். பருந்து உணவைப் பற்றுவது போல் அவனைப் பற்றிக்கொண்டனர்.

செழியன் திமிறிப் பார்த்தான். அன்பே சிவமென உச்சரித்த அடியார்கள் கைகளில் வாட்கள் மின்னிக் கிளம்பின. முத்துநகை அதுகண்டு அலறினாள்! அவளை ஒரு சிவனடியார் பிடித்துக் கொண்டார். இன்னொரு அடியார் ஒரு மூலிகையை அவள் முகத்தருகே நீட்டினார். அவள் மயங்கிக் கீழே விழுந்தாள்! பிறகு அவளை யாரும் திரும்பிப் பார்க்கவில்லை! செழியனைத் தூக்கிக் கொண்டு அடியார் கூட்டம் வெளியேறியது. முத்துநகை ஆடாமல் அசையாமல் படுக்க வைத்த சிலைபோல மயங்கிக் கிடந்தாள்.

தெருவிலே "அன்பே சிவம்" என முழங்கிச் செல்லும் அடியார்களின் கூட்டத்தைப் பார்த்தவாறு அவர்களுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுத் தன் வீடு நோக்கி வந்து கொண்டிருந்தார் காரிக்கண்ணனார். அடியார் களின் அன்னக் காவடிக்குள்ளே மயக்கமூட்டப்பட்ட செழியன் மறைத்து

வைக்கப்பட்டிருப்பதை அவர் எப்படிக் கண்டுபிடிக்கமுடியும்? அவர் செழியனிடமும் முத்துநகையிடமும் அரண்மனையில் நடந்தவைகளைக் கூற வேகமாக வந்து கொண்டிருந்தார்.

வீட்டுக்குள் நுழைந்ததும் காரிக்கண்ணனாருக்குத் தூக்கிவாரிப் போட்டது. திரும்பிய பக்கமெல்லாம் ஒரே அலங்கோலம். எப்போதும் எதிர்வந்து இன்முகங்காட்டி அழைத்திடும் முத்துநகையையும் காண வில்லை. அச்சமூட்டிடும் அந்த அமைதியை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

''முத்துநகை! முத்துநகை!!'' என்று கூவினார். கூவியவர் திடீரென்று கூச்சலே போட்டுவிட்டார். ''அம்மா முத்துநகை!'' என அலறியவாறு அவள் வீழ்ந்து கிடந்த இடத்திற்குப் பாய்ந்தோடினார். மயக்கத்தின் அணைப்பில் மெய்மறந்து கிடந்த மகளைத் தூக்கி மடியில் கிடத்திக் கொண்டு தழுதழுத்த குரலில் ''அம்மா அம்மா!'' என அழைத்துப் பார்த்தார். தண்ணீரை அள்ளி அவள் முகத்தில் தெளித்தார். தாமரையிலையின் மேலே விழுந்த தண்ணீர் முத்துருவங்கொண்டு உருள்வதைப் போல் அவள் முகத்தில் நீர்த்துளிகள் உருண்டோடிக் கொண்டிந்தன. தன் மேலங்கியின் முனையிலுள்ள கருப்புக் கரையைக் கிழித்துத் திரிபோலக் கையால் சுற்றி, விளக்கில் காட்டிக் கொளுத்தித் திரும்ப அணைத்து, அந்தப் புகையை முத்துநகையின் மூக்கில் செலுத்தினார்.

இப்படிப் பல தடவை அந்தப் புகை சிகிச்சை அளிக்கப்பட்டபிறகு முத்துநகையின் தலை மெதுவாக அசைந்தது. கடற்சிப்பி, தானே திறந்து ஒளி முகத்தை வெளியே காட்டினாற்போல் அவள் கண் இமைகள் திறந்தன... கருவிழிகள் மெதுவாக ஆடின.

''அப்பா! '' என்றாள் நடுங்கும் குரலில்.

''என்னம்மா நடந்தது; என் கண்ணே?'' என்று அழுகுரலில் கேட்டார் புலவர்.

அவளால் பேசமுடியவில்லை. சுற்றும்முற்றும் கண்களைச் சுழலவிட்டாள். திடுமென எழுந்து உட்கார்ந்தாள். ''அவரைக் கொண்டுபோய் விட்டார்களா?'' என்று வேதனையோடு கேட்டாள். தேம்பித்தேம்பி அழுதாள்.

''சொல்லம்மா! விபரமாகச் சொல்லம்மா! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. அய்யோ! நீ வீழ்ந்து கிடந்ததைக் கண்டபோது நான் கற்ற தமிழ் இலக்கணமெல்லாம் திடீரென மறந்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டதம்மா எனக்கு! சொல்லம்மா- என்ன நடந்தது? செழியன் எங்கே?''

புலவர் இந்தக் கேள்விக்கு மகளிடமிருந்து என்ன பதில் வருமோ எனப் பயந்தார்! ஒருவேளை, செழியனைப் பகைவர்கள் பழிக்குப்பழி தீர்த்து விட்டார்களோ என்ற ஐயம் அவரை அலைக்கழித்தது.

''வழக்கம்போல் சிவனடியார்கள் தெருவில் வரும் ஒலி கேட்டு, கதவு மூடியிருந்ததால் நாம் மதிக்கவில்லையென்று அடியார்கள் தவறாகக் கருதுவார்களோ என்று பயந்து, ஓடிப்போய்க் கதவைத் திறந்தேன். அவர்களோ 'குபுகுபு' வென வீட்டுக்குள் நுழைந்தார்கள். செழியனை வளைத்துக் கொண்டு தூக்கிச்செல்ல முயன்றார்கள். நான் தடுத்திட முயன்றேன். என் முகத்தில் ஏதோ ஒரு பச்சிலைக் கொத்தைக் காட்டினார்கள். அவ்வளவுதான்; எனக்குத் தலை சுற்றியது; மயக்கம் ஏற்படுவதை என்னால் உணரமுடிந்தது. நிற்க முடியவில்லை; உட்கார்ந்தேன். அதற்குள் அவரைத் தூக்கிக் கொண்டு அந்த அடியார்கள் ஓட்டம் பிடித்தார்கள். நான் வேகமாக எழுந்தேன், தடாலெனக் கீழே விழுந்தேன்; பிறகு எதுவும் எனக்குத் தெரியாது.''

இந்த பதிலை முத்துநகை சொல்லி முடித்ததும் புலவர் காரிக்கண்ணனாருக்குப் புதிய குழப்பம் மூண்டது. உடனே ஓடிப்போய்ச் சோழன் கரிகாலனிடமும் பெருவழுதிப் பாண்டியனிடமும் செய்தியைச் சொல்லவேண்டும் என்று எண்ணியெழுந்தார். ''அரண்மனைக்குப் போய் உடனே அரசர்க்குத் தகவல் கொடுத்து வருகிறேன்'' என்று மகளிடமும் சொல்லிக்கொண்டுப் புறப்பட்டார்.

ஆனால் புறப்பட்டவர் வாயிற்படி தாண்டாமல் திரும்பிவந்து திகைத்து நின்றார்.

''ஏனப்பா திரும்பி விட்டீர்கள்?'' என்று முத்துநகை ஆவல் ததும்பக் கேட்டாள்.

''ஒன்றுமில்லையம்மா! முதலில் செழியனைக் காணவில்லை என்று அரண்மனையில் மன்னர்களிடம் செய்தி வந்தது. அப்போது நானும் அங்கேயிருந்தேன். செழியன் நம் வீட்டில் இருக்கும் செய்தியைக் கூறிவிடலாம் என்று நினைத்தேன். ஆனால் செழியனின் வேண்டுகோள் என் நெஞ்சிலே நின்றது. அவன் சொன்னதை மீறிச் செய்தியை வெளியிடுவானேன் என்று மௌனமாயிருந்து விட்டேன். இப்போது போய்ச் செழியனை யாரோ தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள் என்று நான் கூறினால் முதலில் செழியன் இங்கு இருந்ததை ஏன் சொல்லவில்லை என்று கேட்பார்கள். பாண்டியராவது பரவாயில்லை. கரிகால் மன்னரிடம் யாரம்மா பதில் சொல்ல முடியும்? மன்னரின் கேள்வியும் நிச்சயமாக நியாயமாகத்தான் இருக்கும். நான் செழியன் இருக்குமிடத்தை முன்பே கூறியிருந்தால் இப்போது செழியனுக்கு இந்த

ஆபத்து வந்திருக்காதல்லவா? தவறு என்மீதுதான்!'' என்று தன்னைத் தானே நொந்து கொண்டார் புலவர்.

''உங்கள்மீது தவறொன்றுமில்லையப்பா; தவறு செழியனுடையது தான்! மன்னர்களிடம் தகவல் கொடுக்கவேண்டாமென்று முதலில் தடுத்தது அவர்தானே!'' எனத் தந்தைக்குச் சமாதானங் கூறினாள் முத்துநகை.

''செழியனைத் தூக்கிச் சென்றவர்கள் யாராக இருக்கும்? வேளிர்குடி மன்னவன் இருங்கோவேளின் ஆட்களாகத்தான் இருக்கவேண்டும். தோல்வியுற்ற அவமானத்தில் எப்படியும் சோழப் பெருநாட்டில் அமளியை உருவாக்க வேண்டுமென்று எண்ணுகிறான் போலும்!'' என்றெல்லாம் புலவர் முனகிக்கொண்டிருந்தார்.

''இருங்கோவேள், மன்னர் கரிகாலரிடம் தோற்று நாடிழந்து நகரிழந்து எங்கேயோ தலைமறைவாக வாழ்கிறான் என்று கூறினார்களே யப்பா; இப்போது அவனிடம் இத்தனை ஆட்கள் ஏது?'' என்று சந்தேகத்துடன் வினவினாள் முத்துநகை.

''நாடற்றவர்களைக் காடு காப்பாற்றுகிறது. அந்தக் காட்டின் புதர்களில் புலியும் பதுங்கியிருக்கும்-இந்த வேளிர் குடும்பத்து எலியும் ஒளிந்திருக்கும். குகைகளில் சிங்கமும் படுத்திருக்கும்- அங்கே பகை வளர்க்கும் இந்தச் சிறு நரியும் ஒண்டிக் கிடக்கும். அந்த நரிக்கு மீண்டும் நாட்டாண்மை கொடுக்கவும், நமது காவலராம் கரிகாலரை வீழ்த்தி விடவும் உள்நாட்டிலேயே ஒருசில துரோகிகள் உலவிக்கொண்டிருக் கிறார்கள்! அவர்களின் கூட்டு முயற்சியாகத்தானிருக்க வேண்டும், இன்றைய தினம் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தும்'' என்று காரிக்கண்ணனார் விழிகளில் கனல் பறக்கப் பேசினார்.

''செழியனின் உயிருக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்து விட்டால் என்னப்பா செய்வது?''

''அதைத்தான் நானும் கவலையோடு யோசிக்கிறேன்'' என்று கூறியவாறு பூமியில் விழியோட்டிச் சிந்தனையில் ஈடுபட்டார் புலவர். சிந்தனைக்கெனச் சென்ற விழிகள், செழியன் படுத்திருந்த கட்டிலின் ஓரமாக ஏதோ ஒன்றைக் கண்டு மேலும் அகல விரிந்தன. புலவர் வேகமாகச் சென்று அந்தப்பொருளை எடுத்தார். புலி நகம் பொருத்தப்பட்ட மாலை! வேலைப்பாடமைந்த அழகிய தங்கத் தகட்டா லான அந்த மாலையின் முனையில் புலி நகங்கள் நீட்டிக்கொண்டி ருந்தன. மாலையை உற்றுப்பார்த்தார்.

''இது செழியன் தன் கழுத்தில் அணிந்திருந்ததுதான்!'' என்று அடையாளங் கண்டுபிடித்துச் சொன்னாள் முத்துநகை.

புலிநக மாலையைத் திரும்ப உற்றுநோக்கினார் புலவர். பிறகு அதை முத்துநகையிடம் கொடுத்துப் பத்திரமாக பேழையில் வைத்துப் பூட்டச் சொன்னார். முத்துநகையும் பூட்டினாள். அவளுக்கு எப்படியாவது செழியனை மீட்டுவிடவேண்டும் என்ற துடிப்பு. சிறிது நேரந்தான் அவனுடன் அவள் பழகினாள். அந்த நேரத்திற்குள் அவன் மிகவும் உயர்ந்த பண்பாடு கொண்டவன் என்பதை உணர்ந்து கொண்டாள். தன்னந்தனிமையில் ஓர் அழகான பெண்ணும் ஒரு வாலிபனும் விடப்படும் சூழ்நிலையில் எவ்வளவோ விபரீதங்கள், காதல் என்ற பெயரால் அரும்பிப் பூத்துக் காய்த்துக் கனிந்து போயிருக்கின்றன. அதுவும் இருவரில் ஒருவருக்குக் காயமோ பிணியோ ஏற்பட்டுச் சிகிச்சை செய்யும் கட்டங்கள் ஏற்பட்டு விடுமேயானால் அந்த இடத்தில் காதல் எனும் புதிய நோக்கு தங்கு தடையின்றி உள்ளத்தில் நுழைந்து உடலுக்கு வராமல், முதலிலேயே உடலில் பரவிப் பிறகு உள்ளத்தையும் பற்றிக்கொள்ளும்.

ஆனால் அதே சூழ்நிலையில் விடப்பட்ட செழியன், தனக்கு அன்புடன் சிகிச்சைகள் செய்து உபசரித்த முத்துநகையிடம் எந்தவித மான தவறான குறிப்புகளும் காட்டவில்லை. அந்த மேன்மையான குணத்தை முத்துநகை பெரிதும் பாராட்டி மகிழ்ந்து இருந்தாள். அந்தப் பண்பினைக் கண்டு அவன்மீது மிக்க மதிப்பு வைத்தாள். அதனாலேயே அவனுக்கேற்பட்ட ஆபத்திலிருந்து எவ்வாறேனும் காப்பாற்றிவிட வேண்டும் என்று எண்ணித் தவித்தாள். மறுபடியும் தந்தையிடம் செழியனைக் காப்பாற்றுவதற்கு வழிகாண வேண்டும் என்று வற்புறுத்தினாள்.

புலவர் புனுகுப்பூனை போல அங்குமிங்கும் நடைபோட்டுக் கொண்டு ஆழ்ந்து யோசிக்கத் தொடங்கினார். விழா நாளும் அதுவுமாக இஃதென்ன புதிய வேதனை என்று நொந்து கொண்டார்.

கடைசியாக முத்துநகையைப் பார்த்துக் "கவலைப்படாதே! செழியனைப்பற்றிய தகவலை மன்னருக்கு அறிவிக்க நான் ஒரு குறுக்குவழி கண்டுபிடித்திருக்கிறேன். நம்மீது குற்றமில்லாமல் செய்தி மன்னனின் செவியில் எட்டிவிடும்!" என்றார்.

"என்னப்பா வழி?" என்றாள் முத்துநகை.

"விவரமெல்லாம் கேட்கக்கூடாது! இனிக் கவலைப்படாமல் தூங்கலாம் நீ!" என்று சற்றுக் குரலை உயர்த்திப் பேசினார்.

"இரண்டு மன்னர்களில் எந்த மன்னரிடம் செய்தியை அறிவிக்கப் போகிறீர்கள்? பாண்டியரிடமா? சோழரிடமா?"

''யாரிடமென்றால் உனக்கென்ன? செழியன் மீளவேண்டும்; அவ்வளவுதானே?''

''இல்லையப்பா, அதற்கில்லை! யாரிடமென்று விவரமறியக் கேட்டேன், அவ்வளவுதான்.''

''அடடா உன் தொல்லை- பெரிய தொல்லை- முத்துநகை! உண்பதற்கு ஏதாவது இருந்தால் கொடு! பிறகு உறங்கு! போ!''

திடீரெனத் தந்தையின் பேச்சில் தலைகாட்டும் கடுமைக்குக் காரணம் புரிந்து கொள்ளமுடியவில்லை. முத்துநகையினால்!

'இருங்கோவேள் மறைந்திருந்து நாட்டில் இப்படியெல்லாம் குழப்பங்களை உண்டு பண்ணுகிறானேயென்று தந்தைக்கு உள்ளத்தில் குடைச்சல் ஏற்பட்டிருக்கக் கூடும். அல்லது, செழியனைப் பற்றிய செய்தியை முதலில் வெளியிடாமல் இப்போது வெளியிட்டால் மன்னர் என்ன கருதுவாரோ என்ற கவலை மனத்தைத் துளைத்திடக்கூடும். அதனால் தந்தையின் பேச்சில் படபடப்பு இருக்கிறதோ என்று முத்துநகை நினைத்தாள். அவளுக்கு வேறொரு பயமும் வந்துவிட்டது. அடிக்கடி செழியன் காப்பாற்றப்பட வேண்டும் என்பதையே வலியுறுத்திக் கூறுவதால் ஒருவேளை தந்தை தன்னைப் பற்றித் தவறாக கருதியிருக்கக் கூடுமோ என்ற அச்சம்தான் அது!

ஆகவே அவள் பேசுவதை நிறுத்திக்கொண்டாள். அடுக்களைக்குச் சென்று பழங்களையும் பாலையும் எடுத்து வந்து தந்தைக்கு முன்னே வைத்தாள். அவரும் பழந்தின்று பாலைப் பருகினார். அதுவரையில் வைத்த விழி வாங்காமல் முத்துநகை தந்தையின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். தன் மகள் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் காரிக்கண்ணனார் உணராமல் இல்லை. உணவை முடித்துக்கொண்டு எழுந்து தெருக்கதவைத் தாழிட்டுவிட்டுப் படுக்கையில் சாய்ந்து கொண்டார்.

முத்துநகைக்கு ஒன்றுமே விளங்கவில்லை. செழியனைப் பற்றி மன்னருக்குச் செய்தி அனுப்ப வழி கண்டுபிடித்துவிட்டேன் என்று கூறியவர், உறங்குவதற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டு விட்டாரே யென்ற கவலை அவளை வாட்டியது. படுக்காமல் உட்கார்ந்திருந்தால் தந்தையின் மனத்தில் மேலும் அமைதியற்ற நிலையை உண்டாக்கிவிடக் கூடும் என அஞ்சி அவளும் தாழ்வாரத்தில் தலைசாய்த்துக் கொண்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம், புலவர் உறங்குகிறார் என்பதற்கு அடையாளமாக விதவிதமான மூச்சுகள் ஒலி எழுப்பிடத் தொடங்கின. முத்துநகைக்கு தூக்கமே வரவில்லை. புரண்டு புரண்டு படுத்தாள்.

செழியனை எங்கே கொண்டு போயிருப்பார்களோ? என்ன செய்திருப்பார்களோ?

எல்லாம் தன்னால் வந்த வினைதான்! சிவனடியார்களுக்கு மரியாதை செலுத்துவதற்காகக் கதவைத் திறக்காமல் இருந்திருந்தால் இப்படி யெல்லாம் ஆகியிருக்குமா?

இவ்வாறு கவலைப்பட்டுக்கொண்டே அந்தப் பூங்கொடியாள் துவண்டு போனாள். நாழிகைகள் உருண்டோடி நடுநிசியாயிற்று. எங்கும் பயங்கரமான அமைதி. அரண்மனையின் மணியோசை நடுநிசியென் பதை அறிவித்துவிட்டு ஓய்ந்து போனது. பூம்புகார் கடற்கரையின் கலங்கரை விளக்கம் சுழலும்போது அவள் வீட்டு முற்றத்தின்வழியாகப் ''பளிச் பளிச்'' என்று ஒளி பட்டு மறைந்து கொண்டிருந்ததானது அவளது மனோ நிலைக்குத் தக்க எடுத்துக்காட்டாய் அமைந்திருந்தது.

இருண்டிருந்த வீட்டிற்குள் யாரோ விளக்கு ஏற்றுவதை உணர்ந்து திரும்பிப் பார்த்தாள். புலவர்தான் விளக்கைக் கொளுத்தி வைத்தார். முத்துநகை கவனித்துக்கொண்டேயிருந்தாள். விளக்கின் அடியில் அமர்ந்து புலவர், ஓலைச் சுவடிகளைக் கையிலெடுத்து எழுத்தாணியை ஓட்டத்துவங்கினார். அவர் எழுதிக்கொண்டிருப்பது எதுவாக இருக்கும் என்ற சந்தேகம் முத்துநகைக்கு! ஏதாவது கவிதையாக இருக்கும் என்று அவளே பதில் கூறிக்கொண்டாள்.

அப்போது தெருக்கதவு மெல்லத் தட்டப்படும் ஒலி கேட்டது! முத்துநகை எழுந்து தெருக்கதவின் பக்கம் ஓடினாள்.

''நில்! நீ போகாதே! நான் திறக்கிறேன்!'' என்றவாறு புலவர் எழுத்தாணியைக் கையில் எடுத்துக்கொண்டே கதவுப்பக்கம் வந்தார். எதிரிகள் யாராவது இருந்தால், தற்காப்புக்காக எழுத்தாணியைக் கையில் வைத்துக் கொண்டார் என்பது அவர் அதைப் பிடித்திருந்த பாவனையிலேயே தெளிவாகத் தெரிந்தது.

கதவு திறக்கப்பட்டது. தாடியும் மீசையும் கொண்டு தண்டூன்றியவாறு ஒரு கிழவர் உள்ளே வந்தார். நீண்ட கருநீல அங்கியொன்றை அவர் அணிந்திருந்தார். அதன்மீது பூவேலை செய்யப்பட்ட மேலாடை யொன்று கிடந்தது. சிவப்பு வர்ணமுள்ள பட்டுத் துணியொன்று தலையைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தது.

அந்தக் கிழவர், ''என்ன புலவரே! சுகமா?'' என்று கேட்டவாறு உள்ளே வந்தார்.

அந்தக் கிழவரை முத்துநகை இதற்குமுன்பு பார்த்திருக்கிறாள், அவரோடு பேசியுமிருக்கிறாள். அவர் ஒரு யவன நாட்டுக்காரர் என்றும், பெரிய வாணிப வேந்தர் என்றும், தன்பால் மிக்க அன்பு கொண்டவர்

என்றும் காரிக்கண்ணனார் முத்துநகையிடம் கூறியிருக்கிறார். கிழவரை அவளும் வணங்கி வரவேற்றாள்.

அக்கிழவர், முத்துநகையிடம் நெருங்கி வந்து, ''சுகமாக இருக்கிறாயா பெண்ணே?''என்று அவள் தலையை அன்போடு தடவிக் கொண்டே கேட்டார்.

''சுகந்தான் தாத்தா! ஏது இந்நேரத்தில் வந்தீர்கள்?'' என்று முத்துநகை அவரைப் பார்த்துக் கேட்டாள்.

''ஏதாவது வேலையிருந்திருக்கும்; வந்திருப்பார். இதெல்லாம் ஒரு கேள்வியா? முத்து! நீ போய்ப் படுத்துத் தூங்கு!'' என்று புலவர் கூறவே, அவளும் தன் படுக்கையிடம் சென்றுவிட்டாள்.

பிறகு, கிழவரும் புலவரும் வெகுநேரம் வரையில் ஏதோ ரகசியம் பேசிக்கொண்டிருந்தனர். என்ன பேசுகிறார்கள் என்பதை எப்படியாவது கேட்டுவிட வேண்டும் என்று பெருமுயற்சி செய்தாள் முத்துநகை. காதைக் கூர்மையாக்கிக் கொண்டு ஒலி வரும் திக்கில் நீட்டிக் கொண்டிருந்தாள். ''சோழ நாடு'', ''பாண்டிய மண்டலம்'', ''வேளிர்குடிமக்கள்'' இப்படிச் சிதறிய சில வார்த்தைகளைத் தான் அவளால் கேட்க முடிந்தது. ''செழியன்'' என்ற சொல்லும் சில நேரங்களில் பேசப்பட்டது. அப்போது அந்த வாசகத்தின் முழு உருவையும் பெற அவள் பட்ட பாடு கொஞ்சமல்ல. ஆனாலும் பயனில்லாது போயிற்று.

இறுதியாக, யவனக்கிழவர் விடைபெற்றுக்கொண்டு எழுந்தார். புலவர் ஓலைச்சுவடியிலிருந்து இரண்டு மூன்று ஓலைகளை எடுத்துக் கிழவரிடம் கொடுத்தார். அவர் அவைகளை வாங்கிப் பத்திரப்படுத்திக் கொண்டார்.

கிழவர் மெதுவாக வாயிற்படியைத் தாண்டி நடந்தார். புலவரும் தெருவரையில் சென்று அவரை வழியனுப்பி வைத்தார். தெருவில் நின்று ஏதாவது பேசுகிறார்களா என்று கவனிக்க முத்துநகை கதவோரத்திற்குப் போனாள். போனவளின் காலில் கதவோரத்தில் ஏதோ ஒன்று தட்டுப்பட்டது. குனிந்து எடுத்து விளக்கருகே சென்று பார்த்தாள். ஒரு சிறு பதக்கம்! சுற்றிலும் வைரம் பதித்த பதக்கம்! அதன் நடுவே உள்ள எழுத்துக்கள் அவள் பார்வையை இழுத்தன.கூர்ந்து கவனித்தாள். ''இருங்கோவேள்'' என்று எழுதப்பட்டிருந்தது. அவள் கண்களை அவளால் நம்பமுடியவில்லை. திரும்பத் திரும்பப் படித்தாள். அதே எழுத்துக்கள்தான். அவளுக்காக அவை மாறவில்லை.

''இருங்கோவேள் மன்னனா? இந்த நாட்டின் பகைவனா? அப்படி யானால் இவர் யவனக் கிழவர் இல்லையா? அய்யோ பகைவ னுடனா தந்தை உறவு கொண்டாடுகிறார்?''

கேள்விகள் அவள் நெஞ்சத்தைத் துளைத்துத் தகர்த்தன. பதக்கத்தை மறைத்துக்கொண்டு படுக்கையில் போய்ச் சாய்ந்துக்கொண்டாள்.

புலவரும் கிழவரை அனுப்பிவிட்டுக் கதவைத் தாழிட்டுவிட்டுப் படுத்துறங்க ஆரம்பித்தார்.

புகார் நகருக்கு வெகு தொலைவிலுள்ள காட்டுவழியொன்றில் அடியார் கூட்டம் வேகமாக நுழைந்தது. செழியனைக் கட்டியுள்ள அன்னக் காவடியைத் தூக்க முடியாமல் ஆள்மாற்றி மாற்றித் தூக்கித் தோளெல்லாம் வீங்கிவிடவே காட்டு வழியில் நுழைந்ததும் நுழையாததுமாக எல்லாரும் களைப்பாறுவதற்காக உட்கார்ந்து கொண்டார்கள்.

அன்னக் காவடியிலிருந்த செழியனும் மயக்கந்தெளிந்து அசைய ஆரம்பித்தான். அந்த அசைவு கண்டு அடியார்கள் அச்சங் கொண்டனர். வாளை உருவித் தயாராக நின்று கொண்டனர். இருவர் அருகே சென்று அன்னக் காவடிக்குள் முடங்கிக் கிடந்த செழியனை வெளியே தூக்கினர். உடனே இருவர் தயாராக வைத்திருந்த விலங்குகளைக் கையிலும் காலிலும் மாட்டினர். செழியன் ஒன்றும் விளங்காமல் விழித்தான். அடியார்களை உற்றுப்பார்த்தான். அவர்களுக்கு இப்போது பயம் தெளிந்துவிட்டது. சோழனின் தலைநகரை விட்டு வெகுதூரம் வந்து விட்டோம் என்ற துணிவில் தங்கள் மாறுவேடங்களைக் கலைத்தனர். செழியனுக்கு நன்றாகப் புரிந்துவிட்டது அவர்கள் இருங்கோவேளின் ஆட்கள்தான் என்பது.

என்ன செய்யமுடியும்? காலும் கரமும் கட்டப்பட்ட நிலையில் எட்டிய மட்டும் விழிகளைச் செலுத்தினான். எட்டாத தொலைவுக்கு நினைவுகளை அலையவிட்டான். பறக்கவிடப்பட்ட காற்றாடி எவ்வளவு தூரம் சென்று பறந்தாலும் கயிற்றின் நுனியிருக்கும் இடத்திற்குத்தானே கடைசியில் வந்து சேரவேண்டும்? அது போலவே எங்கெங்கோ பறந்து சென்ற எண்ணங்கள் இறுதியில் அவனுக்குள்ளேயே வந்து சுற்றிக் கொண்டன.

இருங்கோவேளின் வீரர்களிடமிருந்து தான் தப்புவது ஒன்றுதான் உடனடியாக நடக்கவேண்டிய காரியம் என்று தீர்மானித்தான். ஆனால் அந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற வழி? எங்கும் இருள்! அதுகூட அவனுக்குச் சாதகமான சூழ்நிலைதான். ஓடினால் யாராலும் துரத்திக் கொண்டு தொடரமுடியாது. ஆனாலும் தப்பவேண்டுமே! அதற்கு என்ன செய்வது? அந்த வெறிபிடித்த முகம் படைத்த வீரர்களோடு பேசிப் பார்ப்போம் என்று தோன்றியது அவனுக்கு! பேசத் தொடங்கினான்.

''யார் நீங்கள்?''- இது அவன் முதல் கேள்வி.

''எங்களைத் தெரியவில்லையா? பகைவர்களைப் பழிவாங்கும் பட்டாளம்!''- இறுமாப்புடன் விடை கிளம்பியது.

''இப்போது என்னை எங்கு அழைத்துச் செல்கிறீர்கள்?''

''அழைத்தா செல்கிறோம்; அட முட்டாளே! உன்னை அழைத்துப் போகவில்லை. இழுத்துப் போகிறோம்; இருங்கோவேள் மன்னரிடம்!''

''இருங்கோவேள்! அவர் இன்னுமா மன்னர்? இருக்கிறாரா உயிரோடு? புறமுதுகு காட்டிய அவமானத்தில் தற்கொலை செய்து கொண்டார் என்றல்லவா கேள்விப்பட்டேன்!''

''என்ன ஆணவம் இவனுக்கு?''- ஒரு வீரன் கர்ச்சனை செய்தான்.

''வாயைக் கிழியுங்கள்!''- இன்னொரு வீரன் கத்தினான்.

''நாக்கை நறுக்கி எறியுங்கள்!''- ஒரு வீரன் கத்தியோடு பாய்ந்து வந்தான்.

அந்த முழக்கங்கள் எதுவும் செழியனை இம்மியளவு அச்சத்திற்கும் ஆளாக்கவில்லை. அவர்கள் ஆவேசக் கூச்சலை எழுப்பயெழுப்பச் சிங்கம்போல் நிமிர்ந்து நின்றான். போர் முரசு ஒலிக்கும்போது அறுந்துவிழும் கரத்தைக்கூட கவனிக்காமல் எதிரிகளின்மீது பாய்கின்ற வீரக்குணம் படைத்த மறவர் மரபிலே வந்தவன் அந்த மாவீரன் என்பதற்கு அடையாளமாக, மார்பை உயர்த்தி மலையென நின்ற காட்சி, சூழ்ந்து நின்ற வீரர்களுக்குத் திகைப்பை ஏற்படுத்தியது.

அவர்களில் ஒருவன் செழியனிடம் நெருங்கிவந்து, ''தம்பி! நீ பாண்டிய நாட்டுக்குள்ளே பெரிய வீரனாக இருக்கலாம், ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை போல! இங்கே வால் நீட்டாதே! கரிகால் சோழனிடம் வேளிர் குடியினராகிய நாங்கள் நாட்டை மட்டுந்தான் பறி கொடுத்திருக்கிறோம்; வீரத்தையும், மானத்தையும், வெம்பகை முடிக்கும் திறத்தையும் இன்னும் பறிகொடுத்துவிடவில்லை. அவனைப் பழிவாங்காமல் விடப்போவதும் இல்லை. இன்றைக்கே முடிந்திருக்க வேண்டிய காரியம். நீ தலையிட்டுக் கெடுத்துவிட்டாய்.'' என்று கம்பீரமாக வார்த்தைகளை உதிர்த்தான்.

செழியன் அவனைப் பார்த்து, ''ஓகோ, புறமிருந்து பகையை வளைக்கும் திறத்தை யாரிடம் கற்றீர்? இந்நாட்டுக்குச் சொந்தமில்லாத அந்தத் திறத்தை உமக்கு விற்றவர் யார்? சோழப் பெருநாட்டின் தங்கம் கரிகால் பெருவளத்தானை என் கண் எதிரிலேயே கொல்லுவீர்கள். அதை நான் பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமோ? பிறகேன் எனக்குக் கையிலே வேல், கட்கம், கட்டாரியெல்லாம்?'' என்று உறுமினான்.

''இவனோடு என்ன பேச்சு? இழுத்து வாருங்கள்!'' என்று ஒருவன் கரகரத்த குரலில் ஊளையிட்டான். ஒருவன் செழியன்மீது காரித்துப்பு வதற்கு விரைந்து ஓடினான். இன்னொருவன் அவனைப் பிடித்து இழுத்துப் புறம் விடுத்தான்.

காட்டுப்பாதையில் அவனைக் கால், கை விலங்குகளோடு இழுத்துச் சென்றனர். ஒரே வெறிக்கூத்து. விரோதியொருவன் பிடிபட்டான் என்ற மகிழ்ச்சி ஆட்டம்? நடுக்காட்டுக்குள்ளே அந்தக் கூட்டம் நுழைந்தது. அதன் ஆட்ட பாட்ட ஒலியில் காட்டு மிருகங்கள் கூட ஓடி ஒளிந்தன. பறவைகள் அமைதியிழந்து மரக்கிளைகளிலேயிருந்து சிறகடித்து மேலெழும்பி மீண்டும் அமர்ந்தன. கூட்டத்தின் ஆர்ப்பாட்டம் திடீரென அடங்கியது. எல்லாரும் திடுக்கிட்டு எதிரே பார்த்தார்கள். இருளைக் கிழித்துக்கொண்டு ஒரு தீவட்டி வெளிச்சம் அவர்களை நோக்கி மிக வேகமாக வந்துகொண்டிருந்தது. செழியனும் வீரர்களும் அசையாமல் நின்றனர்.

வந்த வெளிச்சம், அவர்களுக்கெதிரே வந்து, சற்றுத் தொலைவில் நின்றது. குதிரையில் ஒரு வீரன் தீவட்டியோடு அமர்ந்திருக்கிறான் என்பது மட்டுமே செழியனுக்குத் தெரிந்தது. அவன் யார்? எந்த நாட்டு வீரன்? என்பதொன்றும் செழியனுக்குப் புரியவில்லை.

தீவட்டியோடு வந்த வீரன், ''பகை! பகை! பகை!'' என்று மூன்று முறை கூவினான்.

உடனே செழியனை அழைத்துவந்த வீரர்கள், ''தூள்! தூள்! தூள்!'' என்று பதிலுக்குக் கூவினார்கள். தீவட்டி வீரன் அதன்பிறகு அருகே வந்தான். செழியனுக்கு இப்போது விஷயம் புரிந்துவிட்டது. இருங்கோவேளும் அவனது எஞ்சிய படை வீரர்களும் இந்தக் காட்டிலேதான் உலவிக்கொண்டிருக்கவேண்டும். வேறு யாராவது எதிரிகள் வந்தால் அறிவிப்பதற்காகத்தான் தீவட்டி வீரன் வந்திருக்க வேண்டும். எதிரியா, அல்லவா என்பதை உணர்ந்து கொள்வதற் காகத்தான் ''பகை'' என்றதும் ''தூள்'' என்றனர்; இப்படி பதிலுக்குக் கூறாவிட்டால் தீவட்டிக்காரன் திரும்பி ஓடிப்போய் மற்றவர்களுக்கு ஆபத்தை விளக்குவான்; அவர்கள் ஓடித் தப்பித்து விடுவார்கள். இப்படித்தான் இருக்கவேண்டும் என்று செழியன் யூகித்துக்கொண்டான்.

அருகே வந்த தீவட்டிக்காரன் மற்ற வீரர்களைப் பார்த்து, ''என்ன வெற்றியா?'' என்று கேட்டான்.

''இதோ வெற்றியின் அடையாளம்!'' என்றனர் செழியனைச் சுட்டிக் காட்டியவாறு.

செழியனின் கண்கள் கட்டப்பட்டன. ''ஏன் என் கண்களைக் கட்டுகிறீர்கள்?'' என்று ஆத்திரத்தோடு கேட்டான் செழியன்.

''இனிமேல் நீ இந்த உலகத்தைப் பார்க்க முடியாது. சற்றுமுன் கடைசித் தடவையாகப் பார்த்தாயே, அதோடு சரி, உனக்கும் உலகத்துப் பெருங்காட்சிகளுக்கும் உள்ள தொடர்பு! ம்... இழுத்து வாருங்கள் அவனை!'' என்று தீவட்டிக்காரன் ஆணையிட்டு விட்டுக் குதிரையைத் திருப்பிவிட்டான்.

விழிகளை இறுகக் கட்டிய நிலையில் செழியன் கல்லிலும் முள்ளிலும் கால்களை இடறிக்கொண்டு இரத்தம் கசியக் கசிய நடந்து சென்றான். அனைவரும் ஒரு ஏரிக்கரையோரமாக வந்து சேர்ந்தனர். காண்பவர் வியக்குமாறு அந்த நடுக்காட்டில் மரத்தால் அமைக்கப்பட்ட பல வீடுகள் இருந்தன. மாளிகை போன்ற தோற்றத்தில் கட்டிய ஒரு மரவீடு கம்பீரமாக அமைந்து இருந்தது. வீரர்கள் தங்குவதற்கு ஏற்றவாறு நீண்ட பாசறையொன்றும் காணப்பட்டது. காட்டு மரங்களை வெட்டி ஒழுங்கான பலகைகளாகக் கூட அறுக்காமல் முழு மரங்களாகவே அடுக்கி அவசரத்தில் கட்டப்பட்டிருந்தன அந்த வீடுகள்.

மாளிகை போன்ற வீட்டுக்கு எதிரே காற்றோட்டமேயில்லாத ஒரு மரவீடு இருந்தது. அதற்கு அழுத்தமான கதவு மட்டுமே இருந்தது. கதவில் பெரிய பூட்டு ஒன்று இருந்தது. அந்த வீட்டின் முகப்பில் வெள்ளை வண்ணத்தால் ''**சாவூருக்குப் போகும் வழி**'' என்று எழுதப்பட்டிருந்தது.

மாளிகை வீட்டின் பின்புறத்தில் சற்றுப் பொலிவு குறைந்த - ஆனால் மாளிகைத் தோற்றமேயுள்ள மற்றொரு வீடும் காணப்பட்டது. முன்மாளிகையில் அரசனும் பின்னுள்ள மாளிகையில் அரசாங்கத்துப் பெண்களும், அரசியும், இளவரசியும் தங்கியிருக்கவேண்டும் என்ற உண்மையை செழியன் புரிந்துகொண்டிருப்பான். அவனது கண்கள் கட்டப்படாமல் இருந்திருந்தால்!

கரிகால் சோழனிடம் தோற்றுவிட்ட இருங்கோவேள் எப்படியும் தன் பகையைத் தீர்த்துப் பழிவாங்கிட வேண்டுமென்ற எண்ணத்தோடு அந்தக் காட்டில் தனது தளநாயகர்களோடும், அமைச்சர்களோடும், அரசியோடும், அரசகுமாரியோடும் மரமாளிகை அமைத்துத் தங்கியிருந்தான். மக்களில்லாமல் மாவீரர்களையும் மந்திரி பிரதானியரையும் மட்டுமே கொண்ட அவனது அரசு, அந்தக் கானகத்தில் நடைபெற்று வந்தது. அங்கும் அவனுக்கு நிம்மதியில்லை. கரிகாலனைப் பூமியில் வீழ்த்தும்வரை அவனுக்கு ஓய்வில்லை. வெறிபிடித்து அலைந்து கொண்டிருந்தான். அவன் கனவு பழுக்கப்போகும் நேரத்தில்தான்

செழியன் குறுக்கிட்டுவிட்டான். அவன் ஆத்திரம் செழியன்மீது திரும்பிற்று. அதன் விளைவாகச் செழியனைச் சூழ்ச்சியால் கொண்டுவந்துவிட்டார்கள் இருங்கோவேளின் வீரர்கள்.

மாளிகை வீட்டுக்குள்ளே செழியனை இழுத்துக் கொண்டு அந்த வீரர்கள் புகுந்தார்கள். மரத்தால் ஆன சிம்மாசனமும் அதைச் சுற்றி அறிவுரையாளர்கள் அமர்வதற்கேற்ற வசதியுடைய ஆசனங்களும் நிரம்பி, அந்த மாளிகைக்கூடம் விசித்திரமாகக் காட்சியளித்தது. செழியனை இழுத்துக்கொண்டு வந்த நேரத்தில் அந்தக் கூடத்தில் யாருமே இல்லை. ஆசனங்கள் மட்டுமே இருந்தன. அனைவரும் உள்ளே நுழைந்ததும் தெருக்கதவுகள் மூடப்பட்டன. கூடத்தில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு மணியை தீவட்டிக்காரன் மெதுவாக அடித்தான். கூடத்து மூலையிலே ஒரு சிறிய கதவு 'கிரீச்' என்ற ஒலியுடன் திறந்தது. அந்த வழியாக ஒருவர் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து, தீவட்டி வெளிச்சத்திலே முகந்தூக்கிப் பார்த்தார். வயதேறியவர் என்றாலும் அவர் முகத்தில் முதுமையின் இருள் இல்லை; கொடிய இருள் படர்ந்திருந்தது.

''யாரது?'' என்று வாயைப் பிளந்தார். அய்யோ பயங்கரம்! செவியைத் துளைக்கும் குரல்! சிறு குழந்தைகளைப் பயமுறுத்தும் 'பூச்சாண்டி'யைப் போலக் காணப்பட்ட அந்தக் கிழவரின் கிணற்றுக் கண்களுக்குத்தான் எவ்வளவு கூர்மையான பார்வை.

''அமைச்சர் அவர்களே! வணங்குகிறேன். இதோ, செழியனைக் கொண்டுவந்து விட்டார்கள்!'' என்று அந்தக் கிழவரைப் பார்த்துத் தீவட்டிக்காரன் மரியாதையாகக் கூறினான்.

''ஓகோ! அமைச்சரும் இருக்கிறார் போலும்!'' என்று செழியன் தீர்மானித்துக் கொண்டான்.

கிழ அமைச்சர் செழியனிடம் நெருங்கிவந்து, அவன் முகத்தை ஏற இறங்கப் பார்த்தார். விகாரமாகச் சிரித்தார். ''வில்லவனைக் கொன்ற வீரன் நீதானோ?'' என்று பதைபதைப்புடன் கேட்டார். செழியன் மௌனமாக நின்றான்.

''சோழனுக்காகப் பரிந்துகொண்டு எங்கள் வேளிர்குடியின் தளபதியைக் கொன்றுபோட்ட உனக்கு எத்தனை வகையான சித்திரவதைகள் நடக்கப்போகின்றன பார்!'' என்று மூச்சைப் பிடித்துக் கொண்டு கத்தினார். அந்தக் கூச்சலில் உறுதியிருந்தது. வார்த்தைகள் அழுத்தந் திருத்தமாக வெளிப்பட்டன. விழிகளைத் திறக்க முடியாத நிலையில் செழியன் பேசினான்.

''முது கிழவர் மட்டுமல்ல; அமைச்சராகவும் இருந்தவர். தாங்களே இப்படி வயதுக்குத் தரவேண்டிய பெருமையைக் கூடத் தராமல் வாய்க்கு வந்தவாறு பேசுதல் முறையல்ல என்பதை மட்டும் இந்தக் கண் கட்டிய காட்டில் கூறிட விரும்புகிறேன்'' எனக் கம்பீரமாகச் சொல்லிவிட்டு ''மாண்டிட அஞ்சான், பாண்டிய நாட்டான்!'' என உற்சாகத்தோடும் உணர்ச்சியோடும் குமுறிக் கொந்தளித்து முழங்கினான்.

''செழியா! சிறுவனே! அமைச்சர் செந்தலையாரிடம் பேசுகிறோம் என்பது நினைவிருக்கட்டும்!'' எனத் தலையில் ஒரு தட்டுத் தட்டினான் தீவட்டிக்காரன். தலையில் அடி விழுந்ததுதான் தாமதம். வேல்பட்ட வேங்கையானான் செழியன்! எரிமலையெனக் குமுறியெழுந்தான். தன்னைப் பிணைத்திருந்த சங்கிலியோடு சேர்த்து அதைப் பிடித்திருந்த வர்களைக் கீழே உருட்டினான். திடீரென ஏற்பட்ட அதிர்ச்சியில் காட்டாற்று வெள்ளத்து நடுவே சிக்கிய ஆட்டுக்குட்டிகள் போல் விலங்குச் சங்கிலியைப் பிடித்திருந்த வீரர்கள் சிதறி விழுந்தனர்.

காலிலும் கையிலும் விலங்கு-கண்களோ கட்டப்பட்டிருக்கின்றன- ஆனாலும் போரிடத்தயாராகி விட்டான். கண்கட்டை அவிழ்ப்பதற்காக விலங்குடன் கையைக் கொண்டு போனான். அதற்குள் ஒருவன் வாளோடு செழியன்மீது பாய்ந்தான். அந்த வாளைச் செழியன் கைப்பற்றிக்கொண்டு பாய்ந்தவனைக் கீழே உருட்டினான். அதற்குள் பல வாள்முனைகள் அவனைச் சூழ்ந்தன. ஒலிக்குறிப்பை மட்டும் வைத்துக்கொண்டு விழிகளின் பார்வையற்ற நிலையில் அவன் நடத்திய போராட்டங்கண்டு அமைச்சர் செந்தலையாரும் அதிசயித்துப் போனார். அவனது வாள்வீச்சில் ஐந்தாறு வீரர்கள் காயம்பட்டு ஓடினர். ஆயினும் இறுதி வெற்றி அவன் பக்கம் இல்லை. இருங்கோவேளின் வீரர்களே வென்றனர். செழியன் மீண்டும் பலமாகக் கட்டப்பட்டான்.

அப்போது குதிரைகள் வரும் குளம்படியோசை கேட்டது. தெருக்கதவு திறக்கப்பட்டது. குதிரையிலிருந்து இறங்கியவர்கள் தளபதி வில்லவனின் பிணத்தை உள்ளே கொண்டுவந்தனர். ஒரே அமைதி! சோகம் திடீரெனக் கப்பிக்கொண்டது. வில்லவனின் வீர உருவத்தை நடுக்கூடத்திலே கொண்டுவந்து வைத்தார்கள். மந்திரியார் அந்த உருவத்தருகே சென்று தீவட்டியின் உதவியோடு குனிந்து பார்த்தார். அவர் முகம் மேலும் கொடூரமாக மாறியது.

''பகை! பகை! பகை!'' என்று படிப்படியாகக் குரலை உயர்த்தினார்.

சுற்றி நின்றவர்கள் ''தூள்! தூள்! தூள்!'' என்று ஒலி முழக்கம் எழுப்பினர் ஆத்திரத்தோடு!

அதன் பின்னர் சற்று நேரம் அமைதி! குதிரை வீரர்களைப் பார்த்து அமைச்சர் கேட்டார்- ''இன்னும் மன்னர் வரவில்லையா?'' என்று.

அதற்கு, ''மன்னர் எங்களுக்குப் பின்னால்தான் வந்தார். உடை மாற்றிக் கொள்வதற்காகப் போயிருக்கிறார்!'' என்று பதிலுரைத்தான் வீரன்.

அதற்குள், அமைச்சர் வந்த மூலைக் கதவுப் பக்கமிருந்து தேர் ஒன்று அசைவதுபோல அசைந்து வந்தான் மன்னன் இருங்கோவேள். வேளிர்குடி மன்னன் ஒரு சிற்றரசனாக இருந்தாலும் அவன் கொலுமண்டபத்திற்கு வருவதென்றால் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். இன்று அவன் இருண்ட மரமாளிகையொன்றில் நிம்மதியற்ற நெஞ்சோடு, சாகும்வரை மாறாத ராஜநடை போட்டுப் பிரவேசித்த காட்சி அவனது வீரர்களின் உள்ளத்தைத் தொடாமல் இல்லை. அப்படி தொட்டதனால்தான் தங்கள் உயிரைத் திரணமாக மதித்து இருங்கோவேளின் வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்படுத்த வேண்டுமென்று அவனோடு சிரமங்களைத் தாங்கிக்கொண்டு வாழ்கிறார்கள். இருங்கோவேளின் பார்வை முதலில் வில்லவனின் உருவத்தின் மீதுதான் விழுந்தது. அருகே வந்து நின்றான். அவன் கண்கள் நீரைப் பொழிந்தன. வீரர்களை நோக்கினான். அமைச்சர் உட்பட அனைவரும் தலைகுனிந்து நின்றனர்.

''எனக்காக - என் வாழ்வின் மேன்மைக்காக-நமக்காக- நமது நாட்டுக்காகத் தன் உயிரை மதியாமல் சென்ற வீரத்தளபதி வில்லவனின் பெருமைக்குரிய உடலுக்குத் தலை தாழ்த்தி வணக்கம் செலுத்துவோம்!''

இருங்கோவேள் சோகம் கப்பிய தொனியில் இந்த வார்த்தைகளை வெளியிட்டான். அவன் குரல் கம்மியது; விம்மியழுதிருப்பான், மன்னனாக இல்லாவிட்டால்! எவ்வளவு சோகத்தோடு சொற்கள் புறப்பட்டனவோ அதற்கு நேர்மாறான வேகத்தில் திடுமென வெடித்துக் கிளம்பினான், ''எங்கே வில்லவனைக் கொன்றவன்?'' என்று.

''இதோ!'' என்றார் அமைச்சர்.

செழியனிடம் போய் அவனையே பார்த்தவாறு நின்றான். பார்வையிலேயே அவன் இரத்தத்தை உறிஞ்சிவிடுவது போல காட்சியளித்தான். அவனையும் அறியாமல் அவன் கை, கட்டாரிக்குச் சென்றது; கையில் எடுத்து விட்டான். கிழ அமைச்சர் அதைத் தடுத்து விட்டார். இவ்வளவும் செழியனுக்குத் தெரியாது. அவன் ஏதோ சிந்தனையில் விழிகளைத் திறக்க முடியாமல் எதிரே நின்றிருந்தான்.

''செழியனைக் கொண்டுபோய் தக்க பாதுகாப்புடன் வையுங்கள்!''- கிழ அமைச்சர் உத்திரவு போட்டார். அமைச்சரின் உத்திரவில் ஏதாவது

அர்த்தமிருக்கும் என எண்ணிக்கொண்ட இருங்கோவேள் தடை சொல்லாமல் இருந்துவிட்டான். செழியன் இழுத்துச் செல்லப்பட்டான். விடியற்காலையிலேயே வில்லவனை அடக்கம் செய்துவிட வேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

''சாவூருக்குப் போகும் வழி!'' என்று முகப்பில் எழுதப்பட்டுள்ள வீட்டின் கதவு திறக்கப்பட்டது. செழியன் அதன் உள்ளே இழுத்துச் செல்லப்பட்டான். ஆட்கள் நுழைந்ததும் அங்கு அடைந்துக் கிடந்த வௌவால்கள் அங்குமிங்கும் அலைமோதிப் பறந்தன. ஒரு பெரிய தூணில் செழியனின் கை கால்களில் சங்கிலிகளைப் பிணைத்து அவன் நகர முடியாதபடி கட்டிப்போட்டனர். பிறகு அந்த பயங்கர வீட்டின் கதவு மூடப்பட்டது. வீட்டைச் சுற்றிக் காவலுக்கு ஆட்கள் நிறுத்தப்பட்டனர்.

பொழுது விடிந்தது. புலவர் துயிலெழுந்தார். அசதியை உதறிவிட்டுப் படுக்கையிலிருந்து கிளம்பியவர் சுற்றுமுற்றும் பார்த்தார். வழக்கமாக அவரது படுக்கையின் அருகே வெள்ளிச் செம்பில் வைக்கப்பட்டிருக்கும் தெளிந்த நீராகாரத்தைக் காணவில்லை. எழுந்ததும் வாய் கழுவி நீராகாரம் அருந்துவது இளமை முதல், புலவர் பெருமான் பழகிக் கொண்ட ஒன்றாகும். அந்தப் பழக்கத்திற்கு இத்தனை நாளும் தடங்கல் ஏற்பட்டது கிடையாது. அன்று ஏற்பட்ட மாறுதல் அவருக்குத் திகைப்பை உண்டாக்கியது.

முத்துநகை படுத்திருந்த இடத்தைப் பார்த்தார். அங்கே அவள் இல்லை. தெருப்பக்கம் திரும்பினார். கதவு திறந்து கிடந்தது. எழுதும்போது மெய்மறந்து எழுத்தாணியைத் தலையிலேயே குத்திக்கொண்டது போன்ற அதிர்ச்சியால் துடித்தார்.

''முத்துநகை! முத்துநகை!'' என வீடெங்கும் ஓடினார். தோட்டத்துப் புறம் சென்று சத்தம் போட்டார். அவரது படபடப்பு அடங்கவில்லை. கிணற்றடிக்கு ஓடினார். கிணற்றுக் கட்டையில் மர உருளை மட்டுமே தொங்கிக் கொண்டிருந்தது. கயிற்றுச் சுருளைக் காணவில்லை. ''அய்யோ அம்மா!'' என அழத் தொடங்கியவரின் கண்ணில் எதிர்த்தாற்போல் கயிறும் தோண்டியும் தோன்றவே ஆறுதல் அடைந்தார்.

மறுபடியும் உள்ளே வந்தார். அவள் படுத்திருந்த இடத்தைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே நின்றார். ஒரு ஓலை, தலையணைக்கருகே தலை நீட்டிக்கொண்டிருந்தது. ஆத்திரமும் ஆவலும் ததும்ப அதை எடுத்துப் பார்த்தார். அவர் நா உதிர்த்த சொற்களை அவர் காதுகள் நம்பவில்லை. அவர் விழியில் பட்ட எழுத்துக்களை அவரது மொழியறிவு ஏற்றுக் கொள்ளவில்லை. அத்துணைப் பயங்கரமான வாசகங்களை அந்த ஓலை பேரிடியென முழங்கியது. மாரி மின்னல் போல் தோன்றிடச் செய்தது. கண்களை இறுக மூடிக்கொண்டார். இமை இடுக்குகளின் வழியாக நீர்த்துளிகள் எட்டிப் பார்த்தன. தன்னையே நம்பாமல் மறுமுறையும் படித்தார்.

''அன்புள்ள தந்தையே! என்னை மன்னித்து விடுங்கள். சோழப் பெருநாட்டின் கீர்த்தியைக் குலைக்கச் சதி நடைபெறுகிறது. அந்தச் சதியிலேயே யார் யாரோ ஈடுபட்டிருக்கிறார்கள். என்னையே நான் சந்தேகப்படுகிற அளவுக்கு இந்தத் திருநாட்டில் ஒரு புதிய நிலை உருவாகியிருக்கிறது. கரிகாற்சோழனின் உயிரைக் குடிக்கவும் நமது தாயகத்தின்மீது படைகொண்டு மோதிப் பழி தீர்க்கவும் பகைவர்கள் நேரம் பார்த்திருக்கிறார்கள். அவர்கட்கு இங்குள்ள சிலர் எடுபிடிகளாய் அமைந்துவிட்டார்கள். அந்தோ! சுதந்திரத் திருநாடே! உன் கதி இப்படியா ஆகவேண்டும்? இரவெல்லாம் எண்ணியெண்ணிக் கண்ணீர் வடித்தேன், தந்தையே! தமிழ் வளர்க்கும் நல்லோர் எனப் போற்றப்பட்ட பெருமக்கள் கூட அந்தத் தமிழ் வளர்த்த பண்பை மறந்துவிட்டனர் என்பதை நினைக்கும்போது என் நெஞ்சில் நெருப்பு மூண்டுவிட்டது. நான் ஏன் சோழ நாட்டில் பிறந்தேன் என்று எனக்கு நானே கேட்டுக்கொண்டேன். விடை கிடைத்தது. தாயகத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறதாம். அந்தப் பொறுப்பை நிறைவேற்றப் புறப்பட்டுவிட்டேன். இந்தக் காரியத்தில் என் தந்தையே குறுக்கிட்டாலும் இறந்துபோன என் தாயே எழுந்து வந்து தடுத்தாலும் என்னையும் என் இலட்சியத்தையும் தோற்கடித்துவிட முடியாது என்று உறுதிபூண்டு கிளம்பிவிட்டேன்.

சோழ நாட்டுப் பகைவர்களும், துரோகிகளும் மண்ணோடு மண்ணாகும் வரையில் எனக்கு வேலை இருக்கிறது. அதுவரையில் என்னைத் தேடாதீர்கள். என் கடமையில் நான் வெற்றிபெற்று உயிரோடிருந்தால் திரும்பிவந்து தங்களைச் சந்திக்கிறேன். நான் கடமையில் உயிரைத் தந்துவிட்டேன் என்றால் தங்கள் அனுமதியின்றி நான் எடுத்துச் செல்லும் செழியனின் புலிநக மாலை மட்டும் தங்களிடம் திரும்பிவந்து சேரும். அது நான் செத்துவிட்டேன் என்பதற்கு அடையாளம். என்னை வாழ்த்துங்கள் அப்பா, வணக்கம்''.

அன்புள்ள,

முத்துநகை

இனி எத்தனை தடவை படித்தாலும் அதே எழுத்துக்கள் தாம் என்ற நம்பிக்கை அவருக்கு வந்த பிறகே அந்த ஓலையைப் படிப்பதை நிறுத்திக்கொண்டார். தமிழ் எழுத்துக்களை அவர் எத்தனையோ முறை கண்ணிலே ஒற்றிக்கொண்டு பரவசமுற்றிருக்கிறார்! அந்த நேரத்தில் கண்களை மலர்க்கொண்டு தொடுவது போன்ற உணர்ச்சியையே அவர் பெற்றிருக்கிறார். ஆனால் இந்த எழுத்துக்களோ ஒவ்வொன்றும் ஒவ்வொரு குத்தீட்டி போல அவரது கண்களில் பாய்ந்து கொண்டிருந்தன. முத்துநகையின் திடீர் மனமாற்றத்திற்குக் காரணம் என்ன? சோழ

நாட்டுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தை இவள் போய்த் தடுத்து நிறுத்துவதா? எல்லாம் ஒரே புதிராக இருந்தது புலவருக்கு.

பாவம், புலவரைத் தவிக்க விட்டுவிட்டு முத்துநகை நேரே கரிகாற் சோழனுடைய அரண்மனை வாயிலில் போய் நின்றாள். என்றுமில்லாத அதிசயமாக, ஒரு பெண் தன்னந்தனியாக விடியற்காலையில் வந்து நிற்பது கண்ட காவலர்கள் வியப்புற்றனர்.

''யாரம்மா? என்ன வேண்டும்?'' எனக் கேட்டவாறு அவளைச் சூழ்ந்து கொண்டனர்.

''நான் அவசரமாக அரசரைப் பார்க்கவேண்டும்!'' என்று நடுங்கிய வாறு முத்துநகை கூறினாள்.

உடனே இரு வீரர்கள் உள்ளே சென்று வெகுநேரம் கழித்து வெளியே வந்தனர். என்ன பதில் சொல்லப் போகிறார்களோ என்று ஏக்கத்துடன் எதிர்பார்த்த முத்துநகை மகிழும்வண்ணம் பதில் கிடைத்தது. அவளை அழைத்துவருமாறு சோழன் உத்திரவு தந்துவிட்டான்.

வீரர்களுடன் முத்துநகை கரிகாலனின் இருப்பிடத்தை நோக்கி நடந்தாள். அவள் நடந்து செல்லும் வழியெல்லாம் தாயகத்துக் கலைச்செல்வம் உயிர்பெற்றுச் சிலையாய்-ஓவியங்களாய் விளங்கிய காட்சி கண்டு பெருமூச்செறிந்தாள். தங்க மெருகேற்றிய தூண்களும், அவைகளில் பொருத்தப்பட்ட தந்தத்தால் ஆன விளக்குகளும், ''அடடா! தமிழகத்து வளமே வளம்'' என அவளைக் கூறிடச் செய்தன. மன்னர் போரிட்டுக் கொன்ற புலி, சிங்கம், சிறுத்தைகளின் தோல்கள் ஒரு புறத்திலே மாட்டப்பட்டிருந்தன. நசுங்கிப்போன ஒரு மணிக்கிரீடம் சுவரில் மாட்டப்பட்டிருந்தது. அதன் கீழே ''தோல்வியுற்ற பன்றி நாட்டரசரின் மணிமுடி '' - என்ற எழுத்துக்கள் செதுக்கப்பட்டிருந்தன. ஒரு நீண்ட சுவரில் கரிகாலனின் இலங்கைப் படையெடுப்பை விளக்கும் ஓவியம் தீட்டப்பட்டு அது காண்பவர் உள்ளத்தில் புதிய எழுச்சியை உண்டாக்கிக் கொண்டிருந்தது. அதனையடுத்து ஒரு பெருந்தூணில் மிகவும் கனமான வாள் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. அந்த வாளின் முனை ஒடிந்திருந்தது. அதன் கீழே, ''இந்த வாள் இருங்கோவேள் மன்னர் ஓடும்போது போர்க்களத்தில் விட்டுச் சென்றது '' எனத் தீட்டப்பட் டிருந்தது.

அவைகளையெல்லாம் காணக் காண முத்துநகைக்கு மேலும் ஆத்திரம் மூண்டது. ''இவ்வளவு சிறப்புக்குரியவன், சிம்மமெனப் புகழப்படுபவன், தன் நாட்டு மன்னவனைக் கவிழ்ப்பதற்குச் சதியா?'' எனக்கேட்டுக் குமுறுவது போல் அவள் மென்மையான இதழ்கள் பெருத்துத் துடித்தன.

இறுதியில், கரிகாலன் இருக்கும் மாளிகைக்குள் அவள் நுழைந்தாள். அவளைக் கண்டதும் கரிகாலனுக்கு ஒரே ஆச்சரியம்!

''என்ன! நீயா?'' எனப் பதட்டத்துடன் கேட்டான்.

''ஆமாம், கொஞ்சம் தனியாகப் பேச வேண்டும்'' என்றாள் முத்துநகை.

அரசன், காவலர்களைச் சைகை காட்டி வெளியே அனுப்பி வைத்தான். முத்துநகை அரசரையே பார்த்துக் கொண்டு நின்றாள். கரிகாலனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ''என்னம்மா! எங்கே வந்தாய்? என்ன நடந்தது? புலவர் எங்கே?''

இப்படிக் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போன சோழனின் காலில் தடாலென விழுந்து, ''மன்னவா! என்னை மன்னியுங்கள்!'' எனக் கதறி அழுதாள் அந்தப் பைங்கொடி.

''எழுந்திரம்மா! செய்தியைச் சொல்! எதற்காக இந்தக் காலை நேரத்தில்? விடிந்ததும் விடியாததுமாக?'' எனக் கேட்டான் சோழன்.

''விடியவில்லை அரசே; விடியவில்லை; சோழநாட்டைச் சூழ்ந்துள்ள இருள் இன்னும் விலகவில்லை. அதைத் தெரிவிக்கவே தங்களிடம் ஓடி வந்தேன்!''

''என்ன சொல்கிறாய்?''

''திக்கெட்டும் படையெடுத்து நிலம் பல வென்றவர் தாங்கள் ! சோழர் படையினர் கொட்டும் முரசொலி கேட்டுத் தாள்வீழ்ந்த பகைவர் ஏராளம்! ஏராளம்! ஒளியரை, பொதுவரை, இலங்கையரை வென்றீர்கள்! வேளிர்குடி மன்னரைத் தோற்கடித்தீர்கள்! தங்கள் வெற்றிவேலின் பெருமையைப் புகழாத நாடு இல்லை! இமயத்திலே நமது கொடியினைப் பொறித்தீர்கள்! இல்லையென்று கூறவில்லை! ஆனால் ஒன்று, மன்னா! இத்தனை வெற்றித் திறமிருந்தும் தங்களுக்குத் தாயகத்தில் முளைவிட்டு வளரும் துரோகக் கூட்டத்தைப் புரிந்து கொள்ளும் திறமில்லை! மன்னிக்கவும்! தங்கள் பரந்த தூய உள்ளம் அந்தத் துரோகிகளைப் பற்றி நினைக்காமலே விட்டு விட்டது என்பதை நான் உணர்கிறேன். ஆனாலும் அரசே! அந்தக் கூட்டம் வளருமேயானால் நாடு அழியும்; நமது பெருமை அழியும்!''

''என்ன! துரோகக் கூட்டமா? யார் அவர்கள்? எங்கிருக்கிறார்கள்?'

''அவர்கள் ஒன்றும் தனியிடத்தில் வாழ்வது கிடையாதே! காக்கை களைப் போலக் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து வாழ்வதும் கிடையாதே! துரோகிகள் நமக்குப் பணிவிடை புரியும் ஊழியர்களிலே கூட இருப்பார்

கள்! படை நடத்தும் தளபதிகளிலேகூட இருப்பார்கள்! பாமாலை தொடுக்கும் புலவர்களிலே கூட இருப்பார்கள்!''

''எனக்கு ஒன்றுமே புரியவில்லை. கொஞ்சம் விவரமாகச் சொல்லம்மா!''

''அரசே, அந்தத் துரோகிகள் யார் என்று கண்டுபிடித்து நாட்டைக் காப்பாற்றுவதே என் வேலை, அதற்காகவே வீட்டை விட்டு வெளிக் கிளம்பி விட்டேன்!''

''அப்படியானால் புலவர் அவர்களுக்குக் கூட...

''அப்பாவுக்குத் தெரியாது. தெரியவும் கூடாது. தெரிந்தால் நான் திறமையற்றவள் எனக் கூறி என்னைத் தடுத்து விடுவார். அரசே! தாங்கள் எனக்குச் செய்ய வேண்டிய உதவியெல்லாம் இந்தச் சந்திப்பை ரகசியமாக வைத்துக் கொள்வதுதான்!''

''நீ என்ன சொல்கிறாய் என்று உனக்காவது புரிகிறதா?''

''தோகை மயிலெனத் தாங்கள் நம்பியிருக்கிற சிலர், முள்ளம்பன்றிகள் என்பதை நிரூபித்துக் காட்டப் போகும் நேரம் ஒன்று வருகிறது. அதற்குத்தான் இந்தச் சந்திப்பு ஒரு ஆரம்பம் மன்னர் மன்னா! தங்களிடம் தோற்றோடிய இருங்கோவேள் எப்படியும் தங்களைப் பழிதீர்த்துக் கொள்ள அலைகிறான் என்பதை அறிவீர்கள் அல்லவா?''

''சொல், கேட்கிறேன்''

''தாங்களும் பாண்டிய மன்னரும் பவனி வந்தபோது இருங்கோவேளின் தளபதி தங்களைச் சதி புரிந்து கொல்வதற்கு தலைநகருக்கு வந்திருக்கிறான்...!''

''ஆ! அப்படியா?''

''முழுவதும் கேளுங்கள். தங்களைக் கொல்லவும் ஈட்டியை கையிலே எடுத்து விட்டான். அந்த நேரத்தில் பாண்டிய நாட்டு வீரர் ஒருவர் தங்களைக் காப்பாற்றினார்!''

''யார் அந்த வீரன்?''

''செழியன்!''

''என்ன செழியனா? இப்போது அந்தச் செழியன் எங்கே?''

''அதற்குமேல் என்னைக் கேட்டுப் பயனில்லை. செழியன் போன இடம் எனக்குத் தெரியாது. மேலும் விளக்கம் பெறவே நான் வீட்டைவிட்டுப் புறப்பட்டிருக்கிறேன். செல்லும் வழியில் தங்களை எச்சரித்துவிட்டுப் போவது என் கடமையென எண்ணினேன்!''

''குழந்தாய்! என்னைக் கொல்லச் சதி நடத்துகிறவன் இருங்கோவேள்! அவனை என் படை கொண்டு வெல்லுகிறேன். நீ எதற்காகக் கஷ்டப்பட வேண்டும்?''

''படையினால் மட்டுமே பகையை வென்றுவிட முடியுமா? புகை நுழையாத இடங்களிலும் பொல்லாத துரோகிகள் நுழைந்து விடுவார்களே! அவர்கள் யார் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டாமா?''

''அதற்கு?''

''அந்த ஒற்றர் வேலையை நான் மேற்கொள்கிறேன் என்கிறேன்!''

''உன் கடமையுணர்வுக்கும் தாய்நாட்டுப் பற்றுக்கும் இந்தச் சோழனின் மணிமுடி வணக்கம் தெரிவிக்கத் தாழ்கிறது அம்மா! ஆனால் ஒன்று... அருமையாக உன்னை வளர்க்கும் புலவர் பெருந்தகையார் மனவேதனை அடைவாரே?''

''அவரைப் பற்றிக் கூடத் தாங்கள் ஆச்சரியமான செய்தியைக் கேள்விப்படுவீர்கள் அரசே!''

இதைச் சொல்லும்போது அவள் நாக்கு நடுங்கியது, கண்கள் குளமாயின. ஆயினும் மறைத்துக் கொண்டு சமாளித்தாள். சோழன், அவள் மேலும் என்ன சொல்லப் போகிறாள் என்று எதிர்பார்த்தான். அவள் பேச்சை மாற்றினாள்.

''அதாவது, அப்பாவும் என்னைப் போலவே ஒற்றர் வேலையை மேற்கொள்ள நேரிடலாம் என்கிறேன்!'' எனக் கூறி, அரசனின் முகத்தைப் பார்த்தாள். அவன் முகத்தில் புதிய கம்பீரம் களை கட்டி நின்றது. தன்னுயிருக்காகவும் தாயகத்துப் பெருமைக்காகவும் தமிழ் வளர்க்கும் குடும்பமொன்று கவலைப்படுவது கேட்க அவனுக்குப் பூரிப்புப் பொங்கி வழிந்தது. தன் தந்தைக்குக்கூடத் தெரியாமல் நாட்டுப் பணி புரியப் புறப்பட்டுவிட்ட இந்த இளந்தமிழச்சியின் வீரத்தைக் கண்டு கரிகாலன் பெருமை கொண்டான்.

''உன்னை நான் வாழ்த்துகிறேன். உன் கடமைக்கு என்னென்ன வேண்டுமோ கேள், தருகிறேன்!'' என உரைத்தான்.

''அதிகம் எதுவும் தேவையில்லை. ஐந்தாறு வீரர் உடைகள், ஒரு நல்ல குதிரை! அவ்வளவு போதும்!''

''ஆண் வேடத்தில் புறப்படுகிறாயா? உன் குரல் உன்னைக் காட்டிக் கொடுத்து விடாதா?''

''தங்களுக்கேன் கவலை? தங்களைக்கூட நான் ஏமாற்றக்கூடும்!''

கரிகாலன் சிரித்துக் கொண்டான். கைதட்டி மெய்க் காப்பாளனைக் கூப்பிட்டான். முத்துநகையை அழைத்துப் போய் யாருக்கும் தெரியாமல் அவள் கேட்பதைக் கொடுத்தனுப்ப உத்தரவிட்டான். முத்துநகை, சோழனிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது, தன் தந்தையின் காதில் இந்தச் செய்தியைப் போட்டுவிடக் கூடாதென்று கெஞ்சிக் கேட்டாள். அவனும், ''கரிகாலன் வாக்குத் தவற மாட்டான்.''என்று அவளைப் பார்த்துக் கனிவோடு உறுதி தந்தான். ஆபத்தான வேலையில், தடுத்தும் கேளாமல் அடியெடுத்து வைக்கிற அவளுக்கு அவன் நல்ல எச்சரிக்கை தந்து அனுப்பி வைத்தான்.

அவள் போனதும் கரிகாலனுக்கு ஒரே குழப்பம். புலவருக்கும் தெரியாமல் முத்துநகை இந்தக் காரியத்தில் ஈடுபட்டது ஏன்? - என்ற கேள்வி அவனைக் குடைந்தது. ''தந்தை தடுத்து விடுவார்! அதனால்தான் அவருக்குத் தெரியக்கூடாது'' என்று முத்துநகை கூறிய சமாதானம் அவ்வளவு போதுமானதாக அவனுக்குப் படவில்லை. அப்பாவைப் பற்றிக்கூட ஆச்சரியமான செய்திகள் கேள்விப்படுவீர்கள் என்று அவள் கூறியதும். ''தோகை மயில்'' ''முள்ளம் பன்றி'' என்ற வார்த்தைகளும் அவன் நெஞ்சிலே உருண்டோடின.

இப்படி அரசனுக்குக் குழப்பத்தையும், புலவருக்கு அதிர்ச்சியையும் உண்டாக்கிவிட்டு, முத்துநகை வாட்ட சாட்டமான குதிரையொன்றில், வீரன் உடையில், காட்டுப் பாதையில் கடும் வேகமாகப் போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய முதல் இலட்சியம், செழியன் எங்கு கொண்டு செல்லப்பட்டான் என்று கண்டுபிடிப்பது, அதற்காகவே அவள் காட்டுப்பாதையில் அங்குமிங்கும் அலைந்து திரிந்தாள். இருங்கோவே ளும் அவனது ஆட்களும் காடுகளில் தான் அலைந்து கொண்டி ருக்கிறார்கள் என்று அவள் கேள்விப்பட்டதை வைத்து அந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டாள். நெடுநேரம் குதிரையை விரட்டியதால் அதுவும் களைத்துத் தானும் களைத்துக் கடைசியில் காட்டிலுள்ள ஒரு சுனையின் அருகே இறங்கினாள். சுனையில் நீர் அருந்தி, குதிரையையும் மேய விட்டு விட்டுக் கொஞ்சம் காலாற்றிக் கொள்ள இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தாள்.

அப்போது சிறிது தொலைவில் யாரோ வரும் சந்தடி கேட்டது. பாறைகளைப் போல் அமைந்து காட்டாற்று நீரை வழியவிட்டுக் கொண்டிருக்கும் இரண்டு பெருங்கற்களுக்கிடையே நின்று உற்றுக் கவனித்தாள். ஒரு அழகான யுவதி; அங்கமெல்லாம் தங்கநிறம் பெற்ற தளிர்க்கொடி! ஆடியசைந்து அந்தச் சுனையை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

தன்னருகேதான் அவள் வருகிறாள் எனக்கண்ட முத்துநகை, வேகமாக ஓடி, ஒரு நீண்ட கல்லில் படுத்துக் கொண்டாள்.

சுனையருகே வந்துவிட்ட அந்தப் பருவச்சிட்டு, படுத்துறங்கும் வீரனைக் கண்டாள்! திடுக்கிட்டாள்! ஓடிவிட எண்ணினாள்; ஓடவும் முயன்றாள். ஆனால், அவளது விழிகள் அவளைப் போக விடாமல், வேலியிலே சிக்கிக் கொண்ட ஆடைபோல், உறங்கும் வீரனின் மீது சிக்கிக் கொண்டன.

தூங்குவதுபோல் பாசாங்கு செய்தால் சில நேரங்களில் மிகுந்த வேதனை ஏற்பட்டுவிடும். யாருக்காகப் பயந்து கொண்டு தூங்குவதுபோல் நடிக்கிறோமோ அவர்கள் பக்கத்திலே இருக்கிறார் களா, போய்விட்டார்களா என்பது தெரியாது. தூக்க நடிப்பில் இமைக் கதவுக்குள்ளே உருண்டு கொண்டிருக்கும் விழிகள் வேறு காட்டிக் கொடுத்து விடும்.

தூங்கும் வேடதாரி எவ்வளவு நேரந்தான் மூச்சை ஒரே மாதிரி இழுத்து இழுத்து விட்டுக் கொண்டிருக்க முடியும்? அப்படி இப்படிப் புரண்டு படுப்பதுபோல் நடித்து, எந்த நேரத்திலே வேண்டுமானாலும் விழிகளை மெல்லத் திறந்து, நடப்பதை அறிந்து கொள்ளலாம்.

அப்படிச் செய்வதற்கும் வழியில்லாமல் போய்விட்டது முத்துநகைக்கு. காரணம் அவள் படுத்திருந்த பாறையில் புரள்வதற்கே வகையில்லை. அண்மையிலே எந்தச் சலனமும் இல்லை, அருவி ஓசையையும் அடவி அசைவையும் தவிர! அங்கு வந்த அழகு மங்கை இருக்கிறாளோ? அல்லது போய் விட்டாளோ? ஒரே குழப்பம். வந்த மங்கையோ எப்பாடுபட்டேனும் தன் கண்களை மீட்டுக் கொள்ளத் துடித்தாளே தவிர வேறெதுவும் செய்திடவில்லை!

அதனால் அவர்களிருவரையும் பொறுத்தவரையில் அமைதி குடிகொண்டிருந்தது. வெளித் தோற்றத்திற்கு! உள்ளமோ வெள்ளப்பாகு போல் உருகிக் கொண்டிருந்தது அந்தப் பெண்ணுக்கு! முத்துநகையினால் அதிக நேரம் நடிப்பதற்கு இயலவில்லை. அதனால் அவளும் ஒரே சோகத்தில் படுத்துக் கிடந்தாள். நாழிகை நீண்டு கொண்டே போனது.

முத்துநகைக்கு இப்போது ஒரு புது யோசனை உதயமாயிற்று. அந்தப் பெண் அருகில்தான் இருக்கிறாளா அல்லது போய்விட்டாளா என்பதை அறிந்து கொள்ள அவள் ஒரு தந்திரத்தைக் கையாண்டாள். 'தான் தூங்குகின்ற பாறையிலிருந்து புரண்டு கீழே விழுவதுபோல் பாசாங்கு செய்தால் அவள் ஓடிவந்து பிடிக்கக்கூடும். அப்படி ஓடிவந்து பிடித்தால் அவள் இருக்கிறாள் என்று அர்த்தம்' என எண்ணிக்கொண்டு முத்துநகை தூக்கக் கலக்கத்தில் 'உஸ்' என்று சோம்பல் முறித்துக் கொண்டு பாறையின்

விளிம்பில் புரண்டாள். அவள் எதிர்பார்த்தபடியே அந்தப் பெண் ஓடிப் போய் முத்துநகையைக் கீழே விழாமல் பிடித்து விட்டாள்.

அதற்குமேல் முத்துநகையால் தூங்குவதுபோல் பாசாங்கு செய்ய முடியவில்லை. நன்றாக உறங்கியவள் போலக் கண்ணைக் கசக்கிக் கொண்டு ஆச்சரியத்தோடு சுற்றுமுற்றும் பார்த்து எழுந்து பாறையில் உட்கார்ந்தாள். எதிரே நிற்பவளைப் பரக்கப் பரக்க விழித்து வியப்போடு உற்று நோக்கினாள்.

அவளோ, தன் நீலக் குறுநயனங்கள் காலின் பெரு விரல் நகத்தில் பிரதிபலிக்குமாறு குனிந்து கொண்டு நின்றாள். அந்த யுவதியின் அழகைக் கண்டு முத்துநகை வியந்தாள். அலையெனச் சுருண்டு கிடந்த அவள் கூந்தலின் எழிலும், அம்புமுனை எனத் தக்க விழியும், கீற்று மின்னல் போன்ற கீர்த்திமிக்க இடையும் - அருவியே ஒரு பெண்ணுருக் கொண்டு அருகே வந்ததோ என எண்ணத் தோன்றும் விதத்தில் இருந்தன.

குனிந்த தலை நிமிர்வாள் எனச் சிறிது நேரம் காத்திருந்தாள் முத்துநகை. அவளோ நிலத்திற்குக் கண்களால் முட்டுக் கொடுத்துக் கொண்டிருந்தாள். இவளைக் கொண்டு ஏதாவது புதுச் செய்திகள் தெரிந்து கொள்ளக்கூடும் என்ற ஒரு ஆசையும் முத்துநகைக்கு எழுந்தது. நாட்டு எல்லைகளைக் கடந்து வெகு தொலைவிலேயுள்ள காட்டு நடுவிலே இப்படி ஒரு காரிகையைக் கண்டது பற்றிய ஆராய்ச்சிக் குழப்பம் வேறு அவளை ஆட்டிப் படைத்தது.

'இவள் யாராக இருக்கும்? பார்த்தால் நன்றாக வாழ்ந்தவளைப் போல்தானே தெரிகிறது... இவள் குடும்பம் இப்போது நொடித்துவிட்டிருக்குமா? முகத்திலே ஏன் அத்துணைச் சோகம் கப்பியிருக்கிறது? அந்தச் சோகத்திரையையும் விலக்கிவிட்டுக் கூத்து மேடையின் தீப்பந்த ஒளிபோல ஒரு புதிய உணர்ச்சிப் பிரவாகம் அவள் வதனத்தில் படர்ந்திடக் காரணம் என்ன? என்னை அவள் காதலிக்கிறாளா? அய்யய்யோ... என்னை அவள் ஆண் மகன் என்றே நம்பிவிட்டாளா? இப்படி ஒரு விபரீதம் இந்த வேடத்தால் ஏற்படும் என்று எனக்குத் தெரியாதே! சரி. இவளைப்பற்றி எப்படி விவரம் அறிந்து கொள்வது?' என்றெல்லாம் முத்துநகையின் நெஞ்சத்தில் அடுக்கடுக்காகக் கேள்விகள் எழுந்தன.

''நீ யாரம்மா?'' என்று கேட்டுவிட வாய் திறந்தாள். அதற்குள் திடீரென ஒரு தடை; குரல்! அவளுக்குப் பெண் குரல் என்று புரிந்துவிட்டால் என்ன செய்வது? ஆணைப் போலக் குரலை மாற்றிப் பேச அவள் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. இப்போதுதானே வேடம் போட்டிருக்கிறாள். போகப் போகத்தானே வேடமும் நடிப்பும் பூரணத்துவம் பெறும்!

அதனால் அவள் தன் குரல் மூலம் தானே தன்னைக் காட்டிக் கொடுத்துக் கொள்ள விரும்பவில்லை. ஊமைபோல் நடந்துகொள்வது என்ற முடிவுக்கு வந்து விட்டாள். மெதுவாக அந்தப் பெண்ணின் அருகே சென்று கைஜாடை செய்து "நீ யார்?" என்று கேட்டாள்.

அதற்கு அவள் பதில் சொல்லவில்லை. புன்னகை புரிந்தவாறு, கன்னங்கள் சிவக்க, "வலிக்கிறதே." என்று கழுத்து அழுவதையும் பொருட்படுத்தாமல் குனிந்து கொண்டாள்.

முத்துநகை அவளது முகவாய்க் கட்டையைத் தன் கையால் திருப்பித் தன் முகத்தை அசைத்தவாறு ஊமைச் சைகையில் மறுபடியும் கேட்டாள் யாரென்று.

அந்தப் பெண் உடம்பெல்லாம் சிலிர்த்துவிட நகர்ந்து சென்று, ஓடி நின்று, முத்துநகையைப் பார்த்து, "ஏன் உங்களுக்குப் பேசத் தெரியாதா?" என்று வீணைத் தந்தி அதிர்ந்தது போன்ற தொனியில் கேள்வி யொன்றைத் தொடுத்தாள்.

கேட்டதும் முத்துநகை, இடையில் செருகியிருந்த ஓலைகளில் ஒன்றையெடுத்து, ஏதோ அவசர அவசரமாக எழுதினாள். அந்தப் பெண்ணிடம் நீட்டினாள். அவள் அந்த ஓலையை வெட்கத்தோடு கரம் நீட்டி வாங்கிப் படித்துப் பார்த்தாள்.

"நான் ஒரு இலட்சியத்திற்காகப் பேசாத நோன்பு கடைப்பிடித்து வருகிறேன்; அந்த இலட்சியம் இன்னும் சில காலத்தில் நிறைவேறி விடும். அதற்குப் பிறகே நான் ஊமை நிலையிலிருந்து விடுபடுவேன்" என்று எழுதப் பட்டிருந்த அந்த வாசகம் அவளுக்குப் பேராச்சரியத்தை உண்டாக்கியது.

"உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டாள் அவள்.

உடனே முத்துநகை தன் கழுத்தில் அணிந்திருந்த மாலையை எடுத்து, அதில் கோக்கப்பட்டிருந்த முத்துக்களில் ஒன்றைச் சுட்டிக் காட்டினாள்.

"ஓகோ-முத்துவா உங்கள் பெயர்!" என்றாள் அவள்.

முத்துநகையும் "ஆம்" என்பது போல் தலையசைத்து விட்டு "உன் பெயர் என்ன?" என்ற கேள்வியை விரல் மூலம் கேட்டாள்.

அதற்கு அந்தப் பெண் உடனே பதில் சொல்லி விடவில்லை. அவள் கண்கள் கலங்கிவிட்டன. முகம் கறுத்து விட்டது. தலையில் கை வைத்தவாறு திரும்பிக் கொண்டாள். முத்துநகை அவளை விடவில்லை. அருகே சென்று அவளது தோளில் கை வைத்து திருப்பினாள். அந்தச்

செய்கை அந்தப் பாவைக்கு எப்படிப்பட்ட இன்ப உணர்ச்சியை அளித்தது தெரியுமா?

ஆனாலும் அழுதவாறு முத்துநகையை நோக்கி "உங்கள் இலட்சியம் என்ன?" என்று கேட்டாள். "சொல்ல முடியாது" என்று சைகை மூலம் தெரிவித்தாள் முத்துநகை.

"உங்கள் இலட்சியத்தைத் தெரிவித்தால்தான் என் பெயரைச் சொல்லுவேன்!" என்று கண்ணீர் விட்டவாறு அவள் கூறினாள்.

முத்துநகை கீழே குனிந்து பார்த்தாள். சுற்றும் முற்றும் நோக்கினாள். இறுதியில் அவள் தேடியது கிடைத்தது. ஆமாம். ஒரு கரித்துண்டு! அந்தக் கரித்துண்டைக் காட்டி "இது என்ன?" என்றாள் ஊமை ஜாடையில்!

"கரி!"என்றாள் அந்தக் கட்டழகி.

பிறகு முத்துநகை தன் காலைக் காட்டிக் கேட்டாள் அவள் "இது கால்" என்றாள்.

இரண்டையும் சேர்த்துக் காட்டி முத்துநகை, மறுபடியும் கேள்வியை ஜாடை மூலமாக எழுப்பினாள்.

"கரி-கால்... கரி கால்... கரி கால். ஆமாம்; கரிகால் சோழன்! அவனுக்கு என்ன?" ஆவலுடன் கேட்டாள் அந்தப் பெண்.

முத்துநகையோ, சிரித்துக்கொண்டே வாளை உருவிப் பழி தீர்ப்பதுபோல உயர்த்திக் காட்டினாள்.

"கரிகால் சோழனைப் பழி வாங்குவதுதான் இலட்சியமா?"- சிறிது சத்தம் போட்டே கேட்டாள் அந்தப் பாவை!

முத்துநகை, "ஆமாம்' என்பது போல் தலையை ஆவேசமாக ஆட்டிக் கண்களை உருட்டி விழித்துப் பழி வாங்கும் உணர்ச்சிக்கு ஏற்றாற்போல் நடித்தாள். நடித்தவள் சும்மாயிருக்கவில்லை; "இப்போது சொல் உன் பெயர் என்ன?" என்ற பழைய கேள்விக்கணையை மீண்டும் பூட்டினாள்.

"என் பெயர் தாமரை! என்னிடம் இதற்கு மேல் ஒன்றும் கேட்காதீர்கள்!" என்று அந்தப் பெண் சொல்லி முடிப்பதற்குள் விம்மி விம்மி அழுது விட்டாள்.

முத்துநகைக்கோ ஒரே பயம்! எங்கே திடீரென்று வாய் தவறிப் பேசி விடுவோமோ என்ற பயம்தான் அது! அதற்காக ஒவ்வொரு பொழுதும் தன்னை எச்சரிக்கையாகக் கவனித்துக் கொண்டாள். தாமரையிடம் ஏதாவது தகவல் கிடைக்கக்கூடும் என்றஅவளது எண்ணம் வலுப்பெற்றது. காரணம், கரிகாற்சோழனை நான் பழி வாங்கப்

போகிறேன் எனத் தெரிவித்ததும் அவளது முகத்தில் ஒரு ஒளி பளிச்சிட்டு மறைந்ததை முத்துநகை இதயத்தில் குறித்து வைத்துக் கொண்டாள். ஓலையை எடுத்து எழுதினாள். அதைத் தாமரையிடம் காட்டினாள்.

அதில்,

''உன்னைப்பற்றிய முழு விவரங்களையும் என்னிடம் சொல்!

இங்ஙனம், முத்து''

என்று எழுதியிருந்தது.

தாமரை, ஓலையைப் பார்த்துவிட்டு, முத்துநகையின் முகத்தை அண்ணாந்து பார்த்தாள். இருவர் விழிகளும் சிறிது நேரம் உறவாடின. முத்துநகைக்கு வேடிக்கையாக இருந்தது. ''எவ்வளவு பைத்தியக்காரப் பெண் இந்தத் தாமரை!'' என்று எண்ணிச் சிரித்துக் கொண்டாள்.

தாமரைக்குத் தன் உள்ளத்தில் தேங்கிக் கிடப்பதையெல்லாம் கொட்டி விட வேண்டும் என்ற துடிப்பு உதயமாகி விட்டது. அவள் ஈர உதடுகள் அதற்காகப் பிரியத் தொடங்கி விட்டன.

அந்தச் சமயத்தில் நாலைந்து பெண்கள் ஏக காலத்தில் 'தாமரை! தாமரை!' என்று அழைக்கும் ஒலி கேட்டு, அவள் திடுக்கிட்டாள். தன் அன்புக்குரிய முத்துவைப் பார்த்து, ''நாளை இதே இடத்தில் இதே நேரத்தில் சந்திக்கிறேன்'' என்று அவசர அவசரமாகக் கூறிவிட்டு ஓடி விட்டாள். முத்துநகை சந்தடியின்றி அப்படியே நின்றாள்.

சிறிது நேரம் கழிந்ததும், தாமரை சென்ற வழியே மெதுவாகத் தொடர்ந்து சென்று கவனித்தாள். தாமரையும் இன்னும் நான்கைந்து பெண்களும் அருவியின் ஒரு பகுதியிலே ஆடையின்றிக் குதூகலமாகக் குளித்துக் கொண்டிருந்த காட்சியைக் கண்டாள். அவளுக்கே ஒரு வித வெட்கம், கண்களை மூடிக்கொண்டாள். தன்னை ஆண்மகன் என்று தாமரை நினைத்துக் கொண்டதால் ஏற்பட்ட புதுவெட்கம் போலும் அது! அருவியிலே ஆடிப் பாடிக் களித்துக் கரையேறி ஆடைகளை உடுத்திக் கொண்ட அந்த ஆரணங்குகள், கொஞ்ச தூரம் நடந்து சென்று புதர் மறைவுகளில் கட்டப்பட்டிருந்த குதிரைகளில் ஏறிக் கொண்டனர். முத்துநகைக்கு குழப்பம் அதிகமாயிற்று. அவளும் திரும்பி ஓடிவந்து தன் குதிரையின் மீது ஏறிக் கொண்டாள்.

மெதுவாக அந்தப் பெண்கள் கூட்டத்தைத் தொடர்ந்து புறப்பட்டாள். தாமரை முதலியவர்களின் குதிரைகள் புறப்பட்ட நேரத்தில் மட்டும் மெதுவாக நடக்கத் துவங்கிப் பிறகு நாலுகால் பாய்ச்சலில் ஓடின. முத்துநகையும் தன் குதிரையின் குளம்படிச் சத்தம் அவர்களுக்குக் கேட்காத வகையில் பின் தொடர்ந்து கொண்டிருந்தாள்.

அவர்களைத் தொடர்ந்து சென்ற அவள் பார்வை திடீரென வேறுபக்கம் பாய்ந்தது. என்ன வியப்புக்குரிய காட்சி! அவள் கண்களை அவளால் நம்ப முடியவில்லை, தனக்கு மிகவும் தெரிந்த 'யவனக் கிழவர்' வெகு தொலைவில் ஓர் உயர்ந்த குதிரையில் கம்பீரமாக அமர்ந்து, தாமரை முதலியவர்களின் குதிரைகளையும், தன் குதிரையையும் தன்னையும் உற்று நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்டாள். அவளால் முன்னும் போக முடியவில்லை, பின்னும் போக முடியவில்லை.

இருங்கோவேள் தானே யவனக் கிழவராக இருக்க வேண்டும் என்று அவள் செய்திருந்த யூகம் வலுப்பெற்று விட்டது. அவன் கையில் சிக்கினால் தன் இலட்சியம் எதுவும் நிறைவேறாமல் போய்விடும் என்ற பயமும் அவளைப் பதற வைத்தது. குதிரையை வேகமாகத் தட்டி அதன் விலாப்புறத்தில் நுனிக்கால் குத்தி நாலுகால் பாய்ச்சலில் பறக்கவிட்டாள்.

யவனக் கிழவரும் விடவில்லை. அதிவேகமாகத் தொடர்ந்து துரத்தினார். காடு மேடுகளில் இரண்டு குதிரைகளும் காற்றைப் போல் நுழைந்து சென்றன.

தனக்கோ போரிடும் திறமை கிடையாது. இளமையிற் கற்ற குதிரையேற்றமும் சிறிது வாட்பயிற்சியும் இருங்கோவேள் போன்ற மாவீரர்களை எதிர்த்து நிற்கப் பயன்படாது என்ற பயம் அவளை மேலும் வேகமாக ஓடச் செய்தது. யவனக்கிழவர் வரும் குதிரையின் குளம்படிச் சத்தம் முத்துநகையின் இருதயத் துடிப்பால் எழும் ஒலியின் முன்னே நிற்க முடியுமா என்பது சந்தேகமே!

எங்கெங்கோ ஓடிச் சுற்றிக் கடைசியில் யவனக் கிழவரிடமிருந்து தப்பித்துக் கொண்டாள்.

மரங்கள் அடர்ந்த பகுதி ஒன்றில் சந்தடியின்றி அவளும் குதிரையும் நின்றுகொள்ளவே, யவனக் கிழவர் ஓடி ஏமாந்து விட்டார். கிழவரின் குதிரைக் குளம்படி ஓசை குறைந்ததும் முத்துநகை தன் குதிரையை வேறு பக்கம் திருப்பினாள்.

களைத்துப் போன குதிரை ஆடி அசைந்து நடந்தது. அவளும் பெருமூச்சு விட்டவாறு சோர்வுற்று உட்கார்ந்திருந்தாள். தாமரையையும் வேறு சில பெண்களையும் சந்தித்தது; யவனக் கிழவரிடம் சிக்கியது இவையிரண்டையும் எண்ணிப் பார்க்கும்போது இருங்கோவேளின் இருப்பிடம் அந்தப் பகுதியில்தான் இருக்க வேண்டுமென்றும்; அந்தப் பெண்கள் இருங்கோவேள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்க வேண்டுமென்றும் அவள் தீர்மானித்தாள். அவர்களிடம் செழியன் அகப்பட்டிருப்பான். அவனை என்ன பாடுபடுத்துவார்களோ என்ற கவலையும், இந்நேரம் அவனை என்னென்ன செய்திருப்பார் களோ என்ற அச்சமும் அவளைக் கலங்கச் செய்தன.

அந்த இளம் பெண்ணுள்ளத்தில் சோழப் பெருநாட்டு எதிர்காலம் பற்றிய நினைவுகள் சுழன்றோடி, அவளை அறியாமலே ஒரு வெற்றுச் சிரிப்பை வரவழைத்தன. கரிகால் பெருவளத்தான் திண்தோள் கொண்ட பெருந்தீரன். அவனிடமுள்ள படைகளோ, யாராலும் வெல்ல முடியாத பலங்கொண்டவை. அப்படிப்பட்ட ஆற்றலுடையவனைச் சதித் திட்டத்திலிருந்து காப்பாற்றும் பொறுப்புத் தன்னிடம் விடப்பட்டிருப் பதை எண்ணித்தான் அந்தச் சிரிப்பு வெளிப்பட்டது முத்துநகைக்கு!

நீண்ட நெடுநேரங்கழித்து, இறுதியில் புகார் பட்டினத்தின் விளிம்புக்கே வந்து விட்டாள்.

குதிரை மருவூர்ப்பாக்கத்தின் எல்லையை மிதித்தது. வணிகர்களும் ஏனைய தொழில் வல்லாரும் பரபரப்புடன் தங்கள் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். வீதியோரத்தில் முத்துநகை இருமருங் கிலும் கண் பார்வையைச் செலுத்தியவாறு போய்க் கொண்டிருந்தாள். அவளது, காதில் "அன்பே சிவம்! பண்பே சைவம்!" என்ற முழக்கம் கேட்டது.

குதிரையை நிறுத்திவிட்டுக் கவனித்தாள். பத்துப் பதினைந்து சிவனடியார்கள் கூட்டமாக வந்து கொண்டிருந்தார்கள். முத்துநகைக்குத் தூக்கி வாரிப்போட்டது. செழியனைத் தூக்கிச் சென்றதுபோல் வேறு

ஏதோ சூழ்ச்சியில் ஈடுபட இருங்கோவேளின் ஆட்கள் ஊரில் நடமாடுகிறார்கள் என்று முடிவு கட்டிக் கொண்டாள்.

முத்துநகை, அடியார் கூட்டத்தைத் தொடர்ந்து சென்றாள். அவர்கள் மருவூர்ப்பாக்கத்தில் எல்லா வீடுகளிலும் சென்று சைவ முழக்கம் செய்தனர். சில பெரிய வீடுகளில் அவர்கள் நுழைந்து பொருள் பெற்று பூரிப்போடு வெளியே வந்தனர்.

முத்துநகைக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. துரோகிகள் தாங்கியிருக்கும் தூய்மையான வேடம் பற்றி அவள் உள்ளத்தில் பெரும் போராட்டம்; எப்படியும் இன்று அவர்கள் முயற்சியைப் பலிக்காமல் செய்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டாள். நாட்டைக் கவிழ்ப்பதற்கு வேடமிட்டுத் திரியும் வேங்கைகளின் உண்மை உருவத்தைத் தெரிந்து கொள்ள முடியாமல் சோழத் திருநகரின் மக்கள் ஏமாளிகளாய் இருக்கிறார்களேயென்று அவள் மனம் வெதும்பினாள். வாசனைப் பொடியும் குங்குமக் குழம்பும், சந்தனமும், நறுமணப் புகைப் பொருள்களும் கையிலேந்தி விற்பவர்களுக்கும்-அவைகளை வாங்கி மகிழ்கின்றவர்களுக்கும் இடையே முற்றும் துறந்தவர்களைப் போல அந்த அடியார்கள் சென்றது, அவளுக்குப் பெருஞ்சினத்தை மூட்டியது. பட்டும் பவளமும் பொன்னும் மணியும் முத்தும் பொருந்திய அழகு மிழும் அணிகலன்களை விற்பவர்களிடையே கொட்டை கட்டிகளாக் வேடமிட்டுக் கொண்டவர்கள் நடமாடுவதை அவளால் சகிக்க முடியவில்லை.

கூவியழைத்து அனைவரையும் ஒன்றுகூட்டி அந்தச் சிவனடி யார்களை வளைத்துக் கொள்ளலாமா என்று எண்ணினாள்; இப்படிச் செய்தால் இருங்கோவேளின் சூழ்ச்சி அம்பலமாகாது போய்விடும். அவனும் விழித்துக் கொண்டு எச்சரிக்கையாக நடந்து கொள்ள வழி வகுத்தது போலாகிவிடும் எனப்பயந்து அந்த அடியார்களைப் பின் தொடர்ந்தாள்.

மருவூர்ப்பாக்கம் தாண்டி அந்த அடியார்கள் பட்டினப்பாக்கத்துப் பக்கம் சென்றார்கள். வெள்ளிடைமன்றம், இலஞ்சிமன்றம், நடுங்கல் மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம் முதலிய இடங்களைக் கடந்து சென்ற அவர்களை அவள் விடாமல் தொடர்ந்தாள். வெள்ளிடை மன்றத்தைக் கண்டதும் அவளுக்குக் கண்கலங்கிற்று. அந்த மன்றத்தின் பெருமையை நினைத்துப் பெருமூச்செறிந்தாள். அந்த மன்றத்தில் யார் வேண்டுமானாலும் தங்களுக்குரிய வியாபாரச் சரக்குகளை மூட்டைகளாகக் கட்டி, உரியவர் பெயரை எழுதி அங்கேயே போட்டு விட்டுத் தங்கள் வேலைகளைக் கவனிக்கலாம்; அந்த மன்றத்திற்கு கதவுமில்லை; காவலும் இல்லை. அப்படியிருந்தும் ஒரு மூட்டையும்

களவு போவதில்லை. இத்துணைச் சிறப்பு மிகுந்த நீதி செழித்திருக்கும் நாட்டில் - ஒழுக்கம் நிறைந்த பூமியில் - துரோகிகள் முளைத்து விட்டார்களேயென்று ஏங்கினாள்.

தன் தந்தையை நினைத்துக் கொண்டாள். அடியார்கள் போகும் வழியைத் திரையிட்டு மறைப்பதுபோல் அவள் கண்களின் முன்னே நீர்த்திரை விழுந்தது.

புத்த விகாரம் முதலிய இடங்களைக் கடந்து அந்த அடியார்கள் சிவன் கோயிலுக்குள்ளே நுழைந்தார்கள்; முத்துநகைக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது அந்த நிகழ்ச்சி. இருங்கோவேளின் ஆட்கள் என்றால் இவ்வளவு தைரியமாகச் சிவன் கோயிலுக்குள்ளே நுழைவார்களா என்று குழப்பமடைந்தாள்.

குதிரையைவிட்டு இறங்கி உள்ளே சென்று கவனித்தாள். அவளுக்கு உண்மை விளங்கிவிட்டது.

அவர்கள் யாரும் இருங்கோவேளின் ஆட்கள் அல்லவர், புகார் நகரைச் சேர்ந்த உண்மையான சிவனடியார்கள்தாம். தன் தவறுக்கு முத்துநகை வெட்கப்பட்டாள். ஆயினும் அவள் சிந்தனை எங்கேயோ ஓடித் திரும்பியது.

ஓலையொன்றை எடுத்து அவசர அவசரமாக அதில் எழுதினாள்:

''அன்பு மிகுந்த சிவனடியார்களே!

வணக்கம். நமது தலைநகரில் எதிரிகள் சிலர் அடியார்கள் வேடத்தில் புகுந்து துரோக வேலையில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களைக் கண்டுபிடிப்பதற்கு உதவியாக நீங்கள் சில திங்களுக்கு வெளியில் வராமல், கோயிலிலேயே இருந்தால் நலம், தயவுசெய்து என்னை யாரென்று கேட்காதீர்கள். வணக்கம்.''

அந்த ஓலையை முத்துநகை, அடியார் கூட்டத் தலைவரிடம் கொண்டு போய்க் கொடுத்துவிட்டுப் பதிலுக்குக் காத்து நின்றாள்.

அடியார் கூட்டத் தலைவர் திருநீற்றடியார். நடுத்தர வயதுடையவர்; வாட்டசாட்டமான உருவங்கொண்டவர்; முகத்தில் அருளை வரவழைத்துக்கொண்டுதான் யாரையும் நோக்குவார். காரணம், இயற்கையிலேயே அவர் முகத்தில் அருளைவிட அதிகமாக வீரமும், கம்பீரமும்தான் மின்னிக் கொண்டிருக்கும். அவர் முத்துநகையை உற்றுப் பார்த்தார்.

''விடாதீர்கள் இவனை! இவன்தான் ஏதோ துரோகம் செய்ய வந்திருக்கிறான்!'' என்று திருநீற்றடியார் கத்தினார்.

மற்ற அடியார்கள் முத்துநகையைச் சூழ்ந்து பிடித்துக் கொண்டார்கள். அந்தக் குழப்பத்தில் அவள் ஆண் வேடம் கலைந்தது. அழகுமயமான ஆரணங்கு எதிரே நிற்பதை அடியார்களின் தலைவர் கண்டார். ''பொன்னுருக்கிச் செய்ததுவோ! புலவர்களின் கற்பனையோ!'' என எண்ணத் தக்கவாறு, தனியாக நின்று கொண்டிருக்கும் ஏந்திழையைக் கண்டதும் திருநீற்றடியாரின் இதயம், காய்ச்சிய ஈயமென உருகி, விலா எலும்புகளைத் தீய்த்து, அடி வயிற்றைப் பற்ற வைத்து அத்தனை இரத்தக்குழாய்களிலும் பாய்ந்தோடிற்று.

சூழ நின்ற மாணவர் குழாத்தைத் திருநீற்றடியார் கடைக்கண்ணால் பார்த்தார். அவர்கள் மறைந்தனர். அவளைக் கரம் பற்றி இழுத்தார். ஓங்கி ஓர் அறை கொடுத்தாள் முத்துநகை. நெற்றியில் உள்ள முப்பட்டைபோல் அவர் கன்னத்திலும் அவளது விரல்கள் பதிந்து, இரத்தக் கோடுகளைக் கிழித்தன.

அதற்குமேல் அடியார் பொறுத்துக் கொள்ளவில்லை. தாவிப் பாய்ந்து அவளைத் தன் உடலோடு சேர்த்து அணைத்துக் கோயிலுக்குள்ளேயுள்ள இன்னொரு பகுதிக்குள் நுழைந்திட முனைந்தார். அப்போது, ''ஏய், நில்!'' என்ற குரலோடு ஓர் உருவம் அடியாரின் பிடரியில் ஓர் அடி கொடுத்தது. முத்துநகை வியப்புடன் திரும்பினாள். வேறு யாருமில்லை; அதே யவனக் கிழவர்தான்!

கிழவரை அடியார் எதிர்த்தார். அடியார் கூட்டமே அங்கு வந்துவிட்டது. யவனக் கிழவரின் வாள் அவர்களை நோக்கிச் சுழன்றது. அடியார்கள் கிழவரின் புலிப்பாய்ச்சல் கண்டு அங்குமிங்கும் ஓட ஆரம்பித்தார்கள்.

இதுதான் சமயமெனக் கண்ட முத்துநகை தன் ஆண் உடைகளைச் சரிசெய்து அணிந்து கொண்டு வெளியே ஓடிக் குதிரையில் ஏறிப் பாய்ந்தாள்.

கோயிலுக்குள்ளே என்ன ஆயிற்று எனத் தெரிந்து கொள்ள அவளுக்கு ஆவல். வெகுதூரம் போய் மீண்டும் கோயில் பக்கமாகத் திரும்பி வந்தாள். அவள் கோயில் பக்கம் வருவதற்கும் யவனக் கிழவர் கோயிலுக்குள்ளேயிருந்து வெளியில் வந்து குதிரையில் ஏறிப் போவதற்கும் சரியாக இருந்தது. யவனக் கிழவர் தன்னைக் கவனிக்காத வாறு பாதுகாப்பாக ஒளிந்து கொண்டாள், ஒரு மண்டபத்துக்கு அருகே!

சற்று நேரம் கழித்துக் கோயிலைச் சுற்றிக் கொண்டு குதிரையை மெதுவாக நடத்தியவாறு தன் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள்.

அவளுக்கு மேலும் மனப்போராட்டம் துவங்கியது. யவனக் கிழவருக்கு தான் யாரென்று தெரிந்திருக்குமா? முத்துநகைதான் ஆண் உடையில் உலவுகிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டால் என்ன செய்வது? இப்படிப் பல கேள்விகள்அவள் உள்ளத்தை நிலைதடுமாறச் செய்தன. கோயிலுக்குள்ளே யவனக் கிழவன் தன்னை முத்துநகையாகத் தான் கண்டான். நான் மீண்டும் ஆண் வேடம் தரித்ததை அவன் பார்த்திருக்க வழியில்லை. இப்படியும் தன்னைத்தானே அவள் தேற்றிக் கொண்டாள்.

யவனக் கிழவர் வேடத்திலேயுள்ள இருங்கோவேள் தன்னை ஏன் காப்பாற்ற வேண்டும்? தன்மீது அவனுக்கு ஏன் இவ்வளவு பிரியம்?

இதற்குப் பதில் கிடைக்கவில்லை.

அந்தத் திருநீற்றடியாரின் போக்கினைக் கண்ட பிறகு அந்தக் கூட்டத்தின் மீதே வெறுப்பு ஏற்படுகிறதே!

மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளை விட்டவர்களின் நேர்மைக்கும் ஒழுக்கத்திற்கும் இதைவிட அவமான மிக்க உதாரணம் வேறென்ன வேண்டும்? அவள் அலைக்கழிந்தாள். அதற்குள் அவள் வீட்டு வாசலும் வந்துவிட்டது.

குதிரையை நிறுத்திவிட்டு வீட்டை நோக்கினாள். வாயிற்புறத்தில் ஒரு குதிரை கட்டப்பட்டிருந்தது. மெதுவாக இறங்கிக் கதவோரம் சென்று உள்ளே கவனித்தாள். தந்தையும் அந்த யவனக் கிழவரும் மிகவும் ரகசியமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பேசிக் கொண்டிருந்தவர் களைப் பார்க்க முடிந்ததே தவிரப் பேசிய விஷயங்களைக் கேட்க முடியவில்லை. முத்துநகைக்கு ஆவேசம் பிறந்தது போன்ற ஓர் உணர்ச்சி. உடனே அரண்மனைக்குச் சென்று கரிகாலரிடம் சொல்லி, வீரர்களை அழைத்து வந்து யவனக்கிழவரைப் பிடித்துக் கொடுத்துவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டாள். ஆத்திரத்தில் என்ன செய்கிறோம் என்று புரியவில்லை. தன் வீட்டிலேயிருந்து இருங்கோவே ளைப் பிடித்துக் கொடுத்தால் தன் தந்தையும் காட்டிக் கொடுக்கப்படு வாரேயென்று அவள் நினைக்கவில்லை! நினைக்க நேரமில்லை அவள் நெஞ்சில் ஊசலாடியதெல்லாம் சோழ நாட்டுப் பெருமையும், பற்றுந்தான்.

குதிரை, அரண்மனை நோக்கி விரைந்தது. கரிகாலனின் மாளிகையில் முத்துநகை நுழைந்தாள். மன்னரை அவசரமாகப் பார்க்க வேண்டு மென்று துடித்தாள். ''மன்னர் தனிமையில் உலவிடச் சென்றார். இப்போது இயலாது!'' என்று பதில் கிடைத்தது, மெய்க்காப்பாளரிடமிருந்து.

''யாருமில்லாமல் மன்னரைத் தனியாகச் செல்ல விடலாமா?'' என்று முத்துநகை கவலையோடு கேட்டாள்.

அதற்கு மெய்க்காப்பாளன், ''கரிகாலனைத் தனியாக எதிர்த்து யாரும் வென்றிட முடியாது. அது பற்றிய கவலை யாருக்கும் தேவையில்லை!'' என்று பதில் கூறினான்.

உடனே முத்துநகை, ''இருங்கோவேளைக் கையுங் களவுமாகப் பிடிக்க இதுவே தருணம்; என்னோடு ஐம்பது வீரர்களை அனுப்ப வேண்டும்!'' எனப் பதறினாள்.

மெய்க்காப்பாளன் சற்று யோசித்து, ''அரசர் உத்தரவின்றி அனுப்பக் கூடாதே!'' என்று தயங்கினான்.

''எனக்குத் தேவையானவற்றை அளிக்குமாறு முன்பே அரசர் கூறியிருக்கிறாரே; இப்போது நான் கேட்பது எனக்காக அல்லவே? இந்த நாட்டுப் பகைவனைப் பிடிக்கத்தானே!'' என்று விளக்கமுரைத்து வற்புறுத்தினாள்.

மெய்க்காப்பாளன், தன் அதிகாரத்தின் கீழுள்ள வீரர்களில் ஐம்பது பேரை முத்துநகையின் பின்னே அனுப்பி வைத்தான். அவள் அவர்களை அழைத்துக் கொண்டு இருங்கோவேளைப் பிடித்துவிட்டோம் என்ற வெற்றிக் களிப்போடு தன் வீடு நோக்கிச் சென்றாள்.

திடுமென அரண்மனை வீரர்கள் ஐம்பது பேர் தெருவிலே வெகு வேகமாகச் செல்வதைக் கண்டு தலைநகரத்து மக்கள் அதிர்ச்சி யடைந்தனர். வீட்டுக்குள்ளிருந்தவர்கள் அனைவரும் வீதிக்கு ஓடி வந்தனர். முன்னே சென்று கொண்டிருந்த முத்துநகை குதிரையைப் பிடித்திழுத்து நிறுத்தினாள். அவளுக்கு பெருத்த ஏமாற்றம்?

தன் வீட்டு வாசலில் கட்டப்பட்டிருந்த யவனக் கிழவரின் குதிரையைக் காணவில்லை. இறங்கி வியப்போடு வீட்டைப் பார்த்தாள்; வீடு பூட்டப்பட்டிருந்தது.

''தாமதித்து விட்டோம்; தப்பிவிட்டான் துரோகி!'' என்று முணுமுணுத்தாள் முத்துநகை. ஆயாசத்தோடு எல்லாக் குதிரைகளும் அரண்மனை நோக்கித் திரும்பின.

முத்துநகை ஓர் ஓலையில், ''தாமதம்; அதனால் தப்பி விட்டான்'' என எழுதி, அதை மெய்க்காப்பாளரிடம் கொடுக்குமாறு சைகை செய்து ஒரு வீரனிடம் தந்துவிட்டு, வேறு பக்கமாகத் தன் பயணத்தைத் தொடர்ந்தாள்.

பாண்டியன் பெருவழுதி, தலைநகருக்குத் திரும்ப வேண்டுமென்ற கருத்தைச் சோழ மன்னனுக்குத் தெரிவித்ததையொட்டிச் சோழன்,

பாண்டியனின் இருப்பிடத்திற்கு வந்துசேர்ந்தான். ''செழியன் காணாமற் போனதைத் தவிர வேறு எந்தக் குறையும் தனக்கில்லை'' யென்று பாண்டியன், சோழனிடம் மனம் விட்டுப் பேசினான்.

''செழியனைப் பற்றியும் சோழ மண்டலத்தைக் கவிழ்க்க நடைபெறும் சூழ்ச்சித் திட்டங்களைப் பற்றியும் தகவல் அறிந்து வரப் பொறுப்பு வாய்ந்தவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்'' என்றும் ''செழியனைப் பற்றி எந்தக் கவலையும் வேண்டாம்'' என்றும் கரிகாலன், பெருவழுதிக்கு ஆறுதல் கூறினான். பின்னர் பாண்டிய நாடு, சோழபூமி இரண்டின் உறவு முறைகள் பற்றியும், நட்பு உடன்பாடுகள் பற்றியும் நீண்ட நேரம் பேசினர். தங்களின் ஒற்றுமைக்கும், இரு நாடுகளின் நட்புக்கும் வழி கோலிய புலவர் காரிக்கண்ணனார் பற்றி இருவரும் புகழ்ந்துரைத்தனர்.

''காரிக்கண்ணனாருக்கு ஒரு மகளிருக்கிறாள். அவள் பெயர் முத்துநகை. அவளுடைய திருமணத்தை இந்த நாட்டு இளவரசியின் திருமணம் போல் அவ்வளவு சிறப்பாகச் செய்து முடிக்கப் போகிறேன்'' என்றான் கரிகாலன்.

''அப்படியா? மிகவும் மகிழ்ச்சி. ஆனால் ஒன்று; அந்தத் திருமண ஏற்பாட்டை என்னைக் கலக்காமல் துவங்கி விட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்'' என்றான் பெருவழுதி.

கரிகாலனும் சிரித்தபடியே, ''அதற்கென்ன ஆகட்டும்!'' எனப் பதில் கூறினான்.

பாண்டியன் குழுவினரும், பரிவாரங்களும் நீண்ட தூரம் சென்று கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்த பிறகே கரிகாலன் திரும்பினான். திரும்பியவன் திகைத்திடும் வண்ணம் ஒரு வீரன் மிக வேகமாகக் குதிரையில் வந்து கரிகாலனை வணங்கி நின்றான்.

''யார் நீ'' என்று கரிகாலன் கேட்பதற்குள், அந்த வீரன் தன் கையிலிருந்த ஓலைச் சுருளை எடுத்து நீட்டினான். அரசன் அதை ஆவலுடன் வாங்கிப் படித்தான்.

''சோழமன்னர் கரிகாலருக்கு வரைவது யாதெனில்- பாண்டிய வீரன் செழியன் என்னிடம் தான் அடிமைப்பட்டுக் கிடக்கிறான். அவனை உயிரோடு பாண்டியனிடம் நீர் ஒப்படைக்க வேண்டுமானால், என்னுடைய நாட்டை என்னிடம் திரும்ப ஒப்படைக்க வேண்டும். இல்லையேல் செழியனைச் சித்திரவதை செய்து அணு அணுவாகக் கொல்ல உத்தேசம்! உடனே பதில்-செயல் மூலம்!''

**- இருங்கோவேள் மன்னன்.''**

கடிதத்தைப் படித்துவிட்டு நிமிர்ந்து பார்த்தான் கரிகாலன். கடிதம் கொண்டு வந்தவனைக் காணவில்லை. அவன் சிட்டாய்ப் பறந்து விட்டான்.

கரிகாலனின் கண்கள் சிவந்தன. பற்களை நற நற வென்று கடித்துக் கொண்டான். உறையில் கிடந்த வாளின் பிடியைக் கரம் இறுகப் பிடித்தது. சிங்கம் போல் தன் மாளிகைக்கு நடந்து வந்தான். ''எங்கே சேனைத் தலைவர்கள்?'' என உறுமினான். ஒரு நொடியில் சேனைத் தலைவர்கள் வந்து குழுமி விட்டனர்.

''சோழ நாட்டைச் சுற்றியுள்ள எல்லாப் பகுதிகளிலும், ஏன், சோழ நாட்டுக்குள்ளும், நமது படைகளின் முரசம் ஒலிக்க வேண்டும். இந்த இருங்கோவேள் எங்கு இருந்தாலும் அவனை உடனடியாகச் சிறைபிடித்துக் கொண்டு வர வேண்டும்!'' என முழங்கினான் சோழர் திலகம்.

சேனைத் தலைவர்களும் அந்த அவசர உத்தரவுக்கு அடிபணிந்து, தங்கள் வீர வாட்களை எடுத்து அரசனுக்கு வணக்கம் தெரிவித்தனர். அப்போது வெகு வேகமாகப் புலவர் காரிக்கண்ணனார் அங்கு வந்து சேர்ந்தார்.

''பொறுத்திடுக, மன்னா! பொறுத்திடுக! அமைதி! அமைதி!'' எனக் கையுயர்த்தி எதிரே வந்து நின்ற புலவரை நோக்கிக் கரிகாலன். ''புலவரே! என்ன சொல்கிறீர்கள்?'' எனப் பதறிக் கேட்டான்.

''இருங்கோவேளைப் பிடிப்பதும் கொல்வதும் நமக்குப் பெரிதல்லவே! செழியனை உயிரோடு மீட்பதல்லவா நமது குறிக்கோள்?'' என்றார் புலவர்.

''இதோ! அந்த இருங்கோவேளின் பயமுறுத்தல் ஓலையைப் படியுங்கள். இதுவரையில் கரிகாலனை யாரும் மிரட்டியதில்லை. என்னிடம் தோற்றோடி ஒளிந்து கொண்ட இந்தக் கோழை மிரட்டுகிறான். இவனுக்கு நான் அஞ்சிச் சாவதா? முடியாது; முடியாது. சோழ நாட்டு வீரம் சோரம் போய்விடவில்லை. நம் நாட்டு வீரர்கள் வாள் பிடித்துப் பழகியவர்களே தவிரப் பகைவரின் தாள் பிடித்துப் பழகியவர்களல்லர். புலிக்கொடியின் நிழலிலே போர்க்குரல் கொடுத்த பரம்பரை. விழுப்புண் பெற்றுப் பெருமை கொள்ளுமே தவிர, எதிரியின் காலில் விழுந்தல்ல. கரிகாலனை யாரும் தடுக்க வேண்டாம். ஓரிரு நாட்களில் அந்த உன்மத்தன் இருங்கோவேளின் தலை என் முன்னே தாழ்ந்திடல் வேண்டும். அதுவரை எனக்கு வேறு நினைவே இல்லை.''

- எனக் கர்ச்சனை செய்து கிளம்பினான் கரிகாலன்.

புலவர் புன்னகை புரிந்தவாறு அவனை அணுகி, ''சோழப் பெருவேந்தே? பெருவழுதிப் பாண்டியருக்கு அளித்துள்ள வாக்குறுதி என்ன? எப்படியும் செழியனை மீட்டுக் கொடுப்பதாகத்தானே? அதை மறந்து விடலாமா? தங்களுக்கு இருங்கோவேள் எழுதியது போலவே பாண்டிய மன்னருக்கும் ஒரு மடல் அவன் எழுதவில்லையென்று தாங்கள் எண்ணுகிறீர்களா? பெருவழுதிக்கும் இப்படியொரு கடிதம் வந்திருக்கிறது!''

''அப்படியா?'' - கரிகாலனுக்கு ஒரே வியப்பு!

''ஆமாம்; பெருவழுதிப் பாண்டியன் திடீரெனத் தலைநகருக்குப் புறப்பட்டதற்கு என்ன காரணம் என்று கருதுகிறீர்கள்?''

''என்ன காரணம் புலவரே?''

''இருங்கோவேள் அவருக்கும் எழுதியிருக்கிறான்; அதாவது பாண்டியநாடு, சோழநாடு இரண்டின் நட்புரிமைக்குக் குந்தகம் உண்டாக்குவதற்காகவே இந்த ஏற்பாடு!''

''எப்படிப் புலவரே?''

''இது புரியவில்லையா! பறித்துக் கொண்ட நாடுகளைக் கொடுத்தால் செழியனைத் திரும்பத் தருவேன்; இல்லையேல் செழியனைக் கொன்றுவிடுவேன் என்பது இருங்கோவேளின் எச்சரிக்கை!''

''ஆமாம்!''

''நாடுகளைத் திரும்பக் கொடுத்துச் செழியனை ஏன் மீட்டுத் தரக் கூடாது என்று பாண்டியன் நினைக்கக்கூடும். தாங்கள் அப்படிச் செய்யாவிட்டால் பாண்டியருக்குத் தங்கள் மீது பகை ஏற்படக்கூடும். அந்தப் பகையை மூட்டிவிட்டுத் தன் சூழ்ச்சியை வெற்றி பெறச் செய்யலாம் என்பது இருங்கோவேளின் நினைவாக இருக்கும். இந்தச் சங்கடமான நிலையைச் சமாளிக்க முடியாமல்தான் பாண்டிய மன்னர் உடனடியாகத் தலைநகருக்குப் புறப்பட்டுவிட்டார்!''

''சரி.. அப்படியானால் இப்போது என்ன செய்யலாம்?''

''சூழ்ச்சியைச் சூழ்ச்சியினால் தான் முறியடிக்க வேண்டும்!''

''இருங்கோவேளின் நிபந்தனைப்படி அவனது நாடுகளைத் திரும்பக் கொடுத்துவிடுவதா?''

''நான் அவ்வாறு கூறவில்லை மன்னா! படை வீரர்களைப் பல திசைகளிலும் அனுப்பி அவனுக்குக் கோபத்தை மூட்டினால் , திடீரென்று அவன் செழியனைக் கொன்று விடவும் கூடும்!''

''அப்படியானால் இதுபற்றிப் பாண்டிய மன்னரின் யோசனையைக் கேட்கலாமா?''

''அவருக்கே எதுவும் புரியாமல்தானே தங்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாதென்று புறப்பட்டு விட்டார்!''

''புலவர் அவர்களே! இந்த ஓலை நமது நாட்டின் வீரத்துக்கு விடப்பட்ட அறைகூவல்! இதை நான் ஏற்றுக் கொண்டே தீர வேண்டும். இருங்கோவேளுக்கு நாடும் திரும்பக் கிடையாது; செழியனையும் அவன் கொல்ல முடியாது'' எனக் கொக்கரித்தான் கரிகாலன்.

அப்போது, வீரன் ஒருவன் மாளிகைக்குள் நுழைந்தான். கரிகாலன், அவனை அடையாளம் தெரியாமல் வியப்புற்று விழித்தான். அருகேயிருந்த மெய்க்காப்பாளன் கரிகாலனின் காதில், ''வருவது முத்துநகைதான்!'' என்று ரகசியமாகச் சொல்லவே, கரிகாலன் புலவரை ஒருமுறை பார்த்துவிட்டு எச்சரிக்கையாக இருந்து கொண்டான். புல வருக்கு எதிரே வருவது தன் மகள் என்று அடையாளம் தெரியவில்லை.

முத்துநகை கரிகாலனிடம், 'ரகசியமாகப் பேச வேண்டும்' என முகக் குறிப்புக் காட்டவே, அவன் புலவரையும் மற்றவர்களையும் பார்த்து, ''சரி; நான் ஒற்றனிடம் பேச வேண்டியிருக்கிறது... எல்லாரும் போகலாம்; தேவையானால் மீண்டும் அழைக்கிறேன்'' எனக் கூறி விட்டுப் புலவர் பின்னால் ஏழடி தூரம் நடந்து சென்று அவரையும் வழியனுப்பிவிட்டு, முத்துநகையுடன் மாளிகைக்கு உட்புறம் சென்றான். தன் தந்தைக்கு எதிரே தெரியாதவளைப்போல் நடந்து கொண்டோமே என்று முத்துநகை நினைக்கிறாள் என்பதை, அவளது கலங்கிய கண்கள் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

கரிகாலன் அவளைப் பார்த்து, ''நீ மிகவும் திறமைசாலிதான்! அடையாளமே தெரியவில்லையே!'' என்று வியந்து பாராட்டினான்.

''முதலில் என்னைப் பற்றிச் சந்தேகப்பட்டீர்களே; பார்த்தீர்களா உங்களையே ஒருகணம் திகைக்க வைத்து விட்டேன்!'' என்றாள் முத்துநகை சிரித்துக் கொண்டே!

''எல்லாம் சரி, குரல் உன்னைப் புரியவைத்துவிடுகிறதே!'' என்றான் அரசன்.

''அதற்காகத்தான் ஊமை நாடகம் ஆடுகிறேனே! மௌன நோன்பு கடைப்பிடிப்பதாகக் கூறிவிட்டு எல்லாப் பேச்சு வார்த்தைகளையும் எழுத்தாணியாலேயே பூர்த்தி செய்கிறேன்!''

''போகட்டும்! உன் முயற்சிகள் எந்த அளவுக்கு வெற்றியளித்திருக்கின்றன? என்னிடம் ஏதாவது கூற முடியுமா?''

முத்துநகை சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டாள்.

''பயப்படாதே! இங்கு யாரும் இல்லை. தைரியமாகச் சொல்!''

''இருங்கோவேளின் இருப்பிடத்தை அநேகமாகத் தெரிந்து கொண்டு வந்துவிட்டேன்!''

''எப்படி? எப்படி?''

''இந்த வேடத்தால், விசித்திரம் ஒன்று நடந்துவிட்டது. முதல்நாள் காடுமேடெல்லாம் அலைந்து ஒரு அருவிக் கரையில் தங்கினேன்; அப்போது ஒரு பெண் வந்தாள். வந்தவள் என் மீது காதல் கொண்டாள்!''

''என்ன? காதல் கொண்டாளா? பைத்தியக்காரி. அவள் யார்?''

''அவள் பெயர் தாமரை?''

''தாமரை! அழகான பெயர்தான்!''

''அந்தத் தாமரை மலர்ந்த தடாகம் எது என்பது எனக்கு முதல்நாள் தெரியாமல் போய்விட்டது. அதற்குள் அவள் பிரிந்துவிட்டாள். அவள் விருப்பப்படி மறுநாளும் அங்கு சென்றேன்!''

''ஓகோ, அவளும் வந்தாளாக்கும்?''

''வராமல் இருப்பாளா? வந்தாள் தன்னந்தனியாக, அந்தப் பொன்னவிர் மேனியாள் நான் இலட்சியத்திற்காகப் பேசாத நோன்பு இருப்பதாக முதல் நாளே சொல்லி விட்டேன்! அதைப் பின்பற்றி மறுநாளும் என்னுடைய ஊமை நாடகத்தை ஆரம்பித்தேன். என்னைக் கண்டது முதல் அவள் இதயத்தைப் பறிகொடுத்து ஏங்கித் தவிப்பதாகக் கூறி அழுதாள்!''

''உம்... வழக்கமான காதல் துவக்க விழா! பிறகு?''

''பிறகென்ன...? நானோ விடுவிக்க முடியாத சிக்கலில் அகப்பட்டுக் கொண்டேன். அவள் காதல் தாகத்தைப் பார்த்தபோது, 'அம்மா! நானும் உன்னைப் போல ஒரு பெண்தான்' என்று கூறி விடலாமா என்று யோசித்தேன். அய்யோ, பாவம்! அவள் இருதயம் வெடித்துவிடுமே என்று பயந்து எதுவும் கூறாமல் இருந்து விட்டேன்!''

''அதிருக்கட்டும்! அவள் யாரம்மா?''

''அதுதானே மிக முக்கியம்? அதைத் தெரிந்து கொண்ட பிறகுதானே அவளை நானும் காதலிப்பதாக உறுதி செய்து கொடுத்திருக்கிறேன்!''

''அப்படியென்றால்?''

''அரசர் பெருமானே! அவள் நமது பகைவனின் தங்கை! ஆமாம்-இருங்கோவேளின் கூடப்பிறந்தவள்!''

''ஆ! அப்படியா?''

''எப்படியோ நான் பகைவனின் இருப்பிடத்துக்குள் நுழைய வழி ஏற்பட்டு விட்டது. நாளைய தினம் அவள் என்னை மீண்டும் சந்திப்பதாகக் கூறிப் பிரிந்திருக்கிறாள். தன் அண்ணனிடம் ஏதாவது பொய் சொல்லித் தந்திரம் செய்து என்னை அவள் கூடவே அழைத்துப் போவதாகவும் கூறியிருக்கிறாள்.

''இருங்கோவேளின் தங்கையும் அவனைப் போலவே சூழ்ச்சிக்காரியாக இருந்து, உன்னை ஏமாற்றிவிட்டால் என்ன செய்வது முத்துநகை?''

''பயமே தேவையில்லை-நான் அவர்கள் எல்லாரையும் ஏமாற்றிவிட்டு வெற்றி பெறுவேன். சோழத் திருநாட்டின் மேன்மைக்கு குழிதோண்ட முயல்பவன் யாராயிருந்தாலும், என் உயிரை பணயமாக வைத்து அவனை அழிக்க முற்படுவேன். இந்த உறுதி என்னைக் காப்பாற்றும்!''

''முத்துநகை! இருங்கோவேள் எழுதியுள்ள மிரட்டல் கடிதத்தைப் பார்!'' என்று சோழன் அவளிடம் ஓலையைக் கொடுத்தான். அதை அவள் படித்துப் பார்த்துவிட்டுத் திரும்ப அரசரிடமே கொடுத்தாள்.

''தந்திரத்தை தந்திரத்தால்தான் வெல்ல வேண்டும். படை கொண்டு மோதினால் செழியனை உயிரோடு பெறுவது கஷ்டமாகி விடக் கூடும். எதற்கும் நான் அடுத்த முறை வந்து தங்களைச் சந்திக்கும் வரையில் பொறுத்திருங்கள்.'' என்று கூறிவிட்டு அரசரிடம் விடைபெற்று, முத்துநகை தன் குதிரையில் ஏறிப் புறப்பட்டாள்.

அவளுக்கு வேலையெல்லாம் அந்தக் காட்டுப்புறத்திலேதான். காட்டின் ஓரத்திலேயே நெடுந்தூரம் சென்று குதிரையை விட்டு இறங்கி, நாலா திசையிலும் விழிகளைச் செலுத்தினாள். ஒரு பாழடைந்த மண்டபமும், அதனருகே அழகிய குளமொன்றும் இருக்கக் கண்டாள். குளிக்கலாம் போல் தோன்றியது. குளிப்பதற்கு அதுதான் பாதுகாப்பான இடம் என்று தெரிந்து கொண்டாள். குதிரையை மறைவான இடத்தில் கட்டிவிட்டு, ஆண் உடைகளை அவிழ்த்துக் கரைமீது வைத்துவிட்டுக் குளத்தில் இறங்கினாள். அந்தக் குளிர்ந்த நீர் அவளது ஆயாசத்தையும், ஏன் மன எரிச்சலையுங்கூடப் போக்கிற்று. கரையேறவே மனமின்றி நீந்தி விளையாடினாள். இன்னும் எத்தனை நாளைக்குப் பெண்மையின் பொலிவை ஆணுடைக்குள் மறைத்துத் திரியவேண்டுமோ என்ற கவலையோடு நீருக்குள்ளே மூழ்கியிருக்கும் மேனியின் அழகைத் தானே பார்த்து ரசித்துக் கொண்டாள். தன்னைப் போய் ஒருத்தி காதலிக்கிறாளேயென்று நினைத்தபோது அவளையறியாமலே சிரிப்பு வந்துவிட்டது.வாய்விட்டுச் சிரித்து விட்டாள்.

அந்த இன்பமயமான குளியலை அங்குள்ள புதர்களின் இடுக்கின் வழியாக இரு கண்கள் பார்த்துக் கொண்டிருப்பதை அவள் கவனிக்கவில்லை. அனாயாசமாகக் குளித்துக் கொண்டிருந்தாள். அவள் குளித்த காட்சியைக் காண வெட்கி அந்தக் கண்கள் மூடித் திறந்தன. பிறகு அந்தக் கண்கள் நகர்ந்தன. பின்னர் அந்த இடத்தைவிட்டு கண்கள் மறைந்தன.

முத்துநகை நீண்ட நேரம் தண்ணீரில் கிடந்து ஊறிய பிறகு கரையேறினாள். எந்தவிதமான பயமும் வெட்கமும் இல்லாமல் கரையில் நின்று உடைமாற்றிக் கொண்டாள். தன் எழிலுருவை - காண்பவரை மயங்க வைக்கும் மாம்பழ உடலை -நீரில் ஆடும் தன் பிரதிபிம்பத்தைத் - தன்னைத் தவிர வேறு யாரும் பார்க்கவில்லை என்பது அவள் எண்ணம்.

ஆண் உடைகளைச் சரிபார்த்து அணிந்து கொண்ட பிறகு, கரையில் உள்ள மண்டபத்துக்கு வந்தாள். வந்தவள் திடுக்கிட்டாள். அங்கு ஒரு முரட்டு மனிதன், இரண்டொரு செங்கற்களை அடுக்கிய அடுப்பில் பானையை வைத்து சமையல் செய்து கொண்டிருந்தான். அவனைக்

கண்டதும் அப்படியே அசைவற்று நின்று விட்டாள். அவன் தன்னையும் தான் குளித்த அலங்கோலத்தையும் பார்த்திருக்க மாட்டான் என்று தனக்குத்தானே ஆறுதல் கூறிக்கொண்டாள்.

அவன் வேறுபக்கம் திரும்பிச் சமையல் வேலையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தான். அவள் வந்த காலடி ஓசை கேட்ட பிறகுதான் அவன் மெதுவாகத் திரும்பினான். ஆகா! என்ன எடுப்பான முகம்! முறுக்கிவிடப்பட்ட பெரிய மீசைகள்! தடந்தோள்! கண்களிலே யாரையும் கவரக்கூடிய தனி ஒளி! கட்டான தேகம்! இளைஞனுமல்லன்; வயோதிகனுமல்லன்; நடுத்தரமான வாலிபன் என்று கூறவும் முடியாது. வாலிபன் அல்லன் என்றும் கூறிவிட முடியாது!

அவன் அவளைப் பார்த்ததும் பயந்தவனைப் போல எழுந்து பணிவாக நின்றான். அவளும் அவனை உட்காரச் சொல்லி, சைகை செய்தாள். அவன் உட்காராமல் நின்று கொண்டே அவள் முகத்தையே கவனித்தான். எங்கே தன் பெண்மை தெரிந்துவிடுமோ என்ற பயத்தால் முத்துநகை, தன் முகத்தைத் தடவிப் பார்த்துக் கொள்வதும், கைகளால் மறைப்பதுமாக இருந்தாள்.

பிறகு அவன் அவளைப் பார்த்து ''நீங்க யாரு?'' என்று கேட்டான்.

அவள் ஊமை ஜாடை காட்டினாள்.

அவனுக்குப் புரியவில்லை. ஆனாலும், புரிந்து கொள்ளத் துடித்தான். ''எந்த ஊரு?'' என்றான்.

அப்போதும் அவள் காட்டிய ஜாடை அவனுக்குப் புரியவில்லை. ''என்ன பேரு?'' என்றான்.

கழுத்தில் கிடந்த முத்தை எடுத்துக் காட்டித் தன் பெயர் அதுதான் என்பதைப் புரிய வைத்தாள்.

''ஓகோ முத்துவா உங்க பேரு?' எனக் கேட்டுவிட்டு ''ரொம்பத் தூரம் பயணம் போல இருக்கு! உக்காருங்க... நான் சமைக்கிற பொங்கலிலே கொஞ்சம் சாப்பிடலாம்'' என்று உபசரித்தான்.

முத்துநகை வேண்டாமென்று தலையசைத்தாள், என்றாலும் பசியின் கொடுமை கொஞ்சம் சாப்பிடலாம் போல் இருந்தது. வயிற்றைத் தடவிப் பார்த்துக் கொண்டாள்.

''ஆங்! வயிறு கேக்குது: உக்காருங்கோ!'' என்று அவளது வயிற்றை அந்த மனிதனும் உற்சாகத்தோடு தடவிக் கொடுத்துக் கையைப் பிடித்து உட்கார வைத்தான்.

அடுப்பில் பானையிலுள்ள உலை கனவேகமாகப் பொங்கிக் கொண்டிருந்தது. ஒரு துண்டில் முடிந்து வைத்திருந்த முந்திரிப் பருப்புகளையும் வெல்லக் கட்டிகளையும் பானையில் கொட்டிக் கிண்டினான். பொங்கல் தயாராகி விட்டது. பானையைக் கீழே இறக்கி வைத்துவிட்டு மண்டபத்தை விட்டு இறங்கி ஓடி இரண்டு பெரிய பூவரசு இலைகளைப் பறித்து வந்தான். அவைகளைக் குளத்தில் கழுவியெடுத்து, அவள் கையில் ஓர் இலையைக் கொடுத்தான் பானையிலுள்ள பொங்கலையெடுத்து அந்த இலையில் வைத்தான். தானும் ஓர் இலையில் பொங்கலை வைத்துக் கொண்டு உண்ணத் தொடங்கினான்.

அவனது உபசரிக்கும் தன்மையைக் கண்டு, முத்துநகை உள்ளுக்குள் மகிழ்ந்தாள். ஏழை வீடாக இருந்தாலும் விருந்தினரை உபசரிப்பதில் தமிழ் நாட்டுக்கு ஈடு தமிழ்நாடுதான் என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். அதை வெளியில் சொன்னால் தன் வேடம் வெளிப்பட்டு விடுமே!

''ம்... இன்னுங் கொஞ்சம் சாப்பிடுங்கய்யா!'' என்று அவள் இலையில் பொங்கலை வைத்தான்.

முத்துநகை, ''போதும்!'' என்று சைகை செய்தும் பயனில்லை.

''என்னை யாரென்று நீங்க கேக்கலியே - நான் விறகு வெட்டி, பெயரு வீரன்! தாய் தந்தை யாருமே கிடையாது. அனாதை! நானே விறகு வெட்ட வேண்டியது - சுமக்க வேண்டியது - விற்க வேண்டியது - அவ்வளவு தான் நம்ப வரலாறு!''

எனக் கூறிவிட்டு, மேலும் கொஞ்சம் பொங்கலை முத்துநகை இலையில் வைத்தான். அவள் வேண்டாமென்று தலையாட்டி, இலையைக் கீழே வைத்தாள்.

''அட! சும்மா சாப்பிடுங்கய்யா! எவ்வளவு சுவையா இருக்கு! இம்... இந்தாங்க'' என்று கொஞ்சம் பொங்கலையெடுத்து அவள் வாயிலே திணித்துவிட்டான்.

முத்துநகைக்கு மெல்லவும் முடியவில்லை! விழுங்கவும் முடியவில்லை! பொங்கலையல்ல; தன்னைப் பற்றிய உண்மையை!

மிகக் கஷ்டப்பட்டுப் பொங்கலைத் தின்று முடித்து விட்டுக் குளத்தில் இறங்கிக் கை கழுவிக் கொண்டாள். முத்துநகை கழுவும்போது இடுப்பில் செருகியிருந்த பதக்கம் கீழே விழுந்தது. உடனே அதை எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டாள். அதுதான் 'இருங்கோவேள்' என்று எழுதப்பட்ட யவனக் கிழவன் தவறவிட்டுப் போன பதக்கம்!

அந்தப் பதக்கத்துக்குரிய இருங்கோவேள்தான் தனக்குப் பொங்கல் சமைத்துக் கொடுத்துப் பசியாற்றினான், உபசரித்தான் என்ற உண்மை அவளுக்குத் தெரியாது; பாவம், கை கழுவிக் கரையேறிய அவளுக்கு விறகு வெட்டி வேடத்திலிருந்த இருங்கோவேள் தாம்பூலம் கொடுத்தான். அதையும் வாங்கிப் போட்டுக் கொண்டாள்.

''அடடே! அய்யாவுக்கு வாய் நல்லா செவக்குதே!'' என்று அவளது செவ்விதழ்களைத் தன் முரட்டுவிரல்களால் கிள்ளி விட்டான் இருங்கோவேள். அது அவளுக்குப் பிடிக்கவில்லை யென்றாலும், அவன் விரல்களால் இதழ்களில் கிள்ளியதும், விறுவிறு என்று ஆரம்பித்த வலி உணர்ச்சி எப்படியோ போய் முடிந்தது. சமாளித்துக் கொண்டாள்.

விறகு வெட்டியின் கோலத்திலிருந்த இருங்கோவேளின் எடுப்பான தோற்றத்தை அடிக்கடி பார்க்கக் கூடாதென்று கண்களைத் திருப்பிக் கொள்ள எவ்வளவு முயன்றாலுங்கூடத் தோல்வியே கண்டாள், முத்துநகை.

அவனது உயர்ந்த திடமான தோள்களும், அகன்று விரிந்த மார்பகமும் அவளைப் பெரிதும் கவர்ந்தன. அப்பப்பா! எவ்வளவு பெரிய விழிகள் அவனுக்கு! அந்த விழிகளில் நிலைக்கண்ணாடி போல் தன் முகத்தைப் பார்த்துப் பொட்டிட்டுப் பொலிவு செய்து கொள்ளலாம் போலும் என எண்ணிப் பூரிப்படைந்தாள்.

அவனருகே அவள் நிற்கும்போது மலையடிவாரத்தில் ஒரு மான்குட்டி நிற்பதுபோல் இருந்தது; ஆலமரத்தின் பெருங்கிளை யொன்றில் கிள்ளை உட்கார்ந்திருந்தால் எப்படியிருக்குமோ அப்படி யிருக்கும், அவன் அவளை வாரியெடுத்துக் கொஞ்ச ஆரம்பித்தால்!.

நல்ல வேளை அப்படியொன்றும் நடந்துவிடவில்லை. உதட்டில் அவன் உண்டாக்கிய வலியைப் பொறுத்துக் கொண்டு மண்டபத்திலிருந்து நகரத் தொடங்கினாள்.

''என்னய்யா கிளம்பிட்டே! இருய்யா கொஞ்சம்!'' என்று இருங்கோவேள் அவள் கையை பிடித்து இழுத்தான்.

''உஸ்! ஊகூம்!'' என்று சைகை செய்துவிட்டு கையைத் திமிறி விடுவித்துக் கொண்டு அவள் புறப்பட எத்தனித்தாள்.

''ஊகூம்! அதுதான் நடக்காது! விடமாட்டேன்'' என்று சிரித்தவாறு கத்திக் கொண்டே, இருங்கோவேள் தன் முரட்டுக் கரங்களால் அவளை அலக்காய்த் தூக்கிக் கொண்டு, கரகரவென்று தன்னைத் தானே மூன்று

சுற்றுச் சுற்றிக் கொண்டு, மண்டபத்துள்ளே போய் அவளைத் தொப்பென்று போட்டான்.

கிறுகிறுவென்று சுற்றிய காரணத்தால் அவள் கண்ணைத் திறக்க முடியாதபடி மயங்கிக் கிடந்தாள். அவனுக்கு பயம் ஏற்பட்டுவிட்டது.

''முத்து! முத்து! அய்யா! அய்யா!'' என்று கூப்பிட்டுப் பார்த்தான்.

குளத்திற்கு ஓடித் தண்ணீர் கொண்டு வந்து தெளித்தான். அவளைத் தன் மடியில் கிடத்திக் கொண்டு, நெஞ்சைத் தடவிக் கொடுத்தான். அப்போது அவனுக்கு உடம்பெல்லாம் சூடேறி உதறியது! குளிரில் தான் உடம்பு நடுங்கும்! இப்படிப்பட்ட சூட்டிலும் உடம்பு நடுங்குமென்பதை அவன் உணராதவனல்ல. மயங்கிக் கிடந்தவள் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

விறகு வெட்டி, தன்னை ஆண் என நம்பித் தாராளமாகப் பழகுவது நிலைமையை எங்கேயோ இழுத்துச் செல்கிறது என்பதை அவள் புரிந்துகொள்ளாமல் இல்லை. அந்த நிலையை அவளால் விரும்பவும் முடியவில்லை, வெறுக்கவும் இயலவில்லை. தலைப்பாகைத் துணியால் நெஞ்சை இழுத்து மூடிக் கொண்டு அவனை விட்டுக் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்தாள்.

அவன் தன்னைப் பற்றி தெரிந்து கொண்டிருக்கக் கூடுமோ என்ற பயமும் சந்தேகமும் அதிகரித்தது. அவன் முகத்தைக் கவனித்தாள். அவனது வீரம் செறிந்த முகத்திலேயிருந்து எந்தக் குறிப்பையும் அவளால் கண்டு கொள்ள முடியவில்லை. ஈட்டிகள் விழிகளுக்கு நேரே பாய்ந்து வந்தாலும் இமை கொட்டுவது கோழைத்தனம் என்று வீரத்துக்கு இலக்கணம் வகுத்துக் கொண்டுள்ள தமிழ்ப் பெருங்குடியில் பிறந்தவன் தானே இருங்கோவேளும்! அவனது முகத்தில் அவ்வளவு சீக்கிரம் உணர்ச்சி பாவ மாறுதல்களைக் கண்டறிந்து விட முடியுமா என்ன?

''எப்படி இருக்கு? இன்னும் மயக்கம் இருக்கா?'' எனக் கேட்டான் இருங்கோவேள்.

''இல்லை'' என்ற பொருளில் தலையசைத்தாள் முத்துநகை.

''மயக்கம் ஆரம்பமாயிருக்கிறது உள்ளத்தில்!'' என்று அவள் சொல்லவில்லை. கண்கள் சொல்லாமலும் இல்லை. அவனும் அதைக் கண்டு பிடித்து விட்டான் என்றே தோன்றியது.

''பிறவியே ஊமைதானா?'' என்று கேட்டான் அவன்.

உடனே அவள், ஒரு ஓலையில் கிறுகிறுவென்று எழுதி அவனெதிரே நீட்டினாள். தாமரையிடம் எழுதிக் காட்டினாளே! அதே வாசகந்தான்!

''என்ன இது பொம்பளை கையெழுத்தாட்டம் இருக்கு! எங்கே விரலைக் கொடு! அட, ஆமாம்! விரல் கூடப் பயத்தங்காய் மாதிரிதான் இருக்கு'' என்று கிண்டல் செய்தவாறு அவள் விரலைக் கடித்து விட்டான், இருங்கோவேள்!

அவள் வலி பொறுக்கமாட்டாமல் துடித்தாள். ஆனாலும் கோபம் வரவில்லை. கடிபட்ட விரலைத் தன் வாயில் வைத்து இரத்தங்கட்டாமல் நாக்கால் நனைத்துக் கொண்டாள்.

அப்போதுதான் அவளுக்கு நினைவு வந்தது; அவன் வாயின் எச்சில் பட்ட விரலைத் துடைக்காமல் தன் வாயில் வைத்துக் கொண்டோம் என்பது. ஏனோ, அது கூட அவளுக்கு வெறுப்பு எதையும் உண்டாக்கவில்லை. அவள் செய்கைகளை ஜாடையாகக் கவனித்துக் கொண்டே அந்த ஓலையைப் படித்தான் இருங்கோவேள்.

''என் இலட்சியம் நிறைவேறுகிற சமயம் நான் பேச ஆரம்பித்து விடுவேன். அப்போது சந்திக்க நேர்ந்தால் விவரம் கூறுகிறேன். அதுவரை என்னைத் தொந்தரவு செய்து இலட்சியம் பற்றிக் கேட்க வேண்டாம்.''

- என எழுதப்பட்டிருந்தது.

படித்து முடித்துவிட்டுத் தலை நிமிர்ந்தான் இருங்கோவேள்! அவள், கடிபட்ட விரலைக் கவலையோடு பார்த்துக் கொண்டிருந்தாள். அது ரத்தம் கட்டி வீங்கி விட்டது.

''அடடா! வீங்கிப் போச்சா! இருய்யா; இதோ ஒரு மருந்து கொண்டு வர்றேன்!'' என்று அவன் அவசர அவசரமாக மண்டபத்தை விட்டு விரைந்து சென்றான்.

அவன் தேடிய பச்சிலை கிடைக்கவில்லை. எப்படியும் பச்சிலையைப் பறித்துச் செல்ல வேண்டுமென்ற ஆவலுடன் சிறிது தேடினான்.

சோழ நாடு - கரிகாலன் - பழிக்குப் பழி - போன்ற முணுமுணுப்புகள் அவனை விட்டுக் கொஞ்ச நேரம் விலகியிருந்தன.

ஏதோ ஒரு தெளிவில்லாத உணர்ச்சி அவனை ஆட்டிப் படைத்தது. அவள் குளிக்கும்போது, அவன் அவளைப் பார்த்து விட்டான்; அப்போதே அவன் உள்ளம் உருக ஆரம்பித்துவிட்டது. அவன் சமைத்த பொங்கலை உண்ணும் சமயத்தில் அவளை மிக அருகே அவன் கண்டான். பிறகு அவளைத் தூக்கிக் கொண்டு ஆடினான்.

அவளுக்கு மயக்கம் வந்ததும்.... அவள் நெஞ்சாங்குழியில் தடவிக் கொடுக்க ஆரம்பித்து சே... சே.. சே.. ஒரு மன்னன் என்பதையே ஒரு கணம் மறந்து விட்டான்.

பச்சிலைக்காக அவன் கால்கள் நடந்தன. பசுமையான எண்ணங் களோ அவனை எங்கெங்கோ இழுத்துச் சென்று காதல் சூறாவளியில் சுருட்டிப் போட்டன. விடுவித்துக் கொள்ள முடியாமல் தத்தளித்தான். அவனுக்கு இந்தச் சுவையே அனுபவமில்லையென்று கூறிவிட முடியாது.

மிக இளமைப் பருவத்திலேயே அவனுக்குத் திருமணம் நடந்தது. தன் மாமன் மகள் பெருந்தேவியைத்தான் அவன் ஆசைப்பட்டு மணம் புரிந்து கொண்டான். இருவரும் இரண்டு மூன்று ஆண்டுகள் காதற் பெருவெள்ளத்தில் நீந்திக் குளித்தனர்.

இன்ப வாழ்வு நீடிக்க முடியாமல் பெருந்தேவியை மூச்சுப்பை நோய் வாட்டத் தொடங்கியது.

வேளிர்குடியில் நல்ல மருத்துவர்களுக்குப் பஞ்சமேயில்லை.

திறன் படைத்த மருத்துவ சிகாமணிகள் எல்லாம் பார்த்தும் பலன் ஏற்படவில்லை. எலும்பும் தோலுமாக ஆகிவிட்டாள் அரசி.

நாழிகை தவறினாலும் தவறும்; அரசிக்கு மருந்து அளிப்பது தவறுவதில்லை. இந்த நிலையில் அரசன் என்றால் ஓர் அரசி இருக்க வேண்டும் என்ற முறைமையை மட்டும் பெயரளவில் பூர்த்தி செய்து கொண்டிருக்கிறாள் பெருந்தேவி.

நாட்டுக்குக் கேடு வந்து காட்டுக்கு வந்த பிறகு அரசியின் நோய் அதிகப்படுவதற்குக் கேட்கவா வேண்டும்? தன் கணவனின் நிலையை நினைத்து அழுது அழுது, அரசியின் முகமெல்லாம் வீங்கிக் கிடந்தது. அந்த வீங்கிய முகம் எதுவும் இப்போது இருங்கோவேளின் மனத்திரையில் நிழலாட்டம் போடவில்லை. அழகு தேங்கிய முத்துநகை யின் வதனம் மட்டுமே அவன் உள்ளத்தில் பெரும் போராட்டத்தை மூட்டிவிட்டுக் கொண்டிருந்தது.

''அழகையெல்லாம் ஒரு சேர எடுத்துச் செய்த தங்கச் சிலை போன்றாள் தனித்து ஏன் உலவ வேண்டும்? ஆபத்து எதுவும் ஏற்படாமல் இருப்பதற்குத்தான் அந்த ஆண் உடையா? அல்லது அவள் இலட்சியத்தை நிறைவேற்றிக் கொள்ளவா? அவள் பேச மறுப்பது ஏன்? பேசினால் பெண் குரல் தெரிந்துவிடும் என்றுதானே? அவள் குளித்த காட்சியைக் கண்டிராவிட்டால் நாம்கூட ஏமாந்துதான் போயிருக்க வேண்டும்.''

இப்படியெல்லாம் கேள்விகளும் பதில்களும் எழுப்பப்பட்டு, உடனுக்குடனே அழிக்கப்பட்டு, அவள் உருவம் மட்டும் அழியாத சித்திரமாகப் பதிந்துவிட்டதை அவன் உணர்ந்தான்.

அவன் பார்க்கும் பச்சிலைகளினுடைய பசுமை நிறத்தின் மீதெல்லாம் அவள் பளிங்கு முகத்தையே கண்டான். அவள் கழுத்தைத் திருகுவது போல் அந்தப் பச்சிலையை எப்படிப் பறிப்பது என்று தயங்கி நின்றான். பெரிய மரமொன்றில் ஒரு நீலநிறப் பசலைக்கொடி படர்ந்து கிடந்தது. அந்தக் கொடியை அவள் குளிக்கும்போது கண்ட இடை நெளிவோடு ஒப்பிட்டுப் பார்த்து, கொடி தோற்று விட்டதாக வலிய வந்து தீர்ப்புக் கூறினான். வழக்கு நடக்காமலே! செவ்விளநீர் தாங்கி நிற்கும் இளந் தென்னைகளைக் கண்டான். ஏனோ அவனையறியாமல் பெருமூச்சு எழுந்தது. கண்களை மூடிக் கொண்டு நின்றான்.

ஏனெனில், திடீரெனக் கண்ணைத் திறந்து, நாடி வந்த பச்சிலையைப் பறித்து விடலாம் என்ற தந்திரம்- இல்லாவிட்டால் பச்சிலைச் செடிகள் அவளாகவே மாறிவிடுகின்றனவாம்! கண்ணை மூடினால் இன்னும் மோசம்! குளக்கரை எதிரே வந்து நின்று அவன் உயிரை மெல்ல மெல்லக் கொல்ல முனைந்தது.

''இருங்கோவேள்! உனக்கு 'இரும்பு நெஞ்சன்' என்று பெயர். நீயா இப்படி மனந்தளர்கிறாய்; மயக்கமுறாதே!'' என ஒரு முறை உரக்கச் சொல்லிக் கொண்டு வெகு வேகமாக நடந்தான்.

எதிரே பச்சிலைச் செடி! திடீரென்று பாய்ந்து அந்தச் செடியைப் பிடுங்கினான்.

அந்தச் செடியோடு ஒரு பாம்பும் சுற்றிக் கொண்டிருந்தது. அதை அவன் கவனிக்கவில்லை. அவள் நினைவு அவனை எதையும் கவனிக்க விடவில்லை. பாவம்! பாம்பு கிடந்து தவித்தது, அவன் கையில் தலையைக் கொடுத்து விட்டு!

மள மளவென்று மண்டபத்திற்கு வந்தான். மண்டபம் காலியாக இருந்தது.

அவள் இல்லை! அவள் அப்போதே போய்விட்டாள்!

பச்சிலைச் செடியைக் கீழே போட்டான்; பாம்பு, தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி மண்டபத்திற்குள்ளே ஒரு பொந்தில் புகுந்து கொண்டது.

அவளைக் காணாத திகைப்பில் பாம்பு கையில் இருந்து கீழே விழுந்ததையும் ஓடியதையும் ஒளிந்ததையும் அவன் கவனிக்கவே இல்லை .

மண்டபத்தைச் சுற்றிச் சுற்றி அலைந்தான். குளக்கரையில் போய் நின்றான். அவள் குளித்த இடத்தில் போய்ச் சிறிது நேரம் உட்கார்ந்தான்.

தண்ணீரைக் கையில் அள்ளி முகத்தில் ஊற்றிக் கொண்டான். பிறகு எழுந்து நடந்தான்.

வெகுதூரம் நடந்து காட்டுக்குள்ளே சென்று மறைந்த இருங்கோ வேள், ஓர் உயர்ந்த குதிரையில் ஏறிக்கொண்டு தன் மரமாளிகை நோக்கி விரைந்தான். மர்ம மாளிகையின் வாயிலிலே நின்ற வீரர்கள் குதிரையைப் பிடித்துக்கட்டி அதற்கான உபசரணைகளைச் செய்தார்கள்.

இருங்கோவேள், மாளிகைக்குள்ளே சென்று ஆடை மாற்றிக் கொண்டு, மரமாளிகையின் முகப்புக்கு வந்தான். அவன் வருகையை அறிவிக்கக் கொம்பு வாத்தியம் முழங்கிற்று. எல்லா வீரர்களும் ஓடிவந்து அணிவகுத்து நின்றார்கள். அவர்களைக் கம்பீரமாகப் பார்த்து அவர்கள் அளித்த மரியாதை வணக்கத்திற்குப் பதில் தெரிவிக்கும் வகையில் தலையை அசைத்தான் வேளிர்குடி வேந்தன்.

''ம்! அழைத்து வாருங்கள் சிறைப்பட்டவர்களை?'' என்று உத்தரவிட்டான் ஒரு சேனாதிபதி.

நாலைந்து வீரர்கள் ஓடினார்கள்.

பயங்கரமாக ஒரு மணி ஒலித்தது.

நூறு வீரர்கள் கொழுந்து விட்டெரியும் தீவட்டிகளைக் கையிலேந்தி வந்தார்கள். அந்தத் தீவட்டிகள் அங்கே பூமியில் செருகப்பட்டன. தூரத்திலேகூட நிற்க முடியாத அளவுக்குத் தீவட்டிகளின் ஜுவாலை வீசிக் கொண்டிருந்தது. சிறைப்பட்டவர்கள் பலர், கையில் விலங்கு மாட்டப்பட்டு இழுத்து வரப்பட்டார்கள்.

அவர்களில் செழியனும் ஒருவன். சோர்ந்து போய் நடக்க முடியாமல் நடந்து வந்தான். ஆனால் அந்த நடையிலும் வீரம் கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்தது.

பூமியில் செருகப்பட்டிருந்த தீவட்டிகளுக்கு நடுவே சிறைப்பட்டவர் கள் நிறுத்தப்பட்டார்கள். தீ நாக்குகளைப் பல முனைகளிலும் சுழற்றிச் சுழற்றி எரிகின்ற அந்தப் பந்தங்கள் உமிழும் அனலை எப்படித்தான் அவ்வளவு அண்மையில் இருந்து தாங்கிக் கொள்ள முடியும்?

சிறைப்பட்டவர்கள் அனைவரும் சோழநாட்டுக்காரர்கள் என்பதைச் செழியன் புரிந்து கொண்டான். இத்தனை பேர் சோழ மண்டலத்திலே யிருந்து தூக்கி வரப்பட்டும் தன்னுடைய நாட்டுக்கு வர இருக்கும் ஆபத்தை உணராமல் இருக்கிறானே சோழன் என்று கோபங் கூட வந்தது செழியனுக்கு.

இவர்கள் எல்லாம் ஏன் சிறைப்பட்டார்கள்?

இவர்களுக்குச் சோழ நாட்டு அரண்மனையில் என்ன பதவி? வீரர்களா? பிரதானியரா? அல்லது நாட்டுப் பெருமக்களா?

செழியன் கேள்விகட்குப் பதில் கூற அங்கே யார் இருக்கிறார்கள்? அவர்களும் செழியனை ஆவலோடு பார்த்தார்கள்.

''யார் புது ஆள்?'' என்ற வினாக் குறியை அத்தனை பேர் விழிகளும் எழுப்பிக் காட்டின.

இருங்கோவேள் பேச ஆரம்பித்தான். தவறு! தவறு! கர்ச்சிக்க ஆரம்பித்தான்.

''அடிமைகளே! எத்தனை நாளைக்கு இப்படித் தொல்லை அனுபவிக்கப் போகிறீர்கள்? நீங்களும் எப்படியும் விடுதலையாகப் போவதில்லை. சிறைப்பட்டிருக்கும் போதாவது கஷ்டமில்லாமல் வேதனைப்படாமல் இருக்க வேண்டுமானால், ஒழுங்காக உண்மையைச் சொல்லி விடுங்கள், ஏய், செழியா! முட்டாள் வாலிபனே! பாண்டிய நாட்டு வீரனே! நீயும் உனக்குத் தெரிந்த உண்மைகளைச் சொல்லலாம். கரிகாற் சோழன் தன்னந்தனியாகச் சிந்திப்பதற்கென்று ஒரு ரகசிய இடத்திற்குப் போகிறானாமே! அந்த இடம் எது? இதோ இந்த முட்டாள்கள் அந்த உண்மையைச் சொல்லாமல் உயிர் வேதனை அடைகிறார்கள். செழியா! உனக்குத் தெரிந்தால் நீ சொல்லித் தப்பித்துக் கொள்!''

செழியன் இருங்கோவேளுக்குப் பதில் கூறினான் :

''சோழர் சிந்திக்கும் இடம், ரகசியமான இடம் என்று நீரே சொல்லுகிறீர்? அந்த ரகசியமான இடம் எனக்கும் இவர்களுக்கும் எப்படித் தெரியும்?''

''என்ன ஆணவம்! அடே? இங்கு சட்டம் என்ன தெரியுமா? சோழ நாட்டுக் கைதிகள் யாராவது வாய் திறந்தால் அவர்கள் கரிகாலனைப் பற்றிய உண்மைகளைச் சொல்வதற்கு மட்டுமே வாய் திறக்க அனுமதிக்கப்படுவார்கள். அல்லாமல் 'அய்யோ அப்பா!' என்று கத்துவதற்குக் கூட இங்கு வாய் திறக்கக் கூடாது! தெரிந்து கொள்''

- இப்படி ஆத்திரத்தோடு முழங்கிவிட்டு இருங்கோவேள் அதை விட்டு அகன்றான். தீப்பந்தங்களின் கொடிய அனலுக்கு நடுவே சோழநாட்டுக் கைதிகளும் செழியனும் துடித்தவாறு நின்றார்கள்.

இருங்கோவேள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அனலில் மயக்கமுற்றுச் சில கைதிகள் 'தடால் தடால்' எனத் தரையில் விழுந்தனர்.

அந்தக் கோரக் காட்சியைப் பார்த்தவாறு செழியன் எரிமலைபோல குமுறிக் கொண்டு நின்றான். ஆடவில்லை. அசையவில்லை, அவன். அக்கினி அவனுடலைத் தீய்த்தபோதிலும் வீரத்திரு நோக்குடன் அவன் நின்று கொண்டிருந்தான். மர மாளிகைக்குள்ளேயிருந்து அரசி பெருந்தேவியும் தாமரையும் மற்றவர்களும் அந்தக் கொடுமையான தண்டனைக் காட்சியைப் பலகணிகளின் வழியே பார்த்துக் கொண்டிருந் தார்கள். அப்போது உள்ளே மன்னன் இருங்கோவேள் நுழைந்தான். அரசி படுக்கையிலிருந்தவாறு கை நீட்டி மன்னனை அருகழைத்து மரியாதை செய்வித்தாள்.

''என்னம்மா தாமரை! என்ன மிகுந்த சோகத்தோடு பார்த்துக் கொண்டிருக்கிறாய்?'' என வினவினான், தங்கையைப் பார்த்து இருங்கோவேள்.

''எல்லாம் சரிதான் அண்ணா! ஆனாலும் சோழ நாட்டுக் கைதிகளை இவ்வளவு கொடுமையாகத் தண்டிப்பது மனிதாபிமானத்தை மீறிய செயலாக எனக்குத் தோன்றுகிறது!'' என்றாள், கொஞ்சம் துணிவை வரவழைத்துக் கொண்டு தாமரை

''பைத்தியக்காரப் பெண்ணே! அந்தப் பாவிகளிடம் இரக்கம் வேறா உனக்கும்? நாடிழந்தோம், நலமிழந்தோம், நாடோடிகளைப் போல நடுக்காட்டில் மிருக வாழ்க்கை நடத்துகிறோம். இந்தநிலைக்கு நம்மை ஆளாக்கி விட்டவர்களை என்ன பாடுபடுத்தினாலும் தகும்!'' என வெறி கொண்டவனைப் போலக் கத்தினான் இருங்கோவேள்.

தாமரை, அதற்குமேல் எதிர்த்துப்பேச விரும்பவில்லை. பலகணிப் பக்கம் போய்விட்டாள். அதன் வழியாக அந்தக் கைதிகளைப் பார்த்திடத் தொடங்கினாள். ஒவ்வொருவராகக் கீழே விழுந்து கொண்டிருந்தனர். அவளுக்குக் கண் கலங்கியது. அந்தக் காட்சியில் அப்படியே மெய்மறந்து நின்று கொண்டிருந்தாள்.

இருங்கோவேளிடம் அரசி மெதுவாகப் பேச ஆரம்பித்தாள், இடை இடையே இருமிக்கொண்டே.

''உங்கள் தங்கை காட்டோரத்தில் ஓர் ஊமை வாலிபனைப் பார்த்தாளாம்...'

''அப்படியா?.... ம்... அதற்கென்ன?''

''அந்த வாலிபன், கரிகாலனை பழி தீர்த்துக் கொள்வதற்காக அலைகிறானாம்...''

இருங்கோவேளின் உள்ளத்தில் முதல் ஐய வினா உருவாயிற்று.

''ஊமை வாலிபன்!''

''கரிகாலனைப் பழிவாங்க அலைகிறான்!''

மாறி மாறி ஒலித்தன அரசியின் வார்த்தைகள்.

''பிறகு!''

- என்று ஆவலுடன் பதில் தேடினான் மன்னன்.

''உங்கள் தங்கைக்கு அவன் மீது ஏதாவது அன்பு பிறந்து விட்டதோ என்னவோ? அதுவும் எத்தகைய அன்போ எனக்குத் தெரியவில்லை. அந்த வாலிபனுக்கு நல்ல மருத்துவ முறைகள் தெரியுமாம். அவனை அழைத்து வந்தால் எனக்கு மருத்துவமும் செய்வான்; உங்களுக்கு கரிகாலனைப் பழி தீர்க்கும் விஷயத்தில் உதவியாகவும் இருப்பான் என்று, தாமரை என்னிடம் கூறினாள். நான் அதெல்லாம் வேண்டாமென்று மறுத்து விட்டேன்.''

''ஏன் மறுத்தாய்?... அந்த வாலிபன் பெயர் என்னவாம்?''

''முத்து என்று சொன்னாள்!''

''முத்து!'' இருங்கோவேளின் உதடுகள் அசைந்தன.

''பெருந்தேவி! நல்ல மருத்துவன் என்றால் அழைத்து வரத் தடையேன் கூறினாய்?'' என்று சொல்லிவிட்டுத் தங்கையைக் கூப்பிட்டு ''தாமரை! தாமரை! இங்கே வாயேன்! பெருந்தேவியிடம் என்னவோ சொன்னாயாமே. நல்ல மருத்துவன் என்றால் அந்த ஊமை வாலிபனை அழைத்து வாயேன் - நல்லவன் தானே அவன்?'' என்று பரபரப்புடன் கேட்டான் இருங்கோவேள்.

''ஆமண்ணா! நல்லவனாகத்தான் தெரிகிறது. அவனுக்குத் தெரியாத மூலிகைகளே இல்லையாம். நம்மைப் போல அவனும் சோழனுக்கு எதிரிதான்!''

- என்றாள் தாமரை மகிழ்ச்சியுடன்!

''மிகவும் இளம் வாலிபனா?''

''வாலிபன் தான்!''

''மீசை முளைத்த வாலிபனா?''

''முளைத்ததோ என்னவோ தெரியாது; மீசையில்லை முகத்தில்!''

''பெயர்?''

''முத்து!''

''சிவப்பு நிறமா?... கறுப்பு நிறமா?''

''சிவப்புதான்! என்ன அண்ணா இப்படி கேள்வி போடுகிறாய்? உனக்கு முன்னமே தெரியுமா அந்த வாலிபனை?''

''ஊஹூம்- தெரியாது! தெரியாது! சந்தேகத்திற்குக் கேட்டேன். நீ அவனை அழைத்து வந்து, அரசிக்கு மருத்துவத்தைத் தொடங்கு. அதோடு ஒன்று- எதற்கும் நாம் ஜாக்கிரதையாக இருப்போம். தப்பித்தவறி நான் இங்கேயிருப்பது அந்த ஊமை வாலிபனுக்குத் தெரிய வேண்டாம். இருங்கோவேள் மன்னன் எங்கேயோ ஓடி விட்டதாக அவனிடம் சொல்லி வையுங்கள். நான் இங்கு வருவதாக இருந்தால் முகத்தை மாற்றிக் கொண்டு தான் வருவேன், உங்களைப் பார்க்க!''

''முகத்தை மாற்றிக் கொண்டென்றால், வேறு யாருடைய முகத்தையாவது வாங்கி வைத்துக் கொண்டா?''- எனச் சிரித்துக் கேட்டவாறு இரும ஆரம்பித்தாள் அரசி.

அவளைத் தழுவியவாறு மன்னன் புன்னகை புரிந்தான். அதைப் பார்க்க வெட்கிப் பலகணி வழியே வெளியே பார்க்கலானாள் தாமரை. பாதிக் கைதிகளுக்கு மேல் மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டார்கள். மற்றவர்கள் துடித்துக் கொண்டு நின்றார்கள். செழியன் மட்டுமே ஆடாது அசையாது நின்ற காட்சி தாமரையின் கவனத்தைக் கவர்ந்தது.

''எவ்வளவு நெஞ்சுறுதி அந்த வாலிபனுக்கு ! தன்னைச் சுற்றிலும் சுழன்று தீ நாக்குகள் ஜுவாலையை உமிழ்ந்து கொண்டிருக்கின்றன என்ற நிலையிலும் அவன் கண்களில் அச்சத்தின் சாயல் அணுவளவும் இல்லையே; கல்தூணைப் போல் அவன் நிற்கும் கம்பீரமே கம்பீரம்! இப்படிப்பட்ட வீரர்கள் நிரம்பிய நாட்டை யார்தான் வெற்றிகொள்ள முடியும்? விழிகளிலே ஊசிகளைச் செருகினாலும் வீரத்தை விலை கூறிடமாட்டார்கள் உண்மைத் தமிழர்கள், என்பதைப் புரிந்திருந்தும் ஏனோ என் அண்ணன் இந்தக் கொடுமையான தண்டனைகளை வழங்குகிறாரோ தெரியவில்லை.''

- எனத் தனக்குள்ளாக நினைத்துக் கவலைப்பட்டாள் தாமரை. அவள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அநேகமாக எல்லாக் கைதிகளும் மயக்கமுற்றுக் கீழே விழுந்து விட்டனர். செழியன் மட்டுமே நின்று கொண்டிருந்தான். நின்ற நிலையிலேயே அவனுக்கும் தலை சுற்ற ஆரம்பித்தது. அவனையறியாமல் கண்கள் மூடி மூடித் திறந்தன. வெகு விரைவில் அவனும் சாய்ந்து விடுவான் என்று தாமரை எதிர்பார்த்தாள். அவளையுமறியாத ஒரு பரபரப்பு இருதயத்தைப் படபடவென்று துடிக்கச் செய்தது. சொல்லவொண்ணா ஆவலுடன் அவனையே நோக்கியவாறு நின்றாள்.

அவனுக்கு நேரே இருங்கோவேள் சென்று அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த வீர வாலிபனின் முகத்தில் எழுதப் பட்டது போல் ஒளி விட்டுக் கொண்டிருந்த உறுதி, இருங்கோவேளின் உள்ளத்தைத் தொட்டது. அருகே நின்ற வீரர்களைப் பார்த்து தீப்பந்தங் களை அணைக்குமாறு உத்தரவிட்டான். எல்லாத் தீப்பந்தங்களும் சில விநாடிகளில் அணைக்கப்பட்டன. கீழே விழுவதற்கு இருந்த செழியன் தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு விழிகளை அகலத் திறந்து எதிரே பார்த்தான். இருங்கோவேள் புன்னகை புரிந்தவாறு காட்சி தந்தான். செழியன் சுற்றுப்புறங்களைப் பார்த்தான். சோழ மண்டலக் கைதிகள் மூர்ச்சித்துக் கிடந்த கொடுமை ஆவேசமுறச் செய்தது.

''நீயும் ஒரு வீரனா?'' எனக் கத்தினான் இருங்கோவேளைப் பார்த்து.

''ஏன்? உனக்குச் சந்தேகமாயிருக்கிறதா?'' - இருங்கோவேள் அமைதியாகக் கேட்டான்.

''நெஞ்சிலே ஈரம் இல்லாதவனுக்கு வீரன் என்று பெயரில்லை - முரடன் என்று பெயர்; காட்டுமிராண்டி என்று பெயர். இதைவிட மோசமான பெயர்களும் உண்டு. ஆனால் அழகு தமிழ் அகராதியில் அந்தப் பெயர்களுக்கு இடமில்லை!''

''எனக்கு நெஞ்சிலே ஈரமில்லையென்று நீ எப்படிக் கண்டுபிடித்தாய்?''

''இதோ - இந்த அணைந்த தீவட்டிகளைக் கேள்! அவை சொல்லும் பதில்!''

''வாலிபனே! அணைந்தது தீவட்டியல்ல!.. என் நாட்டின் வாழ்வு அணைந்தது! வேளிர்குடியின் குன்றாத பெரும் புகழ் அணைந்தது! யாரால்? யாரால் தம்பி இந்த அலங்கோலம்? நீ காப்பாற்ற நினைத்தாயே, அந்தக் கொடுங்கோல் மன்னன் கரிகால் பெருவளத்தானால்!''

''ஆ! கரிகாலர், கொடுங்கோலரா? அவரது ஆட்சித் திறம் கண்டு வாழ்த்துப் பாடுகிறாள் காவேரி அன்னை! அவர் கருணை உள்ளம் கண்டு, பூம்புகாரே புகழ் வீணை மீட்டுகிறது! 'தென்னகத்துப் பெருவேந்தன் திருமாவளவன் கரிகாலனே' என்று திரைகடலுக்கு அப்பால் உள்ள நாடுகள் எல்லாம் பாராட்டுகின்றன. நீ சொல்லுகிறாய்; அவர் கொடுங் கோலர் என்று! இப்போது தான் முதன் முறையாகக் கேள்விப்படுகிறேன். வெள்ளையைக் கறுப்பு என்று விளக்கம் தரும் ஒரு விசித்திரத்தை!''

''எனது திருநாட்டை அபகரித்துக் கொண்டவன் கொடுங்கோலன் அல்லாமல் வேறு யார்?''

''போரில் தோற்ற பொருள்தானே உன் நாடு!''

''இளைஞனே! உன்னிடம் எனக்கென்ன பேச்சு? என்னையும் என் நாட்டு மக்களையும் அடிமைப்படுத்தி விட்டதாகக் கருதியிருக்கும் அந்தச் சோழனையும், அவனுக்குத் துணை நிற்கும் அந்தப் பாண்டியனையும் பழி வாங்காமல் ஓயப் போவதில்லை நான்!''

''எக்கேடாவது கெட்டுப் போ! எனக்கு நீ வழங்கியிருக்கும் தீர்ப்பு என்ன? அதைச் சீக்கிரம் கூறிவிடு!''

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அதுவரை பொறுமையாயிருந்த இருங்கோவேளுக்குத் திடீரென ஆத்திரம் குமுறியது. அவனிடம் பேச்சுக் கொடுப்பதால் ஏதாவது பயன் ஏற்படும் எனக் கருதிய இருங்கோவேளுக்கு ஏமாற்றம் விளைந்தது மட்டுமல்ல, செழியனின் பதில்களால் அவன் எரிமலையாகவும் ஆகிவிட்டான். பற்களை நறநறவென்று கடித்தான்.

''தீர்ப்பா? திமிர் பிடித்தவனே! தீர்ப்பா? உன்னைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொல்லுவதற்குத் திட்டம் போட்டிருக்கிறேன்! உன் விழிகளை எடுத்து என் கையிலே வைத்துக் கொண்டு உன் அங்கங் களைச் சிறிது சிறிதாக - செதில் செதிலாக கிழிக்கும் காட்சியை அந்த விழிகளுக்குக் காட்டி மகிழ்வேன்! போதுமா தீர்ப்பு? இன்னும் ஏதாவது புது முறை வேண்டுமா?''

இருங்கோவள் சீறினான் புலிபோல்! செழியன் கலகலவென நகைக்கத் தொடங்கினான்.

''வேளிர்குடியின் மன்னன் மகாவீரன் என்கின்ற என் நினைப்பைத்தான் சிறிது சிறிதாகச் சித்ரவதை செய்கிறாய்!'' என்று நகைத்துக் கொண்டே கேலி பேசினான்.

அவன் சிரிப்பு அடங்குமென்று இருங்கோவேள் எதிர்பார்த்தான். செழியனோ இருங்கோவேளைப் பார்த்துப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இருந்தான். அப்படி அவன் சிரிப்பதைப் பெரும் அவமான மாகக் கருதிய இருங்கோவேள் வேகமாகப் பாய்ந்து செழியனின் கன்னத்தில் 'பளார் பளார்' என்று அறைந்திடத் தொடங்கினான். செழியன் அறைகளை வாங்கிக்கொண்டு அப்படியே நின்றான். அவனால் எதிர்க்க முடியாதபடி கைகள் விலங்கிடப் பட்டிருந்தன. கால்களிலும் இரும்புச் சங்கிலி! கைகள் வலியெடுக்கும் மட்டும் இருங்கோவேள் செழியனின் கன்னங்களில் மாறி மாறி அடித்துக் கொண்டேயிருந்தான். பிறகு அவனாகவே நிறுத்திவிட்டு, அந்த இடத்தைவிட்டு அகன்றான்.

இந்தப் பயங்கரமான காட்சிகளைத் தாமரை இமைகொட்டாது பார்த்துக் கொண்டிருந்தாள். அண்ணன் அங்கிருந்து போனதும் மெதுவாக வெளியே வந்து வீரர்களில் ஒருவனை அழைத்துச் சாய்ந்து

கிடக்கும் கைதிகளுக்கு மயக்கம் தெளிவித்து அவர்களுக்கு ஏதாவது உணவு அளிக்குமாறு உத்தரவிட்டாள். அவனும் தாமரையின் உத்தரவுக்குக் கீழ்படிந்து, வேறு சில வீரர்களைச் சேர்த்துக் கொண்டு, மயக்கமுற்றிருந்த கைதிகளுக்கெல்லாம் சிகிச்சை செய்யத் தொடங்கினான்.

பின்னர், செழியன் நிற்குமிடத்திற்கு மெல்ல வந்தாள். அவன் அவளைப் பார்க்காமல் கண்களை மூடிக் கொண்டு தலையை வான் நோக்கி நிமிர்த்தியவாறு நின்றான். தாமரை, அவனுக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்று கருதினாள். அப்படி உதவி செய்வது தன் அண்ணனுக்கு விரோதமில்லையென்றும் அவளே ஒரு முடிவுக்கு வந்தாள். கைதிகளை விடுதலை செய்யவேண்டுமென்பது அவள் கொள்கையில்லாவிட்டாலும் அவர்களைக் கொடுமைப்படுத்துவது அவளுக்குச் சகிக்கவில்லை.

''தண்ணீர் வேண்டுமா?''

ஒரு பெண்ணின் குரல் கேட்டு செழியன் கண்விழித்துப் பார்த்தான். அவன் கண்களை அவனால் நம்ப முடியவில்லை. எதிரே நிற்கும் இந்தப் பெண் யார்? இவளை எங்கே இதற்குமுன் பார்த்திருக்கிறேன்...?

பெருவழுதிப் பாண்டியன் அழைப்பதாகச் செழியனை ஒரு வீரன் வந்து அழைத்தான்; அவனும் உடனே புறப்பட்டான். அரண்மனைக்குள்ளே தனி மாளிகையில் பாண்டியன் ஆழ்ந்த சிந்தனையுடன் உலவிக் கொண்டிருந்தான். செழியனைக் கண்டதும் பாண்டியன் முகமலர்ச்சியுடன் உபசரித்தான்.

''உன்னை ஏன் அழைத்தேன் தெரியுமா''

''தெரியாதே மன்னா?''

''திருமணம் நடைபெறப் போகிறது செழியா!''

''யாருக்கு? எப்போது?''

''உனக்குத்தான் செழியா! பெண்ணெல்லாம் பார்த்து விட்டேன் இதோ பார் மணமகளின் படம்!''

பாண்டியன், அங்குள்ள ஏழெட்டுப் படங்களில் ஒரு படத்தைப் பொறுக்கி எடுத்துச் செழியனிடம் காட்டினான். அந்தப் படத்தைச் செழியன் பார்த்தான். அதில் சிரித்துச் செழித்துக் காணப்பட்ட அந்த அழகியின் உருவத்தை விட்டுக் கண்களை உடனே எடுக்க முடியாமல் அவன் தவித்தான்.

''இந்தப் பெண் யார்? எந்த ஊர்?''

''அதெல்லாம் கேட்காதே இப்போது! பெண் பிடித்திருக்கிறதா இல்லையா? அதை மட்டும் சொல்!''

...செழியனுக்கு ஏற்பட்ட வெட்கத்தின் மூலம் அவனுக்குச் சம்மதம் என்பதைப் பாண்டியன் உணர்ந்து கொண்டான்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு நெடுநாட்கள் வரையில் செழியனின் திருமணம் பற்றிய பேச்சைப் பெருவழுதி எழுப்பவேயில்லை. ஓவியத்தில் தோன்றி தன் உள்ளத்தை நிலைகுலைத்த அந்த அழகி எங்கே இருக்கிறாள் என்ற ஆராய்ச்சியைச் செழியன் இன்னும் முடிக்கவில்லை. அதற்குள் எத்தனையோ சம்பவங்கள்! எந்தச் சம்பவமும் அவன் நெஞ்சில் ஒரு புதிய மாறுதலை ஏற்படுத்திய அந்தச் சித்திரத்துப்பாவை பற்றிய நினைப்பை அகற்றவில்லை.

'அப்படியொரு பெண் உலகில் இருக்கிறாளா? அல்லது ஓவியனின் கை வண்ணத்தால் உருப்பெற்ற கற்பனை அழகியா?' -என்ற ஐயப்பாடு அவனை ஆட்டிப் படைத்ததுண்டு.

இப்போது அந்த வீண் சந்தேகம் நீங்கிவிட்டது. ஓவியத்துப் பெண்ணை உயிரோடு பார்த்துவிட்டான். எங்கே? எதிரியின் வீட்டில்! எந்த நிலையில்? கைகால்களில் விலங்கு மாட்டிக் கொண்டு வேதனை அனுபவிக்கும் நேரத்தில். அவளுக்கும் இருங்கோவேளுக்கும் என்ன தொடர்பு? என்ன உறவு? அவன் கேள்விகளுக்கு உடனடியாகப் பதில் தேவை. ஆனால், முதலில் அவள் கேள்விக்குப் பதில் கூறிடக் கருதினான்.

''தண்ணீர் வேண்டும்!'' என்றான்.

அவள் ஒரு வீரனைக் கூப்பிட்டு அவனுக்கு உடனே தண்ணீர் தருமாறு கூறினாள். அந்த வீரன் தண்ணீரைக் கொண்டு வந்து செழியனின் வாயில் ஊற்றினான். அதைக் குடித்துவிட்டுக் கொஞ்சம் தெம்பாகக் கனைத்துக் கொண்டான். அண்ணனின் முரட்டுக் கரங்கள் செழியனின் கன்னத்தில் ஏற்படுத்திய வீக்கத்தை அவள் கவனிக்காமல் இல்லை. தண்ணீர் கொடுத்தவளுக்கு நன்றி தெரிவித்தான் செழியன். அவளும் ''பரவாயில்லை'' என்று பதிலுக்குக் கூறினாள்.

''நீயும் இந்த இடத்தைச் சேர்ந்தவள்தானோ?''

-செழியனின் கேள்விக்கு அவள் என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்தாள்.

'ஆமாம்' என்றால் அவன் தன்னையும் கொடுமைக்காரர்களின் பட்டியலில் சேர்த்து விடுவான் - 'இல்லை' என்றால் நம்புவானோ, மாட்டானோ? - தாமரைக்குப் பதில் கூற நாவெழவில்லை.

''சொல்ல மாட்டாயா?'' என்று கேட்டான் அவன் துடிப்போடு.

''உனக்கேன் இந்தக் கேள்வியெல்லாம்?'' என்று கூறிவிட்டுத் தாமரை விர்ரென்று அந்த இடத்தைவிட்டுப் போய் விட்டாள்.

சரியான பதில் கிடைக்காத செழியன், அவள் போவதைப் பார்த்துக் கொண்டே திகைத்து நின்றான். மயக்கமுற்று வீழ்ந்த கைதிகள் ஒவ்வொருவராக இழுத்துச் செல்லப்பட்டு மரக்கிடங்குகளில் அடைக்கப்பட்டனர். கடைசியாகச் செழியனையும் இழுத்துச் சென்று, **'சாவூருக்குப் போகும் வழி'** என எழுதப்பட்ட சிறைக்குள் தள்ளி வெளியே காவலைப் பலமாக ஆக்கினர்.

செழியனிடம் பதில் கூறிவிட்டு அகன்ற தாமரை தொலைவில் நின்று, அவன் இழுத்துச் செல்லப்படுவதைக் கவலையோடு பார்த்துக் கொண்டிருந்தாள். அவனைப் பூட்டுகிற வரையில் பார்த்துக்கொண்டு இருந்துவிட்டுப் பிறகு மாளிகை வெளிப்புறத்தில் அங்குமிங்கும் உலவிக் கொண்டிருந்தாள்.

அப்போது அவள் சிந்தனைக் கூடத்திற்கு முத்து வருகை தந்துவிட்டான். முத்துவை வீட்டுக்கு அழைத்துவர அண்ணனின் சம்மதம் அவ்வளவு சுலபமாகக் கிடைக்குமென்று அவள் எதிர்பார்க்க வில்லை. கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் உடனடியாக முத்துவைச் சந்தித்து அழைத்துவரத் திட்டம் வகுக்க ஆரம்பித்தாள்.

தாமரை வந்து தன்னை அழைத்துப் போகும் வரையில் அருவிக்கரையிலேயே காத்திருப்பது என்று முடிவு செய்து கொண்டு இரவு முழுவதும் அங்கேயே உட்கார்ந்து கிடந்தாள் முத்துநகை. நட்சத்திரங்களைக் கூட வெளியே காட்டாமல் வானம் கறுப்புத் திரையிட்டிருந்தது. இடையிடையே சளி பிடித்தவன் இருமுவதுபோல இடியொலி வேறு! உலைக்கூடத்தில் எழுகின்ற நெருப்புக் கீற்றுப் போல மின்னல் ஒளியினால் இயற்கை அவளது உள்ளத்தைப் படம் போட்டுக் காட்டிக் கொண்டிருந்தது.

புலவர் காரிக்கண்ணனார் அவள் எதிரே வந்து நின்று 'உன்னைப் பிரிந்து நான் என்ன பாடுபடுகிறேனம்மா-ஏன் மகளே இப்படி என்னைச் சித்ரவதை செய்கிறாய்?' -என்று கண்ணீர் விடுவதுபோல் தோன்றும்! உடனே அதற்குப் பதிலும் பிறக்கும் அவள் நெஞ்சத்தில்.

''தாய் நாட்டைக் காட்டிக் கொடுப்பது தந்தையாயிருந்தால் என்ன? யாராய் இருந்தால் என்ன? அவர்களை எதிர்த்து நிற்பதே உண்மையான நாட்டுப்பற்றுக்கொண்டவர்களின் கடமை!'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

யவனக் கிழவன் வேடத்திலே - இருங்கோவேள் தன் தந்தையாருடன் நட்பு வைத்திருப்பதாக முடிவுகட்டி, வீட்டைவிட்டு வெளியேறிய அந்தப் பாவை, அதே இருங்கோவேளிடம் தன்னையறியாமல் தன் மனத்தைப் பறிகொடுத்துவிட்டுத் தத்தளித்துக் கொண்டிருக்கிறாள் என்பது வேடிக்கைதானே!

அவள் செய்து முடிக்க வேண்டிய கடமை உணர்வு வேறு அவளைத் துரத்திக்கொண்டே இருந்தது; பரிதாபத்துக்குரிய தாமரையோ அவளை ஆண் என்று நம்பிக் காதலுக்கு அடிமையாகி விட்டேன் என்று காலில் விழுகிறாள்-ஒன்றையொன்று முந்திக்கொண்டு சுழன்றடிக்கும் நினைவுச் சூறாவளியில் கண்களை மெல்ல மூடிக்கொண்டு மரத்தில் சாய்ந்தவாறு அமர்ந்திருந்தாள் அந்தப் பூங்கொடி, பயமுறுத்திக் கொண்டிருக்கும் இடியும் மின்னலும் மரக்கிளையில் அமர்ந்திருந்த ஒரு சில பறவைகளின் அமைதியைக் குலைத்தன. அவைகள் குரலெழுப்பியவாறு, கிளைகளில் அங்குமிங்கும் நடைபோட்ட வண்ணமிருந்தன. முத்துநகை, பறவை களின் ஒலியைக் கூர்ந்து கவனித்தாள். அவளும் ஏதாவது வாய்விட்டுப் பேச வேண்டும் போல் தோன்றியது. ஊமைபோல் வாய் மூடிக் கிடப்பது அவளுக்கு வேதனையாக இருந்தது.வீட்டிலிருந்தால் புலவருடன் ஏதாவது உரையாடிக் கொண்டிருப்பாள். அவளது கேள்விகளுக்குப் பதில் கூறுவதென்றால் புலவருக்கும் தனி இன்பம்! அவர் எழுதுகிற பாட்டு ஒவ்வொன்றைப் பற்றியும் அவள் எழுப்புகிற ஐய வினாக்களும் அதற்குப் புலவர் தரும் விளக்கமும் நிறைந்து அந்தவீடே ஒரு தமிழ்ப் பூங்காவாகக் காட்சியளிக்கும். அப்படிப்பட்டவள் வாயை மூடிக்கொண்டு கிடப்பதென்றால்...?

அவள் ஆவலை அதிகப்படுத்தும் பறவைகளின் ஒலி! அந்தப் பறவைகளுக்கு பதில் கூறுவதுபோல் - அவைகளைப் போலவே கத்தினாள். பறவைகளைப் போலக் குரலை மாற்றிக் கத்த முடிகிறது என்பதை உணர்ந்து பெருமகிழ்ச்சி அடைந்தாள்! வகை வகையான பறவைகளின் ஒலிகளை நன்கு கவனித்து அவைகளுடன் போட்டி போட்டுக் கொண்டு கத்தினாள். அவள் கத்துவதைக் கேட்டுத் தூங்கிக் கொண்டிருந்த பறவைகளும் விழித்துக் கொண்டு கத்த ஆரம்பித்தன. அவளுக்கு அது ஒரே வேடிக்கையாக இருந்தது. இரவுப் பொழுதை இப்படியே கழிக்கலாம் என்று முடிவு கட்டிக் கொண்டாள்.

இந்தச் சத்தத்தைக் கேட்டு குதிரை வேறு கனைத்திடத் தொடங்கிற்று. அருகே சென்று அதைத் தட்டிக் கொடுத்து விட்டு மறுபடியும் மரத்தடியில் வந்து உட்கார்ந்து கொண்டாள். கொஞ்சும் கிளியின் அச்சக்குரல்! அதே போல் அவளும் ஒலித்தாள். கோட்டானின் வறட்டுக் குரல்? அதிலும் ஜெயித்தாள். வில்லில் இருந்து கிளம்பும் அம்பு எழுப்பும் ஒலிபோலக்

கருடன் எழுப்பும் 'ஙொய்' என்ற ஒலி! அந்தப் போட்டியிலும் வெற்றி பெற்றாள். அவளது சிந்தனை பலமாக வேலை செய்யத் தொடங்கிற்று. சற்று நேரம் மௌனம்; குரலை எப்படி எப்படியோ மாற்றி ஒலித்துப் பார்த்தாள். பறவைகளுடன் நடந்த போட்டி நின்று விட்டது.

ஆண் குரலில் பேசிப் பழக வேண்டுமென்ற துடிப்பு அதிகமாயிற்று. தாமரையுடன் சென்றால் அங்கும் எழுதி எழுதிக் காட்டிக் கொண்டிருக்க முடியாது என்ற எண்ணம் மேலோங்கியது. பறவைகள்போல் கத்த முடிந்த பிறகு ஆண்களைப்போல் பேசப் பழகிக்கொள்ள முடியாதா என்ன? துணிவு பிறந்தது. பேச ஆரம்பித்தாள். எடுத்த எடுப்பில் வெற்றி கிட்டவில்லை. ஆனாலும் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கை உதயமாகியது. தன் தந்தையார் எழுதிய கவிதைகள் பலவற்றை மனப்பாடம் செய்து வைத்திருந்தாள். அவைகளையெல்லாம் ஆண் குரலில் முழக்கமிடத் தொடங்கினாள். இறுதியில் வெற்றிதான்!

இப்போது அவளால் ஆணைப்போலப் பேசமுடியும். ஆனால் கொஞ்சம் தொண்டை வலிக்கிறது. அதற்காக என்ன செய்வது? கடமையை நிறைவேற்றும் பொறுப்பைத் - தானே அள்ளிப் போட்டுக் கொண்டு கிளம்பியிருக்கிறாளே! திடீரென்று முத்துநகைக்கு ஒரு சந்தேகம். இயற்கையான பெண்குரல் இருக்கிறதா இல்லையா என்று! சொந்தக் குரலில் பேசிப் பார்த்தாள். என்ன பேசுவது? - என்று ஒரு கணம் திகைப்பு; பிறகு பேசினாள்.

''உங்களை அந்தப் பாழ்மண்டபத்தில் பார்த்ததுமே பறிகொடுத்து விட்டேன் என் உள்ளத்தை!''

பேசி முடித்ததும் தான் புரிந்தது, என்ன பேசினாள் என்று ! சொந்தக் குரல் இருக்கிறதா என்ற சோதனையில் புகுந்தவள், காதல் சோலையில் ஏன் நுழைந்தாள்? அப்படியானால் அவள் அந்த விறகு வெட்டியைக் காதலிக்கிறாளா?

அவளை நினைத்து அவளே வெட்கப்பட்டுக் கொண்டாள். அவள் தோள்மீது ஒரு கை பட்டதுபோன்ற உணர்ச்சி! அந்த உணர்வு கண்டு அவள் திடுக்கிட்டெழவில்லை. அப்படியே இருந்தாள். கை, அவள் தோளை அழுத்திப் பிடிப்பதுபோல் இருந்தது. அவளோ தோளை விடுவித்துக் கொள்ள முயலவில்லை. மாறாக, கையோடு பின்னுக்குச் சாய்ந்தாள். என்னவோ செய்தது அவளுக்கு. பலமான கரத்தின் அணைப்பில் இருப்பது போன்ற மயக்கம். கண்களை இலேசாக மூடிக் கொண்டு அந்த உணர்வைச் சுவைத்தாள். பிறகு அவள் கரம் அசைந்து தோளின் பக்கம் சென்றது. தன் தோளைப் பிடித்திருக்கும் முரட்டுக் கரத்தை விலக்குவது போல் தடவி ரசிக்க அவள் மென்கரம் ஊர்ந்தது. தோளின் பக்கம் உயர்ந்தது.

சே! சே! என்ன அறிவீனம்! இதுவரை அவள் தோளைத் தழுவியிருந்தது மனிதன் கரமல்ல; மரத்தின் கரம்! அவள் சாய்ந்திருந்த மரத்திலேயிருந்து விழுந்துவிட்ட கிளையின் அடிப்பாகம் அவள் தோள் மீது பட்டு, கணநேரக் காதல் இன்பத்தை அவளுக்கு வழங்கி ஏமாற்றிவிட்டது.

யாரோ எதிரேயிருந்து அந்த இருட்டில் தன்னைக் கவனிப்பதுபோல முகத்தை மூடிக்கொண்டாள் முத்துநகை, விறகு வெட்டியின் நினைவு அவளை ஆட்டிப் படைத்தது. அவரைச் சந்தித்தால் அவரிடம் சொல்லி, 'காட்டில் உள்ள எந்த மரத்தை வெட்டினாலும் வெட்டுங்கள்: இந்த மரத்தை வெட்டாதீர்கள்' என்று கூற வேண்டும் எனத் தீர்மானித்தாள்.

''டக்! டக்!'' என்று நிறுத்தி நிறுத்தி ஓர் ஒலியெழுந்தது. ஒலி வந்த பக்கம் மெதுவாக நடந்தாள். மரம் வெட்டும் சத்தம்தான் அது ! இந்நேரத்தில் காரிருளில் யார் வந்து மரம் வெட்டப் போகிறார்கள்? ஒரு வேளை அவராகத்தான் இருக்குமோ? சந்தேகத்துடன் முன்னோக்கிச் சென்றாள்.

வர வர ஒலி அருகே கேட்டது. ஒலி வரும் திசையில் விளக்கு வெளிச்சமும் தெரிந்தது.

ஒளிந்து ஒளிந்து வெளிச்சம் தெரியும் இடம் நோக்கிச் சென்றாள்.

தீப்பந்தம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அதனருகேயுள்ள ஒரு மரத்தைத்தான் யாரோ வெட்டிக் கொண்டிருந்தார்கள்.

வெட்டுகிறவன் வேறு பக்கம் திரும்பியிருந்ததால் அடையாளம் கண்டு பிடிக்க முடியவில்லை.

ஏறத்தாழ உருவமெல்லாம் மண்டபத்தில் சந்தித்தவனைப் போலவே இருந்தது. ஆனால் அந்த ஆராய்ச்சியில் அவளுக்குத் தெளிவில்லை. மேலும் அருகே செல்வதா அல்லது அங்கேயே நின்று கவனிப்பதா என்று தெரியாது திகைத்துப் போனாள் முத்துநகை.

''யாராக இருக்கும்?'' என்று அவளுடைய சிந்தனை ஓடிக் கொண்டிருக்கும் போதே, மளமளவென்று மரம் முறிந்து கீழே விழத்

தொடங்கியது. மரம் சாய்கிற பயங்கரச் சத்தம் அந்தக் காடு முழுவதும் எதிரொலித்தது. முத்துநகை நடுங்கிவிட்டாள். வெட்டுண்ட மரமும் அவளை நோக்கியா சாய்ந்திட வேண்டும்? மரம் தன்மேல் தான் விழப்போகிறது எனக்கண்ட முத்துநகை 'ஓ' வென்று அலறிக் கீழே விழுந்து விட்டாள்.

பெண் குரல் கேட்டு, மரம் வெட்டியவன் தீப்பந்தத்துடன் ஓடி வந்தான்; நல்ல வேளையாக மரம் அவளுக்கு மிக அருகிலேயே விழுந்திருந்தது. கொஞ்சம் தவறியிருந்தாலும் முத்துநகையின் உடல் நொறுங்கிப் போயிருக்கும். தீப்பந்தத்தைக் கீழே செருகிவிட்டு, அந்த மரம்வெட்டி அவளைத் தூக்கினான். அவளும் பயத்தோடு கண்களைத் திறந்து பார்த்தாள்.

''முத்து! முத்து! இந்நேரத்தில் எங்கு வந்தாய்?'' என்ற வார்த்தைகளைக் கேட்டதும் அவளுக்கு விஷயம் விளங்கி விட்டது. யாராயிருக்கும் என்று எதிர்பார்த்து வந்தாளோ அவனையே கண்டாள்.

அவனாக இருக்கக் கூடாதா என்று அடங்காத ஆவலுடன் ஓடி வந்தவள், 'ஏன் அவனைக் கண்டோம்' என்று பயந்தாள்.

''இந்நேரத்தில் ஏன் மரம் வெட்டுகிறாய்?'' - முத்துநகை அவனைப் பார்த்துக் கேட்டாள். பெண் குரலிலே அல்ல; தான் புதிதாகக் கற்றுக் கொண்ட ஆண் குரலில்.

விறகு வெட்டியாக நின்று கொண்டிருக்கும் இருங்கோவேளுக்கு ஆண் குரலில் அவள் பேசுவதைக் கேட்டதும் ஆச்சரியமாகப் போய்விட்டது. ஆச்சரியத்தை வெளிக்காட்டாமல், அவளைப் பார்த்து, ''இலட்சியம் நிறைவேறாமல் பேசுவது இல்லை என்றாய்; இப்போது பேசி விட்டாயே!'' என்று கேட்டான்.

''என் இலட்சியம் நிறைவேறும் நிலையில் இருக்கிறது. எப்படியும் வெற்றி எனக்குத்தான் என்று நிச்சயமாகி விட்டது. அதனால் தைரியமாகப் பேச ஆரம்பித்து விட்டேன்!'' என்று பதில் கூறினாள் முத்துநகை.

''உன் இலட்சியமென்ன? அது இந்தக் காட்டுக்குள்ளே தான் உலவிக் கொண்டிருக்கிறதா?'' இருங்கோவேள் கேட்டான்.

''ஆமாம்'' என்றாள் அவள்.

இருங்கோவேள் அதற்குமேல் அதைக் கிளற விரும்பவில்லை. 'எப்படியும் தாமரை அவளை மரமாளிகைக்கு அழைத்துவரப் போகிறாள். வந்த பிறகு சிறிது சிறிதாக அவளைப் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொள்ளலாம்' என்ற முடிவில், பேச்சின் பாதையைத் திருப்பினான்.

''நல்ல வேளை - முறிந்த மரம் உன் மீது விழவில்லை. நீ ஏன்யா இங்கு வந்தாய்?''

முத்துநகை சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, ''அதோ அங்கேயிருக்கிற மண்டபத்தில் தூங்கிக் கொண்டிருந்தேன். யாரோ மரம் வெட்டுகிற சத்தம் கேட்டது. ஒரு வேளை நீதான் வெட்டுவாய் என்று நினைத்து வந்தேன். ஆமாம்... இரவில்தான் மரம் வெட்டுகிற தொழிலா? திருட்டுத்தனமாக வெட்டுகிறாயா?'' என்று கேட்டாள்.

மிக சாமர்த்தியமாக ஆண் குரலில் பேசுகிறாள் என்பதை ரசித்துக் கொண்டே நின்ற இருங்கோவேள் ''ஆமாம்!'' என்று தலையசைத்தான். அவளை மறுமுறையும் சந்திக்க வேண்டும் என்ற ஆவலில் தான் அவன் வந்திருக்கிறான் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்? தாமரை அவளை வீட்டுக்கு அழைத்து வந்து விட்டால். மீண்டும் சந்திக்கமுடியாமல் போய்விடுமோ என்ற சந்தேகத்தில் தான் அதற்குள் ஒரு தடவை பார்த்து விட வேண்டுமென்று ஓடி வந்திருக்கிறான். அவனுக்கு நன்றாகத் தெரியும். அவள் அருவிக்கரையில் உட்கார்ந்திருந்தது. ஆனாலும் மண்டபத்தில் படுத்திருந்ததாக அவள் சொன்ன பொய்யை நம்பியதுபோல் நடித்தான்! அருவிக் கரையில் அவள் இருந்ததைப் பார்த்துக் கொண்டேதான் மரம் வெட்டும் இடத்துக்கு வந்து சேர்ந்தான். அவள் கவனத்தைக் கவர்வதற்காகவே மரம் வெட்டுவது போல் பாசாங்கும் செய்தான். மரமும் விழுந்தது. அவளும் வந்து அவன் வலையில் விழுந்துவிட்டாள். இருங்கோவேள் அந்த இரவு அவளிடம் எதுவும் பேசாமல் பிரிந்துவிடலாம் என்ற எண்ணத்தில் வரவேயில்லை. அவள் பெண்தான் என்பதைத் தான் புரிந்து கொண்டதாகக் காட்டி, இன்ப உரையாடல்கள் - இனிய சுகம் - ஆகியவற்றுடன் அந்த இருளை வழி அனுப்பிவைக்க வேண்டுமென்று துடிதுடித்துத்தான் அங்கு வந்தான். ஆயினும் அவனால் அவளுக்கு எதிரே அந்தத் துணிவைப் பெற முடியவில்லை.

''மரத்தை நாளைக்கு விறகாகப் பிளந்து கொள்கிறேன்; கொஞ்ச நேரம் தூங்கலாம். வாய்யா மண்டபத்துக்குப் போகலாம்!'' என்று முத்துநகையை அழைத்தான்.

''இல்லை; நான் வரவில்லை!'' என்றாள் அவள்.

''அட சரிதான் வாய்யா!'' என்று கையைப் பிடித்து இழுத்தான் இருங்கோவேள்.

''ஊகூம்... எனக்கு வேலையிருக்கிறது.''

''ராத்திரியிலே என்ன வேலை! எல்லா வேலையும் காலையிலே பார்த்துக்கலாம்; மழை வேற வரப் போகிறது. வாய்யா போகலாம்!'' என்று மறுபடியும் இழுத்தான் இருங்கோவேள்,

அவன் சொன்னதற்கேற்றவாறு மழைத் தூறலும் விழுந்தது. இடியொலியும் பலமாக இருந்தது.

''பாத்தியா மழையே வந்துட்டது! வாய்யா வா!'' என்று அவசரப் படுத்தி, தீப்பந்தத்தையும் கையிலே எடுத்துக் கொண்டு அவளையும் இழுத்துக் கொண்டு கிளம்பினான். எதுவும் பேச இயலாது அவளும் அவனுடன் போனாள். என்ன செய்வது? போகவும் ஆசை - போனால் என்ன ஆகுமோ என்ற பயமும் கூடவே, இருப்பினும் அவனுடன் சென்றாள். இருவரும் மண்டபத்திற்குள் நுழைவதற்கும் மழை பலமாக ஆரம்பமாவதற்கும் சரியாக இருந்தது. அருவிக்கரையில் கட்டப்பட்டிருக் கும் குதிரையைப்பற்றி அவளுக்குக் கவலை ஏற்பட்டது.

''என்னய்யா யோசிக்கிறே?'' என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டினான் இருங்கோவேள்.

''ஒன்றுமில்லை!'' என்று அவள் சமாளித்துக் கொண்டாள். ''இப்படி இரவு பகல் கஷ்டப்பட்டு விறகு வெட்டி வேலை செய்கிறாயே; உனக்கு என்ன கிடைக்கும்!'' என்றாள் அவனைப் பார்த்து.

தீப்பந்தத்தை நன்றாக எரிய விட்டவாறு அவன் பதில் கூறினான். ''கஷ்டமில்லாமலா வயிற்றுக்குக் கிடைக்கும்'' என்று.

''உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?'' என்றாள் முத்துநகை.

இந்தக் கேள்வியை அவசரப்பட்டுக் கேட்டுவிட்டாள். ஆனால் கேள்வி கேட்டு முடிவதற்குள்ளாகவே அவள் உடல் நடுங்க ஆரம்பித்துவிட்டது.

''இன்னும் ஆகவில்லை - இந்தக் கட்டைக்கு ஏனய்யா கல்யாணம். அது சரி, உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? பிள்ளை எத்தனை? பெண்ஜாதி உன்னைப் போலவேஅழகிதானா?'' என்று கேள்விகளை மளமளவென அடுக்கிக் கொண்டே போனான் இருங்கோவேள்.

''ஊகூம்... கல்யாணம் ஆகவில்லை'' என்றாள் முத்துநகை.

''அப்படின்னா நம்ப ரெண்டு பேரும் கல்யாணம் செய்து கொள்ளலாம்?'' - இருங்கோவேள் குறும்பாகக் கேட்டான்.

''என்னது! நம்ப ரெண்டு பேருமா?'' முத்துநகை ஆச்சரியமும் திகிலும் அலைமோத வினா எழுப்பினாள். அத்துடன் உள்ளுக்குள்ளே ஒரு புளகாங்கிதம்!

''சே.... சே... ஆம்பளையும் ஆம்பளையுமா கல்யாணம் பண்ணிக்கிறது! அதாவது நீ ஒரு பெண்ணையும், நான் ஒரு பெண்ணையும் கல்யாணம் பண்ணிக்கலாமான்னு கேட்டேன்யா!'' என்று மழுப்பினான் இருங்கோவேள்.

முத்துநகை சிரித்துக் கொண்டாள்.

''சரி தூங்கலாம்!'' என்று இருங்கோவேள் அவளிடம் கூறினான்.

முத்துநகையும் இனிமேல் பேசுவது ஆபத்து என்று கருதித் தூங்கலாம் என்று பதிலுரைத்துவிட்டு, மண்டபத்தின் ஒரு பக்கத்தில் படுத்துக் கொண்டாள். அவளுக்கு எழுந்த உணர்ச்சிகள் அவளை மிகவும் பயமுறுத்தின. ஏதாவது விபரீதம் ஏற்பட்டு விடுமோவென்று நடுங்கினாள். தூங்குவதுபோல் பாசாங்கு செய்து அவன் தூங்கியதும் ஓடி விடலாமென்றும் திட்டம் போட்டாள். இப்படிப் பயப்படுகிறவள் பிறகு எதற்காக வருகிறாள்? ஆசை வெட்கமறியுமா என்ன? அவளுக்கு அருகிலேயே அவனும் படுத்துக் கொண்டான். அதை அவள் எப்படித் தடுக்கமுடியும்? தடுத்தால் தான் பெண் என்ற உண்மையைச் சொல்லியாக வேண்டும். மூச்சைப் பிடித்துக் கொண்டு எதுவும் பேசாமல் தூங்குவதுபோல் நடிக்க ஆரம்பித்தாள். இருங்கோவேளுக்குத் தூக்கம் வருமா, என்ன?

...சே சே சே! இந்த வெளிச்சம் வேறு தூக்கத்தைக் கெடுக்குது!'' என்று முணுமுணுத்தவாறு எழுந்து தீப்பந்தத்தை அணைத்துவிடாமல் மண்டபத்திலுள்ள இடிந்த சுவருக்குப் பின்புறம் கொண்டுபோய் வைத்தான். பிறகு வந்து அவளருகே படுக்கப் போனான்.

''கொஞ்சம் விலகியே படு! இல்லாவிட்டால் எனக்குத் தூக்கம் வராது!'' என்றாள் அவள்.

''சரி! சரி! தூங்கு!'' என்று கூறியவாறு சிறிது விலகிப் படுத்துக் கொண்டான்.

இருவரும் தூங்குவது போல் நடித்துக் கொண்டிருந்தனர். இப்படிச் சிறிது நேரம் கழிந்தது. முத்துநகையின் கால்பக்கம் ஏதோ ஊர்வதைப் போல் ஓர் உணர்ச்சி. அப்படியே அசைவற்றுப் படுத்திருந்தாள். அவனுடைய கால் விரலாகத்தான் இருக்கும் என்று நினைத்தாள். நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. காலில் ஊர்ந்த பொருள் வழவழ என்று தெரிந்தது.

''அய்யோ! பாம்பு! பாம்பு!'' என்று அலறி ஓடிப்போய் இருங்கோவேளை இறுகக் கட்டிக் கொண்டாள்.

''எங்கே? எங்கே?'' என்று அவன் கேட்கிறானே தவிர ஓடிப்போய்த் தீப்பந்தத்தை எடுத்து வருவோம் என்ற எண்ணம் அவனுக்கு வரவேயில்லை. எப்படி வரும்? அவளல்லவா அவனை அணைத்துக் கொண்டிருக்கிறாள்? பிறகு அவளே தன்னை விடுவித்துக் கொண்டதும் - தீப்பந்தத்தை எடுத்து சுற்றும் முற்றும் பார்த்தான். பச்சிலைச் செடியுடன்

அவன் கொண்டுவந்து போட்ட அதே பாம்பு தான் அங்கே ஊர்ந்து ஓடிக் கொண்டிருந்தது. வேகமாக ஓடி அதன் வாலைப் பிடித்துக் கர கரவெனச் சுற்றி மண்டபத்துத் தூணில் அடித்தான். பாம்பு செத்து வீழ்ந்தது.

''ம்! வீராதி வீரனே! பயப்படாமல் படுய்யா!'' என்று அவளைத் தட்டிக் கொடுத்தான்.

''ஊகூம், எனக்கு பயமாயிருக்கு நான் போகிறேன்'' என்றாள் முத்துநகை.

''இதோ, வெளிச்சத்தை இங்கேயே வைக்கிறேன்.'' பயமில்லாமல் தூங்கு!'' என்று தீப்பந்தத்தை அங்கேயே வைத்தான்.

தானும் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான். வெளியே மழை பொழிந்து கொண்டிருந்தது. கண்மூடித் தூங்குவதுபோல் படுத்திருந்த முத்துநகையின் தலைப்பாகையில் அவன் கைபட்டது. அவளுக்குத் தூக்கிவாரிப்போட்டது. பாம்பைக் கண்டு பயந்து அவனை அணைத்துக் கொண்டதை நினைத்து நினைத்து நெஞ்சில் இனிப்பேற்றிக்கொண்டு படுத்திருந்த அவளுக்கு மேலும் ஒரு நெருக்கடி!

தலைப்பாகையில் பட்ட அவன் கையைப் பிடித்து, ''என்ன இது?'' என்றாள் அதட்டலாக.

''அட, ரொம்பக் குளிருதய்யா! தலைப்பாகைத் துணியைக் கொடு! உடம்புக்குப் போர்த்திக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே, அவள் தடுத்தும் கேளாமல் அவளது தலைப்பாகையை அவிழ்க்கத் தொடங்கினான் இருங்கோவேள்.

அதற்குமேல் முத்துநகையால் தடுக்க முடியவில்லை.அவனை அறவே வெறுத்திருந்தால் அப்படியொரு நிலைமை ஏற்பட்டே இருக்காது. முதல் சந்திப்பிலேயே முகத்தை முறித்துப் பேசிவிட்டுப் போயிருப்பாள். இப்போதோ இரண்டும் கெட்டான் நிலை. அவிழ்ந்த தலைப்பாகை அவன் கையிலே. அலை அலையாய்ச் சுருண்டு அடர்த்தியாகத் தொங்கும் கூந்தல் அவள் தலையிலே. முன்பே இது அவனுக்குத் தெரியும் என்றாலும், இப்போது தான் தெரிந்தவனைப் போல, ''ஆ?'' என்று வியப்புச் சொல் உதிர்த்துவிட்டு அசையாமல், அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவளும் இனிமேல் நடிக்க இயலாது என்பதைப் புரிந்து கொண்டாள். என்னதான் இரும்புக் கம்பியைநட்டு வைத்து அதன் மீது ஏற்றிவிட்டாலும் கொடி துவண்டு துவண்டு நெளிந்து படருமே தவிர, கம்பீரமாக ஆண்மை காட்டி நிற்குமா என்ன?

இருங்கோவேள் நடிப்பின் உச்சக்கட்டத்தை எட்டிப் பிடித்தான். ''என்ன ஆச்சரியம்! நான் காண்பது கனவா? அல்லது கண் எதிரே மாய மந்திரம் ஏதாவது நடக்கிறதா? முத்து! நீ ஆண் இல்லையா? பெண்ணா?'' என்று பரபரப்புடன் கேட்டுத் தான் பெரிய குழப்பத்தில் இருப்பதுபோல் பாவனை காட்டினான்.

முத்துநகை பேசவில்லை. தலைகுனிந்து கொண்டாள்.

இருங்கோவேள் அருகே சென்று அவள் கன்னத்தைக் கரங்களால் பற்றித் தன் முகத்துக்கு நேரே திருப்பினான். இருவர் முகமும் அருகருகே நெருங்கின. இரு ஜோடி விழிகளும் ஒன்றையொன்று கௌவிக் கொண்டன. மூன்று விரல் இடைவெளியில் மூக்கின் நுனிகள்! பக்கத்தில் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தின் ஒளி பட்டு, அவள் முகம் மெருகேற்றப்பட்ட தங்கம்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தது. மலர்ந்த தாமரையொன்றை இருகையால் ஏந்தி அதன் எழிலைக் கண்களால் பருகுவது போல் அவள் கன்னங்களில் தன் கைகளைப் பதித்து அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் இருங்கோவேள்.

முத்துநகை உலகத்தையே மறந்தாள். அவன் கையிலிருந்து முகத்தை விடுவித்துக் கொண்டு, அவனது அகன்ற மார்பகத்தில் சாய்ந்து கொண்டாள். இடியும் மழையும் முன்னைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாயிற்று. திடீரெனச் சுழன்று வீசிய பெருங்காற்றில் தீப்பந்தமும் அணைந்து போயிற்று. இருவரும் இயற்கையை மனத்துள் வாழ்த்தினர்!

அந்த வாழ்த்துக்களைப் பற்றிக் கவலைப்படாமலே பொழுது விடிய ஆரம்பித்தது. மழை அறவே இல்லை. மெல்லிய பூங்காற்று வீசிக் கொண்டிருந்தது. இருவரும் மௌனமாக வெளுத்து வரும் ஆகாயத்தை நோக்கியவாறு அமர்ந்திருந்தனர்.

இருங்கோவேள்தான் பேசத் தொடங்கினான். வெகு நேரத்துக்குப் பிறகு பேச முயன்ற அவனுக்கு ஏதோ ஓர் உணர்ச்சி நெஞ்சை அழுத்தியது. அவளை உற்றுப் பார்த்தான். கண்கள் கலங்கியிருந்தன.

''ஏன் வாட்டமாயிருக்கிறாய்?'' என்று அருகில் சென்று கேட்டான்; பதில் இல்லை.

''என்னை மன்னித்து விடு!'' என்று கெஞ்சும் குரலில் கேட்டுக் கொண்டான். முத்துநகையோ அவனை அனுதாபத்துடன் நோக்கினாள்.

''மன்னிக்க மாட்டாயா?'' என்று மறுபடியும் அவள் தோளைக் குலுக்கியவாறு கேட்டான்.

''நீங்கள் ஒன்றும் குற்றம் செய்யவில்லையே; எல்லாவற்றுக்கும் நான்தானே காரணம்?'' என்றாள் அவள் தழுதழுத்த குரலில்!

''இல்லை, நானும் தான் காரணம்? நீ ஒரு பெண் என்பதை முதலிலேயே தெரிந்து கொண்டுதான் உன்னிடம் இவ்வளவு தூரம் பழகினேன்'' என்றான் இருங்கோவேள்.

''எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''நீ மண்டபத்துக் குளத்தில் குளிக்கும்போது...

- அவன் பேச்சை முடிக்கவில்லை. அவள் வெட்கத்தால் முகத்தை மூடிக் கொண்டாள்.

''அதிருக்கட்டும் - உன் உண்மையான பெயர் என்ன?''

''முத்துநகை!''

''ஆகா பொருத்தமான பெயர்! நீ எதற்காக இந்த உடையில் இப்படிக் காட்டில் திரிய வேண்டும்?''

''அதுதான் முன்பே சொன்னேன், முக்கியமான இலட்சியம் ஒன்று இருப்பதாக!''

''அது என்ன இலட்சியம் என்று என்னிடம் விவரமாகக் கூறக்கூடாதா?''

''உங்களை யாரென்று புரிந்து கொண்ட பிறகு சொன்னால் என்ன? நிச்சயம் சொல்லத்தான் போகிறேன்.''

''நான் ஒரு சாதாரண விறகுவெட்டி! அவ்வளவு தான்!''

''என்னையொன்றும் நீங்கள் ஏமாற்ற முடியாது. நீங்கள் யார் என்பதற்கு என்னிடம் ஆதாரமே இருக்கிறது!''

''ஆதாரமா?'' - திடுக்கிட்டுக் கேட்டான், இருங்கோவேள்.

''இதோ! என் விரல் வீக்கத்திறகுப் பச்சிலை கொண்டு வரப் போனீர்களே; அப்போது தவறிப்போய் இந்த மண்டபத்தில் நீங்கள் விட்டுப்போன ஓலை!'' என்று கூறி ஓர் ஓலைச் சுருளை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

அதை வியப்போடு பார்த்த இருங்கோவேள் சமாளித்துக் கொண்டு, '' இந்த ஓலைக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?'' என்று தெரியாதவனைப் போல விழித்தான்.

தான் தவறிப் போட்டுவிட்ட ஓலைச்சுருளைப் பார்த்து, தான் இன்னார் என்பதை முத்துநகை புரிந்து கொண்டு விட்டாள் என்று உணர்ந்த இருங்கோவேள், ஒன்றும் தெரியாதவனைப்போல,'' இந்த ஓலைக்கும்

எனக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டபோது, ''என்ன சம்பந்தமா? இதோ படிக்கிறேன்!'' என்று அவள் சுருளைப் பிரித்தாள்.

''அனுப்பியவர்: பெருவழுதிப் பாண்டியர்.

பெறுபவர்: பாண்டியநாட்டு ஒற்றர் வீரபாண்டி.

ஒற்றரே!

உமது ஓலை கண்டு விளக்கமறிந்தோம். நீர் குறிப்பிடும் காட்டில்தான் இருங்கோவேள் இருக்கிறான் என்பது சரியானால் அதுபற்றிய எல்லா விவரங்களையும் சேகரித்து வரவும். அவன் இருப்பிடம்.- சூழ்நிலை - அவனிடமுள்ள படைவீரர் கணக்கு - இத்தனையும் தெரிந்து கொண்டு வந்து சேரவும். வெல்க முயற்சி!

- பெருவழுதிப் பாண்டியன்''

ஓலையைப் படித்து முடித்துவிட்டு, ''இப்போது புரிகிறதா என்ன சம்பந்தமென்று?'' எனக் கேட்டாள் முத்துநகை.

இருங்கோவேள் சிரித்துக் கொண்டான்.

இருங்கோவேள், எதிரிகளை ஏமாற்றுவதற்காக வேண்டுமென்றே தயாரித்த பொய்க் கடிதம் - போலி மடல் அது என்பதை முத்துநகை எப்படி உணரமுடியும்? நன்றாக நம்பிவிட்டாள் என்பதைப் புரிந்து கொண்ட இருங்கோவேள், ''நல்லவேளை உன் கையில் கிடைத்ததே! கொடு இங்கே!'' என்று அந்த ஓலையை வாங்கிக் கொண்டான். இருங்கோவேள் அவளை ஏமாற்றியது உண்மைதான். ஆனால் அவளை எதிரியாகவே அவனால் கருதமுடியவில்லை. அவள் அழகில் அவன் விழுந்து விட்டான். அவளும் தன்னை இதயபூர்வமாக நேசிக்கிறாள் எனத் தெரிந்து மகிழ்ந்தான்.

''ம்! சொல்லு உன் இலட்சியத்தை!'' என்றான், அவளைத் தழுவியவாறு!

''நான் சோழ நாட்டைச் சேர்ந்தவள் என்பது உங்களுக்குத் தெரியுமா!''

''நீ சொன்ன பிறகே தெரிகிறது; தென்னகத்து மயில் என்று உன் முகம் எனக்கு முதல் சேதி சொல்லிற்று. தெண்டனிட்டேன் உன் அழகுக்கு!''

''இல்லை! என்னை அடிமையாக்கி விட்டீர்கள்!''

''பாண்டிய நாடும் சோழ நாடும் நட்புக் கொண்டிருக்கின்றனவே தவிர ஒன்றையொன்று அடிமைப்படுத்தவில்லையே- அது போலத்தான் நாமும்!''

இந்தக் காதல் வாசகத்திற்குப் பெறவேண்டிய பரிசை அட்டியின்றி அவன் பெற்றுக் கொண்ட பிறகு, மறுபடியும் கேட்டான்: ''உன் இலட்சியம் என்ன?'' என்று.

''உங்கள் இலட்சியம் எதுவோ, அதுவே என் இலட்சியமும்! இருங்கோவேளின் கொட்டத்தை அடக்க வேண்டும்; அவனுக்கு அனுசரணையாகச் சோழ நாட்டில் உலவுகிற துரோகிகள் சிலருக்கு நல்லறிவு புகட்ட வேண்டும்; செழியனின் உயிருக்கு ஆபத்து எதுவுமின்றி மீட்க வேண்டும்..''

இருங்கோவேள் ஒரு வெற்றுச் சிரிப்பை வெளிப்படுத்தி விட்டு, அவள் பேசுவதைக் கவனமாகக் கேட்டான்.

''செழியனை ஆபத்தின்றி மீட்பதில் நீங்கள் அக்கறை காட்டப் போகின்றீர்களா இல்லையா?'' என முத்துநகை கேட்டாள்.

''இருங்கோவேள் வீழ்ச்சியிலேதான் எல்லாம் அடங்கியிருக்கிறதே!'' என்றான் இருங்கோவேள்.

''இருந்தாலும் செழியனை ஆபத்தின்றி மீட்க வேண்டும். அதுவே என் முதல் வேலையாகக் கருதுகிறேன்.''

''முத்துநகை! செழியன் மீது உனக்கு ஏன் இவ்வளவு அக்கறை?'' என்று அவளிடம் கேட்டுவிட்டுப் பதிலை எதிர்பார்த்தான் அவன்.

''இருங்கோவேளின் தளபதியுடன் போரிட்டு வென்ற பிறகு உடம்பிலே பட்ட காயங்களுக்கு எங்கள் வீட்டில் தான் மருந்து போட்டோம். அவரைப்போன்ற நாட்டுப் பற்றுக் கொண்டவர்களைக் காப்பாற்ற வேண்டியது பொறுப்பு மிகுந்த செயலல்லவா? செழியன் மிகவும் நல்லவர். உத்தமத் தமிழர். அவரில்லாவிட்டால் அந்த படுபாவி இருங்கோவேளின் எண்ணப்படி கரிகாலரின் உயிர் போயிருக்கும்!'' என முத்துநகை பதில் கூறினாள்.

அவளது பேச்சில் இலட்சியவெறி தலைதூக்கியது. அதை இருங்கோவேள் ரசித்தான். என்றாலும் தனக்கு எதிரே தன்னைத் திட்டும்போது அதைப் பொறுத்துக் கொள்வதைச் சற்றுச் சிரமமாகவே கருதினான்.

''இந்த ஆபத்தான வேலைக்கு நீ வந்திருக்க வேண்டாம் முத்துநகை! இப்போதும் ஒன்றும் ஆகிவிடவில்லை. உன் வேலையையும் சேர்த்து நானே பார்த்துக் கொள்கிறேன்; நீ நிம்மதியாக வீட்டில் இருக்கலாம்!'' என்று கூறினான்.

''அய்யய்யோ! காலம் கனிந்து வரும்போது, காரியம் கைகூடும் போது தடுக்கப்பார்க்கிறீர்களே! நான் இருங்கோவேளின் கோட்டைக் குள்ளேயே நுழையப் போகிறேன்'' என்றாள் முத்துநகை உற்சாகத்தோடு!

''எப்படி முடியும் உன்னால்''? இது, இருங்கோவேளின் கேள்வி.

''முரட்டு இருங்கோவேளுக்கு ஒரு முட்டாள் தங்கை இருக்கிறாள்; தாமரை என்பது அவள் பெயர். அழகிதான்! கதிரவனைக் கண்டு மலர வேண்டிய அந்த தாமரை சந்திரனைக் கண்டு மலர்ந்து விட்டது, ஏமாந்து போய்!''

''புரியவில்லையே எனக்கு!''

''என் வேடத்தை நம்பி, என்னை ஆண் என்று கருதி, என்னைக் காதலிக்கத் தொடங்கிவிட்டாள்.''

''ம் அப்புறம்?''

''அப்புறமென்ன அவளிடம் திறமையாக நடித்து, அவள் உதவியினாலேயே இருங்கோவேளின் மாளிகைக்குள் நுழைவதற்குத் திட்டம் தீட்டிவிட்டேன். இன்று காலையில் அவசியம் வந்து விடுவாள்!''

''ஓகோ! நீ மிகவும் திறமைசாலிதான்; ம்...இயற்கை உனக்கு உதவி செய்கிறது! நீ ஆண் வேடம் போட்டால் நம்புவார்கள். நான் பெண் வேடம் போட்டால் யார் நம்பப் போகிறார்கள்?'' எனக் கூறி அவன் சிரித்தான். அவளும் சேர்ந்து கொண்டு சிரித்தாள். சிரிப்பினூடே இருவரும் இதழ் பரிமாறி மெய்மறந்தனர்.

''நேரமாகிறது; தாமரை வந்து விடுவாள்; நான் புறப்படுகிறேன்!'' எனக் கிளம்பினாள் முத்துநகை.

''ஜாக்கிரதை. இருங்கோவேள் மிகவும் கொடியவன். அவன் கையில் சிக்கினால் உன்னிடம் தவறாக நடந்து கொள்ளவும் தயங்க மாட்டான் படுபாவி!'' என்றான் அவன்.

''அவனா? அந்தப் பாதகனா? என் பிணத்தைக் கூட அவன் தொடுவதற்கு வாய்ப்புத் தரமாட்டேன். நீங்கள் என்னைப் பற்றிக் கவலையே கொள்ளவேண்டாம். நீங்கள் பாதுகாப்பாக நடந்து கொள்ளுங்கள் - நான் வருகிறேன்''

''மறுபடியும்?''

''இதே இடத்தில் சந்திக்கலாமா?''

''எப்போது?''

''நீங்களே சொல்லுங்கள்.''

''வரும் முழு நிலா அன்றைய தினம்!''

''கட்டாயம் வருவேன் - நீங்கள் தவறி விடாதீர்கள்.''

''தவறுவேனா? அன்று இந்த இடத்தில் இரண்டு நிலாக்களைச் சந்திக்கப்போகிறேனே!''

இருவரும் பிரிய மனமின்றிப் பிரிந்தனர். அந்த உணர்ச்சிமயமான கட்டத்தில், தன் ஆண் வேடத்தைச் சரிசெய்து கொள்ளாமலே செல்லும் முத்துநகையின் பின்னால் ஓடி, அவளுக்குத் தலைப்பாகையைக் கட்டிவிட்டு உடைகளைச் சரி பார்த்து அனுப்பி வைத்தான் இருங்கோவேள். அவளும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்று, ஒரு கல்லில் இடறி விழுந்து, பிறகு அருவிக் கரைப்பக்கம் நடையை முடுக்கினாள். இரவெல்லாம் மழையில் நனைந்த குதிரை சோர்ந்து போய் நின்றது. அருகில் சென்று அதைத் தட்டிக் கொடுத்தாள். அவள் முதுகில் யாரோ தட்டினார்கள்; திரும்பினாள்; தாமரை சிரித்துக் கொண்டு நின்றாள்!

முத்துநகை, பயிற்சியின் மூலம் மிகவும் சிரமப்பட்டுக் கற்றுக் கொண்ட ஆண் குரலைப் பயன்படுத்தினாள்; ''வா, தாமரை! உனக்காக எவ்வளவு நேரம் காத்திருக்கிறேன் தெரியுமா?'' என்றாள்.

தாமரை அதிசயித்து, ''என்ன அதற்குள் பேசி விட்டீர்கள்?'' என்றாள்.

''இலட்சியம் பாதிக்கு மேல் நிறைவேறிவிட்டது. இன்னும் கொஞ்சம் தான் பாக்கி!'' என்றாள் முத்துநகை.

''நீங்கள் ஊமை என்றுதான் அண்ணனிடம் கூறியிருக்கிறேன். அதனால் அங்கு வந்து ஊமையாகவே நடிக்க வேண்டும். அதோடு மருத்துவரைப் போலவும் நடந்து கொள்ள வேண்டும்!''

''அய்யோ! எனக்கு மருத்துவம் தெரியாதே-என்னிடம் மருந்து ஒன்றும் கிடையாதே!''

''என் நோய் தீர்க்கும் மருந்து தங்களிடம்தான் இருக்கிறது. பரவாயில்லை; ஆபத்தில்லாப் பச்சிலை எதையாவது அரைத்து அண்ணிக்கு மருத்துவம் செய்வதுபோல் நடியுங்கள் போதும்!''

''தாமரை! என்னைப் போலவே நீயும் நடிக்க வேண்டும்; நாமிருவரும் காதலிக்கிறோம் என்பது யாருக்கும் ஜாடையாகக் கூடத் தெரியக்கூடாது;

நெருங்கிப் பழகவே கூடாது! ஒருவரையொருவர் அடிக்கடி பார்த்து மகிழ வேண்டும். அவ்வளவுதான். காலமும் நேரமும் விரைவில் நமக்குச் சாதகமாகவே அமைந்துவிடும். அதன் பிறகு நம் காதலை நிறைவேற்றிக் கொள்வோம். என்ன சரிதானா?'' என்று அவள் தலையை நிமிர்த்தினாள் முத்துநகை.

தாமரை, அவளைப் பார்த்து ''இந்தக் கொடுமையான நிபந்தனைகள் எல்லாம் இப்போதே எதற்காக? என் இஷ்டத்துக்கு விரோதமாக என் அண்ணன் நடக்க மாட்டார். பயப்படாமல் புறப்படுங்கள்'' என்றாள் அவள் கைகளைப் பிடித்திழுத்தவாறு.

பின்னர் அவளும் தாமரையும், தனித்தனிக் குதிரைகளில் ஏறிக் கொண்டார்கள். தாமரையைத் தொடர்ந்து முத்துநகை தன் குதிரையை நடத்திச் சென்றாள்.

அவர்கள் இருவரும் போகிற காட்சியைத் தொலைவில் உள்ள புதர் மறைவிலேயிருந்து இருங்கோவேள் கவனித்துக் கொண்டிருந்து விட்டுக் குதிரைகளின் குளம்படிச் சத்தம் மறைந்ததும் தன்னுடைய குதிரையிலேறிப் புறப்பட்டான்.

காட்டின் நடுவே கட்டப்பட்டிருந்த மரமாளிகையின் அமைப்பும், மாளிகையை ஒட்டினாற்போல் காணப்பட்ட வீரர்களின் கோட்டமும் முத்துநகைக்கு இருங்கோவேளின் மீதிருந்த ஆத்திரத்தை அதிகமாக்கின. இத்துணை ஏற்பாடுகளோடு பகை மன்னன் தன் சூழ்ச்சிக் கோட்டையை உருவாக்கியிருக்கிறானே என்ற திகைப்பும் அவளைச் சற்று நடுங்கச் செய்தது. எதிரியின் இருப்பிடத்திற்கே வந்து விட்டோம். யாரும் கண்டுபிடிக்க இயலாத பகைவனின் பாசறையைக் கண்டுபிடித்து விட்டோம் என்ற திருப்தியும் அவள் முகத்தில் மலர்ந்தது. அதோடு எந்தச் சமயத்தில் தன் வேடம் கலைந்துவிடுமோ என்ற சந்தேகமும், அப்படிக் கலைந்து விட்டால் அதனால் எற்படும் விளைவு எவ்வளவு கொடுமையாக இருக்கும் என்ற பயமும் அவளது மலர்ந்த முகத்தை உடனே கருகிடச் செய்தன.

பாழ் மண்டபத்திலே மழையும் காற்றும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் கடமையைச் செய்த நேரத்தில் அவளது வேடம் அவனுக்கு எதிரே கலைந்த போது அந்த நெருக்கடியிலும் ஒரு இன்பங் கண்டாள். சந்தர்ப்பத்தை வாழ்த்தினாள். அப்படியொரு சந்தர்ப்பம் இந்த மர மாளிகை வட்டாரத்தில் ஏற்பட்டு விட்டால்? அய்யோ? அதை நினைக் கவே அவளால் முடியவில்லை. இருங்கோவேளைப் பற்றி அவ்வளவு கொடூரமாக அவள் கணக்கிட்டு வைத்திருந்தாள். கரிகால் மன்னரைக் கொல்லுவதற்குச் சதித்திட்டம் வகுத்த ஒருவன் மன்னனுக்குரிய

மதிப்புடையவன் அல்லன் என்பது அவள் முடிவு; தமிழ்ப் பண்பு கொண்டவனாக இருக்க முடியாது என்பதும் அவள் கருத்து. கரிகால் பெருவளத்தானையே அவள் தெய்வமாகக் கருதிவிட்டதால் அந்தத் தெய்வத்துக்கு எதிரிடையான யாரையும் அவள் பழி வாங்கிக் கொள்ளத் தயங்க மாட்டாள். தன் திட்டத்துக்குத் துணையாக வீரபாண்டியின் சந்திப்பு அமைந்ததையும் அந்தச் சந்திப்பு தன் வாழ்வில் புதிய சுவை எற்றிவிட்டதையும் நாட்டுத் தொண்டுக்காகத் தனக்குக் கிடைத்தபரிசு என்றே அவள் தீர்மானித்து அகமகிழ்வு கொண்டாள்.

மாளிகையின் முகப்பு நெருங்க நெருங்கத் தாமரை முத்துநகையைப் பார்த்துப் பார்த்துப் புன்னகை பூத்தாள். குதிரைகள் இரண்டும் அருகருகே வந்து கொண்டிருந்தன.

''இனிமேல் நமது கண்கள்தான் பேசிக் கொள்ள வேண்டும்!'' என்றாள் தாமரை மெதுவாக!

''ஆமாம்! அதைத்தான் நான் அப்போதே சொன்னேன்'' என்றாள் முத்துநகை.

''இந்த மாளிகை வெட்ட வெளியல்ல: இங்கே நாம் சந்திக்கக் கூடிய ரகசிய இடங்களும் இருக்கின்றன!'' என்றாள் தாமரை.

இந்த வார்த்தைகள் முத்துநகையை ஒரு குலுக்குக் குலுக்கின!

''சரி சரி'' என்று பேச்சை நிறுத்தச் சாடை காட்டினாள் முத்துநகை.

வாயிற்புறத்தில் குதிரைகளைக் கட்டிவிட்டுத் தாமரை முத்துநகையை அழைத்துக் கொண்டு நேரே அண்ணியிருக்கும் இடத்திற்குச் சென்றாள். அரசி பெருந்தேவி தன் படுக்கையில் இருந்தவாறே ஊமை மருத்துவனை வரவேற்று உட்காரச் சொன்னாள்.

''இவர்தான் என் அண்ணி, இந்த மாளிகையில் வாடும் இவர், வேளிர்குடியின் விளக்கு. இந்த விளக்கின் ஒளியை மங்கிவிடாமல் காப்பாற்ற வேண்டியதுதான் வைத்தியரான உமது பொறுப்பு!'' என்றாள் தாமரை, முத்துநகையைப் பார்த்து.

முத்துநகை தலையை ஆட்டி ஆமோதித்தவாறு, அரசியின் கையைப் பிடித்து நாடி பார்க்க ஆரம்பித்தாள்.

''ஏம்மா தாமரை! ஊமையென்றாய்; காது நன்றாகக் கேட்கிறதே!'' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் பெருந்தேவி.

''இவர் பிறவி ஊமையல்ல அண்ணி! இடையிலே ஏற்பட்டது!'' எனச் சமாளித்தாள் தாமரை. நாடி பார்த்து முடிந்த பிறகு ஆகாயத்தைப் பார்த்து

ஏதோ சிந்தனையில் இருந்துவிட்டு முத்துநகை இருக்கையை விட்டு எழுந்தாள்.

''என்ன வேண்டும் வைத்தியரே!'' என்று கேட்டாள் தாமரை.

ஒன்றும் தேவையில்லை என்பது போல் சைகை செய்து விட்டு முத்துநகை, அங்குமிங்கும் உலவிக்கொண்டேயிருந்தாள், தலையைக் கீழே குனிந்தவாறு.

''பார்த்தீர்களா அண்ணி! எவ்வளவு தீவிரமாகச் சிந்திக்கிறார்!'' என்று கேட்டு அண்ணியின் புன்சிரிப்பைப் பதிலாக ப் பெற்று ஆறுதலடைந்தாள் தாமரை.

உலவிக் கொண்டிருந்த முத்துநகை ஓர் ஓலையை எடுத்து ஏதேதோ எழுதினாள். அதை அரசியிடம் கொடுத்தாள். அரசி பெருந்தேவி அதை வாங்கிப் படித்துப் பார்த்து விட்டுத் தாமரையிடம் தந்தாள்; ''இந்த நோயை நிச்சயம் குணப்படுத்தி விடலாம். இதற்குச் சில முக்கியமான மூலிகைகள் வேண்டும். அதற்கிடையில் அரசரை நான் சந்தித்தால் பரவாயில்லை!'' என்று அந்த ஓலையில் முத்துநகை எழுதியிருந்தாள்.

பெருந்தேவிக்கு இருங்கோவேள் மன்னன் முதலில் கூறிய மொழிகள் நினைவுக்கு வந்தன. ''அரசர் மாளிகையில் இல்லை; எங்கேயோ போய்விட்டார் என்று மருத்துவனிடம் கூற வேண்டும்'' என்று அவன் குறிப்பிட்டிருந்தான். அதனால் அரசி முத்துநகையிடம், ''அரசரைப் பார்ப்பது என்பது இயலாத காரியம்; அவர் இங்கில்லை; எங்கே போனார் என்றும் தெரியாது; எப்போது வருவார் என்றும் சொல்ல முடியாது!'' என்று உடனடியாகப் பதில் கூறி விட்டாள்.

முத்துநகை தாமரையின் முகத்தைப் பார்த்தாள். ஏனெனில் அரசன் அங்கிருப்பதாகத்தான் அவள் கூறி இருந்தாள். முத்துநகையின் குழப்பத்தைக் கண்ட தாமரை, கண் அசைத்து, ''அரசி பொய் சொல்லுகிறாள்'' என்பதை ஜாடையாக உணர்த்தினாள். முத்துநகைக்கும் ஒரு புதிய உற்சாகம் பிறந்தது. பகைவர் வீட்டுக்குள்ளேயே தனக்கு ஆதரவாக ஒரு கருவி கிடைத்திருக்கிறதே என்ற மகிழ்ச்சி எல்லை கடந்தது அவளுக்கு.

''மருத்துவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடம்மா, போ!'' என்று அரசி தாமரையிடம் கூறினாள். தாமரை முத்துநகையை அழைத்துக் கொண்டு வேறு பக்கம் போனாள்; அங்கும் பெண்களே நிறைந்திருந்தனர். அவர்கள் எல்லாரும் முத்துநகையை உற்று உற்றுப் பார்த்து, தாமரையையும் ஓரக் கண்ணால் பார்த்துத் தங்களுக்குள் ஏதேதோ கருத்துகளைப் பரிமாறிக் கொண்டனர்.

அருமையான கொய்யாப் பழங்களை ஓர் அழகான தட்டில் எடுத்து வந்து தாமரை, முத்துநகைக்கு எதிரே வைத்துச் சாப்பிடுமாறு வற்புறுத்தினாள். அவளும் அதைச் சாப்பிட்டு முடித்து விட்டுத் தூக்கம் வருவதுபோல் பாவனை காட்டினாள். அங்கு கிடந்த நீண்ட மரப்பலகையொன்றின் மீது உறையில்லாத தலையணைகளை எடுத்துப் போட்டு, அதிலே கண்ணயர்ந்திடுமாறு கூறினாள் தாமரை. அரசாங்க மருத்துவனாகச் சென்றிருக்கும் தனக்குச் செய்யப்படும் உபசாரத்தைக் கண்டு முத்துநகை வியப்படையவில்லை. இளவரசியின் காதலனாகச் சென்ற தனக்குத் தரப்பட்ட படுக்கையின் பெருமையைக் குறித்தும் அவள் அதிர்ச்சியடையவில்லை.

''அரண்மனை விருந்தாளிக்கு மரப் பலகையும் உறையில்லாத தலையணையும்தானா?'' என்று முத்துநகை முகம் சுளிக்கவில்லை. காரணம், பட்டத்து அரசி பெருந்தேவி படுத்திருக்கும் கட்டிலே சொர சொரப்பான மரத்தால் அமைக்கப்பட்டிருந்ததுதான். அக்கட்டிலுக்குக் கடைசல் கால்கள் ஒன்றும் அமைக்கப்படவில்லை. யானைத் தந்தங்கள் ஏதும் அதில் பொருத்தப்படவில்லை. இலவம் பஞ்சு மஞ்சமொன்றும் அங்கேயில்லை. கரடுமுரடான மரப்பலகைகளைத் தான் அடுக்கி, அதிலே அரசி படுத்திருந்தாள். படுத்தபடியே சிந்தனையை அலையவிட்ட முத்துநகைக்கு இருங்கோவேள் குடும்பத்தார் மீது சற்று இரக்கம் ஏற்பட்டது.

வேளிர் குடும்பத்து மன்னர்கள் அத்தனை பேரைக் காட்டிலும் அதிக ஆடம்பரமாக வாழ்ந்தவன் இருங்கோவேள்தான் என்று அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். அவனது சிம்மாசனத்தின் இருமருங்கிலும் நிறுத்தப்பட்டிருக்கும் சிங்கங்களின் திறந்த வாயிலே காணப்படும் பற்கள் அத்தனையும் வைரமாம்! சிங்கமே தங்கமாம்!

இன்றைய தினம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற நிலையை எண்ணி முத்துநகையின் உள்ளம் உருகியது.

அப்பால் சென்றிருந்த தாமரை அருகே வந்து, ''வேறு ஏதாவது தேவையா?'' என்று வினவினாள். முத்துநகை கண்களை மூடிக் கொண்டு மூச்சை பலமாக இழுத்துத் தூங்குவது போல நடிக்கவே, ''பாவம், அயர்ந்த தூக்கம்!'' என்று முனகிக் கொண்டே அவ்விடத்தைவிட்டு நகர்ந்தாள் தாமரை.

தாமரைக்கும் ஒரே மனப்போராட்டம். 'தனக்கும் முத்துவுக்கும் ஏற்பட்டிருக்கிற காதலை அண்ணனிடம் எப்படி வெளியிடுவது?: வெளியிட்டால் ஏதாவது விபரீதங்கள் ஏற்பட்டு விட்டால் என்ன

செய்வது? அண்ணனுக்கு ஏற்பட்டிருக்கும் மனக் குழப்பங்களில் தானும் ஒரு புயலைக் கிளப்பிவிட்டால் அவரால் தாங்கிக் கொள்ள இயலுமா?''

மெதுவாக நடந்தவாறே, அண்ணியின் படுக்கையின் பக்கம் சென்றாள். அரசிக்குச் சற்று இருமல் அதிகமாயிற்று. பணிப்பெண்கள் அரிசியிடம் விரைந்தோடி சிகிச்சைகளில் ஈடுபட்டனர். தாமரையும் அண்ணியைத் தன் மார்பின் மீது சாய்த்துக் கொண்டு இருமல் அதிகத் தொல்லை கொடுக்காமல் தடவிக் கொடுத்தாள்.

அரசியின் இருப்பிடத்தையொட்டி வேறோர் இடத்தில் படுத்திருந்த முத்துநகையின் காதில் இருமல் ஒலி விழுந்தாலும் அவள் அதற்காக எழுந்து வராமல் தூங்குவது போலவே படுத்திருந்தாள்.

நீண்ட நேரம் அரசியை இருமல் வாட்டி வதைத்துப் பிறகு சிறிது அடங்கிற்று.

''சாவும் என்னைக் கொண்டு போகத் தாமதிக்கிறது!'' என்று கண்கலங்கக் கூறினாள் அரசி.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் அண்ணி! நீங்கள் சாகமாட்டீர்கள்; சாகக்கூடாது; சாக விடமாட்டோம்'' என்று குரல் தழுதழுக்கக் கூறினாள் தாமரை.

இந்தச் சோக நிகழ்ச்சியைச் செவி கொடுத்துக் கவனித்தவாறே தன் கண்களில் அரும்பிய கண்ணீரை துடைத்துக் கொண்டாள் முத்துநகை. பெண்கள் அழுவதைப் பெண்களால் பொறுத்துக் கொள்ள முடியாது தான். அதற்காகப் பகைவன் வீட்டுப் பெண்களின் அழுகையைக் கண்டு மனம் தளரலாமா? முத்துநகையின் உள்ளத்தைக் கெட்டிப்படுத்த - உறுதியாக்கிட எழுந்த எண்ணங்களுக்கும் - இரக்க சுபாவத்திற்கும் பெரும் போராட்டமே நடைபெற்றது. ஒரு கணம் கடமையுணர்வு ஜெயிக்கும். மறுகணம் இரக்க இதயம் ஜெயிக்கும். இப்படித் திண்டாடிக் கொண்டு படுத்திருந்தாள் அவள். மீண்டும் அரசி கடுமையாக இருமத் தொடங்கினாள். மூச்சு நின்று விடுமோ என்கின்ற அளவுக்கு இருமல் பலமாக இருந்தது.

முத்துநகை படுக்கையை விட்டெழுந்து அரசியின் அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அவள் பார்த்ததை யாரும் கவனிக்கவில்லை. அரசி தாங்க முடியாமல் துடித்துத் துவள்வதையும், அவளோடு தாமரையும் துவண்டு துவண்டு விழுவதையும் கண்டு குடும்பப் பாசத்தின் உயர்வை எண்ணிக் கலங்கினாள்.

''அய்யோ! இந்தக் குடும்பத்துக்கு இப்படியொரு கஷ்டமா? இவர்கள் அரண்மனையிலே இருந்தால் இந்நேரம் ஆயிரம் வைத்தியர்கள் வந்திருப்பார்களே !'' என்று வருந்தினாள்.

அரசி, கஷ்டத்திலேயிருந்து சிறிது விடுபட்டுச் சோர்ந்து போய்த் தாமரையின் நெஞ்சில் சாய்ந்து 'படுத்துக் கொண்டாள். தாமரை தன் மெல்லிய கரங்களால்அரசியின் தோள்பட்டையில் தட்டிக் கொடுத்த வாறு கண்கலங்கி உட்கார்ந்திருந்தாள். அப்போது ஒரு வீரன் உள்ளே நுழைந்து வணங்கி நின்றான்.

''என்ன செய்தி?'' என்று தாமரை ஆவலோடு கேட்டாள்.

''செழியனை அடைத்திருக்கிறோமே; அந்த இடத்தை ஒரு முறை திறந்து பார்த்தால் நல்லது இளவரசி!'' என்றான் வீரன் பரபரப்புடன்.

''ஏன், எதற்காக?'' என்றாள் தாமரை. அதற்குள் அரசியும் மெதுவாகக் கண்விழித்து, வீரன் பேசுவதைக் கவனித்தாள்.

''அந்தச் சிறைக்குள்ளேயிருந்து சத்தமே வரவில்லை. ஒருவேளை ஆள் செத்திருப்பானோ என்று சந்தேகமாயிருக்கிறது!'' என்றான் வீரன்.

''போனால் போகட்டுமே!'' என்றாள் அரசி அலட்சியமாக.

''இல்லை மகாராணி! அவன் சாகாமல் இருப்பது தானே நமக்கு நல்லது. அவனை வைத்துத்தானே இழந்த நாடுகளைப் பெற வேண்டுமென்று அரசர் திட்டமிட்டிருக்கிறார்!'' என்று வீரன் பதில் கூறினான்.

இதற்குள், முத்துநகைக்கு உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டி விட்டது.

''இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?'' - இது அரசியின் கேள்வி.

''ஒரு முறை அந்தக் கூண்டைத் திறந்து பார்க்க அனுமதி தேவை. அத்தோடு கூண்டுக்குரிய திறவு கோலும் தங்களிடம் இருந்தால்...'' வீரன் இழுத்தாற் போல் பேசினான்.

''அரசர் இல்லாத நேரத்தில் கூண்டைத் திறப்பதென்றால்...'' அரசியும் சந்தேகத்துடன் பதில் கூறினாள்.

''நானே நேரில்போய்த் திறந்து பார்த்துவிட்டு வருகிறேன் அண்ணி!'' என்று தாமரை கூறவே, அரசி அதற்குச் சம்மதித்து, தன் தலையணைக்குக் கீழேயிருந்த திறவு கோலை எடுத்துத் தாமரையிடம் கொடுத்து, ''ஜாக்கிரதை!'' என்று எச்சரித்து அனுப்பி வைத்தாள்.

தாமரை போவதையே பார்த்துக் கொண்டிருந்த முத்துநகை, தானும் எப்படியாவது அவளுடன் சென்று செழியனின் நிலையை அறிய வேண்டுமென்ற ஆவலுடன் சுற்றுமுற்றும் பார்த்தாள். எந்தப் பக்கத்திலும்

வழியில்லை. அரசி படுத்திருக்குமிடத்தைக் கடந்துதான் செல்ல வேண்டும். என்ன ஆனாலும் ஆகட்டுமென்று அந்த இடத்தைக் கடந்து தாமரையைப் பின் தொடர்ந்தாள் முத்துநகை.

அதைக் கண்ட அரசி, ''நில்!! நில்!'' என்று முத்துநகையைத் தடுத்து விட்டாள்.

முத்துநகை எதுவும் புரியாமல் விழித்தாள்.

செழியன் அடைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குத் தாமரை விரைந்தாள். கதவைத் தட்டிப் பார்த்தாள். உள்ளிருந்து எந்தப் பதிலும் இல்லை. வீரர்களை எச்சரிக்கையாக இருக்கச் சொல்லிவிட்டுக் கதவைத் திறந்தாள்; உள்ளே ஒரே இருட்டு, அது என்ன அரண்மனைச் சிறைச்சாலையா? அல்லவே. இங்கு அரசன் வாழ்கிற இடமே சிறைச்சாலை போலிருக்கிறது. சிறைச்சாலை எப்படியிருக்கும்!

ஒரு தீப்பந்தம் கொண்டுவரச் சொல்லித் தாமரை அதை எடுத்துக் கொண்டு அடிமேல் அடிவைத்து, சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு உள்ளே சென்றாள். பூமியைக் குடைந்து அமைக்கப்பட்ட அந்தக் கொடிய சிறைச்சாலை சேறும் சகதியுமாக இருந்தது. குகை போன்ற அந்த அமைப்பில் சிறிது தூரம் நடந்து சென்றால்தான் கைதி இருக்கும் இடத்தைக் காணலாம். அந்த இடம் இன்னும் எவ்வளவு மோசமாக இருக்குமோ? அவள் காலில் ஏதோ சரசரவென்று ஓடிற்று. தீப்பந்தத்தைக் கீழே பிடித்துப் பார்த்தாள். பெருச்சாளியொன்று கதவுப்பக்கம் பாய்ந்தது. அதற்கு மேல் அவளுக்கு நடக்கவே பயமாக இருந்தது.

தன் அண்ணன் இருங்கோவேளின் மீது அவளுக்குக் கோபமும் ஏற்பட்டது. என்ன இருந்தாலும் எதிரிகளை இவ்வளவு கொடூரமாக நடத்தக்கூடாது என்று தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டாள். எருமை மாடுகளைக் கூடப் போட்டுப் பூட்டி வைக்கத் தகுதியற்ற இடத்தில், ஒரு நல்ல வீரனைப் போட்டு அடைத்து வைப்பது என்பது சிறிதும் மனிதாபிமானமற்ற செயல் என்று அவள் எண்ணிக் குமுறினாள்.

சற்று நின்று தன்னை அமைதிப்படுத்திக் கொண்டு வெளிச்சத்தை எதிரே பிடித்துப் பார்த்தாள். செழியன் இருக்கிறான். எங்கும் ஓடிவிடவில்லை. அந்த ஆறுதல் ஏற்பட்டது அவளுக்கு! அவன் உயிரோடு இருக்கிறானா? உற்றுப்பார்த்தாள். மூச்சு இருக்கிறது. ஆனால் அவன் பிரக்ஞையற்றுக் கிடக்கிறான். தொட்டுப் பார்த்தாள், அவன் நெற்றியும் கால்களும் சில்லிட்டுப் போய்விடவில்லை. சூடு இருக்கிறது. தன் பின்னால் வந்த வீரர்களைக் கூப்பிட்டு, ''ஓடிப்போய்ச் சீக்கிரம் தண்ணீரும் கஞ்சியும் கொண்டு வாருங்கள்'' என்று கட்டளையிட்டாள்.

அவனருகே அமர்ந்து அவன் முகத்தை மெதுவாக அசைத்துப் பார்த்தாள். சாகவில்லை என்பது தவிர அவன் படுத்திருந்த காட்சி பிணம் ஒன்று கிடத்தப்பட்டது போலவே இருந்தது. அவன் பெற்றோர்கள் இந்தக் கொடுமையைப் பார்த்தால் என்ன பாடுபடுவார்கள் என்று நினைத்துக் கண்ணீர் உகுத்துவிட்டாள்.

வீரன், தண்ணீரும், கஞ்சியும் கொண்டு வந்தான். தண்ணீரை அவன் முகத்தில் தெளித்துத் தலையைத் தூக்கி மெதுவாக அவனைச் சுவரோரத்தில் சாய்த்துப் படுக்க வைத்தாள். கஞ்சியை எடுத்து அவன் வாயருகே நீட்டினாள். அவனால் வாயைக்கூடத் திறக்க முடியவில்லை. கஞ்சிக் கிண்ணத்தை வாயிலே திணித்து, ''கொஞ்சம் குடியுங்கள்! கொஞ்சம், கொஞ்சம்!'' என்று பிடிவாதப்படுத்தி குடிக்க வைத்தாள். தன் நினைவு இல்லாமலே செழியன் அதைக் குடித்தான். கஞ்சி அவன் வயிற்றுக்குள் போய்விழும் சத்தத்தை அவளால் கேட்க முடிந்தது.

நீண்ட நேரத்திற்குப் பிறகு செழியன் கண்களைத் திறந்து பார்த்தான். இருண்ட குகையில் ஒளியைக் கண்டதும் அவனுக்குக் கண்கள் பூத்துவிட்டன; அவனையுமறியாமல் ''ஒளி! ஒளி! ஒளி!'' என்று கத்தினான். பரக்கப் பரக்க விழித்தான். கண்களை அகலத் திறந்து சுற்றுமுற்றும் பார்த்தான். தான் காண்பது என்ன கனவா?- கேள்வி குதித்தது. கண்களை கசக்கிவிட்டுக்கொண்டு மீண்டும் நோக்கினான். அவன் எங்கும் போய்விடவில்லை. இங்குதான் இருக்கிறான். பகைவர் களின் சக்தி நிறைந்த சிறைக் கோட்டத்தில்தான் இருக்கிறான்.அதில் ஒன்றும் குழப்பமில்லை. சந்தேகமில்லை. நிச்சயமானஉண்மைதான்! தெளிவான நிலைமைதான்! பெருமூச்சு விட்டவாறு தாமரையைப் பார்த்தான். அவனது பார்வையில் எத்தனையோ பொருள்கள் மறைந்து கிடந்தன. அவளுக்கு விளங்கியதெல்லாம் ஒரே அர்த்தம்தான்; 'இப்படிச் சித்திரவதை செய்கிறீர்களே; செய்யலாமா?'' என்று அவளைப் பார்த்து கேட்பதைப் போலிருந்தது.

''எப்படியிருக்கிறது இப்போது?'' என்று இரக்கம் தோய்ந்த குரலில் தாமரை கேட்டாள்.

''மிகவும் சுகமாக இருக்கிறது. ஆகா! எவ்வளவு குளிர்ச்சியான சிறைச்சாலை! சந்தனக்குழம்பை ஊற்றியது போல் தரை; மந்தமாருதம் வீசுவதற்கேற்றவாறு பலகணிகள்; மூக்கைத் துளைக்கும் மல்லிகை மணம்; எனக்கு இங்கென்ன குறை? நரகலோகம் இருப்பதாகக் கதை எழுதினானே, அவன்கூட இப்படிப்பட்ட இடத்தை தன் கற்பனை வளத்தால் படைத்திட முடியாது!'' என்று ஏகடியமாகப் பதில் கூறினான் செழியன்.

தன் அண்ணனின் பெருமையை இழிவுபடுத்துவது போன்ற வார்த்தைகளைத் தாமரையால் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. ஆனாலும் சோர்ந்து போய்க் கிடப்பவனிடம் மேலும் மனம் புண்படும் படியாகப் பதில் கூறுவது கூடாது என்று பேசாதிருந்து விட்டாள்.

செழியனுக்கோ அவளிடம் இன்னும் பேச வேண்டும் என்பது போன்ற உணர்ச்சி. ''உன்னோடு சிறிது நேரம் நான் தனியாகப் பேச வேண்டும்! அனுமதி கிடைக்குமா?'' என்று கொஞ்சும் தோரணையில் கேட்டான்.

முதலில் ஒரு தடவை அவனிடம் பேச்சுக் கொடுக்காமலே சமாளித்துக் கொண்டு போயிருக்கிறாள் அவள். ஆனாலும் இப்போது செழியனின் வேண்டுகோளை வெளிப்படையாக அவளால் புறக்கணிக்க முடியவில்லை.

செழியனை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டுத் தாமரை, வீரர்களைச் சைகை செய்து வாசலிலே போய் நிற்கச் சொன்னாள். அவர்களும் தீப்பந்தத்தை அங்கேயே சேற்றில் செருகி நிற்க வைத்துவிட்டு, வாயிற்பக்கம்போய் எச்சரிக்கையுடன் காவல் நின்று கொண்டார்கள்.

''ம்! என்ன பேச வேண்டும்? சீக்கிரம் பேசுங்கள்!'' என்றாள் தாமரை.

''நான் மாத்திரம் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்க மாட்டேன். நீயும் என் கேள்விகளுக்குச் சில விளக்கங்கள் தரவேண்டும்.'' என்றான் செழியன்.

''மிக நன்றாயிருக்கிறதே! எதிரி நாட்டு வீரருக்கு எங்களைப் பற்றிய விளக்கங்களைத் தந்து நாங்கள் ஏமாந்து போக வேண்டுமோ?''

''அப்படிப்பட்ட செய்திகள் எனக்கொன்றும் தேவையில்லை. அது போன்ற உண்மைகள் எனக்குக் கிடைத்தாலும் எப்படி இங்கிருந்து வெளியே செல்ல முடியும்! நீங்கள்தான் என் பிணத்தைக்கூட வெளியே போடமாட்டீர்களே! ஒரு வேளை என் பிணத்தை வெளியே போட்டு, நாய், நரி, கழுகு ஏதாவது என் உடலைக் கீறி, இதயத்தை எடுத்துக் கொண்டு போய்ப் பாண்டிய மண்டலத்திலோ சோழமண்டலத்திலோ போட்டுவிட்டால் என் இதயம் பாண்டிய-சோழ மண்டலங்களுக்குச் சொந்தம் என்ற உண்மை நிலை பெற்று விட்டால் என்ன செய்வது? தவறிப் போய் ஒரு காக்கை என் நாக்கைக் கொண்டு போய்ச் சோழர் எதிரில், பாண்டியர் எதிரில் போட்டு, உடனே என் நாக்கு, புராணத்தில் வரும் நாக்குப் போலப் பேச ஆரம்பித்து, உங்களைப் பற்றிய உண்மைகளைச் சொன்னாலும் சொல்லிவிடக்கூடும் இல்லையா?

அதனால் என் சவத்தையும் இங்கேதான் எரித்துப் பொசுக்குவீர்கள்; அதற்குள் சில உண்மைகளைத் தெரிந்து கொண்டு தற்காலிகமாக மகிழ்வு கொள்ளலாம் என்று எண்ணுகிறேன். இந்தச் சிறு மகிழ்ச்சியையாவது நான் அடைவதில் தடையொன்றும் இல்லையே?''

அவன் பேச்சைக் கேட்கக்கேட்கத் தாமரையின் உள்ளம் உருக ஆரம்பித்தது. சாவைப் பற்றிய ஒரு நிச்சயத்துடன் இருக்கும் அவன் முகத்தில் அச்சத்தின் சாயல் அணுவளவும் தென்படாத ஓர் ஒளி வீசிக் கொண்டிருப்பதைக் கண்டு அவள் வியந்தாள்.

''நீங்கள் என்னிடம் எதைப் பற்றிக் கேட்க வேண்டுமென்று விரும்புகிறீர்கள்?'' என்று அன்பு குழைந்த தொனியில் கேட்டாள்.

''என்னைப்பற்றி ஒரு கதை சொல்கிறேன். கேள் முதலில்'' என்று ஆரம்பித்தான். ''ஒரு நாள் என் மன்னவர் பாண்டியன் பெருவழுதி என்னையழைத்து ஓர் அழகிய பெண்ணின் படத்தைக் காட்டி, 'இவள்தான் உனக்கு மனைவியாக வரப்போகிறவள்' என்று கூறினார். படத்தைப் பார்த்த நான் எந்த மறுப்பும் கூறவில்லை. என் சம்மதத்தைப் புரிந்து கொண்டார். பிறகு ஏற்பட்ட அரசியல் சூழ்நிலைகளால் திருமணம் நடைபெறாமல் போய்விட்டது. அந்தப் படத்தில் நான் கண்ட அழகியை இதுநாள் வரையில் தேடிக் கொண்டேயிருந்தேன்; கிடைக்கவில்லை.''

''அதற்கென்ன? இந்தக் கதை கேட்கவா என்னை உட்கார வைத்தீர்கள்?''

''கொஞ்சம் பொறு! நான் தேடிக் கொண்டிருந்த சமயத்தில்தான் சோழ -பாண்டியர் நட்பு ஒப்பந்தம் நடைபெற்றது. அந்த விழாவின் போது ஏற்பட்ட நிகழ்ச்சியால் எனக்கு இந்த முடிவு ஏற்பட்டது.''

''அதெல்லாம் தான் தெரியுமே, அதற்கென்ன?''

''நான் வாழ வேண்டும் - வளமாக வாழவேண்டும்- இன்பமாக வாழ வேண்டும் என்று நினைத்து எப்போது திருமணம் வரும் என்றுஏங்கிக் கிடந்த சமயம் அந்தச் சித்திரத்துப்பாவை என் கண்ணில் படவில்லை. அவளோடு காதல் மொழி பேசி இல்லறக் களி நடனம் புரிய வேண்டுமென்று நான் ஆயிரமாயிரம் மனக்கோட்டைகளைக் கட்டியலைந்தபோது, அந்த பேசும் புறா என் விழி வலையில் விழவில்லை.

என்னுயிரே - பொன் விளக்கே - மண்ணுலகில் இல்லாத பேரழகே - மாற்றுக் குறையாத தங்கமே! என்றெல்லாம் அவளைப் புகழ்ந்து பாடிப் பாடி எழுதி, அந்த ஓலைச்சுவடிகளை அடுக்கி அடுக்கி அவைகளைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு, 'இத்தனையும் என் காதலியைப்

பற்றிய காவியம்' என்று கூத்தாடிக் குடும்பம் நடத்த நான் கனவு கண்டபோது அவளை நான் காண முடியவில்லை. சாவு வா! வா! என்று கை காட்டி என்னை அழைக்கும் போது சாவூருக்குப் போகும் வழியில் என் சந்தனச் சிலையைக் காண்கிறேன். கண்ணீர் வடிக்கிறேன்!''

''அவளைக் கண்டீர்களா? எங்கே?.. யார் அவள்....!''

''ஆமாம் கண்டேன். அன்றலர்ந்த செந்தாமரை முகம். ஆணிப்பொன் மேனி. அழகெல்லாம் ஒருசேர வடித்தெடுத்த வண்ணச்சிலை. மீன் என்பார் கண்ணை. இல்லை; தேன் கொள்ளும் வண்டு படுத்திருக்கும் அல்லி மலர் என்பேன்; இதழ் என்பார் அதரத்தை இல்லை; திறந்திருக்கும் குங்குமச் சிமிழ் என்பேன்! அந்த ஆரணங்கைக் கண்டு விட்டேன்- எழிலோவியத்தைக் கண்டு விட்டேன்!''

''எங்கே? யாரை?'' தாமரை கோபமாகக் கேட்டாள்.

''இங்கேதான்! நீதான்! நீயேதான் நான் தேடியலைந்த நீலோற்பலம்! நித்திலம்! நிலவு!''

தாமரைக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அப்படியே சிலையாக மாறிப் போனாள். அவனுக்கு என்ன பதில் கூறுவதென்று அவளுக்குத் தெரியவில்லை. அவன் மனம் புண்படும்படிப் பேசக்கூடாது என்று மட்டும் அவள் முதலிலேயே முடிவு செய்திருந்தாள். அவன் தன்னைப் பற்றிக் கொண்டிருக்கும் எண்ணத்தை நினைத்து அவள் ஆத்திரப்படவில்லை. தன் அழகை வியக்கவும் தன்மீது விருப்பமுறவும் அவனுக்கு உரிமையிருக்கிறது. அதைத் தடுக்க அவளால் எப்படி முடியும்? ஒரு பெண்ணைப் பார்த்ததும் அவளிடம் ஓர் ஆண்மகன் தன் உள்ளத்தைப் பறிகொடுப்பது தவறில்லை. தன் கருத்தை அவளிடம் வெளியிடுவதிலும் தவறில்லை. இந்த நிலைமை எதுவரையில் போகலாம்... எதுவரையில் சரியாக இருக்கலாம் என்பதே பிரச்சினை. 'உன்னை நான் உயிரினும் மேலாக நேசிக்கிறேன்; என்னை ஏற்றுக் கொள்!' என்று கேட்கிற வரையில் தவறில்லை. நிச்சயமாகத் தவறில்லை. அவன் மொழி கேட்ட அந்தப் பாவையும் ஒப்புதல் உரை தந்துவிட்டால் பிறகு பேச்சே இல்லை.

அவள் அவனை விரும்பாமல் மறுத்துவிட்ட பிறகும் அவன் தவறான வழியிலேயே அவளிடம் நடந்து கொள்ள முயன்றால், அங்கேதான் மனிதன் மிருகமாக மாறுகிறான். அந்த மிருகம் தண்டிக்கப்பட்டே தீர வேண்டும்.

இப்படிப்பட்ட ஒரு கருத்து தாமரையை அவன்மீது அனுதாபம் காட்டச் செய்தது. சோழனுக்கும் இருங்கோவேளுக்கும் பகை மூளாமல் இருந்தபோது, பாண்டியனும் இருங்கோவேளும் கூட நண்பர்களாகத் தான் இருந்தார்கள்.

அந்த நேரத்தில் தன் படத்தை இருங்கோவேள் பாண்டிய மன்னனிடம் அனுப்பியிருக்கக்கூடும்; அந்தப் படத்தைக் கண்ட செழியன் தன் மீது காதல் கொண்டிருக்கக்கூடும். இவன் பேச்சினைக் காணும்போது அந்தக் காதல் தூய்மையான காதலாகவே தோன்றுகிறது. அதே சமயம் பயமும் ஏற்படுகிறது. செழியன் காதல் கதை பேசி இவளை ஏமாற்றிவிட்டுத் தப்பியோடி விடலாம் என்றும் திட்டமிட்டிருக்கலாம் அல்லவா?

அவன் முகத்தை முறித்துப் பேசிவிடக்கூடாது என்ற முடிவுடன், ''நான் யாரென்று தெரிந்தால் தங்கள் எண்ணத்தை மாற்றிக் கொள்வீர்கள்'' என்றாள்.

அதற்குச் செழியன் பதில் பேசவில்லை. அவள் என்ன சொல்லப் போகிறாள் என்று ஆவலோடு எதிர்பார்த்தான்.

''நான் இருங்கோவேள் மன்னரின் தங்கை'' என்று அவள் பெருமிதத்தோடு கூறிய வார்த்தைகளைக் கேட்டுச் செழியன் திணறிப் போனான்.

''எரிமலைமீது சூரியகாந்திப் பூ எப்படி மலரும்?'' என தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

''யாராய் இருந்தால் என்ன? காதல், பகையை நோக்குவதில்லை!'' என்று அவன் பதில் கூறியிருந்தால்

அவன் தன்னை ஏமாற்றுவதற்கே இந்தத் திட்டம் வகுத்து காதல் நாடகம் ஆடுகிறான் என்று தீர்மானித்திருப்பாள் தாமரை.

எதிரியின் தங்கை எனக்கேட்டு அவன் தவிப்பதைக் கண்டதும் அவள் உண்மையிலேயே தன்னை நேசித்திருக்கிறான் என்று புரிந்து கொண்டாள்.

''நான் சொன்னது காதில் விழவில்லையா? இருங்கோவேள் மன்னரின் தங்கைதான் இந்த தாமரை?'' என்றாள் அழுத்தந்திருத்தமாக மீண்டும்.

''நீ ஏன் இந்தக் குடும்பத்தில் வந்து பிறந்தாய்!'' என்று வேதனை பீறிட்டெழக் கத்திவிட்டான் செழியன்.

அவன் கத்தியது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. சிறைச்சாலையின் கதவுப்பக்கம் ஏதோ ஓசை கேட்கவே திரும்பிப் பார்த்தாள். வீரன் ஒருவன் ஓடிவந்து, ''அரசர் வருகிறார்'' என்றான். தாமரை, வாயிற்புறத்தையே பார்த்துக் கொண்டு மெல்ல முன்னோக்கி வந்தாள். இருங்கோவேள் அந்தச் சேற்றிலும் சகதியிலும் கால் வைத்து வேகமாக உள்ளே வந்து கொண்டிருந்தான்.

அண்ணன், ஏதுவும் கேட்டுவிடுவதற்கு முன் தானே முந்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில் தாமரை, ''அண்ணா! இந்தக் கைதிக்கு திடீரென்று நெஞ்சு அடைத்து ஆபத்தாகப் போய் விட்டதண்ணா!'' என ஆரம்பித்தாள்.

தங்கையைக் கோபத்துடன் நோக்கியவாறு இருங்கோவேள் ''ஓகோ! கைதிக்கு ஆபத்தாகப் போய்விட்டது; உடனே காவலர்கள் ஓடி வந்தனர். உனக்கு இந்தக் கைதியின் மீது கருணை பிறந்து விட்டது; சிகிச்சையளிக்கப் பறந்து வந்து விட்டாய்; இல்லையா?'' என்று கிண்டல் செய்தான். அண்ணனின் கேலி மொழியில் ஆத்திரம் கொந்தளிப்பதை உணர்ந்து கொண்ட தாமரை தலையைக் குனிந்துகொண்டு நின்றாள். இருங்கோவேள் செழியனைப் பார்த்துச் சீறினான்.

''ஏன் தம்பி? சிறைச்சாலை என்றால் உங்கள் வீட்டுப் பள்ளியறை மாதிரியா இருக்கும்? அதற்காக ஏன் மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறாய்? சாகும் வரையில் மரியாதையாகக் காலங் கழிக்க மாட்டாய் போலிருக்கிறதே!''

இதுவரையிலும் அமைதியாக இருந்த செழியன், இருங்கோவேளை மிக அலட்சியமாகப் பார்த்தவாறு, ''நான் யாரையும் இங்கே கூப்பிட வில்லை . என்னைக் கொல்ல வேண்டுமென்று நீ விரும்பினால் அந்த வேலையை விரைவில் முடித்துவிடு. மாறாக என் கால் கைகளைக் கட்டிப் போட்டுவிட்டு என் நெஞ்சை மட்டும் உசுப்பி விடாதே!'' என்று பதில் கூறவே, இருங்கோவேளுக்குச் சினம் பொங்கி எழுந்தது.

''என்ன சொன்னாய்?'' என்று செழியன் மீது பாய்ந்தான். ஆனால் அதற்குள் குறுக்கே தாமரை ஓடிநின்று அண்ணனைத் தடுத்து நிறுத்தி, ''எதிரி நாட்டுக்காரராயிருந்தாலும் அவரும் ஒரு வீரர். அவரை இப்படி நடத்துவது நமது மறக்குலப் பண்புக்கே இழுக்குத் தரும் காரியம் அண்ணா!'' என்று படபடவென்று வார்த்தைகளைக் கொட்டி விட்டாள். பேசி முடித்த பிறகே அவளுக்கு அச்சம் ஏற்பட்டது. அண்ணன் முன்னே ஏதேதோ கூறி விட்டோமே என்று.

''தாமரை! பண்புக்கு விளக்கம் அளிக்க உன்னை யாரும் இங்கே அழைக்கவில்லை. போ வெளியே!'' என்று கத்தினான் இருங்கோவேள்.

''மன்னித்துக் கொள்ளவும். இதுபோல நமக்கு ஒரு நிலை ஏற்பட்டு விட்டால்... என்று சிந்திப்பதுதான் முறையண்ணா'' என்று கெஞ்சும் தோரணையில் கூறினாள் தாமரை.

''நமக்கு ஒரு நிலை! பைத்தியக்காரி, இனிமேல் தானா நமக்கு அந்த நிலை ஏற்பட வேண்டும்? இப்போது நம் நிலை என்ன? அதை எண்ணிப்பார், தாமரை! எண்ணிப்பார்! முகிலைத் தொடும் அளவு எழுந்து நின்ற நமது கோட்டை எங்கே? கொத்தளங்கள் எங்கே? கொலு மண்டபத்தில் உன் அண்ணன் வீற்றிருந்த காட்சி எங்கே? அத்தனையும் மறைவதற்குக் காரணமாயிருந்த இந்த எதிரிகளின் மீது இரக்கமாம் - கருணையாம் பரிவாம் - பச்சாதாபமாம்!'' இருங்கோவேள் எரிமலையானான்.

''கரிகாற் சோழர்தானே அண்ணா நமது எதிரி- பாண்டியர்களுக்கும் நமக்கும் என்ன பகை?''

தாமரையின் கேள்விக்கு இருங்கோவேள் பதில் சொல்வதற்கு முன்பு அவன் உதடுகள் துடித்தன. பல்லைக் கடித்துக் கொண்டான்.

''பாண்டியன் பகைவனல்ல என்கிறாயா? இதோ இந்தப் பாவி இல்லையென்றால் இந்நேரம் அந்தக் கரிகாலன் உயிர் காற்றில் பறந்திருக்குமே - அதைத் தடுத்து நிறுத்தியது இவன் தானே? அது மட்டுமல்ல தாமரை; இதோ ஒரு புதிய செய்தி சொல்லுகிறேன் உனக்கு! இன்னும் இரண்டொரு தினங்களில் பாண்டிய நாட்டுப்படை நம்மை இந்தக் காட்டுக்குள் வளைக்கப் போகிறது. பெரும் சேனை கொண்டு முற்றுகையிட்டு என்னையும் உன்னையும், ராஜ குடும்பத்தையும் கைது செய்து, இவர்களையெல்லாம் விடுவிக்க வேண்டுமென்று திட்டமிட்டிருக்கிறது.''

-இதை அவன் சொல்லி முடிப்பதற்குள் தாமரைக்கு நடுக்கம் ஏற்பட்டு விட்டது. பாண்டியர்கள் படையெடுக்கப் போகிற செய்தி தந்த பயத்தைவிட, அந்தச் செய்தியை செழியன் எதிரிலேயே அண்ணன் வெளியிடுகிறானே என்ற பயம் அதிகமாயிற்று அவளுக்கு. ஆனால் அந்த பயம் வெகு விரைவில் நீங்கிற்று. செழியன் காதில் அந்தச் செய்தியைப் போட்டதுங்கூட அண்ணனின் ராஜதந்திரந்தான் என்ற முடிவுக்கு வந்தாள்.

இருங்கோவேள் செழியனிடம் சென்று முதுகில் தட்டியவாறு, ''உணர்ச்சி மிக்க வாலிபனே! உனக்கும் எனக்கும் ஏற்பட்டிருக்கிற நெருக்கடியைத் தீர்க்கக்கூடிய சக்தி இப்போது உன்னிடந்தான் இருக்கிறது. என்ன நெருக்கடி என்று கேட்கிறாயா? நீ கேட்க மாட்டாய்! புரிந்து கொள்ளக்கூடிய ஆற்றல் பெற்றவன்தான் நீ! பெருவழுதிப்

பாண்டியனின் படைகள் எங்களை வளைத்துக் கொள்ளுமேயானால் நாங்கள் நிச்சயம் தப்ப முடியாது. எங்களை வெல்வார் யாருமில்லை என்று அறைகூவல் தருகிற நிலையில் நாங்கள் இல்லை.

ஆனால் ஒன்று. எந்த ஓர் உயிரை மீட்பதற்காகப் பாண்டியனின் படையெடுப்பு நடக்க இருக்கிறதோ, அந்த உயிரை அவர்களால் கண்டிப்பாக மீட்க முடியாது. அந்த உயிர் உன் உயிர்தான்! நாங்கள் அத்தனை பேரும் பாண்டியர்களால் சூழப்படுகிற நேரத்தில் உன்னை உயிரோடு அவர்களிடம் திருப்பித் தருவோமா? யார்தான் தருவார்கள்? உனக்குத் தெரியாதா என்ன? அதனால் நீ உயிர் தப்புவதற்கு ஒரே ஒரு வழி இருக்கிறது - அதைச் சொல்லுகிறேன்; உன்னால் நிறைவேற்ற முடியுமா? முடியாதா? என்று உடனே கூறிவிடு!'' என்று ஒரு சொற்பொழிவே நடத்திவிட்டான்.

என்னதான் செய்ய வேண்டுமென்று சொல்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆவலில், ''என்ன வழி?'' என்று கேட்டு வைத்தான் செழியன்.

''பிரமாதமாக ஒன்றுமில்லை. பெருவழுதிப் பாண்டியனுக்கு ஓர் ஓலை அனுப்ப வேண்டும். அவ்வளவுதான்.'' - இருங்கோவேள் சற்றுக் கனிவுடன் இந்த வார்த்தைகளை உதிர்த்தான்.

''என்ன ஓலை?''

''திருமண ஓலை!''

''திருமண ஓலையா!''

''ஆமாம் - அதுவும் உனக்குத் திருமணம் நடக்கப் போகிறது என்ற செய்தியைத் தாங்கிய ஓலை.''

''புரியவில்லை எனக்கு!''

''புரியும்படி சொல்கிறேன். நீயே எழுத வேண்டும். பாண்டியனுக்கு ஓலையில் குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய வரிகள் எவை தெரியுமா?'

''எவை?''

''பாண்டிய மன்னர் அவர்களே! என்னை மீட்பதற்காகப் பெரும்படை திரட்டிவரப் போவதாகச் செய்தி கேள்விப்பட்டேன். என்னை மீட்க வேண்டிய அவசியம் உங்களுக்கு இல்லாமற் போய்விட்டது என்பதை இந்த ஓலை வாயிலாகத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் இப்போது இருங்கோவேளின் உற்ற துணைவனாக மாறி விட்டேன். பாண்டியப் பேரரசு இந்த உறவின் மூலம் எனக்குப் பகையாகிறது.''

''ஆ! என்ன சொன்னாய்?''

''பதறாதே செழியா? முழுவதையும் கேள்! இனிமேல்தான் இன்பமான செய்தியே வரப்போகிறது.''

''போதும் - போதும் - என் காதில் தேள்களை நுழைய விடாதே; தயவு செய்து போய்விடு மன்னா - போய்விடு!''

''இதையும் கேள் தம்பி! பாண்டிய மன்னரே? உம்மீது எனக்குப் பகை வளர்ந்த காரணத்தை அறிய விரும்புகிறீரா? என் திருமணத்திற்கென ஏற்பாடு செய்து அதைத் திடீரென நிறுத்தி விட்டீரே; அதன் தொடர்ச்சிதான் இப்போது நமது உறவை முறித்துவிட்டது. அன்றொரு நாள் சித்திரத்தில் காட்டிய பெண்ணை இங்கே இருங்கோவேளின் வீட்டில் நேரிலே கண்டேன். கண்ட பிறகு என்ன நடக்கும் என்று தங்களுக்குத் தெரியாதா என்ன? இருங்கோவேள் இப்போது என் மைத்துனர்; ஆமாம் அரசே! வேளிர் குலவிளக்காம் தாமரையை நான் மணப்பதென்று தீர்மானமாகி விட்டது!''

இருங்கோவேளின் பேச்சு, செழியனுக்கும் தாமரைக்கும் அதிர்ச்சியைக் கொடுத்தது. இருவரும் இருங்கோவேளையே பார்த்தபடி நின்றார்கள். அண்ணன்தான் பேசுகிறானா.. என்று சந்தேகப்பட்டாள் தாமரை. உண்மையிலேயே அண்ணனுக்கு இப்படியொரு எண்ணமிருக் கிறதா? அல்லது தற்காலிகமாகத் தப்பித்துக் கொள்வதற்குச் செழியனை துரோகியாக்க முடிவு செய்திருக்கிறானோ? அவளுக்கும் ஒன்றும் புரியவில்லை. ஆனால், ஏதோ ஒரு ராஜதந்திரத்தை மிக அழகாகக் கையாள்கிறான் அண்ணன் என்பதை மட்டும் உணர்ந்து கொண்டாள்.

செழியனுக்கு ஒரே குழப்பம். எதிர்பாராத வாசகங்களைக் கேட்டு அப்படியே நின்று கொண்டிருந்தான். இருங்கோவேள் உண்மை யிலேயே தனக்குப் பெண் கொடுத்து உறவு கொண்டாட விரும்பு கிறானா? அல்லது தன்னையும் ஏமாற்றிப் பாண்டியரையும் ஏமாற்றித் தான் வெற்றி பெறச் சூழ்ச்சிகள் செய்கிறானா? ஒருவேளை, தாமரை யைத் தனக்கு திருமணம் செய்து கொடுக்க அவன் வலிய முன்வந்து விட்டால் என்ன செய்வது? சே!, சே! எதிரியின் வீட்டிலா தொடர்பு? அழகிதான் அவள். அதற்காக அவன் துரோகியாகி விடுவதா? முடியாது! முடியாது! இதிலிருந்து ஏதோ ஒரு முக்கிய காரணத்தால் பாண்டிய னுக்கும் இருங்கோவேளுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டுத் தனக்கும் தாமரைக்கும் நடந்திருக்க வேண்டிய திருமணம் தடைபட்டுப் போயிற்று என்பதை மட்டுமே குழப்பத்திற்கிடையே செழியனால் கண்டுபிடிக்க முடிந்தது. இருங்கோவேளின் பேச்சில் புதைந்து கிடக்கும் இணையற்ற தந்திரத்தைக் கண்டு செழியன் ஆச்சரியப்பட்டான். ஏன் அந்தத் தந்திரத்தைத் தனக்கும் தன் நாட்டுக்கும் சாதகமாக ஆக்கிக் கொள்ளக் கூடாது என்ற கேள்வி எழுந்தது அவன் உள்ளத்தில்.

இருங்கோவேள் கூறுவது போல் ஒரு கடிதம் எழுதினால் அது பாண்டியரிடம் செல்லும்; பாண்டியர் அதைப் படித்ததும் செழியனைத் துரோகி என்று தூற்றுவார். படையெடுப்பு நின்று விடும். அதன் காரணமாகச் செழியனின் உயிர் காப்பாற்றப்படும்; இப்போது எப்படியோ சாகாமல் தப்பித்துக் கொண்டால் எவ்வாறேனும் இருங்கோவேளிடமிருந்து விடுபட்டுப் பாண்டியரிடம் உண்மையைக் கூறி, துரோகியல்ல என்று நிரூபித்து விடலாம்.

இந்தச் சிந்தனை செழியனுக்கு ஒரு புதிய தெம்பை அளித்தது என்றே கூற வேண்டும். அத்தோடு அவனுக்கு மற்றுமொரு சந்தேகம். இருங்கோவேள், தன் தங்கை தாமரையைத் தனக்கு உண்மையிலேயே திருமணம் செய்து வைக்கச் சம்மதிப்பானா என்பதே அது. அதையும் கேட்டு விடலாம். அவன் மனத்தை ஆராய்ந்து விடலாம் என்ற கருத்தோடு அவனைப் பார்த்து "உன் விருப்பப்படியே பாண்டியருக்கு ஓலை எழுதுகிறேன். அதேபோல் தாமரைக்கும் எனக்கும் திருமணம் நடைபெறுமா?" எனக் கேட்டான்.

அவனது துணிச்சலான கேள்விக்கு இருங்கோவேள் சட்டென்று பதில் சொன்னான்.

"தாராளமாக நடைபெறும். ஆனால் அதற்கும் ஒரு நிபந்தனை இருக்கிறது."

"என்ன நிபந்தனை?"

"அப்படியொன்றும் பயங்கரமானதல்ல; அதெல்லாம் நிச்சயம் செய்யும்போது கூறுகிறேன். இப்போது நெருக்கடியைத் தவிர்த்துக் கொள்ளலாம். என்ன சொல்கிறாய்? உதவி புரிகிறாயா? ஆனால் இந்த உதவி உன் உயிருக்கும் சேர்த்துத்தான் என்பதை மறந்து விடாதே!"

"உதவி செய்கிறேன்; ஒரு சிறு நிபந்தனை. என்னை இந்தச் சித்திரவதைக் கூடத்திலேயிருந்து மாற்றி, வேறு ஒரு நல்ல இடத்தில் பூட்டி வைக்க வேண்டும். முடியுமா?"

"தாராளமாக! இங்கேயுள்ள இடத்தில் ஒரு நல்ல இடம் உனக்கு ஒதுக்கப்படும். சரி இதோ ஓலை - இந்தா எழுதுகோல் - உடனே எழுது!"

ஓலையையும் எழுதுகோலையும் பெற்ற செழியன் எழுதத் தொடங்கினான். இருங்கோவேள் கூறியவற்றை மிகச் சுருக்கமாக எழுதி முடித்து அவன் கையில் தந்தான்.

"பாண்டியர் பெருவழுதிக்கு, செழியன் வணக்கம், என்னை இருங்கோவேளிடமிருந்து மீட்பதற்கு முயல்வதாகக் கேள்விப்பட்டேன். தேவையில்லை - தாங்கள் என்னிடம் மறைத்து வந்த மணமகளை

யாரென்று புரிந்து கொண்டேன். இருங்கோவேளின் தங்கை தாமரைக்கும் எனக்கும் திருமணம். வேளிர்குடியில் புது உறவு - பாண்டியருக்கு நான் பகைவனாக வேண்டிய சூழ்நிலை; என்னை மறந்து விடுக.

செழியன்''

ஓலையை வாங்கிக் கொண்டே இருங்கோவேள், 'சபாஷ்' என்று செழியன் முதுகில் தட்டிக் கொடுத்து விட்டுக் கலகல எனச் சிரிக்கத் தொடங்கினான். அந்தப் பயங்கரமான சிரிப்பு இருட்குகையெங்கும் எதிரொலித்தது.

''செழியா! சரியானபடி ஏமாந்தாய்! இந்த ஓலை பாண்டியன் படையெடுப்பதைத் தடுக்கும். ஆனால் உன் உயிர் போவதைத் தடுக்க இந்த ஓலைக்குச் சக்தி இல்லை. உன் உயிரைப் பணயமாக வைத்துக் கரிகாலனுக்கு அறிவிப்புக் கொடுத்திருக்கிறேன். இழந்த என் நாடுகளைத் திருப்பித்தர வேண்டும். இல்லையேல் செழியனின் உயிர் பறிக்கப்படும். இதுதான் தம்பி, மதிப்பிற்குரிய பூம்புகார் மன்னவனுக்கு இருங்கோவேளின் இறுதி எச்சரிக்கை. ஆகவே, தம்பி! எப்படியோ ஒரு வகையில் உன் உயிர் ஊசலாடிக் கொண்டுதான் இருக்கிறது'' என்று இடி முழக்கம் செய்தான் இருங்கோவேள்.

செழியனுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. தன் உயிரை வைத்து இருபெரும் மன்னர்களை வேடிக்கை காட்டுகிற இருங்கோவேளை அப்படியே கசக்கிப் பிழிந்து விடலாமா என எண்ணி உறுமியவாறு இருங்கோவேள் மீது பாய்ந்தான். இருங்கோவேள், அவனை அலட்சியமாகத் தட்டி வீழ்த்திவிட்டு, வேகமாக வெளியேறினான். தாமரையும் அவனோடு சென்றாள். போகும்போது செழியனை ஒருமுறை திரும்பிப் பார்த்தாள். உள்ளத்து உணர்ச்சிகளையெல்லாம் நாக்கில் தேக்கிச் செழியன் பலமாக ஒரு முழக்கம் செய்தான். ''வாழ்க!' சோழ- பாண்டிய மண்டலம்!'' என்ற முழக்கம்தான் அது. அந்த உணர்ச்சிப் பரணியைக் கேட்ட தாமரை, செழியனின் நாட்டுப்பற்றைத் தனக்குத்தானே வியந்து கொண்டாள். கதவு மூடப்பட்டது. மீண்டும் இருள் சூழ்ந்தது. செழியன் இருளில் கிடந்தான்.

வெளியில் வந்த இருங்கோவேள் தாமரையைப் பார்த்து, ''என்ன செய்தி? அண்ணி எப்படி இருக்கிறாள்? நீ சொன்ன அந்த ஊமை மருத்துவன் வந்தானா?'' எனக் கேட்டான்.

''வந்திருக்கிறான்; மருத்துவம் ஆரம்பிக்கப் போகிறான்'' எனப் பதிலுரைத்தாள் அவள்.

''அவனை நமது காவலர்கள் யாரும் தடுக்காமலும் தொந்தரவு செய்யாமலும் இருக்கட்டும். அவன் விருப்பத்துக்கு வெளியில் சென்று மூலிகைகள் தயாரித்துக் கொண்டு வரட்டும். இந்தா! இந்த முத்திரை மோதிரத்தை அவன் கையில் மாட்டிவிடு. அப்போதுதான் காவலர்கள் தொல்லை இருக்காது அவனுக்கு. அந்த மருத்துவனைப் பற்றி நான் கூடக் கேள்விப்பட்டேன். வாலிபனாம், வடிவழகனாம்; ஊமையாக இருந்தாலும் மருத்துவத்தில் தலை சிறந்தவனாம். ஊரார் சொல்லக் கேட்டேன். நீ அழைத்து வந்திருப்பவனும் நான் கேள்விப்பட்ட வனாகத்தான் இருக்க வேண்டும் என நினைக்கிறேன். எப்படியோ அரசிக்கு நோய் தீர்ந்தால் போதும். அதற்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் அந்த மருத்துவனுக்குச் செய்து கொடு. நமது அரண்மனையில் எத்தனையோ வசதி! இங்கே என்ன செய்வது? பரவாயில்லை. நடக்கிற வரையில் நடக்கட்டும். நீ போ தாமரை!'' என்றான். அவளும் போக ஆரம்பித்தாள்.

''ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். நான் அரசியிடம் வந்து பேசிக் கொண்டிருக்கும்போதோ அல்லது உன்னைக் காணவரும்போதோ அவனில்லாமல் இருப்பது நல்லது. ஏனெனில் அவன் ஒருவேளை ஒற்றனாக இருந்தால் ....!'' என இழுத்தாற் போல் கூறினான் அவன்.

''அப்படியெல்லாம் இல்லை. மிகவும் நல்ல மருத்துவன். எதற்கும் நாங்கள் எச்சரிக்கையாக இருக்கிறோம்.'' என்றவாறு தாமரை அதைவிட்டு அகன்றாள். அவள் உள்ளத்தில் குதூகலம் இல்லை. ஏதோ ஒரு விவரிக்க முடியாத சங்கடம் அவளை ஆட்டிப் படைத்தது.

இருங்கோவேள், நேரே தன் இருப்பிடத்திற்குச் சென்று அமைச்சரிடம், செழியனின் கடிதத்தைப் படித்துக் காட்டினான். அமைச்சர் விகாரமாகச்

சிரித்து மன்னனின் திறமையை மெச்சினார். திறமைமிக்க ஒருவன் மூலம் உடனே ஓலையைப் பாண்டியருக்கு அனுப்பத் தீர்மானிக்கப்பட்டது. நல்ல பலமிக்க வீரர்கள் வரிசையாக நிறுத்தப்பட்டனர். அமைச்சர் அவர்களைக் கூர்ந்து கவனித்து இறுதியில் ஒருவனைத் தேர்ந்தெடுத்தார். அவன் பெயர் கொடுங்கோல்! பாண்டியனிடம் பத்திரமாக ஓலையைச் சேர்க்க வேண்டிய பொறுப்பு அவனிடம் ஒப்படைக்கப் பட்டது.

பாண்டிய நாட்டுத் தலைநகரம் மிகவும் பரபரப்பாகக் காணப்பட்டது. புன்னகை பூத்த முகத்துடன் வீரர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் செல்லும் அழகை வீதியோரங்களில் நின்று வயது முதிர்ந்தோர் கண்டு களித்தனர். வீதியிற் சென்று கொண்டிருக்கும் வீரர்களின் கூட்டம் மேலும் மேலும் பெருகி விடும் விதத்தில் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் வீரர்கள் வந்து கூட்டத்தில் நுழைந்து கொண்டனர். அவர்களை வழியனுப்பி வைத்து விட்டு - வைத்த விழி வாங்காது அவர்களையே பார்த்துக் கொண்டு அவர் தம் துணைவியர் வாயிற்படிகளில் நின்று கொண்டிருந்தனர்.

எல்லா வீரர்களும் தங்கள் தங்கள் வீடுகளில் 'போருக்குப் போய் வருகிறேன்' என்று கூறிட முடிந்ததே தவிர, எந்தப் போருக்கு ? எங்கே? யாரை எதிர்க்க? என்ற விவரங்களை விளக்கிட முடியவில்லை. காரணம் அந்த விவரம் அவர்களுக்கே அறிவிக்கப் படவில்லை. தினவெடுக்கும் தோள்களுக்கு வேலை வந்தால் போதும் என்ற துடிதுடிப்பு அந்த வீரர்களுக்கு! அவர்களின் மார்பில் ஏந்தி வரும் விழுப்புண்களுக்கு முத்தமீந்து ஆற்றிட வேண்டுமென்ற தணியாத ஆசை, அவர்களைத் தழுவி மகிழ்ந்த காதலியர்க்கு!

''என் மகன் பட்ட காயம் எங்கே தெரியுமா? நெஞ்சாங்குழியில்!'' எனக் கூறிப் பெருமையடைய வேண்டுமென்ற ஆத்திரம் கிழவிகளுக்கு!

''எதிரிகளின் இருதயத்தில் அவர்களின் பற்களைத் தட்டிப் போட்டு நம் குழந்தைகளுக்குக் கிலுகிலுப்பைக் கொண்டு வாருங்கள் அத்தான்,'' என்று விடை கொடுத்தனுப்பிய தாய்மார்களின் வீரக் குரல் பாண்டியன் தலைநகரமெங்கும் ஒலித்துக் கொண்டிருந்தது.

பல நாள் பட்டினி கிடந்த புலிக்கூட்டம், திடீரெனக் கண்ணில் பட்ட மான்கூட்டத்தை நோக்கிப் புறப்பட்டது போலப் பாண்டிய நாட்டு வீரர்கள் போருக்குப் புறப்பட்டார்கள். அரண்மனை முகப்பில் மீன் கொடி வெகு கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது. அந்தக் கொடி நிழலில் ஒலித்துக் கொண்டிருந்த முரசம் போர் வீரர்களை உணர்ச்சி வடிவங்களாக ஆக்கிக் கொண்டிருந்தது. கொடி மரத்தடியில் பாண்டிய நாட்டுத் தளபதி நெடுமாறன் புரவியில் அமர்ந்து வீரர்கள் அணிவகுப்பைக் கண்காணித்துக் கொண்டிருந்தான்.

அப்போது அரசர் வருவதை அறிவிக்கும் இசைக் கருவி முழங்கிற்று; அதனைத் தொடர்ந்து யானை மீது பெருவழுதிப் பாண்டியர் அணி வகுப்புகளிடையே வந்து சேர்ந்தார். தளபதியும் போர் மறவர்களும் தலை தாழ்த்தி அரசருக்கு வணக்கம் தெரிவித்தார்கள். பெருவழுதிப் பாண்டியர் வீரர்களை நோக்கினார்.

''அருமை மிகு பாண்டியத்து ஆற்றல் நிறை மறவர்களே! அனைவரையும் வாழ்த்துகிறேன். போர் என்று அழைத்தேன். எங்கே - யாருடன் என்று கேட்காமலே கூட ஓடி வந்து கூடி விட்டீர்கள். புறப்படும் வரையில், செய்தி பரவிட வேண்டாமென்று தான் ஒளித்து வைத்தேன். நமது செழியன் எதிரிகள் வசம் சிக்கியிருக்கிறான் என்றே நீங்கள் அறிவீர்கள். ஆனால் அந்த எதிரி யாரென்று அறிய மாட்டீர்கள். வேளிர்குல மன்னன் இருங்கோவேள்தான் செழியனைச் சிறை பிடித்திருக்கிறான். நாடிழந்த அந்த வேந்தன் ஒளிந்திருக்குமிடமோ சோழ மண்டலத்தில் பூம்புகாரை அடுத்து, சில கல் தொலைவிலுள்ள ஒரு காடு, அந்தக் காட்டில்தான் பெரும்படையொன்றையும் கரிகால் சோழனுக் கெதிராக அவன் தயாரித்து வருகிறான். இந்நிலையில் செழிய னுக்கு நேர்ந்த கதி யாதென்று விளங்கவில்லை. என் நம்பிக்கையெல் லாம் செழியன் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டிருக்காது என்பதேயாகும். நமது படை திடீரென்று இருங்கோவேளையும் அவன் வீரர்களையும் வளைத்துக் கொண்டால் அத்தனை பேரும் செயலிழந்து விடுவார்கள். செழியனின் உயிரும் காப்பாற்றப்படும். ஆகவே இந்தப் படையெடுப்பு மிகத் தந்திரமாக நடைபெற வேண்டும். வெற்றி கிடைத்தும் செழியன் உயிருடன் கிடைக்க வில்லையென்றால் அது மாபெரும் தோல்வியே ஆகும். அதனால் ஆர்ப்பாட்டம் அதிகமின்றி இந்தப் போராட்டத்தில் குதியுங்கள். தளபதி நெடுமாறனிடம் போர் முறை பற்றிய விளக்க மனைத்தும் அறிவித்திருக்கிறேன். அவருக்குக் கட்டுப்பட்டு வெற்றிகர மாகத் திரும்பி வாருங்கள்! வாழ்க பாண்டிய மண்டலம்!''

பெருவழுதிப் பாண்டியரின் உரை கேட்டு நின்ற வீரர்கள் ''வாழ்க மன்னர்!'' என முழங்கினர்.

தளபதி நெடுமாறன், அரசரிடம் விடை பெற்றுப் புறப்பட்டான். தளபதியைத் தொடர்ந்து வீரர்களும் முரசொலித்துக் கிளம்பினர். போர் வெறியால் உந்தப்பட்ட அவர்கள் மிக விரைவில் தலைநகரைத் தாண்டிப் பூம்புகார் செல்லும் பாட்டையில் நுழைந்தனர்.

சோழ மண்டலத்தில் நுழையாமலேயே அந்த நாட்டைச் சுற்றிக் கொண்டு இருங்கோவேள் வாழும் காட்டில் பிரவேசிக்க வேண்டு மென்று அரசர், தளபதிக்கு உணர்த்தியிருந்தார். அந்த அறிவுரைகளைப் பின்பற்றியே தளபதி நெடுமாறன் வழி வகுத்துச் சென்று கொண்டிருந்தான்.

அந்தப் படையை வழியிலேயே சந்தித்துச் செழியன் எழுதிய ஓலையைத் தளபதியிடம் கொடுத்துவிட வேண்டுமென்ற இருங்கோ வேளின் உத்தரவைத் தாங்கி வேளிர்குல வீரன் கொடுங்கோல் புறப்பட்டுவிட்டான்.

அவன் குதிரையிலேறிப் புறப்படுகிற காட்சியைத் தன் இடத்தில் இருந்தவாறே முத்துநகை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தாள். ''யார் இவன்? எங்கே இவ்வளவு அவசரமாகப் புறப்படுகின்றான்?'' என்ற கேள்விகள் அவள் உள்ளத்தில் எழுந்தன.

குதிரை நகரும் சமயம் இன்னொரு வீரன் அவனருகே வந்து, ''ஏய் கொடுங்கோல்! வெற்றியோடு திரும்பு'' என்று வாழ்த்தி அனுப்பியதையும் முத்துநகையால் கேட்க முடிந்தது. ஏதோ புதிய சூழ்ச்சி உருவாகிறது என்பதை மட்டும் அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. திரும்பினாள். தாமரை, அவளை நோக்கி மகிழ்ச்சியுடன் வந்து கொண்டிருந்தாள்.

''என்னைத் தனியாக விட்டுவிட்டு எங்கே போய் விட்டாய்?''என்று செல்லமாகக் கோபித்துக் கொண்டாள் முத்துநகை.

''மன்னித்து விடுங்கள், எல்லாம் உங்களுக்காகத்தான்! இதோ இந்த மோதிரத்தை அணிந்து கொள்ளுங்கள். இது விரலில் இருந்தால் உங்களை யாரும் தடுக்க மாட்டார்கள்! உங்கள் விருப்பம் போல் சுதந்திரமாக இருக்கலாம்.'' என்றாள் தாமரை.

''இது உனக்கு எப்படிக் கிடைத்தது?''

''இந்தக் கேள்வியெல்லாம் எதற்கு? மருத்துவர் மூலிகைகள் பறிக்க அடிக்கடி வெளியில் செல்வார்; அவரை யாரும் தடுக்காமலிருக்க இந்த மோதிரம் வேண்டும் என்று கூறி அமைச்சரிடம் இதைப் பெற்று வந்தேன்!''

- எனச் சொல்லிக் கொண்டே முத்துநகையின் விரலில் மோதிரத்தை அணிவித்தாள் தாமரை. அப்போது அங்கு வந்த தோழியொருத்தி அந்தக் காட்சியைக் கண்டு முகத்தைத் திருப்பிக் கொண்டாள் என்றாலும், வந்த காரியத்தை மறக்காமல், ''இளவரசி! தங்களை அரசியார் அழைக்கிறார்'' என்று கூப்பிட்டாள்.

தாமரை, முத்துநகையிடம் கண்களால் விடைபெற்றுக் கொண்டு, அரசியைப் பார்க்கப் புறப்பட்டாள். முத்துநகை அரசியையும் அந்தத் தோழியையும் மனதுக்குள் வாழ்த்தியவாறு மோதிரத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டே வேறு வழியாக வெளியே வந்தாள். குதிரைகள் கட்டப்பட்டிருக்கும் இடத்துக்கு வேகமாகப் போனாள். குதிரையை அவிழ்த்தாள்.

''யார் நீ?'' என்று காவலன் ஒருவன் ஈட்டியை நீட்டியவாறு ஓடிவந்தான்.

மோதிரத்தை அவன் முகத்துக்கு நேரே காட்டினாள் முத்துநகை. குதிரையில் ஏறி வெகு வேகமாகப் புறப்பட்டாள். கொடுங்கோலின் குதிரை எந்தப் பக்கம் போயிருக்குமென்று அவளால் வெகுநேரம் வரையில் ஊகிக்க முடியவில்லை. ஒரு வாய்க்கால் ஓரத்தில் ஈரமண்ணில் பதிந்திருந்த குதிரையின் குளம்படிகள் கொடுங்கோல் சென்ற திக்கை அவளுக்கு அறிவித்தன. வேறு வழியில் அவன் சென்றிருக்க முடியாது என்ற நம்பிக்கையில் குதிரையைத் தட்டிவிட்டாள். காற்றினும் கடிய வேகத்தில் குதிரை பறந்தது. அவள் முயற்சி வீண் போகவில்லை. அவளுக்கு முன்னே அவன் போய்க் கொண்டிருந்தான்.

அவள் முதல்நாள் உட்கார்ந்திருந்த அதே அருவியோரம், அங்கே குதிரையை விட்டிறங்கி, கொடுங்கோல் தண்ணீர் பருகிக் கொண்டிருந் தான். முத்துநகையும் குதிரையைக் கொண்டு வந்து அங்கே நிறுத்தினாள்.

திடுக்கிட்ட கொடுங்கோல், ''யார்?'' என்று கர்ச்சித்தவாறு வாளை எடுத்துக் கொண்டு பாய்ந்தான்.

''நில்லப்பா! நானும் உன்னோடுதான் வருகிறேன்'' என்றவாறு முத்துநகை குதிரையிலிருந்து இறங்கி, முத்திரை மோதிரத்தை அவனிடம் காட்டிச் சிரித்துக் கொண்டாள். உடனே கொடுங்கோல் முத்துநகைக்குத் தலைதாழ்த்தி வணக்கம் தெரிவித்துக் கொண்டான்.

''பயப்படாதே! அரசியாருக்கு மருத்துவம் செய்ய வந்திருக்கிறேன். திடீரென்று மன்னர் என்னையும் உன்னுடன் போகச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறார். அவர் உன்னிடம்...'' - முத்துநகை பேச்சை முடிக்காமல், அவனிடமிருந்து பதிலை எதிர்பார்த்தாள்.

அந்த முட்டாளும், ''ஆமாம், ஆமாம். பாண்டியருக்குக் கொடுக்க வேண்டிய ஓலையைக் கொடுத்திருக்கிறார். கட்டாயத்தின் பேரில் செழியனே எழுதிய ஓலை!'' என்று உளறி வைத்தான்.

''பரவாயில்லை-பத்திரமாக வைத்துக் கொள்!'' என்று அவள் பதில் கூறினாளே தவிர, 'என்ன ஓலையாக இருக்கும்? செழியனே எழுதியது என்கிறானே!' என்பது போன்ற குழப்பங்கள் அவள் மூளையைக் குடையலாயின.

''சரி... நேரமாகிறது... புறப்படலாம்!'' என்றாள் அவள்.

கொடுங்கோல் புறப்பட்டான். முத்துநகை, குதிரையின் கடிவாளத் தைப் பிடித்தவாறு நடந்து கொண்டிருந்தாள். கொடுங்கோலும் அவ்வாறே அவளுடன் நடந்து கொண்டிருந்தான். அரசரின் முத்திரை

மோதிரத்தையே போட்டிருக்கக்கூடிய ஒருவன் நடந்து செல்லும் போது சாதாரண வீரனாகிய அவன் மட்டும் குதிரையில் ஏறிச் செல்லலாமா? நடந்து கொண்டே முத்துநகை பேச்சுக் கொடுத்தாள்.

''நாம் செல்ல வேண்டிய தூரம் அதிகமில்லையா?''...

''ஆமாம் ஆமாம்''

''ஓலையைக் கொடுத்தால்.. அந்தப்பாண்டியர்கள்.''

''படையெடுக்க மாட்டார்களாம்!''

''அது தெரியும்; அது தெரியும். ஆமாம்; நீ எவ்வளவு நாட்களாக நமது மன்னரின் படையில் வேலை பார்க்கிறாய்?''

''எங்க தாத்தா காலத்திலிருந்து எங்க குடும்பமே இருங்கோவேள் மன்னரின் படையிலேதான் இருக்கிறது!''

''ஓகோ! நீ வாள் வித்தையில் சிறந்தவன்தானா?''

''ஏதோ கொஞ்சம் தெரியும்!''

''பார்த்தாலே தெரிகிறது, பெரிய வீரன்தான் என்று. எங்கே, உன் வாளைக் கொடு பார்ப்போம்!''

கொடுங்கோல், தன் வாளையெடுத்து மரியாதையுடன் முத்துநகையிடம் கொடுத்தான்; முத்துநகை நடந்து கொண்டே அந்த வாளை வாங்கித் திருப்பிப் பார்த்தாள்.

''அதிகக் கனமாக இல்லையே!''... இது முத்துநகை

''ஆமாங்க! நம் அரசர் வைத்திருக்கும் வாள்தான் அதிகக் கனம். கரிகால் சோழனுடைய வாளைவிட அதிகக் கனமானது!'' - இது கொடுங்கோல்.

''ஓ! அப்படியா?'' என்று கூறிக் கொண்டே முத்துநகை கையிலிருந்த வாளைக் கொடுங்கோலின் நெஞ்சில் நுழைத்து விட்டாள். எதிர்பாராமல் தாக்கப்பட்ட கொடுங்கோல், வாளிலே தன் உடலைச் சிக்க வைத்துக் கொண்டு மண்ணில் வீழ்ந்தான். அவசர அவசரமாக அவன் உடைகளை ஆராய்ச்சி செய்தாள் முத்துநகை. அந்த ஓலை அவள் கையில் கிடைத்துவிட்டது; எடுத்துப் படித்துப் பார்த்தாள். திடுக்கிட்டாள். அவளுக்குப் பயம் வேறு பிடித்துக் கொண்டது. எதிரே கிடக்கும் கொடுங்கோலின் பிணத்தை இழுத்துப் புதர் மறைவில் பரபரப்புடன் கிடத்தினாள். ஆளில்லாமல் நின்ற குதிரையை இழுத்துக் கொண்டு போய் வேறிடத்தில் விட்டாள். தன் குதிரையில் ஏறிக் கொண்டு எங்கு போவதென்று தெரியாமல் கொஞ்ச தூரம் சென்றாள்.

கொடுங்கோலை கொலை செய்த பரபரப்பு அவளுக்கு அடங்க வில்லை. உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. இனி என்ன செய்வ தென்று புரியவில்லை. போய்க் கொண்டே இருந்தாள் அவள். திடீரென்று மகிழ்ச்சியடையக் கூடிய காட்சியொன்றை எதிரே கண்டாள். மரக்கிளை யொன்றைப் பிடித்தவாறு அவளது அன்புக்குரிய வீரபாண்டி நின்று கொண்டிருந்தான். அவள் பயமத்தனையும் நீங்கிற்று. ''அப்பாடா,'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே குதிரையிலிருந்து குதித்தாள். அவள் குதிப்பதற்கு முன் அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான் இருங்கோவேள்.

''கேட்டீர்களா செய்தி?'' என்றாள் துடிதுடிப்புடன்.

''என்ன?'' என்றான் இருங்கோவேள்.

''ஒரு கொலை செய்து விட்டேன்!''

''ஏன்? யாரை? எப்போது?''

''இருங்கோவேளின் ஆளை! பாண்டிய மன்னரைச் சூழ்ச்சி செய்து ஏமாற்றிச் செழியனையும் அவருக்கு எதிரியாக ஆக்குவதற்கு ஓர் ஓலை தயாரித்திருக்கிறான் இருங்கோவேள்!''

''அப்படியா?''

''ஆமாம்! அந்த ஓலையைக் கொண்டு சென்ற வீரனைத் தான் நான் வழிமறித்துக் கொன்று ஓலையையும் கைப்பற்றியிருக்கிறேன்!''

''சபாஷ்! - அந்த ஓலை எங்கே?''

''இதோ இருக்கிறது - படித்துப் பாருங்கள்!''

இருங்கோவேள் அதைப் படிப்பது போல் பாசாங்கு செய்து விட்டுத் திரும்ப அவளிடமே கொடுக்கப் போனான்.

''வேண்டாம்; நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று அவனிடமே கொடுத்தாள் முத்துநகை.

இருங்கோவேள் அந்த ஓலையைப் பத்திரமாகத் தன் மடியில் வைத்துக் கொண்டான்.

தன்னைக் கொன்று புசிக்கப் போகிறவனின் கையிலேயே அமர்ந்து புறா தானியத்தைக் கொரித்துக் கொண்டிருக்கும்; சற்று நேரத்தில் பலிபீடத்தில் தலையை இழக்கப் போகும் ஆட்டுக்குட்டி, பூசாரியின் கையிலுள்ள பசும்புல்லை நுனிப்பல்லால் கடித்துச் சுவை பார்த்துக் கொண்டிருக்கும். புறாவுக்கும், ஆட்டுக் குட்டிக்கும் தங்களைக் கொல்லப் போகிறவர்களே உணவும் அளிக்கிறார்கள் என்ற ரகசியம் தெரியாது.

ஆனால் இருங்கோவேளுக்கு நன்றாகவே புரிந்திருந்தது, தன்னை ஒழித்துக் கட்டத் துடித்து நிற்பவளே தன் தோள்மீது மெய்மறந்து சாய்ந்திருக்கிறாள் என்ற உண்மை. யாரைத் தலையெடுக்க வொட்டாமல் செய்துவிட வேண்டுமென்று வீட்டை விட்டுப் புறப்பட்டாளோ அவனுக்கே இன்பவல்லியாக அவள் மாறிவிட்ட வித்தையை அவனும் நினைத்துப் பார்த்துச் சிரித்துக் கொண்டான்.

'நான்தான் இருங்கோவேள்!' என்று கூறிவிட்டால்? அதைக் கேட்டதும் அவள் நிலை என்ன ஆகும்? பாவம்! அவளைப் பார்க்கும்போது எவ்வளவு பரிதாபமாக இருக்கிறது! கோடையின் கொடுமை தாங்காது பாம்பு படமெடுத்தவாறு தன்னை மறந்து நிற்குமாம். அதன் நிழலிலே வந்து தவளை ஒண்டிக் கொள்ளுமாம். அதைப் போலத்தான் காதல் மகத்துவத்தால் தங்களை மறந்து இருவருமே ஒன்றுபட்டனர்.

முத்துநகையின் முகத்தையே அவன் பார்த்துக் கொண்டு நின்றான். ஒருவனைக் கொன்றுவிட்ட பிறகு ஏற்பட்ட பயத்தின் சாயல் அவள் முகத்தில் படர்ந்திருந்தது.

''என்ன பார்க்கிறீர்கள்'' என்று இதழ்கள் சிறிது நடுங்க அவள் கேட்டாள்.

''ஒன்றுமில்லை. உன் இதழ்கள் உலர்ந்து விட்டனவே என்று பார்க்கிறேன்'' என்று கூறியவாறு அவைகளை ஈரமாக்கினான்!

''அத்தான்!'' என்று உச்சரித்தவாறு கண்களை மூடிக் கொண்டு அவனைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

''என்ன இருந்தாலும் ஒரு எதிரியைக் கொலை செய்கிற அளவுக்கு உனக்குத் துணிவு ஏற்பட்டிருக்கக் கூடாது'' என்று அவள் கன்னத்தோடு கன்னம் பதித்தான்.

தன் காந்த விரல்களால் அவன் முகத்தை வருடியவாறு, ''ஏனத்தான் அப்படிச் சொல்கிறீர்கள்? கடமையை நிறைவேற்றும்போது ஒரு தமிழச்சியின் உள்ளத்தில் கோழைத்தனம் குறுக்கிடலாமா?'' என வினவினாள் முத்துநகை.

''உன் வீரத்தை நான் இகழவில்லை. உன் செயலை நான் பாராட்டாமல் பேசவில்லை. உன் உயிருக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டிருந்தால் பிறகு என் கதி?'' என்று அவளைப் பார்த்துக் கேட்டான். அதைக் கேட்கும்போது அவன் கண்கள் கலங்கி விட்டன. ஆம், அவனை அவளிடம் ஒப்படைத்து விட்டான் என்பதற்கு அது எடுத்துக்காட்டு.

கலங்கிய அவன் கண்களைக் கண்டதும் முத்துநகைக்கு மகிழ்ச்சி பொங்கியது. அந்த மகிழ்ச்சியும் அவள் கண்களைக் குளமாக்கியது.

மகிழ்ச்சி ஆரவாரத்தில் வளரும் காதல், நீர் வீழ்ச்சியின் அடியில் சிக்கிய மலர் போலக் கசங்கி விடுவதும் உண்டு. கண்ணீரில் மலரும் காதல், சேற்றில் மலரும் செந்தாமரையாகக் காட்சி தருவதும் உண்டு. இதில் இரண்டாம் வகைக் காதலை அவர்கள் வளர்த்தனர். அவர்களுக்கு எந்தக் குழப்பமும் இல்லை, காதலைப் பற்றிய மட்டில்!

ஆனால் அவன் தான் புயலானான். தூய்மையான காதலை வளர்த்துக் கொண்ட பிறகு அவளை ஏமாற்றுவது சரியா என்று எண்ணி எண்ணி ஏங்கினான். அவள் இருங்கோவேளுக்கு எதிரிதான். ஆனால் அவனுக்கு அருமைக் காதலி! அவளில்லாது இனிமேல் அவனால் உயிர் வாழ முடியாது. அதற்காக அவன் நாடிழந்து நகர்இழந்து அரச பதவியிழந்து ஆண்டி போல் காட்டில் உலவிக் கொண்டிருக்கவும் முடியாது. இப்படி ஓர் அமைதியற்ற உளைச்சேற்றில் மாட்டிக் கொண்டு அவன் திணறிக் கொண்டிருந்தான்.

வெறித்து ஆகாயத்தைப் பார்க்கிறான். வீரம் பிறக்கிறது கண்களில்! மீசைகள் பயங்கரமாகத் துடிக்கின்றன! நெஞ்சம் கனலாக மாறுகிறது. பூமியை உற்று நோக்குகிறான். இந்த மண்ணில் சிறு பகுதியும் தன் ஆட்சிக்கு உட்பட்டதில்லை என்று பெருமூச்சு விடுகிறான். மூச்சின் காற்றுப்பட்டுப் புழுதி பறக்கிறது. கால்களை ஓங்கி உதைக்கிறான் தரையில்.

விவரம் புரியாமல் முத்துநகை அவனை வியப்புடன் பார்க்கிறாள். அவனும் பார்க்கிறான்.

ஆவேசம் படர்ந்திருந்த முகத்தில் அன்பு ஒளி!

''கண்ணே!'' என்று அவளை அணைத்துக் கொள்கிறான்; அவளிடம் உண்மையைச் சொல்லிவிட வேண்டும் போல் இருக்கிறது. நெஞ்சில் ஓங்கி ஓர் அடி விழுகிறது. 'பைத்தியக்காரா! என்ன காரியம் செய்யத் துணிகிறாய்? உண்மையைச் சொன்னால், காதல் காற்றில் பறந்துவிடும். காதலி காளியாகி விடுவாள். எச்சரிக்கையாக இரு!' என்ற உணர்வை அந்த அடி எழுப்புகிறது போலும்! பிறகுதான் தெரிகிறது அவனேதான் அவன் நெஞ்சில் அடித்துக் கொண்டிருக்கிறான்! குழப்பத்திலும் மௌனமாக, இன்பத்திலும் சிறிது நேரம் கழிந்தது.

''நேரமாகிறது அத்தான்! தாமரை தேட ஆரம்பித்து விடுவாள். பிறகு ஆபத்து-நான் போகட்டுமா?''

''போவதா? இப்போது நீ போக முடியாது. உனக்கு ஒரு பெரிய வேலையிருக்கிறது.''

''என்ன வேலை?''

''பாண்டிய நாட்டுப் படைகள் இருங்கோவேளைப் பிடிப்பதற்காக வருவது உனக்குத் தெரியுமல்லவா?''

''அதுதான் தெரியுமே. அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?''

''நான் உடனே போய் பாண்டிய நாட்டுப் படையை வழியிலேயே சந்தித்தாக வேண்டும். இருங்கோவேளின் மீது எப்போது பாயலாம், எப்படி அவனை வளைக்கலாம் என்பதற்கான நேரம், காலம் வழி முதலியவற்றைச் சொல்லி விளக்கிட வேண்டும்!''

''அப்படியானால் படையெடுப்பின்போது நான் எங்கேயிருப்பது?''

''நான் சொல்லப் போகிற வேலையை முடித்துவிட்டு என்னை வந்து பார்! அப்போது சொல்கிறேன். நீ என்னை சந்திக்கிற வரையில் படையெடுப்பு நடக்காது.!''

''அவ்வாறு முக்கியமான பணி எனக்கு என்ன இருக்கிறது?''

''இருங்கோவேளைப் பற்றிச் சில இன்றியமையாத ரசகியங்களைக் கரிகாலரிடம் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்கு நான் நேரில் கரிகால் சோழரைச் சந்தித்தாக வேண்டியிருக்கிறது. நான் எப்போது வந்தால் அவரைத் தனியாகச் சந்திக்கலாம் என்று செய்தி அறிந்து வர வேண்டும்.''

''தேவையான விவரங்களை என்னிடம் கூறுங்களேன், நானே அரசரிடம் கேட்டு வருகிறேன்.''

''இல்லை கண்ணே, நானும் அவரும் அதுபற்றி நீண்ட நேரம் பேச வேண்டியிருக்கிறது. அந்தச் சந்திப்பு நடந்தால்தான் இருங்கோவேளைப் பிடிப்பது சுலபமான காரியமாகும்.''

''சரி, தங்கள் விருப்பப்படியே அவரைப் போய்ப் பார்க்கிறேன். அவர் சந்திப்பதற்குச் சம்மதம் தந்துவிட்டால் உங்களை நான் எங்கே கண்டு செய்தியைக் கூறுவது?''

''அதுதானா பெரிய காரியம்? நமது பழைய பாழ் மண்டபத்தில் உனக்காகக் காத்திருக்கிறேன். அதுதான் அந்த மண்டபம்-நீ குளித்தாயே? அந்தக் குளம்கூட இருக்கிறதே...''

''போங்களத்தான்!''

-என்று அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவளது அழகிய உச்சந்தலையில் 'இச்' சென்று முத்தமீந்தான் இருங்கோவேள். பகைவனின் வில்லுக்குக் கணையாகிவிட்ட அந்தப் பாவையை புன்னகையுடன் வழியனுப்பி வைத்தான்.

விழிவழியே நெஞ்சில் நுழைந்துவிட்ட வீரபாண்டியின். திருவுருவின் எழிலையெண்ணி மகிழ்ந்தவாறு அவன் இட்ட கட்டளையை நிறைவேற்றவும், சோழ நாட்டுக்கு ஏற்பட்ட பகையை வீழ்த்தவும்தான் பணியாற்றுவதாக தவறாகக் கருதிக் கொண்டு அவள் போய்க் கொண்டேயிருந்தாள்.

அவள் போகும் வழியையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு இருங்கோவேள், தன் படைவீரன் கொடுங்கோல் வீழ்ந்து கிடக்கும் இடத்திற்கு வந்தான். அவன் இறந்து கிடக்கும் கோரத்தைக் கண்டு மனம் உருகினான். சடலத்தைத் தூக்கித் தன் குதிரையில் வைத்துக் கொண்டு மரமாளிகை நோக்கி விரைந்தான்.

மரமாளிகையின் வாயிற்புறத்தில் காத்திருந்த தாமரை, அண்ணனை யும், அவன் தூக்கி வரும் பிணத்தையும் கண்டதும் எதிரே ஓடி, ''அண்ணா! என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

இருங்கோவேள், பதில் ஏதும் கூறவில்லை. எதிரே நின்ற வீரனைக் கூப்பிட்டு உடனே அமைச்சரை அழைத்துவருமாறு உத்தரவிட்டான். அமைச்சரும் வந்து சேர்ந்தார்.

''கொடுங்கோல் வழியில் கொல்லப்பட்டான். இதோ இருக்கிறது செழியனின் ஓலை! வெகு விரைவில் இதைப் பாண்டியநாட்டுப் படைத் தளபதியிடம் சேர்த்தாக வேண்டும்! மதுரையை விட்டுப் படை புறப்பட்டு நம்மை நோக்கி வருவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. உம்! உடனே ஓலையை அனுப்புங்கள்; அத்துடன் நமது இருப்பிடத்தைச் சுற்றிக் கட்டுக்காவல் பலமாகட்டும். எதிரிப் படை வருகிறதா என்பதை அறிய நாலா பக்கங்களிலும் ஆட்கள் செல்லட்டும்'' என்று உத்தரவு பிறப்பித்துவிட்டுத் தங்கையைப் பார்த்து ''தாமரை! என்னோடு வா!'' என்று அழைத்துக் கொண்டு உள்ளே சென்றான்.

இருங்கோவேள் இட்ட உத்தரவுகளை உடனடியாக நிறைவேற்றும் வேலையில் அமைச்சர் ஈடுபட்டார். பாண்டியப் படைத் தளபதியைச் சந்திக்க ஓலை கொண்டு மற்றொரு வீரன் புறப்பட்டான்.

இருங்கோவேள், தாமரையைத் தனியாக ஓர் இடத்திற்கு அழைத்துச் சென்று, ''யாரை எதிர்பார்த்தம்மா, வாயிற்புறத்தில் காத்திருந்தாய்?'' என்று வினவினான்.

''யாரையுமில்லை அண்ணா!'' என்று மழுப்பினாள் தாமரை.

''எல்லாம் எனக்குத் தெரியும். அந்த மருத்துவ வாலிபனுக்காகத் தானே காத்திருந்தாய்?''

''ஆம் அண்ணா! ஆம்! பச்சிலைகள் பறித்து வருவதாகப் போன வரைக் காணவில்லை. அண்ணிக்கு எப்போது மருந்து கொண்டு வருவார் என்று எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தேன்.''

''ஒரு சோகமான செய்தி சொல்லுகிறேன் கேள்!''

''என்ன அண்ணா?''

''அவனைக் காட்டிலே ஒரு புலி கொன்று விட்டது.''

''ஆ! உண்மையாகவா...? அண்ணா! அண்ணா!''

தாமரை மயக்கமடைந்து விழுந்துவிட்டாள். இருங்கோவேள் ஓடிச்சென்று அவளுக்குச் சிகிச்சைகள் செய்து மயக்கம் தெளிவித்து உட்கார வைத்தான். தாமரையின் கண்களில் தாரை தாரையாக நீர் கொட்டியது.

''எப்படியண்ணா அந்தக் கொடுமை நடந்தது?'' -அவளுக்குத் துக்கம் நெஞ்சையடைத்தது.

''என் கண் முன்னாலேயே அவன் கொல்லப்பட்டான். அவன் உடலைக் கூடக் கீழே எறியாமல் புலி தூக்கிக் கொண்டு ஓடி விட்டது''

''அய்யோ! அண்ணா!''

தாமரை, தலையைச் சுவரில் முட்டிக்கொண்டு கோவெனக் கதறி அழத் தொடங்கினாள்.

''தாமரை! என்ன இது? எத்தனையோ வீரர்களை -தளகர்த்தர்களைப் போரிலே இழந்துவிட்டு இங்கே உட்கார்ந்திருக்கிறோம். அப்போதெல் லாம் உன்னை இப்படி அழ வைக்காத நிகழ்ச்சி இப்போது மட்டும் நடந்துவிட்டதா என்ன? ஒரு சாதாரண ஊமை மருத்துவனுக்காகவா இப்படி அலறுகிறாய்?''

''அண்ணா! அண்ணா!'' -தாமரையின் கதறல் அதிகமாயிற்று.

''நிறுத்து தாமரை நிறுத்து! முட்டாளே! நீ ஏன் அழுகிறாய் என்று எனக்குத் தெரியும்! அந்த மருத்துவன் உன்னை மயக்கி விட்டான்.''

''அண்ணா!'' தாமரை இருங்கோவேளிடம் ஓடிவந்து அவன் காலில் விழுந்தாள். ''என்னை மன்னித்து...'' என்று விம்மி விம்மி அழுதாள். வார்த்தையை முடிக்காமல் அவன் பாதங்களைக் கண்ணீரால் குளிப் பாட்டினாள்.

''அந்த மருத்துவன் யார் தெரியுமா? அவனிடம் உன் மனத்தைப் பறிகொடுத்தாயே பைத்தியக்காரி! அவன் நமது எதிரி! பகைவர்கள் அனுப்பிய ஒற்றன்!''

''அப்படியானால் நீங்கள்தான் அவரைக் கொன்று விட்டீர்களா?'' தாமரை திடுக்கிட்டுக் கேட்டாள்.

''நான் ஏன் அவனைக் கொல்ல வேண்டும்? அவனே செத்து விட்டான். புலி அடித்ததும் மருத்துவன் செத்துவிட்டான். ஆனால் அதில் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், புலியின் நகம் பட்டதும் மருத்துவன் மங்கையாக மாறிவிட்டான். மருத்துவன் செத்தான்; மங்கை தோன்றினாள்!''

''என்ன அண்ணா? எனக்கொன்றும் புரியவில்லையே!''

''புரியாதுதான்! ஆமாம் தாமரை; உன் அண்ணனுக்குப் போர்ப் புலியென்று ஒரு பட்டம் உண்டல்லவா? ஞாபகம் இருக்கிறதா உனக்கு?''

''அதற்கென்ன?''

''இந்த புலிதான் அந்த மருத்துவனைக் கொன்றது. கொன்றதும், மருத்துவன் மங்கையாக மாறிவிட்டான். இன்னும் உனக்குப் புரியவில்லையென்றால் சொல்கிறேன் கேள்? நீ யாரிடத்திலே உள்ளத்தைப் பறி கொடுத்திருக்கிறாயோ, அவன், நீ நினைப்பதுபோல ஆடவன் அல்ல, அழகான ஆரணங்கு.

அதுமட்டுமல்ல, எதிரிநாட்டு அரசர்களின் துணையோடு நம்மை அழிக்க வந்தவள். அவளை நான் கண்டுபிடித்து விட்டேன். ஆனாலும் தெரியாதவனைப் போல நடித்துக் கொண்டிருக்கிறேன். நீயும் அவளிடம் எச்சரிக்கையாக நடந்து கொள்.''

''நீங்கள் சொல்வதை நம்பலாமா அண்ணா?''

''ஒரு தங்கையிடம் அண்ணன் இதைவிட அதிகமாக என்ன பேச முடியும்? அவள் எங்கும் போய்விடப் போவதில்லை. திரும்பி இங்குதான் வரப்போகிறாள். அப்போது நீயே அவளைச் சோதித்துப் பார்த்துக் கொள். நான் இதைச் சொல்வதற்கு காரணமே, ஏமாற்றத்தால் உன் உள்ளம் உடைந்து விடக் கூடாதே என்பதற்காகத்தான்! முடிந்தால் நானே அவள் யாரென்று உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன். எப்படியாவது அந்தச் செழியனை இங்கிருந்து விடுவித்துக் கொண்டு போவதற்காகவே அவள் வந்திருக்கிறாள்.''

அண்ணன் தந்த தகவலைக் கேட்டுத் தாமரை இடிந்து போனாள். இருப்பினும் அவளுக்கு ஓர் ஆறுதல், அதே சமயம் தாங்க முடியாத வெட்கம், ஒரு பெண்ணையா காதலித்தோம் - என்று.

தனக்கு எதிராக மரமாளிகையில் நடைபெறும் உரையாடல்களைப் பற்றிச் சிந்தனை கூட இல்லாமல் முத்துநகை தன் காதலன் தனக்கிட்ட

கட்டளையை நிறைவேற்றுவதற்காகக் கரிகாலனின் மாளிகையில் நுழைந்தாள். கரிகாலனைத் தனியாகச் சந்தித்தால் அவனைக் கொன்று வீழ்த்திவிட்டுச் சோழ மண்டலத்தையே தன் காலடியின் கீழ்க் கொண்டு வரவேண்டுமென்று யார் மனக்கோட்டை கட்டியிருக்கிறானோ, அவனுக்குச் சாதகமாகச் சோழநாட்டு சுடர்க்கொடியாம் முத்துநகை சோழப் பேரரசனிடம் பேசுவதற்குப் போய்க் கொண்டிருந்தாள்.

எப்படியும் பாண்டியனுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றி யாக வேண்டும் என்ற துடிப்பு கரிகாலனுக்கு மிகுந்திருந்தது. தன் நாட்டுக்கு வந்தவன் மட்டுமல்ல. தன் உயிரையே மீட்பதற்குக் காரணமாக இருந்த செழியனைக் காப்பாற்ற வேண்டியது தலையாய கடமையெனக் கொண்டான். அவன் நினைத்தால் இருங்கோவேள் எங்கே ஒளிந்திருந் தாலும் அந்த இடத்தோடு அவனை அழித்து ஒழித்துவிடமுடியும். அத்துணை ஆற்றலும், படை வலிமையும் பெற்றிருக்கிறான். ஆயினும் முத்துநகையின் கருத்துக்கு அவன் மதிப்பளித்துக் காத்திருந்தான்.

அதே போல் புலவர் காரிக்கண்ணனார் கூறிய வார்த்தைகளும் சிந்தித்துப் பார்க்க வேண்டியவைகளாகவே அவனுக்குத் தோன்றின. செழியனை உயிரோடு விடுவிப்பது தான் இலட்சியம் என்கின்றபோது ஆர்ப்பாட்டமான போராட்டம் அதற்குப் பயன்படாது என்பது, காரிக்கண்ணனார் அவனிடம் முதலில் எடுத்துச் சொன்ன வாதம். அதன்படி வேறு வழிகளில் முயற்சி எடுக்க முனையும்போது முத்துநகை குறுக்கிட்டுத் தானே அந்தக் கடமையை மேற்கொண்டு, திறம்பட முடிப்பதாக வாக்குறுதி அளித்து அவனை அமைதிப்படுத்திவிட்டாள். இதற்கிடையே பெருவழுதிப் பாண்டியன் செழியனை மீட்கும் முயற்சியில் இறங்கியிருப்பதும், அதற்கெனப் படை அனுப்பியிருப்பதும் இன்னும் கரிகாலனுக்குத் தெரியாது.

நிம்மதியற்ற உள்ளத்தோடு சோழன், தன் மாளிகையில் அங்குமிங்கும் உலவிக்கொண்டிருந்தான். உத்தரவிட்ட நேரத்தில் பாய்ந்து சென்று படையழிக்கும் சக்தி வாய்ந்த படைகளிருந்தும், சுட்டு விரல் அசைத்தால் எட்டுத் திக்கும் முரசுகொட்டி வெற்றிக்கொடி ஏற்றிக் காட்டும் வீரர்கள் காத்திருந்தும் எதுவும் செய்ய முடியாத நிலையில் சோழப் பெருவேந்தன் குழப்பமுற்றிருந்தான். இருங்கோவேளைப் பிணமாக்கிப் போடவேண்டுமென்றால் ஒரு நொடிக்குள் நடந்துவிடும்.

ஆனால் செழியன்? அவனை எப்படி மீட்பது ? கேள்விக் குறிகள் நெஞ்சத்தில் ஒன்று பத்து நூறாக முளைத்தன. ஏதாவது ஒரு முடிவு கண்டேயாகவேண்டும் என்று கரிகாலன் ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கி விட்டான். இளவயதில் அவன் இருந்த இடத்திற்குத் தீ மூட்டியபோது எப்படி வெளியேறுவது என அங்குமிங்கும் ஓடினானே, அப்போது கூட

அவனுக்கு இவ்வளவு குழப்பமில்லை. பாண்டியனுக்கும் தனக்கும் ஏற்பட்டுள்ள நட்புரிமைக்குக் களங்கம் ஏற்படும் வகையில் எதுவும் நடந்துவிடக் கூடாதேயென்று மிகவும் அஞ்சினான். அப்படி நட்புரிமை கெடுவது தன் ஆட்சிக்குப் பலக்குறைவு என்று அவன் எண்ணி வருந்தவில்லை. தான் வளர்த்து வரும் பண்பாட்டுக்கு ஊறு நேரிடுமே என்றுதான் கவலைப்பட்டான்.

இவ்விதம் மனப் போராட்டத்தில் திண்டாடிக்கொண்டிருந்தவனின் முன்னே மெய்க்காப்பாளன் தோன்றி முத்துநகை வந்திருப்பதை அறிவித்தான். ''அழைத்து வா!'' என்று ஆவலுடன் கூறிவிட்டு, வாயிற்பக்கமே விழி வைத்துக் காத்திருந்தான்.

அவளும் மன்னனை வணங்கியவாறே எதிரே வந்து நின்றாள். அரசனின் கண் அசைவு மூலம் நோக்கத்தைப் புரிந்துகொண்ட மெய்க் காப்பாளனும் அந்த இடத்தை விட்டு நகர்ந்தான். அவளை உட்காரச் சொல்லிவிட்டு, தானும் எதிரே உட்கார்ந்து அவள் என்ன சொல்லப் போகிறாள் என்பதையே ஆவலுடன் எதிர்பார்த்தான் மன்னன்.

''பாண்டியர்கள் படை, இருங்கோவேளை எதிர்த்துப் புறப்பட்டு விட்டது மன்னவா!''

''என்ன? பாண்டியப் படையா? இருங்கோவேளை எதிர்த்தா?'' -கரிகாலன் வியப்பிலாழ்ந்தான்.

''ஆம் மன்னவா, பாண்டிய மன்னரின் ஒற்றர் ஒருவர் மூலம் அறிந்து கொண்டேன்.''

''அப்படியானால் செழியனை உயிரோடு மீட்கும் உத்தேசம் இல்லையா?''

''செழியனை மீட்பதற்காகவே படையெடுப்பாம்! ஆனால் அந்தச் செய்தி இருங்கோவேளுக்குத் தெரிந்து விட்டது. அவன் எச்சரிக்கையாக இருக்கத் திட்டம் தீட்டி விட்டான்.''

''இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?''

''எல்லாம் இந்த வேடத்தின் மகிமையால்தான். அன்று தங்களிடம் தெரிவித்தவாறு இருங்கோவேளின் கோட்டைக்குள்ளேயே நுழைந்து விட்டேன். செழியன், இருங்கோவேளின் சிறையிலேதான் அடைக்கப் பட்டிருக்கிறார். பாண்டிய மன்னருக்குச் செழியன் எழுதியதுபோல் ஓர் ஓலை எழுதி அதை ஒரு வீரன் வாயிலாக இருங்கோவேள் அனுப்பி வைத்தான்!''

''என்ன ஓலை அது?'' -கரிகாலன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

''செழியன், இருங்கோவேளின் நண்பனாகிவிட்டதாகவும், பாண்டிய மன்னன் செழியனைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லையென்றும் செழியனைக் கொண்டே எழுதப்பட்ட ஓலையாகும் அது. முக்கியமாகப் பாண்டியர் படையெடுப்பைத் தடுத்து, அவர்களைத் திரும்பிடச் செய்யவே அந்த ஏற்பாடு. நல்ல வேளையாக அந்தச் சூழ்ச்சியில் இருங்கோவேள் வெற்றியடையவில்லை. நான் குறுக்கிட்டு ஓலையைக் கைப்பற்றிவிட்டேன்!''

''அப்படியா! நீயா?''

''ஏன் மன்னா வியப்பு? ஓலையை தாங்கிச் சென்றவனை நானே கொன்று கிடத்தி விட்டு அந்த ஓலையையும் பிடுங்கிக் கொண்டேன்!''

''எங்கே அந்த ஓலை?''

''அது பாண்டிய நாட்டு ஒற்றர் வீரபாண்டியிடம் இருக்கிறது அரசே! சொல்ல மறந்து விட்டேனே, அந்த வீரபாண்டியைப் பற்றி! மிகவும் நல்லவர். ஒப்பற்ற வீரர். பாண்டிய நாட்டுக்காகத் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் இருங்கோவேளைச் சுற்றிக் கொண்டு திரிகிறார். பாவம், ஒரு சாதாரண விறகு வெட்டியைப் போலக் காடுமேடெல்லாம் அலைகிறார்; கஷ்டப்படுகிறார்!''

''அப்படியா? மிக்க மகிழ்ச்சி! ஆனால் சோழ மண்ணில் களங்கம் இருத்தலாகாது-களை முளைத்தலாகாது - என்று கங்கணம் கட்டிக் கொண்டு திரியும் சோழர்குடித் திலகமாம் உன்னை விட உயர்ந்தவனோ அந்த வீரபாண்டி? இருக்க முடியாது. உன் கடமையுணர்வும் தியாக உள்ளமும் யாருக்கும் இருக்க முடியாது!''

''தங்கள் பாராட்டுதலுக்கு நன்றி வேந்தே! இந்த ஊக்கம் நிறைந்த மொழிகள் மேலும் மேலும் என்னை உற்சாகப்படுத்தட்டும். எனக்கு நம்பிக்கையிருக்கிறது, எப்படியும் செழியனை மீட்டு வந்து விடலாம் என்று! அந்த வகையில் வீரபாண்டியின் துணையும் நிரம்ப இருக்கிறது.

''முத்துநகை! நீ என்ன திட்டம் போட்டிருக்கிறாய் என்றே எனக்குப் புரியவில்லை. பாண்டிய நாட்டுப் படைகள் இருங்கோவேளை வளைத்துக் கொள்வதால் இருங்கோவேள் பிடிபடுவான். ஆனால் செழியனைக் கொன்றுவிட்டால் என்ன செய்ய இயலும்? பொதுவாக எனக்கு இந்தப் படையெடுப்பு அவ்வளவு திருப்திகரமான திட்டமாகத் தெரியவில்லை. இதில் பாண்டிய மன்னர் என்னைக் கலந்து கொள்ளாதது ஏன் என்றும் தெரியவில்லை. செழியன் விஷயத்தில் நான் அலட்சியமாக இருந்துவிட்டதாகக் கருதியிருக்கிறாரோ என்னவோ?''

''அப்படியொன்றும் இருக்காது. ஆனால் ஒன்று. இங்கு நான் வந்ததே எதற்குத் தெரியுமா? பாண்டிய மண்டலத்து ஒற்றர் வீரபாண்டி மிக

அவசரமாகத் தங்களைத் தனியே சந்திக்க வேண்டுமாம்! அது முடியுமா என்று தங்களைக் கேட்டுப் போகவே வந்தேன்.''

''என்னை எதற்காகச் சந்திக்க வேண்டுமாம்?''

''படையெடுப்பைப் பற்றித்தான் இருக்குமென்று நினைக்கிறேன்; தனிமையில் சந்தித்துப் பேச வேண்டுமென்று கூறினார்.''

''ஓ! பேசலாமே - நான் தயாராயிருக்கிறேன். ஒற்றர் எப்போது வேண்டுமானாலும் வரலாம்.''

''எங்கே அவரை அழைத்து வருவது?''

''இங்கேயே அழைத்து வரலாம். உங்களை மெய்க்காப்பாளன் வரவேற்பான். அதன் பிறகு நான் தங்கியிருக்கும் தனியிடத்துக்கு ஒற்றர் அழைத்து வரப்படுவார்.''

''அப்படியானால் இன்றிரவே அழைத்துவர முயல்கிறேன். இல்லையேல் நாளைக்கு....?''

''தாராளமாக! இதோ! இப்போதே மெய்க்காப்பாளனுக்கும் அறிவித்து விடுகிறேன்'' எனக் கூறியவாறு கரிகாலன் கையொலி செய்ய, மெய்க்காப்பாளன் எதிர் வந்து நின்று வணங்கினான்.

''இன்றோ, நாளையோ - முத்துவுடன் இன்னொரு ஆள் வருவார். என்னிடம் அழைத்து வர வேண்டும்'' என்று அவனுக்கு உத்தரவிட்டு விட்டு முத்துநகையைப் பார்த்து ''உன்னை எப்படிப் புகழ்வது என்றே தெரியவில்லை. திறமையும் பயிற்சியும் பெற்ற தலைசிறந்த ஒற்றர்களுக்குக் கூட உன் ஆற்றல் வருமா என்பது சந்தேகம்'' என்று பாராட்டினான் பூம்புகார் மன்னன். அரசரின் புன்னகையைப் பரிசாகப் பெற்று பெருமிதங் கொண்ட முத்துநகை, விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

வீரபாண்டியை அழைத்துவந்து கரிகாலரிடம் சந்திக்க வைப்பதற்காக உற்சாகத்துடன் கிளம்பினாள். தன்னை அறியாமல் ஒரு பெரும் சதிக்குத் தான் உடந்தையாகி விட்டோம் என்பது அவளுக்குத் தெரியவில்லை. அவள் மாளிகைத் தாழ்வாரத்தைக் கடந்து வெளியேறும்போது எதிரே புலவர் காரிக்கண்ணனார் வேகமாக வந்து கொண்டிருந்தார். சென்றவள் தந்தையையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் நீர் கலங்கிற்று.

''அப்பா!'' என்று கூவிட இருந்தாள். சிரமப்பட்டுத் தன்னை அடக்கிக் கொண்டாள். புலவருக்குத் தன்னைக் கடந்து செல்வது தன் மகள்தான் என்று தெரிந்திருந்தால், ''அம்மா! முத்துநகை! என் கண்ணே!'' என்று ஓலமிட்டுப் புலம்பி அழுது துடித்திருப்பார்; துவண்டிருப்பார். சற்று நேரம்

அவரையே பார்த்துக்கொண்டே இருந்து விட்டு அவள் போய்விட்டாள், கண்ணீரைத் துடைத்துக் கொண்டு!

புலவர், கரிகாலனுக்கு நேரே போய் நின்றதும் அவனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. காரணம், புலவரின் முகத்தில் அவன் கண்ட மாறுதல்தான்! மகளைக் காணாத சோகத்தால் புலவர் முகம் மாறி இருந்ததை அவன் இதற்கு முன் கண்டிருக்கிறான். ஆனால் இப்போது அவன் காணும் அவரது முகத்தில் வேதனையைவிடக் கோபமே மிகுந்திருக்கக் கண்டான்.

''புலவரே!'' என்றான் ஆவலுடன்!

''சோழ மண்டலத்தின் கீர்த்தி குப்பை மேடாகி விட்டது!'' என்று கத்தினார் புலவர்.

''என்ன சொல்கிறீர்கள்?''

-கரிகாலன் மிகுந்த ஆச்சரியத்துடன் புலவரிடம் நெருங்கி வந்து அவர் உதடுகளின் அசைவையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

''வீரத்தை நிலைநாட்டுவது பெரிதில்லை. செல்வத்தைக் குவிப்பதும் பெரிதில்லை; உலகெங்கும் புகழ்க்கொடி நாட்டுவதும் பெரிதில்லை; ஆனால் மன்னவா! வாய்மையைக் காப்பாற்றுவதே சிரமமான வேலை! அதைக் காப்பாற்றத் தவறிவிட்டது சோழப் பேரரசு!''

''விவரமாகச் சொல்லுங்கள் புலவர் பெருமானே!''' - கரிகாலன் ஆத்திரத்துடன் பதிலை எதிர்பார்த்தான்.

''செழியனை மீட்டுத் தருவது நமது பொறுப்பு என்று பாண்டியனிடம் சொல்லியிருக்கிறீர்கள் அல்லவா?''

''ஆமாம், சொன்னேன்.''

''அதற்காக இதுவரை இங்கு நடைபெற்ற முயற்சி என்ன?''

கரிகாலன் மௌனமாக இருந்தான்.

''பாண்டியன் பெருவழுதி சோழரின் வார்த்தைக்கு மதிப்பு வைத்தது குற்றம் இல்லையா?''

கரிகாலன் பேசவில்லை.

''எந்தப் படையெடுப்பு வேண்டாமென்று நான் தடுத்தேனோ அந்தப் படையெடுப்பு முறையால் செழியனை மீட்க வேண்டிய அவசியம் பாண்டியனுக்கு ஏற்பட்டு விட்டது. சோழர், நிச்சயம் செழியனை மீட்கும் காரியத்தில் ஈடுபடுவார் என்றுவேறு நான் பாண்டியருக்கு உறுதியளித்

திருந்தேன். இப்போது என் உறுதியும் காற்றில் பறந்துவிட்டது. யாரால் மன்னா? யாரால்? எல்லாம் தங்களால்தான்!''

கரிகாலன் புலவரையே பார்த்துக் கொண்டிருந்தான். வாய் திறக்கவில்லை.

''செழியனை மீட்கப் படையெடுப்புமுறை தேவையில்லை என்று நானே கூறினேன்; இப்போது நானே பாண்டியனின் திட்டத்துக்குத் தலை அசைத்தேன்.''

கரிகாலனின் உதடுகள் அசைந்தன.

''ஏன்?''

''ஏன் என்றா கேட்கிறீர்கள் மன்னா? மிகவும் வேடிக்கைதான்! நமக்கு அறவே அக்கறையில்லை. பாண்டியராவது அவரது சொந்த முயற்சியில் வெற்றியைக் காணட்டுமே என்றுதான் அவர் விருப்பத்துக்கு இணங்கினேன்''

''பாண்டியனுக்கு என்மீது வருத்தம் அல்லது கோபம். அதனாலே என்னைக் கலந்து கொள்ளாமல் இருங்கோவேள் மீது படையெடுக்கிறார். இல்லையா?''

''அப்படியும் இல்லை. சோழ மன்னர் என்ன செய்வதென்று புரியாத நிலையில் குழப்பமடைந்து இருக்கிறார். போரில் வென்ற நாட்டைத் திரும்ப இருங்கோவேளிடம் கொடுத்து அதற்குப் பதில் ஒரு சாதாரண உயிரை மீட்பது என்பது முடியாத காரியந்தான். இந்நிலையில் சோழருக்குத் தொல்லை கொடுக்காமல் நாமே செழியனை மீட்க முயலுவோம் என்று துணிந்துவிட்டார். அவ்வளவுதான்!''

''அவசரக்காரர்!''

''அலட்சியத்தைவிட அவசரம் எவ்வளவோ மேல் என்பேன் நான்!''

''அலட்சியம் -அவசரம் இரண்டுக்குமிடையே அமைதியோடு தெளிவான காரியங்களில் ஈடுபடுதல் என்ற குணமும் இருக்கிறது. புலவரவர்களே! தங்களுக்குத் தெரியாதவைகளையா நான் கூறப் போகிறேன்?''

''என்ன கூறினாலும் சரி; நம் நாட்டுக்கு வந்து நம் உயிரைக் காப்பாற்றும் முயற்சியில் அல்லற்படும் ஒரு வீரனைப்பற்றிக் கவலைப் படாமல் இருப்பது பண்பே அல்ல! நல்லவர்களுக்கு அழகே அல்ல! இதற்குப் பெயர்தான் கடைந்தெடுத்த தன்னலம்!''

''போதும்! புலவரே, போதும்! இந்தக் கரிகாலனைத் தாங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. செழியனை மீட்பதற்காக நான்

எத்தகைய முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன் என்பது தங்களுக்குத் தெரியாது. தாங்கள் இங்கு வரும்போது தங்களைக் கடந்து சென்றானே ஓர் இளம் வீரன். அவனைப் பார்த்தீர்களா?''

''ஆமாம் பார்த்தேன்''

''யார் அவன்?''

''ஒற்றன் என்றீர்கள் அன்று!''

''ஒற்றன் மட்டுமல்லன், காணாமற்போன உங்கள் மகள் முத்துநகையும் கூட!''

''ஆ! என்ன! என் மகளா! முத்துநகையா?''

''ஆமாம்! அவளைக் கேட்டுப் பாருங்கள்! செழியனை மீட்பதற்கு நான் எவ்வாறெல்லாம் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன் என்று. முத்துநகை மட்டும் குறுக்கிடாதிருந்தால் இருங்கோவேளின் தலை எப்போதோ கீழே விழுந்திருக்கும். உங்கள் மகள் அளித்த உறுதியின் பேரில்தான் செழியனை எப்படியும் தந்திரமாக மீட்டுவிடலாம் என்று திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறேன். அதற்குள் அவசரப்பட்டு விட்டார் பாண்டியர்!''

''மன்னவா! எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என் மகள் எப்படி இங்கு வந்தாள்? காணாமற் போன என் கண்மணி இங்குதான் இருக்கிறாளா! நான் எவ்வளவு பேறு பெற்றவன்! ஆகா! என்னைப் போன்ற புகழுடையவன் யாருமே இருக்க மாட்டார்கள். இப்படியொரு நாட்டுப் பற்றுள்ள செல்வத்தையா நான் மகளாகப் பெற்றிருக்கிறேன்? அடடா! இந்த வார்த்தைகள் என் செவிகளில் செந்தேனாகப் பாய்கின்றனவே! அரசே! என்னை மன்னித்து விடுங்கள்! அவசரப்பட்டு, ஆத்திரத்தில் ஏதோ கூறிவிட்டேன்'' என்று ஆனந்தக் கண்ணீர் பொங்க நின்றார் காரிக்கண்ணனார்.

''பரவாயில்லை புலவர் பெருமானே! தாங்கள் ஒன்றும் தவறு செய்து விடவில்லையே! மன்னரின் கடமையை எடுத்துரைத்தீர்கள்; அவ்வளவு தானே! எனக்கிருக்கும் வருத்தமெல்லாம் என் நண்பர் பாண்டியர் என்னைக் கலந்து கொள்ளாமல் இருங்கோவேள் மீது படையெடுத்து விட்டாரே என்பதுதான்!'' என மிகக் கவலையுடன் கூறினான் கரிகாலன்.

''இல்லை மன்னா! தங்களுக்குத் தொல்லை தரக்கூடாது என்பதே அவர் எண்ணம். இருப்பினும் இப்போதும் ஒன்றும் முழுகிவிடவில்லை. தாங்கள் என்ன சொல்கிறீர்களோ அதன்படி அவரை நடக்கச் செய்வது என் பொறுப்பு!'' என்று புலவர் கடமை உணர்ச்சியுடன் பதில் கூறினார்.

''இருங்கோவேளை மடக்குமுன் நானும் பாண்டிய நாட்டுத் தளபதியும் சந்திப்பது நல்லது. பாண்டிய நாட்டு ஒற்றன் கூட என்னைச் சந்திப்பதாக முத்துநகையிடம் கூறி அனுப்பியிருக்கிறான். அது போலவே தளபதியைச் சந்திப்பது முக்கியம் என்று கருதுகிறேன்.''

''அதற்கென்ன? இப்போதே நான் போகிறேன். படை வரும் வழியில் தளபதி நெடுமாறனைச் சந்தித்துத் தங்களிடம் அழைத்து வருகிறேன். நேரில் பேசி ஆக வேண்டியவைகளைச் செய்யுங்கள்.''

''அதுவே நலம். புலவர் பெருமானே! தாங்கள் உடனே புறப்படுங்கள்; தாங்கள் போனால்தான் அவர்களிடம் விளக்கமாகப் பேச முடியும். இல்லையேல். 'எனக்கு ஆணையிடச் சோழன் யார்?' என்று கேட்டாலும் கேட்டு விடுவார்கள்!''

''அய்யோ! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். எனக்கு நேரே தங்களைப் பற்றி ஒருவன் அப்படிப் பேசி தப்பிவிடுவானா? நான் கற்ற தமிழாலேயே அவனைக் கொன்று விடுவேன், மன்னா கொன்று விடுவேன்!''

''மகிழ்ச்சி, புலவர் பெருமானே! விரைவில் தளபதி நெடுமாறனுடன் வந்து சேருங்கள்!''

''அரசே ! அதற்குள் மீண்டும் என் முத்து இங்கு வந்தால் நான் வரும் வரையில் எங்கும் போகவிடாதீர்கள்! இங்கேயே...''

''இருக்க வைக்கிறேன். சென்று வாருங்கள்!''

புலவர் விடைபெற்றுக் கொண்டு புறப்பட, சோழன் ஏழடி அவர் பின்னே நடந்து சென்று அவரை வழியனுப்பி வைத்தான்.

புகார்த் தலைநகரத்துக்குப் பத்து கல் தொலைவிலுள்ள பெருவெளி யொன்றில் பாண்டிய நாட்டுப்படை வீரர்கள் இறங்கி தங்குவதற்கேற்ற கூடாரங்களை அமைக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர்; தளபதி நெடுமாறன், தன் துணைத் தளபதியிடம் போர்முறைகள் எப்படியெப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி விவாதித்துக் கொண்டிருந்தான். அவன் தங்கியிருந்த முகப்பில் மீனக்கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது. கூடாரம் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்த வீரர்கள் போர்ப்பரணி பாடியவாறு ஆடி ஓடி மகிழ்ந்தனர். போர்ச் செய்தி கேட்டதும் அவசர அவசரமாகப் போர்க் கருவிகளைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தவர்கள், அந்தக் கருவிகளை மெருகேற்றிக் கூர்மையாக்கிக் கொண்டிருந்தார்கள். சமையற் கலையிலும் வல்லவராயிருந்த சில வீரர்கள் உணவு தயாரிக்கும் அலுவலில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தனர்.

முரசுபோல் காணப்படும் பாத்திரங்களில் ஊற்றி வைக்கப்பட்டிருந்த கள்ளை ஒரு வீரன் எல்லா வீரர்களுக்கும் அளவோடு வழங்கிக் கொண்டிருந்தான். அதை அருந்தியவர்கள் புது ஊக்கமும் அருந்தாதவர்கள் அருந்தப் போகிறோம் என்ற புது உற்சாகமும் பெற்றுக் காட்சி தந்தார்கள்.

போராட்டக் களிப்பில் மூழ்கியிருந்த அவர்கள் எல்லாரும் திடுக்கிட்டுத் திரும்பும் அளவுக்குக் குதிரையொன்றின் குளம்படி ஓசை பாசறையை நோக்கி வந்து கொண்டிருப்பதை உணர்ந்தனர். வீரர்களின் கரங்கள் அவர்களை அறியாமலேயே வாட்களை ஏந்திக் கொண்டன. ஒரே அமைதி! ஒலி வரும் திக்கிலேயே படை வீரர்களின் பார்வை நின்றது. தளபதி நெடுமாறன் தனது கூடாரத்தை விட்டு எழுந்து வெளியே வந்து நின்றான். தங்கள் வாளுக்கு ஏதோ ஓர் இரை வருகிறது என ஒவ்வொரு வீரரும் எண்ணிக் கொண்டு காத்திருந்தனர்.

ஓசை மிக அருகே வந்துவிட்டது. மேலும் கூர்மையாக அனைவரும் கவனித்தனர். குதிரை, தளபதி நெடுமாறனை நோக்கி வந்து கொண்டிருந்தது. சந்தேகமில்லை. அதன் மீது அமர்ந்திருப்பவன் வேளிர்குடியைச் சேர்ந்த வீரன்தான். அவனைக் கண்ட பாண்டிய நாட்டார் வாளுருவிப் பாய்ந்தனர். வீரன், குதிரையை விட்டுக் கீழே

குதித்தான். குதித்தவன் சுற்றிலும் பார்த்துவிட்டுச் சிரிக்க ஆரம்பித்தான். ''ஒருவனை எதிர்க்க இத்தனை வீரர்களா?'' இதைக் கேட்டுவிட்டு மறுபடியும் சிரிக்கத் தொடங்கினான்.

ஆத்திரமடைந்த ஒரு பாண்டியநாட்டு வீரன், ''ஏய் நிறுத்து! சிரித்தது போதும் ! பாம்பை அடிக்கப் பத்து பேர் கூடுவது தான் வழக்கம்! அது பயத்தால் அல்ல - பாம்பு நழுவி விடுமோ என்ற சந்தேகத்தால்!'' எனக் கூறியவாறு வாளை ஓங்கினான்.

உடனே தளபதி நெடுமாறன் அவனைத் தடுத்து நிறுத்தி, குதிரையில் வந்தவனை அருகே அழைத்து, '' நீ யார்? எங்கு வந்தாய்?'' என்று விசாரித்தான்.

''நான் வேளிர்குடி வீரன்; இருங்கோவேள் மன்னரே என் தலைவர்! மன்னரின் புதிய நண்பர் செழியன் என்னைத் தங்களிடம் அனுப்பினார்.''

குதிரை வீரனின் பதில் நெடுமாறனைத் திகைப்பில் ஆழ்த்தியது.

''என்ன வீரனே! என்ன சொல்கிறாய்? மன்னர் இருங்கோவேளின் நண்பர் செழியனா? ஓகோ... போர் முறையில் நீங்கள் கண்டுள்ள புதிய முறை இதுவோ? மிக மிக வேடிக்கை. மேலும் சொல் கேட்போம்!'' எனக் கேலி மொழிந்தான் நெடுமாறன்.

''வார்த்தைகளைச் செலவிடுவானேன்? இதோ இருக்கிறது செழியன் தந்த ஓலை. இதைப் பாண்டிய மன்னரிடம் கொடுக்க வேண்டுமென என்னை அனுப்பினார். வழியில் தங்களைச் சந்தித்தது நல்லதாயிற்று. தாங்களே இதைப் பாண்டிய மன்னரிடம் சேர்த்துவிடுங்கள்'' எனக் கூறியவாறு ஓலையை எடுத்துத் தளபதியிடம் நீட்டினான் அவன்.

தளபதி, ஓலையை ஒரு முறைக்கு இரு முறை படித்தான். பின்னர், தன்னையே நம்பாமல் தன்னுடன் இருக்கும் துணைத் தளபதிகளிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னான். தளபதிகள் ஒருவர் முகத்தை ஒருவர் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டனர். நெடுமாறன் முகம் சிவப்பேறியது. அவன் மீசைக் கற்றைகள் துடித்தன. விழிகளில் கனல்! இடக் கரத்தில் வலக்கரத்தால் ஓங்கிக் குத்திக் கொண்டு அங்குமிங்கும் நடந்தான். ''துரோகி! செழியன் துரோகி!'' எனப் பலங்கொண்ட மட்டும் கத்தினான். எதிரி நாட்டு வீரன் எதிரே நிற்கிறான் என்பதையும் மறந்துவிட்டு உறுமினான். நெடுமாறனின் ஆவேசத்தையும் துணைத்தளபதிகளின் கலக்கத்தையும் வெகு அலட்சியமாகப் பார்த்துக் கொண்டிருந்த வேளிர்குடிவீரன், ''நான் வருகிறேன். வணக்கம்'' எனக் கூறியவாறு குதிரையில் ஏறி உட்கார்ந்து, அந்த இடத்தை விட்டு வேகமாகப் பறந்து

சென்றான். அந்தக் குதிரையின் குளம்படிச் சத்தத்துடன் நெடுமாறனின் இதயமும் போட்டி போட்டுக் கொண்டு முழங்கியது.

"சே! நினைக்கவே முடியவில்லையே! செழியன், ஒரு பெண்ணின் கண்வீச்சில் மயங்கிப் பாண்டிய மண்டலத்தையே காட்டிக் கொடுத்து விட்டானே!" என்று நெடுமாறன் அதிர்ச்சி அடைந்த தொனியில், புலம்பும் தோரணையில், பேச ஆரம்பித்தான். தளபதியின் கோபத்தினூடே யாரும் எதுவும் குறுக்கிட்டுப் பேசுவது சரியல்ல என்று கருதி எல்லோரும் அந்த இடத்தை விட்டு ஊமைகளைப் போல் ஒதுங்கினர்.

நெடுமாறன் மட்டும் தனியே நின்று வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான். தங்கள் வாளுக்கு வந்த வேலை போய்விடுமோ என்ற கவலையில் வாளின் உறைகளைத் தடவிப் பார்த்துக் கொண்டு நின்றனர் வீரர்கள்.

அப்போது தொலைவில் பள்ளத்தாக்கான பகுதியிலிருந்து யாரோ வருகின்ற அடையாளம் தெரிந்தது. முதலில் ஒரு கொடி மட்டும் தெரிந்தது. கொடியை உற்றுக் கவனித்தனர். சோழ நாட்டுப் புலிக்கொடிதான் அது.

புலிக்கொடி அங்கு வரவேண்டிய அவசியம்?

நெடுமாறனுக்கு மீண்டும் குழப்பம். ஆனால் அந்தக் குழப்பம் நீண்ட நேரம் நீடிக்காமல் புலிக்கொடி மிக அண்மையில் வந்து விட்டது. குதிரை வீரர்கள் புடைசூழ அழகிய சிறுதேர் ஒன்றில் காரிக்கண்ணனார் அமர்ந்து பாசறை நோக்கி வந்து கொண்டிருந்தார். வருவது புலவர் பெருமான் என அறிந்த தளபதி நெடுமாறன் எதிர் கொண்டழைத்துக் கை நீட்டித் தேரினின்றும் இறங்கச் செய்து மரியாதையுடன் பாசறைக்குள் அழைத்துச் சென்று உட்கார வைத்தான்.

புலவர், தளபதிகளின் முகத்தையெல்லாம் பார்த்து விட்டு, "ஏன் எல்லாருடைய முகங்களிலும் ஒரு மாற்றம்? ஒரு வேளை போர் வெறியால் விளைந்த மாற்றமோ?" என ஆவலுடன் கேட்டார்.

"அப்படியொன்றுமில்லை, புலவர் பெருமானே! போர் வெறி இது போன்ற மாற்றங்களை அளிப்பதில்லை. போர்க் களத்திலே முதுகிலே வேல்பட்டு வீழ்ந்தவனின் தாயின் உள்ளம் படும் வேதனையைவிட அதிகமானது இப்போது எமதுள்ளம் படும் வேதனை!" - நெடுமாறனின் பதிலைக் கேட்ட காரிக்கண்ணனார் திடுக்கிட்டார்.

"என்ன? என்ன? என்ன சொல்கிறீர்கள்?"

''தமிழ் வளர்க்கும் தங்களிடம் மறைப்பதற்கு என்ன இருக்கிறது? யாரை மீட்பதற்காக இந்தப் போர் நடைபெறுகிறது என்று தங்களுக்குத் தெரியாதா என்ன?''

''புரியும்படி சொல்லுங்கள்.''

''எதைச் சொல்வது புலவர் ஏறே! வேலினும் சிறந்தது பெண்கள் விழியென்று கவிதைகள் புனைவீர்கள்; படித்திருக்கிறோம். ஆனால் நாட்டைவிடச் சிறந்தவர்கள் பெண்கள் என்று கள்வெறியேறிய கவிஞன் கூடச் சித்தரித்ததில்லை. அப்படிச் சித்தரித்தால் அவன் தலை தப்புவது மில்லை. ஆனால், இங்கு வியப்புக்குரிய வேதனைச் செய்தி கேட்கிறோம் புலவரே! யாருக்காகப் பெருவழுதிப் பாண்டியர், ஊணுறக்கமின்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருகிறாரோ - யாருக்காகப் பல வீரர்கள் களம் புகுந்து தங்கள் உயிர் கொடுக்கவும் தயாராக வந்திருக்கிறார்களோ - அந்தச் செழியன் துரோகியாகி விட்டான்! கடைந்தெடுத்த கோழையாகி விட்டான்! பகைவனின் நண்பனாகி விட்டான்! அங்கேயிருக்கிறாள் ஒரு பெண். அவளை விரும்பிப் பிறந்த மண்ணையும் மறந்து விட்டான்!''

நெடுமாறன் எரிமலைபோல் குமுறிக் கொண்டிருந்தான்! புலவருக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்னால் இதை நம்ப முடியவில்லையே!'' என்று கூறிய புலவரிடம் ''இதோ இதைப் படித்துப் பாருங்கள்!'' என்று ஓலையை அளித்தான் தளபதி.

ஓலையைப் படித்த புலவரின் கண்களிலிருந்து முத்து முத்தாக உதிர்ந்த கண்ணீர் ஓலையை நனைத்தது. விம்முங் குரலில் பேசினார். ''பாண்டிய நாட்டு வீரர்களே! செழியன் துரோகியென்று இன்னும் என்னால் நம்ப முடியவில்லை!'' என்று கத்தினார். ''எழுத்தாணியின் கூர் மழுங்கியிருக் கிறதா இல்லையா என்பது ஓலையில் எழுதத் தொடங்கியதுமே புரிந்துவிடும். அது போலவே மனிதன் நல்லவனா கெட்டவனா என்பது அவனுடன் பழகத் தொடங்கும்போதே தெரிந்துவிடும். நான் அறிந்த வரையில் செழியன் துரோகியென்று என்னால் ஏற்றுக் கொள்ளவே இயலவில்லை.'' என்று புலவர் விளக்கம் கூறினார்.

''எழுதும்போது இடையிலே கூட எழுத்தாணியின் கூர் மழுங்கிவிடுவதுண்டு. நல்ல மனிதனும் சூழ்நிலையால் கெடுவதுண்டு; செழியன், அதற்கு விதிவிலக்காக இருக்க முடியாதே புலவரே!'' - இது நெடுமாறனின் பதில்.

''நான் ஏன் குழப்பமடைய வேண்டும்? முதலில் நான் வந்த வேலையைச் சொல்லிவிடுகிறேன். சோழ மன்னர் என்னை இங்கு

அனுப்பினார்; போர் துவங்குவதற்கு முன்பு தங்களுடன் பேச வேண்டுமென்று அவர் விரும்புகிறார். இப்போது போர் துவங்குவது பற்றியே சந்தேகம் வளருமளவுக்கு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்த வேளையில் தாங்கள் கரிகாற் சோழரைச் சந்திப்பது எல்லா வகையிலும் நன்மை பயப்பதாகவே அமையும்!'' என்று புலவர் வந்த காரியம் பற்றிய பேச்சைத் தொடங்கினார்.

''சோழரைச் சந்திப்பதா? பாண்டிய மன்னரின் அனுமதி இல்லாமலா?...'' நெடுமாறன் சிந்தனையிலாழ்ந்தான்.

''நட்புரிமையுடன் கூடிய இரு நாடுகள்தானே பாண்டியமும் சோழமண்டலமும்! ஒரு நாட்டின் தளபதி இன்னொரு நாட்டின் மன்னரைச் சந்திப்பது தவறல்லவே. இது பற்றிப் பாண்டியர் தவறாகக் கருதமாட்டார் என்பதற்கு நான் பொறுப்பு. அதுமட்டுமல்ல, நானே இந்த ஏற்பாட்டைச் செய்தேன் என்று கேள்விப்பட்டால் பெருவழுதிப் பாண்டியர் மகிழ்வாரே தவிர மறுத்துரைக்க மாட்டார்!'' என்று புலவர், நெடுமாறனை இணங்கச் செய்யும் அளவுக்குத் தைரியம் அளித்தார்.

பின்னர், நெடுமாறனும் கரிகாற் சோழரைச் சந்திப்பதற்குப் புறப்படத் தயாரானான். தளபதியுடன் பாண்டிய நாட்டுக் குதிரை வீரர்கள் பதின்மர் புறப்பட்டனர். வாட்ட சாட்டமான குதிரையொன்றில் நெடுமாறன் ஏறி அமர்ந்து, துணைத் தளபதிகளை எச்சரிக்கை செய்து விட்டு, அவர்கள் பொறுப்பில் படையினை ஒப்படைத்து விட்டுப் புலவருடன் புகார்த் தலைநகரம் நோக்கிக் கிளம்பினான்.

பாசறையை விட்டு வெகுதூரம் அவர்கள் கடந்து விட்டார்கள். இருமருங்கிலும் புதர்கள் அடர்ந்த குறுகிய பாதையொன்றில் அவர்களின் பயணம் நடந்து கொண்டிருந்தது. சுற்று முற்றும் சுழல்விளக்கென அலைந்து கொண்டிருந்த நெடுமாறனின் விழிகள் புதர் மறைவில் எதையோ கண்டு அசைவற்று நின்றன. திடீரெனக் குதிரையை நிறுத்தினான்.

புலவர் திகைப்படைந்து, ''என்ன வேண்டும்!'' என்று கேட்டார்.

''ஒன்றுமில்லை?'' என்றவாறு குதிரையிலிருந்து இறங்கினான்.

புலவர், அவனையே வியப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார். மீண்டும் கேட்டார்; ''தளபதியாரே! என்ன தேவை? ஏன் இறங்கிவிட்டீர்?''

''இதோ இந்தப் புதரில் படர்ந்திருக்கும் பச்சிலையைப் பார்த்தீர்களா? எல்லா நோய்களையும் நீக்க வல்லது இது! இதைக் கொஞ்சம் பறித்துப் போகலாம்!'' என்றான் தளபதி.

''பச்சிலையின் பெயர் என்ன?'' என்று கேட்டார் புலவர்!

''வேளிர்குடியின் விஷக்கொடி!'' என்று பலமாகக் கூச்சலிட்டவாறு வாளை உருவிப் புதருக்குள்ளே ஓங்கிக் குத்தினான் நெடுமாறன்.

''ஆ! ஐயோ!'' என்று புதருக்குள்ளேயிருந்து ஒரு பயங்கர ஒலி கேட்டது. புலவர் பயந்து விட்டார். கூட வந்த வீரர்கள் புதர் அருகே ஓடிவந்து சூழ்ந்தனர். புதருக்குள் கிடந்த உருவத்தை இழுத்து நெடுமாறன் வெளியே போட்டான்.

''யார் அது?'' -புலவர் கேட்டார்.

''இவன்தான் செழியன் கொடுத்த ஓலைதாங்கி வந்தவன். வேளிர்குடி வீரன். ஓலையின் விளைவு என்ன என்று பார்ப்பதற்காகப் பதுங்கியிருக்கிறான்'' என்று நெடுமாறன் பதில் கூறிவிட்டுக் குதிரையில் ஏறிக்கொண்டான்.

மற்றவீரர்கள் பிணத்தையெடுத்து அப்பால் மறைத்து விட்டுத் தங்கள் குதிரைகளில் ஏறிக் கொண்டனர்.

''இந்த நிகழ்ச்சியைக் கண்டபிறகு எனக்கு என்னவோ ஓலையின் மீதே சந்தேகம் வருகிறது!'' என்றார் புலவர்.

அதற்கு பதில் ஏதும் கூறாமல் தன் குதிரையைத் தட்டிவிட்டான் நெடுமாறன். மற்றவர்கள் அவனைத் தொடர்ந்தனர்.

சோழவேந்தனைச் சந்திப்பதற்குப் பாண்டிய நாட்டுத் தளபதியைத் தந்தை அழைத்து வரும் அதே நேரத்தில், பாண்டிய நாட்டு ஒற்றனாம் வீரபாண்டியைச் சோழனிடம் அழைத்துச் செல்லும் நோக்கத்துடன் காட்டினிடையேயுள்ள பாழ்மண்டபத்தை நோக்கி மகள் வந்து கொண்டிருக்கிறாள்; அவள் உள்ளத்தில் எத்தனையோ எண்ணங்கள்! இந்த இளம் வயதில் - அதுவும் பெண்ணாகப் பிறந்த ஒருத்தி - பிறந்த நாட்டுக்காகப் பெரும் பணியாற்றுவதை நினைத்து நினைத்து தனக்குத்தானே பெருமை கொண்டாள். வீரபாண்டியையும் சோழரையும் சந்திக்க வைத்து இருங்கோவேளை எதிர்க்கும் போராட்டத்தை வெற்றியுடன் முடித்து விட்டால் செழியன் விடுதலை சுலபமாக நடந்து விடும். பின்னர் வீரபாண்டிக்கும் தனக்கும் திருமணம்! திருமணத்திற்குப் பிறகு நாட்டுப் பணி முடிந்து விட்டதாகப் பொருள் அல்ல! சோழ நாட்டுக்குத் துரோகம் செய்பவர்களை - செய்ய எண்ணியவர்களைக் கண்டு பிடித்துத் தண்டனை வழங்கும் வரையில் ஓய்வு கிடையாது!

இப்படியெல்லாம் சிந்தனைகளை ஓடவிட்டவாறு மண்டபத்தை நோக்கி நடந்தாள். தன் பணியினிடையே தாமரை குறுக்கிட்ட நிகழ்ச்சியை அவள் ஒரு வேடிக்கையாகக் கருதினாலும், அதனால் விளைந்த பலன்கள் அதிகமென்று அவள் நம்பினாள்.

உற்சாகமூட்டக்கூடிய இத்தனை செயல்களுக்கிடையே தந்தையின் நினைவு அவளைக் குன்றிப் போகச் செய்தது. "தந்தை, இருங்கோவே ளின் நண்பர்; மகள் சோழ நாட்டுப் பெருமைக்குப் பாடுபடும் வீராங் கனை!" என்று அவள் உதடுகள் உச்சரித்தன. கண்கள் மூடிக் கொண்டன. சற்று நின்றாள் மண்டபத்துப் படிக்கட்டில். மூடிய இமைகளின் வழியே கண்ணீர்த் துளி எட்டிப் பார்த்தது. 'ஆம்! நான் என் தந்தையைக் காட்டிக் கொடுக்க வேண்டும்'! என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். பிறகு அசைவற்று அப்படியே நின்றாள்.

எவ்வளவு நேரம் அப்படி நின்றாள் என்று தெரியாது. பிறகு உணர்வுபெற்று விழிகளைத் திறந்தாள். என்ன ஆச்சரியம்! எதிரே ஒரு கிழவன்! சொரிபிடித்த கிழவன்! பரட்டைத் தலை! பஞ்சு நிறத்தாடி! கூனன்! குறுகிப் போய் எதிரே நின்று கொண்டிருந்தான்.

"யார் நீ?" என்று வியப்பு மேலிட முத்துநகை கேட்டாள். அவளால் அவனைப் பார்க்கவே இயலவில்லை. அவ்வளவு கோர உருவமாகக் காட்சியளித்தான் அந்தக் கிழவன்.

"என்னையா யார் என்று கேட்கிறாய்? பெண்ணே, நீ யார் என்று எனக்குச் சொல்! நிலவைக் கடைந்து செய்த சிலையில் நித்திலத்தைப் பதித்தது போல காட்சி தரும் பாவையே! நீ யார்?"

கிழவனின் பேச்சை அவளால் பொறுக்க முடியவில்லை. தன்னைப் பெண் என்று எப்படிக் கண்டுபிடித்தான் என ஆச்சரியமுற்றாள்.

"நீ இருக்கும் அழகுக்கு வர்ணனைப் பேச்சு ஒரு கேடா? ஆண்-பெண் வேறுபாடு தெரியாத குருடனே நிறுத்திக்கொள் உன் அலங்கோல வார்த்தைகளை!" என்று கடுமையாகப் பதில் கூறினாள் முத்துநகை.

"என்னடியம்மா-இப்படி ஊடல் புரிகிறாய்?" என்று நகைத்தவாறு கிழவன் முத்துநகையின் கையைப் பிடித்து இழுத்து இறுகத் தழுவிக் கொண்டான்.

அவன் பிடியிலிருந்து விடுபட முடியாமல் முத்துநகை தவித்து, இறுதியில் அவனைக் கீழே தள்ளி விட்டுத் தொலைவில் சென்று அங்கு கிடந்த ஒரு கருங்கல்லைத் தூக்கி அவன் தலையில் போட ஓடி வந்தாள். கீழே கிடந்த கிழவன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவள், அவன் தலைக்குக் குறிபார்த்துக் கல்லை பலங்கொண்டமட்டும் இரு கைகளாலும் உயரத்தூக்கி அவன்மீது எறிந்தாள். அதைப் பற்றிக் கவலையே கொள்ளாமல் படுத்திருந்த கிழவன் தலைக்கு நேரே வந்த கல்லை இடது கையால் தட்டிவிட்டு வேகமாக எழுந்து அவளைத் துரத்தினான். அவள் ஓட முயன்றாள்; கிழவன் விடவில்லை; அவள்

கையைப் பிடித்துக் கொண்டான். முத்துநகை அவனைத் தாக்குவதற்குக் கையை ஓங்கினாள். உடனே, கிழவன் கலகலவென்று நகைத்துக் தன் தாடியையும் தலைமுடியையும் எடுத்து முத்துநகையின் கையில் கொடுத்தான்.

முத்துநகை, ''அத்தான்!'' என்று ஆசையுடன் அழைத்து அவனைத் தழுவிக்கொண்டாள்.

கூன் விழுந்த கிழவன் நிமிர்ந்து நிற்கும் சிங்கமாய் வீரபாண்டியாய்க் காட்சி அளித்தான்.

''எதிரிகளிடம் காட்ட வேண்டிய திறமையை என்னிடமே காட்டுகிறீர்களா அத்தான்?''

''நீ கூட எதிரி தானே?''

''என்ன?''

''ஆமாம் காதல் எனும் போர்க்களத்தில் நாம் இருவரும் ஒருவருக்கொருவர் எதிரிகள் தான்! அப்போது தானே இந்தப் போர்க்களம் சுவைக்கும் கண்ணே?''

''அதிருக்கட்டும் - இந்த வேடம் எதற்காக?''

''இதுதான் கரிகால்சோழரைச் சந்திப்பதற்காகப் போட்டுக் கொண்டுள்ள வேடம்?''

''ஏன்... உண்மையான வீரபாண்டியாகவே வருவதில் என்ன குற்றம்?''

''என் உண்மை உருவில் வந்தால் என்னையும் உன்னையும் பற்றி அரசர் சந்தேகிக்க இயலும்; நம்மிடையே எப்படித் தொடர்பு ஏற்பட்டது என்று எண்ணிடத் தோன்றும்; அந்தச் சாதாரணச் சந்தேகங்கள் கூட யாருக்கும் ஏற்படலாகாது என்பதற்காகவே இந்த வேடம் பூண்டேன். அதிருக்கட்டும், அரசரைப் பார்க்க அனுமதி கிடைத்து விட்டதா?''

''இன்றைக்கே சந்திக்கலாம் - எப்போது வேண்டுமானாலும் அரசர் தயார்!''

''கண்மணி... உன் திறமைக்குப் பரிசாக....'' எனக் கூறியபடி இதழ் குவித்தான் இருங்கோவேள்!

நெடுமாறனையும் காரிக்கண்ணனாரையும் வரவேற்று, பயணக் களைப்புத் தீரப் பழச்சாறு வழங்கச் செய்து பாண்டிய நாட்டுத் தளபதியின் நலன்களை விசாரித்து மகிழ்ந்தான் கரிகாலன். மன்னனின் கேள்விகட்கு நெடுமாறன் பதில் அளிக்கும்போது புன்னகையை வரவழைத்துக்

கொண்டான் என்றாலும் கரிகால் மன்னனின் கண்கள், அவன் உள்ளத்தில் புயல் இருப்பதைக் கண்டு பிடித்துவிட்டன.

''என்ன, இருங்கோவேளைக் கூண்டோடு சிறைப்படுத்தத் திட்டமிட்டுப் போராட்டம் தொடங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டேன்! மிக்க மகிழ்ச்சி. ஏற்பாடுகள் எல்லாம் வெற்றிகரமாக நிறைவேறி விட்டன அல்லவா?'' என்று பேச்சைத் திருப்பினான் சோழவேந்தன்.

''ஏற்பாடுகள் எல்லாம் வெற்றிகரமாக அமைந்துவிட்டன; எதிரியைச் சந்தடியின்றிப் பிடித்து விட என்னாலியன்ற எல்லா முறைகளையும் மேற்கொண்டேன். ஆனால் எப்படியோ படையெடுப்புப்பற்றி இருங்கோவேளுக்குத் தகவல் போயிருக்கிறது'' - நெடுமாறன் பேச்சை முடிக்கவில்லை.

அதற்குள் கரிகாலன் குறுக்கிட்டு, ''இருங்கோவேளுக்குத் தகவல் போய் விட்டதென்று எப்படித் தெரியும்?'' என்று கேட்டான்.

''தகவல் போனது மட்டுமல்ல, தார்வேந்தே! தலைகுனியும் செய்தி யொன்றும் என் நெஞ்சில் மோதிவிட்டது. எந்தச் செழியனின் விடுதலைக் காக இப்படையெடுப்போ, அந்தச் செழியன் இருங்கோவேளின் நண்ப னாகிவிட்டான். இதோ பாருங்கள்! செழியன் விடுத்துள்ள முடங்கலை! கோழைத்தனமும் துரோக எண்ணமும் கொண்ட கொடியவன் எழுதியுள்ள மடலைப் படியுங்கள்!''

-என்று ஓலையை எடுத்து அரசனிடம் கொடுத்தான். கரிகாலன் அதைப் படித்துப் பார்த்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தான். அவன் நினைப்பு முத்துநகையின் மீது சென்றது. அவள் கூறிய வார்த்தைகள் அவன் காதில் ஒலிக்க ஆரம்பித்தன.

''செழியன், இருங்கோவேளின் நண்பனாகி விட்டதாகவும், பாண்டிய மன்னன் செழியனைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை யென்றும் செழியனைக் கொண்டே எழுதப்பட்ட ஓலையாகும் அது. முக்கியமாகப் பாண்டியர் படையெடுப்பைத் தடுத்து அவர்களைத் திரும்பிடச் செய்யவே அந்த ஏற்பாடு. நல்ல வேளையாக அந்தச் சூழ்ச்சியில் இருங்கோவேள் வெற்றியடையவில்லை. நான் குறுக்கிட்டு ஓலையைக் கைப்பற்றி விட்டேன்''.

அந்த ஓலை பாண்டிய நாட்டு ஒற்றர் வீரபாண்டியிடம் இருக்கிறது. அந்த வீரபாண்டி மிகவும் நல்லவர். ஒப்பற்ற வீரர். பாண்டிய நாட்டுக்காகத் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் இருங்கோவேளைச் சுற்றிக் கொண்டு திரிகிறார். படையெடுத்து வரும்படி பாண்டிய நாட்டுக்குத் தகவல் அனுப்பியதே அவர்தானாம். பாவம், ஒரு சாதாரண

விறகு வெட்டியைப் போல் காடு மேடெல்லாம் அலைகிறார். கஷ்டப்படுகிறார். ஆகா...அவரிடம் எவ்வளவு ஆழ்ந்த நாட்டுப்பற்று ஒளிவிடுகிறது தெரியுமா?''

- முத்துநகை உற்சாகத்துடன் கரிகால் மன்னனிடம் பேசிய வாசகத்தை மன்னன் நினைத்து நினைத்துப் பார்த்துப் பெரும் குழப்பமடைந்தான். இருங்கோவேளின் ஆளிடமிருந்து முத்துநகையால் கைப்பற்றப்பட்டுப் பாண்டிய நாட்டு ஒற்றனிடம் ஒப்படைக்கப்பட்ட ஓலையாகத்தானே இது இருக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

''இந்த ஓலை உமக்கு எப்படிக் கிடைத்தது, ஒற்றர் வாயிலாகத் தானே?'' என்று நெடுமாறனைப் பார்த்துக் கேட்டான்.

''இல்லை மன்னா! இருங்கோவேளின் ஆளே கொண்டு வந்து கொடுத்தான். கொடுத்தது மட்டுமல்ல; ஒளிந்திருந்து உளவறியவும் தலைப்பட்டான். அவனைச் சாவூருக்கு அனுப்பி விட்டுத்தான் இங்கு வந்தேன் நான்!''. என நெடுமாறன் பதில் கூறியதும், சோழனின் உள்ளத்தில் சூறாவளி வீசத் தொடங்கியது. ஒற்றனிடம் முத்துநகை கொடுத்த ஓலை மறுபடியும் இருங்கோவேளின் கைக்கு எப்படி மாறியது? கேள்விக் கணை அவன் இதயத்தைக் குடைந்தது.

''போகட்டும் - அண்மையில் உங்கள் ஒற்றர் வீரபாண்டியிடமிருந்து ஏதாவது அவசரச் செய்திகள் உங்கள் பாசறைக்கு அனுப்பப் பட்டனவா?'' என்றான் சோழன்.

''எங்கள் ஒற்றர் வீரபாண்டியா? அரசே! அப்படிப் பெயர் கொண்ட யாரும் எங்கள் நாட்டில் ஒற்றராகவே இல்லையே! தங்களுக்கு யாரோ தவறான தகவல் தந்திருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன்'' என்று வியப்புடன் பதில் கூறினான் நெடுமாறன்.

சோழனின் தலை கிறுகிறுத்தது. பேச நா எழவில்லை. கண்களை மூடிக்கொண்டு அசைவற்று வெகுநேரம் உட்கார்ந்திருந்தான்.

வீரபாண்டி என்கிற பெயரால் ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்று மட்டும் பாண்டிய நாட்டுத் தளபதியால் புரிந்து கொள்ள முடிந்தது.

சோழன் திடீரென்று தளபதியைப் பார்த்து, ''இந்த ஓலையைப் படித்த பிறகு என்ன முடிவுக்கு வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

உடனே தளபதி, ''நான் எப்படி முடிவுகளை எடுக்க முடியும்? பாண்டிய மன்னரைக் கலந்து கொண்ட பிறகே என்னால் எதையும் செய்யமுடியும். அத்துடன் தங்களின் பெருமைமிக்க யோசனைகளை யும் பாண்டிய மன்னரிடம் தெரிவிக்க மிக்க ஆவலாய் இருக்கிறேன்'' என்று பதில் தந்தான்.

சோழன் புருவத்தை உயர்த்தியவாறு, நெடுமாறனைப் பார்த்து, ''அப்படியானால் - வீரபாண்டியென்று யாருமே ஒற்றர் உங்கள் நாட்டில் இல்லையா?'' என்று கவலையோடு கேட்டான்.

''இல்லை வேந்தே! நிச்சயமாக இல்லை! ஏன், யாராவது அந்தப் பெயருடன் தங்களை வந்து சந்தித்தார்களா?''' என்றான் தளபதி.

''இல்லை! இன்னும் சந்திக்கவில்லை'' என்று மெல்லிய குரலில் பதில் அளித்தான் கரிகாலன்.

அதற்கு மேல் அதுபற்றிக் கேட்க வேண்டுமென்று நெடுமாறனுக்கும், புலவருக்கும் தோன்றினாலுங்கூட சோழப் பெருவேந்தரிடம் அளவுக்கு மீறிப் பேசியதாக ஆகிவிடுமென்று அஞ்சி நிறுத்திக் கொண்டனர். சோழன், தளபதி நெடுமாறனிடம் நாளை வரையில் பூம்புகாரிலேயே தன் மாளிகையில் தங்கியிருக்குமாறும், அதற்குமேல் நடக்க வேண்டியவை பற்றி யோசிக்கலாமென்றும் கூறி அவன் தனி மாளிகையில் தங்குவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்குமாறு தன் மெய்க்காப்பாள னிடம் உத்தரவிட்டான். நெடுமாறனும் அரசனிடமும் புலவரிடமும் விடைபெற்றுக் கொண்டு தனி மாளிகை நோக்கி மெய்க்காப்பாளனைத் தொடர்ந்து சென்றான். புலவர், தன்னிடம் மன்னர் ஏதாவது சொல்லக் கூடுமென்று எதிர்பார்த்து நின்றார்.

''புலவர் அவர்களே! என் ஆட்சிக் காலத்தில் இதுவரை கேள்விப்படாத அதிசயங்களையெல்லாம் இப்போது கேள்விப் படுகிறேன். என்னிடம் தோற்றோடிய அந்த இருங்கோவேள், மன்ன னைப் போல சாகாமல், கள்வனைப் போல வாழ்கிறான் காட்டில் என்றால் தமிழ்நாட்டு வீரத்திற்கே இழுக்கு! வாழட்டும் காட்டில்! வேண்டாமென்று கூறவில்லை நான். நாடுகள் திரும்ப வேண்டுமென்று கேட்கட்டும்; தர முடியாது எனக் கூற மாட்டேன் நான். இன்னும் வீராப்பும் வீம்பும் பேசிக் கொண்டு திரிகிறானே, என் வீரத்தை உணராமல்! அதுமட்டுமல்ல புலவரே!... அவன் சாகசத்தில் வீழ்ந்தோ, சதியில் சிக்கியோ மலர்க்கொடி ஒருத்தியும் தவிக்கிறாள். என் தலையைக் கொய்வது அவ்வளவு சுலபமென்று கருதியிருக்கிறான் போலும்'' என்று கூறிச் சோழன் அலட்சியமாகச் சிரித்தான்.

புலவர் விழித்தார், ''என்ன மன்னவா சொல்கிறீர்கள்? தலையைக் கொய்ய ஏற்பாடா? அதில் ஒரு பெண்ணுக்கும் பங்கா? என்ன சொல்கிறீர்கள்? யார் அந்தப் பெண்?'' என்று ஆவலோடு கேட்டார்.

''இன்று அல்லது நாளை உண்மையைத் தங்கள் கண் எதிரிலேயே காட்டுகிறேன். தாங்கள் எங்கும் போகாமல் வீட்டிலேயே இருங்கள்; நான் அழைத்த நேரத்தில் அரண்மனைக்கு வரவேண்டும், சரிதானா?''

புலவர் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார். சோழன் ஏழடி நடந்து சென்று அவரை வழியனுப்பி விட்டு ஒரு வீரனைக் கூப்பிட்டு உடனே மெய்க்காப்பாளனை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அவனுக்குக் குழப்பம் ஓய்ந்தபாடில்லை. வீரபாண்டி என்கிற பெயரால் முத்துநகையுடன் வரப்போகிறவன் யார்? அவன் எதற்காக வருகிறான்? முத்துநகை அந்த மாயக்காரனிடம் ஏமாந்திருப்பாளா? அல்லது அவளும் இந்தச் சதிக்கு உடந்தையா? இவ்வினாக்களுக்கு விடை காணாமல் கரிகாலன் தவித்துக் கொண்டிருந்தான்.

**பா**ழ்மண்டபத்தில் முத்துநகை, தன் காதலனை அவசரப்படுத்திக் கொண்டிருந்தாள், சோழ மன்னனைச் சந்திப்பதற்குப் புறப்படுவதற்காக!

''உன்னையே பார்த்துக் கொண்டு இந்த மண்டபத்தில் உட்கார்ந்திருக் கலாம் போலிருக்கிறது. ஏன் அவசரப்படுத்து கிறாய்? இரு, இரு!'' எனக் கூறியவாறு அவள் முகத்தைத் தன் முகத்துக்கு நேரே கொண்டு வந்து வைத்த விழி வாங்காமல் சுவைத்துக் கொண்டிருந்தான்.

''நேரமாகிறது அத்தான்! வேடத்தைப் போட்டுக் கொள்ளுங்கள், வேந்தர் சொன்ன நேரத்தில் போய்ப் பார்ப்பதுதான் நல்லது'' என்று எழுந்தாள் முத்துநகை.

அப்போது தொலைவில் குதிரைகள் வரும் ஒலி கேட்டு அவள் திடுக்கிட்டாள். அவனுக்கு அந்த ஒலி அதிர்ச்சியைத் தரவில்லை. ஆனாலும் அஞ்சுவது போல் நடித்தான்.

''முத்து! முத்து! நீ போய்க் குதிரைகள் எந்தப் பக்கம் போகின்றன என்று ஒளிந்திருந்து கவனி. அதற்குள் நான் கிழ வேடத்தை அணிந்து கொண்டு தயாராகிறேன்'' எனப் பரபரப்புக் காட்டி அவளை ஓடச் செய்தான், இருங்கோவேள்.

அவளும் பதற்றமடைந்து ஓடிச் சென்று புதர்களின் மறைவில் ஒளிந்து குதிரைகளின் ஒலி வரும் திக்கையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். வெகு தொலைவிலிருந்து குதிரைகள் வருவதாக யூகித்தாள். சிறிது நேரத்திற்கெல்லாம் மூன்று குதிரைகள் அந்தப் பக்கமாக வேகமாக வந்தன; அவைகளில் அமர்ந்திருப்பவர்கள் யார் என்று அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்கள் அணிந்திருந்த உடைகள் இருங்கோவேளின் வீரர்கள் என்பதைக் காட்டிக்கொடுத்தன. குதிரையில் இருந்தவர்கள் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே ''பகை! பகை! பகை!'' என்று கத்தினார்கள். அதற்குள் எங்கிருந்தோ ''தூள்! தூள்! தூள்'' என்ற முழக்கம் கிளம்பியது. அந்த முழக்கம் பாழ்மண்டபத்துப் பக்கமிருந்து வந்தது போல் தோன்றியது. அவளைத் திகில் சூழ்ந்து கொண்டது. பகைவர்களுக்கிடையே தானும், தன் அத்தானும் சிக்கிக் கொண்டதாக எண்ணிக் கலக்கமடைந்தாள், அவள் மூச்சு நின்று விடும்போல் திணறியது.

மூன்று குதிரைகளும் அவள் ஒளிந்திருந்த இடத்துக்கு நேராக நின்று, தங்களைத் தாங்களே ஒரு முறை சுற்றிக் கொண்ட பிறகு, குதிரை வீரர்கள் அவைகளை முடுக்கினார்கள். குதிரைகள் அந்த இடத்தை விட்டு நாலு கால் பாய்ச்சலில் கிளம்பின. அவைகள் போகும் திக்கையே பார்த்துக் கொண்டிருந்தாள் முத்துநகை. இருங்கோவேளின் மரமாளிகையை நோக்கித்தான் அவைகள் போகின்றன என்பதைப் புரிந்து கொண்டாள். பாழ் மண்டபத்துக்குத் திரும்பி ஓடி வந்தாள்; அவள் முதலில் கண்ட விகார உருவக் கிழவன் நின்று கொண்டிருந்தான்.

''அத்தான், நமக்கு ஏதோ ஆபத்து வர இருக்கிறது. குதிரை வீரர்கள் மிக வேகமாக இருங்கோவேளின் மாளிகையை நோக்கி ஓடியிருக்கிறார் கள். நாம் இங்கிருப்பது அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். நம்மை வளைப்பதற்கு இன்னும் சில வீரர்களோடு வருவதற்காகவே அவர்கள் திரும்பியிருக்க வேண்டும். வாருங்கள் உடனே புகார் நகருக்குப் புறப்படலாம்... உம்... கிளம்புங்கள்'' என்று அவன் கரம்பற்றி இழுத்தாள் முத்துநகை.

இருவரும் சுற்றும் முற்றும் நடுக்கத்தோடு பார்த்துக் கொண்டே ஓடிவந்து குதிரையில் ஏறிக் கொண்டார்கள். இரண்டு குதிரைகளும் சோழன் தலைநகரம் பூம்புகார் நோக்கிப் பறந்தன.

பூம்புகார்த் தெருக்கள் பலவற்றைக் கடந்து கோட்டைக்குள் குதிரைகள் நுழைந்தன. முத்துநகைக்கு அங்கு தடையில்லை. அதனால் வீரர் எவரும் தடுக்கவில்லை. இருவரும் குதிரைகளை விட்டிறங்கி மன்னன் மாளிகை நோக்கி நடந்தனர்; மாளிகை வெளி முற்றத்தில் மெய்க்காப்பாளன் நின்று கொண்டிருந்தான். வரவேற்று உள்ளே உட்காரச் சொல்லிவிட்டு முத்துநகையின் அருகே வந்து, ''முதலில் உன்னை மட்டும் அரசர் தனியே பார்க்க விரும்புகிறார்; அடுத்து அவரைப் பார்ப்பாராம்'' என்றான்.

உடனே முத்துநகை எழுந்து மெய்க்காப்பாளனுடன் அரசரைத் தனியே பார்ப்பதற்குச் சென்றாள். அரசன் சின்னஞ்சிறு கூடமொன்றில் ஒரு புலிக்குட்டியின் வாயில் கையை விட்டு விளையாடிக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

முத்துநகையைக் கண்டதும், ''வீரபாண்டியை அழைத்து வந்திருக்கி றாயா!'' என்று கேட்டான் கரிகாலன்.

''அழைத்து வந்திருக்கிறேன்!'' என்று மரியாதையுடன் கூறினாள் முத்துநகை.

அரசன், மெய்க்காப்பாளனைப் பார்த்து, ''நீ போய் நானும் ஒற்றரும் சந்திக்கும் இடத்தை ஒழுங்குபடுத்தி வை, போ!'' எனச் சொல்லிவிட்டு,

''முத்துநகை; நீ இங்கேயே இரு - இதோ வந்து விடுகிறேன்!'' எனக் கூறி வெளியே புறப்பட்டான்.

அரசனின் அர்த்தமற்ற பரபரப்புக்கு முத்துநகையினால் காரணம் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அந்தப் பரபரப்பு அவள் மனத்தில் எந்தச் சலனத்தையும் ஏற்படுத்தவில்லை.

வெளியே வந்த வேந்தன், ஒரு வீரனைக் கூப்பிட்டு, ''உடனே ஓடிச் சென்று புலவர் காரிக்கண்ணனாரை அழைத்து வா!'' எனக் கட்டளை யிட்டுவிட்டு, எதிரே வந்து வணங்கிய காவற்படைத் தலைவனிடம் கண்டிப்பான குரலில், ''என் மாளிகையிலிருந்து என் உத்தரவின்றி யாரும் வெளியேறக் கூடாது. எச்சரிக்கை!'' எனக் கூறி விட்டு மீண்டும், முத்துநகையை உட்காரச் சொல்லிய கூடத்திற்குத் திரும்பினான்.

மன்னனின் முகத்தில் சினத்தின் சாயல் மின்னுவதை முத்துநகை கண்டாள்; எனினும் அதுபற்றி எதுவும் பேசாமல் இருந்துவிட்டாள்.

அவளுக்கு எதிரே வந்து கம்பீரமாக அமர்ந்த கரிகாலன், விழிகளை உருட்டி மாளிகைச் சுவர்களை ஒரு முறை பார்த்துக் கொண்டான். அவளை அவனால் நேரடியாகப் பார்க்க இயலவில்லை. வேறுபுறம் திரும்பியவாறே, ''ம்! பிறகென்ன சொன்னார் அந்தப் பாண்டிய நாட்டு ஒற்றர்?'' என்று கேள்வி எழுப்பினான்.

''என்னிடம் வேறு எதுவும் சொல்லவில்லை, அரசே! இப்போதுதான் சந்திக்கப் போகிறீர்களே; அப்போது தங்களிடம் விவரம் சொல்வார் என்று எண்ணுகிறேன்!'' என்றாள் அவள்

''உனக்கு அந்த ஒற்றரைப் பற்றிய எல்லா விவரங்களும் தெரியுமா?''

''முழு விவரங்கள் தெரியாது. பாண்டிய நாட்டு மண்ணுக்காகப் பாடுபடக்கூடிய உத்தமர் என்பது மட்டும் நன்றாகத் தெரியும்!''

''எத்தனை ஆண்டுக் காலமாகப் பாண்டிய நாட்டில் ஒற்றர் வேலை பார்க்கிறாராம்?''

''நான் அதையெல்லாம் கேட்கவில்லை, அரசே!''

''நீ சோழ நாட்டுக்காக உயிரையும் தியாகம் செய்யக் கூடிய உத்தமியென்று அந்த ஒற்றர் நம்பியிருக்கிறாரா?''

''என்னை அவர் புரிந்து கொள்ளாவிட்டால், இவ்வளவு தூரம் வந்திருப்பாரா?''

''இன்று ஒற்றரைப் பார்த்து முடிந்த பிறகு, உன்னை உன் வீட்டுக்கே அனுப்பி விடுவதாக முடிவு கட்டியிருக்கிறேன்!''

''ஏன் மன்னவா? என் பணியில் என்ன பழுது கண்டீர்கள்? நான் செய்த தவறென்ன?''

''பணியில் பழுதில்லை பாவையே! உன் தந்தையின் கவலையைப் போக்குவதற்காக உன்னை வீட்டுக்கு அனுப்பத் தீர்மானித்திருக்கிறேன். அது மட்டுமல்ல; நானும் ஒற்றரும் சந்தித்த பிறகு செழியனை எப்படியும் மீட்டே தீர்வோம்; அதற்கான திட்டங்களைப் பாண்டிய நாட்டுத் தளபதியுடனும் ஒற்றர் வீரபாண்டியுடனும் வகுப்பதாக இருக்கிறேன். இனி உனக்குச் சிரமம் தேவையில்லை அல்லவா!''

''வேந்தே! செழியனை மீட்பது மட்டுமல்ல என் வேலை; சோழத் திருநகரில் தாங்கள் நினைக்காத இடங்களில் துரோகிகள் தோன்றியிருக் கிறார்கள்; அவர்களைக் கூண்டோடு பிடிக்கும் வரையில் எனக்கும் ஓய்வில்லை.''

''வெளுத்ததெல்லாம் பால் எனக் கருதும் உன்னைப் போன்ற வெள்ளை உள்ளங்கள் அந்த வேலைக்குத் தகுதியில்லை என்பது என் எண்ணம்''

இந்தப் பதிலைக் கேட்டதும் முத்துநகைக்கு முகம் கருத்துப் போய் விட்டது. கண்கள் கலங்கி விட்டன.

ஆனாலும் சமாளித்துக் கொண்டு, ''மன்னர் மன்னவா! என்னை மன்னித்துவிடுங்கள்! என் பணிக்குத் தங்களின் துணை இல்லாவிட்டா லும் தனியொருத்தியாக நின்று சோழநாட்டுப் புகழைக் காப்பாற்றப் போராடியே தீருவேன்!'' என்று குரல் தழுதழுக்கக் கூறினாள்.

அப்போது புலவர் வீட்டுக்குச் சென்ற வீரன் திரும்பி வந்து கரிகாலனிடம், ''அரசே! புலவர் முக்கியமாக யாருடனோ பேசிக் கொண்டிருக்கிறார்; விரைவில் வருவதாக அறிவித்தார்'' என்று கூறினான்.

வீரன், முத்துநகைக்கு நேராக அந்தச் செய்தியைச் சொன்னது சோழனுக்குப் பிடிக்கவில்லை. அந்த ஆத்திரத்தில் வீரனைப் பார்த்து, ''அப்படி யாருடன் அவ்வளவு முக்கியமாகப் பேசிக் கொண்டிருக் கிறார்?'' என்று கூவினான்.

வீரன் சொன்னான்; ''அவரும் ஒரு யவனக் கிழவரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று!

அந்தப் பதில் வெளி வந்ததுதான் தாமதம், ''அகப்பட்டுக் கொண்டான் இருங்கோவேள்! அரசே! இப்போதே படைகளை அனுப்பி அந்த யவனக் கிழவனைக் கைது செய்ய உத்தரவிடுங்கள்'' என்று முத்துநகை கத்தினாள்.

''என்ன சொல்கிறாய்?'' என்று அரசன் வியப்புடன் கேட்டான்.

''ஆம் அரசே! அந்த யவனக் கிழவன்தான் இருங்கோவேள்! இத்தனை நாளும் தங்களிடம் மறைத்து வைத்திருந்த உண்மையை இப்போது வெளியிட்டுத் தீர வேண்டிய நேரம் வந்து விட்டது. என் தந்தை காரிக்கண்ணனார் இருங்கோவேளின் உற்ற நண்பர். சோழ நாட்டுக்குத் துரோகி. இருங்கோவேளும் என் தந்தையும் இரவு நேரங்களில் வெகு நேரம் பேசிச் சதித் திட்டங்கள் வகுத்ததை நானே நேரில் கண்டிருக்கிறேன். இதோ இந்தப் பதக்கத்தைப் பாருங்கள். என் தந்தையுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போன யவனக் கிழவரிடமிருந்து கீழே விழுந்த பதக்கம் இது. இதில், 'இருங்கோவேள்' என்ற எழுத்துக்களைப் பாருங்கள். இன்னும் என்ன சான்று வேண்டும் அரசே? மகளே தன்னுடைய தந்தையைத் துரோகியென்று கூறுகின்ற அற்புதத்தைக் கண்டு திகைக்கிறீர்களா?'' என உணர்ச்சிப் பொறி பறக்க முழங்கினாள் முத்துநகை.

கரிகாலன் அலட்சியத்தோடு பலமாகச் சிரித்துக் கொண்டே அவளைப் பார்த்து, ''பைத்தியக்காரி! இருங்கோவேள் இப்போது உன் வீட்டில் இல்லை. என் வீட்டில்தான் இருக்கிறான். பகைவன் அமர்ந்திருப்பது பாட்டுத் தந்தையின் வீட்டில் அல்ல! நாட்டுத் தந்தையின் வீட்டில்! துரோகத்துக்குத் துணை போவது உன் தந்தையல்ல - நீயே தான்!'' என்று கூறினான்.

அது கேட்டு முத்துநகை துடித்துவிட்டாள், ''அரசே! என் தூய்மையைச் சந்தேகிக்காதீர்கள்!'' என்று அவன் காலைக் கட்டிப்பிடித்துக் கொண்டு கதறத் தொடங்கி விட்டாள்.

''முத்துநகை! விரைவில் விளக்கம் பெறுவாய்! வா என்னோடு! நீ அழைத்து வந்துள்ள ஒற்றர் வீரபாண்டியைச் சந்திக்கலாம்'' என அவளை அழைத்துக் கொண்டு கரிகாலன் அந்த இடத்தை விட்டு அகன்றான்.

ஒற்றரைச் சந்திப்பதற்கான இடம் ஏற்பாடாயிற்று, வட்ட வடிவமான அந்த இடம் பளிங்குக் கற்களால் அமைந்திருந்தது. யானைத் தந்தங்கள் பொருத்தப்பட்ட அழகிய கதவுகள் - அதில் இடையிடையே தங்கத்தால் ஆன குமிழ்கள்! சுவர்களின் ஓரத்தில் பட்டுத் திரைகள் தொங்கிக் கொண்டிருந்தன. அந்தத் திரைக்குப் பின்னால் ஓங்கிய வாளுடன் வீரர்கள் நிற்பதை யாரும் கவனிக்க இயலாது. நடுவே இரண்டொரு வெள்ளி இருக்கைகள் போடப்பட்டிருந்தன. பழங்களும் கனிச்சாறும் இருக்கைகளுக்கு நேரே வைக்கப்பட்டிருந்தன.

இரண்டு வீரர்கள் ஒற்றரை மிக்க மரியாதையுடன் அழைத்து வந்து இருக்கையொன்றில் அமர வைத்தனர். சற்று நேரத்துக்கெல்லாம் அரசரும் முத்துநகையும் அங்கு வந்து சேர்ந்தனர். அரசரைக் கண்ட ஒற்றர்

எழுந்து நின்று வணங்கினார். அரசன் அங்கு நின்ற இரண்டு வீரர்களையும் சைகை காட்டி வெளியே அனுப்பி விட்டான். கதவுகளும் சாத்தப்பட்டன. திரைமறைவில் நின்ற வீரர்கள் மூச்சுவிடும் ஒலி கூட வெளியே கேட்காமல் அவ்வளவு எச்சரிக்கையாக இருந்தார்கள். ஒற்றரை உட்காருமாறு கூறிவிட்டு அரசன் அமர்ந்தான். ஒற்றனின் முதுமைத் தோற்றமும் முகபாவமும் கரிகாலனுக்கு வெறுப்பைத் தந்தது என்பதை முத்துநகை புரிந்து கொண்டாள். அவளுக்கு இந்தச் சந்திப்பின் முக்கியத்துவம் பற்றிய கவலையெல்லாம் பறந்தோடி விட்டது. கரிகாலன் பேசிய மொழிகள் அவளை மிகவும் கலவரப் படுத்தியிருந்தன. இவ்வளவு நல்லெண்ணத்துடன் நாட்டுக்குத் தொண்டாற்ற முன்வந்தும் இறுதியில் பழிவந்து சேர்ந்ததே என வருந்தினாள். - வேதனைப்பட்டுப் புழுங்கினாள். கரிகாலன் ஒற்றனுடன் பேச ஆரம்பித்தான்.

''வயதான காலத்தில் பாண்டிய நாட்டுக்காகத் தாங்கள் படும் கஷ்டத்தை முத்துநகை சொல்லக் கேட்டேன். மிக்க மகிழ்ச்சி.''

அந்தப் பாராட்டுரைக்கு ஒற்றர் பதில் கூறவில்லை. நன்றியோடு சிரித்துக் கொண்டார்.

''இப்போது என்னைச் சந்திக்க வேண்டுமென்று விரும்பியது எதற்காக.?''

பதிலில்லை.

முத்துநகை சிரித்தாள்.

கரிகாலன் விடவில்லை. - மீண்டும் கேள்வி கேட்டான்.

''மிகவும் ரகசியமாக ஏதாவது பேச வேண்டுமா? முத்துநகையையும் வெளியே அனுப்பி விடட்டுமா?''

இதற்கும் பதில் இல்லை.

முத்துநகை அதிர்ச்சி அடைந்தாள். அரசன் ஒற்றரையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒற்றரின் விழிகள் அரசரையே நோக்கின. பட்டுத் திரைக்குப் பின்னாலிருந்த வீரர்கள் பாய்வதற்குத் தயாராக இருந்தார்கள். முத்துநகையின் கருவிழிகள் சுழன்றன. அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.

ஒரே அமைதி! அந்த அமைதியில் தான் எவ்வளவு பயங்கரம்!

முத்துநகையின் பார்வை ஒற்றரை விட்டு நகராமல் அப்படியே நிலைத்து நின்றது. அவள் கண்கள் இருண்டு விட்டன. சிறிது நேரத்தில் எதிரே ஒன்றும் தோன்றவில்லை. உட்கார்ந்திருந்த ஒற்றன் கம்பீரமாக

எழுந்தான். எழுந்த வேகத்தில் இடுப்பில் செருகியிருந்த கட்டாரியை உருவிக் கொண்டு கரிகாலன் மீது பாய்ந்தான். கட்டாரியால் கரிகாலனின் நெஞ்சில் பலங்கொண்ட மட்டும் குத்தினான்.

ஆனால் கரிகாலனுக்குச் சிறு காயமும் ஏற்படவில்லை. மார்பில் மறைந்திருந்த கவசம் கட்டாரியை முனை மழுங்கச் செய்தது. அதற்குள் திரைமறைவில் இருந்த வீரர்கள் வெளிப்பட்டனர். ஒற்றனை வளைத்துக் கொண்டனர். முத்துநகைக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. கரிகாலன் உயிர் தப்பி நிற்பதையும், தன் அன்பு அத்தான் வீரபாண்டி கைது செய்யப்பட்டு நிற்பதையும் கண்டு தணலில் நிற்பது போல் நின்றாள்.

அரசன் அவளைப் பார்த்து, ''முட்டாள் பெண்ணே! நீ அழைத்து வந்த ஒற்றன் யார் என்று தெரிகிறதா? வீரபாண்டியல்ல என்பதைப் புரிந்து கொள்! வேடமிட்டு என்னைக் கொல்ல வந்த இருங்கோவேள் இவன்தான்!'' என்று கூறி அவன் தலைமுடி, உடை முதலியவற்றைப் பற்றியிழுத்து வேடத்தைக் கலைத்து விட்டான்.

என்ன ஆச்சரியம்!

அரசன் எதிர்பார்த்தபடி அவன் இருங்கோவேளுமல்ல, அவள் நினைத்திருந்தபடி அவன் வீரபாண்டியுமல்ல!

அரசன் திகைத்து நின்றான்.முத்துநகை கூச்சலிட்டாள்.

''அரசே! இவன் நான் அழைத்து வந்த ஒற்றர் வீரபாண்டியல்ல! வேந்தர் பெருந்தகையே! நான் தங்களிடம் இன்னொரு உண்மையையும் கூறுகிறேன். வீரபாண்டி கிழவர் அல்ல. கிழவர் போல வேடமிட்டுத் தங்களைக் காண வந்தார். அவரல்ல இது! எப்படியோ அவர் மறைக்கப் பட்டு அந்த வேடத்தில் இந்தக் கொலைகாரன் வந்திருக்கிறான்!''

முத்துநகையின் கூச்சலைக் கேட்ட அரசர் குழப்பமுற்றவராய், ''இப்போது நீ என்ன உளறுகிறாய்!'' என்று கத்தினார்.

''என்னை மன்னித்து விடுங்கள். வீரபாண்டியும் நானும் காதலர்கள். அந்த விஷயத்தைத் தாங்கள் புரிந்து கொள்ளக்கூடாது என்பதற்காகவே அவர் கிழவேடம் கட்டிக் கொண்டு தங்களைக் காண வந்தார். இடையில் இந்த விபரீதம் எப்படி ஏற்பட்டது என்று எனக்குப் புரியவில்லை;'' என்று விம்மி விம்மி அழுதாள் முத்துநகை.

''நீ யார்? உண்மையைச் சொல்!'' என்று அந்தக் கொலைகார இளைஞனை மிரட்டினான் அரசன்.

அவன் பதில் பேசவே மறுத்து விட்டான்.

''ம்! இவன் நகக் கண்களில் ஊசி ஏற்றுங்கள். உண்மையை வரவழையுங்கள்!'' என்று கர்ச்சித்தான் கரிகாலன்.

''அய்யோ - சொல்லி விடுகின்றேன்!'' என்று ஆரம்பித்தான், அந்தக் கொலைகாரன். அனைவரும் என்ன சொல்லப் போகிறான் என்று ஆவலோடு எதிர் பார்த்தார்கள்.

''நான் இருங்கோவேள் மன்னரின் ஆள்! கரிகால் மன்னரைக் கொல்வதற்காகவே இங்கு வந்தேன். மன்னரைக் கொல்வதற்கு நியமிக்கப்பட்ட ஆட்களில் நானும் ஒருவன். இதோ இந்த முத்துநகையும் இவள் குறிப்பிட்டாளே வீரபாண்டியென்று, அந்த மனிதனும் ஒரு பாழ்மண்டபத்தில் உட்கார்ந்து அரசரைச் சந்திக்கப் போவதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்; அதை நான் ஒளிந்திருந்து கேட்டுக் கொண்டிருந் தேன். அந்தச் சமயம் எங்கள் இருங்கோவேள் மன்னரின் குதிரை வீரர்களை விட்டு முத்துநகையையும் வீரபாண்டியையும் ஏமாற்றி னோம். முத்துநகை வீரபாண்டியைப் பிரிந்து குதிரை வீரர்கள் போகும் திக்கைக் கவனிததுக் கொண்டிருந்த நேரம் பார்த்து, வீரபாண்டியைப் படுகாயப்படுத்திவிட்டு அவன் போட்டிருந்த உடைகளை நான் மாட்டி வேடம் போட்டுக் கொண்டு, காயமடைந்த வீரபாண்டியையும் தடாகத் தில் தள்ளிவிட்டு, முத்துநகையை ஏமாற்றி இவளுடன் இந்த மாளிகைக் குள் நுழைந்து விட்டேன். பாவம்; இவளுக்கு இந்த விவரம் எதுவும் புரியாது. தன் காதலன் தான் கிழவேடத்தில் இருப்பதாக அழைத்து வந்து விட்டாள்!''

இந்தச் செய்தியைக் கேட்டதும் முத்துநகை பழைய நிகழ்ச்சியை எண்ணிப் பார்த்தாள்!

கொலைகாரன் சொன்னது எல்லாம் சரிதான். குதிரை வீரர்களின் ஒலி கேட்டு தான் பார்க்கப் போனபோதுதான் தன் அத்தானுக்கு அந்த விபரீதம் ஏற்பட்டிருக்கிறது என்று அவள் முடிவு கட்டிக் கொண்டாள்.

''அய்யோ! இந்நேரம் என்ன ஆனாரோ தெரியவில்லை!'' என்று வாய்விட்டுக் கதறத் துவங்கினாள்.

கரிகாலன், அந்தக் கொலைகாரனைப் பார்த்து, ''உன் பெயர் என்ன?'' என்று விசாரித்தான்.

''வேல்மறவன்'' என்று வீராப்புடன் பதில் கூறினான்.

அவனைச் சிறையில் அடைக்க ஆணை பிறப்பித்து விட்டு முத்துநகையைத் தேற்ற ஆரம்பித்தான். அவளோ, தன் காதலனை நினைத்துக் கண்ணீர் வடித்தாள். அந்தக் கவலைக்கிடையேயும், ''அரசே! என் வார்த்தையை நம்பி உடனே சென்று அந்த யவனக் கிழவரைக் கைது செய்ய உத்தரவிடுங்கள். அவர் வேறு யாருமல்லர். இருங்கோவேளாகத் தான் இருக்க முடியும்; இங்கே கொலைகாரனை அனுப்பி விட்டு இன்பச் சேதி கேட்பதற்கு என் தந்தையிடம் வந்திருக்கிறான். அவன் இருங்கோவேளேதான்! முதலில் அவனை இழுத்து வரச் செய்யுங்கள். அவனைக் கூண்டிலே அடைத்து விட்டுத்தான் என் ஆருயிர்க் காதலன் வீரபாண்டி என்ன ஆனார் என்று பார்க்கப் போகிறேன். அனுப்புங்கள் அரசே, வீரர்களை!'' என்று கெஞ்சினாள்.

அரசனும் அவள் பேச்சுக்கிணங்கி வீரர்களை கூப்பிட்டு ''உடனே சென்று புலவர் காரிக்கண்ணனாரையும், அவர் வீட்டில் இருக்கும் யவனக் கிழவரையும் அழைத்து வருக!'' என்று கட்டளையிட்டான். வீரர்கள் புறப்பட்டனர்.

குதிரைகளின் குளம்பொலி கேட்ட புலவர் காரிக்கண்ணனார் வெளியில் வந்தார். ''என்ன வேண்டும்?'' என்று வீரர்களிடம் வினவினார். ''தங்களையும் யவனக் கிழவரையும் மன்னர் உடனே அழைத்து வரச் சொன்னார்'' என்றனர் வீரர்கள். புலவர் சிந்தனையில் ஆழ்ந்தார் 'ஏன் யவனக் கிழவரையும் அழைத்தார்?'

நீண்ட சிந்தனைக்குப் பிறகு ''முதலில் யவனக் கிழவரை அனுப்புகின்றேன்; சற்றுப் பொறுத்து நானும் வந்து சேர்கின்றேன்'' எனக் கூறிவிட்டுக் கதவை மூடிக்கொண்டு உள்ளே சென்றார்.

யவனக்கிழவர் வெளியில் வந்ததும், விலங்கிடாமல் அவரை நடத்தியே அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர், வீரர்கள்.

மண்டபத்து பட்டுத் திரைகளின் பின்னே வீரர்கள் பாய்வதற்குத் தயாராக காத்திருந்தனர்.

''நீ யார்?'' என்று உரத்த குரலில் கேட்டான் கரிகாலன்,

பதிலில்லை. இருமுறை கேட்டும் விடை கூறாததால் ''நீ என்னைக் கொலை செய்ய வந்திருக்கும் இருங்கோவேள் என்கிறேன் நான்! அப்படித்தானே?'' என்றான் மன்னன்.

பதிலேதும் வெளிவரவில்லை. கரிகாலன் யவனக் கிழவரை நெருங்கி, அவர் தலையில் கட்டியிருந்த துணியை அகற்றினார். தாடியையும் பற்றினான்; அது கையோடு வந்து விட்டது.

என்ன வியப்பு! கரிகாலன் தீ மிதித்தவன் போல் ஆனான். எதிரே யவனக்கிழவர் உடையில் மறைந்து நின்றிருந்தவர் வேறு யாருமல்ல; புலவர் காரிக்கண்ணனார்தான்.

மன்னன் தன் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு, எதிரே நிற்கும் புலவரைத் திரும்பத் திரும்பப் பார்த்தான். அவர் புலவரில்லாமல் வேறு யாராகவாவது இருக்கக் கூடாதா என்று தவிக்கின்றான் என்பதை அவனது விழிகள் எடுத்துக் காட்டின. 'குழப்பம்' என்று கூறப்படும் ஒரு நிலை, தனது கொடுமையான வாய்க்குள் கொற்றவனை எடுத்துப் போட்டுக் கொண்டு கூத்தாடியது. எத்தனையோ சிக்கலான பிரச்சினை களையெல்லாம் சரிப்படுத்தி வெற்றி கண்ட மாமன்னன் கரிகாலன், தனக்கெதிரே தமிழ் கூறும் முதுபெரும் அறிஞர் ஒருவர் துரோகியெனும் பெயர் சுமந்து நிற்கின்ற காட்சிக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் துடித்தான்.

முதுகில் காயந்தாங்கிக் களத்திலே வீழ்ந்திடும் வீரனொருவனின் மனோநிலைக்கும், கரிகாலனின் மனோநிலைக்கும் அதிக வேறு பாடில்லை. அந்த வீரன் அனுபவிக்கும் வேதனையைத்தான் அவனும் அனுபவித்தான். தன்னையும் தன் நாட்டையும் வாழ்விக்கும் தமிழ் மொழியை நாவாறப் பாடிக்களிக்கும் பாவலர் ஒருவர், நாட்டுத் துரோகியென்ற பட்டத்துடன் நிற்கின்ற கொடுமையை எண்ணி எண்ணி கண்ணீர் வடித்தான். புலவரிடம் பேசுவதற்கு முயன்றான். தொண்டை அடைத்துக் கொண்டது.

வீரர்கள் அரசனை மரியாதையுடனும், அச்சத்துடனும் வணங்கி, ''அரசே! நாங்கள் ஏமாந்து விட்டோம். யவனக் கிழவரைத் தப்பியோடச் செய்துவிட்டு அவரது உடைகளைப் புலவர் அணிந்து கொண்டு யவனக்கிழவர் போலவே வந்திருக்கிறார். எங்களை மன்னித்து விடுங்கள் அரசே!'' என்று கதறினார்கள்.

அரசன், அவர்களைப் பார்த்துக் கையமர்த்திப் பேசாமல் இருக்கச் செய்தான். வீரர்கள் விளக்கிக் கூறாமலே என்ன நடந்தது என்பதைக் கரிகாலனால் ஊகித்துக் கொள்ள முடிந்தது.

முத்துநகைக்கு உடம்பெல்லாம் நெருப்பாகி விட்டது. கனல் பறக்கும் கண்களுடன் தந்தையின் அருகே வந்தாள். புலவா தன் மகளைப் பரிவுடன் நோக்கிக் கொண்டு நின்றார். முத்துநகை மிக அண்மையில்

வந்து அவர் முகத்துக்கு நேரே தன் முகத்தை நீட்டி ''உமது மகள் என்று சொல்லிக் கொள்ள நான் வெட்கப்படுகிறேன்'' என்று மெதுவாகத்தான் சொன்னாள். ஆனால் அந்த வார்த்தைகள் எரிமலையிலிருந்து பொங்கி வழியும் அனற் குழம்பினையொத்திருந்தன. புலவர் அவளை அன்புடன் நோக்கியவாறு, ''அருமை மகளே! அவசரப்படாதே!' என்று பதில் கூறினார்.

''இனிமேல் அவசரப்படுவதற்கோ - அமைதியடைவதற்கோ என்ன இருக்கிறது? தமிழ்ப் புலவர் கூட்டத்திற்கே அவமானச் சின்னமாக - அழிக்க முடியாத களங்கமாக நீர் நிற்கிறீர்! தமிழுக்கு உயிர்ச் சக்தி உண்டென்பது பொய்யில்லையே - அங்ஙனமிருக்க எவ்வாறு அந்தச் சக்தி உமது துரோக இதயத்தை இதுவரையில் துளைக்காமல் மௌனம் சாதிக்கிறது?'' - என இடிமுழக்கம் செய்தாள் முத்துநகை.

''அம்மா-முத்து! அரசரும் நீயும் என்னைப் பற்றித் தவறான எண்ணங்கொள்ளுவதற்குக் காரணமாக இருந்த சூழ்நிலை என்ன வென்று யான் அறியலாமா?''

- புலவர் அதிர்ச்சியுடன் கேட்டார்.

''சூழ்நிலையை வேறு விளக்க வேண்டுமோ? இந்நாட்டின் நல்வாழ்வு தவிர வேறெதுவும் தேவையில்லையென்று முடிவுகட்டிக் கிளம்பிவிட்ட இந்த முத்துநகையின் தந்தை ஒரு துரோகி, சோழ மண்டலத்தைப் பகைவனுக்குக் காட்டிக் கொடுக்கும் பாவி, கரிகால் மன்னரின் உயிருக்கு உலை வைக்கப் புறப்பட்டிருக்கும் கயவர்களுக்குத் துணை, எந்தச் சோழ நாட்டு மண்மீது சுதந்திரத் தமிழ்க் கவிதைகளை இயற்றினாரோ, அந்தச் சோழ நாட்டுக்கு அழிவு தேடித் தரும் அக்கிரமக்காரர்! இதை விட வேறென்ன தந்தையே வேண்டும்?''

மகளின் பேச்சு, புலவரின் நெஞ்சில் சம்மட்டி அடிகளாய் விழுந்தன.

''முத்துநகை! விளையாட்டுத்தனமாகப் பேசாதே! தமிழால் வளர்ந்தது இந்த உடம்பு. துரோகம் என்னுடைய இரத்தத் துளியில் ஒரு சிறு அணுவைக் கூடத் தொடத் துணியாது என்பதை மறந்து விடாதே!''

''ஆகா! இந்தப் பேச்சில் என் தந்தையின் கற்பனை வளம் காணப்படுகிறது. ஆனால் தூய்மை, மருந்துக்குக் கூட இல்லை. துரோகம் தலைதூக்கி நிற்கிறது.''

''இனி உன்னோடு பேசிப் பயனில்லை. தமிழ்ப் புலவர்களின் உள்ளத்தைப் புரிந்து கொண்டிருக்கும் தார் வேந்தர் சோழ மன்னரிடம் பேசுகிறேன். அரசே, என் மகள் முத்துநகை, தங்களையும் சேர்த்துக்

குழப்பமடையச் செய்திருப்பாள் என்று நினைக்கிறேன்...'' என்று அரசனிடம் பேசத் தொடங்கினார்.

உடனே கரிகாலன், ''இல்லை புலவரே! என்னை யாரும் குழப்ப முடியாது. என்ன நடந்திருக்கும் என்பதை ஒழுங்காகவே புரிந்து கொள்ள முடிகிறது. யவனக் கிழவர் வேடத்திலேயிருந்த இருங்கோவேள் தப்பிவிட்டான். இல்லை! இல்லை! அவனைத் தப்பியோடும்படித தாங்கள் செய்து விட்டீர்கள். நாட்டுக்குத் துரோகம் நினைத்தாலும் நண்பனுக்காகச் செய்த தியாகத்தை நான் பெரிதும் பாராட்டுகிறேன்'' என்று குமுறும் உள்ளத்தை அடக்கிக் கொண்டு பதில் கூறினான்.

''மன்னவரே! தங்கள் குடை நிழலில் தமிழ் வளர்க்கும் என்னைப் பற்றி எவ்வளவு அவசர முடிவுக்கு வந்து விட்டீர்கள்! அது தங்கள் தவறு அல்ல. என் மகளுக்கு அளவுக்கு மீறி எழுந்துள்ள நாட்டுப்பற்று, அவளையும் குழப்பமுறச் செய்து, தங்களையும் குழப்பமுறச் செய்து விட்டது.''

- என்று புலவர் அமைதியாகப் பதிலுரைத்தார்.

அதுகேட்ட முத்துநகை, மேலும் ஆவேசம் பெற்றவளாகச் சீறியெழுந்து, ''துரோகியென்று நாங்கள் முடிவு கட்டுகிறோம். அது தவறானால் அதற்குத் தரப்படும் நேரடியான பதில் என்ன?'' என்று கர்ச்சித்தாள்.

''நேரடியான பதில்! நான் துரோகியல்ல என்பதுதான்!'' புலவர் சாதாரணமாக இந்தப் பதிலைக் கூறினார்.

''அப்படியானால் அந்த யவனக் கிழவர் யார்?'' - அரசன் ஆத்திரத்துடன் கேட்டான்.

''அவர் யார் என்று இப்போது நீங்கள் தெரிந்து கொள்ளக் கூடாது'' - புலவர் அலட்சியமாக பதில் மொழிந்தார்.

''இங்கேதான் ஒளிந்திருக்கிறது துரோகம்!'' என்று கத்தினாள் முத்துநகை.

''வயிற்றிலிருக்கும் குழந்தை ஆணா-பெண்ணா? என்று அறிவதற்கு அவசரப்பட்டு யாரும் வயிற்றைக் கீறிப் பார்க்க மாட்டார்கள் அம்மா! பிறக்கும்வரை பொறுத்திருப்பார் சில பெற்றோர், நிமித்திகனை நாடிச் செல்வர் சில பித்தர்! பித்தரும் செய்யத் துணியாத காரியத்தை நீங்கள் செய்ய விரும்புகிறீர்கள். என் உயிர் போனாலும் சரி! அந்த யவனக் கிழவர் யார் என்று இப்போது நான் சொல்ல மாட்டேன்.''

''இவர் சொல்வதென்ன... அரசே! அதுதான் நன்றாகத் தெரிகிறதே இருங்கோவேள்தான்... என்று!''

''உம் அதுவும் சரிதான்! என் அருமை மகள் முத்துநகை கூறுவதுபோல் யவனக்கிழவராக வந்தவர் இருங்கோவேள் தான்! அப்படித்தான் இருக்கட்டுமே!''

- புலவர் இதைக் கூறிவிட்டு தலையைக் குனிந்து கொண்டார். அதற்குமேல் அவர் பேச விரும்பவில்லையென்பதை அவர் முகம் தெளிவாகக் காட்டியது. முத்துநகையின் ஆத்திரமும் ஆவேசமும் அழுகையாக மாறின; கண்ணீர் பெருக்கெடுக்க, கதறிப் புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

''அய்யோ! தலைமுறை தலைமுறைக்கும் மாறாத களங்கம் ஏற்பட்டு விட்டதே எங்கள் குடும்பத்துக்கு! அப்பா! அப்பா! ஏனப்பா உங்கள் அறிவு இப்படியெல்லாம் அழிவுச் சக்திகளுக்கு துணை போயிற்று? சோழப் பேரரசில் உங்களுக்கு என்ன குறை? கொலு மண்டபத்தில் அமர்ந்து கோலோச்ச வேண்டுமெனக் கேட்டிருந்தாலும் அட்டியின்றித் தரக்கூடிய குணாளன் தானே நமது கொற்றவன் ! அவருக்குப் பாதகம் நினைக்க எப்படியப்பா உங்கள் மனம் துணிந்தது? அரசே! அரசே! என்னை மன்னித்து விடுங்கள். இந்தத் துரோகியின் வீட்டில் நான் பெண்ணாய்ப் பிறந்ததற்கு என்னை மன்னித்து விடுங்கள்.''

முத்துநகை அலறித் துடிப்பதைக் கண்ட கரிகாலன் அவளைச் சமாதானப்படுத்தி, ''அழாதே முத்துநகை. தந்தை செய்த தவறுக்கு நீ என்ன செய்வாய்? உன் தந்தையின் களங்கத்தை மறைத்துப் புதிய ஒளியைப் பரப்புகிற அளவுக்குக் குடும்ப விளக்காக நீ திகழ்கிறாய். நீ தியாகச் சுடர். சோழ மண்டலத்தின் பெருமையைக் காப்பாற்றுவ தொன்றே பெரிதெனக் கொண்டு தந்தையையும் காட்டிக் கொடுத்த உன் நெஞ்சுறுதியை-தாயகப்பற்றை-நான் மதிக்கிறேன். உன் உறுதிக்கும் துணிவுக்கும் மரியாதை செலுத்துகிறேன். நீ நாட்டுக்குத் தியாகம் செய்கிறாய்; உன் தந்தை நண்பனுக்காகத் தியாகம் செய்கிறார்''. என்று கண் கலங்கக் கூறிவிட்டுப் புலவரைப் பார்த்து,

''வணக்கத்துக்குரிய தமிழ்ப்பாவாணரே! நானொருவன் வாழ்வது பிடிக்கவில்லையென்றால் என் மார்பில் வேல் நுழைத்திருக்கலாம் தாங்கள்! அதை விடுத்துத் தாயகத்தை எதிரிக்குக் காட்டிக் கொடுக்கும் இழி செயலை மேற்கொண்டிருக்கத் தேவையில்லை. போனது போகட்டும். நீதிக்கு முன்பு தரணியாளும் மன்னரும் தமிழால் உலகை ஆளும் புலவரும் ஒன்றுதான். நீதி கிடைப்பதற்குப் பெரிதும் முயல் கிறேன். அதுவரையில் தாங்கள் அரண்மனையிலேயே சிறைப்படுத்தப்

படுகிறீர்கள்; பகைவனுக்குத் துணை நிற்கும் ஒருவரை வெளியில் உலவிட விடுவது தவறல்லவா? அது அறிவுடைமையும் ஆகாது. அதனால் என்னை மன்னித்துக் கொள்ளவும். பெயர்தான் சிறைவாசம் என்று இருக்குமே தவிர தங்களுக்குத் தொல்லைகள் இருக்காது. நல்ல உணவு வழங்கப்படும். சிந்திக்கவும் எழுதவும் வசதிகள் உண்டு. செந்தமிழ்க் கவிதைகளைத் தாங்கள் எழுதிக் குவிக்கலாம். என் கடமையை நான் செய்ய வேண்டியிருக்கிறது. மன்னிக்கவும்.''

என்று தழுதழுத்த குரலில் உரைத்துவிட்டு அசைவற்று நின்றான்.

''சிறைச்சாலையில் எனக்கு வசதிகளா, மன்னவா? கிளியை அடைக்கும் கூண்டு இரும்புக் கூண்டாயின் என்ன? பொன் கூண்டாயின் என்ன? அரண்மனையிலேயே சிறை வைப்பதால் என் பெருமை நிலைத்து விடுமா என்ன? துரோகியென்று நீங்கள் எல்லாம் கூறிவிட்ட பிறகு என்னைக் கொன்று போடுவதே சிறந்த தண்டனையாகும். எனக்கும் அமைதி ஏற்படும்.'' என்று புலவர் மறுமொழி பகன்றார்.

அவர் பேச்சில் நடுக்கமில்லை. கம்பீரமாகப் பேசினார். அரசன் அதற்குப் பதில் கூறவில்லை. வீரர்களை அழைத்து அவர்களிடம் சைகை செய்தான். அவர்கள் புலவரை அழைத்துக் கொண்டு புறப்பட்டனர்.

''வருகிறேன் மன்னவா! வாழ்க!''

- என்று வாழ்த்திவிட்டு வீரர்களுடன் கிளம்பினார் காரிக்கண்ணனார்.

எப்போதும்போல மன்னன் அவனையறியாமலே ஏழடி நடந்து சென்று, அதன் பின்னர், தான் நடந்து வந்ததை உணர்ந்து அப்படியே நின்று பொலபொலவென்று கண்ணீர் உகுத்தான்.

முத்துநகையின் கண்களும் அருவிகளாயின. அவள் அரசனிடம் வந்து ''அரசே!'' என்று கரகரத்த குரலில் அழைத்ததும், அரசனின் நெஞ்சம் வெடித்துவிடும் போல் ஆயிற்று; ''என்னம்மா?'' என்று அழுதவாறே கேட்டான்.

''என்னை மன்னித்து விடுங்கள்.'' - அவள் விம்மியழுதாள்.

''உன்னை மன்னித்து விடலாம். ஆனால், தமிழ்த்தாயை கதறி அழவிட்டு அவளது அன்புப் புதல்வரை அரண்மனையில் அடைக்க உத்தரவிட்டிருக்கிறேனே; அதற்கு நான் யாரிடம் மன்னிப்புக் கேட்பேன்?'' என்று குழந்தைபோலச் செருமிச் செருமி அழத்தொடங்கினான், கரிகாலன். அவ்விருவரும் போட்டி போட்டுக் கொண்டு அழுது முடிந்த பிறகு முத்துநகை கரிகாலனிடம் சொன்னாள். ''நான் போய் வீரபாண்டியைப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று!

''அப்படியொரு ஒற்றன் பாண்டிய நாட்டில் இல்லையென்று நான் விசாரித்த வரையில் தெரிகிறது'' என்று சோழன் பதில் கூறினான்.

''பாண்டிய மன்னரால் நியமிக்கப்பட்டவர்தான் அந்த ஒற்றர். தாங்கள் கேட்டவைகள் தவறானவைகளாக இருக்கக் கூடும். வீரபாண்டியைப் பற்றி வீண் சந்தேகம் ஏற்பட வேண்டிய அவசியமே இல்லை. அவருக்கு என்ன ஆயிற்று என்றும் தெரியவில்லை. அவரை நான் உயிரோடு பார்க்கப் போகிறேனா என்பதே சந்தேகந்தான்!'' என்று கூறிவிட்டு மீண்டும் அழ ஆரம்பித்தாள் அவள்.

வேதனைக் களத்தில் வீழ்ந்து கிடக்கும் அவளுக்கு மேலும் துன்பம் தர எண்ணாமல், அரசன் அவளைப் போகுமாறு கூறிவிட்டுத் துணைக்குச் சில வீரர்களையும் அழைத்துச் செல்லுமாறு கூறினான்.

''இல்லை! யாரும் தேவையில்லை. நான் தனியாகவே போய் வருகிறேன்''- எனச் சொல்லிவிட்டு கரிகாலனிடம் விடைபெற்று முத்துநகை வீரபாண்டியைச் சந்திக்கப் புறப்பட்டுவிட்டாள். அரசரைக் கொல்ல வந்த இருங்கோவேளின் ஆள் கூறிய தகவலிலிருந்து தன் காதலன் உயிரோடு இருப்பான் என்ற நம்பிக்கையே அவளுக்கு இல்லை. அந்தச் சூழ்நிலையில் அவள் மனம் என்ன பாடுபடும்? பாழ் மண்டபத்தி னருகிலோ, அல்லது அந்தக் குளத்திலோ தன் ஆசைக் காதலனின் பிணம் கிடக்கும் - அய்யோ! அதைப் பார்த்த பிறகு உயிர் நிற்குமா உடலில்! அப்படிப்பட்ட ஒரு கொடுமையான காட்சிதான் தன்னை வரவேற்கக் காத்திருக்கிறதா? அல்லது மரணத்தோடு போராடிக் கொண்டு ஆதரிக்க யாருமில்லாமல் அவதிப்படுகிற வீரபாண்டியைத் தான் அவள் காணப்போகிறாளா? அப்படியானால் காயம்பட்டு அலறித் துடிக்கும் அவனைத் தழுவிச் சிகிச்சை செய்து உயிர் கொடுத்து விட்டு மறுவேலை பார்க்கலாம் அவள்.

எண்ணங்கள் உந்தித் தள்ள ஓடிக் கொண்டிருந்தாள் பாழ் மண்டபம் நோக்கி.

முத்துநகை, தன் காதலனைத் தேடிச் செல்லும் அதே நேரத்தில் கானகத்தில் மரமாளிகையில் தன் அண்ணிக்கு அருகில் அமர்ந்து கன்னத்தில் கை வைத்தவாறு தாமரை, காதலில் தனக்கு ஏற்பட்ட விபரீதமான தோல்வியை எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். 'பிற ஆடவரை மனத்தால் நினைத்தாலும் கற்புக்குக் களங்கம் ஏற்பட்டுவிடும் என்று கூறுவார்களே! அதுபோலத்தான் நம் கற்புக்கும் குறை வந்து விட்டதோ' என்று சந்தேகப்பட்டாள். அந்தச் சந்தேகத்தை ஒரு நொடியில் துடைத்து விட்டு அவளைச் சமாதானப்படுத்தியது அவளது மனச்சாட்சி. ஓர் ஆடவனிடம் மனத்தைப் பறிகொடுத்தால்

தானே அப்படி - அவள் ஒரு பெண்ணிடம்தானே மனத்தைப் பறிகொடுத்தாள்? அதனால் கற்புப் பற்றிய பிரச்சினைக்கு இடமே ஏற்படவில்லை.

தன் அண்ணன் இருங்கோவேள் கூறியது உண்மையாக இருந்து, தன் காதலன் பெண்தான் என்று நிரூபிக்கப்பட்டு விட்டால் அவளைச் சும்மா விடக்கூடாது. சரியானபடி உடனே பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று திட்டம் வகுத்திடத் தொடங்கினாள். தன் மனத்தைக் கட்டுப்படுத்திச் சிந்தனை செய்யத் தவறிய காரணத்தால் எத்தனை பெரிய ஏமாற்றத்தைச் சந்திக்கும் நிலைமை ஏற்பட்டுவிட்டது என்று வருந்தினாள். வெட்கத்துடன் ஆத்திரமும் கலந்து கொண்டது. விழலுக்கு இறைக்கப்பட்ட நீர்போல் அவள் பேசித் தீர்த்த காதல் உரையாடல்கள் எல்லாம் பாழாகிவிட்டன. காட்டில் எரிந்த நிலாப் போல ஆயிற்று அவள் விழியினால் பேசிய விந்தை மொழியெல்லாம்!

அவள் அந்தப் பெண்ணைக் காதலிக்கவில்லை. அந்த பெண் போட்டிருந்த வேடத்தைக் காதலித்தாள்! ஆம். அந்த அழகிய வடிவத்தைக் காதலித்தாள். எழில் கொட்டும் அந்தச் சுந்தரத் திருமுகத்தைக் காதலித்தாள்.

இப்போது அது வெறும் ஊமை ஓவியமாகி விட்டது என்று நினைத்து நினைத்து மனம் புழுங்கினாள். தடாகத்துத் தெளிந்த நீரில் பிரதிபலிக்கின்ற முகத்தை எட்ட இருந்தே பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கலாம். 'என்னே அழகு!' என்று கூறிக் கொண்டே தடாகத்தில் கை வைத்தால் நீரில் ஆடிய அழகு நிழல் குலைந்து போய் விடும். அதே நிலைதான் இப்போது தாமரைக்கு!

அந்த முத்துநகையை எப்படி பழி வாங்கிக் கொள்வது என்ற கவலை தீவிரமாயிற்று. அவள் ஒரு வேஷக்காரி! தனக்கும் தன் அண்ணனுக்கும், ஏன், வேளிர் குலத்துக்கே பகை அவள்! செழியனை மீட்பதற்கு அவள் ஏன் இவ்வளவு கஷ்டப்பட வேண்டும். ஒருவேளை இருவரும் காதலர்களா? காதல் இல்லாவிட்டால் அவளுக்கு இவ்வளவு கவலை ஏற்பட நியாயமே இல்லை. செழியனின் மனப்போக்கு அதுபோல் இல்லையே. ''தாமரை! தாமரை!'' என்றல்லவா அவன் தவித்தான்? தன்னை அவன் காதலிப்பதாகச் சொன்னது வெறுங்கதைதானா? நான் பகைவனின் தங்கையென்றதும் அவன் காதலில் தயக்கம் ஏற்பட்டு விட்டதே! செழியன் எதிரி நாட்டுக்காரன். அவனை எப்படி நம்ப முடியும்? எப்படியாவது இதைவிட்டுத் தப்புவதற்குத் தன்னைக் காதலிப்பதுபோல் நடிக்கக்கூடும். நடிப்பு வெளியாகிவிடக் கூடாதே என்பதற்காகச் சற்றுத் தயக்கம் காட்டுவது போலவும் பாசாங்கு செய்யக்கூடும். முன்னதை விட இது மிக உயர்ந்த நடிப்பல்லவா?

முடிவாக உணர முடிவதெல்லாம் செழியனுக்கும் முத்துநகைக்கும் நிச்சயம் ஏதோ ஒருவகைத் தொடர்பு இருக்க வேண்டும்; அந்தத் தொடர்பு, இருவரும் இருங்கோவேளின் பகைவர்கள் என்ற தொடர்பாக மட்டும் இருக்க முடியாது. அப்படிப்பட்ட ஒரு சாதாரணத் தொடர்பு ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஏற்பட வேண்டிய அவசியமுமில்லை. செழியன், அவளைக் காதலிக்கவில்லையென்று வலிந்து ஓர் ஆறுதலான முடிவுக்கு வந்தாலும், முத்துநகை நிச்சயமாகச் செழியனைக் காதலிக்கி றாள். அதனால்தான் அவனை விடுவிப்பதற்காகத் தன் உயிரையும் உதிர்ந்த சருகாக எண்ணிப் பகைவரின் குகைக்குள்ளே நுழைந்திருக் கிறாள். நுழைந்தவள் தன் காரியத்தைப் பார்த்துக் கொண்டு தொலைந்தி ருக்கக் கூடாதா? இந்தத் தாமரை தானா கிடைத்தாள் அவளுக்குக் கருவியாக? அட தெய்வமே! தாமரை இலையில் விழுந்த தண்ணீர்தான் முத்துப்போல உருண்டு ஓடி ஓடித் தவிக்கும், பார்த்திருக்கிறேன். இப்போது தாமரையல்லவா தவிக்கிறது?

இதற்குப் பழி தீர்க்காமல் விடக்கூடாது; அவளுடைய மனம் எரிமலையாக மாற வேண்டும். திரும்பிய பக்கமெல்லாம் குளவிகள் கொட்டுவதுபோல் அழவேண்டும் அவள்! எந்தக் காதலனை மீட்பதற்காக என்னைப் பைத்தியக்காரியாக ஆக்கினாளோ, அந்தக் காதலன் அவளுக்குக் கிடைக்காமல் போகும்படி செய்ய வேண்டும். அதற்கு வழி இங்கு சிறையிலுள்ள செழியனைத் தொலைத்துவிடுவதா? தொலைத்தால் அவளுக்கு வேதனை-துயரம்- இத்தோடு முடிந்துவிடும். அவனை உயிரோடு வைத்து அவனைக் கொண்டே அவளை அணு அணுவாகக் கொல்லவேண்டும். அவனுக்காக எவ்வளவோ இன்னல் களை ஏற்றுக் கொண்டும் கடைசியில் அவன் தன்னை ஏமாற்றி விட்டானே என்று அவள் துடித்துக் கதற வேண்டும்.

அதற்கு ஒரே ஒரு வழி - செழியனை என்னுடையவனாக்கிக் கொள்வதுதான். என் மடியில் செழியன் சயனித்திருக்க வேண்டும். நான் அவனது சுருண்டு வளர்ந்த தலைமுடியை என் காந்தள் விரல்களால் வருடிக் கொண்டிருக்க வேண்டும். அந்தக் காட்சியை அவள் காண வேண்டும்; பதற வேண்டும்; 'பாவி! பாதகா! என்னை ஏமாற்றி விட்டாயே!' என்று செழியன் மீது அவள் பாய வேண்டும்; செழியன் அவளை எட்டி உதைக்க வேண்டும்; கலகலவெனச் சிரிக்க வேண்டும். 'ஆகா! இதுவன்றோ முத்துநகை! இவளா முத்துநகை? பெயரைப் பார் பெயரை!' என்று அவன் அவளை மேலும் மேலும் இகழ வேண்டும்; என்னைப் புகழ்ந்த அவன் வாயை நான் என் இதழ்க் கதவுகளால் சாத்திட வேண்டும். அங்கு அதற்கு மேல் நிற்க முடியாமல் அந்த ஏமாற்றுக்காரி கோவெனக் கத்திக் கொண்டு ஓட வேண்டும்; இப்படிப் பழி தீர்த்துக்

கொண்டால்தான் என் ஆத்திரம் அடங்கும்; என் மனம் அமைதி அடையும்; ஆறுதல் பிறக்கும்!

இவ்வாறு பழி வாங்கும் திட்டத்தை மனத்திற்குள் நிறைவேற்றிக் கொண்டு தாமரை உட்கார்ந்திருக்கும் போது, அவளை அறியாமலே அவள் முகம் அந்தி வானத்துச் செந்நிறமாய் ஆகிவிட்டதை அவள் கண்ணாடியிற் காணாவிட்டாலும் அருகிலேயே படுத்துப் பிணியால் வாடிக் கொண்டிருந்த அரசி கவனித்து விட்டாள்.

''என்னம்மா! முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது? உள்ளத்திலே ஊமை நாடகத்தின் உச்சக்கட்டம் நடைபெறுகிறதா?'' என்று கேட்டுவிட்டு இருமஆரம்பித்தாள்.

''ஒன்றுமில்லை அண்ணி,'' என்று தாமரை சடக்கென்று பதில் சொன்னாலும், 'ஊமை நாடகம்' என்று அண்ணி வர்ணித்ததற்கு அவளால் பொருள் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை அண்ணியிடத்திலும் அண்ணன் விஷயத்தைக் கூறியிருப்பாரோ என்ற ஐயம் அவளை ஆட்டிப்படைத்தது. மிகக் கஷ்டப்பட்டு முகத்தை மகிழ்ச்சியாக வைத்துக் கொண்டு அண்ணியின் அருகில் சென்று மருந்தைக் கலக்கிக் கொடுத்தாள்.

''எங்கேயம்மா அந்த மருத்துவன்? ஆளையே காணோம்...?'' என்று அரசி ஆவலுடன் கேட்டாள்.

''பச்சிலை பறிக்கப் போனவன் இன்னுமா திரும்பவில்லை? அடப்பாவமே ஏதாவது மலைப்பாம்புகளின் வாயைக் குகையென்று நினைத்து, பச்சிலை பறிக்க உள்ளே புகுந்து வயிறு வரையில் சென்று அங்கேயே குடியிருக்கிறானா?'' என்று தொடர்ந்து கேலியாகக் கேட்டாள் அண்ணி.

பேச்சை மாற்றுவதற்குப் பெரிதும் விரும்பிய தாமரை ''அண்ணி, அவன் எங்காவது தொலையட்டும்! அண்ணனை இன்னும் காணவில்லையே; எங்கேபோனார்? எப்போது வருவார்?'' என்றாள்.

''அந்தக் கவலையில்தான், அவர் வெளியில்சென்றால் திரும்பி வரும் வரையில் என் நெஞ்சு 'திகீர் திகீர்' என்று பற்றியெரிந்தவாறே இருக்கிறது. ஒவ்வொரு சமயமும் உயிரைப் பணயமாக வைத்துத்தான் உன் அண்ணன் வெளியில் கிளம்புகிறார்!''

''எனக்கென்னவோ அண்ணி இந்தப் பயங்கரத்தை அனுபவிப்பதை விடக் கரிகால் சோழருடன் சமாதானம் செய்து கொண்டு அவருக்கு அடங்கியே இருக்கலாம் என்று தோன்றுகிறது.''

''அய்யோ, இதைச் சத்தம் போட்டுச் சொல்லாதே! அவர் கேட்டுக் கொண்டு வந்தாலும் வருவார். சோழரைப் பழி தீர்த்துக் கொள்வதைத் தவிர வேறு வாழ்க்கை இலட்சியமே இல்லையென்பதுதான் உன் அண்ணனின் முடிவு. அதற்காகவே அவர் உயிர் வாழ்வதாகக் கூறிக் கொண்டிருக்கிறார்!''

''நிறைவேறக் கூடிய இலட்சியமா அண்ணி அது?''

''என்னைக் கேட்டால் நான் எப்படிக் கண்ணே பதில் கூறுவேன்? அவரைத் தடுக்க நாம் யார்? அப்படித் தடுக்கும் முயற்சியில் வெற்றி பெற இயலவில்லையென்பது உனக்குத் தெரியாதா என்ன? அம்மா தாமரை! நான் ஒன்று சொல்லுகிறேன் கேள்! நான் இன்னும் அதிக நாள் உயிர் வாழப் போவதில்லை!''

''அய்யோ! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள், அண்ணி!''

''நானே உணர்கிற உண்மையைச் சொல்லக்கூடாதா? என் உடலையும் உயிரையும் அனேகமாக நோய் அரித்துத் தின்றுவிட்டது. உன் அண்ணனின் இலட்சிய முடிவைப் பார்க்காமல் நான் செத்தாலும் செத்துவிடக்கூடும். தப்பித் தவறிச் சாவதற்குச் சிறிது தாமதமானால் கொஞ்சம் உடம்பில் தெம்பு வந்தாலும் போதும்; உன் அண்ணனின் இலட்சியம் ஈடேற என்னால் ஆன பங்கைச் செலுத்தவே விரும்புகிறேன். என் எண்ணம் ஈடேறாமல் நான் போய் விட்டால், நான் சொல்வதை நீ கட்டாயம் கேட்கவேண்டும்! கேட்பாயா தங்கமே?''

''கேட்கிறேன் அண்ணி, சொல்லுங்கள்!''

''சீரோடும் சிறப்போடும் வாழ்ந்தவர் என் ராஜா. கவலைகள் அவரைத் தொட்டது கிடையாது அப்போது! முகத்திலே சிந்தனை ரேகைகள் படர்ந்து நான் கண்டது கிடையாது அன்று. ஆனால் இன்று அவர் கவலைகளின் உறைவிடமாகிவிட்டார். நான் ஒன்று கேட்டால் அவர் ஒன்று சொல்கிறார். எங்கேயோ சிந்தனை, எதைப் பற்றியோ நினைவு. தொல்லைகளில் உழலும் அவருக்கு எள்ளளவு அமைதி வழங்கவும் இந்தப் பாவிக்குக் கொடுத்து வைக்கவில்லை. நான் போன பிறகு அவருக்கு என்னைப் பொறுத்த வரையில் நிம்மதிதான். ஆனால் இலட்சியத்தைப் பொறுத்தவரையில் அவருக்கு அமைதி ஏற்படவும் - வெற்றி கிட்டவும் நீ தான் அவருக்கு உதவியாக இருக்க வேண்டும். அண்ணன் பேச்சுக்கு மறுபேச்சுப் பேசக்கூடாது. இழந்த பொன்னாட்டை மீட்பதற்கும், இலட்சிய வெற்றி காண்பதற்கும் அவர் படும் கஷ்டங்களின் பயன் அத்தனையையும் நீதானே அனுபவிக்கப் போகிறாய்? உன்

எதிர்காலத்துக்கும் சேர்த்துத்தானே அவர் போராடுகிறார், அதை மறந்துவிடாதே! என்ன; நான் சொல்வதைக் கேட்பாயா?'' என்று கேட்டுக் கொண்டே தேம்பித் தேம்பி அழுதாள் வேளிர்குலத்து அரசி.

தாமரையும் ''அண்ணி''! என்று கதறிக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

உணர்ச்சியை அள்ளிக் கொட்டிப் பேசியதால் அரசிக்கு இருமல் அதிகமாயிற்று. ஓயாமல் இருமி இருமித் துடித்துத் துவண்டாள். நெஞ்சாங்குழாய் எல்லாம் வலி கண்டு ''அய்யோ! அம்மா! அப்பா!'' என்று கத்திக் கொண்டேயிருந்தாள். கண்களிலேயிருந்து தடைபடாமல் நீர் வழிந்து கொண்டேயிருந்தது.

தாமரை, தகுந்த சிகிச்சைகள் செய்து அரசியைக் களைப்பு நீக்கிப் படுக்க வைப்பதற்குள் மிகவும் பயந்து விட்டாள். இதுதான் அண்ணியின் கடைசிக் கட்டம் போலும் என்று அவள் தீர்மானித்துக் கொண்டு, அண்ணனையும் காணோமேயென்று அலறித் துடித்தாள். ஆனால் அவள் பயந்தது போல் ஒன்றும் நடந்து விடவில்லை. அரசி சிறிது நேரத்திற்கெல்லாம் கண்ணயர்ந்து விட்டாள்.

தாமரையின் சிந்தனை மீண்டும் சிறகு கட்டிக் கொண்டு புறப்பட்டது. முத்துநகையைப் பழி வாங்க, தான் போட்ட திட்டமும் - அண்ணியின் வேண்டுகோளும் வெவ்வேறு திசை நேர்க்கோடுகளாகப் போகாமல் ஒவ்வொன்றும் வளைந்து கொடுத்து ஒன்றையொன்று தொட முயல்வதாகவே எண்ணினாள். தரையில் பச்சிலை ஒன்றினால் அவள் இழுத்த இரண்டு வளைவுக் கோடுகளும் அவளுக்கு அந்தக் கருத்தை நினைவூட்டின.

தாமரை, செழியனைக் காதலித்து அவனைத் தன்னுடையவனாக ஆக்கிக் கொண்டால் ஒரே கணையில் இரண்டு மான்கள் வீழ்ந்தது போலத்தான்! முத்துநகையையும் பழிவாங்கிக் கொள்ளலாம். செழியனைக் கொண்டே இருங்கோவேளின் இலட்சியத்தையும் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று திட்டம் தீட்டினாள் அவள்.

அப்போது புரண்டு படுத்த அரசி திடுக்கிட்டவளாய் எழுந்து ''தாமரை! தாமரை கொண்டுவா ஒரு குதிரையை!'' என்று கத்தினாள். ''அண்ணி! அண்ணி!'' என்று தாமரை எழுந்து ஓடினாள். ''எனக்குத் தெம்பு வந்து விட்டது தாமரை! புதிய பலம் வந்து விட்டது. நான் ஒருத்தியே கிளம்பிச் சோழனிடம் செல்கிறேன். அவனைப் பழிவாங்கு கிறேன். என் நாயகனின் இலட்சியத்தை நிறைவேற்றுகிறேன். இப்படி ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவு இப்போதே பலிக்கப் போகிறது.

கொண்டுவா குதிரையை!'' என்று கட்டிலை விட்டுக் கீழே குதிக்க முயன்றாள் அரசி.

சரி! அண்ணிக்குக் குளிர்கண்டு விட்டது என்று தீர்மானித்த தாமரை அவளைப் பலவந்தமாகப் படுக்க வைத்துத் தோழிகளை விட்டு மருத்துவர்களை அவசரமாக அழைத்துவரச் சொன்னாள். மருத்துவர்கள் ஓடிவந்து பயம் ஒன்றுமில்லையென்று கூறிவிட்டுத் தூங்குவதற்கான மருந்து கொடுத்து அரசியாரைத் தூங்க வைக்க முயன்றார்கள்.

''அவர் எங்கே? அரசர் எங்கே? என் ராஜா எங்கே?'' என்று கேட்டவாறே அரசி தூங்க ஆரம்பித்தாள்.

தாமரையும் பெருமூச்சு விட்டு ஆறுதலடைந்தாள்.

''அவர் எங்கே? என் ராஜா எங்கே?'' என்று மரமாளிகையில் அரசி கதறியது போலவே முத்துநகையும் கதறிக் கொண்டு பாழ்மண்டபத்துக்கு வந்து சேர்ந்தாள். பரபரப்புடன் சுற்று முற்றும் பார்த்தாள். குளக்கரைக்கு ஓடினாள். படித்துறையில் தேடினாள். எந்த அறிகுறியும் தென்பட வில்லை, அவள் மனம் பட்டபாட்டை அவளைத் தவிர வேறு யாரால் வர்ணிக்க இயலும்?

படித்துறைகளில் இரத்தத் துளிகள் காய்ந்து கருமை நிறம் பெற்றுக் காட்சியளிப்பதைக் கண்டு, ''ஓ!'' வென அலறிக் கண்களைப் பொத்திக் கொண்டாள். மண்டபத்திலும் இரத்தம் உறைந்து கிடந்தது. அது தன் காதலனின் இரத்தம்தான்! அந்த இரத்தக்கறையின் மீது முகத்தைப் பதித்துக் கொண்டு முத்துநகை ''அத்தான், அத்தான்!'' என்று கதறிய கொடுமையைக் கண்டு அவளுக்கு ஆறுதல் கூற அங்கு யாரும் இல்லை.

எழுந்தாள், வெறிகொண்டவளைப் போல! தடாகத்தை நோக்கினாள். ''எங்கே என் அத்தான்?'' என்று அழுதாள். தூணும் அந்தக் கேள்விதான் கேட்டது.

அதே மண்டபத்தில் - அதே குளக்கரையில் - அவளும் அவள் ஆசை அத்தானும் பேசியதும் பழகியதும் நினைவுக்கு வராமல் போகுமா?

நினைவுகள் ஈட்டிகளாக மாறி வதைத்தன. உடல் நெருப்பாக எரிந்தது. குளத்தில் குதித்தாள். முழுகி முழுகி எழுந்தாள். அத்தானின் பிணத்தைத் தேடத் தொடங்கினாள். அவள் கையில் எதுவும் சிக்கவில்லை.

கடைசித் தடவையாக அவள் முழுகி எழுந்தபோது அவள் கையோடு ஓர் உடை வந்தது. ஆம் அது அவன் அணிந்திருந்த உடைதான்! 'அத்தான் மேனியில் இருந்த உடையேதான். அந்த உடையை மாறிமாறி முத்தமிட்டுக் கதறினாள்; புலம்பினாள். மீண்டும் குளத்தில் தேடி னாள்.ஏமாற்றத்துடன் கரையேறி மண்டபத்துக்கு வந்தாள்.

மண்டபத்து இடிந்த சுவரில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள் அவள் கண்களை இழுத்தன. அருகே ஓடி அதைப் படித்தாள். காட்டுப் பச்சிலை களால் எழுதப்பட்ட அந்த எழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலாக மாறி அவள் கண்களைக் குத்தின.

''இந்த மண்டபத்தில் ஒரு வீரன் குற்றுயிராய்க் கிடந்தான். யாரும் துணையில்லை. செத்துக் கொண்டே இருந்த அவனைத் தூக்கிப் பிழைக்க வைக்க முயற்சி செய்தோம், முடியவில்லை. 'நீ யார்?' என்று கேட்டோம்.'இருங்கோவேள்! இருங்கோவேள்; முத்துநகை! முத்துநகை!' என்று கூறிக் கொண்டே உயிர்விட்டான். மண்டபத்துக்கு அருகே அவன் சடலத்தை அடக்கம் செய்து விட்டுத் திரும்பி விட்டோம்.

இங்ஙனம்
வழிப்போக்கர்''

இதைப் படித்த முத்துநகை ''அய்யோ அத்தான்!'' என்று தலையைச் சுவரில் முட்டிக் கொண்டு மயக்கமுற்றுத் தடால் எனக் கீழே சாய்ந்தாள்.

வெகு நேரத்திற்குப் பிறகு முத்துநகை மயக்கம் தெளிந்து மெல்ல இமைகளைத் திறந்து பார்த்தபோது அவளுக்கு மீண்டும் மயக்கம் வரும்போல் ஆகிவிட்டது. பாழ்மண்டபத்தின் சுவரில் எழுதப்பட்டிருந்த அந்த எழுத்துக்களைப் படித்ததும், படிக்கும்போதே நினைவு கலங்கிய தும் அவளுக்கு ஞாபகத்திற்கு வந்தன. 'மயக்கமுற்று மண்டபத்திலே தானே விழுந்தோம்? இப்போது வேறிடத்தில் அல்லவா இருக்கிறோம்?' என்று அதிர்ச்சி அடைந்தாள். விழிகளை மெதுவாகச் சுழலவிட்டாள். நிச்சயமாகத் தான் இருக்குமிடம் மண்டபம் இல்லையென்பதைப் புரிந்து கொண்டாள். மரத்தாலான ஒரு வீட்டுக்குள் அவள் படுக்க வைக்கப் பட்டிருப்பதை உணர்ந்தாள்.

இது என்ன புதிய வீடா? அல்லது இருங்கோவேளின் பழைய மரமாளிகைதானா? இளைத்துப்போன நினைவுகளுக்குத் தெம்பு ஏறிற்று. இருங்கோவேளின் மரமாளிகையில் தான் கிடத்தப்பட்டி ருக்கிறோம் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டாள். தன் படுக்கைக்கு அருகே ஒரு தட்டில் பழங்கள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு கிண்ணத்தில் பழரசம் இருந்தது. இவ்வளவு அக்கறையாகத் தன்னை யார் கவனித்திருக்க முடியும்? கேள்வி எழுந்தது. அத்தோடு பதிலும் பிறந்தது. எல்லாம் அந்தப் பைத்தியக்காரி தாமரையின் வேலையாகத்தான் இருக்குமென்று முடிவு கட்டிக் கொண்டாள்.

அவளையறியாமல் அவள் கண்கள் நீரைப் பொழிந்து கொண்டே யிருந்தன. தான் மயங்கி விழுந்த பிறகு தாமரை மண்டபத் திற்கு

வந்திருக்க வேண்டும்; அவள் தான் இங்கே கொண்டு வந்திருக்க வேண்டும் என்று அவள் முடிவு செய்து கொண்டாள். சுவரில் எழுதப்பட்டிருந்த அந்த எழுத்துக்கள் அவள் கண்களின் எதிரே பயங்கரமாகக் கூத்தாடிக் கொண்டிருந்தன. ஒவ்வொரு எழுத்திலிருந்தும் இரத்தம் கொட்டுவது போலத் தெரிந்தது. ''அத்தான்! அத்தான்!'' என்று அவள் இதயம் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

அவள் கன்னங்களில் வழிந்து கொண்டிருந்த கண்ணீரை ஒரு பெண்ணின் கரம் மெதுவாகத் துடைத்தது. அந்தக் கரத்தின் பக்கம் முத்துநகை திரும்பினாள். தாமரைதான் அங்கே உட்கார்ந்திருந்தாள்.

''அத்தான்!'' என்று தாமரையின் இதழ்கள் மெல்ல உச்சரித்தன.

உடனே முத்துநகைக்குத் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற அவசர உணர்ச்சி தோன்றியது. படுத்திருந்தவள், தன்மேல் அணிந்திருந்த ஆண் உடை சரியாக இருக்கிறதா என்று மார்பகத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். திகீர் என்றது அவளுக்கு. திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். தன்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டாள். தான் ஆண் வேடத்தில் இல்லை, பெண்ணாகவே இருக்கிறோம் என்பதை உடனே தெரிந்து கொண்டாள். தன் வேடத்தை கலைத்தது யார்? தாமரையாகத்தான் இருக்குமோ? யார் கலைத்தால் என்ன? தாமரைக்கும் தன் தந்திரங்கள் புரிந்துவிட்டன. தானும் இங்கு வந்து சிக்கிக் கொண்டாகிவிட்டது. புதிய புதிய ஆபத்துக்கள் ஏதேதோ காத்திருக்கின்றன என்று அவள் தீர்மானித்துத் தாமரையைச் சற்று வெட்கத்தோடும் கோபத்தோடும் பார்த்தாள்.

தாமரை மிகுந்த சினத்துடன் இருக்கிறாள் என்பது அவள் பார்வையிலேயே புரிந்தது. யார் முதலில் பேசுவது என்ற பிரச்சினையும் இருவரிடையே பலமாக எழுந்தது.

யார்தான் முதலில் பேச முடியும்? ஒருத்தி ஏமாந்தவள்; இன்னொருத்தி ஏமாற்றியவள். இருவரிடையே நடமாடியதோ காதல் விவகாரம். தன் உள்ளத்தைக் கொள்ளையடித்து இறுதியில் பெருத்த அவமானத்திற்கு உள்ளாக்கிவிட்ட ஒரு வஞ்சகியைப் பழிவாங்கிக் கொள்ளச் சரியான சந்தர்ப்பம் கிடைத்தது என்று எண்ணிக் கொண்டே தாமரை அவளைப் பயங்கரமாக நோக்கினாள். வாழ்வில் பேரிடியே விழுந்துவிட்டது. இனி என்ன வந்தால் என்ன என்ற துணிவோடு முத்துநகை உள்ளத்தைத் திடப்படுத்திக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். தாமரை வேண்டுமென்றே முத்துநகையின் தங்கம் மின்னும் அங்கங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் செய்கையில் வெறுப்புற்ற முத்துநகை சற்றுக் கடுமையான குரலில் ''என்ன பார்க்கிறாய்?'' என்று கேட்டாள்.

''ஒன்றுமில்லை, இந்த வாளிப்பான உடம்பை வைத்து எத்தனையோ வாலிபர்களை மயக்கியிருக்கலாமே - நான் தானா கிடைத்தேன் உனக்கு, என்று சிந்தனையை ஓட விடுகிறேன்'' என்றாள் தாமரை.

''இப்பொழுது நான் சிறைப்பட்டிருப்பதாக அர்த்தமோ?'' என்று கேட்டாள் முத்துநகை.

''அப்படியே நினைத்துக் கொள்ள வேண்டியதுதான். சிறைப்பட்ட காதலரை விடுவிப்பதற்கு இத்தனை நாள் ஆண் உடைக்குள் சிறைப்பட்டி ருந்தாய்; இப்போது எங்கள் அரண்மனைக்குள் சிறைப்பட்டிருக்கிறாய்.''

முத்துநகை தன் திட்டங்களெல்லாம் தவிடுபொடியாகியதாக எண்ணிக் கலங்கினாள். இனிமேல் தாமரையிடம் பேசுவதால் எந்தப் பயனும் இல்லை என்றும் முடிவு கட்டிக் கொண்டாள். அவளைத் தான் ஏமாற்றவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதற்காக ஏதாவது போலிக் காரணங்களை காட்டலாம் என்று எண்ணியிருந்தாள். ஆனால் அந்த எண்ணமும் பலிக்காது என்பது தாமரையின் பேச்சிலிருந்து நன்றாக விளங்கிவிட்டது. செழியனை மீட்டுச் செல்வதற்காகவே தான் ஆண் வேடம் பூண்டு வந்ததாகத் தாமரை கண்டுபிடித்து விட்டாள். இனிமேல் நடப்பது நடக்கட்டுமென்று பேசாமல் இருக்க வேண்டியதுதான்.

தப்பித்துக் கொள்ள வேறு வழியில்லை. திடீரென்று இந்தச் சூழ்நிலையைத் தலைகீழாகக் கவிழ்க்கக் கூடிய மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டாலன்றித் தனக்கு விடுதலை இல்லை; செழியனுக்கும் விடுதலை இல்லை.

இப்படிப்பட்ட முடிவுகளால் முத்துநகை தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள். தாமரைக்கு, முத்துநகையைக் கேலி செய்து ஆத்திர மூட்ட வேண்டும் என்று தோன்றியது. ஏனெனில் அவளுக்கு ஏற்பட்ட ஏமாற்றம் அத்தகையது. அவள் சந்தித்த அந்த அவமானமிக்க சூழ் நிலையை அவளைப் போல் அனுபவித்துப் பார்த்தவர்களால்தான் வர் ணிக்க இயலும். எத்தகைய கொந்தளிப்பை நெஞ்சத்தில் உண்டாக்கக் கூடிய சம்பவம் அது என்பதையும், அனுபவித்தவர்களே புரிந்து கொள்ள முடியும்.

''சரியத்தான், நான் போய்வருகிறேன், நிம்மதியாகத் தூங்குங்கள்'' என்று அவள் எழுந்தாள்.

''போய் வாடி ஏமாளி!'' என்றாள் ஆத்திரமாக முத்துநகை.

''ஏனத்தான் கோபித்துக் கொள்கிறீர்கள்? என் ராஜா! இப்படியெல்லாம் ஆத்திரப்படலாமா? கண்ணாளா! கண்ணயருங்கள்!'' என்று மீண்டும் கேலி புரிந்தாள் தாமரை.

பதில் கூறாமல் இருப்பதுதான் நல்லது என்று கருதியவளாய் முத்துநகை வேறு பக்கம் திரும்பி உட்கார்ந்து கொண்டாள். சற்று நேரம் அங்கேயே நின்று விட்டுத் தாமரை வெளியேறினாள். அவள் வெளியேறியதைத் தொடர்ந்து கதவு சாத்தப்பட்டு வெளியே பூட்டப்படுவதைக் கவனித்தாள் முத்துநகை.

பாழ்மண்டபத்தில் முத்துநகை மயக்கமுற்று விழுந்ததும் அருகிலுள்ள புதர் மறைவிலிருந்து இரண்டு பேர் ஓடி வந்தார்கள். அவர்களில் ஒருவன் இருங்கோவேள்; இன்னொருவன் இருங்கோவேளின் ஆள். விழுந்து கிடந்த முத்துநகையை இருங்கோவேள் தூக்கி மடியில் வைத்துக் கொண்டு முகத்தைப் பார்த்தான். மூச்சு இழைந்துக் கொண்டிருந்தது. உடனே தன் ஆளை அனுப்பிக் குதிரையைக் கொண்டு வரச் சொல்லி, முத்துநகையையும் குதிரையில் ஏற்றிக் கொண்டு மரமாளிகை நோக்கிப் பறந்து விட்டான். மரமாளிகையில் தன் தங்கை தாமரையின் அறையில் அவளைப் படுக்கவைத்துத் தங்கையிடம் ஒப்புவித்து விட்டு வெளி யேறினான்

''என் பேச்சை நீ நம்புவதற்கு மறுத்தாயே, இதோ கொண்டு வந்து விட்டேன் உன் காதலனை, இனிமேலாவது அண்ணன் வார்த்தை சரிதானா என்று சோதித்துப் பார்!'' என்று கூறி முத்துநகை வெளியேற முடியாதபடி காவல் போட்டுவிட்டுச் சென்றுவிட்டான்.

அவன் போனபிறகு நடந்த நிகழ்ச்சிதான் முதலில் தீட்டிக்காட்டப் பட்டது.

அன்றிரவு மரமாளிகையில் என்றுமில்லாத அமைதி குடி கொண்டிருந்தது. காரணம், இருங்கோவேள் முகம் மிகவும் சோகமாகக் காட்சியளித்ததுதான் போலும். தலைவனின் முகத்தில் செழிப்பில்லை என்றதும் வீரர்களுக்கு உற்சாகம் எங்கிருந்து வரும்? அதனால் அவர்கள் அன்றிரவு கூத்து, கும்மாளம் எதுவுமின்றிச் சோர்வுடன் காணப்பட் டார்கள்.

கரிகாலனை பழிவாங்குவதற்குத் தான் செய்த அருமையான முயற்சி தோல்வியடைந்ததே என்பதை எண்ணி எண்ணி இருங்கோவேள் சோர்வுற்றான்; அத்தோடு முத்துநகையின் பிரச்சினை வேறு அவனுக்குப் பெருங்குழப்பமாக வந்து முடிந்தது.

தன்னை உயிரினும் மேலாக நேசிக்கும் ஒருத்தி தன்னையே பழிவாங்கத் துடித்து நிற்கிறாள் என்று எண்ணும்போதும், அவளைத் தான் ஏமாற்றி அவளது காதலுக்கு பெருஞ்சோதனையை உண்டாக்குவதை

நினைக்கும்போதும் அவனால் அந்தச் சிக்கலை எப்படி அவிழ்ப்பது என்றே தோன்றவில்லை. திண்டாடினான்.

இந்தக் குழப்பங்களோடுதான் அவன் அன்றிரவு தன் ராணியைப் போய் சந்தித்தான். கணவனின் முகத்தில் என்றுமில்லாத சோகம் கப்பியிருப்பதைக் கண்டு அரசி கலங்கினாள். தன் கணவன் பல நாட்களாகவே சோகச் சிலையாக மாறிவிட்டான் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தாலும் அன்றைய தினம் அவள் கண்ட இருங்கோவேள் நடைப்பிணம் போல் தோன்றியதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அரசியின் அருகே சென்று இருங்கோவேள் அமர்ந்தான். இருவரின் விழிகளும் உறவாடிக் கொண்டன. அரசி கண்ணீர் வடித்தாள்.

கரகரத்த குரலில் இருங்கோவேள், ''அழாதே கண்ணே!'' என்று ஆறுதல் கூறி அவளைத் தன் அகன்ற மார்பின் மீது சாய்த்துக் கொண்டான்.

''இந்தச் சோகத்திற்கு முடிவே கிடையாதா?'' என்று அவள் கேட்டாள்.

மன்னன் பதிலுரைக்கவில்லை.

''இந்த வாழ்க்கையில் மாற்றமே இல்லையா?''

இருங்கோவேளின் உதடுகள் அசைந்தன.

''ஏனில்லை! இருங்கோவேள் தன் இலட்சியம் நிறைவேறாமல் சாகமாட்டான்'' என்று அழுத்தந்திருத்தமாகக் கூறினான்.

''அந்தக் கரிகால் மன்னர் ஒழிக்கப்பட வேண்டும்; அது தானே உங்கள் இலட்சியம்?'' என்று ஆத்திரத்தோடு கேட்டாள் அரசி.

''ஆம் கண்ணே! அதுதான் நமது இலட்சியம்; ஏன் உனக்குப் பிடிக்கவில்லையா, இந்த இலட்சியம்?''

''என் ராஜாவின் இலட்சியமே என் இலட்சியம். அந்த இலட்சியம் நிறைவேற இந்த உயிர் போனாலும் எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சி. ஆனால் கேவலம் இருமல் அல்லவா என் உயிரை வாங்கிவிடும் போலிருக்கிறது!'' என்று கூறியவாறு இரும ஆரம்பித்தாள்.

இப்போதும் கடுமையான இருமல். நெஞ்சுவலி, தாமரை ஓடி வந்து சிகிச்சையில் ஈடுபட்டாள்.

நீண்ட நேரக் கஷ்டத்துக்குப் பிறகு அரசியைப் படுக்க வைத்துத் தூங்கச் செய்துவிட்டுத் தாமரை படுப்பதற்குப் போய்விட்டாள். அதுவரையில் அங்கேயே உட்கார்ந்து ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டி ருந்தான் இருங்கோவேள். முத்துநகையைச் சோதிப்பதற்காகச் சுவரில்

எழுதி வைத்த அந்த எழுத்துக்களைக் கண்டு அவள் அலறிக் கீழே சாய்ந்த காட்சி அவனை ஓர் உலுக்கு உலுக்கும். அதே சமயம் அரசியின் பயங்கர இருமலும் அந்த இருமலினிடையே, ''என் ராஜாவின் இலட்சியத்தை நானும் நிறைவேற்றுவேன்'' என்று அரசி கூறுவதும், அவன் இதயத்தை உசுப்பும். கரிகாலனின் உருவம் எதிரே வந்து நின்று ''அடே! இருங்கோவேள்! என்னை உன் சூழ்ச்சி ஒன்றும் செய்யாது!'' என்று நகைமுழக்கம் செய்வது போலிருந்தது.

தாமரை போன பிறகு இருங்கோவேள் மனைவியின் கால் பக்கம் போய் அமர்ந்து, அவள் கால்களைத் தடவிக் கொண்டே இருந்தான். முரட்டுக் குணம் படைத்த அவன் இதயத்திலிருந்து கிளம்பிய சோகப் பெருவெள்ளம் கண்களின் வழியே உடைப்பெடுத்து ஓடிக் கொண்டிருந்தது.

அரசி திடுக்கிட்டு எழுந்தாள். கால்களை வருடிக் கொண்டிருக்கும் கணவனின் கரங்களை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவனை அப்படியே ஆரத்தழுவி அவன் கால்களில் தன் தலையை வைத்துக் கொண்டாள். ஒருவருக்கொருவர் பேசாமலே தங்கள் உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டனர். பின்னர் இருங்கோவேள் அரசியை ஒழுங்காகப் படுக்க வைத்துவிட்டு அவள் கன்னத்தை வருடிவிட்டு அந்த அறையினின்றும் வெளியேறினான். அரசியும் கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தாள்.

வெளியேறிய இருங்கோவேள், முத்துநகை பூட்டப்பட்டிருந்த அறையின் வழியாகச் சென்று அங்குள்ள பலகணியில் எட்டிப்பார்த்தான். அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். பின்னர் அங்கிருந்து தன் மாளிகைக்குச் சென்று கட்டிலில் தடால் என விழுந்து உறங்குவதற்கு முயற்சி செய்தான். மாளிகையின் உள்ளும் புறமும் நடுநிசியின் பயங்கர அமைதி குடிகொண்டிருந்தது. அரசி மட்டும் தூங்காமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தாள். மெதுவாக எழுந்து உட்கார்ந்தாள். மெல்லப் பலகணி வழியே, வெளியே எட்டிப் பார்த்தாள். ஒரே அமைதி! காற்றில் மரங்கள் அசைந்து ஏற்பட்ட சலசலப்பைத் தவிர வேறு ஒலியில்லை. எங்கேயோ தொலைவில் நரியின் ஊளைச் சத்தம் விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டிருந்தது.

அரசி, தாமரை படுத்திருந்த இடத்திற்குப் போய்க் கவனித்துப் பார்த்தாள். தாமரையும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். தோழிகள் படுத்திருந்த இடத்தைக் கவனித்தாள். அவர்களும் அயர்ந்த உறக்கத்தில் கிடந்தனர். அடிமேல் அடிவைத்து இருங்கோவேளின் தேவி, தான் படுத்திருந்த இடத்தைவிட்டு நகரத் தொடங்கினாள். இருமல் அவளைக் காட்டிக் கொடுக்க முனைந்தது. மிகச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

மாளிகைக்கு வெளியே வந்து விட்டாள்; குதிரைக் கொட்டடிக்கு வந்து சேர்ந்தாள். குதிரைகள் கனைத்துக் கொண்டும், தீனி தின்று கொண்டும் அமைதியற்று நின்று கொண்டிருந்தன. கொட்டடிக்குள் நுழைந்தாள்; அவளையும் மீறி இருமல். காவலன் விழித்துக் கொண்டான்.

''யார் அது?'' என்று அருகே ஓடிவந்தான். கையிலிருந்த தீப்பந்தத் தால் முகத்தைப் பார்த்தான்.

அரசி, அதிகார தோரணையில் ''ஸ்! சும்மா இரு! ஒரு குதிரையை அவிழ்த்துவா!'' என்று கட்டளையிட்டாள்.

காவலன், அரசிக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுக் குதிரையைக் கொண்டு வந்து நிறுத்தினான். அதில் எப்படித்தான் ஏறி உட்கார்ந்தாளோ தெரியாது - குதிரை பறந்தோடத் தொடங்கியது. குதிரை போன பிறகு காவலனுக்கு யோசனை பிறந்தது.

''இந்த அகாலத்தில் அரசியார் எங்கே தனியாகப் போகிறார்கள்?''

''அய்யய்யோ! அவர்கள் நோயாளியாயிற்றே!''

காவலன் இப்போதுதான் தெளிவாக விழிப்படைந்தான். இதை மன்னனிடம் சொல்லாமல் இருக்கக்கூடாதென்று இருங்கோவேளின் இருப்பிடம் நோக்கி ஓடினான்.

பரபரப்புடன் ஓடிவரும் குதிரைக் கொட்டடிக் காவலனை இருங்கோவேளின் மாளிகை காவலர்கள் வழிமறித்து, ''என்ன விசேடம்?'' என்று கேட்டார்கள். அவர்களிடம் அவன் விவரத்தைக் கூறி, உடனே மன்னனைப் பார்க்க வேண்டுமென்று துடியாய்த் துடிக்கவே அவனை அழைத்துக் கொண்டு மன்னன் படுத்திருக்கும் இடத்திற்குப் போனார்கள்.

படுக்கையறையில் விளக்கு மாத்திரம் 'மினுக் மினுக்'கென்று எரிந்து கொண்டிருந்தது. இருங்கோவேளைக் காணவில்லை. எங்கே போயிருக்கக்கூடும் என்று அவர்களால் உடனடியாக யூகிக்க முடியவில்லை. இருங்கோவேள் மன நிம்மதிக்காக வேண்டி எப்படியாவது தூக்கத்தைத் தழுவிக் கொள்ளலாம் என்றுதான் பெரு முயற்சி செய்தான். சில சமயங்களில் சாவைக்கூட விரும்பியவுடன் அழைத்துக் கொள்ளலாம்... தூக்கத்தை அழைக்க முடியாமல் தவிக்க நேரிடும்! கவலைகள், சாவை அருகினில் அழைத்துவரும் சக்தி பெற்றவை. ஆனால் தூக்கமோ கவலைகளைக் கண்டால் வெகு தொலைவில் ஓடிவிடும்.

படுக்கையில் புரண்டு புரண்டு இருங்கோவேள் தொல்லைப்படும் போது அவன் வாழ்க்கையின் ஏடுகளும் ஒன்றன் பின் ஒன்றாகப் புரண்டு

கொண்டுதான் இருந்தன. இன்றைய கருநாடகப் பகுதியான மைசூர் வட்டாரத்திலும், தமிழகத்தில் இன்றைய புதுக்கோட்டைப் பகுதிகளிலும் சிதறிக்கிடந்த வேளிர்குலத்தினரை ஒன்று திரட்டிப் பலம்வாய்ந்த வேளிர்குடிப் பேரரசு ஒன்றை நிறுவுவதாக அவன் திடசித்தத்துடன் முயற்சிகளை மேற்கொண்டான். அவன் முயற்சிகளுக்குப் பெருந்தடை யாகத் தான் கரிகாலனின் சோழப் பேரரசு விளங்கி வந்தது. உறையூரை யும், பூம்புகாரையும் முறையே பெருநகராகவும் தலைநகராகவும் கொண்டு வலிமை வாய்ந்த படைகளை அரணாக அமைத்து அரசோச் சிய சோழவேந்தன் கரிகாலனைத் தோற்கடித்தாலன்றித் தன் முயற்சிகள் வெற்றி பெற முடியாது என்ற பேருண்மை நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வந்தது. எப்படியும் கரிகாலனைப் பழி தீர்த்து அவன் கல்லறைமீது வேளிர்குடிப் பேரரசை நிறுவலாம் என்று அவன் கண்டு வந்த கனவு, கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்துவருவதை அவன் தெளிவாக உணரத் தலைப்பட்டு விட்டான். இறுதியாகக் கிடைத்த நல்ல சந்தர்ப்பமும் எப்படியோ நழுவி விட்டது. இனிச் சோழ மன்னன் எச்சரிக்கையாகி விடுவான் என்று எண்ணி, அவன் சோர்வடைந்தான்.

அப்படிச் சோர்வுற்று வருகிற நேரத்தில் அவனுக்கு உற்சாகம் தரக் கூடிய நிலையில் பெருந்தேவியாவது இருந்தாளா என்றாள் அதுவுமில்லை. அவனுக்கு உற்சாகமும், மகிழ்ச்சியும், உலகில் அவன் இதுவரையில் காணாத இன்பமும் அளிப்பதற்கு ஒருத்தி இருக்கிறாள். வீரபாண்டி என்ற பெயரில் அவளிடம் சென்றால் இறுகத் தழுவி இன்பமழை பொழிவாள். இருங்கோவேள் மன்னனாகச் சென்றால் இறப்புலகிற்கு அனுப்பிவைக்கத் துடித்து நிற்பாள்.

அதிலும் மனக்குழப்பந்தான். நிம்மதியில்லை. எல்லாக் குழப்பங் களும் ஒரே அடியில் தீர்ந்து விடும், கரிகாலனைத் தொலைத்துவிட்டால். அதற்கு வேளிர்குடியினர் இனித் தயாராக இல்லை. சோழன் படைகளிடம் தாங்கள் பட்டபாடு போதுமென்று அவரவர்கள் அடங்கிப் போய் ஆமைகளாகக் கிடக்கிறார்கள். இந்தக் கானகத்து மரமாளிகையில் சில நாட்கள் இலட்சிய வெறியுடன் உலவி, இறுதியில் இங்கேயே மண்ணோடு மண்ணாக வேண்டியதுதான் தன் வாழ்க்கையின் முடிவுபோலும் என்றெல்லாம் எண்ணியெண்ணி உறுமிக் கொண்டு, உறக்கத்தை வலிந்து வலிந்து கூப்பிட்டுக்கொண்டிருந்தான்.

முத்துநகையை மீண்டும் ஒருமுறை பார்த்துவிட்டு வரலாம் என்ற ஆசை துளிர்த்தது. அவள் சிந்தும் அமுத மொழிகளைக் கேட்டுச் சற்று ஆறுதல் பெறலாம் என்ற எண்ணம் மேலோங்கிற்று.

இந்தச் சூழ்நிலையில் அவள் என்ன பேசப் போகிறாள் என்று அறியவும் அவா எழுந்தது. வீரபாண்டியாகப் போகாமல் இருங்கோ

வேள் மன்னனாகப் போக வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். அதிலும் முத்துநகை காணுகிற இருங்கோவேள் முற்றிலும் வேறு உருவத்தில் இருக்க வேண்டுமென்றும் முடிவு செய்து கொண்டான்.

வேடம் அணியும் வேலை ஆரம்பமாயிற்று. காதில் கனத்த குண்டலங்கள், தலைவிரிகோலம், முரட்டுமீசைகள், முகத்தைக் கடுமையாகக் காட்டும் இளந்தாடி, மார்பிலே ஆபரணங்கள் - அவனது பிரதானியர் பார்த்தாலேகூட திடீரென்று அடையாளம் கண்டுபிடிக்க முடியாத அளவுக்குப் புதிய இருங்கோவேள் மன்னன் புறா அடைபட்டிருக்கும் இடம் நோக்கிப் புறப்பட்டுவிட்டான்.

முத்துநகை அடைக்கப்பட்டிருந்த இடத்திற்கு வந்ததும் அங்குள்ள காவலன் அடையாளம் தெரியாமல் மன்னனைத் தடுத்து நிறுத்தினான். அவனிடம் தன் வேடத்தை விளக்கிவிட்டு உள்ளே நுழைந்தான் இருங்கோவேள். அவன் முதலில் பலகணி வழியே பார்த்தபோது அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த முத்துநகை, இப்போதுகூட அது போலவே கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தாள். அவன் உள்ளே நுழைந்தபோது காலடியோசை கேட்டு அவள் திடுக்கிட்டு எழுந்தாள். அதிலிருந்து அவளும் சரியாகத் தூங்காமல், தூங்குவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டான். எழுந்தவள், இருங்கோவேளை உற்றுப் பார்த்துவிட்டு ''யார்?'' என்று அதட்டலாகக் கேட்டாள்.

''மன்னன்!''

- என்று கம்பீரமாகப் பதில் கூறினான்.

முத்துநகையின் உடம்பெல்லாம் நடுங்கிற்று. அவள் இதயம் படபடவென அடித்துக் கொண்டது. சுவாசப் பைகள் காற்றினால் நிரம்பி மார்பகம் விம்மி உயர்ந்தது; பெருமூச்சுக்குப் பின்னர் பழைய நிலையடைந்த காட்சியை இருங்கோவேள் சுவைத்தவாறு நின்று கொண்டிருந்தான். முத்துநகை தன்னைத்தானே தைரியப்படுத்திக் கொண்டு இருங்கோவேளுடன் கம்பீரமாகப் பேச முன் வந்தாள்.

''மன்னனா? எந்த நாட்டுக்கு?'' -இந்தக் கேள்வி இருங்கோவேளின் உள்ளத்தை எந்த அளவுக்குக் குடைந்திருக்கும் என்பதை விளக்கத் தேவையில்லை. அப்படியே இடிந்து போய் நின்றான்.

''ஓகோ! இந்தக் காட்டுக்கு மன்னரா?''

- அடுத்த கேள்வியும் கேலியுடன் கலந்து எழுந்தது.

''அடிமைப் பெண்ணே! பணிவாகப் பேசு! வேளிர் குலத் தலைவன் இருங்கோவேள் ஓர் எரிமலை - நீ பனிமலர்! நினைவில் வைத்துக் கொள்.''

''நான் எதையும் மறப்பதில்லை மன்னாதி மன்னரே! கரிகால் சோழரிடம் தாங்கள் பெற்ற மகத்தான வெற்றியைக் கூட நான் இன்னும் மறக்கவில்லை.''

''வெற்றி மயக்கத்தில் வீழ்ந்து கிடக்கும் சோழ மண்டலத்துக்கு விரைவில் பாடம் கற்பிக்கத்தான் போகிறேன். தோல்வி என் தோள்களை மேலும் வலுப்படுத்தியிருக்கிறதே தவிர என்னைத் துவளச் செய்துவிடவில்லை.''

''சரி... சரி... இந்நேரத்தில் இங்கு என்ன வேலை?''

அவனுடன் பேச்சுக் கொடுப்பது தன் காரியங்களைக் கெடுத்துவிடக் கூடும் என்று கருதிய முத்துநகை, தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டு பணிவுடன் பேச ஆரம்பித்தாள்.

''வேலையொன்றுமில்லை, என் மாளிகையில் சிறைப்பட்டிருக்கும் உனக்கு வசதிகள் போதுமானவைகளாக இருக்கின்றனவா என்று அறிய வேண்டியதும், ஆவன செய்ய வேண்டியதும் என் கடமையல்லவா?''

''மிகவும் நன்றி. நான் ஏன் இங்கு சிறைப்படுத்தப்பட்டிருக்கிறேன் என்று கூறலாமா?''

''மண்டபத்தில் மயங்கிக் கிடந்தாய்; உன்னை என் ஆட்கள் இங்கு கொண்டு வந்து சேர்த்தார்கள். ஆணுடையில் இருந்த உன்னைக் கண்டு என் தங்கை தாமரை அழுது புலம்பினாள். 'அய்யோ அத்தான்' என்று அலறினாள். எனக்கு ஒரே திகைப்பு! அதைவிடத் திகைப்பு - உன் வேடம் கலைந்த நிகழ்ச்சி; அடடா நீ பெண் என்பதை உணர்ந்ததும் என் தங்கைக்கு ஏற்பட்ட ஏமாற்றம் இருக்கிறதே, அதை விவரிக்கவே முடியாது. தங்கை ஏமாந்தாள். ஆனால் நான் விழித்துக் கொண்டேன். சோழ நாட்டுக்கு எங்களைக் காட்டிக் கொடுக்கும் வஞ்சகியொருத்தி அகப்பட்டாள் என்று அகமகிழ்ந்தேன். அதற்குப் பிறகு உன்னைச் சிறை வைப்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும், சொல்!''

''சிறையில்தான் அடைத்து வையுங்கள் - அல்லது சித்திரவதை செய்து கொன்று போடுங்கள்; எனக்கு இனி எதைப் பற்றியும் கவலையில்லை. இனி எனக்கு விடுதலை கிடையாது என்று நன்றாகப் புரிகிறது. என் வாழ்வின் கடைசிக் கட்டத்தில் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்; தயவு செய்து உண்மையைச் சொல்லுங்கள். வீர பாண்டியை என்ன செய்தீர்கள்?''

''வீரபாண்டி யார்? அந்த மதுரை ஒற்றனா? அவனைத்தான் படுகாயப்படுத்தி மரண வாசலுக்கு வழியனுப்பி வைத்துவிட்டார்களே என் ஆட்கள்?''

அந்த வார்த்தைகள் முத்துநகையின் காதுகளில் பேரிடி முழக்கமென அதிர்ந்தன. கண்களைப் பொத்திக் கொண்டு ஓவென அழுதாள். தான் செத்துவிட்டோம் என்று நினைத்துத் தனக்கெதிரே ஒருத்தி நின்று அழுவதைப் பார்த்து இருங்கோவேள் மனமுருகினான். திடீரென வேடத்தைக் கலைத்து வீரபாண்டியாக வெளிப்பட்டு விடலாமா என்று ஒருகணம் எண்ணினான். ஆனால் அவன் நிலைமை அவனைக் கட்டுப்படுத்தி எச்சரித்து விட்டது. எதிரே இருங்கோவேள் மன்னன் நிற்கிறான் என்பதையும் மறந்து " அத்தான்! அத்தான்!!" என்று கதறிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள் முத்துநகை.

இருங்கோவேளும் தன்னை மறந்து அவளருகே சென்று , "அழாதே கண்ணே!" என்று அவள் தோளைப் பிடித்தான்.

அவள் சோகமெல்லாம் எங்கேயோ பறந்து போயிற்று. "சீ!" எனத் திரும்பினாள். திரும்பிய வேகத்தில் இருங்கோவேளின் கன்னத்தில் 'பளார்' என ஓர் அறை கொடுத்து விட்டாள். அந்த அடி அவனைக் கலங்க வைத்து விட்டது.

ஆனாலும் சமாளித்துக் கொண்டு புலிபோலக் குரலெழுப்பி, "என்ன துணிச்சல் உனக்கு? என் கையில் சிக்கிய பிறகு உன்னைச் சும்மா விட்டுவிடுவேன் என்று கனவு கூடக் காணாதே?" என்று கையைப்பிடித்து இழுத்துக் கட்டித் தழுவிட முயன்றான். வழியேதுமறியாத முத்துநகை, அங்குமிங்கும் ஓடித் தன்னையும் கற்பையும் காப்பாற்றிக் கொள்ள முயன்றாள்.

"உன்னை இன்று நான் விடப்போவதில்லை!" என்று இருங்கோவேள் அவளைத் தழுவிக் கொண்டான்.

அவனது முரட்டுப் பிடியிலிருந்து முத்துநகை தன்னை விடுவித்துக் கொண்டு அவனது இடையில் இருந்த கட்டாரியைத் தன் கையிலே எடுத்துக் கொண்டு அவனை எதிர்ப்பதற்குத் தயாரானாள். தன் அருமைக் காதலியின் மன உறுதியையும் - கற்பின் திண்மையையும் வீரத்தையும் கண்ட இருங்கோவேள் பூரித்துப் போனான். இருந்தாலும் மேலும் அவளுடன் விளையாட வேண்டும் என்ற எண்ணத்தில் தீக்கண்களுடன் அவளை நெருங்கினான். முத்துநகை அவனை நோக்கிக் கட்டாரியை ஓங்கிவிட்டாள்.

தன் காதலனைத் தானேகொன்று சாய்க்க வேண்டிய சூழ்நிலை அவளையறியாமலே உருவாகிக் கொண்டிருந்தது. அவனும் அவளிடம் பாய்ந்துவிட்டான். அவள் கட்டாரியை அவன் மார்புக்கு நேரே கொண்டுவந்து விட்டாள்.

ஆனால் வீரனான இருங்கோவேள் அவள் கரத்தை மிக லாவகமாகப் பிடித்துக் கொண்டு அவள் முகத்தோடு தன் முகத்தை ஒட்டுவதற்கு முயன்றான்.

அந்தச் சமயத்தில் ''நிறுத்து அண்ணா! நிறுத்து!'' என்ற கூச்சலுடன் தாமரை ஊள்ளே நுழைந்தாள். தாமரை எப்படி அங்கு வர நேரிட்டது?

பெருந்தேவி வெளியேறிய செய்தியை இருங்கோவேளிடம் சொல்வதற்குச் சென்ற காவலர்கள், மன்னன் அங்கு இல்லாத காரணத்தால் தாமரையிடம் சென்று செய்தியைக் கூறிவிட்டனர். அவளும் அண்ணனைத் தேடிப் பார்த்துவிட்டு கடைசியாக முத்துநகை அடைபட்டிருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தாள். அங்கு காவல் புரிந்து கொண்டிருந்த வீரன் இருங்கோவேள் மாறுவேடத்துடன் முத்துநகை யிடம் பேசிக் கொண்டிருப்பதைக் கூறிவிட்டான். உடனே தாமரை உள்ளே நுழைந்த போது தன் அண்ணன், முத்துநகையிடம் அடாத செயல் புரிவதைக் கண்டு கூச்சல் போட்டுவிட்டாள். தங்கையின் குரலைக் கேட்ட இருங்கோவேள் முத்துநகையைவிட்டுத் திரும்பினான்.

''தாமரை! நீ எங்கே வந்தாய்?''

''வந்தது தவறா? அண்ணா! இது என்ன அக்கிரமம்! இதுவரையில் உன்னை நாங்கள் உத்தமன் என்றல்லவா கருதிக் கொண்டிருந்தோம்! பழிவாங்கத் துடிக்கும் காரணத்தால் என் அண்ணனுக்கு அடிக்கடி கோபம் வருகிறது; சிலரைக் கொடுமைப்படுத்துகிறார்! ஆனால் அவரைப் போன்ற ஒழுக்கசீலர் யாருமே இல்லை என்றல்லவா கூறிக் கொண்டிருந்தேன்! என்றுமில்லாத அநியாயம் இன்று ஏன் அண்ணா?''

''தாமரை! இதிலெல்லாம் நீ தலையிடாதே!''

''தயவு செய்து என்னை மன்னிக்கவும். அவள் இங்கு சிறைப்பறவையாக இருக்கலாம். அதற்காக மன்னனின் சிற்றின்பப் பதுமையாக இருக்க வேண்டுமென்று நினைப்பதை நான் மறுக்கிறேன்; தடுக்கிறேன்.''

''என் காரியங்களைத் தடுக்க யாராலும் முடியாது. மரியாதையாக வெளியே போய்விடு!''

''அண்ணா! நீ எப்படியாவது அழிந்து போ, எனக்கென்ன? நான் சொல்ல வந்ததைச் சொல்லிவிடுகிறேன்... அண்ணியைக் காணவில்லை. குதிரையிலேறி ரகசியமாக எங்கேயோ போய் விட்டார்களாம்.''

''ஆ! என்ன? அரசியைக் காணவில்லையா? எங்கே போனாள்''

''இந்த அக்கிரமங்களைக் கேள்விப்படக்கூடாது என்று எங்கேயோ போய்விட்டார்கள்''

- இருங்கோவேள் சிலையென நின்று கொண்டிருந்தான். தாமரை அவனையே பார்த்துக் கொண்டு இருந்தாள். ''பெருந்தேவி!'' என நடுங்கும் குரலில் ஒரு கூச்சல் கிளம்பிற்று அவன் வாயிலிருந்து! உடனே அந்த இடத்தை விட்டுத் தன் மாளிகை நோக்கி விரைந்தான். முத்துநகை அழுதவாறு மூலையில் நின்று கொண்டிருந்தாள். அவளிடம் ஆறுதல் எதுவும் கூற விரும்பாத தாமரை, காவலர்களை எச்சரித்துவிட்டு வெளியே சென்றாள். பழையபடி அந்த இடம் பூட்டப்பட்டது. தன் கையிலிருந்த கட்டாரியின் முனையை விரல்களால் தடவிப் பார்த்தவாறு சிந்தனையில் ஆழ்ந்தாள் முத்துநகை.

மரமாளிகையை விட்டுப் புறப்பட்ட பெருந்தேவி குதிரையை வேகமாக ஓட்டிக் கொண்டு கானகத்தின் பல பாதைகளில் ஆவேசமுடன் சென்று கொண்டிருந்தாள். கல்லும் முள்ளும் நிரம்பிய பாதை. இருபுறமும் மரங்கள் நெருங்கி வளர்ந்த பாதை. நடுவே வளைந்து கிடந்து குதிரையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டிருந்தது. அந்த அடர்த்தியான இருளின் பயங்கரமான மௌனத்தைக் கலைத்துக் கொண்டு கோட்டான்கள் ஓலமிட்டுக் கொண்டிருந்தன. கிளைகளில் அமர்ந்து குதிரையின் குளம்படிச் சத்தம் கேட்டுப் பறவைகள் சிறகையடித்துக் கொள்வதற்கும் பெருந்தேவியின் இதயம் படபடப்பதற்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை.

நெடுநாளையப் பிணியினால் பாதிக்கப்பட்டு உடல் மெலிந்து படுக்கையிலேயே கிடந்த அவளுக்கு எங்கிருந்து புதுப்பலம் வந்தது என்று அந்தக் குதிரை ஆச்சரியப்பட்டது போலும்! அதனால் இடையிடையே வேகத்தைக் குறைத்துக் கொண்டு மெதுவாக நடக்க ஆரம்பித்தது.

அரசி விடுவதாயில்லை. குதிரையை விரைவாகச் செலுத்துவதி லேயே கண்ணுங் கருத்துமாயிருந்தாள். காரிருளில் ஓடிக் கொண்டிருந்த குதிரை திடீரெனக் கால் தவறி ஒரு சிறு குழியில் விழுந்து விட்டது. நல்ல வேளையாகப் பெருந்தேவி குதிரையிலேயே உட்கார்ந்து கொண்டி ராமல் ஒரு மரக்கிளையைத் தாவி பிடித்துக் கொண்டு அதிலே தொங்கினாள்.

விழுந்த குதிரை மெதுவாக எழுந்து நின்றது. மரக்கிளையில் தொங்கிக் கொண்டிருந்த பெருந்தேவிக்குப் புதிய திகில் ஒன்று மின்ன லெனக் கிளம்பியது. காரணம் அவள் பிடித்திருந்தகிளை, மெதுவாக அசைந்ததுதான்! கவனிக்க ஆரம்பித்தாள். மரக்கிளையின் சொர சொரப்பு கைகளுக்குத் தோன்றவில்லை. வழவழப்பான உணர்ச்சிதான் தோன்றி

யது. சந்தேகமில்லை. மலைப் பாம்புதான். அதைப் புரிந்து கொண்டதும் அரசி கீழே குதித்துவிட்டாள்.

குதித்த வேகத்தில் குதிரையில் தாவி ஏறிக் கொண்டாள். தப்பித்தோம் பிழைத்தோம் என்று குதிரையை முடுக்கினாள். இரையை விழுங்கி விட்டுக் கிடந்த மலைப் பாம்பு மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. பாம்பிடமிருந்து தப்பிய பிறகு அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. தன்னையே நொந்து கொண்டாள். எதற்காகப் பாம்பிடமிருந்து ஓடி வர வேண்டும்? அதற்கே இரையாகியிருக்கலாமே என்பது தான் அந்த யோசனை.

அவள் இப்படி நினைக்கும்போதே மனதுக்குள்ளிருந்து மற்றொரு பெருந்தேவி பேச ஆரம்பித்தாள்.

''பைத்தியக்கார ராணி! நீ எதற்காகப் புறப்பட்டிருக்கிறாய்? தற்கொலை செய்து கொள்வதற்கா? இல்லையடி இல்லை! உன் இலட்சியத்தை மறந்துவிடாதே; அதை நிறைவேற்றி விட்டுப் பிறகு செத்துப்போ; ம்... ஓடு! ஓடு!''

''இலட்சியத்தை என்னால் நிறைவேற்ற முடியுமா? எனக்கு அந்த வல்லமை இருக்கிறதா? என்ன இருந்தாலும் நான் பெண்தானே?''

''பிறகேன் வீட்டை விட்டுக் கிளம்பினாய்? இந்த யோசனை முன்பே இருந்திருக்க வேண்டும் உனக்கு. நீ இனிமேல் இருந்துதான் என்ன செய்யப்போகிறாய்? நீ இப்போது உயிரோடிருப்பதாகவா எண்ணிக் கொண்டிருக்கிறாய்? பேதாய்! நீ செத்து எத்தனையோ ஆண்டுகள் ஓடி விட்டன. என்றைக்கு உன் மூச்சுப்பைகளில் நோய்க்கிருமிகள் குடியேறி னவோ அன்றைக்கே உன் உயிர் அந்த இடத்தைவிட்டு வெளியேறி விட்டது. எந்தவிதத்திலும் செத்து விடக்கூடிய நிலையில் தள்ளாடிக் கொண்டிருக்கும் நீ, இலட்சியத்தை நிறைவேற்றும் முயற்சியில் ஏன் சாகக் கூடாது? தளராதே! தயங்காதே!! போ; போ!''

பெருந்தேவியின் உள்ளத்தில் பெரும் போராட்டம் எழுந்தது என்றாலும், முன்னோக்கிச் சென்று கொண்டிருந்த அவள் பயணத்தில் எந்தவிதத் தயக்கமும் ஏற்படவில்லை.

தாமரையும் முத்துநகையும் முதன் முதலில் சந்தித்துப் பேசிய அருவிக்கரையின் பக்கம் வந்தாள். அந்த இடத்தைத் தாமரை பார்த்திருந் தால் எத்தனை எண்ணங்கள் படையெடுத்து அவளை அழவைக்குமோ யார் கண்டது?

அருவிக் கரையைத் தாண்டி அரசியின் குதிரை மரமடர்ந்த மற்றொரு பகுதிக்குள் நுழைந்தது. அந்தப் பகுதியிலேதான் இருங்கோவேளும்

முத்துநகையும் ஒரு நாள் சந்தித்துத் தங்கள் அன்பைப் பலப்படுத்திக் கொண்டார்கள். அந்த வழியே கணவனைத் தெய்வமென நம்பியிருக் கும் அரசி பெருந்தேவி சென்றாள்.

போகப்போக அரசிக்குக் களைப்பு அதிகமாயிற்று. மூச்சு வாங்க ஆரம்பித்தது; எங்கேயாவது சற்று இறங்கி இளைப்பாறிக் கொண்டால் தான் மேலே தொடர்ந்து செல்ல முடியும் என உணர்ந்து கொண்டாள்.

அவளுடைய ஆருயிர் கணவனும் முத்துநகையும் தங்கள் காதலை மலரவைத்த பாழ்மண்டபத்தைக் கண்டாள். அந்த மண்டபத்துக்கு மட்டும் பேசும் சக்தியிருந்தால், இருங்கோவேள்-முத்துநகை இருவரின் இன்பத் திருவிளையாடல்களைப் பற்றி பெருந்தேவியிடம் கோள் மூட்டியிருக்கும்.

அவள் குதிரையிலிருந்து மெல்ல இறங்கி மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டாள். இருமல் தொந்தரவு துவங்கி விட்டது. அவளுக்கு உதவிசெய்ய, அருகில் யாருமே இல்லை. இருமி இருமித் தொண்டை யெல்லாம் வலியெடுத்து விட்டது. 'ஐயோ! அப்பா! அம்மா!' என்று வாய்விட்டு அலறினாள். விலாப்புறங்களில் சகிக்க முடியாத வலி; முதுகெலும்பெல்லாம் முறித்துப் போட்டது போன்ற வேதனை; கண்களிலிருந்து மழையெனக் கொட்டியது வேதனையின் சின்னம்! யாருடைய துணையுமின்றி அவளாகவே இருமிக் களைத்துப் போய்ச் சுருண்டு படுத்துக் கொண்டாள். தலைவரின் துணைவி படும் வேதனை யைப் பார்த்துக் கொண்டே அந்தக் குதிரை அசைவற்று நின்றது.

அப்போது வெகு தூரத்தில் குதிரையொன்று வரும் குளம்படி ஓசை கேட்டது. அயர்வுடன் படுத்திருந்த பெருந்தேவி மெதுவாகக் கண்விழித் துக் குளம்படி ஓசை வரும் திக்கையே கவனித்துக் கொண்டிருந்தாள். ஆம்! குதிரைதான் - வர வர சத்தம் அண்மையில் கேட்கிறது. தன்னைத் தான் தேடிக் கொண்டு வருகிறார்கள் என்று பயந்து போனாள். எழுந்து நடக்க முடியாத அளவுக்கு உடல் நலிவு ஏற்பட்டிருந்தது. அதைப் பொருட்படுத்தாமல் குதிரையில் தாவி ஏறிக் கொண்டாள். தன்னைத் தொடர்ந்து வரும் குதிரையிடம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது என்று திட்டமாகத் தீர்மானித்துக் கொண்டாள். பலங்கொண்ட மட்டும் குதிரை யைத் தட்டி ஓடச் செய்தாள்; குதிரை அரசியின் குறிப்பை அறிந்து கொண்டு இருளைக் கிழித்தவாறு போய்க் கொண்டிருந்தது.

அரசியின் குதிரை சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் மற்றொரு குதிரை மண்டபத்துப் பக்கம் வந்து நின்றது. அதன் மீது இருங்கோவேள் தான் அமர்ந்திருந்தான்.அவன் கையில் தீப்பந்தமொன்று இருந்தது. அந்த வெளிச்சத்தின் உதவியால், மண்டபத்திற்கு அருகே குதிரையொன்று நின்றிருந்த அடையாளத்தையும், அது புறப்பட்டுப் போன வழியையும்

புரிந்து கொண்டான். அதைத் தவிர வேறு அடையாளம் ஒன்றும் கிடைக்கவில்லை. கீழேயிறங்கி மண்டபம் முழுவதும் தேடிப்பார்த்தான். முத்துநகையைப் பயமுறுத்துவதற்காக எழுதப்பட்ட எழுத்துக்கள் சுவரில் காட்சியளிப்பதை மட்டுமே கண்டான். ஒரு கணம் முத்துநகையின் நினைவு தலை நீட்டியது. ஆனால் அரசியின் பிரிவு அவனை நிலை தடுமாறச் செய்திருந்த காரணத்தால் வேறு எதையும் அவனால் நினைக்க முடியவில்லை.

மீண்டும் புரவியிலேறிக் கொண்டு தீப்பந்த வெளிச்சத்தின் உதவியால் முன்னே சென்ற குதிரையின் குளம்படிச் சுவடுகளைக் கவனித்தவாறு தொடர்ந்து சென்றான். அடர்ந்த காட்டுப் பகுதிகளைத் தாண்டிச் சிறிது ஒழுங்கான பாதைக்கு குதிரை வந்து சேர்ந்தது. தனக்கு முன்னே குதிரையொன்று போகும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து பிடித்து விடப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டான் இருங்கோவேள். இருளும் சிறிது சிறிதாக விலக ஆரம்பித்து விடியத் தொடங்கியது. வைகறைப் பொழுதில் அரசியின் குதிரையைப் பிடித்துவிடக்கூடிய அளவு மிக அருகினில் இருங்கோவேளின் குதிரை வந்து விட்டது.

முன்னே போவது அரசிதான் என்று அவனுக்கும் தெரிந்துவிட்டது. தொடர்ந்து வருவது மன்னன்தான் என்பதும் அவளுக்கும் விளங்கி விட்டது. உயிரைக் கொடுத்தாகிலும் அவனிடமிருந்து தப்பிவிட வேண்டுமென்று அவள் முடிவுகட்டிக் கொண்டாள். அவனிடம் சிக்கிக் கொண்டால் தன் இலட்சியம் நிறைவேறாது என்பது அவளுக்கிருந்த பயம்.

அந்தப் பயத்தில் அவள் ஓடும்போது பின்னாலிருந்து இருங்கோவேள், ''பெருந்தேவி! நில்! நில்!'' என்று கூவிக் கொண்டே வந்தான்.

அரசியும் பதிலுக்குக் கத்தினாள். ''என்னைத் தடுக்காதீர்கள்! என் இலட்சியம் நிறைவேறும்போது தடங்கல் செய்யாதீர்கள்.''

''அப்படிப்பட்ட இலட்சியம்தான் என்ன?''

ஒரு பெண்ணுக்குத் தன் கணவனின் மகிழ்ச்சிதான் முதல் இலட்சியம். அந்த இலட்சியத்தை வெற்றிகரமாக ஆக்கவே அவள் புறப்பட்டிருக்கிறாள். அவள் கணவனுக்கு மகிழ்ச்சி ஏற்படக்கூடிய ஒரே ஒரு நிகழ்ச்சி, கரிகால்மன்னர் பழிவாங்கப்படுவதுதான்!

அந்தப் பழி தீர்க்கும் படலத்தை ஒழுங்காக நிறைவேற்றவே அவள் பெண் புலியென எழுந்து வருகின்றாள். அவள் நோக்கம் இன்னதென்று புரியாது இருங்கோவேளுக்கு! அப்படியே புரிந்தாலும் அந்தக் காரியத்துக்கு அவளை நிச்சயம் அனுப்பமாட்டான். எப்படியோ சிறு

அலட்சியத்தால் அவள் அனைவரையும் ஏமாற்றிவிட்டு இவ்வளவு தூரம் வந்துவிட்டாள்.

அதோ... பூம்புகார் நகரத்து நுழைவு வாயிலும் வந்து விட்டது. அதில் நுழைந்து விடுவதற்குள் அவளைத் தடுத்தாக வேண்டும். அதற்குமேல் அவளைப் பின்தொடர்ந்து சென்றால் தன்னைச் சோழநாட்டுக் காவலர்கள் சிறைப்படுத்தி விடுவார்கள்; இருங்கோவேள் மன்னன் உயிரோடு அகப்பட்டு விட்டால் அவர்களுக்கு ஒரே கொண்டாட்டம் தான்! பூம்புகார் முழுவதும் விழாக் கொண்டாடி மகிழ்வார்கள். இருங்கோவேள் அகப்பட்ட நாளை இந்திர விழாவாக ஆக்கிக் கொள்வார்கள். இறந்து போனாலும் போகலாமே தவிர, சோழநாட்டு வீரர்களிடம் உயிரோடு அகப்படக் கூடாது.

இப்படியெல்லாம் எண்ணியவாறு அவன் அரசியின் குதிரைக்கு மிக மிக அருகாமையில் வந்து அந்தக் குதிரையைத் தடுத்து நிறுத்த முனையும் சமயம் அவளுடைய குதிரை நகரின் நுழைவு வாயிலுக்குள் புகுந்துவிட்டது. அதற்குமேல் செல்ல அவன் விரும்பவில்லை. அப்படியே சிலைபோல் நின்று விட்டான். அதற்குள் பொழுதும் நன்றாக விடிய ஆரம்பித்து விட்டது. இனி அங்கே நிற்பதும் ஆபத்து எனக்கருதி, வந்த வழியே அவசரமாகத் திரும்பினான்.

பூம்புகாருக்குள் புகுந்த அரசி அந்த அழகுத்திருநகரின் எழில் நிறை வீதிகளில் குதிரையில் போய்க் கொண்டிருந்தாள்.

சோழ நாட்டு மாதரசிகள் தங்கள் வீட்டு வாயில்களைச் சுத்தம் செய்து மூவேந்தரின் சின்னங்களான புலி, வில், கயல் ஆகியவற்றைக் கோலங்களாக்கிக் கொண்டிருந்தனர். உழவர் பெருமக்கள் தங்கள் தங்கள் செழித்துக் கொழுத்த எருதுகளை ஓட்டிக் கொண்டு கழனிப் பக்கம் போய்க் கொண்டிருந்தார்கள். துறைமுகத்தை நோக்கி மயில் தோகைகளைக் கட்டுக்கட்டாகக் குவித்த வண்டிகள் சென்ற காட்சி பெருந்தேவியினுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. மிளகு மூட்டைகளை உடல் வலுத்த பாட்டாளிகள் துறைமுகத்தின் பக்கம் தூக்கிச் செல்வதையும், அவர்களின் முகத்திலே காணப்பட்ட பூரிப்பையும் உற்சாகத்தையும் கண்டு பெருந்தேவி வியப்படைந்தாள்.

வீதிகளைக் கடந்து துறைமுகத்திற்கே குதிரை வந்து விட்டது. அடடா! அந்தத் துறைமுகத்தில் அவள் கண்டு சுவைத்த காட்சிகள் தமிழகத்தின் பழம் பெருமையைப் பாடக்கூடிய காட்சிகளாகும். வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான வாட்ட சாட்டமான குதிரைகள்! இங்கிருந்து ஏற்றுமதியாகும் மிளகு மூட்டைகள்! மயில் தோகைகள்! பாம்பின் தோல்! வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்! குடமலைப் பிறந்த ஆரமும்

அகிலும்! தென்கடல் முத்து! இன்னோரன்ன பொருள்கள் குவிந்து கிடந்த காட்சிகண்டு அவள் நோயின் வேதனைகூடச் சற்று விலகியிருந்தது என்று கூறலாம். ரோமானியரும், கிரேக்கரும் துறைமுகத்தில் சுறுசுறுப்பாகக் காணப்பட்டார்கள். அவர்களுடன் தமிழர்கள் உற்சாகத்துடன் பேசிக் கொண்டிருந்தார்கள். யவனர்களின் தோள்மீது கை போட்டவாறு தமிழர்கள் அங்குமிங்கும் உலவிக்கொண்டிருந்தனர்.

எல்லாவற்றையும் பார்த்தவாறு பெருந்தேவி குதிரையை மெதுவாக வீதிகளில் ஓட்டிக்கொண்டிருந்தாள். உலகத் தொடர்பு கொண்ட இவ்வளவு பெரிய நாட்டைத் தோற்கடிப்பது என்பது முடிகின்ற காரியமா?- எனத் தனக்குள்ளே கேட்டுக்கொண்டாள்.

இருங்கோவேள் அவள் எதிரே நிற்பது போல ஒரு நினைவு. அவன் அவளுக்கு இலட்சியத்தை ஞாபகப்படுத்துவதுபோல் ஓர் உணர்வு.

இறுதியாக, அவள் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு அரண்மனையை நோக்கிக் குதிரையைத் தட்டிவிட்டாள். எப்படியாவது அரண்மனைக்குள் நுழைய வேண்டும். கரிகாலனைக் கொல்ல வேண்டும். தன் கணவனின் இதயத்தில் மகிழ்ச்சி ததும்பச் செய்ய வேண்டும். அவன் முகம் மலர வேண்டும். அதைப் பார்த்துவிட்டுப் பிறகு சாக வேண்டும்.

அய்யோ பாவம்! பூம்புகாரில் உற்சாகத்துடன் நடமாடும் இந்த மக்களெல்லாம் இன்று மாலைக்குள் ஒரு பயங்கரமான செய்தி கேட்டு மயங்கி விழப் போகிறார்கள்.

அந்தச் செய்திதான், 'கரிகாலன் மடிந்தான்!' என்ற செய்தி.

அந்தக் காரியத்தைச் செய்யப் போகிறவள் இந்தப் பெருந்தேவிதான்!

இவ்வாறு ஆவேசத்துடன் கூவினாள் பெருந்தேவி, நல்ல வேளையாக யாரும் அவளைக் கவனிக்கவில்லை. அவளும் மக்கள் கூட்டத்தைவிட்டு அரண்மனைப் பக்கம் வந்துவிட்டாள்.

அரண்மனைக் கதவுகள் மூடப்பட்டிருந்தன. குதிரையுடன் வெளியிலேயே நின்று கொண்டு உள்ளே செல்வதற்கு வழி என்ன என்று யோசித்தாள்.

பெருந்தேவி, அரண்மனைக்குள் எப்படி நுழைவது என்று யோசித்துக் கொண்டிருந்த நேரத்தில் அரண்மனையிலுள்ளோர் பரபரப்புடன் எழுந்து ஒளி பொருந்திய முகங்களுடன் அங்குமிங்கும் ஓடியாடி ஏதோ ஒரு குறிப்பிட்ட அலுவலில் ஈடுபட்டிருந்தனர். எங்கு பார்த்தாலும் வண்ணக் கோலங்கள் வரையப்பட்டன. மகர தோரணங்கள் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டன. மண்டபங்களை விழாக் கூடங் களாக்கிடும் முயற்சியில் வீரர்கள் தீவிரங்காட்டினர். மன்னர் பெருமானின் கொலு மண்டபம் என்றுமில்லாத தனி அழகுடன் விளங் கிட வேண்டுமென்று அமைச்சர் கட்டளையிடவே அந்த ஆணையைச் சிரமேற்கொண்டு வீரர்கள் பணி புரிந்தனர். புலிக்கொடித் தோரணங்கள் அசைந்தாடிக்கொண்டிருந்த காட்சி கண்டு அரண்மனைக் குள்ளே வாழ்பவர்கள் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர்.

''தமிழ் காக்கும் தங்கமே! வருக!'' எனும் வரவேற்பு வளைவுகள் காலைக் கதிரவனின் ஒளிபட்டுத் தகதகவென மின்னிக் கொண்டிருந்தன. கரிகால் மன்னன் அதிகாலையிலேயே எழுந்து கொலு மண்டபத்திற்குப் புறப்படுவதற்குத் தயாராகிவிட்டான்.

பூம்புகார்த் தலைநகரின் கொலுமண்டபத்தில் அமர்வதென்றால் கரிகாலனுக்குத் தனி உற்சாகம். பூம்புகாரில் இருந்தவாறே உறையூருக் கும் அரசனென விளங்கும் புகழ் படைத்தவனன்றோ சோழப் பெருமன்ன னாம் - திருமாவளவன் கரிகாலன்! கொலுமண்டபத்தில் பூம்புகார்த் தலைநகர மாந்தரும்- உறையூர் நகர மாந்தரும் வந்து நின்று தங்கள் விருப்பங்களை வெளியிடும்போது கரிகாலனுக்கு நெஞ்சு புடைக்கும். தான் விளைத்த வீரத்தை எண்ணிப் பூரிப்படைவான்! தன்னால் உருவாகிவிட்ட சோழப் பேரரசு நீண்ட நெடுங்காலம் வலுவிழக்காமல் வாழ வேண்டுமென்று அவன் விரும்பியிருந்தான். அவனைப் புகழாத புலவர்கள் அந்தக் காலத்தில் இல்லை. பத்துப்பாட்டு என அழைக்கப்படும் பழந்தமிழ் இலக்கியத்தில் பட்டினப் பாலையும், பொருநராற்றுப்படையும் அவனது சிறப்பை வானளாவப் புகழ்ந்து கூறுகின்றன.

**''காடுகொன்று நாடாக்கிக்**
**குளந்தொட்டு வளம்பெருக்கிப்**

பிறங்கு நிலைமாடத்து உறந்தை போக்கிக்
கோயிலொடு குடி நிறீஇ.''

- என்று, அவன் செய்த பெருஞ் செயல்களை வர்ணிக்கிறது பட்டினப்பாலை. உலகமெல்லாம் மழை மறுத்துப் பஞ்சம் வந்த போதும், சோழமன்னன் தன் செங்கோல் அறத்தாலே பொன்னிமா நதியின் துணைகொண்டு பொன் கொழிக்கும் நாடாகவே சோழநாட்டை ஆக்கிடுவான்; கரும்பாலைகளிலே எழுகின்ற புகை, நீர் நிறைந்த இடத்தில் செழித்துள்ள நெய்தற் பூவையும் வாடச் செய்யும். தென்னை, வாழை, கமுகு, மஞ்சள், மா, சேம்பு, இஞ்சி முதலியன பயன் கெழுமி நிறைந்த குலைகளுடனும் கிழங்குகளுடனும் நிற்பதைச் சோழ நாடெங்கும் காணலாம். உப்பங்கழிகளிலே - நிரல்படக் குதிரைகளைப் பிணைத்தாற் போன்று தறிகளிலே பிணைக்கப்பட்ட படகுகளையும், புலி இலச்சினை செதுக்கப்பட்ட பெரிய கதவுகளை உடைய இல்லத்தில் உள்ள அடுக்களையில் சோறு வடிப்பதால் ஒழுகிய கொழுங்கஞ்சி தெருவிலேஆறுபோல ஓடுகின்ற நிலைமையையும் வளத்தையும் சித்தரித்துச் செந்தமிழ் நாட்டின் பழைய நிலைமையைக் கூறுவதே பட்டினப் பாலை.

இதன் பாட்டுடைத் தலைவன் கரிகால் திருமாவளவனே தான். சோழ நாட்டுப் பெருமைகளையும் சோழ மன்னனின் ஆற்றலையும் புகழ்ந்திடும் மற்றொரு இலக்கியந்தான் பொருநராற்றுப் படையாகும்.

பட்டினப்பாலையின் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார். இந்தத் தமிழ்ப் பாவலர் 'பட்டினப் பாலை' 'பெரும் பாணாற்றுப் படை' என்னும் இருபெரும் கருவூலங்களைத் தமிழகத்துக்குத் தந்தவர்; இவருடைய 'கண்ணனார்' என்னும் பெயருக்கு முன் வந்துள்ள கடியலூர் என்பது அவருடைய ஊரைக் குறிப்பதாகும். உருத்திரன் என்பது அவரது தந்தையின் பெயர். பட்டினப்பாலை மூலம் கரிகாலனின் அறவழி ஆட்சியை விளக்கிக் காட்டி, கடியலூர் உருத்திரங்கண்ணனார் மன்னனின் அன்புக்குப் பெரிதும் பாத்திரமாகிவிட்டார். அந்த அன்பின் அடையாளமாகக் கரிகாலன், கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் வழங்கினான் என்று வரலாறு முழங்குகிறது. பொருநராற்றுப் படை இயற்றிய முடத்தாமக்கண்ணியார் கரிகாலனின் நாட்டு வளத்தையும், ஆற்றல் அறிவு ஆகியவற்றையும் இலக்கியத்தில் ஏற்றிய பெருமைக்குரியவராவார்.

இரு புலவரில் முதலில் கூறப்பட்ட பட்டினப்பாலை ஆசிரியருக்குப் பரிசு அளிக்கும் விழாதான் அன்று பூம்புகார் அரண்மனையில் நடக்க இருந்தது. அதனால்தான் அரண்மனை ஆட்கள் பரபரப்புடன் வேலை களைக் கவனித்தனர். மன்னனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்து

இயற்றப்பட்ட பட்டினப்பாலையைப் பூம்புகார்க் கொலு மண்டபத்தில் அரங்கேற்றுவதற்காகவே உருத்திரங்கண்ணனார் வருகிறார். அவர் வருகையை முன்னிட்டே அரண்மனை விழாக்கோலம் பூணுகிறது.

இன்னும் புலவர் வந்து சேரவில்லை. அவரை மிக்க மரியாதையுடன் கோலாகலமாக வரவேற்க வேண்டுமென்று திட்டம் தீட்டப்பட்டிருந்தது. புலவரை வரவேற்பதற்காக அரண்மனைக் கதவுகள் திறந்து வைக்கப்பட்டன. வாயிற்புறத்தில் காத்திருந்த பெருந்தேவியின் காதுகளி லும் கடியலூர்ப் புலவர் அரண்மனைக்கு வரப்போவது பற்றிய செய்தி எட்டியிருந்தது. வாயிற்புறத்துப் பெருங்கதவுகள் திறக்கப்பட்ட தும் பெருந்தேவி உள்ளே நுழைய முயலாமல் வெளியிலேயே அதிகத் தொலைவில் போய்த் தன் குதிரையுடன் மறைந்திருந்து கவனித்துக் கொண்டேயிருந்தாள்.

தொலைவில் ''சோழப் பேரரசு வாழ்க! கடியலூர்ப் புலவர் வாழ்க!'' எனும் முழக்கம் கிளம்பியதை அவள் கேட்டாள். அவள் மறைந்து நின்ற இடத்துக்கு அருகாமையில் அந்த ஒலி வந்து விட்டது. அழகான முத்துச் சிவிகையொன்றில் புலவர் அமர்ந்திருந்தார். புலவரின் முகத்தில் வெற்றிரேகைகள் மின்னிக் கொண்டிருந்தன. அவரது கையில் சுவடி ஒன்றிருந்தது. அந்தச் சுவடிதான் எதிர்காலத்தில் பத்துப்பாட்டு வரிசை யில் பழம் பெரும் இலக்கியமாக அமையப் போகிறது என்று அவர் எண்ணினாரோ இல்லையோ - ஆனால் அவரது கண்கள் சுவடியிலேயே ஆழ்ந்திருப்பதைக் காணும் எவரும் அந்தப் படைப்பு நிச்சயம் அழியாத உயிர்பெறும் என்றுதான் கூறுவர். தான் எழுதியவைகளைத் திரும்பத் திரும்பப் படித்துத் திருத்தங்கள் செய்து கொண்டே வந்தார், சிவிகையில் இருந்தவாறே! அவர் எழுதியது அவருக்கே இனிக்கிறது போலும். அதனால்தான் அவரது முகத்தில் அத்தனை கம்பீரம் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

**''திருமாவளவன் தெவ்வர்க் கோச்சிய**
**வேலினும் வெய்ய கானமவன்**
**கோலினுந் தண்ணிய தடமென் தோளே!''**

- காதலியின் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டு காதலன் காட்டு வழியே செல்கிறானாம். அப்போது அவன் காட்டுக்கு உவமை தேடுகிறான். கரிகாலன் தனது பகைவர்களின்மீது வீசிய வேலைக் காட்டிலும், கடியதாயிருந்ததாம் அந்தக் காடு. அவன் பற்றியுள்ள தோள் எப்படியிருந்ததாம்? கரிகாலனின் செங்கோலினும் குளிர்ந்ததாகுமாம்.

தான் எழுதியவற்றைத் தானே சுவைத்தார் புலவர். தன் எழுத்தை எல்லாரையும் விட அதிகமாகச் சுவைத்துப் பாராட்டக் கூடியவர் ஒருவர் பூம்புகாரில் இருக்கிறார். அவர்தான் முதலில் தனது பட்டினப்பாலை

யைக் காண வேண்டும் என்றெல்லாம் கடியலூரார் எண்ணமிட்டவாறு வந்து கொண்டிருந்தார். தனக்குப் பாராட்டுரை வழங்கத் தகுதியுடைய வர் யார் என்று அவர் முடிவு கட்டுகிறார்? புலவர் காரிக்கண்ணனார்தான் அந்தத் தகுதி பெற்றவர் என்பது உருத்திரங்கண்ணனாரின் முடிவு. காரிக்கண்ணனார் கொலு மண்டபத்தில் தனக்காகக் காத்துக் கொண்டிருப் பார். அவரைச் சந்தித்துப் பல திங்கள் ஆகின்றன-இன்று மிகவும் மகிழ்ச்சிகரமான நாள்தான் - என்றெல்லாம் நினைத்துப் புளகாங்கித முற்றவாறு கடியலூரார் வந்து கொண்டிருந்தார்.

சிவிகையைச் சுற்றி முன்னும் பின்னுமாகக் குதிரைகளில் நூற்றுக்கு மேற்பட்ட வீரர்கள் புலிக்கொடிகளுடன் வந்து கொண்டிருந்தார்கள். அந்தத் தமிழுணர்ச்சி மிக்க பவனியைப் பெருந்தேவி கண்டாள். இதுதான் நல்ல சமயமாகும். பவனி அருகே வரட்டுமென்று காத்துக் கொண்டிருந்தாள். முன்னால் வந்த ஐம்பது குதிரை வீரர்களும் பெருந்தேவி மறைந்து நிற்பதைப் பார்க்காமலே வேகமாகப் போய் விட்டார்கள்.

அடுத்து, புலவர் அமர்ந்திருந்த சிவிகை, அதுவும் அவளை விட்டு நகர்ந்த பிறகு பின்னால் உள்ள ஐம்பதுக்கும் மேற்பட்டவர்கள் பெருந்தேவி நிற்கும் இடத்தைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். தருணம் பார்த்திருந்த பெருந்தேவி குதிரை வீரர்களின் கடைசி வரிசைக்கும் பின் வரிசையில் தனியாகச் சென்று அவர்களோடு கலந்து கொண்டாள்.

புலவரைச் சுமந்து வந்த சிவிகை அரண்மனைக்குள்ளே நுழைந்தது. அத்துடன் குதிரை வீரர்களும் தொடர்ந்தார்கள். அவர்களுடன் கொலை வெறியோடு வந்திருக்கும் பெருந்தேவியும் யாருக்கும் தெரியாமல் கூட்டத்தோடு கூட்டமாக அரண்மனைக்குள் புகுந்து விட்டாள்.

அரண்மனை வாயிலைக் கடக்கும் வரையில்தான் பெருந்தேவிக்குக் கவலையாக இருந்தது. உள்ளே நுழைந்த பிறகு அவளுக்கு எல்லாமே சுலபமாகத் தெரிந்தது. புலவர் கடியலூராரை வரவேற்பதற்கான விழாவில் ஆடவரும் பெண்டிரும் அளவில்லாத ஆர்வங்காட்டி ஆடிப்பாடி மகிழ்ந்திருந்தனர். அரண்மனைக்குள்ளே தாராளமாக நடமாட முடியாதபடி ஒரே நெருக்கடி, அதிவிரைவில் அப்படிக் கூட்டம் சேர்ந்து விட்டது.

பெருந்தேவி குதிரை வீரர்களை விட்டுப் பிரிந்து, மெதுவாகக் குதிரையை விட்டு இறங்கிச் சுற்றும் முற்றும் பார்த்துக்கொண்டாள். யாரும் தன்னைக் கவனிக்கவில்லையென்று உணர்ந்து குதிரையை அங்குள்ள ஒரு தூணில் கட்டிவிட்டுப் பெண்களின் கூட்டத்தில் போய்ச்

சேர்ந்து கொண்டாள். புலவரை வரவேற்பதில் அக்கறையும் அவசரமுங் கொண்டிருந்த பெண்களுக்குப் பெருந்தேவியைக் கவனிப்பதற்கு ஏது நேரம்?

புலவரின் சிவிகை கொலு மண்டபத்துக்கு அருகே இறக்கப்பட்டது. புலவர் இறங்கிக் கொலு மண்டபம் நோக்கிப் புறப்பட்டார். ஏற்கனவே புலவர்கள் பலர் புடைசூழ நின்று கொண்டிருந்த கரிகால் மன்னன், உருத்திரங்கண்ணனாரை எதிர் கொண்டழைத்து மார்புறத் தழுவிக் கொலுமண்டபத்துக்குள்ளே அழைத்துச் சென்றான். உள்ளே ஆண்களும் பெண்களும் தனித்தனியே அமர்வதற்கேற்ற வகையில் ஆசனங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

புலவர் கூட்டத்தில் விழிகளையோட்டி ஏமாந்த உருத்திரங்கண்ண னார், அரசனைப் பார்த்து ஆவல் ததும்ப, ''காரிக்கண்ணனார் எங்கே?'' என்று கேட்டார்.அதற்குக் கரிகாலனால் பதில் கூற முடியவில்லை. அவன் கண்கள் கலங்கி விட்டன. சமாளித்துக் கொண்டான். ''அவர் மதுரைக்குப் போயிருக்கிறார்?'' என்று பொய் கூறி மழுப்பினான்.

கடியலூராருக்கும் கரிகாலனுக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் நடைபெறும்போதே பெருந்தேவி பெண்கள் அமரும் பகுதியில் வந்து உட்கார்ந்து கொண்டாள். ஏதோ ஒரு மகத்தான இலட்சியத்தைச் சாதிக்கப்போகிறோம் என்ற கடமை உணர்ச்சியும் வெறித்தனமும் அவளது நோயைக் கூடச் 'சற்றே விலகியிரு!' என்று கூறிவிட்டன. இடையிலே மறைத்து வைத்துள்ள கட்டாரியின் பிடியை அழுத்திப் பிடித்தவாறே அவள் கரிகாலனின் முகத்தை நோக்கினாள். தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளச் சமயம் பார்த்திருந்த அவளுக்குக் கரிகால் சோழனின் முகம் சற்றுக் கோழைத்தனத்தை அளித்தது! அவன் கண்களில் கனிவு இருந்தது; கனல் இல்லை. பேச்சில் பண்பு தெரிந்தது; பயங்கரம் இல்லை. கையிலே வாளைப் பிடித்திருக்கிறான். அந்த வாளோ தீயோரைத்தான் தாக்கும் என்று பக்கத்திலுள்ள பெண்கள் மன்னனைப் பற்றி மதிப்புரை வழங்கிக் கொண்டிருந்தார்கள்.

வேளிர்குல அரசி, எந்தச் சபலத்துக்கும் இடம்கொடுக்கக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டு கரிகாலனை வீழ்த்தச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கடியலூர்ப் புலவர் அமர்வதற்கென அமைக்கப்பட்டிருந்த அழகான இருக்கையில் அவரை அமரச் செய்து விட்டு, மன்னன் தன் இருக்கைக்குச் சென்றான். தேன் தமிழ் பெருக்கெடுத்தோடப் போவதை எண்ணி மகிழ்ந்தவாறு அவையோர் வீற்றிருந்தனர்.

கரிகாலனின் விருப்பப்படி பூம்புகார் மாளிகையில் தங்கியிருந்த பாண்டிய நாட்டுத் தளபதி நெடுமாறன் கொலு மண்டபத்தில் நுழைந்து மன்னனுக்கும் புலவருக்கும் வணக்கம் தெரிவித்து விட்டு, அமர்ந்தான். கரிகாலன் உருத்திரங்கண்ணனாருக்கு நெடுமாறனை அறிமுகம் செய்து வைத்தான்.

உடனே புலவர், பாண்டியன் பெருவழுதியின் நலன்கள் பற்றி அக்கறையுடன் நெடுமாறனிடம் விசாரித்தறிந்து மகிழ்ந்தார். அதன் பின்னர் கரிகாலன் அவையிற் குழுமியிருந்தவர்களை நோக்கிப் பின்வருமாறு உரையாற்றினான்.

''அன்புக் குடிமக்களே ! அவைப் புலவர்களே! நாடு காக்கும் நல்லவர்களே! இன்று நமக்கெல்லாம் ஒரு திருநாள். நமது சோழ மண்டலத்து வரலாற்றில் ஒரு பொன்னேடு சேர்க்கப்படுகிறது இன்று. தமிழ்த் தாயின் செல்வங்கள் நாம். தமிழால் வளர்க்கப்படுகிறவர்கள் நாம். நமது அருமைத் தாயை அன்புடன் பேணி வளத்துடன் வாழ வைக்க வேண்டிய கடமைக்குரிய வர் நாம் என்பதை உணர்ந்திருக்கிறோம். தாய்மொழிப் பற்றில்லாதவன் என்னதான் உலகத்தில் மேன்மையுடனும் புகழுடனும் வாழ்கிறான் என்று கூறினாலும் அந்தப் புகழும் மேன்மையும் குருடன் கையில் இருக்கும் விளக்கைப் போன்றது தான் என்பதை மறந்துவிடக் கூடாது; நாம், நமது மொழியை - நாட்டை - கலையை - நமது மக்களை நேசிக்கிறோம். நமது உரிமை உணர்ச்சிகளை அழிக்க எத்துனை வல்லமை வாய்ந்த எதிரிகளாலும் முடியாது. நல்லதிடசித்தத்தையும் உறுதிப் பாட்டையும் நமக்கு அளித்தவள் நமது தமிழன்னைதான்! எவ்வளவு இடர்ப்பாடுகள், இடுக்கண்கள் வந்துற்றாலும் தமிழ்த்தாயின் குளிர்ந்த முகத்தைக் கண்டு அவள் அரவணைப்பின் சுகம் பெற்று எல்லா வேதனைகளையும் மறந்து விடுகிறோம். இப்போது நான் அமைதியான உள்ளத்தோடு இல்லை! என் நெஞ்சில் அடித்துக் கொண்டிருக்கிற புயலின் வேகத்தை யாராலும் உணர்ந்து கொள்ள இயலாது. ஆனால் என் அமைதியற்ற இதயத்துக்கு அமைதி வழங்கும் தாய், இதோ வந்திருக்கிறாள்! ஆமாம்! உருத்திரங்கண்ணனார் உருவத்திலே என் தமிழ் அன்னை வந்திருக் கிறாள். அவள் என் கவலையைப் போக்குவாளாக! என் துயரங்களுக்கு ஆறுதல் அளிப்பாளாக! சோழ மண்ணின் பெருமைகளைப் பற்றி வீறு கொண்ட தமிழில் பாப்புனையக் காத்திருக்கிறார் நமது பைந்தமிழ்க் காவலராம் கடியலூர்ப் புலவர் பெருந்தகை உருத்திரங்கண்ணனார். அந்த நல்லார் இப்போது தமிழன்னைக்கு முத்தாரம் அணிவிப்பார். அதனைக் கண்டு, கேட்டு நாமெல்லாம் புதிய வலிவும் பொலிவும் பெறுவோமாக!''

-எனக் கூறி மன்னன் நிறுத்தியதும் கொலுமண்டபம் அதிரும் வகையில் ''கரிகால் பெருவளத்தார் வாழ்க!'', ''கடியலூரார் வாழ்க!''

என்ற முழக்கங்கள் எழுந்தன. உருத்திரங்கண்ணனார், கையிலுள்ள சுவடியைப் பிரித்துக் கவிதை மழை பொழியத் தொடங்கினார்.

''வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவிற்
புள்தேம்பப் புயல்மாறி
வான்பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத்தலைஇய கடற்காவிரி
புனல்பரந்து பொன் கொழிக்கும்''

- என ஆரம்பித்துத் தமிழ் முழக்கம் செய்தார்.

வடதிசைக்கண் நில்லாமல் வெள்ளிமீன் - திசைமாறி தென் திசைக்குப் போயினும், வானம்பாடி மழைத்துளிதூறாது வருந்துகிற அளவுக்கு வானம் பொய்த்து விட்டாலும், காவிரியாறு, தான் பொய்க்காமல் சோழ நாட்டுக் கரையில் பொன்துகள்களை ஒதுக்குகிற அளவுக்குப் பெருக்கெடுத்து ஓடுகிறதாம்.

இந்தப் பொருள் செறிந்த கவிதை வரிகளைக் கேட்டு அவைக்களம் அசையாத சிலையின் நிலைபெற்றது. முந்நூறு முத்தமிழ் வரிகளைப்பாடி முடித்தார் உருத்திரங்கண்ணனார்.

அத்தனையும் பலாச்சுளை-நிலா ஒளி - பனிமலர்க் குவியல்! மொத்தத்தில் தேனருவி.

கரிகாலன் தன்னை மறந்து அமர்ந்திருந்தான். தமிழ் மாதாவின் அன்புக் கரங்களில் முகத்தைப் பதித்துக் கொண்டிருந்த உணர்வு அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

சோணாட்டில் சோறுவடித்த கஞ்சி, தெருவில் ஆறாக ஓடுகிறது. அங்கே காளைகள் ஒன்றோடொன்று போரிட்டு அந்த இடம் சேறாகிறது. அந்தச் சேற்றிலே தேர்கள் ஓடி ஓடிச் சேறு, தூசுகளாய் மாறி, அந்த அழுக்குத் தூசுகள் வெள்ளிய அரண்மனைகளில் பரவி, அக்கோட்டைகள் புழுதியைப் பூசிக் கொண்ட யானைகள் போலக் காட்சி தருகின்றன.

- இப்படிச் சோழ நாட்டுச் சிறப்பை வர்ணிக்கும் போது யார் நெஞ்சில்தான் இன்பம் சுரக்காமல் இருக்கும்? கரிகால் மன்னனைப் போலவே அவையிலிருந்த அனைவரும் பூரிப்புத் தாங்கமாட்டாமல் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கினர். வேளிர்குல அரசி பெருந்தேவியின் காதுகளில் அந்த இன்பத் தமிழ் முழக்கம் கேட்கவில்லை. அவள் கவனமெல்லாம் தன் காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொள்ள எப்போது சமயம் கிடைக்கும் என்பதில்தான் இருந்தது.

சேலையின் மறைவில் ஒளித்தவாறு வைத்திருந்த கட்டாரியின் பிடியைத் தளர்த்தாமலே அவள் நேரம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந் தாள். அவளை யாரும் கவனிக்கவில்லை. எல்லோருடைய கண்களும் காதுகளும் கடியலூர்ப் புலவர் பக்கமே திரும்பியிருந்தன.

தமிழ் வளர்க்கும் சோழனைக் கொல்வதற்குத் தனக்குத் தமிழே துணைபுரிகிறது என்று எண்ணிக் கொண்டாள் பெருந்தேவி. யாரும் அவளைக் கவனிக்கவில்லையென்பது உண்மைதான். என்றாலும் அவ ளையுமறியாமல் இரண்டு கூர்மையான விழிகள் கொலு மண்டபத்தின் ஒரு மூலையிலிருந்து அவள் பக்கம் ஊடுருவிப் பாய்ந்து கொண்டி ருந்தன. அந்த விழிகளில் தேங்கியிருந்த ஆவலை - பரபரப்பை - அவ சரத்தை - அச்சத்தை வர்ணிப்பதென்றால் பட்டினப்பாலை பாடிய கடிய லூர்ப் புலவராலும் இயலுமா என்பது சற்று ஐயத்திற்கிடமானதுதான்!

அந்த விழிகளுக்குரிய உருவம் நகர்ந்து நகர்ந்து, கொலு மண்டபத்து உட்பகுதிக்கு வந்து கொண்டிருந்தது.

வேளிர் அரசியும் தான் முதலில் உட்கார்ந்த இடம் வசதியானது அல்ல என்பதையும் உணர்ந்து, மெதுவாக அரசனின் ஆசனத்திற்கு அருகாமை யில் உள்ள இடம் நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

இதற்குள்ளாக உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையைப் பாடி முடித்துச் சுவடியைக் கொண்டு போய்க் கரிகால் மன்னனிடம் அளித்தார். மண்டபம் முழுவதும் மலர் மாரி பொழிந்தது. சுவடியை வாங்கித் தக்க இடத்தில் வைத்துவிட்டு அரசன் அமைச்சரிடம் குறிப்பாக ஏதோ கூறவே அவர் தளபதியை நோக்கிக் கையை அசைத்தார்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஐந்தாறு ஆட்கள் தூக்க முடியாமல் திணறியவாறு வெள்ளிப் பேழைகள் சிலவற்றைத் தூக்கி வந்து மண்டத்தின் நடுவே வைத்தனர். அரசன் எழுந்து, புலவரை நோக்கிக் கரங்குவித்தவாறு பேசலானான்.

''கவியரசே! சோழ நாட்டின் அன்புப் பரிசாக இந்த வெள்ளிப் பேழைகளிலுள்ள பதினாறு நூறாயிரம் கழஞ்சுப் பொன்னையும் ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.''

- எனக் கூறிப் பேழைகளைத் திறக்கச் செய்து பொன்னை அள்ளிப் புலவர் பெருமானின் தலையில் மலர் போலத் தூவினான்.

**அந்த ஆரவாரத்தைக் கண்ட பெருந்தேவி, இதுதான் தக்க தருணமென்று தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள எழுந்தாள். அவள் இலக்குக்கு நேராக கரிகாலன் நின்று கொண்டிருந்தான்.**

கட்டாரியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பலங்கொண்ட மட்டும் தன் கரத்தைப் பின்னுக்குத் தூக்கி வீசியெறிய முயன்றாள்.

அவளைப் பற்றியிருந்த பிணி எங்கேயோ பறந்து விட்டது.

''ஓரே வீச்சு! மன்னன் ஒழிந்தான்!'' -இப்படி அவளால் ஆத்திரத்தோடு நினைக்க முடிந்தது.

ஆனால் ஏதோ ஒரு திகில் அவள் அடிவயிற்றிலிருந்து கனல் போல் கொழுந்துவிட்டுக் கிளம்பி நாக்கு வரையில் சூடேற்றிக் கொண்டிருந்தது.

''இனியும் தயங்கிப் பயனில்லை!''- அவள் உள்ளம் எச்சரிக்கிறது.

ஆனால் அவள் செயலிழந்து விட்டாள். எப்படி?

கூடாது! கூடாது! எல்லா வலுவினையும் ஒன்று சேர்த்து ஒரேவீச்சில் தன் காரியத்தை வெற்றிகரமாக முடித்துவிட வேண்டும்... என உறுதி கொண்டு விட்டாள் இப்போது.

தணிந்த கை மீண்டும் உயர்ந்தது. பலமனைத்தும் கரத்தில் குவிந்தது. ஓங்கினாள் வேகமாக; வீசிவிட்டாள் கட்டாரியை!

'ஐயோ! கரிகாலன் மார்புக்கு நேரே கட்டாரி பாயப்போகிறது! ஆனால் அதற்குள் அங்கே குறுக்கே பாய்ந்தது யார்?' கொலு மண்டபத்தில் ஒரே குழப்பம். கரிகாலன் திடுக்கிட்டான். திகைத்தான். பெருந்தேவியைச் சில பெண்கள் பிடித்துக் கொண்டார்கள்.

கரிகாலனின் உயிரைக் காப்பாற்றுவதற்காகக் குறுக்கே பாய்ந்து தன் விலாப்புறத்தில் பலத்த காயத்துடன் கீழே விழுந்துவிட்ட அந்த மனிதனை அனைவரும் ஆச்சரியத்துடன் பார்த்தனர். அவன்தான் கொலுமண்டபத்தில் பெருந்தேவியின் நடவடிக்கைகளை மிகத் தீவிர மாகக் கவனித்து வந்தவன். தோற்றத்தில் ஒரு வயதான உழவனைப் போலவே இருந்தான்.

மயக்கமுற்றுக் கிடந்த அவனை உடனே மருத்துவச் சிகிச்சைகளுக் காக எடுத்துப்போக வேண்டுமென்று கரிகாலன் பரபரப்புடன் ஆணை பிறப்பித்தான்.

தூக்கும்போது கண்விழித்த அந்த உழவன், பெருந்தேவி நின்றிருந்த திசையை நோக்கியவாறு ''அவள்! அவள்! அவள்...'' என்று கத்தினான்.

அப்படி அவன் கத்திக்கொண்டிருக்கும்போதே பெண்களின் பிடியிலிருந்த பெருந்தேவி கீழே சாய்ந்தாள்.

தன் இலக்குத் தவறிவிட்டது; யாரோ ஒருவன் தன் இலட்சியத்தைத் தடுத்துவிட்டான்; தன் முயற்சியத்தனையும் பாழாகி விட்டது என்பதை ஒரு நொடியில் உணர்ந்து கொண்டாள் வேளிர் குல அரசி. அந்த உணர்வுக்குப் பிறகு அவள் உயிர் உடலில் தங்கவில்லை. முட்டிமோதிக் கொண்டு வெளிப்பட்டு அவளது கடைசி மூச்சு, காற்றுடன் கலந்து விட்டது!

அய்யோ பரிதாபம்! வேளிர் குல அரசியின் வேதனைகள் கடைசி வரையில் தீரவில்லை. தன் கணவனின் மகிழ்ச்சிக்காக அவள் செய்யத் துணிந்த காரியமும் படுதோல்வி அடைந்து விட்டது. எங்கேயோ பிறந்து, எங்கேயோ வாழ்ந்து, எங்கேயோ எதிரியின் மாளிகைக் கொலு மண்டபத்தில் அந்தப் பெருமைக்குரிய அரசியின் பிணம் கிடந்தது!

கரிகாலன் அந்தச் சவத்தின் அருகே வந்து நின்றான். அனைவரும் சூழ்ந்து நின்று பிணத்தின் முகத்தை உற்று உற்றுப் பார்த்தனர்.

இருங்கோவேளின் மனைவி பெருந்தேவிதான் அரசனைக் கொல்லும் முயற்சியில் ஈடுபட்டுப் பிணமாகி விட்டாள் என்ற உண்மை உறுதிப்படுத்தப்பட்டது.

கரிகாலன் மரம்போல் நின்று கொண்டிருந்தான். பெருந்தேவியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் மன்னன். அம்மண்டபத்திலே மயான அமைதி நிலவிற்று.

இறுதியாக அமைச்சரைப் பார்த்துச் ''சவ அடக்கத்திற்கான ஏற்பாடு கள் சிறப்பாகச் செய்யப்படட்டும், நான் போய் அந்த உழவனைக் கவனிக்கிறேன்'' என்று கூறிவிட்டுக் கொலு மண்டபத் திலிருந்து கரிகாலன் வெளியேறினான்.

கொலு மண்டபத்தில் ஏற்பட்ட குழப்பத்தினால் அதிர்ச்சியடைந்து போயிருந்த உருத்திரங்கண்ணனாரைப் பாண்டியத் தளபதி நெடுமாறன் அழைத்துக் கொண்டு, மெதுவாக அந்த இடத்தைவிட்டு நகர்ந்தான். தன் பாடல்கள் அரங்கேறிய அந்த நாளில் இப்படி ஒரு சம்பவம் நடக்க வேண்டுமா என்ற கவலை புலவரை வாட்டியது.

''பட்டினப்பாலை அரங்கேற்று விழாவில் சோழன் கொலுமண்டபத் தில் குழப்பம் ஏற்பட்டது என்று எண்ணிக் கொண்டு எதற்காக வருந்த வேண்டும்? அந்த நாளில் அரசனின் உயிருக்கு நேர இருந்த ஆபத்து நீங்கியது என மகிழ்ச்சியடைவதே பொருத்தமு டையதாகும்'' என்று நெடுமாறன், புலவருக்குச் சமாதானம் கூறினான்.

''இப்படி ஒரு நிகழ்ச்சி ஏற்படக் காரணம் என்ன?'' என்று புலவர் கவலையுடன் கேட்டார்.

அதற்கு நெடுமாறன், "இது போல இரண்டு மூன்று முயற்சிகள் நடைபெற்று விட்டன, அரசரைக் கொல்ல!" என்று பதில் அளித்தான்.

"பகைவர்கள் பூம்புகாரில் நுழைவதற்கும், மாளிகையிலும் கொலுமண்டபத்திலும் விருப்பம் போல பிரவேசிப்பதற்கும் இடமளித்து விடுகிறார்களா?"

புலவரின் சந்தேகம் நியாயமானதுதான். ஆனால் அதற்கு பதில் சொல்ல நெடுமாறன் சிறிது தயங்கினான். ஆயினும் பதில் கூறினான்:

"வெளியில் மட்டுமல்ல, பூம்புகாருக்குள்ளேயே கரிகால் சோழருக்கு விரோதமாகக் காரியங்கள் நடக்கின்றன. அந்த துரோகிகளை கண்டு பிடிக்கும் விஷயத்தில் மன்னன் சிரத்தை காட்டாமல் விட்டுவிட்டார். அதன் விளைவு விபரீதமாகப் போன பிறகுதான் இப்போது சில நடவடிக்கைகளில் தீவிரமாக இறங்கியிருக்கிறார்."

"வியப்புக்குரிய செய்தியாக இருக்கிறதே! சோழ மண்டலத்தில் துரோகிகளா?"

"ஆமாம், இப்போது நான் சொல்லப் போவதைக் கேட்டால் மேலும் வியப்படைவீர்கள். பகையரசன் இருங்கோவேளுடன் தொடர்பு கொண்டு துரோகம் புரிந்தார் என்ற காரணத்திற்காகப் புலவர் காரிக்கண்ணனார் கூடச் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்!"

"ஆ! என்ன! காரிக்கண்ணனார் சிறைப்பட்டிருக்கிறாரா?"

"ஆமாம். எனக்குத் தெரியாது என்றுதான் மன்னர் நினைத்துக் கொண்டிருக்கிறார். மாளிகையில் உள்ள முக்கியமான வீரர்கள் மூலம் நான் அறிந்து கொண்ட உண்மையிது. யவனக் கிழவர் வேடத்தில் வந்த இருங்கோவேளுடன் காரிக்கண்ணனார் பேசிக் கொண்டிருக்கும்போது பிடிபட்டிருக்கிறார். ஆனால் பிடிக்கப் போன வீரர்களைத் தந்திரமாக ஏமாற்றி இருங்கோவேளைத் தப்பியோடச் செய்து, யவனக் கிழவர் வேடத்தில் தானே வந்து கரிகால் மன்னரின் கையில் சிக்கிக் கொண்டார்."

"அப்படியா? நம்பவே முடியவில்லையே!"

"கேள்விப்பட்டதும் நானும்தான் நம்பவில்லை. மன்னர் காரிக்கண்ணனாரிடம் வைத்திருந்த அன்பு அளவு கடந்தது. அவரை மன்னர் பொன்னே போல் போற்றி வந்தாராம். ஆனால் மயில் தோகைக்குள்ளே முள்ளம்பன்றி மறைந்து கொண்டிருந்திருக்கிறது!"

காரிக்கண்ணனார் பற்றிய செய்தி கேட்டதும் கடியலூர்ப் புலவரின் நெஞ்சம் கொதிக்கத் தொடங்கியது. குமுறலும் கொந்தளிப்பும் மிகுந்த உள்ளத்தோடு நடுங்கும் குரலில் கண் கலங்க அவர், பாண்டியத் தளபதியைப் பார்த்து, "தமிழுக்கே இது அவமானம்!" என்று கதறினார்.

''எப்படியாவது காரிக்கண்ணனாரைச் சந்தித்தே தீர வேண்டும்!'' என்று நெடுமாறனிடம் பரபரப்புடன் கூறினார். அன்பும் அமைதியும் நிறைந்த காரிக்கண்ணனாரின் கண்களில் வஞ்சம் ஒளிந்திருந்தது எப்படி எனச் சிந்திக்கத் தொடங்கினார்.

''தளபதி நெடுமாறா! பட்டினப்பாலையை இயற்றி முடிந்ததும் கரை காணா இன்பம் கொண்டேன். அதனை அரசர் முன்னே பாடிக்காட்டியதும் என் பிறவிப் பயனை அடைந்துவிட்ட மகிழ்ச்சியுற்றேன். பொன்னையும் மணியையும் திருமாவளவர் வாரி வழங்கியதும் என் தமிழ் நெஞ்சம் விம்மி உயர்ந்தது. 'வாழ்க தமிழ்!' என்று உரக்கக்கூவிய ஒலி என் காதுகளுக்கு மட்டுமே கேட்டது. என்னை நான் மறந்தேன். அந்தச் சமயத்தில் மின்னலெனத் தோன்றிய குழப்பம் - கொலை வெறி அனைத் தும் சேர்ந்து என் உயிரைக் கொத்தித் தின்னத் தொடங்கின. அந்த வேதனையைக் கூடச் சகித்துக் கொண்டேன், பேரரசர் பிழைத்துக் கொண்டார் என்பது கண்டு!. ஆனால் நான் அடைந்த மகிழ்ச்சிக்கு நேர் எதிர்ப்பாக... நான் பெற்ற வேதனைகளுக்குச் சிகரமாக அமைந்துவிட்டது காரிக்கண்ணனார் பற்றிய செய்தி. இதுபற்றி எனக்கு உண்மை தெரிந்தாக வேண்டும். அதற்குவழி செய்தாக வேண்டும்'' என்று நெடுமாறனிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டினார் உருத்திரங்கண்ணனார்.

''புலவர் அவர்களே! கொஞ்சம் பொறுத்திருங்கள். அமைதியின்றித் தவித்துக் கொண்டிருக்கும் அரசரின் மனம் ஒரு நிலைக்கு வரட்டும். தன்னைக் கொல்ல வந்த பெருந்தேவிக்கு அவர் நடத்த இருக்கும் ஈமச்சடங்குகள் முடிவு பெறட்டும். அதன் பிறகு அவரை அணுகிக் காரிக்கண்ணனார் பற்றி விசாரிக்கலாம்'' என்று நெடுமாறன் பதில் கூறிவிட்டு, அவரையும் அழைத்துக் கொண்டு தான் தங்கியிருக்கும் இடம் நோக்கி நடக்கலானான். புலவரும் நெடுமாறன் சொல்வது சரிதான் என்று ஒப்புக் கொண்டவராய் அவனுடன் புறப்பட்டார்.

பூம்புகார் நகரத்து மக்களும் புயலென உள்ளம் படைத்து ஓரிடத்தில் உட்காரவோ நிற்கவோ முடியாதவர்களாக நகரத்து வீதிகளில் அலைந்து கொண்டிருந்தனர். இருங்கோவேள் மன்னன் மீது உடனே படையெடுத்தாக வேண்டும் என்ற உணர்ச்சி காட்டுத்தீ போலச் சோழர் தரணியெங்கும் பரவிவிட்டது. இனியும் அந்தப் பகைவனைப் பதுங்கி வாழ்வதற்கு அனுமதித்தால் கரிகால் மன்னரைக் காப்பாற்றுவது என்பது முடியாத காரியம் ஆகிவிடும் என்று அவர்கள் முடிவு கட்டிக் கொண்டார்கள்.

கோலமாப்போன்ற நரைத்தலைக் கிழடுகள் முதல் குழந்தைகள் வரையில் அனைவருமே கரிகால் மன்னரை நினைத்து நினைத்துத் தேம்பி அழுதனர். தங்கள் தலைவனைத் தங்களிடமிருந்து யாரோ பிரித்துவிடப் போகிறார்கள் என்ற பயம் அவர்களை நிலை தடுமாறச் செய்தது. சோழ நாட்டில் உள்ள படைகளின் முன்னே இருங்கோவேளின் படை எம்மாத்திரம்? அப்படியே இந்தப் படைகள் போதாது என்றால், பாண்டியத் தளபதி நெடுமாறன் வேறு படைகளோடு வந்திருக்கிறார். அதுவும் போதவில்லையெனில் பாண்டிய நாட்டில் மிச்சமுள்ள வீரர்களும் அழைத்தவுடன் அனுப்பப்படுவர். இவ்வளவு வலிமை இருந்தும் எதற்காக இன்னும் தயக்கம் காட்ட வேண்டும் என்று சோழ நாட்டு மக்கள் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

''கையாலாகாத கோழை! வாள் பிடிக்கத் தெரியாத வஞ்சகன்! நேர் நின்று போர் புரிய ஆற்றல் அழிந்து தன் மனைவியை அனுப்பிப் பகை முடிக்க நினைத்திருக்கிறான் படுபாதகன்.''

- இப்படிப் பேசியது ஒரு கூட்டம்.

''அனுப்பியதுதான் அனுப்பினானே, யாராவது ஓர் ஆண் மகனை அனுப்பியிருக்கக்கூடாதா? நோயால் மெலிந்த தன் நோஞ்சான் மனைவியை அல்லவா சூதாட்டக்காயாகப் பயன்படுத்தியிருக்கிறான்? இவனுக்கு ஏன் கையிலே வாள்? இவனுக்கு ஏன் மீசை? இவனுக்கு ஏன் மன்னன் பட்டம்? வீரன் என்ற விருது?''

ஆத்திரம் கலந்த வாசகங்கள் பூம்புகார் மக்களிடமிருந்து வெளிக்கிளம்பின. வெளிநாட்டுப் பொருள்களை ஏற்றிக் கொண்டு வந்த களைப்பால் பெருமூச்சு விட்டுக் கரையில் சாய்ந்து உடனே வேலைக்கு ஓடும் கடலின் அலைகள் கூடக் கொஞ்சம் மெதுவாக எழுந்தன. ஆனால்

நகரத்து மக்கட் பேரலையோ பயங்கரமாக எழுந்து விட்டது. வீட்டுத் திண்ணைகளில் கூடி, வீதி மூலைக்கு வந்து, ஒருவர் இருவர் என்று துவங்கி, ஆயிரம் இரண்டாயிரம் எனப் பெருகி, இறுதியில் அரண்மனை முகப்புக்கே வந்துவிட்டது அந்தக் கூட்டம். அதில் நாடி தளர்ந்த ஒரு கிழவன் முன்னுக்கு வந்து நடுங்கிய குரலில் பேச ஆரம்பித்தான். தொண்டை சூடு பிடிக்கும் வரையில் கிழவனைப் போல பேசிக் கொண்டிருந்த அவன் சிறிது நேரத்திற்கெல்லாம் சிங்கம் போல் கர்ஜித்தான்.

''வேந்தே! வீட்டுக்கொரு வீரர் வந்துவிட்டோம்! அந்த வீரனின் விலா எலும்பை முறித்து, அதிலேஅழகான விசிறியொன்று செய்கிறவரையில் என் உயிர் போகாது! எங்கள் குலத் தலைவனை - மங்காத தமிழ்ப் பெருமகனை- வட புலத்தான் தலை நொறுங்க இமயத்தில் ஏறி நின்று எட்டுத் திசையும் முரசு கொட்டியவனை - இனி வாழவிடக் கூடாது என்று அந்த வஞ்சக இருங்கோவேள் திட்டம் தீட்டி விட்டான்!நமது வாட்கள் நீட்டப்பட வேண்டியதுதானே நியாயம்! ஏ, அரண்மனைக் காவலர்களே! எங்கள் மன்னவனைக் கொல்ல எண்ணிக் குறிபார்க்கும் குள்ள நரிக் கூட்டத்தைக் கூண்டோடு அழிப்பதற்குப் பூம்புகார் நகரமே பொங்கியெழுந்து விட்டது என்ற செய்தியை உள்ளே அனுப்புங்கள்! ஏ, கனமான கோட்டைச் சுவர்களே! தொங்கிப்போன நரம்புகள் எல்லாம் முறுக்கேறி விட்டன. இனி இருங்கோவேளின் தலைதான் பனங்குலை போல் தொங்க வேண்டும் என்று பூம்புகார் மக்கள் முடிவு செய்துவிட்ட போர்ச் செய்தியை நம் மன்னர் பெருமானின் காதுகளில் எதிரொலிக்கத் தயங்காதீர்கள்!''

இப்படி நகரம் போர்க்கொடியேந்தி வெறிபிடித்து நின்று கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் கரிகால் மன்னன் தன் உள்ளத்தில் தாக்கிய குழப்ப அம்புகளையெல்லாம் பிடுங்கி எறிந்துவிட்டு அமைதியாகத் தன் மாளிகைத் தாழ்வாரத்தில் நடை பழகிக் கொண்டிருந்தான்.

பகைவனின் மனைவி தன்னைக் கொல்ல வந்தாள். அவள் மீது அவனுக்கு ஆத்திரமே ஏற்படவில்லை; ஆழ்ந்த அனுதாபமே ஏற்பட்டது. அவளது சாவு அவனைக் கலக்கிவிட்டது. அதே சமயம் தன்னைக் காப்பாற்றுவதற்குச் சோழ நாட்டிலே பிறந்த ஓர் உழவன் முன்வந்தான் என்பது மன்னனைப் பெரிதும் மகிழச் செய்தது. தன்பால் குடி மக்களுக்கு இருக்கும் அன்பினை நினைத்துப் பூரித்துப் போனான். அந்தக் களிப்பின் அடையாளந்தான் போலும் முகத்தில் வீசும் ஒளி!

உலவிக் கொண்டிருந்தவனின் எதிரே வீரன் ஒருவன் வந்து நின்றான், ''என்ன?'' என்று ஆவலாகக் கேட்டான் மன்னன்.

''உழவனுக்கு வேண்டிய சிகிச்சைகள் எல்லாம் செய்தாகிவிட்டது. படுக்கையில்தான் இருக்கிறான் இனிப் பயமில்லை என்கிறார்கள் மருத்துவர்கள்'' என்று பதில் கூறினான் வீரன்.

''கண் திறந்தானா? வாய் திறந்தானா?... ஏதாவது பேசினானா?''

''பேசவில்லை அரசே! கண்ணை மட்டும் விழித்திருக் கிறான். விழிகள் ஒரு பக்கமில்லாமல் சுழன்றுகொண்டேயிருக்கின்றன.''

''அது என்னைக் காப்பாற்றும்போது ஏற்பட்ட அதிர்ச்சி...ம் நீ முன்னே போ; நானும் வருகிறேன்.''

- என்று கரிகாலன், உழவன் படுத்திருக்கும் இடத்திற்குப் புறப்பட்டுச் சென்றான்.

உழவன், வீரன் கூறியவாறே படுக்கையில் அசையாமல் படுத்திருந் தான். அரசன் அவன் அருகே சென்று உட்கார்ந்தான். அரசனைக் கண்டதும் உழவனின் விழிகள் வேகமாகச் சுழன்றன. அரசன், உழவனின் நெற்றியை மெதுவாகத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''எப்படியிருக்கிறது?'' என்று அன்பு ததும்பக் கேட்டான்.

உழவனின் கண்களில் நீர் ததும்பியதே தவிர, பதில் எதுவும் கிடைக்கவில்லை.

''இனிமேல் ஏன் அழுகிறாய்? நான்தான் பிழைத்துக் கொண்டேனே!'' என்று மன்னன் மிகப் பரிவுடன் ஆறுதல் கூறினான். உழவன் கரிகாலனையே பார்த்தவாறு படுத்திருந்தான்.

''நீ செய்த உதவிக்கு நான் என்ன கைமாறு செய்ய முடியும்? என் இதயப்பூர்வமான நன்றியை ஏற்றுக் கொள்!'' என்று தழுதழுத்த தொனியில் மன்னன் பேசினான்.

உழவன் மிகவும் சிரமப்பட்டு உதடுகளை அசைத்தான். ''மன்னா! என் கடமையை நான் செய்தேன். அதிருக்கட்டும், அவள் என்ன ஆனாள்?''

''அந்தோ பரிதாபம்! அவள் தன் காரியம் கைகூடாத ஏக்கத்தில் அங்கேயே விழுந்து செத்துவிட்டாள். அவள் சாவுக்கு நீதான் காரணம்.''

''நானா?''

''ஆமாம்! நீ தடுத்திராவிட்டால் அவள் என்னைக் கொன்றிருப்பாள்! அவளுக்கு நிம்மதி கிடைத்திருக்கும். அவள் பிணத்தைப் பார்த்தபிறகு நினைத்துக் கொண்டேன். அய்யோ! நான் மடிந்திருக்கக்கூடாதா என்று!''

கரிகாலன் இதைச் சொன்னதும் உழவனின் கண்கள் இரு அருவிகளாயின.

''ஏன் அழுகிறாய்? உன்னுடைய மன்னன் சாவதற்கு விரும்புகிறானே என்றுதானே? அழாதே! நான் இருங்கோவேளின் மனைவி பெருந்தேவியின்மீது கொண்டுள்ள மரியாதையின் காரணமாக இதைச் சொன்னேன். நீ பார்த்தாயா அந்த அரசியின் உடல்நிலையை? நீ பார்த்திருக்க முடியாது. உன் கவனம் முழுவதும் என்னைக் காப்பாற்று வதிலேயே போயிருக்கக்கூடும். நோயினால் தேய்ந்து போனவள்; அணு அணுவாக நோய்க்கிருமிகளுக்கு தன் உயிரைத் தந்து கொண்டிருப்பவள்; அவளுக்கு எங்கிருந்து வந்தது இவ்வளவு வலிமை? தியாக உள்ளம் தந்த வலிமைதான் அது! அந்த உள்ளம் உடைந்து விடலாமா? உடையக் கூடாது, உடையும்படி செய்துவிட்டோம் நீயும் நானும். எப்படி என்று கேட்கிறாயா? நீ காப்பாற்றினாய். நான் பிழைத்துக் கொண்டேன். நாமிருவரும் இந்தத் தவற்றினைச் செய்யாவிட்டால் அந்த உத்தமியின் இலட்சியம் நிறைவேறியிருக்கும்.''

''பெருந்தேவியின் சவத்தை என்ன செய்தீர்கள்?''

''அரசு மரியாதைகளுடன் அடக்கம் செய்ய உத்தேசித்திருக்கிறேன்.''

''அவள் செத்துவிட்ட செய்தியையாவது இருங்கோவேளுக்குச் சொல்லி அனுப்பினீர்களா?''

''ஏன்?''

''துக்கம் விசாரிக்க அந்தத் துரோகி வருவான். அப்போது அவனைப் பிடித்துக்கொள்ளலாம் என்றுதான்.''

''அந்தப் போர் முறையை நான் படித்ததில்லையே!''

''மன்னித்து விடுங்கள்.''

உழவன் கண்களை மூடிக் கொண்டான். இமைகளை மீறிக் கொண்டு கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

''உழவ! உணர்ச்சி வயப்பட்டு உடலை அலட்டிக் கொள்ளாதே! இந்தச் சமயத்தில் அதிகமாகப் பேசுவது கூடத் தவறுதான். ஆனாலும் ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல். என் சரித்திரத்தில் அழியாத இடம் பெற்று விட்ட உன் பெயர் என்ன?'' என்று மிக்க ஆவலுடன் கரிகாலன் உழவனைப் பார்த்துக் கேட்டான். கன்னங்களில் கண்ணீரை வழிய விட்டுக் கொண்டே உழவன் பதில் சொன்னான்.

''அவன் பெயர் வளவன்.''

அந்தப் பெயரை மன்னன் வாய் நிறையச் சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

பிறகு வளவனைப் பார்த்து, ''பெருந்தேவியின் இறுதிச் சடங்குகளுக் கான ஏற்பாடுகள் ஆரம்பமாகியிருக்கும். நான் போய் அவைகளைக் கவனிக்கிறேன். நீ நன்றாக ஓய்வெடுத்துக் கொள். உன் மன்னனுக்கு இனிமேல் எந்தவித ஆபத்தும் நேராது. மனத்தைக் குழப்பிக் கொள்ளாமல் தைரியமாக இரு!'' என்று கூறிவிட்டுக் கிளம்பினான்.

அவன் சொன்னவாறே பெருந்தேவியின் சவ அடக்கத்திற்கான காரியங்களில் அரண்மனையிலுள்ளோர் தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். என்ன இருந்தாலும் ஒரு மன்னனின் மனைவி என்ற மரியாதையுடன் அந்தக் காரியங்கள் நடைபெற்றன. அலங்கரிக்கப்பட்ட பீடமொன்றில் பெருந்தேவியின் சடலம் வைக்கப்பட்டிருந்தது. அவள் முகத்தைத் தவிர மற்ற அங்கமனைத்தும் மலர்களால் மூடப்பட்டிருந்தது. கூடம் முழுவதும் நறுமணப் புகை சூழ்ந்திருந்தது. பெரியதோர் சாதனை புரியவந்த தோற்றமும் அந்தக் காரியத்தில் ஏற்பட்ட தோல்விச் சாயலும் பெருந்தேவியின் முகத்தில் குடிகொண்டிருந்தது.

அவளுக்கு இப்போது நிம்மதி! அரண்மனையிலே பிறந்து, அரண்மனையிலே வாழ்ந்து, இறுதியில் ஆரண்யத்தில் செத்துக்கிடக் காமல் அரண்மனையிலேயே முடிவெய்திவிட்டாள். ஆனாலும் அந்தச் சாவு, அவளுக்குப் பரிபூரணத் திருப்தியை அளிக்கக் கூடியதாக இல்லை! நிச்சயமாக இல்லை? அவளருகே அவளது உயிரனைய கணவன் இருங்கோவேள் இல்லை . அவன் அவளது பிரிவை நினைத்து உகுத்தி டும் கண்ணீர்த் துளிகளில் அன்றோ அவள் கடைசியாகக் குளித்திருக்க வேண்டும்? அதற்குக் கொடுத்து வைக்கவில்லையே!

அது மட்டுமா '' அண்ணி! அண்ணி!'' என்று அன்பைக் குழைத்துப் பேசும் அவள் பிரியத்துக்குரிய தாமரையும் அருகே இல்லை அனாதைபோல் இறந்து கிடந்தாள். அரண்மனைக் கூடத்தில்; அதுவும் பகைவனின் வீட்டில்!

சவம் வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குக் கரிகாலன் வந்து சேர்ந்தான். பெருந்தேவியின் முகத்தையே உற்றுக் கவனித்தவாறு நின்று கொண்டி ருந்துவிட்டுத் தாழ்வாரத்துப் பக்கம் வந்து அங்குமிங்கும் உலவிடத் தொடங்கினான். அரசனிடமிருந்து என்ன கட்டளை பிறக்குமோ என்று அமைச்சர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அதன்படியே அரசனும் அமைச்சரை நோக்கி, ''இந்தச் செய்தியை இருங்கோவேளுக்குத் தெரிவிக்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

''இந்நேரம் இது இருங்கோவேளுக்குத் தெரியாமலா இருக்கும்? அவன்தானே அனுப்பி வைத்திருக்கிறான். அதனால் அவனுக்கு இதுவரையில் செய்தி எட்டாமல் இருக்காது'' என்று அமைச்சர் பதில் சொன்னார்.

''மனைவியின் திருமுகத்தைக் கடைசித் தடவையாகக் காண்பதற்கு நாம் இருங்கோவேளுக்கு வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதே முறை என்று கருதுகிறேன்.''

நீண்ட சிந்தனைக்குப் பிறகு அரசனின் மனத்தில் எழுந்த இந்த முடிவைத் திடீரென மறுத்துவிட அமைச்சர் பயந்தார். ஆனாலும் அவ ரால் முடிவை ஏற்றுக் கொள்ளவும் இயலவில்லை . கடும் பகைவனாகக் காட்சி தந்தவாறு எந்த நேரத்தில் கரிகாலன் வாழ்வைச் சூறையாடலாம் என்று துடித்துக் கொண்டிருக்கும் இருங்கோவேள் மீது அவ்வளவு இரக்கம் காட்டுவதா?

''அரசே! இருங்கோவேளைக் கண்டால் சோணாட்டு மக்கள் பொடி செய்து விடுவார்கள். இருங்கோவேளிடம் நாம் காட்டுகிற பெருந் தன்மை அவன் உயிருக்கே ஆபத்தாக முடிந்து, கடைசியில் நமது போர் முறைக்கே இழுக்கு ஏற்பட்டு விடக்கூடும். மக்களின் கொந்தளிப்பை அடக்கவே முடியாது, மாமன்னா! பூம்புகாரில் இப்போதே புயல் எழுந்துவிட்டது என்று சொல்லலாம்.''

இந்தப் பதிலை அமைச்சர் நடுங்கியவாறு கூறினார்.

''என்ன அமைச்சரே இப்படிப் பேசுகிறீர்? நமது மக்கள் நம்மையும் மீறியா நடந்து கொள்வார்கள்? இருங்கோவேள் நமது பகைவன் என்பது உண்மை. என்னைக் கொல்லும் முயற்சியில் இரண்டொரு முறை ஈடுபட்டிருக்கிறான் என்பதும் உண்மை. இன்றைக்கு நாம் அவனிடம் காட்டுகிற பெருந்தன்மையால் இந்தப் பகை உணர்ச்சி அழிந்துவிடப் போவதில்லை. அவனும் அப்படிப்பட்ட உத்தமனுமல்ல. அனைத்தும் நானறிவேன். ஆனாலும் இதையெல்லாம் நினைத்து அவன் வீட்டில் நடைபெற்று விட்ட இந்த சோக நிகழ்ச்சியை நாம் நமது விளையாட்டு விழாவாக ஆக்கிவிடக்கூடாது. இறந்து கிடப்பது அவன் மனைவி. அவனை உயிருக்குயிராக நேசித்த மனைவி. அவன் இலட்சியம் நிறைவேற வேண்டும் என்ற கவலையில் தன் உயிரையே பணயமாக வைத்த பாவை. அப்படிப்பட்டவளின் உடலை அவன் கண்ணுக்கே காட்டாமல் புதைத்து விடுவது என்பது சொல்ல முடியாத கொடுமை. சிறிது யோசித்துப் பார்ப்போம். இது போன்ற ஒரு நிலை நமக்கே ஏற்பட்டிருந்தால் நம் மனம் என்ன பாடுபடும்? ஏதோ அவசரத்தில் முடிவு செய்து பெருந்தேவியை அனுப்பி விட்டான். வந்த காரியத்தில் அவளுக்கு வெற்றி ஏற்பட்டாலும்தோல்வி ஏற்பட்டாலும் முடிவு இப்படித்தான் ஆகும் என்பதை அவன் உணராமல் இருந்திருக்க வேண்டும்; அல்லது அவனுக்கே தெரியாமல் கூட அவள் வந்திருக்கக் கூடும். எப்படியிருப்பினும் இருங்கோவேள் வந்து அவள் முகத்தைக் கடைசியாகப் பார்த்துச் செல்வதற்கு நாம் தடையாக இருக்கக் கூடாது.''

"மனைவியின் முக தரிசனம் காணவரும் பாவனையில் தங்களுக்கு ஏதாவது தீங்கு செய்துவிட்டால்...?"

"அவ்வளவு மோசமான நிலை உருவாகுமென்றால் நான் சாவதே மேல். தன்னந் தனியாக அரண்மனைக்குள்ளே ஒருவன் வருவான். என்னைச் சுற்றிப் பெரும் பாதுகாப்புப் படை இருக்கும். வருகிறவன் இவ்வளவையும் மீறி, என்னைக் கொன்று போட்டுவிடுவான். அப்படித் தானே அமைச்சரே? அதுபோல் நடக்குமென்றால் நமக்குப் படைகளே தேவையில்லை. இப்போதே கலைத்து விடலாம்."

"மன்னிக்கவும் அரசே! நான் அதற்குச் சொல்லவில்லை. நாட்டு மக்கள் யாருக்குமே பிடிக்காத ஒன்றை ஏன் செய்ய வேண்டும் என்றுதான்..."

"கொல்ல வரும் எதிரியிடமும் கரிகாலன் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டான் என்ற செய்தி நாட்டு மக்களுக்குச் செந்தீயாக இருக்குமென்கிறீர்! நல்ல வேடிக்கை! அங்ஙனமாயின், எதிரி என்பதற் காகக் கரிகாலன் மனிதப் பண்பையும் இழந்து நடந்து கொண்டான் என்ற பெயர் எனக்கு வரவேண்டுமென்று மக்கள் விரும்புகிறார்கள் போலும்!"

கரிகாலன் கோபமாக இருக்கிறான் என்பதை அமைச்சர் புரிந்துகொண்டு மௌனமாக இருந்தார்.

"அமைச்சர் அவர்களே! இப்போதே நமது வீரர்களை அனுப்புங்கள். இருங்கோவேள் ஒளிந்து வாழ்வதாகச் சந்தேகப்படும் இடங்களில் எல்லாம் பறை முழக்கச் சொல்லுங்கள்! இருங்கோவேள் துணைவி பெருந்தேவியின் மறைவைப் பற்றிப் பறை முழங்கட்டும் ! நமது அரண்மனையில் வைக்கப்பட்டுள்ள சவத்தைக் காண்பதற்கு இருங்கோ வேள் மட்டும் தன்னந்தனியாக வர யாதொரு தடையுமில்லை என்று செய்தி பரவட்டும். இன்று-நாளை -நாளை மறுநாள் மாலை வரையில் இறுதிச் சடங்குகள் நிறைவேற்றப்படாமல் இருங்கோவேளுக்காக எதிர்பார்ப்போம் என்றும் விளக்கமுரைக்கட்டும் உடனே ஏற்பாடு செய்யுங்கள். அதுவரையில் சவம் சிறிதும் கெடாமல் தைலங்களால் பாதுகாக்கப்படட்டும், மற்ற ஏற்பாடுகளை ஒத்தி வையுங்கள்."

அரசனின் ஆணை பிறந்ததும் அதுபற்றி எந்தப் பதிலும் கூறாமல் அமைச்சர் தலை வணங்கி விட்டு நகர்ந்தார். அப்போது, தளபதி அங்கு வந்து நின்று வணங்கினான். தளபதியிடம் கட்டளை பிறப்பிக்கப்பட்டது.

"நாட்டு மக்கள் அமைதியாக இருக்க வேண்டும். இருங்கோவேள் வரும்போது எந்தவிதமான எதிர்ப்பும் காட்டக்கூடாது. அவனுடைய உயிருக்கோ மரியாதைக்கோ ஏதாவது ஊனம் ஏற்பட்டால் அதற்கு

முழுப்பொறுப்பும் தளபதியாகிய நீயேதான். பூம்புகாருக்குள் நுழைந்து பெருந்தேவியின் முகத்தைப் பார்த்துவிட்டு பின்னர் பூம்புகாரை விட்டு வெளியேறிடும் வரையில் அவன் நமது பகைவன் என்ற கண்ணோடு யாரும் அவனைப் பார்க்கக் கூடாது. முதலில் மக்களை அமைதிப்படுத்து! அதுபோல் போர் வீரர்களுக்கும் கூறு!''

கரிகாலனின் கம்பீரம் நிறைந்த வார்த்தைகளுக்குத் தளபதி பணிந்து நின்று மரியாதை செலுத்திவிட்டு அகன்றார். கரிகாலனுக்கு இப்போது ஒரு பெருமூச்சு! உழவன் வளவன் கேட்ட கேள்வி நினைவுக்கு வந்தது.

''அவள் செத்துவிட்ட செய்தியையாவது இருங்கோவேளுக்குச் சொல்லியனுப்பினீர்களா?''

உழவன் கேட்டதற்குக் காரணம், இருங்கோவேள் வந்தால் அவனைப் பிடித்துக் கொள்ளலாம் என்றுதான்! அது போலத்தான் உழவன், மன்னனிடமும் பதில் கூறினான். வளவன் இருங்கோவேளைப் பிடிக்கக் கூறிய சூழ்ச்சி எண்ணத்திற்கு மன்னன் இணங்காவிட்டாலும், மனைவி இறந்த செய்தியைக் கணவனுக்கு சொல்லியனுப்ப வேண்டியதுதான் முறை என்ற எண்ணத்தை வளவனின் கேள்வியின் மூலம் பெற்றான்.

அந்த எண்ணத்தின் விளைவாகவே சவ அடக்கம் ஒத்தி வைக்கப் பட்டது. இருங்கோவேளுக்குச் செய்தி பரவிட வழி வகுக்கப் பட்டது. தங்கு தடையின்றி அவன் பூம்புகார் அரண்மனைக்குள் நுழைய அனுமதி தரப்பட்டது.

இனி அவன் வரவேண்டியதுதான் பாக்கி.

மன்னன் உத்திரவை நாடெங்கும் முழங்கினார்கள் பறையறை விக்கும் வீரர்கள். நாட்டு மக்கள் அது கேட்டு மெத்தக் கொதிப்படைந் தார்கள். கரிகாலனின் ஆணைக்கு எதிராகப் பேச யாருக்கும் நாவெழாவிட்டாலும் உள்ளத்திலே பெருங்கிளர்ச்சி மூண்டது.

''இதற்குப் பெயர் பெருந்தன்மையா?''

''இதற்குப் பெயர் இரக்கமா?''

''இதற்குப் பெயர் அன்பா?''

''இல்லை!''

''இது ஏமாளித்தனமான வேலை!''

- என்று தங்களுக்குத் தாங்களே சொல்லிக் கொண்டார்கள். பிறரிடம் பேச அஞ்சினார்கள். இருங்கோவேளுக்கு எதிராகச் சோழநாட்டு மக்கள் உயர்த்திய கரத்தைச் சோழவேந்தனே வெட்டி எறிந்து விட்டான் என்று அவர்கள் கருதி மனம் வெதும்பினார்கள். ''இனி என்ன? நடப்பது நடக்கட்டும்'' என்று அவர்கள் ஆயாசப்பட்டுக் கொண்டு தங்கள் வேலைகளைப் பார்க்கத் திரும்பினார்கள்.

''இருங்கோவேள் பெருந்தேவியின் முகதரிசனம் பார்ப்பது போல் வரப்போகிறான்; திடீரென மன்னர்மீது பாயப்போகிறான்; நாம் நமது கொற்றவனை இழக்கப் போகிறோம்'' என்ற வேதனையை வெளியிட்ட வாறு பூம்புகார் நகரத்து மாந்தர் நடைப்பிணங்கள் போலத் திரிந்து கொண்டிருந்தார்கள். சோழ நாட்டின் பல பகுதிகளிலும் ஒலித்தது போலவே இருங்கோவேள் தங்கியிருந்த மரமாளிகைக் காட்டோரத் திலும் பறை ஒலித்தது.

''வேளிர்குல அரசி பெருந்தேவி பூம்புகார் அரண்மனையில் அரசரைக் கொல்ல முயன்று இறந்து விட்டார். அவரது சவ அடக்கம் இருங்கோவேள் மன்னரின் வருகைக்காகத் தள்ளி வைக்கப்பட் டிருக்கிறது; இன்று-நாளை -நாளை மாலை வரையில் அவரை எதிர்பார்க்கிறார்கள். அவர் பூம்புகார் அரண்மனையில் நுழைந்து,

மனைவியின் முகதரிசனம் காண எந்தத் தடையுமில்லை; அவர் தன்னந் தனியாக வந்து போகச் சோணாட்டுப் படைத் தளபதி எல்லாவிதப் பாதுகாப்பு வசதிகளும் செய்து கொடுக்கத் தயாராக இருக்கிறார்.''

- இப்படிப் பறை முழங்கிற்று. பறை முழங்கும் காட்டோரத்துப் புதர்களில் இருங்கோவேளின் வீரர்கள் ஒளிந்து கொண்டு கவனித்தவாறு இருந்தனர்.

பல தடவைகள் பறையின் ஒலியும், செய்தி கூறுவோன் ஒலியும் மாறி மாறி எழுந்து ஓய்ந்தன.

அறிவிப்பு முடிந்து சோணாட்டு வீரர்கள் காட்டைக் கடந்து பூம்புகார்ப் பாதைக்குத் திரும்பினர். புதரில் ஒளிந்திருந்த வேளிர்குல வீரர்கள் எழுந்து நின்றனர். அவர்களின் விழிகள் நீரைப் பொழிந்தன. தங்களின் அரசியார் மறைந்த தகவல் அவர்கள் உள்ளத்தில் சம்மட்டி அடிகளாக விழுந்திருந்தன. ஒருவரோடு ஒருவர் பேச முடியவில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு மரமாளிகை நோக்கி நடந்தனர்.

அண்ணியின் சாவுச் செய்தி கேட்ட தாமரை அழுது புரண்டாள். துன்பம் படர்ந்த அவளது வாழ்வுக்குத் துணையாக இருந்த பெருந்தேவி யின் இழப்பை அவளால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. அன்றாடம் பெரும் பொழுது அண்ணியைக் கவனிப் பதற்காகவே செலவழிந்தது என்றாலும், அதிலே தாமரைக்கு ஓர் ஆறுதல் இருந்தது. இப்போது அழிந்து விட்டது. வாழ்நாளில் கடைசி மூச்சை எந்தக் காரியத்திற்காகப் பயன்படுத்தத் தன் அண்ணியார் துணிந்தார்கள் என்பதை எண்ணும்போது அவளால் விம்மி அழாமல் இருக்க முடிய வில்லை. தன் கணவனின் இலட்சியம் ஈடேறினால் போதுமென்று புறப் பட்ட அந்த வீராங்கனையின் வீரத் திருவுள்ளத்திற்கு அவள் ஆயிரம் முறை வணக்கம் செலுத்தினாள். இந்தச்சோகச் செய்தியை அண்ணன் அறிந்திருக்க இயலுமோ? அண்ணன் எங்கே இருக்கிறாரோ? அவருக் குத் தெரிந்தால் என்ன பாடுபடுவார்! - என்றெல்லாம் அவள் நினைத்துக் குமுறிக் கொண்டிருந்தாள்.

அண்ணனின் தவறான செயல்களால் அவள் மனம் நொந்திருந்தாள் என்றாலும், அண்ணன் தன் அருமைத் துணைவியை இழந்துவிட்டான் என்கிறபோது இயற்கையாக எழுந்த இரத்தபாசம் கொடி கட்டிப் பறந்து அவளைக் கண்ணீர்க் கடலில் மிதக்க வைத்தது. இறந்த அரசனின் உடல் பகைவனின் வீட்டில் இருக்கிறது. அந்தப் பகைவன் நமக்கு அழைப்பு விடுத்திருக்கிறான், சவ அடக்கம் செய்திட!

இந்த நிலைமையை அவளால் தாங்கிக்கொள்ளத்தான் இயல வில்லை. தன்னைக் கொல்வதற்குச் சதி செய்து மனைவியை அனுப்பிய

பகைவனைத் தந்திரமாகச் சிறை பிடிக்க வேண்டுமென்பதற்காகவே சோழ மன்னன் இப்படியொரு அழைப்பு விடுத்திருக்கிறான் என்று அவள் தீர்மானித்தாள். அண்ணனை எப்படியாவது தடுத்தாக வேண்டும்; அதற்கு என்ன வழியென்று ஏனைய மந்திரி பிரதானியருடன் யோசித்தாள். அண்ணன் எங்கே இருக்கிறான் என்பது தெரியாதபோது அவனைச் சந்திப்பது என்பது எப்படி முடியும்? இவனைத் தடுக்கத்தான் வழி என்ன? யாரும் நல்ல முடிவு எதுவும் சொல்லத் தெரியாது திகைத்தனர்.

இழந்த நாட்டைப் பெறவேண்டும் என்ற உயரிய இலட்சியத்தோடு தங்கள் தலைவனின் பின்னால் நடந்து வந்த அவர்களுக்கு எத்தனையோ ஆபத்துக்கள் இதுவரை நேர்ந்திருக்கின்றன. காட்டு மிருகங்களின் கோரப் பற்களுக்குத் தங்கள் குடும்பத்தவரில் பலரைக் காணிக்கையாக்கி இருக்கிறார்கள். திடீரென்று பரவிய தொத்து நோய்கள் கொத்திச் சென்றிருக்கின்றன, சிலரது உயிர்களை. இத்தனை தொல்லைகளையும் சிரித்த முகத்தோடு சந்தித்தவர்கள் அவர்கள், ''என்றேனும் ஒரு நாள் இந்த இடர்ப்பாடுகள் விடை பெற்றுச் செல்லும்; அரியணையிலிருந்து விரட்டப்பட்ட அரசன் மீண்டும் மணிமுடிசூடும் காலம் தூரத்தில் இல்லை''- இந்த நினைவுதான் அவர்களிடம் அண்டி வந்த சோர்வையும் சோகத்தையும் விரட்டிக் கொண்டிருந்தது. ஆனால் இன்று அவர்களைத் தேடி வந்த இந்த வேதனையான செய்தி அவர்கள் நெஞ்சிலே பெரும் புயலையே கிளப்பிவிட்டது. அந்தப் புயலிலே சிக்கிய துரும்புபோல் துவண்டு கொண்டிருக்கும் தாமரைக்கு அவர்களால் ஒரு வழியும் காட்ட முடியவில்லை.

தாமரை யோசித்தாள். அண்ணியின் அவல முடிவு அண்ணனின் செவிகளில் பட்டிருக்காது என்பது என்ன நிச்சயம்? இரவைப் பகலாக்கி வனாந்திரத்திலே உலவிக் கொண்டிருக்கிற அவன் இச்செய்தி கேட்டு அடிபட்ட வேங்கையாகிவிடமாட்டானா? அண்ணியின்மறைவு அவன் இரத்தத்திலே புதிய கொதிப்பையே உண்டாக்கி இருக்குமே! ''நான் ஆண்ட நாட்டைக் கவர்ந்து, என் நல்வாழ்வை அபகரித்துப் பல்பிடுங்கப் பட்ட பாம்பாக என்னைத் திரியவிட்டது போதாதா? இன்று எனது வாழ்க்கைத் துணைவியின் உயிரையும் குடித்துவிட்டதே சோழப் பேரரசு!'' என்று அவன் வெஞ்சினம் கொண்டிருந்தால்....

உடனே சோழன் அரண்மனையை நோக்கி ஓடியிருந்தால்...? ஐயோ!. அதை நினைத்துப் பார்க்கவே முடியாது. தாமரையின் மெல்லிய இதயம் சக்தியற்றுத் தள்ளாடியது! அண்ணனும்கூடச் சோழன் அரண்மனையில் சிக்கியிருக்கலாமோ!

அண்ணி சாவின் மடியில்-அண்ணன் எதிரியின் பிடியில்-இனி மற்றவர்களின் நிலை...? இந்தப் பரிதாப நிகழ்ச்சியை நடக்கவிடக்கூடாது என்ற முடிவை ஏற்றாள் தாமரை. அண்ணன், சோழனுடைய அரண் மனைக்குச் சென்று விடாது தடுத்தாக வேண்டும் என்று உறுதி செய்தாள். அண்ணியையும் இனியொருமுறை காணவே முடியாது. வாழ்ந்த காலத்தை எண்ணிக் கண்ணீர் சிந்தி, வருங்காலத்தைப் பற்றிக் கோடிக் கணக்கான இன்பக் கனவுகளைக் கண்டு கொண்டிருந்த அந்த அருளொ ழுகும் முகத்தை கடைசியாகப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசையும் உந்தித் தள்ள அவள் புறப்பட்டாள்.

அவள் தன்னந்தனியாகக் கிளம்புவதை மற்றவர்கள் மறுத்தனர். துணைக்கு வீரர்களை அழைத்துக் கொண்டு செல்லுமாறும் கேட்டுக் கொண்டனர். கரிகால் மன்னனின் அறிவிப்பில் தன்னந்தனியாக வந்தால் இருங்கோவேள் அனுமதிக்கப்படுவார் என்றிருப்பதைச் சுட்டிக் காட்டி, தானும் அப்படிச் சென்றால்தான் அண்ணியின் திருமுகத்தைக் கடைசித் தடவையாகக் காணும் பேறு கிடைக்கும் என்று கூறிவிட்டுத் தாமரை புறப்பட்டாள்.

மரமாளிகையை விட்டுக் கிளம்புவதற்கு முன்பு, முத்துநகை அடைபட்டிருந்த இடத்திற்குச் சென்று கதவோரத்தில் இருந்தவாறே அவள் என்ன செய்கிறாள் என்று பார்த்தாள். முத்துநகை அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். ‘கவலையில்லாதவள்’ என்று மனதுக்குள் கூறிக் கொண்டே, அதை விட்டு வெளியேறினாள்.

செழியன் சுகமாக இருக்கிறானா? பாதுகாப்பாக இருக்கிறானா? இந்தச் சமயத்தில் அவன் வேறு தப்பி ஓடிவிட்டால் அண்ணன் மனம் மிகவும் ஒடிந்து போய்விடுமே என்றெண்ணியவாறு செழியன் அடைப்பட்டிருக்கும் சிறைக்குள் நுழைந்தாள்.

‘சாவூருக்குப் போகும் வழி’ - முகப்பிலே தெரிந்த இந்த எழுத்துக் களைக் கண்டதும் அவள் சிறிது நின்றுவிட்டாள். அவள் விழிகளில் நீர் துளிர்த்தது. இந்தக் கொடிய வாயில் வழியாக இருங்கோவேளின் இருட்குகையில் சிறைப்பட்டவர் இதுவரை சித்திரவதைதான் செய்யப் பட்டிருக்கிறார்கள்; கொழுந்து விட்டெரியும் தீக்குப் பக்கத்திலே இரத்தம் கசிந்துபோன பாதங்கள் தள்ளாடித் தடுமாற - நின்று மயங்கி வீழ்ந்திருக் கின்றனர். அவர்கள் சோழ நாட்டுக் கைதிகள் அணு அணுவாக வதைக்கப் பட்டிருக்கிறார்கள்; ஆனால் வாழ்வை முடித்துக் கொண்டதில்லை!

உண்மைதான்! ‘சாவூருக்குப் போகும் வழி’ அந்த இருட்குகையின் வாசல் அல்ல; பூம்புகார் அரண்மனை! அங்கேதான் தாமரையின்

அண்ணி நுழைந்துவிட்டாள்; உலக பந்தத்திலிருந்தும் விடுபட்டு விட்டாள்!

சோழ நாட்டுக் கைதிகளின் உயிரை விளையாட்டுப் பொருளாகக் கருதவேண்டாம் என்று தாமரை தன் அண்ணனிடம் மன்றாடி இருக்கிறாள். மிருகத்தனமாக வாழப் பழகி விட்ட இருங்கோவேளின் நெஞ்சத்திலிருந்து மனிதாபிமானம் மறைந்துவிட்டதா என்றும் சந்தேகித்திருக்கிறாள். ஆனால் இனித் தன் அண்ணியின் உயிருக்கு அவள் யாரிடம் மன்றாட முடியும்?

அந்தக் குகையில் பரவியிருந்த இருளையும் மீறிக் கொண்டு அவள் கண்கள் உருண்டன. தட்டுத் தடுமாறி விழுந்து விடப் போகிறோமோ என்ற பயத்துடன் சுவரைப் பிடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள்.

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சுவரிலே செருகப்பட்டிருந்த தீவட்டிகள் கூட நன்றாக எரியவில்லை. தமது அரசியின் மறைவு குறித்து அவைகளும் அழுது கொண்டிருக்கின்றனவோ எனத் தாமரை நினைத் தாள். நடந்தாள்; அந்தத் தீவட்டிகளில் ஒன்றைக் கையிலே எடுத்துக் கொண்டு செழியனைத் தேடிக் கண்டுபிடித்தாள்.

செழியன் அந்த இருட்சிறையில் மிக்க சோர்வுடன் இருந்தான். எனினும் அவன் முகத்தில் வீர ஒளி சுடர்விட்டுக் கொண்டிருந்ததை அவள் கவனிக்காமல் இல்லை. தாமரையின் முகம் வாடியிருப்பதைக் கண்ட செழியன் அவளையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

''ஏதாவது தேவையா?'' என்று கேட்கலாமென நினைத்தாள். ஆனால் கேட்க இயலவில்லை. அண்ணியின் பிரிவால் ஏற்பட்டிருந்த வேதனை அவள் தொண்டையை அடைத்துக் கொண்டிருந்தது.

அவளது முக மாற்றத்தைக் கண்ட செழியன், ''ஏன் என்ன விசேடம்?'' என்று கேட்டான் மெல்லிய குரலில்.

அவள் பதில் சொல்லவில்லை. சற்று நேரம் நின்று அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வையில் எந்தவித அர்த்தமும் இல்லை. - வெற்றுப் பார்வை! 'அய்யோ, பாவம்!' என்ற அனுதாப உணர்ச்சி மட்டும் சிறிது தலை காட்டியது அந்தப் பார்வையில்.

அவளைப் பற்றிய நினைவுகளால் குழம்பிப் போயிருந்த செழியனுக்கு அவள் அங்கேயே நின்று கொண்டிருக்க மாட்டாளா என்று இருந்தது. அப்படியே அவள் நின்று கொண்டிருந்தால் அவளைப் பற்றித் தான் ஒரு முடிவுக்கு வர முடியும் என்று அவன் எண்ணினான். ஆனால் அவன் ஆசை ஈடேறவில்லை. தாமரை திரும்பினாள், அந்த இருட்குகையை விட்டு வெளியேறும் நோக்கத்துடன்!

செழியன் மௌனமாக இருக்கவில்லை. ''எங்கே வந்தாய்! ஏன் போகிறாய் ?'' என்று சற்று அதிகாரக் குரலில் கேட்டான்.

திரும்பிய தாமரை நின்றாள்.

''உங்களைப் பாதுகாப்பாக வைத்திருக்கிறார்களா என்று பார்ப்பதற்குத்தான் வந்தேன்'' - பதிலுரைத்தாள் தாமரை.

அவள் குரலில் நடுக்கம் இருந்ததை அவனால் உணர முடிந்தது. அண்ணன் இல்லாத சமயம், செழியன், முத்துநகை இருவரும் தப்பிவிடக் கூடாதே என்ற கவலையால்தான் அவள் அவர்களைப் பார்வையிட வந்தாள். அந்தப் பொறுப்பு அப்போது அவளுக்குத்தான் இருந்தது. முத்துநகையைப் பார்க்கும்போது ஒரு கைதியைப் பார்ப்பது போன்ற உணர்ச்சியுடன்தான் பார்த்தாளே தவிர, தன் ஏமாற்றத்திற்குக் காரணமானவள் என்ற ஏக்கத்துடன் பார்க்கவில்லை. அதே மாதிரிதான் அவள் செழியனையும் பார்வையிட வந்தாள். திரும்பியும் செல்ல முயன்றாள். அதற்குள் செழியனின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

தாமரையின் முகவாட்டத்திற்கான காரணத்தை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் செழியனுக்கு மூண்டது. அந்தப் பதிலில் ஏதாவது உண்மைகள் கிடைக்கலாம் என்று அவன் எதிர்பார்த்தான்.

''ஒருவேளை இருங்கோவேள் யாரிடமாவது சிக்கியிருப்பான்; கரிகால் மன்னரிடமே கூட அகப்பட்டிருக்கக் கூடும். அதனால்தான் தாமரை வருத்தமாக இருக்கிறாள் போலும்'' என்றெல்லாம் கற்பனை செய்துகொண்டே, ''முகமாற்றத்திற்கு என்ன காரணம்'' என்று கேட்டான்.

''என் சோகத்தில் நீங்கள் ஏன் பங்கு கொள்ள வேண்டும்?'' என்று அழுதுகொண்டே பதில் சொன்னாள் தாமரை.

அந்த இருட்சிறையில் சகதி நிறைந்த இடத்தில் அவளை அதிக நேரம் நிற்க வைக்க அவனுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. அந்தச் சகதிக் காட்டில் தான் தவித்தது கூட அவனுக்கு ஞாபகம் வரவில்லை. அவள் சில வினாடிகள் அங்கு நின்று கஷ்டப்படுவதைப் பார்த்ததும்.

''தயவு செய்து சொல், என்ன காரணம்?''

''நான் அனாதையாகி விட்டேன்!''

''புரியவில்லை... புரியும்படி சொல்!''

''அண்ணியார் இறந்து விட்டார்கள்!'' என்று கூறித் தேம்பி அழ ஆரம்பித்தாள் தாமரை.

அவள் அந்தச் சோகச் செய்தியைச் சொல்லி முடிப்பதற்குள் செழியன், "ஆ! அக்கா! அக்கா!" என்று வாய் விட்டு அலறினான்.

சோகப் புயலில் சிக்கியிருந்த தாமரை வேதனையிலிருந்து சிறிது விடுபட்டு வியப்பிலாழ்ந்தாள். செழியன், "அக்கா! அக்கா!" என்று அலறியதும் அவள் காதுகளையே அவளால் நம்ப முடியவில்லை.

"என்ன?" என்று கூறியவாறு அவனையே பார்த்துக் கொண்டிருந் தாள். செழியனின் விழிகளிலிருந்து நீர் ஆறாகப் பெருகி வருவதை அங்கு எரிந்து கொண்டிருந்த தீப்பந்தங்களின் உதவியால் அவள் காண முடிந்தது. பெரிய புதிரை விடுவித்துத் தீர வேண்டிய கட்டத்தில் தாமரை இப்போது சிக்கிக் கொண்டாள்.

"என்ன சொல்கிறீர்கள்?"

செழியனின் கண்களிலிருந்து பெருகும் நீர் அடைபடவில்லை.

அவன் உதடுகள் மெதுவாக அசைந்தன.

"அக்கா! உங்கள் வாழ்வு முடிந்துவிட்டதா?" என்று மெல்லிய தொனியில் கூறிக் கொண்டான்.

"என்ன சொல்கிறீர்கள்? என் அண்ணி உங்களுக்கு அக்காளா? வேளிர்குல மன்னனின் துணைவி உங்களுக்கு அக்காளா?"

தாமரையின் கேள்வி எழுந்ததும், செழியன் தன்னைச் சமாளித்துக் கொண்டபடி, "ஒன்றுமில்லை.. ஏதோ நினைவு" என்று உளறினான்.

தாமரை அதைக் கேட்டு சமாதானமடையத் தயாராக இல்லை.

"தயவு செய்து கூறுங்கள். பெருந்தேவியார் உங்கள் அக்காளா!" என்று கெஞ்சினாள்.

அதற்குச் செழியன் மௌனமாக இருந்தான். தன் அண்ணிக்கும் செழியனுக்கும் சகோதர உறவு இருக்கும் என்பதற்கான ஆதார ஏடுகள் ஒன்றன் பின் ஒன்றாக அவள் உள்ளத்தில் புரண்டன.

செழியன் முகத்தையும், தன் அண்ணியின் முகத்தையும் மனக் கண்ணால் நினைத்து ஒப்பிட்டுப் பார்த்தாள். இருவரும் உடன் பிறப்பு என்பதற்கான ஒற்றுமை இருப்பதாகவே முடிவு கட்டினாள். அண்ணியார், எத்தனையோ தடவை, "தம்பி ஒருவன், அவன் எங்கேயிருக்கிறானோ? என்ன ஆனானோ?" என்று கண்ணீர் சிந்திக் கவலைப்பட்டது அவள் நினைவுக்கு வந்தது. பெருந்தேவியாரும், செழியனும் உடன் பிறப்புக்கள் தாம் என்று திண்ணமாக அவள் மனத்துக்குள் முடிவு செய்து கொண்டாள்.

''எப்போது இறந்தார்கள் பெருந்தேவியார்?'' என்று கேட்டான் செழியன்.

''அக்காள் என்று சொல்லுங்கள். ஏன் பெயரைச் சொல்லுகிறீர்கள்?'' என்று தாமரை அழுதுகொண்டே பதில் கூறினாள்.

''அக்காள்! அக்காள்! ஆம், வாழ்க்கையின் துளி இன்பமும் காணாமல் - வேதனையுடன்- சளைக்காமல் போராடியவள் என் அக்காள்!'' என்று செழியன் வாய்விட்டுக் கதறினான்.

சோழன் மாளிகையில் இருக்கும் அண்ணியின் உடலைக் காண வேண்டும் - அண்ணனைப் பற்றிய தகவல் அறிய வேண்டும் - இந்த வேதனையினிடையே செழியன் வெளியிட்ட செய்தி வேறு தாமரை உள்ளத்தைக் கலக்கிட ஆரம்பித்தது. செழியனை, இதுவரையில் பாண்டியனர் குலத்தில் பிறந்தவன் என்றுதான் அவள் கருதியிருந்தாள். இப்போதோ அவன் வேளிர்குலத்து அரசியின் தம்பியென்று கூறுகிறான். அப்படியானால் பெருந்தேவியார் பாண்டியர் மரபில் வந்தவராக இருக்குமோ? இந்தச் சந்தேகங்களுக்கெல்லாம் அவள் பதில் கண்டுபிடித்தாக வேண்டும். சேற்றிலும் சகதியிலும் அழுந்தியிருந்த அவளது மணிப்பாதங்களைப் போலவே மனமும் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது.

''தயவு செய்து விவரமாகக் கூறுங்கள்; என் அண்ணியும் தாங்களும் எப்படிச் சகோதர உறவு ?''

செழியன், தாமரையின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தானே தவிர, பதில் எதுவும் சொல்லவில்லை. தாமரையோ விடுவதாக இல்லை.

''இந்த நேரத்திலேகூடக் கல்நெஞ்சம்தானா? என் அண்ணனுடைய கொடுமைகளுக்கெல்லாம் அசைந்து கொடுக்காமல் மலையென நிற்கும் தங்கள் கடின இதயம் - வைர நெஞ்சம் இப்போது இளகிடுவதால் தவறொன்றும் இல்லையே!''

தாமரையின் கண்களில் மீண்டும் நீர் பொழிய ஆரம்பித்தது. செழியனின் உடல் முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்தது. இரண்டொரு தடவை அவன் உதடுகள் அசைந்தன. ஆனால் வார்த்தைகள் எதுவும் வெளிப்படவில்லை. அவளிடம் எதையோ சொல்லிவிட வேண்டுமென்று நினைத்து, உடனே அந்த நினைப்பை மாற்றிக் கொண்டான் போலும்!

''தாமரை! என் கதையில் நீ இதுவரை கேட்டறியாப் புதுமையும் பயங்கரமும் நிறைய உண்டு. தயவுசெய்து என்னைத் தொந்தரவு செய்யாதே. ஒரு காலம்வரும் அந்தக் காலம், நாமிருவரும் பேசக்கூடிய

சூழ்நிலையொன்றை வகுத்துத் தருமானால் அப்போது என் கதையைச் சொல்கிறேன். உன் அண்ணி என் அக்காள் என்பது மட்டும் உண்மை. அதைக்கூட அவசரத்தில் என்னையறியாது உன்னிடம் கொட்டிவிட்டேன். நீ எனக்காகச் செய்யவேண்டிய உதவி, எனக்கும், உன் அண்ணிக்கும் உள்ள உறவை உன் அண்ணனிடம் சொல்லாமல் இருப்பதுதான். இந்த வேண்டுகோளைக் காப்பாற்றுவாயா?''

செழியனின் வேண்டுகோளுக்குத் தாமரையால் உடனடியாகப் பதில் கூற முடியவில்லை. அவள், அவனிடம் கெஞ்சுகிற தோரணையில் நெருங்கி வந்து மெல்லிய குரலில் பேசத் தொடங்கினாள்.

''என் நிலைமையைச் சிறிது எண்ணிப்பாருங்கள். எனக்காக இரக்கம் காட்டுங்கள். என்னடா இது; இருட்சிறையில் கொடுமையான முறையில் அடைத்துப் போட்டு விட்டு நம்மிடம் வந்து இரக்கத்தை யாசிக்கிறாளே யென்று ஆச்சரியப்படாதீர்கள்! தங்களைச் சித்திரவதை செய்யும் அண்ணனுக்குத் தங்கைதான் நான்.ஆனால் இப்போதும் சொல்கிறேன். பகைவர்களைப் பழிவாங்கும் கொடுமை யொன்றைத் தவிர வேறெந்தத் தீய செயல்களையும் என் அண்ணனிடம் தாங்கள் காண முடியாது!''

இந்தக் கடைசி வாக்கியத்தைச் சொல்லிவிட்டுத் தாமரை சற்றுத் தயங்கினாள். காரணம் தன் அண்ணன் இருங்கோவேள், முத்துநகையிடம் நடந்து கொண்ட முறையை அவள் நேரில் கண்டது நினைவுக்கு வந்தது. அதைச் சமாளித்துக் கொள்ளச் சிறிது நேரம் தேவைப்பட்டது. பிறகு பேச்சைத் தொடர்ந்தாள்;

''அப்படிப்பட்ட அண்ணனுக்குத் துணைவியாக வாய்த்த உத்தமி பெருந்தேவி தங்கள் சகோதரிதான் என்று கேள்விப்படும்போது என் உள்ளத்தில் எழும் ஆவல் எத்தகையது என்பதைத் தாங்கள் உணர முடியாதா?''

''தாமரை! என்னை மன்னித்து விடு. என் கதையை இப்போது உன்னிடம் கூறுவதாக இல்லை. இன்னும் ஒரே ஒரு வேண்டுகோள். அதை மட்டும் நிறைவேற்றி வைக்க வேண்டும். என்றும் நன்றியுள்ளவனாக இருப்பேன். என் சகோதரியின் உருவத்தைக் கடைசியாக ஒரு முறை பார்ப்பதற்கு வழி செய்தால் உயிர் உள்ளவரை உன்னை மறக்கவே மாட்டேன். சகோதர பாசம் எத்தகையது என்பதை நீயே அறிந்திருப்பாய். இந்த ஓர் உதவியை மட்டும் எனக்குச் செய்திடு.''

செழியன் தழுதழுத்த குரலில் விடுத்த கோரிக்கைக்குத் தாமரை என்ன பதில் கூற முடியும்? அண்ணியார் இறந்து கிடப்பது சோழன் மாளிகை

யில் அல்லவா? செழியன் நினைத்துக் கொண்டிருக்கிறான் அவள் மரமாளிகையில் தான் இயற்கை எய்திவிட்டாள் என்று! இந்தச் செய்தியைச் செழியனிடம் அவள் எப்படி சொல்வது? சொல்லாமலேயே இருந்து விடலாம்; சொல்லித்தான் தீரவேண்டும் என்ற அவசியம் ஒன்றும் இல்லை. ஆனால் அவசியமில்லாத அளவுக்குச் செழியன், யாரோ எவனோ அல்லவே! இறந்து போன அரசியின் தம்பியாயிற்றே! மூச்சைப் பிடித்துக் கொண்டு விவரத்தைக் கூறிவிடத் தாமரை தயாரானாள். செழியனின் நிலைமை என்ன ஆகுமோ அந்தச் செய்தி கேட்டு, என்று அவள் கலங்கினாள்.

''தங்கள் சகோதரி, அரிய பெரிய இலட்சியமொன்றை நிறைவேற்றும் முயற்சியிலேயே தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்கள். தன் அருமைக் கணவனின் நெடுநாளையக் கனவு நிறைவேற வேண்டும்; அதைத் தானே நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று அவர்கள் சோழனின் மாளிகைக்குள் நுழைந்தார்களாம். கரிகால் பெருவளத்தானைக் கொன்று விட்டுத் தன் கணவனின் ஆசையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென எழுந்த அண்ணியின் குறிக்கோள் படுதோல்வி அடைந்துவிட்டது. சோழ மன்னரைக் கொல்லும் முயற்சியில் அண்ணியார் தோல்வியுற்றதும் மனமுடைந்து இறந்து விட்டார்களாம். அண்ணியின் சவம் பூம்புகாரில்தான் இருக்கிறது.''

இதைக் கேட்ட செழியனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கரிகால் மன்னரைக் கொல்ல வந்த வில்லவனைக் கொன்று, அவன் இருட்சிறையில் அடைபட்டுக் கிடக்கிறான். அவன் அக்காளோ, கரிகாலனைக் கொல்ல முயன்று பிணமாகி விட்டாள். எவ்வளவு விசித்திரமான அக்காளும் தம்பியும்!

தன் அன்புக்கும் மரியாதைக்குமுரிய கரிகாலர் மீண்டும் ஓர் ஆபத்திலிருந்து தப்பிவிட்டார் எனக் கேட்டுச் செழியன் மகிழ்ந்தான். ஆனால், தன் சகோதரி, சாகும் நேரத்தில் இலட்சியம் நிறைவேறாத ஏக்கத்தோடு போய்விட்டாளேயென்று அவளுக்காக அனுதாபம் காட்டினான். தீராத நோயிலே, தீப்பட்ட புழுவெனத் துடித்துக் கொண்டிருந்த அந்த அக்காளுக்குப் பூம்புகார்க் கோட்டைக்குள்ளே புகுந்திடும் ஆற்றல் எங்கிருந்து வந்தது? புலிக்கொடிச் சோழனைக் கொன்று குவித்திடுவோம் என்ற வீராப்பு எப்படி எழுந்தது? கட்டுக்காவல்களை மீறி உள்ளே நுழைய, நோய் எப்படித்தான் இடம் கொடுத்தது? செழியன் அதிசயத்தால் கண்ணை மூடி மெய்மறந்து இருந்தான். அக்காளின் சவம், பூம்புகாரில் இருப்பதாலேயே அவன் தாமரையிடம் விடுத்த கோரிக்கை பலமற்றுப் போய் விட்டது எனக்

கருதவில்லை. மீண்டும் அதே வேண்டுகோளை அவளிடம் வலியுறுத்தி னான். தாமரை, செழியனைக் கனிவுடன் நோக்கினாள்.

''வேண்டுகோள் நியாயமானது தான். ஆனால் அதை நிறைவேற்றி வைப்பது எவ்வளவு தவறானது என்பதைத் தாங்களே உணர முடியும். இங்கே நீங்கள் ஒரு அடிமை. இப்படிச் சொல்வதற்கு மன்னிக்க வேண்டும். எங்களுக்கு நீங்கள் பகைவர்; பகைவரை வெளியில் அனுப்புவது என்பது சரியான காரியமாகுமா? யாராவது அகப்பட்ட எதிரியை வெளியேவிட்டு ஆபத்தை வரவழைத்துக் கொள்வார்களா?''

''உனக்கு வேண்டுமானால் நான் உறுதி அளிக்கிறேன். உன் பாதுகாப்பிலேயே நான் பூம்புகார் வருகிறேன். உன் அண்ணனுக்குக் கூடத் தெரிய வேண்டாம்; சகோதரியின் முகத்தைக் கண்டபிறகு உன்னுடனேயே திரும்பி வந்து இந்தச் சிறையில் புகுந்து கொள்கிறேன். நீ நம்பவில்லையானால்... என் உடைவாளின் மீது ஆணையிட்டு உறுதியளிக்கிறேன்.'.

''அண்ணியின் சவ அடக்கத்திற்கு அண்ணன் செல்கிறாரோ இல்லையோ; அது கூட எனக்குத் தெரியாது. நான் போகிறேன் என்பது நிச்சயமாகி விட்டது. தங்களை அழைத்துச் செல்வதானால், அண்ணிக் கும் தங்களுக்கும் இருக்கிற உறவையாவது வெளியில் சொல்லியாக வேண்டும். தாங்களோ அந்த உறவை யாரிடமும் சொல்லக் கூடாதென்று கூறுகிறீர்கள். இந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்? அண்ணியின் தம்பி என்பதற்காகத் தங்கள் மீது அனுதாபம் காட்டுகிறேன். அண்ணனின் எதிரியென்கிறபோது நான் என்ன உதவி செய்ய முடியும்?''

''தமிழ்நாட்டுப் போர் மறவன் எவனும் ஒரு பெண்ணை ஏமாற்றிவிட்டு ஓடிவிட மாட்டான். நம்பியவர்களை மோசம் செய்வது தமிழ்க்குருதி ஓடுகிறவர்களின் பழக்கம் இல்லையென்பது உனக்குத் தெரியாதா என்ன? நான் சொல்வதைக்கேள். நீ, அண்ணிக்கு இறுதிச் சடங்கை நடத்தி வைக்கப் பூம்புகாருக்குப் புறப்படும்போது உன்னோடு நானும் வருகிறேன்; உன்னுடைய பாதுகாப்புப் படை வீரனாக வருகிறேன். என்னை யாரும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியாத படி உன்னைப் பாதுகாக்கும் வீரனைப் போலவே நடித்து விடுகிறேன். உன்னை மோசம் செய்துவிட்டு நழுவிடப் பார்க்கிறேன் என்று உனக்குக் கடுகளவு சந்தேகம் வந்தாலும் உடனே கட்டாரியை என் மார்பின் மீது வீசிவிடு. களம் பல கண்ட என்னுடைய போர் வாளின் மீது ஆணை! என்னைப் பெற்றெடுத்த தமிழன்னையின் மீது ஆணை! பாண்டியர் பெருவழுதி, சோழர் கரிகாலர் இருபெரும் மன்னர்களின் மீதும் ஆணை! உன்னை நான் ஏமாற்ற மாட்டேன். தப்பியோட முயல மாட்டேன்.

உன்னுடனேயே வந்து உன்னுடனேயே இங்கு திரும்பு கிறேன். என்ன சொல்கிறாய்? சரிதானா?''

தாமரைக்குச் செழியனின் பேச்சை மறுத்துரைக்க முடியவில்லை. அவன் சொல்லும் யோசனைப்படியே நடந்து கொள்வது என்று தீர்மானித்தாள்.

''என்னை ஏமாற்றுவதற்காகவே திட்டம் வகுக்கிறீர்கள் என்றால் பூம்புகார் அரண்மனையில் தாங்கள் தப்பியோட முனையும்போது என்னைக் கொன்று போட்டு விடுங்கள். இல்லாவிட்டால் என் அண்ண னுக்குப் பதில் சொல்ல நான் உயிரோடிருந்து வேதனைப்படு வேன்'' என்று உருக்கமாகக் கேட்டுக் கொண்டாள் தாமரை.

''தாமரை! என்னை நம்பு. உதவி செய்தவர்களுக்குத் துரோகம் செய்வது தமிழினத்து வழக்கமல்ல என்பது தெரிந்தும் என்னைச் சந்தேகப்படலாமா? உன்னைப் பாதுகாக்கும் வீரனாக வரும் நான், என் சகோதரியின் பிணத்தைப் பார்த்ததும் பாச உணர்ச்சி பீரிட்டுக் கிளம்பி விடாமல் என் இதயத்தையும் கட்டுப்படுத்திக் கொள்கிறேன். அரசியின் பிரிவு கண்டு படை வீரனுக்கு ஏற்படும் வேதனையை மட்டுமே என் முகத்தில் காண்பாய்.''-என்று செழியன் கூறியதும் தாமரை 'ஓ' வெனக் கதறி அழுதுவிட்டாள். பிறகு, தாமரை, அவனிடம் விடைபெற்றுக் கொண்டு விரைவில் பயணத்துக்கான ஏற்பாடுகளுடன் வருவதாகச் சொல்லிவிட்டு இருட்சிறையிலிருந்து வெளியேறினாள். செழியன் தாமரை போவதையே பார்த்துக் கொண்டிருந்தான். பின்னர் சிறையின் கதவுகள் மூடப்பட்டன.

தாமரை, அவன் கண்களிலிருந்து மறைந்து விட்டாள். திரும்ப வருவாளா என்ற சந்தேகத்துடனே தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு சிந்தனையில் வீழ்ந்தான். தாமரை வேகமாகத் தன் இருப்பிடம் சென்று பயணத்திற்கான உடைகளை அணிந்து கொண்டாள். தோழியொருத்தியின் துணையால் வேளிர்படை வீரன் ஒருவனின் உடைகளைக் கொண்டுவரச் சொல்லி அவைகளைக் கையில் எடுத்துக் கொண்டாள். தோழியிடம் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளச் சொல்லிவிட்டுச் செழியன் அடைபட்டிருக்கும் இருட்சிறை நோக்கி நடந்தாள்.

''என்ன ஆனாலும் சரி, சமாளிப்போம்'' என்ற துணிவு அவளைத் தள்ளியது. இடையில் ஒளித்து வைத்திருந்த கட்டாரியைத் தடவித் தடவிப் பார்த்துக் கொண்டே சிறையின் அருகே சென்றாள்.

வாயிற்புறத்தில் காவல் நின்ற வீரனைக் கூப்பிட்டு அவன் காதில் ஏதோ ரகசியம் கூறி அவனை அனுப்பினாள்.

பிறகு தாமரை உள்ளே நுழைந்தாள். செழியன் தாமரையை நன்றியுணர்வுடன் நோக்கினான். வேளிர் வீரன் உடைகளைக் கொடுத்து அவனை அணிந்து கொள்ளுமாறு கூறிவிட்டு, வாயிற்புறம் வந்து நின்று கொண்டாள். செழியனும் வெகு விரைவில் வேளிர் படை வீரனைப் போல உருமாறி அவள் எதிரே வந்து நின்றான். இருவரும் சிறையை விட்டு வெளியேறினர். சிறைக் கதவை தாமரை மூடினாள். செழியன் தலை குனிந்தவாறு அருகே நின்றான்.

''தாமரை!'' என்ற முரட்டுக் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். செழியனும் நடுங்கி விட்டான்.

அழைத்தது யார் என்று செழியனுக்கு உடனே விளங்கி விட்டது.

அமைச்சர் செந்தலையார்தான் அது. அவரை அவன் அங்கேயே ஒருமுறை பார்த்திருக்கிறான். மரமாளிகையில் அவனை இழுத்துக் கொண்டு வந்து நிறுத்தியதும் அவன் பார்த்த அதே பயங்கர உருவக் கிழவர் அவனை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தார். அவரது ஆழமான கண்கள், தாமரையின் முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தன.

''தாமரைக்கு முகத்தில் கலக்கம் குறைந்திருந்ததைச் செழியன் உணர்ந் தான். அண்ணனோ எனக் கருதி அவள் திடுக்கிட்டிருக்க வேண்டும் அண்ணனல்ல; அமைச்சர்தான் என்றதும் அவளது பயம் ஓடிவிட்டது. ஆனாலும் அவள் அமைச்சரை அங்கு எதிர்பார்க்க வில்லை. இருட்சிறையின் காவலனை அவள் அமைச்சரிடம்தான் அனுப்பினாள். தான் சோழ நாட்டுக்குப் புறப்பட்டுவிட்டதாகச் செய்தி சொல்லிவிடும் படிதான் அவள், அந்த வீரனைச் செந்தலையாரிடம் ஓடச் சொன்னாள். வீரன் போய் வருவதற்குள் செழியனுக்கு வேடமிட்டு வெளியேறி விடலாம் என்ற தந்திரமான திட்டம் வேறு அவள் மனத்தில் இருந்தது.

ஆனால், நினைத்ததற்கும் நடந்ததற்கும் சற்று வேறுபாடு ஏற்பட்டு விட்டது. தாமரையினால் அனுப்பப்பட்ட காவலன், அமைச்சரி டம் சென்று தாமரை புகார் நகரத்துக்குப் பயணப் பட்டுவிட்டாள் என்று தகவல் கொடுத்தான். ''இப்போது தாமரை எங்கேயிருக்கிறாள்?'' என்று செந்தலையார் கேட்ட காரணத்தால், தாமரை இருட்சிறைக்குள் நுழைந் திருக்கும் செய்தியை அந்த வீரன் அவரிடம் சொல்ல நேரிட்டது. அதனால் செந்தலையார் ஏதோ ஐயமுற்றவராய் அங்கேயே வந்துவிட்டார்.

செந்தலையார் அண்மையில் வந்துவிட்டது கண்ட தாமரை, செழியனுக்குக் கண்ஜாடை தெரிவித்து அப்பால் சென்று தந்திரமாக நடந்து கொள்ளுமாறு மெல்ல இதழசைத்துக் கூறிவிட்டாள்.

செழியனும் வேளிர்படை வீரனைப் போலவே நடிக்கத் தொடங்கி அங்குமிங்கும் நடைபயின்று கொண்டிருந்தான். இருட்சிறையின் கதவை அவனே மூடிப் பூட்டினான்.

தாமரையின் பக்கத்தில் வந்து நின்ற செந்தலையார் ''என்னம்மா! போவதற்கே முடிவு செய்து விட்டாயா?'' என்று கரகரத்த குரலில் கேட்டார்.

''ஆமாம் அமைச்சரே! இதில் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை'' என்று தாமரை பதில் கூறினாள்.

''கரிகாலன் உன்னைச் சிறைப்படுத்தி வைத்துக் கொண்டு, 'செழியனை விடுதலை செய்தால்தான் தாமரையை விடுவிப்பேன்' என்று நிபந்தனை போட்டு விட்டால் என்ன செய்வது?'' என்று வினா எழுப்பினார்.

''கரிகால் சோழர், நாம் நினைக்கிறபடி அவ்வளவு நேர்மையற்ற வரல்லர். நம்மையெல்லாம் வளைத்துச் சிறையில் பூட்ட வேண்டு மென்றால் அவர் படைகளின் உதவியைத் தான் நாடுவாரே தவிரப் போர்முறை இலக்கணத்துக்கு முரணாகப் புறமிருந்து நம்மைத் தாக்க மாட்டார்.''

இப்படித் தாமரை கரிகாலனைப் புகழ்ந்து பேசியதும் செந்தலை யாரின் கிணற்றுக் கண்கள் உப்பிக் கொண்டன. முகம் மேலும் விகாரமாக மாறிற்று. உறுமிக் கொண்டார்.அந்த உறுமலில் எவ்வளவு வெறுப்பு உணர்ச்சியிருந்தது என்பதைத் தாமரை புரிந்து கொண்டாள்.

''சரி... இருட்சிறையில் என்ன செய்தாய்? செழியனைப் பார்த்தாயா? அவன் சுகம் விசாரித்தாயா? எப்படி இருக்கிறான் துரோகி?'' என்று கேலியும் கோபமும் கலந்து சிரித்தவாறு கேட்டார்.

''செழியனின் சுகம் விசாரிக்கும் வேலையில்லை எனக்கு. அவன் ஓடிவிடாமல் பாதுகாத்து, அண்ணன் வரும்வரையில் இருட்சிறை யிலேயே மூடி வைத்திருப்பது தான் என்னுடைய பொறுப்பு!''

இந்தப் பதில் செந்தலையாருக்கு ஆத்திரமூட்டியது.

''செழியனைக் காவல் புரிய இங்கு படை வீரர்கள் இருக்கிறார்கள்; தளபதியிருக்கிறார்; நானும் சாகவில்லை, உயிரோடு தான் இருக்கிறேன்!'' என்று அவர் வேகமாகப் பதில் சொன்னார்.

''நீங்கள் எல்லாம் இருக்கிறீர்கள் நான் மறுக்கவில்லை. அண்ணனைப் போர் வெறியராக மாற்றி, மறவர் குலப் பண்புக்கு மாறாக மாற்றாரிடம் நடந்து கொள்ளக் கூடிய கொடியவராக மாற்றி, எந்நேரமும் அவர் இருதயத்தில் 'பழிக்குப் பழி' என்ற பயங்கரமான வார்த்தைகளை ஒலிக்கச் செய்துகொண்டு, இந்த மரமாளிகையிலேயே வேளிர்குலத் துக்கு முடிவு கட்டக்கூடிய சூழ்நிலையை உருவாக்க, நீங்கள்

இருக்கிறீர்கள்!'' என்று தாமரை ஆத்திர வார்த்தைகளை வாரி யிறைத்தாள்.

தாமரையின் திடீர் மாறுதலுக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் செந்தலையார் அப்படியே நிலைபெற்று நின்றார்.

அமைச்சரிடம் அளவுக்கு அதிகமாகவே பேசிவிட்டோம் என்பதை தாமரையும் நன்கு உணர்ந்து கொண்டாள். ஆனால் அப்படிப் பேசித்தான் தீரவேண்டும் என்ற நெருக்கடியில் அவள் இருந்தாள். அமைச்சரிடம் சாவதானமாகப் பேசிக் கொண்டிருந்தால் அதற்குள் செழியனைப் பற்றி ஏதாவது தகவல் செந்தலையாருக்குக் கிடைத்து விடக்கூடும். செழியன் சிக்கிக் கொள்ள நேரிடும். கோபமாகப் பேசிவிட்டு உடனே வெளியேறி விட்டால்தான் செய்யும் தவற்றை மறைத்து விடலாம் எனத் திட்டமிட்டுத்தான் அவள் செந்தலையாரின் சிந்தனையை வேறு பக்கம் திருப்பும் விதத்தில் அங்ஙனம் கடுமொழிகளைக் கூறினாள். அந்தத் திட்டத்தில் அவள் வெற்றியும் பெற்றாள்.

என்றுமில்லாத விதமாகத் தாமரையின் சுடுசொற்கள் பாய்ந்தது கண்ட அமைச்சர் அசைவற்ற நிலையில் தலையை மட்டும் மேலே தூக்கியவாறு சிந்தனையை ஓடவிட்டார். தாமரையுடன் பேச அவர் விரும்பவில்லை. மன்னன் இருங்கோவேளுக்காகவே தன் உயிரை வைத்துக் கொண்டிருப்பதாக எண்ணிடும் வயோதிகப் பருவத்தினர்தான் அந்தச் செந்தலையார். அவரைப் போய்த் தாமரை இழித்துரைத்ததும் அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

மனக் குமுறலுடன் அவர் நிற்கும் நேரமே நல்ல நேரம் எனக் கருதிய தாமரை சற்றுத் தொலைவில் நின்று கொண்டிருந்த செழியனைப் பார்த்து, ''ம்... குதிரைகளைக் கொண்டு வா!'' என்று கட்டளையிட்டவாறு நடந்தாள்.

செழியனும் குதிரைகள் கட்டப்பட்டிருந்த இடம் நோக்கி ஓடினான். தாமரையும் அவன் பின்னே போய்க் கொண்டிருந்தாள். யாராவது வேளிர் வீரன், செழியனைச் சந்தேகப்பட்டுப் பிடித்து விடக்கூடாதே என்பதற்காக அவள் அவனைத் தொடர்ந்தாள்.

செழியன், இரண்டு குதிரைகளைத் தயார் செய்து நிறுத்தினான். தாமரை ஒரு குதிரையில் ஏறிக் கொண்டாள்.

இரு குதிரைகளும் மரமாளிகையைத் தாண்டிச் செல்லுகிற காட்சியைக் கொந்தளிக்கும் நெஞ்சத்துடன் செந்தலையார் பார்த்துக் கொண்டு நின்றார்! அவர் உள்ளத்தில் பெரும் புயல்!

'இந்த அரச குடும்பத்தின் மேன்மைக்காக எவ்வளவு சிரமங்களை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். சோழனுடன் நடந்த போரில், களத்தில்

தன்னந்தனியாகச் சிக்கிக் கொண்ட இருங்கோவேள் மன்னனை, உயிரைப் பணயமாக வைத்தல்லவா காப்பாற்றினேன்? இந்த தள்ளாத வயதிலும் வேளிர்குலத்து மக்களின் வெற்றியொன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு இரவு பகல் அதே சிந்தனையாக உழன்று கொண்டிருக்கும் என்னைப் பார்த்து மிக அவசரப்பட்டு பேசிவிட்டாளே இந்த இளம் பெண்! சே சே! இவ்வளவு உழைத்தும் என்ன பயன்?' என எண்ணியவாறு இருட்சிறையின் கதவை நோக்கினார். அது பூட்டப் பட்டுக் கிடந்தது. சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தார். இருட்சிறையின் காவலன் அப்போதுதான் வந்து கொண்டிருந்தான்.

''இந்தச் சிறையின் சாவிகளில் ஒன்று உன்னிடமிருக்கிறதல்லவா?'' எனக் கேட்டார்.

''இருக்கிறது'' என அவனும் தலையசைத்தான்.

பிறகு அமைச்சரின் உத்தரவுப்படி சிறை திறக்கப்பட்டது. செழியனைக் காண்பதற்கு மிக ஆவல் கொண்டவராக அமைச்சர் உள்ளே நுழைந்தார். அமைச்சருக்கு அங்கே காத்திருந்தது வெறும் ஏமாற்றந்தான். செழியனைக் காணவில்லையென்றதும் அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'ஓ' வென்று கத்தினார். கிழப்புலியின் உறுமலைப் போலிருந்த அந்தக் கதறல் கண்டு மரமாளிகையே அதிர்ந்தது. ஒரு நொடிப் பொழுதில் மரமாளிகையில் உள்ள வீரர்கள் அனைவரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''செழியன் தப்பி விட்டான்; தாமரையை ஏமாற்றி அவளுடன் போய்க் கொண்டிருக்கிறான். விடாதீர்கள்; பிடித்துக் கொண்டு வாருங்கள்!'' என்று கத்தினார்.

செழியனைக் காணவில்லை என்றதும் அவருக்குத் தாமரையின் மீதுதான் சந்தேகம் ஏற்பட்டது. தாமரையுடன் சென்ற வீரன்தான் செழியனாக இருக்க வேண்டுமென்று அவர் முடிவு கட்டிக் கொண்டார். அவரது கட்டளை பிறந்ததும் குதிரைகள் மரமாளிகையை விட்டுப் பறக்க ஆரம்பித்தன. செந்தலையாருக்குக் குழப்பமும் கிலியும் அதிகமாயின.

இருங்கோவேள் மன்னரின் துணைவியோ எதிரியின் கோட்டைக் குள்ளேயே பிணமாகி விட்டாள். அவள் சவத்தைக் காணச் செல்கின்ற தாமரையும் புகார் அரண்மனையிலே சிக்கி விடமாட்டாள் என்பது என்ன நிச்சயம்? எதிர் காலத்தையாவது ஏற்றம் மிக்கதாகச் செய்ய வேண்டும் என்று நடுக்காட்டிலே வாழ்க்கை நடத்துகின்ற வேளிர்குடிக்கு மீண்டும் கடுமையான சோதனைக் காலம் துவங்கிவிட்டதோ என்று நெஞ்சிலே முளைவிட்ட எண்ணத்தைத் தொடர்ந்து அவரது தளர்ந்துபோன உடல் தள்ளாடத் துவங்கியது.

இருங்கோவேள் மன்னன் வந்தால் என்ன பதில் சொல்லுவது? 'செழியன் எங்கே?' என்று சிங்கநாதம் செய்கின்ற நேரத்தில் அமைச்சராகிய அவர் என்ன விளக்கம் தர முடியும்? இழந்த நாட்டை மீட்கப் 'பணயப் பொருளாக' அல்லவா அவன் செழியனைப் பயன்படுத்தக் கருதினான்? 'சிறகை ஒடித்துப் பறவையைக் கொடுத்தேன்; அதையும் பறக்க விட்டுவிட்டு நிற்கிறீர்களே! இங்கிருந்த பாதுகாப்பெல்லாம் பாழ்பட்டுப் போயிற்றா? அல்லது கொஞ்ச நஞ்சம் இருக்கிற என் மானத்தையும் போக்கி விடுவதுதான் உங்கள் எண்ணமாக ஆயிற்றா?' என்று தோல்வியால் புண்ணாகிக் கிடக்கின்ற இருங்கோவேள் புலம்பத் துவங்கிவிட்டால் என்ன செய்வது?

செந்தலையாரின் இருதயம் அடுப்பு உலைபோல் கொதிக்க ஆரம்பித்துவிட்டது.

தாமரை, செழியன் இருவரும் சென்ற குதிரைகள் மிக விரைவில் பூம்புகாரை அடைய வேண்டுமென்ற நோக்கத்துடன் நாலுகால் பாய்ச்சலில் சென்று கொண்டிருந்தன.

தனக்கு இணையாகத் தாமரையும் குதிரைச் சவாரி செய்திடும் காட்சி கண்டு செழியன் வியப்படைந்தான்.

சிறிது தொலைவு காட்டைக் கடந்ததும் தங்களுக்குப் பின்னால் ஏராளமான குதிரைகள் வரும் குளம்படிச் சத்தம் கேட்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள், இருவரும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் குதிரைகளை ஓட்டத் தொடங்கினர். இருங்கோவேள் மன்னனின் குதிரைப் படைகள் அந்தக் காட்டையே அழிப்பதுபோல் வெள்ளமென வந்து கொண்டிருந்தன. செழியனையும் தாமரையையும் தேடி!

முத்துநகையைச் சந்தித்துக் காதல் கொண்ட அருவியைத் தன் குதிரை கடந்து கொண்டிருப்பதைப் பார்த்துத் தாமரை சிந்தனையை எங்கேயோ செலுத்தினாள். அது ஒரு கணம்தான்: அதற்குள் பின்னே வரும் குதிரைப் படையின் ஒலி, அவளை வேகமாகத் துரத்திடத் தொடங்கியது.

''தாமரை! படைகள் அருகே வந்துவிட்டன. இன்னும் வேகமாக...!'' என்று கூவியவாறு குதிரையில் பறந்து கொண்டிருந்தான் செழியன்.

தாமரையும் தன் குதிரையைக் கடுவேகமாக விரட்டும் முயற்சியில் தீவிரங்காட்டினாள். சிறு சிறு பாறைகளை யெல்லாம் அலட்சியமாகத் தாண்டியும், ஏறியும் கடந்து சென்று கொண்டிருந்த தாமரையின் குதிரை, ஒரு குழியில் காலை விட்டுத் 'தடா'ரென்று கீழே விழுந்தது. விழுந்த ஒலி கேட்டுச் செழியன் ஓடி வந்தான்.

குதிரை எழமுடியாமல், கால் ஒடிந்து போயிற்று, தாமரைக்குப் பலமான அடியேதும் இல்லை; செழியன் தவித்தான், செய்வதறியாமல்! அதற்குள் குதிரைப் படைகள் நெருங்கி வரும் ஒலிவேறு அவனைத் திடுக்கிடச் செய்தது. யோசிப்பதற்கு நேரமில்லை. தாமரையைத் தூக்கித் தன் குதிரையில் உட்கார வைத்துக் கொண்டு குதிரையைத் தட்டிவிட்டான். இருவரையும் சுமந்தவாறு அந்தக் குதிரை முன்னிலும் வேகமாகப் புறப்பட்டது. பின்னால் வரும் குதிரைப் படையின் ஒலி மட்டுமே கேட்டுக் கொண்டிருந்தது. இப்போது அவர்கள் தொடர்ந்து வருவதைக் கண்ணாலும் பார்க்க முடிந்தது.

''தாமரை! என்னைப் பலமாகப் பிடித்துக் கொள்! நான் இன்னும் வேகமாகப் போகப் போகிறேன்!'' என்றான் செழியன்.

தாமரையும் அவ்வாறே செய்தாள். குதிரை, காற்றைக் கிழித்துக் கொண்டு ஓடிற்று, ஆபத்தான கட்டத்தைக் கடந்து விட்டால் போதுமென்று எண்ணியவனாகச் செழியன் உயிரை மறந்து குதிரையை ஓட்டிக் கொண்டிருந்தான்.

அதோ வந்து விட்டார்கள், படை வீரர்கள்-

அய்யோ - பிடித்து விடுவார்கள் -

அகப்பட்டுக் கொண்டார்கள் - என்று நினைக்கும் நேரத்தில் காட்டைத் தாண்டி வெளியேறிவிட்டது செழியனின் குதிரை.

தொடர்ந்து வந்த குதிரைப் பட்டாளம், காட்டைத் தாண்டுவதற்கு அஞ்சி-அதற்கு மேல் செல்வது இருங்கோவேள் மன்னரைக் காட்டிக் கொடுத்ததாக ஆகுமெனக் கருதி நின்றுவிட்டது.

செழியனை மிகப் பலமாகப் பிடித்தவாறு குதிரையில் அமர்ந்திருந்த தாமரையை இனந்தெரியாத வெட்கம் துளைத்தது என்றாலும், அவள் உள்ளத்தில் மண்டிக் கிடந்த வேதனை அதனையும் மீறி நின்றது.

குதிரை பூம்புகார்த் தலைநகரத்துக் கோட்டை வாயிலை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. பின்னால் தங்களை யாரும் துரத்தி வரவில்லையென்று தெரிந்ததும் அவர்கள் பயணத்தின் வேகம் சற்றுக் குறைந்தது. செழியன், தாமரையின் மீது மிக்க அனுதாபங்கொண்டு அவளுக்கு ஆறுதலாகப் பேச முயன்றான்.

''என்னால் உனக்கு வேதனைதான்! சிறையிலிருந்து என்னை மீட்டு வந்த செய்தி காட்டு மாளிகையில் பரவி விட்டது. உன் அண்ணனுக்கும் தெரிந்து விட்டால் அவ்வளவுதான். என்னை மன்னித்துக் கொள்வாயா?''

செழியனின் அன்பு கலந்த மொழிகள் அவளுக்கு மிக ஆத்ரவு தரக்கூடியனவாய் அமைந்தன. அண்ணியின் மறைவு பற்றிய சிந்தனையுடன் போட்டி போட்டுக் கொண்டு செழியனைப் பற்றிய எண்ண ரேகைகள் அவள் இதயத்தில் நெளிந்து காட்டின. முதல் தடவையாக அவள் இவனைச் சந்தித்தபோது தன்னை முத்துநகையின் ஆண் வேடத்துக்கு அடிமையாக்கிக் கொண்டிருந்தாள். அடுத்த சந்திப்பில் செழியன், தன்னை விரும்புகிறவன் என்பது மட்டுமல்ல, தனக்கு அத்தான் முறை கொண்டவன் என்ற தெளிவும் பெற்றுவிட்டாள். அந்தத் தெளிவினைத் தொடர்ந்து மனம் விட்டு எதுவும் பேச முடியாமல் புகார் நகரத்துப் பயணம் குறுக்கிட்டுவிட்டது. பயணத்தினிடையேயும் அந்தப் பேச்சுக்கு இடமேயில்லாது போயிற்று.

ஆனால், இருவர் நெஞ்சத்திலும் ஏதோ ஓர் ஊமை நாடகம் நடைபெற்றுக் கொண்டிருந்தது என்பது மட்டும் உண்மை. அந்த நாடகத்துக் கதாபாத்திரங்கள் ஊமைகள் மட்டுமல்ல! நொண்டிகள், முடங்கள், குருடுகள், செவிடுகள் என்று கூடச் சொல்லலாம்.

பகைவனைச் சிறையிலிருந்து மீட்டு, பகைவனின் வீட்டிலிருக்கும் அண்ணியின் உருவைக் காண்பதற்குப் பகைவனின் தோளைத் தழுவி யவாறு செல்லுகிறோமே- இதைப் பற்றி அண்ணன் என்ன கருதுவார் என்று தாமரையால் நினைக்காமல் இருக்க முடியுமா? அவள் அதை அடிக்கடி நினைக்கிறாள் என்பதற்கு அடையாளமாகத் தான்போலும் அவள் கண்களிலிருந்து நீர் பெருகிக் கொண்டேயிருந்தது.

பூம்புகார் நகரத்துக்குள்ளே குதிரை நுழைந்து விட்டதை இருவரும் உணர்ந்தனர். வீதியில் கூட்டம் கூட்டமாக நின்று பேசிக் கொண்டிருந்த தைச் செழியன் கவனித்தான். அந்தக் கூட்டத்திலே ஆண்களும் பெண்களும் நிறைந்திருந்தனர். முதியவர்களும் கவலை யுடன் நின்று கொண்டு அங்கு பேசப்படும் விஷயங்களில் முழுக் கவனத்தையும் செலுத்தினர். கூடிப் பேசுவோர் முகங்களில் தோன்றிய பரபரப்பையும் ஆத்திர உணர்ச்சியையும் செழியன் புரிந்துகொள்ளாமல் இல்லை.

நகரத்து மக்களை இப்படி ஒரு விசித்திரமான செயலில் ஈடுபடுத்தியது என்னவாக இருக்கும் என்பது தாமரைக்குத் தெரியாதா என்ன? மன்னனைக் கொல்ல முன்வந்தாள் மாதரசி - அவளும் மகுடம் பறிக்கப் பட்ட எதிரியின் மனைவி! சரித்திரம் எப்போதாவது சந்திக்கின்ற அந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து நடைபெற்றவை இன்னும் நம்பத் தகாதவை களாக இருக்கின்றனவே! கொல்ல வந்த கோமகள் பிணமாகி விட்டாள். அவள் சவத்தைக் காண, சதிகள் ஆயிரம் புரிந்து கொண்டிருக் கும் மாற்றானுக்கு அழைப்பு! இவை எல்லாம் கணநேரம் தாமரையின்

கருத்தில் நிழலாட்டம் போட்டு மறைந்தன. சோழ மண்டலத்தின் கொதிப்புக்குக் காரணம் சுலபத்தில் புரிந்து விட்டது அவளுக்கு.

இருவரும் தனித்தனியே சிந்தனை செய்தபடியே சென்று கொண் டிருந்தனர்.

ஒரு மண்டபத்தினருகே நின்ற கூட்டத்தினர் சிலர் பேசிக் கொள்வதை மறைந்திருந்து கேட்கக்கூடிய வசதி செழியனுக்கு அமைந்தது. குதிரையில் இருந்தவாறே இருவரும் அவர்களின் பேச்சுக்குக் காது கொடுத்தனர். கரிகால் மன்னன், இருங்கோவேளுக்குப் பூம்புகாரில் பயமின்றி நுழைவதற்கு அனுமதி அளித்திருப்பதைக் கண்டு அதிருப்தி அடைந்தவர்கள்தான் அவர்கள் என்பதை இருவரும் தெளிவாக அப்போது உணர்ந்து கொண்டனர்.

''இருங்கோவேள் தன்னந்தனியாகப் புகார் நகரத்தில் நுழைந்து கோட்டைக்குள் பிரவேசிக்கும்போது நாமே அவனைச் சிறைப்பிடித்து விட்டால் என்ன?'' என்று துடிப்புள்ள ஓர் இளைஞன் முழங்கினான்.

''சேச்சே ! அதெல்லாம் கூடாது. போர்க்களத்திலே கூட அறங்காக்கும் உத்தமர் என்று பெயரெடுத்த நமது கரிகாலர் ஆட்சிக்கு அப்படி யெல்லாம் களங்கம் உண்டாக்கக் கூடாது.எப்போதும் எதிரிகளை அழிப்பதைவிட அவர்கள் நெஞ்சில் நிறைந்திருக்கும் நாச நினைவுகளை எல்லாம் தலைகுனியும்படி செய்து விட்டால் அதுவே பெரிய வெற்றி. அதைத்தான் தமது மன்னர் பெருமான் பெரிதும் விழைகிறவர்'' என ஒரு முதுபெருங்கிழவர் மெல்லிய குரலில் அறிவுரை புகன்றார்.

சோழப் பேரரசின் பண்பு கண்டு தாமரை தலை தாழ்த்தியவாறு அமர்ந்திருந்தாள். அவள் நிலை கண்ட செழியன், ''என்ன கீழே பார்க்கிறாய்? சோழ மாதாவின் மேனி எவ்வளவு கொதிக்கிறது என்று பார்க்கிறாயா? தேவையானால் கீழேயிறங்கி எங்கள் அன்னையின் நெற்றியைத் தொட்டுப்பாரேன்! அவள் எவ்வளவு துயரத்தில் ஆழ்ந்திருக் கிறாள் என்பது உனக்கு நன்றாக விளங்கும்!'' என்று சற்று பதறியவாறு கூறினான்.

தாமரை அவனுக்குப்பதில் கூறவில்லை. கொஞ்ச நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''கோட்டைக்குள்ளே போகலாமா?'' என்று கேட்டாள்.

செழியனும் குதிரையை அந்த இடத்தைவிட்டுத் திருப்பினான். வழிநெடுகப் புகார் நகரத்து மக்களின் புயல் நெஞ்சத்தைக் கண்டவாறு அவர்கள் கோட்டை வாயிலை அடைந்தனர்.

கோட்டையில் பலமான காவல் இருப்பது கண்டு தாமரை திகைத்தாள். குதிரையைவிட்டு இறங்கிய செழியன், கோட்டை

வாயிற்காப்போனிடம் சென்று வணங்கினான். வாயிற் காப்போன் அவனருகே வந்து தனது வலுத்த மீசையைத் தடவிக் கொண்டே விவரம் விசாரிக்கலானான். செழியன் வாயிலோனிடம் விளக்கமுரைத்திடத் தொடங்கினான்.

''இதோ வந்திருப்பவர்கள் இருங்கோவேள் மன்னரின் தங்கை தாமரைச் செல்வியார் ஆவார்கள். அண்ணனின் துணைவி வேளிர்குல அரசி பெருந்தேவியாரின் மறைவு கேட்டு ஓடி வந்திருக்கிறார்கள். இருங்கோவேள் மன்னர் கோட்டையில் இல்லாத காரணத்தாலும், அவர் எங்கு சென்றுள்ளார் எனத் தெரியாத காரணத்தாலும் அவருக்கு அரசி இறந்த செய்தி அறிவிக்கப்படவில்லை. அதனால் இளவரசி தாமரைச் செல்வியார் மட்டும் அரசரின் நிபந்தனைக்கு உட்பட்டுத் தன்னந்தனியாக வந்துள்ளார்கள். அவருக்குப் பாதுக்காப்பாக நான் வந்திருக்கிறேன். இந்தச் செய்தியை மன்னருக்கு தெரிவித்து எங்களை அரசியாரின் சவம் இருக்குமிடத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுகிறோம்!''

செழியனின் வேண்டுகோளைக் கேட்டதும் வாயிலோன் திகைப்புற்றுத் தாமரையை மாறி மாறிப் பார்த்துத் தனக்குத்தானே வியந்து கொண்டான். இருங்கோவேள் எனும் கொடுமைக்காரனுக்கு இப்படியொரு சாதுவான தங்கை இருக்கிறாளா? - என்று வாயிலோன் சந்தேகப்பட்டான். மன்னரிடம் தகவல் உரைப்பதாக கூறிவிட்டு அவன் கோட்டைக்குள்ளே ஓடினான்.

செழியனும் தாமரையும் கோட்டைக்கு வெளியே உள்ள ஓர் உயர்ந்த மண்டபத்துப் படிகளில் அமர்ந்து கொண்டனர். உள்ளே சென்ற வாயிலோன் எப்போது வருவானோ - வந்து என்ன பதில் கூறுவானோ என எண்ணியபடி இருவரும் கோட்டை வாயிலைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தனர்.

கோட்டைக்குள் சென்ற காவலன், கரிகால் மன்னனைத் தேடியலைந்து கடைசியில் அவன் வளவன் படுத்திருக்கும் மாளிகையில் இருப்பதாக அறிந்து அங்கே சென்றான். உழவர் குடிமகன் வளவனின் அருகேயிருந்த கரிகால் சோழன் உணர்ச்சிவசப்பட்டுப் பேசிக் கொண்டிருந்தான். வளவனுக்கு உடல்நிலை சரியாக வரும்போது திடீரென ஆபத்தான மாறுதல் தோன்றியதாகச் செய்தி வந்து, கரிகாலன் அவன் இருந்த இடத்துக்கு வந்திருந்தான்.

''குணமான பிறகு மயக்கம் வருவதற்குக் காரணமென்ன?''என்று அரசன், மருத்துவர்களைக் கேட்டான்.

''வளவனின் உள்ளத்தில் ஏதோ கவலை சூழ்ந்திருக்கிறது; அதன் எதிரொலிதான் இந்தத் திடீர் மாறுதலே தவிர, உடல் நிலையில் எந்தக் கோளாறும் இல்லை!'' என்று மருத்துவர்கள் கூறினார்கள்.

அரசன், வளவனின் மனப்போராட்டத்தைத் தெரிந்து கொள்ள எவ்வளவோ முயன்றான்; முடியவில்லை. ''அரசருக்கு யாராலும் ஆபத்து ஏற்பட்டுவிடக் கூடாதே- என்ற கவலையாய் இருக்கலாம்'' என மருத்துவர்கள் கருத்துத் தெரிவித்தனர்.

அதனையொட்டி அரசன், வளவனைத் தழுவியவாறு ''உன்னைப் போன்ற உத்தமர்களின் நல்ல இதயமெல்லாம் என் பக்கம் இருக்கும்போது எனக்கு எப்படி இன்னல் வரும்? வராது!'' என்று திடமாகச் சொன்னான்.

அந்தச் சமயத்தில் அங்கு வந்த காவலன், இருங்கோவேளின் தங்கை தாமரை, கோட்டை வாயிலில் காத்திருக்கும் செய்தியைக் கூறினான்.

வளவனின் முகமும் மாறியது. ''என்ன! இருங்கோவேளின் தங்கையா? அய்யோ! இதில் ஏதாவது சூழ்ச்சி இருக்கப் போகிறது- வேண்டாம்! அவளை அனுமதிக்காதீர்கள்'' என்று கத்தினான் வளவன்.

''ஆமாம்; அவளை நான் அனுமதிக்கப் போவதில்லை'' எனக் கூறியவாறு கரிகால் மன்னன் அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டான். வாயிலோனும் பின்னாலேயே வந்து கொண்டிருந்தான்.

மன்னன், தன் மாளிகைக்குள் நுழைந்தான். வாயிலோன் வெளியில் நின்றான். உள்ளே சென்ற மன்னன், திரும்பி வந்து காவலனைப் பார்த்து, ''நான் வளவன் மனத்தைக் கஷ்டப்படுத்தக்கூடாது என்பதற்காக வேளிர் குல இளவரசியை அனுமதிக்க மாட்டேன் என்று கூறினேன். நீ, உடனே இளவரசியை பெருந்தேவியின் சவம் இருக்குமிடத்திற்கு அழைத்துச் செல்!'' என உத்தரவிட்டான். வாயிலோனும் மன்னனுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுக் கோட்டை வாயிற்புறம் ஓடி வந்தான்.

அங்கு அவன் வருகைக்காகக் காத்திருந்த இளவரசியும், செழியனும் அனுமதி கிடைத்த செய்தியறிந்து ஆறுதல் பெற்றனர்.

கோட்டை வாயிலின் பெருங்கதவுகள் திறக்கப்பட்டன.

உள்ளே இருபுறமும் படைவீரர்கள் அணிவகுத்து நின்றனர்.

அந்த அணிவகுப்புக்கு இடையே தாமரையும், அவளுக்குப் பின்னே செழியனும் அழைத்துச் செல்லப்பட்டனர்.

வேளிர்குல இளவரசி புகார் அரண்மனைக்குள் வந்து விட்டாள் என்ற செய்தி தலைநகரமெங்கும் பரவிவிட்டது. அவளுடன் ஒரு பாதுகாப்பு வீரனும் வந்திருக்கிறான் என்ற செய்தியறிந்த மக்கள், அவனால் என்ன ஆபத்து ஏற்படப் போகிறதோ என்று கவலையுடன் பேசிக் கொண்டார்கள். சோழப் பெருங்குடி மக்களின் எண்ணத்தை மதிக்காமல்

பகைவனுக்கும் அவனுடைய குடும்பத்துக்கும் தேவைக்கு மீறிய மரியாதை கொடுத்துவிட்டார் மன்னர் என்ற குற்றச்சாட்டு, பரவலாகப் பயணம் நடத்திக் கொண்டிருந்த வேளையில், தாமரை அரண்மனைக்குள் அழைத்துச் செல்லப்பட்டாள் என்ற தகவல், மேலும் மக்களிடையே அதிருப்தியைத் தூண்டக் காரணமாகி விட்டது. சரியாகவோ தவறாகவோ அதிருப்தியாளர்கள் வளர வளர அவர்கள் மத்தியிலே அவர்களை நடத்திச் செல்லும் தலைவன் ஒருவன் தோன்றிவிடுவான் என்பதுதானே வரலாறு!

அதற்கேற்பப் பூம்புகார் நகரத்தில் கொந்தளித்துக் குமுறிக் கொண்டிருந்த மக்களிடையேயும் ஒரு தலைவன் கிளம்பி விட்டான். அவன், சிதறிக் கிடந்த அதிருப்தியாளர்களையெல்லாம் வெகு விரைவில் ஒன்று சேர்த்துவிட்டான். அவன் பேச்சு, கவலையால் துவண்டு போனவர்களுக்கு ஆறுதல் அளிக்கும் வல்லமை கொண்டதாய் இருந்தது: அவன் உருவம் மற்றவர்களுக்கு நம்பிக்கையூட்டுவதாய் அமைந் திருந்தது. அவனது கடைசி மூச்சுப் பிரியும்போது கூடக் கரிகால் மன்னருக்காகப் பணிபுரிவதையே வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டிருப்பான் என்று பெருமக்கள் அவனுக்குப் பாராட்டுரை வழங்கினர்.

தலைநகரத்து மூலைமுடுக்குகளில் எல்லாம் அவன் தலை தெரிந்தது, குரல் கேட்டது, மக்களின் ஆத்திர உணர்ச்சிக்கு அமைதியான முறையில் வேலிகட்டிக்கொண்டிருந்த முதியவர்கள் எல்லாம் தங்கள் முயற்சி சரிந்ததாக எண்ணி மூலையில் ஒடுங்கினர்.

''கொலைகாரியின் பிணத்துக்கு ராஜமரியாதைகளா? கடைசித் தரிசனம் காண்பதற்குப் பழிகாரனுக்கு அழைப்பா? எதிரியின் தங்கைக்கு அரண்மனையில் வரவேற்பா? இவையென்ன நாடாளும் மன்னரின் கோட்டைக் கொத்தளங்களா? அல்லது காடாளும் முனிவர்களின் ஆசிரமக் குடிசைகளா? அறநெறி தேவையானதுதான்! அது மக்களைக் கோழையாக்குகிற அளவுக்குத்தேவையா? நாட்டைப் பகைவனிடம் காட்டிக் கொடுக்கிற அளவுக்குத் தேவையா? துரோகிகளுக்கு இடம் தருகிற அளவுக்குபோதிக்கப்படும்அறநெறி, தற்கொலைக்காகத்தயாரிக்கப்படும் நஞ்சோடு ஒப்பிட வேண்டிய ஒன்றாகும். கொடியவனின் தங்கை, கோட்டைக்குள்ளே நுழைந்து விட்டாள்! இருங்கோவேளும் திறமைசாலி தான். முதலில் மனைவியை அனுப்பினான். இப்போது தங்கையை அனுப்பியிருக்கிறான். இத்தகைய சூட்சுமத்தைக் கூடப் புரிந்து கொள்ளாமல் அவர்களுக்கு ராஜமரியாதை கொடுக்கப்படுகிறதென்றால் இதை நாம் எதிர்த்தே தீர வேண்டும்!''

- என்று அந்தத் தலைவன் முழங்கினான். ''ஆமாம்; எதிர்த்தே தீர வேண்டும்!'' என்று மக்களும் முழங்கினார்கள்.

''கரிகால் மன்னரைக் காப்பாற்ற - கரிகால் மன்னரின் கொள்கையை எதிர்ப்பது குற்றமாகாது!'' என்று அவன் தன் செயலுக்கு விளக்கமுரைத்து எழுந்து விட்டான்.

காலையில்தான் முளைத்தான். மக்களின் எழுச்சி, மாலை நேரத்திற்குள் அவனைத் தலைவனாக்கிவிட்டது. கரிகால் மன்னரைக் காப்பாற்றியாக வேண்டும். இருங்கோவேள் குடும்பத்தாருக்குத் தரப்படும் மரியாதையால் நாட்டுக்கு ஏற்படும் அவமானத்தைத் துடைத்தாகவேண்டும். இந்த இருபெரும் இலட்சியங்களை முன் வைத்து மக்கள் படையைத் திரட்டிவிட்டான் அந்தத் திறமைமிகுந்த தலைவன். அவன் பெயர் கோச்செங்கணான்.

அந்தப் பெயர் திடீரென ஒரே நாளில் பரவிவிட்டது. அவன் நாவன்மையால், மக்கட் பெருவெள்ளம் பொங்கி எழுந்து விட்டது; அவனது அயராத உழைப்பால்! அலைமோதி நிற்கும் அந்த மக்கட் கூட்டத்தைத் தேக்கி வைத்து வீணாக்கிவிடாமல் உடனடியாகச் செயல்பட வேண்டுமென்று அந்தப் புதிய தலைவன் துடித்தான்; அதற்கான திட்டமொன்றையும் தயாரித்தான்.

அந்தத் திட்டம் மிக ரகசியமாகப் பாதுகாக்கப்பட்டது. தீப்பொறி யெனக் காட்சி தந்தவர்கள் அவன் திட்டத்தை வெளியிட்டதும் தெளிந்த நீரென அமைதியாகக் காரியமாற்றத் தொடங்கினர். திட்டம் பற்றி ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டால்கூட ரகசியங்கள் வெளிப்பட்டு விடுமென்று அஞ்சி வாய்மூடி மௌனிகளாக மக்கள் கலைந்து சென்றனர். ஒரே இடத்தில் நின்று உரத்த குரலில் அவன் திட்டத்தை ஒலிபரப்பவில்லை. ஏழெட்டுத் துணைத்தலைவர்களிடம் காதில் ரகசியமாகக் கூறினான். அவர்கள் மற்றவர்கள் காதில் திட்டத்தைப் போட்டார்கள். சற்று நேரத்தில் ஒருவர் காதில் ஒருவர் பேசத் தொடங்கினர். திட்டத்தை ஆதரிப்பதாக அனைவரும் கரங்களை உயர்த்தினர்.

திட்டத்தைக் கேள்வியுற்றதும் ஊமையாகி விட்டவர்களைப் போல அந்த இடத்தினின்றும் வேகமாக அகன்றனர். அவர்கள் முகத்திலே புதியஒளி தோன்றியது. கவலை ரேகைகள் மறைந்து விட்டன. நடையில் தெம்பு காணப்பட்டது. தன் முயற்சி வெற்றி பெறும் என்ற திருப்தியுடன் கோச்செங்கணான் புன்னகை புரிந்தான்.

கோட்டைக்கு வெளியே திரண்டெழும் மக்கள்சக்தி பற்றிய விவரம் எதுவும் கேள்விப்படாத மன்னன் கரிகாலன், வேளிர்கால இளவரசியை வரவேற்று உபசரிப்பதற்காக அரசி பெருந்தேவியின் சடலம் வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குப் புறப்பட்டான்.

கரிகாலனின் பெரும் உள்ளத்தை மனத்துக்குள் பாராட்டியவாறு தாமரை அரசமரியாதைகளை சோகப் பெருமூச்சுடன் ஏற்றுக் கொண்டு நடந்து சென்றாள். அவளுக்குப் பின்னே செழியன் பணிவுடன் நடந்தான். இருமருங்கிலும் நின்ற வீரர்களுக்கு உள்ளத்திலே அதிருப்தி புகைந்து கொண்டிருந்தாலும் தம் காவலனின் கட்டளையைப் புறக்கணித்தல் ஆகாது என்ற கடமையுணர்ச்சி கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தது. தாமரைக்குச் சிரம் தாழ்த்தி அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளும் வகையில் அந்த அணிவகுப்புகள் அமைந்தன.

அவைகளையெல்லாம் பார்க்கும்போது தாமரைக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. வாய்விட்டுக் கதறி அழுதுவிடக் கூடாதே என்ற பயத்தில் சமாளித்துக் கொண்டு நடந்தாள். இறுதியில் அரசி பெருந்தேவியின் சவம் இருக்குமிடம் வந்து சேர்ந்தாள்.

தாமரையின் சோகம் அணையைப் பிளந்து கொண்டு பீறிட் டெழுந்தது. ''ஐயோ அண்ணி!'' என்று கதறியவாறு அண்ணியின் உருவத்தின் மீது விழுந்து புரண்டு அழுதாள்.

அக்காளின் காலைக் கட்டிக் கொண்டு அழவேண்டும் போலிருந்தது செழியனுக்கு! அவன் என்ன செய்வான் - பரிதாபம்! தான் யார் என்று அங்கு காட்டிக் கொள்ளக்கூடாதே! அவன் கண்களில் வழிந்த நீரைக் கண்ட மற்றவர்கள் ''அரசியின் பிரிவுக்காக ஒரு போர் வீரன் எவ்வளவு துக்கப்படுகிறான்!'' என்று தங்களுக்குள்ளாகவே நினைத்துக் கொண் டார்கள்.

அண்ணியின் மூடிக்கிடக்கின்ற இமைக் கதவுகளை ஊடுருவி நோக்கினாள் தாமரை! அதற்குள்ளே உறைந்து கிடக்கின்ற மௌன விழிகள் ஒரு காலத்தில் என்ன என்னவோ பேசியிருக்கின்றன!

வேளிர்குடிக்கு அவள் மருமகளாக வந்த நேரத்தில் மகிழ்ச்சியை வெளியிட்டன அந்த விழிகள்! சிற்றரசர்தான் என்றாலும் இருங்கோவே ளின் சிங்க நடையையும் அங்கங்கள் ஒவ்வொன்றிலும் வீரம் விளைந்த வெற்றித் தழும்புகளையும் கண்டு பெருமிதம் காட்டின. ஆனால் காட்டின் மத்தியில் அவர்கள் வாழ்க்கை நடத்தும் காலம் வந்த போது அந்த விழிகள்தான் எப்படி வேதனையைக் கொட்டின! ஏக்கத்தைப் பிரதிபலித்த அவைகளைக் கண்டு தன் விழிகளையே மூடிக் கொண்டிருக்கிறாள் தாமரை. முத்துக்களைத் தரையில் கொட்டி தன் அத்தானுடன் ஓடிவிளை யாடுவாளே! ஓடும்போது வழுக்கி விழுவதைக் கண்டு விலாநோகச் சிரிப்பாரே மன்னர் - அதை நினைத்துக் கொண்டாளா? அல்லது தங்கத் தாலான சிங்கங்களாம் - அவற்றின் திறந்த வாயிலே காணப்படும் பற்கள் எல்லாம் வைரங்களாம். அத்தகைய கோலாகலமான சிங்காதனத்திலே

அமர்ந்திருந்தவள் இன்று கரடுமுரடான பலகையிலே படுத்திருக்கும் சோகத்தை எண்ணி வருந்துகிறாளா? அல்லது பஞ்சு மெத்தை வேண்டாம். பட்டாடை வேண்டாம். பணிசெய்யும் ஆட்களும், அணி பூட்டும் பாவையரும் வேண்டாம், பரம்பரையின் பெயர் சொல்ல ஒரு குலக்கொடி - நாடிழந்தாலும் பரவாயில்லை; அந்தத் தாய்மைப்பாசமே என்னவென்று தெரியாது. பிள்ளைபெறும் பேற்றை இழந்து விட்டோமே - என்று வேதனைப்படுகிறாளா? கணவன் காட்டிலே திரிகிறான் களைப்போடு - ஏதேதோ நினைப்போடு திரும்புகிறான். ஓடிச் சென்று உபசரிக்க இயலாத வீட்டுக்காரியாக - நிரந்தர வியாதிக்காரியாக ஆகிவிட்டோமே - என்று மனத்திற்குள் அழுகிறாளா? பெருந்தேவியின் கண்கள் காட்டிய ஆழம் காணமுடியாத 'ஏக்க'த்திற்கு என்ன பொருள் காண்பது என்று புரியாது தவித்திருக்கிறாள் தாமரை, பலமுறை.

அந்தக் கண்கள்தாம் ஒரு நாள் நள்ளிரவில் பழி தீர்க்கப்பாய்கின்ற கொடுவேங்கைப் புலியின் இரத்தக் கண்களாகவும் மாறின. ''என் ராஜாவின் இலட்சியமே என் இலட்சியம்'' என்று படுக்கையிலிருந்து விழுந்து எழுந்த பெருந்தேவி, ''சோழனைப் பழிவாங்கும் புதிய பலம் எனக்கு வந்துவிட்டது! என் நாயகரின் இலட்சியத்தை நிறைவேற்று கிறேன்! கொண்டுவா குதிரையை!'' என்று வெற்றி முழக்கமிட்டபோது அதே கண்களைக் கண்டு நடுங்கியிருக்கிறாள் தாமரை!

ஆனால்-இப்படி ஆயிரம் உணர்ச்சிகளை வெளிக்காட்டிய அந்தக் காந்தக் கண்கள் இன்று மூடிக் கொண்டனவே!

இப்படி எல்லாம் அவள் எண்ணித் தவித்துக் கொண்டிருந்தபோது, மன்னன் அடிமேல் அடி வைத்து, கவலையின் உருவாக அங்கு வந்து சேர்ந்தான். கரிகால் மன்னனைக் கண்ட தாமரை, அவனது காலடிகளில் வீழ்ந்து வணங்கினாள்.

அந்த நிகழ்ச்சி மன்னனின் நெஞ்சை நெகிழ வைத்து விட்டது. இளவரசியின் தோளைத் தொட்டுத் தூக்கி விட்டுக் ''கவலைகளைப் பகிர்ந்து கொள்வோம். என்னுடைய வருத்தமெல்லாம் உன் அண்ணியின் இலட்சியம் நிறைவேறவில்லையே என்பது தான்!'' என்று தழுதழுத்த குரலில் கூறினான். அந்த வார்த்தைகளைக் கேட்டதும் தாமரை விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

''உன் அண்ணனுக்காக காத்திருக்க வேண்டியதில்லையே? காரியங்களைத் தொடங்கலாமா!'' என்று கேட்ட மன்னரிடம் தாமரை 'சரி'யென்று தலையசைத்த காட்சி அங்கு நின்ற அனைவரது உள்ளத்தையும் ஓர் உலுக்கு உலுக்கியது.

மன்னனின் கண் ஜாடைக்குக் காத்திருந்தவர்கள் பெருந்தேவியாரின் இறுதிச் சடங்குகளை நிறைவேற்றுவதற் கான வேலைகளில் தீவிரமாக இறங்கினர்.

அப்போது ஒரு வீரன் பதைபதைப்புடன் அங்கு ஓடி வந்து மன்னனை வணங்கி, அவன் காதில் ஏதோ ஒரு ரகசியத்தைக் கூறிவிட்டு நடுங்கியபடி நின்றான்.

மன்னன் தன்னையுமறியாமல் ''ஆ''! எனக் கத்திவிட்டான்! சூழ இருந்தவர்களைப் பார்த்து, ''காரியங்கள் ஆகட்டும் - இதோ வந்து விடுகிறேன்!'' என்று கூறியவாறு கரிகாலன் அதை விட்டு அகன்றதைத் தாமரையும், செழியனும் மற்றவர்களும் வியப்புடன் கவனித்தனர்.

மன்னன், நேரே தன் ஆலோசனை மண்டபத்துக்குச் சென்றான். அமைச்சர் பெருமக்களும் தளபதிகளும் வரவழைக்கப்பட்டனர். பெருங்குழப்பத்துடனே ஆலோசனை மண்டபத்தில் அமர்ந்திருக்கிற அரசனுக்குத் தங்களால் ஏதேனும் ஆலோசனைகள் வழங்க முடியுமா என்ற நல்ல எண்ணத்துடன் பாண்டிய நாட்டுத் தளபதி நெடுமாறனும் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் அனுமதி பெற்று மண்டபத்திற்குள் வந்தமர்ந்தார்கள்.

பெருந்தேவியின் சடலத்தை அரச மரியாதைகளுடன் அடக்கம் செய்வதையும், இருங்கோவேளின் தங்கையை அனுமதித்ததையும் எதிர்த்து சோழ மண்டலமே பொங்கி எழுந்து விட்டது என்ற செய்தியைத் தொடர்ந்து, தலை நகரத்திலுள்ள மக்களனைவரும் தங்களுக்கு ஏற்பட்ட அவமானத்தைக் கழுவிக் கொள்வதற்காக வெளியேறி விடப் போகிறார்கள் என்ற அதிர்ச்சி தரும் தகவல் கரிகாலனைக் கலக்கிவிட்டது. அந்தத் தீயெனத் தகும் செய்தியைத்தான் மன்னனிடம் ஒரு வீரன் ரகசியமாகச் சொன்னான். மந்திரிகளையும் தளபதிகளையும் விசாரித்த தில் செய்தி உண்மை என்றே உறுதிப்பட்டுவிட்டது. தலைநகரின் பல பகுதிகளைப் பார்வையிட்டு வந்த கடியலூர்ப் புலவரும் தான் கண்ட கேட்ட எதிர்ப்பு உணர்ச்சிகளை மன்னனிடம் வர்ணித்தார். இந்த நிலையை எப்படியாவது சமாளித்தே தீரவேண்டும் என்று பாண்டியத் தளபதி நெடுமாறன் கவலையுடன் கூறினான். தக்க யோசனைகளைக் கூற யாராலும் இயலவில்லை.

''மக்கள் இல்லாத நாட்டுக்கு நான் எதற்காக ஒரு மன்னன்?''

இந்தக் கேள்வி கரிகாலன் உள்ளத்திலிருந்து குமுறிக் கிளம்பிய போது ஆலோசனைக் கூடமே சோகத்தில் மூழ்கியது.

''உருவாகி வரும் மக்களின் உணர்ச்சி பற்றி இதுவரை என்னிடம் யாரும் தெளிவாகக் கூறவில்லையே ஏன்?'' என்று தளபதிகள் மீது சீறிப் பாய்ந்தான்.

''இந்த அளவுக்கு நிலைமை முற்றும் என்று நாங்கள் எதிர்பார்க்க வில்லை!'' என்றனர் தளபதிகள்.

''யார் அந்தக் கோச்செங்கணான்?''

இந்தக் கேள்வியைக் கரிகாலன் கேட்கும்போது முகத்தில் ஆத்திரத்தின் சாயலும் இருந்தது; அன்பின் தேக்கமும் தெரிந்தது. தன் மீதுள்ள அன்பினால் அல்லவா தலை நகரத்து மக்கள் இத்தகைய கொதிப்படைந்திருக்கிறார்கள் என்பதை அவன் புரிந்து கொள்ளாமல் இல்லை.

ஆனால், நாட்டு மக்கள் புரிந்து கொள்ளாத ஒன்றை அவன் யாரிடம் போய்ச் சொல்லுவான்? தமிழனுக்கு வீரம் எப்படிச் சொந்தமோ அதைப் போல் பெருந்தன்மையும் அவன் கூடப் பிறந்ததாயிற்றே! இருங்கோவேள் எதிரிதான். ஆனால் இன்று உயிர்த்துணைவியைப் பறி கொடுத்துவிட்டு நிற்கும் பரிதாபத்திற்குரியவன். பெருந்தேவி எதிரியின் மனைவிதான். ஆனால் அரச குடும்பத்தில் பிறந்து வாழ்க்கையில் பெரும்பகுதியில் கசப்பையே சுவைத்து, இன்று அந்த வாழ்க்கையை முடித்துக் கொண்டு விட்டாள்.

இந்த நிலையில் பெருந்தன்மையுள்ள எந்த மனிதன் தான் கரிகாலன் செய்ததை மகத்தான தவறு என்று சொல்ல முடியும்?

இருங்கோவேளைக் களத்தில் சந்திப்பதற்கும், கட்டிய மனைவியின் சவத்தருகிலே சந்திப்பதற்கும் வேறுபாடு இல்லையா? கரிகாலன் இப்போது மிகவும் இக்கட்டான நிலைமையில் சிக்கிக் கொண்டிருந்தான்.

சோழ மண்டலத்திலுள்ள மக்களின் தலைவனாக - தந்தையாக - அண்ணனாக - தம்பியாகப் போற்றித் துதிக்கப்படுகிற மாமன்னனை உறவாடிக் கெடுப்பதற்கான கடைசி முயற்சியில் இறங்கி இருக்கும் இருங்கோவேளி டத்திலே மரியாதை வைப்பதும், மதிப்புக் காட்டுவதும் சோழ நாட்டை அழிப்பது போலாகும் என்று கருதிவிட்ட பெருங்குடி மக்களின் இதயக் கொந்தளிப்பை எப்படி அடக்க முடியும் என்று தெரியாமல் தவித்துத் துடித்தான் கரிகாலன்.

ஒரு கணம் கண்களை மூடி நினைத்துப் பார்த்தான். பூம்புகார்த் தெருக்களிலே மக்கள் நடமாட்டமில்லை. வீடுகளிலே விளக்கொளி இல்லை. விருந்தினரை வரவேற்கத் திறந்து கிடக்கும் வாயிற்கதவுகள் எல்லாம் தூங்குமூஞ்சியின் இமைகளைப் போலக் கிடக்கின்றன. இல்லத்து எதிரில் ஏந்திழையர் தீட்டிய எழிற்கோலங்கள் இல்லை. பட்டினப்பாக்கமும், மருவூர்ப்பாக்கமும் மௌன நிலையில் இருக்கின்றன. திரைகடலின் நுரையொதுங்கும் காட்சியைச் சுவைத்தவாறு மணற் படுக்கையைவிட என்னுடையவனின் மடிப்படுக்கையே சுகமானது என்று கூறி அவ்வண்ணமே படுத்திருக்கும் காதலர்கள் காணப் படவில்லை.

மயில் தோகை, மிளகு மூட்டைகளை ஏற்றிச் செல்லும் வண்டிகளின் நடமாட்டம் தெருக்களில் இல்லை.

எங்கும் வெட்ட வெளி! எங்கும் இருட்டு! எங்கும் சோகம்! எங்கே திரும்பினாலும் இடுகாட்டு அமைதி!

தலைநகரத்து மக்களின் முடிவு நிறைவேறிவிட்டால் பூம்புகார் இப்படியல்லவா பொலிவிழந்து வாடும் என்று எண்ணி ஏங்கினான்.

அப்போது மற்றொரு செய்தி வந்துவிட்டது. ''தலைநகரத்து மக்கள் தங்கள் குழந்தை குட்டிகளோடு - ஆடு மாடுகளோடு - தட்டு முட்டுச் சாமான்களோடு பயணத்திற்கான ஏற்பாடுகளைத் துவங்கிவிட்டார்கள். எங்கே போவது என்று இலட்சியம் எதுவுமில்லையாம். இங்கிருந்து வெளியேறினால் போதும் என்று முடிவு கட்டிவிட்டார்களாம்!''

இதைக் கேட்டதும் கரிகாலன் என்ன பாடுபட்டிருப்பான்; நாளைக்கு யாரை வைத்துக் கொண்டு நாட்டை ஆள்வது என்ற பிரச்சினை பிறகு இருக்கட்டும். நாட்டைத்தான் ஆள்கிறான், அல்லது நாடோடியாகப் போகிறான். அதுவல்ல இப்போது அவனுக்கு பெருங்கவலை! தமிழகத்து வரலாற்றில் இப்படியொரு நிகழ்ச்சி, தன் காலத்தில் நடைபெற்றதாகப் பொறிக்கப்பட்டுவிட்டால் என்ன செய்வது என்றே அவன் கலங்கினான். தான் செய்த காரியம் தவறுடையதாகவே இருந்தாலும் அதைச் சற்றுப் பொறுத்துக் கொள்ளக்கூடிய எண்ணம் இந்த நாட்டு மக்களுக்கு இல்லாமற் போய்விட்டதே என்ற வேதனை அவனைக் குடைந்தது.

நடப்பது நடக்கட்டும் என்று விட்டுவிட முடியுமா?

பொழிலும் புனலும் சூழ்ந்த பூம்புகார்த் திருநகரைப் புழுதி மேடாக்கி விட்டு, அதன் உச்சியிலே உட்கார்ந்து கொண்டு புலம்பிக் கொண்டிருக்கப் போகிறோமா?

அல்லது நிலைமையை உடனே சமாளித்துச் சோழ மண்டலத்துப் பெருமையைக் காப்பாற்றப் போகிறோமா?

இந்தக் கேள்விக்கு ஆலோசனை மண்டபத்தில் இருந்தவர்கள் யாரும் ஒழுங்கான பதில் கூறவில்லை. ஆளுக்கு ஒரு யோசனை சொன்னார்கள். எதுவும் ஏற்றதாக அமையவில்லை.

அவர்கள் தாம் என்ன செய்வார்கள்? வரலாற்றில் சந்திக்காத ஒரு நிகழ்ச்சியல்லவா இது? எதிரிக்குப் பயந்து வீட்டைக் காலி செய்து புறப்பட்ட மக்களையும், நாட்டை விட்டோடிய மன்னர்களையும் பற்றித்தான் அவர்கள் அறிந்திருக்கிறார்கள். படையெடுத்து வருகிற எதிரியும் முதலில் பறையொலிப்பானாம்; ''வில்லெடுத்து -

வாளெடுத்துப் புறப்பட்டு விட்டோம் நாங்கள். ஆகவே களம் காணக் கூசுகின்ற பெண்களே! நோய்நொடி பிடித்தாட்டும் பெரியோரே! உடனே புறப்படுங்கள், குழந்தைகளையும் மாடு கன்றுகளையும் அழைத்துக் கொண்டு!'' என்பதாக. இவ்விதங்களில்தான் நகரைவிட்டு மாந்தர் கிளம்பியதாக அறிந்தவர்கள், பூம்புகாரிலே புதுமையை அல்லவா காண்கிறார்கள்! மன்னனின் செயல்மேல் வெறுப்புற்றல்லவா மக்கள் வெளியேறுகிறார்கள்! அதனால்தான் ஆற்றொணாத் துயரோடு, அலைமோதும் நெஞ்சோடு, 'எதைச் செய்வது' என்ற குழப்பத்தோடு நிற்கின்ற மன்னனுக்கு என்ன வழி சொல்வது?' என்று புரியாது தவித்தனர்.

உண்மையானவனின் பின்னால் ஐந்து பேர் செல்வார்கள் என்றால், அந்த உண்மையைப் புரியாதவன் பின்னால் ஐம்பது பேர் அரும்பிவிட்ட நிலையை எப்படித்தான் மாற்றுவது?

எல்லாரும் மௌனமாகச் சிந்தனையில் மூழ்கிய வண்ணம் சில வினாடிகள் பேசாமல் இருந்தார்கள்.

''மக்கள், தங்கள் வீடுகளை விட்டு வெளியே வந்து விட்டார்கள். சோகம் கப்பிய முகத்தினராய்ப் பிஞ்சுக் குழந்தைகளையும் பழுத்த கிழடுகளையும் அழைத்துக் கொண்டு அவர்கள் கூட்டம் கூட்டமாகப் புறப்பட்டுவிட்ட காட்சி எங்களை அழவைத்து விட்டது மன்னவா!'' - என்று ஒரு பெருவீரன் சொல்லிக்கொண்டே தேம்பித் தேம்பி அழத் தொடங்கிவிட்டான்.

கனல் பறக்கும் கரிகாலனின் கண்களிலே நீர் முத்துக்கள் தலைகாட்டின. சற்று நேரம் ஒரே அமைதி.

''பெருந்தேவியின் சடலத்தை வேளிர்குல இளவரசியிடம் ஒப்படைத்து அவளைத் தலைநகரை விட்டு உடனே வெளியேற்றுவது தான் நிலைமையைச் சீர்படுத்த நல்ல வழி!'' என்று நெடுமாறன் எடுத்துரைத்தான்.

'மாண்டுபோன அரசியின் பிணம் வெளியேற்றப்பட்டால் வெளியேறிக் கொண்டிருக்கும் மக்கள் நிச்சயம் திரும்பி வருவார்கள். மலர்ந்த முகத்தோடு' என்று அவன் நம்பியதில் தவறில்லை!

அவனது இந்த முடிவை அங்கிருந்த சிலர் வரவேற்கத்தான் செய்தனர். ஏனெனில் எவருமே அந்த யோசனையை மறுத்துப் பேசவில்லை. மௌனமாக மன்னனின் முகத்தை ஏறிட்டு நோக்கினர். 'வேறு வழி இல்லை! ஒத்துக்கொண்டு விடுங்கள்!' என்று வேண்டுகோள் விடுத்தது அவர்களுடைய பார்வை.

ஆனால் மன்னன் அதை ஏற்றுக்கொண்டதாகவே காணப்படவில்லை.

''வேறு எதுவும் நாம் செய்ய ுதற்கில்லை என்றே நான் கருதுகிறேன். தயவு செய்து இந்த முடிவுக்கு மன்னர் வந்துதான் தீரவேண்டும்'' என்று சொன்ன நெடுமாறன் எழுந்து இங்குமங்கும் நடக்க ஆரம்பித்தான்.

'அய்யோ! அது மிகப் பண்பு கெட்ட செயல். தமிழ் இனத்துக்கே இழுக்குத் தரக்கூடிய செயல்'' என்று உரத்த குரலில் கூவினான் மன்னன்.

ஆலோசனை மண்டபத்தில் அலைமோதிக்கொண்டிருக்கும் அரசனைப் பற்றியோ அமைச்சர் பெருமக்களைப் பற்றியோ கிஞ்சித்தும் கவலை கொள்ளாது கோச்செங்கணான் தலைமையில் பூம்புகாரே புறப்பட்டு மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

ஏன் தலைநகரமே நகர்கிறது? வெளியேறும் மக்களின் விளக்கமென்ன ? அந்த விளக்கத்தில் வேடிக்கை மட்டுமல்ல, விவரிக்க முடியாத பாசமும் கலந்திருந்தது.

'கரிகால் மன்னரைக் காப்பாற்றுவதற்காக, கரிகால் மன்னரின் கொள்கையை எதிர்ப்பது குற்றமாகாது. துரோகிகளுக்கு இடம் தரும் அளவுக்குப் போதிக்கப்படும் அறநெறியைத் தற்கொலைக்காகத் தயாரிக்கப்படும் நஞ்சுக்கு ஒப்பிடலாம். நஞ்சு தலைநகரிலே புகுந்திருக்கிறது, வேளிர்குல இளவரசியின் உருவில்! இதை உணராதிருக்கிறார் அரசர். தலைநகரமே வெளியேறுவதன் மூலம் தான் சூழ்நிலைகளால் இருண்டு விட்ட மன்னரின் கண்ணோட்டம் தெளிவு பெறும்!' - இந்த விளக்கத்தின் அடிப்படையில், அதோ தலை நகரமே நகர்கிறது!

தள்ளாடித் தண்டூன்றி நடக்கவும் சக்தியற்ற முதியோர்கள் ஒரு நல்ல காரியத்துக்காகத் தங்கள் பேரிழப்பினைத் தாங்கிக் கொள்கிறோம் என்ற மன உறுதியுடன் நடந்து கொண்டிருந்தனர். வீடு-வீடு என்று வீட்டுக்குக் கடமை செய்து வாழ்ந்து கொண்டிருந்த மகளிர், தங்கள் கண்களில் வழியும் நீரைத் துடைத்துக் கொண்டு தாங்கள் வாழ்ந்த வீடுகளைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே தலை நகரத்து வீதிகளிலே நடைபோட்டனர். ஒன்றும் புரியாத குழந்தைகள், இந்திரவிழா போன்று ஏதோ ஒரு விழா திடீரென வந்துவிட்டதாக நினைத்துக் கும்மாளம் போட்டவாறு பெற்றோர்கள் பின்னே ஓடிக் கொண்டிருந்தார்கள். மக்களின் முன்னே ஆழ்ந்த சிந்தனையுடன் அமைதியான நோக்குடன் கோச்செங்கணான் நடந்து சென்றான், இன்னும் பல நாழிகைக்குள் தலைநகரின் எல்லையைக் கடந்து விடுவார்கள்.

இந்தச் செய்தியும் கரிகாலனுக்கு எட்டி விட்டது. படுகுழியில் வீழ்ந்த யானையெனத் தவித்தது அவன் உள்ளம்.

''பெருந்தேவியின் இறுதிச் சடங்கிற்கான எல்லா ஏற்பாடுகளும் முடிந்து விட்டன. எல்லாரும் அரசரின் வருகைக்காக தான் காத்திருக்கிறார்கள்.'' என்ற செய்தியுடன் ஒருவன் ஓடி வந்தான்.

என்ன செய்ய முடியும் கரிகாலன்?

ஆலோசனை மண்டபத்தில் இருந்த அனைவரும் ஒரு முகமாகக் கூறினார்கள். ''மக்கள் இன்று போனால் நாளை திரும்பி வந்துதான் தீர்வார்கள். அவர்கள் எங்கே போய் இவ்வளவு சுகமாக வாழ முடியும்?'' என்று!

கரிகாலன் பேச முடியாமல் வாயடைத்து நின்றான்.

''யோசிக்காதீர்கள் மன்னா! பூம்புகார்த் திருநகரில் வாழ்ந்தவர்களுக்கு வேறு நாட்டில் வாழ்வதற்கு மனம் வருமா? வளமான நாடுகள் பல இருந்தாலும் அங்கெல்லாம் இங்கு வாழ்ந்தவர்களுக்கு ஒத்து வருமா? இவர்களுக்கு எத்தனைபேர் இடங்கொடுத்துவிடப் போகிறார்கள்? விரைவில் ஓடி வரத்தான் போகிறார்கள்!'' என்றார் ஓர் அமைச்சர்.

''ஆத்திரத்தில் முடிவுகள் செய்யக் கூடிய நேரமல்ல இது!'' என்றான் மன்னன்.

''ஆமாம் - மன்னர் சொல்வதுதான் சரி!'' என்றது ஒரு குரல். கரிகாலன் திரும்பிப் பார்த்தான்.

''மன்னிக்க வேண்டும்'' எனப் பணிந்தவாறு உழவர் பெருந்தகை வளவன் நின்று கொண்டிருந்தான்.

வளவனைக் கண்ட மன்னன் திடுக்கிட்டான். ''நீயா? உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் எதற்காக இங்கு வந்தாய்?'' எனப் பரபரப்புடன் கேட்ட மன்னனிடம் வளவன் பணிவான குரலில், ''தலைநகரில் ஏற்பட்டுள்ள குழப்பம் என் செவிக்கும் எட்டியது; மனக்கலக்கமுற்றிருக்கும் மன்னரைக் காண வேண்டும் போலிருந்தது. அதனால்தான் ஓடிவந்தேன்'' என்று பதிலளித்தான்.

ஓர் உழவன் தன்னுடைய உயிரைக் காப்பாற்றினான். அதற்காக உழவனுக்கு நன்றி தெரிவிக்க வேண்டியதுதான். அவனுடைய அன்புக்கு மரியாதை செலுத்த வேண்டியதுதான். அவனுடைய ஆலோசனைகளைக் கூடக் காதில் போட்டுக் கொள்ள வேண்டியதுதான். ஆனால் அந்த உழவன் தனக்குத் தெரிந்த யோசனைகளை ஒரு மாமன்னனிடம் தனியான இடத்தில் சொல்வதுதான் பொருத்தம். அதை விடுத்து மன்றத்தில் வந்து நின்று யோசனைகளைக் கூற முனைகிறான் என்பதைக்

கரிகாலன் அவ்வளவாக விரும்பவில்லை. ஆனால் தன் உள்ளத்தை அப்போது திறந்து காட்டவும் முடியவில்லை. தன் உயிரைக் காப்பாற்றியவன் ஆயிற்றே அவன்! எந்த யோசனையையும் அவன் வெளியிடுவதற்கு முன்பு அவனை அங்கிருந்து அனுப்பிட வேண்டுமென்று மன்னன் முயன்றான்.

''கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை. எல்லாம் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். நீ போய் ஓய்வெடுத்துக் கொள். என்ன செய்வதென்று யோசிப்பதற்கே மன்றம் கூடியிருக்கிறது!'' என்று மன்னன் கூறியதும், தனக்கு இடம் கிடைத்ததென்று வளவன், ''அப்படியானால் இந்த மன்றம் என் யோசனைகளை எடுத்துக் கொள்ளட்டும்'' என்று ஆரம்பித்து விட்டான்.

அரசனுக்கு எதுவும் பேசமுடியவில்லை. வளவனையே பார்த்தவாறு இருந்தான். மன்றத்திலிருந்தவர்களுக்கும் வளவனின் போக்கு சற்று அதிகப்படியாகவே தெரிந்தது. அந்த நிலைமைகளையெல்லாம் கவனிக்காதவனைப் போல் வளவன் பேசத் தொடங்கினான்.

''ஏழை சொல் அம்பலமேறாது என்பது எனக்குத் தெரியும். ஆனால் கரிகால் பெருவளத்தாரின் நல்ல இதயத்தில் என்னைப் போன்ற குடிமகனுக்குத் தனியிடம் உண்டு என்பதை நானறிவேன்; என் எண்ணத்தில் பழுதிருந்தால் எல்லாரும் மன்னித்துக் கொள்ளுங்கள். தலைநகரில் மக்கள் இல்லை என்ற செய்தி வெகு விரைவில் வரக் காத்திருக்கிறது. பெருந்தேவியின் உடலை அடக்கம் செய்வதற்கான எல்லாக் காரியங்களும் முடிந்துவிட்டன. அரசரோ, மக்களும் வெளியேறக் கூடாது; பெருந்தேவியின் உடலை சவ அடக்கத்திற்கான ராஜ மரியாதைகளும் குறையக் கூடாது' என்று எண்ணிக் குழம்பிக் கொண்டிருக்கிறார். அவருடைய நினைப்பில் ஊனம் வராதவாறு நான் ஒரு யோசனை கூறத் துணிந்திருக்கிறேன்.!''

கம்பீரமாக ஒலிக்கும் வளவனின் பேச்சில் கவரப்பட்டவர்களாக அனைவரும் அமர்ந்திருந்தனர். அவன் நிறுத்தவில்லை; தொடர்ந்து பேசினான்.

''தலைநகரிலிருந்து வெளியேறும் மக்களைத் தடுத்து நிறுத்த மன்னர் ஒருவரால்தான் முடியும். ஆகவே, அவர் உடனே மக்களைத் தொடர்ந்து சென்று தடுத்து அழைத்து வரவேண்டும். அதே சமயம் வேளிர்குல இளவரசிக்கு எந்த விஷயமும் காதில் எட்டாதவாறு செய்துவிட்டுப் பெருந்தேவியின் சவ அடக்கத்தையும் முடித்துவிட வேண்டும். அவசரக் காரியமாக மன்னர் வெளியே சென்றிருக்கிறார் என்று வேளிர்குல இளவரசிக்குக் கூறிவிட்டுக் காரியத்தை நடத்தி விடலாம்''.

இந்த யோசனையை வளவன் சொன்ன பிறகு, அனைவருக்கும் இது சாதாரணமாகப்பட்டது. ஆனால் அது வரையில் யாருக்கும் இப்படியொரு யோசனை தோன்றவில்லை.

''மக்களைத் துரத்திக் கொண்டு மன்னர் செல்வதா?'' - ஒரு கேள்வி எழுந்தது.

''குழந்தையைத் துரத்திக் கொண்டு தாய் செல்வதில் குற்ற மில்லையே!'' என்றான் வளவன்.

''மன்னரை மதிக்காமல் செல்கிறவர்களை மன்னர் மதித்து ஓடுவது கோழைத்தனமல்லவா?''

- என்றனர் சிலர்.

''வீரம் காட்டப்பட வேண்டிய இடம் எதிரிகளைச் சந்திக்கும் களம்! விவேகத்துக்குக் கோழைத்தனமென்று பெயரில்லை!'' - இது வளவனின் பதில்.

''மக்கள் மன்றமே வளைத்துக் கொண்டு எதிர்க்கக் கிளம்பி விட்டால்?''

''படை கொண்டு செல்லட்டுமே மன்னர்!''

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் எண்ணங்களை வளவனின் யோசனை மீது வெளியிட்ட பிறகு, கரிகாலன் ஒரு முடிவுக்கு வந்தவனைப் போல் விழிகளைத் திறந்து தலையை நிமிர்த்தினான்.

யாருடைய யோசனை மன்றத்திலே வெளியிடப்படக் கூடாது என்று கருதினானோ அவனுடைய யோசனையின்படி நடக்கலாம் என்று தீர்மானித்தான்.

'வளவன் கூறுவதும் உண்மைதான். நான் சென்றால் தான் மக்களைத் திரும்பத் தலைநகருக்கு அழைத்து வர முடியும். என் முகத்தைக் கண்டதுமே பூம்புகார் மக்கள் வெட்கித் தலைகுனிந்து வாய் பேசாமல் திரும்பி வந்து விடுவர்' என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். மன்றத்திலுள்ளவர்களைப் பார்த்து, ''நீங்கள் அனைவரும் சென்று பெருந்தேவியின் சவ அடக்கத்தைச் சிறப்பாகச் செய்து முடியுங்கள்! வேளிர்குல இளவரசியை மரியாதையுடன் உபசரியுங்கள், நான் மக்களைத் தடுத்து அழைத்து வருகிறேன்'' என்று கூறிவிட்டுப் புறப்படத் தயாரானான்.

''படையுடன் போவதுதான் நலம்!'' என்று அனைவரும் கூறினர். அதைக் கரிகாலன் கேட்கவில்லை.

''நான் சந்திக்கப் போவது என்னுடைய நாட்டு மக்களை! அவர்கள் என்னை எதிர்த்துத் தாக்குவார்கள் என்றால், அதைத் தடுக்க ஒரு படை ஏன்? அவர்கள் கையாலேயே சாவதுதான் மேல். நாட்டு மக்கள் எதிர்த்த பிறகு, படையை வைத்துக் கொண்டு என்ன செய்வது?'' என வெண்கலக் குரலில் முழங்கிவிட்டு, வளவனை நன்றியுணர்ச்சியுடன் பார்த்து விட்டு, மன்றத்தை விட்டு வெளியேறினான். மெய்க்காப்பாளன் மன்னனுடன் சென்று வாட்டசாட்டமாக நின்று கொண்டிருந்த வெண்புரவியொன்றை எதிரே கொண்டு வந்து நிறுத்தினான். கரிகாலன் அதிலே தாவி ஏறிக்கொண்டு கிளம்பினான். மற்றொரு குதிரையில் மெய்க்காப்பாளன் பின் தொடர்ந்தான்.

பின்னர் மன்றத்தினரும், நெடுமாறனும், கடியலூர் புலவரும், வளவனும் பெருந்தேவியின் சவம் இருக்கும் இடத்திற்குச் சென்றனர். தன்னை அனுமதிப்பார்களோ இல்லையோ என்ற சந்தேகத்துடன், வளவன் பயந்தவாறு அவர்கள் பின்னாலேயே சென்று கொண்டிருந்தான். அரசன் வருகைக்காகக் காத்திருந்தவர்களிடமும், தாமரையிடமும் அரசன் அவசரக் காரியமாகத் தலைநகருக்குச் சென்றிருப்பதாகக் கூறி, மற்ற ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தனர் மந்திரி பிரதானியர்.

வளவன் ஓர் ஓரத்தில் வந்து நின்று பெருந்தேவியின் உடலைப் பார்த்துக் கொண்டிருந்தான், அதுவரையில் ஒளி வீசிக் கொண்டிருந்த அந்த உழவனின் முகத்தில் துயர நிழல் படர்ந்தது. அவன் கண்கள் கலங்கின, யாரும் தன்னைப் பார்த்து விடாமல் சமாளித்துக் கொண்டான்.

பெருந்தேவியின் உடலை எடுத்து மலர்த்தேர் ஒன்றின் மீது வைத்தார்கள். அப்போது தன்னை அறியாமல் தாமரை 'கோ' வெனக் கதறி விட்டாள். வேளிர்குடி வீரனைப் போல் உடை அணிந்திருந்த செழியனின் கண்கள் மழை பொழிந்தன. தேவியைச் சுமந்தவாறு தேர் நகர்ந்தது. தாமரையும் மற்ற அனைவரும் அடிமேல் அடி வைத்து அந்தத் தேரின் பின்னே நடந்து கொண்டிருந்தனர்; வளவனும் அந்தக் கூட்டத்தில்தான் இருந்தான். சவ ஊர்வலம் நகர்ந்து கொண்டிருக்கும் போது, தாமரையின் கண்களில் வளவன் பட்டு விட்டான். செழியனும் வளவனை பார்த்தான். அவனுக்கு எந்தச் சந்தேகமும் வரவில்லை.

ஆனால் தாம்மரைக்குச் சந்தேகம் தோன்றி விட்டது. தாமரை தன்னைப் பார்க்கிறாள் என்பதைப் புரிந்து கொண்ட வளவன், அதற்காக எவ்வித அச்சமும் கொள்ளாமல் நடந்து கொண்டுதானிருந்தான். அண்ணியின் சவ ஊர்வலத்தில் எத்தனை எத்தனையோ வேதனை தோய்ந்த நினைப்புகளுடன் செல்லும் தாமரைக்குப் புதிய பயம் ஒன்று வந்து

சேர்ந்து கொண்டது. நடந்தவாறே வளவனின் பக்கம் நெருங்கிச் சென்று அவனைக் கவனிக்க வேண்டுமென்று முயற்சி செய்தாள். அதைக் கண்டும் வளவன் பயந்ததாகத் தெரியவில்லை. வளவனுடைய பார்வை, இப்போது தாமரைக்கருகே வரும் வேளிர்குல வீரன் மீது கூர்மையாக விழுந்தது.

சவ ஊர்வலம் உட்கோட்டையைத் தாண்டி வெளிக் கோட்டை வாயிலின் பக்கம் வந்துவிட்டது. தாமரையும் மெல்ல வளவனின் பக்கம் வந்துவிட்டாள். அவளுடைய சந்தேகம் உறுதிப்பட்டு விட்டது போலும்!

''அவன் யார்?''

''உழவன் வேடத்திலிருக்கும் அவன் யார்?''

செழியனின் மனத்தில் இந்தக் கேள்வி எழவில்லை. தாமரையின் மனத்தில் பலமாக எழுந்து விட்டது. இன்னும் அருகே இருவரும் நெருங்கி விட்டனர்.

அதற்குள் சவ ஊர்வலமும் குறிப்பிட்ட இடத்துக்கு வந்து சேர்ந்தது. சோழ மன்னனது குடும்பத்தினர் அடக்கம் செய்யப்படும், 'வேந்தர் சதுக்கம்' என்னுமிடத்தில், பெருந்தேவியைச் சுமந்திருந்த மலர்த் தேர் நின்றது. தேவியின் சடலம் கீழே இறக்கப்பட்டது. தாமரை இப்பொழுது வளவனின் முகத்தை இமை கொட்டாது பார்த்தாள். அவன் கண்கள் குளமாகிவிட்டன. தாமரையின் பக்கம் திரும்பினான்.

தாமரைக்கு அவன் யார் என்று விளங்கிவிட்டது. ''அண்ணா!'' என்று கூவிவிட வாய் திறந்தாள். அதற்குள் வாயடைத்துக் கொண்டது.

வளவன், அவளை நோக்கிக் கையசைத்து, ''உஸ்! ஜாக்கிரதை!'' என்று குறிப்பால் உணர்த்தினான். அதை யாரும் கவனிக்கவில்லை. செழியன் மட்டுமே கவனித்து விட்டுக் கவனிக்காதது போல வேறு பக்கம் திரும்பிக் கொண்டான்.

பெருந்தேயின் உடலை அங்கு வெட்டப்பட்டிருந்த ஆழமான குழியொன்றில் வைத்தனர். அந்தக் கொடுமையான காட்சி கண்டு தாமரை குமுறினாள். அங்கே தன் அண்ணன் இருக்கிறான் என்ற உணர்ச்சி மேலும் அவளைக் கதற வைத்தது.

வளவனாக நிற்கும் அவளது அண்ணன், தன் ஆருயிர்த் துணைவி மண்ணுக்குள் மறையப்போகிறாள் என்பதை நினைத்து ஒடிந்து போய் நின்றான்.

வேளிர் குல அரசியைச் சிறிது நேரத்திற்கெல்லாம் சோழ மாதா தன் மண் கரத்தால் போர்த்துக் கொண்டாள்.

பெருந்தேவியைப் புதைத்த இடத்தில் எழுப்பிய மண்மேட்டின் மீது அரசவைப் பிரதிநிதிகள், மந்திரிகள், தளபதிகள் அனைவரும் மலர் தூவித் தங்கள் இரங்கலைத் தெரிவித்து இறுதி வணக்கம் கூறினர்.

வேளிர்குல இளவரசி தாமரை தன் கண்ணீரில் நனைந்த மலர்க் கொத்தை அண்ணியின் கல்லறை மீது வைத்துவிட்டு, அருகே நிற்கும் அண்ணனைத் திரும்பிப் பார்த்தாள். திடுக்கிட்டாள்! அவனைக் காணவில்லை. அவனைத் தேடும் முயற்சியில் பரபரப்புக் காட்டக் கூடாது என்பதையும் அவள் உணர்ந்து, ஓர விழிகளைச் சுழலவிட்டு அண்ணனைக் கண்டுபிடிக்க முடியாமல் தத்தளித்தாள்.

செழியன் அவள் பின்னாலேயே நின்று கொண்டிருந்தான். இப்போது அவனுக்கு அக்காளைப் பிரிந்த சோகமெல்லாம் சிறிது சிறிதாகக் கரைந்து விட்டது. அவன் உள்ளத்தை உலுக்கும் பிரச்சினை யொன்றுக்கு அவன் பதில் தேடித் தீரவேண்டிய அவசியத்திற்கு ஆளானான். 'உழவன் உடையில் இருக்கும் வளவனும், தாமரையும் முகக் குறிப்பால் பேசிக் கொள்ளக் காரணம் என்ன? அந்த உழவன் யார்?'' என்ற கேள்விகள் அவனைத் திண்டாட வைத்தன. சோழ மண்ணுக்குப் பெரியதோர் அபாயம் வரக் காத்திருக்கிறதா? அல்லது தாமரையின் வாழ்க்கை ஏட்டில் இந்த உழவனுக்கு ஏதாவது ரகசிய இடம் கிடைத்திருக் கிறதா? இதற்கு எப்படிப் பதில் காணுவது? செழியன், தாமரைக்கு வாக்களித்துவிட்டு அவள் பின்னே வந்திருக்கிறான்! - அந்த வாக்குத் தவறுவதும் அழகல்ல என்பதை உணர்ந்திருக்கிறான். ஆனால் வந்த இடத்திலோ திடுக்கிடக்கூடிய சம்பவத்தைத் தன் இரு விழிகளால் கண்டுவிட்டது. அதைப் பற்றிக் கவலைப்படாமல் தாமரையுடன் திரும்பி விடுவது என்பது சோழநாட்டைக் காட்டிக் கொடுப்பது போலாகும் என்று மனசாட்சி வேறு அவனைக் குடைந்தெடுத்தது.

இறுதிச் சடங்கினை முடித்துக் கொண்டு அனைவரும் திரும்பத் தொடங்கினர். தாமரையும் அவர்களுடன் திரும்பிச் செல்ல வேண்டிய கட்டாயத்தில் இருந்தாள். திரும்புவ தற்குள்அண்ணனைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டுமென்று மீண்டும் எல்லாத் திசைகளிலும் கண்களைத் திருப்பினாள்.

இதுதான் நல்ல சமயமென்று செழியன், அவள் பார்வையிலிருந்து விலகிக் கொண்டான்.

அவன் மறைய முயலும்போது முன்பு தாமரைக்கு அவனளித்த வாக்குறுதி மனத்திரையில் நிழற்படமாக எழுந்தது.

''தமிழ்நாட்டுப் போர்மறவன் எவனும் ஒரு பெண்ணை ஏமாற்றி விட்டு ஓடிவிடமாட்டான்! நம்பியவர்களை மோசம் செய்வது தமிழ்க் குருதி உள்ளவர்களின் பழக்கம் இல்லையென்பது உனக்குத் தெரியாதா என்ன? நான் சொல்வதைக் கேள்! அண்ணியின் இறுதிச் சடங்கை நடத்தி

வைக்க நீ பூம்புகாருக்குப் புறப்படும்போது உன்னோடு நானும் வருவேன். உன்னுடைய பாதுகாப்புப் படை வீரனாக வருகிறேன்; என்னை யாரும் அடையாளம் தெரிந்து கொள்ளாதபடி உன்னைப் பாதுகாக்கும் வீரனைப் போலவே நடித்து விடுகிறேன். உன்னை மோசம் செய்துவிட்டு நழுவிடப் பார்க்கிறேன் என்று உனக்குக் கடுகளவு சந்தேகம் வந்தாலும் உடனே கட்டாரியை என் மார்பின் மீது வீசிவிடு!'' செழியன் அப்போது இப்படி கூறியது உண்மை!

''என்னை ஏமாற்றுவதற்கு திட்டம் வகுக்கிறீர்களென்றால் பூம்புகார் அரண்மனையில் தாங்கள் தப்பியோட முனையும்போது என்னைக் கொன்று போட்டுவிடுங்கள். இல்லாவிட்டால் என் அண்ணனுக்குப் பதில் சொல்ல நான் உயிரோடிருந்து வேதனைப்படுவேன்'' என்று தன் நிலையை விளக்கிய தாமரையை இப்படி மோசம் செய்யலாமா என எண்ணினான் செழியன்.

''தாமரை, என்னை நம்பு. உதவி செய்தவர்களுக்கு துரோகம் செய்வது தமிழினத்து வழக்கமல்ல என்பது தெரிந்தும் என்னைச் சந்தேகப்படலாமா? உன்னைப் பாதுகாக்கும் வீரனாக வரும் நான், என் சகோதரியின் பிணத்தைப் பார்த்ததும் பாச உணர்ச்சி பீறிட்டுக் கிளம்பிவிடாமல் என் இதயத்தைக் கட்டுப்படுத்திக் கொள்கிறேன். அரசியின் பிரிவு கண்டு படைவீரனுக்கு ஏற்படும் வேதனையை மட்டுமே என் முகத்தில் காண்பாய்.''

இப்படி உறுதி கூறியது உண்மைதான். ஆனால் நாட்டுக்கும் அரசனுக்கும் ஆபத்து என்பதையும் செழியனின் தன்மான இதயம் நோக்கிற்று. மனப்போராட்டங்களுடன் செழியன் புகுந்து மறைந்து விட்டான். அதைக் கவனிக்காமலேயே இளவரசி விழிகளை அங்குமிங்கும் சுழலவிட்டவாறு மந்திரி பிரதானிகளுடன் போய்க் கொண்டிருந்தாள். கூட்டத்திற்குள் தந்திரமாக நுழைந்து ஒரு மண்டபத்தின் பக்கம் ஒதுங்கி நின்று கொண்டான் செழியன். அப்போது அவன் மனம் பட்ட பாட்டை விவரிக்க வொண்ணாது. தாமரை தன்னைக் 'கயவன்' என்று முடிவு கட்டி விடுவாளோ என்ற அச்சம் அவனைப் பிடித்தாட்டியது. எப்படியும் அவளுடன் போய்ச் சேர்ந்து கொள்ளலாம் என்ற முடிவுடன் அவன் மண்டபத்துக்குள் பதுங்கிக் கொண்டான். பெருந்தேவியைப் புதைத்த இடத்தில் இப்போது யாருமே இல்லை. ஒரே அமைதி! படைவீரர்களும் பரிவாரங்களும் புடைசூழ இருந்த தன்னுடைய அருமை அக்காள், தன்னந்தனியாளாக மண்ணுக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் அந்தக் காட்சியை இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்; அவன் பார்வையை வேறு பக்கம் திருப்பக் கூடிய மற்றொரு காட்சி!

அந்த நிம்மதியான இடத்தை நோக்கி வெகு தொலைவிலேயிருந்து ஒருமனிதன் நடந்துவந்து கொண்டிருந்தான். செழியன் கண்களை அகலத் திறந்து பார்த்தான். யார் அவன்? வளவனேதான்.

அவன் மெல்ல மெல்ல நடந்து வந்து பெருந்தேவியின் கல்லறை அருகே நின்றான். சுற்றுமுற்றும் பார்த்தான். இப்போது அவனைச் செழியனால் நன்றாகக் கவனிக்க முடிந்தது. அவன், கல்லறைக்கருகே உட்கார்ந்து தலை குனிந்தான். அவன் கண்களிலேயிருந்து நீர்முத்துக்கள் கொட்டிக் கல்லறையை குளிப்பாட்டிக் கொண்டிருந்தன. அவன் வாய் அசைந்தது.

''தேவி! எனக்காகவே வாழ்ந்து எனக்காகவே உயிர் கொடுத்து விட்டாயா?''

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவன் யார் என்று செழியனுக்குப் புரிந்துவிட்டது. சோழநாட்டுக்கு ஆபத்து நிச்சயமாக வந்துவிட்டது என்று அவன் நடுங்கினான். தன்னை அமைதிப்படுத்திக் கொண்டு கல்லறையின் பக்கம் காதைத் திருப்பினான்.

''என் இதய ராணி! நாலு பேர் அறிய உனக்காகக் கண்ணீர் வடிக்கக்கூடிய பாக்கியத்தைக்கூட எனக்களிக்காமல் பறித்துக் கொண்டாயே; இது நியாயமா? காட்டு மாளிகையில் இறந்தால் இதுபோன்ற ராஜமரியாதைகளை நடத்துவதற்கு எனக்குத் தகுதியில்லை என்று நினைத்துத் தானே இங்கு வந்து சாவைத் தழுவிக் கொண்டாய்?

''உன் செயலால் எனக்கும் கரிகாலனுக்கும் ஏதோ ஒரு தொடர்பை ஏற்படுத்திவிட்டாய். அவன் என்னை நேசிக்கிறான்; அன்புகாட்டுகிறான்; மரியாதை செலுத்து கிறான்; ஏழை உழவன் வளவன் என்று நம்பி எனக்கு அவன் இதயத்திலே இடமளித்திருக்கிறான். இவ்வளவும் உன்னால் வந்த வினைதான். எதைப்பற்றியும் கவலைப்படால் நீ மண்ணுக்குள் நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்துவிட்டாய்.

''கவலைப்படாதே! யாரோ ஒருவனின் மாளிகையில் உன் கல்லறை கட்டப்பட்டது என்ற அவச்சொல்லை அழிக்கிறேன். இதுவும் இருங்கோவேளின் மாளிகைதான் என்பதைத் தமிழகத்திற்கு விரைவில் தெரிவிக்கிறேன். நீ புதைந்திருக்கும் இந்த மண்ணின் மீது ஆணை!

''இருங்கோவேள், அன்புக்கு விரோதியல்ல! ஆனால் பகைவனின் அன்புக்கு அவன் பணியமாட்டான். இருங்கோவேள் இதயமில்லாத வனல்ல; ஆனால் எதிரியின் இதயத்துக்கு அடிமையாகிவிடமாட்டான். என் இலட்சியம் நிறைவேற, என்னை மகிழ்விக்க நீ மன்னனைக் கொல்ல வந்தாய். உன் பெயர் உள்ளவரையில் அந்தக் களங்கம் உன்னைச்

சுற்றுமே என்று பயந்து, மனைவியை அனுப்பி எதிரியைக் கொன்ற இருங்கோவேள் என்ற பழி என்னைத் தொடருமே என அஞ்சி, கரிகாலனைக் காப்பாற்றினேனே தவிர, உன் முயற்சி பட்டுப்போக வேண்டும் என்பதற்காக அல்ல!

''இன்பமே! அதற்காக என்னை மன்னித்துவிடு. விரைவில் புகார் நகரத்துக் கோட்டை முகப்பில் பறக்கப் போகிற வேளிர்குலத்துக் கொடியை, நீ இங்கிருந்தபடியே கண்டு மகிழலாம்.''

இப்படிச் சோகப் பெருமூச்சுக்கிடையே வஞ்சினம் கூறிய இருங்கோவேள், தன் துணைவியின் கல்லறை மீது கிடக்கும் மலர்களை எடுத்து முத்தமிட்டுவிட்டு மெல்ல நடந்தான். தன்னை யாரும் பார்க்கவில்லையென்ற நம்பிக்கையோடு நிம்மதியடைந்து திரும்பிய அவன் செழியன் ஒளிந்திருந்த மண்டபத்தைக் கண்டு விட்டான். அதற்குள்ளிருந்து யாராவது தன்னைக் கவனித்திருந்தால் என்ன செய்வது என்ற சந்தேகம் அவனுக்குப் பலமாகத் தோன்றிவிட்டது.

அதனால் அந்த மண்டபத்துப் பக்கம் சந்தடியில்லாமல் நடந்து வந்தான். தானிருக்குமிடத்திற்கு இருங்கோவேள் வருவது கண்ட செழியன் எப்படித் தப்புவது என்று தெரியாமல் விழித்தான். அங்குமிங்கும் ஓடி, ஓர் ஆழமான கருங்கல் தொட்டிக்குள் இறங்கிப் பதுங்கிக் கொண்டான். தனக்கிருந்த பயங்கரமான எதிர்காலத்தை யெண்ணி நெஞ்சம் நடுங்கினான். கல்லறையில் வேளிர்குல மன்னன் உதிர்த்த வெறிபிடித்த வாசகங்களை நினைத்து நினைத்து கனல் மூச்சு விட்டுக்கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்குப்பிறகு மண்டபத்துக்குள் காலடி ஓசை கேட்டது. பிறகு சிறிது சிறிதாகத் தேய்ந்து மறைந்தது.

''அப்பாடா போய்விட்டான்!'' என்று செழியன் தலையை வெளியே நீட்டினான். அவனுடைய கழுத்தை ஒரு கரம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது.

தப்ப வழியின்றிச் சிக்கிக்கொண்டோம் என்றுணர்ந்த செழியன், நிமிர்ந்து பார்த்தான். வளவன் வேடத்தில் இருங்கோவேள்தான் நின்று கொண்டிருந்தான். அந்தி நேரத்து வானத்தகடுபோல் சிவந்திருந்த இருங்கோவேளின் முகத்தைச் செழியன் இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். தன்னை அவன் அடையாளம் கண்டுபிடித்து விடக்கூடாது என்பதற்காக மிகவும் சிரமப்பட்டு வேளிர்குல வீரனைப் போல் பாவனை செய்து கொண்டான்.

அதற்கேற்றாற்போல் இருங்கோவேளும் செழியனை இன்னாரென்று தெரிந்து கொள்ளாமல் தன் படைவீரன் என்றே நினைத்து, ''ஏய்! எதற்காக

இங்கு ஒளிந்திருக்கிறாய்? நீ மட்டும்தான் தாமரைக்குத் துணையாக வந்தாயா?'' என்று கேட்டான்.

யாரோ ஒருவன் தன்னை உணர்ந்து கொண்டுவிட்டான் போலும் எனப் பயந்திருந்த இருங்கோவேளுக்கும் சந்தேகம் நீங்கியது. தன்னை யாரென்று கண்டுபிடிக்கவில்லை என்ற திருப்தியும் செழியனுக்கு ஏற்பட்டது.

''இளவரசிதான் என்னை இங்கே விட்டுச் சென்றார்கள். தாங்கள் ஏதாவது செய்திகள் சொன்னால் கேட்டுவரச் சொன்னார்கள். அதற்காகத்தான் யார் கண்ணிலும் படாமல் இங்கே ஒளிந்திருந்தேன்'' என்று திறம்பட நடித்துவிட்டான் செழியன்.

இருங்கோவேள் சற்று நேரம் எதுவும் பேசாமல் மௌனமாக நின்று கொண்டிருந்தான். கண்கள் மெதுவாக மூடிக் கொண்டன. நெற்றியிலே சுருக்கங்கள் விழுந்தன.

ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட செழியன், என்ன புதிய ஆபத்து ஏற்படுமோ என்ற திகிலுடன் இருங்கோவேளின் இதழ் அசைவை எதிர்பார்த்திருந்தான்.

இருங்கோவேளின் மூளையில் மழைக்காலத்து வானில் கருமேகங் கள் வேகமாகத் திரள்வதுபோல் திட்டங்கள் உருவாயின. விழிகளை அகலத் திறந்தான்.

செழியனின் தோள்பட்டையைப் பிடித்து உலுக்கியவாறு ''வீரனே! இன்றிரவு நடுயாமத்தில் நான் தங்கியிருக்கும் இடத்திற்கு நீ வர வேண்டும். உன்னிடம் சில முக்கியமான செய்தியைச் சொல்ல இருக்கிறேன். அவைகளை நீ நிறைவேற்றியாக வேண்டும்.''

- என்று அழுத்தந்திருத்தமாகக் கூறினான். செழியனும் உள்ளுக் குள்ளே சிறிது பயந்தான்.

பயத்தை மறைத்துக் கொண்டு, ''தாங்கள் எங்கே மன்னவா தங்கியிருக்கிறீர்கள்?'' என்று வினவினான்.

''அரண்மனைக்குள்ளே அரசனும், அமைச்சர் பெருமக்களும் அமர்ந்திடும் ஆலோசனை மண்டபம் இருக்கிறதே! அதற்கு அருகிலே தான் என் இருப்பிடம். காவலோ, கட்டுத் திட்டங்களோ எதுவுமில்லை! என் இருப்பிடத்திற்கு நீ பயமில்லாமல் வரலாம். இளவரசி தாமரையிடம் சொல்! நான் சொல்லும்போது அவள் இந்த இடத்தை விட்டுப் புறப்பட்டால் போதும்.''

- இருங்கோவேளின் பேச்சை ஆமோதிப்பதுபோல் செழியனும் தலையசைத்தான்.

"சரி! நீ புறப்படு - நான் போகிறேன். இரவு மறந்து விடாதே!" என்று கூறிவிட்டு இருங்கோவேள் அந்த இடத்தைவிட்டு அகன்றான்.

செழியனுக்குப் பலவிதமான குழப்பங்கள், அந்த குழப்பத்திலும் ஓர் ஆறுதல். கரிகால் மன்னனுக்கு வருகின்ற எந்த ஆபத்தும் அவனுக்குத் தெரியாமல் வரமுடியாதல்லவா? தன்னால் சோழ நாட்டுக்கு வரும் பயங்கரமான புயற்காற்றை அடக்கிவிட முடியும் என்ற துணிவு ஏற்பட்டது. அவனுக்கு தன்னைச் சுற்றி உருவாகும் சூழ்ச்சியில் தனக்கு முக்கியமான வேலை கிடைத்துவிட்டதாக அவன் நினைத்தான்.

அந்த எண்ணங்களினூடே, மெதுவாக அரண்மனை நோக்கி நடந்தான். இளவரசி தாமரையுடன் வந்திருக்கும் வீரன் என்ற காரணத்தால் யாரும் அவனைத் தடைசெய்யவில்லை. வீரர்கள் ஆங்காங்கு சூழ்ந்து நின்று பேசிக் கொண்டிருந்ததைச் செழியன் நின்று கவனிக்காவிட்டாலும் நடந்தவாறே தன் காதை அந்தப் பக்கம் திருப்பிடத் தவறவில்லை.

எல்லா இடங்களிலும் பேசப்பட்ட விஷயம், தலைநகரத்து மக்கள் இன்னும் திரும்பி வரவில்லை என்பது தான்! 'மன்னன் கரிகாலன் சென்று அவர்களை இன்னும் அழைத்து வரவில்லை; மன்னனும் வந்து சேரவில்லை!' என்ற செய்தியை ஆளுக்கொரு விதமாக விமர்சித்துக் கொண்டிருந்தார்கள்.

செழியனுக்குக்கூடத் தலைநகரத்து மக்கள் காட்டிய எதிர்ப்பு உணர்ச்சி வியப்பையே அளித்தது.

மக்களோ, தங்கள் மன்னன் அளவுக்கு மீறிய இரக்க உணர்வு கொண்டு பகைவர்களுக்குச் சோழநாட்டில் மரியாதை கொடுத்து விட்டான் என்ற குற்றச்சாட்டைக் கூறியவண்ணம் தலைநகரை விடுத்து நடந்துகொண்டிருந்தார்கள்.

அவர்களை அழைத்து வரப் புறப்பட்ட கரிகாலன். குதிரையொன்றில் வேகமாக அவர்களைத் தொடர்ந்து சென்றான். எளிதில் சந்திக்க இயலாதவாறு மக்கட்பெருங்கடல் தலைநகரைவிட்டு வெகுதூரம் சென்று விட்டது.

கரிகாலன் ஒரு சிறு தவறு செய்துவிட்டான். சாலை வழியேதான் அவர்கள் சென்றிருக்கக்கூடுமென எண்ணி அவ்வழியே தன் குதிரையை முடுக்கிவிட்டதால் ஏமாந்து விட்டான். அவர்களோ சாலை வழி விடுத்துக் காட்டு வழியில் புகுந்து விட்டனர்.

அந்தக் காட்டு வழியும் இருங்கோவேள் மன்னனின் மரமாளிகை இருக்கின்ற வழியென்பது அவர்களுக்குத் தெரியாது.

நெடுந்தூரம் சென்ற மன்னனுக்குப்பலமான சந்தேகம் ஏற்பட்டது. என்னதான் வேகமாக ஓடினாலும் தன் கண்ணில் படாத அளவுக்குப் பூம்புகார் மக்கள் இத்தனை தூரத்தைக் கடந்திருக்க முடியாது என்று தீர்மானித்துக் கொண்டு திரும்பினான்.

மக்கள் காட்டு வழியிலேதான் சென்றிருக்கக்கூடும் என்று யூகித்தான். அவன் யூகம் தவறானதல்ல என்று காட்டுவதுபோல் காட்டு மார்க்கத்தில் பூம்புகார் மக்கள் திரும்பியிருப்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. அந்த அடையாளங்களைத் தொடர்ந்து கரிகாலன் தன் குதிரையைத் திருப்பிவிட்டான்.

பூம்புகார் நகரத்தில் சரித்திரம் காணாத கொந்தளிப்பு ஏற்பட்ட நேரத்தில் - கொல்ல வந்த எதிரியின் சவத்துக்கு மரியாதை செலுத்திய கரிகால் மன்னனின் உள்ளத்தில் ஏற்பட்ட சங்கடப் புயலில் - சஞ்சலச் சூறாவளியில் - வேதனை பூகம்பத்தில் சிக்கிவிட்ட நாம் ஓர் உருவத்தை மட்டும் மறந்தே போய்விட்டோம்!

சோழ பேரரசன் கரிகால் மன்னனின் மானமும் உயிரும் காப்பாற்றப் பட வேண்டும் என்பதற்காக, ஆரம்ப காலத்திலேயே ஆபத்தோடு விளையாடப் புறப்பட்டாளே அந்த முத்துநகை, இப்போது எங்கே?

கடமை-திடீரென ஏற்பட்ட மக்களின் குமுறல் - இவற்றினால் ஏற்பட்ட பயங்கரமானதொரு மனப்போராட்டத்தில் அகப்பட்டுத் தவிக்கும் மன்னனுக்கு ஆறுதல் சொல்லவும் வகையற்று அவள் எங்குதான் வாடுகிறாள்?

எல்லாருமே இப்போது பூம்புகார் நகரிலே கூடிவிட்டனர். எது நடைபெற முடியாது என்று கருதினார்களோ, அது நடக்கிறது! பெரும்பகை என்ற பாலம் போடாத முடியாத பள்ளத்தால் விலகி நிற்கிற கரிகாலனும், இருங்கோவேளும் ஓரிடத்தில் தான் இருக்கிறார்கள்! பழிவாங்கும் உணர்ச்சி கொண்டவனான இருங்கோவேளின் உடன் பிறந்த தங்கை தாமரையும் பூம்புகாரில்தான் இருக்கிறாள்! அவள் தயவால் சகோதரியின் சவத்தைக் காணவந்த செழியனும் அங்கு தான் இருக்கிறான். இதுவரையில் மர்மமானதொரு நாடகத்தின் கதாபாத்திர மாக இருந்து வருகிற புலவர் காரிக்கண்ணனாரும் சந்தேகத்தில் சிக்கிய வராகத் தனியறையில் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்! தமிழ்காத்த நல்லார் ஒருவர் இத்தகைய 'பட்டம்' சுமந்ததற்குக் காரணமான முத்துநகை மட்டும் பூம்புகாரில் இல்லை.

அவளைச் சந்திக்க வேண்டுமாயின் குழப்பமும் கலவரமும் சூழ்ந்துள்ள பூம்புகாரைவிட்டு, அமைதியும் ஆபத்தும் ஒருங்கே சேர்ந்திருக்கும் ஆரண்யத்திற்குச் சென்று- அதன் மத்தியில் இருக்கின்ற

இருங்கோவேளின் மரமாளிகைக்குள் நுழைந்து -அங்கே பூட்டப்பட்டுக் கிடக்கும் ஓர் அறையில் நாம் புகுந்தாக வேண்டும்!

பெருந்தேவியின் சடலத்தைக் காண்பதற்காகத் தாமரையும், செழியனும் பூம்புகார் நகரத்திற்குள் நுழைந்து கொண்டிருந்த நேரத்தில், இருள் சூழ்ந்து கொண்டிருந்த அந்த அறையில், பலகைக் கட்டில் ஒன்றில் சாய்ந்தபடி கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள், முத்துநகை!

சலனமெதுவும் இல்லாதிருந்தது அவள் முகத்தில், மனத்தில் அலை மோதிக் கொண்டிருக்கின்ற எண்ணற்ற உணர்ச்சிகளில் எதைத் தான் தொல்லைகளால் துவண்டு போய்க்கிடக்கின்ற அந்த முகம் பிரதி பலித்துக் காட்ட முடியும்?

மேற்கூரையில் பதிந்திருந்த அவளது கண்கள் எதைக் கண்டோ சற்று அகல விரிந்தன. பல்லி ஒன்றின் வாயிலே சிக்கிக் கொண்ட பூச்சி, தப்பிக்க முடியுமாவெனக் கணநேரம் சிறகுகளை அடித்துக் கொண்ட பின்னால் வாழ்வை சத்தமின்றி முடித்துக் கொண்டது.

அந்தப் பூச்சிக்கும் முத்துநகைக்கும் என்னதான் வேறுபாடு!

சற்று நேரத்திற்கு முன்பு அந்த இருண்ட அறைக்குள்ளே புகுந்து, முத்து நகையின் மானத்தையே சூறையாடிவிட நினைத்த இருங்கோவேள் மன்னனைஅந்தப் பல்லிக்கு ஈடாக அல்ல, பயங்கரமான வனவேங் கைக்கு ஒப்பாகவே நினைத்துப் பார்த்த அவளது கண்கள் தாமாக மூடிக்கொண்டன

விழித்திருக்கின்ற கண்களைவிட மூடிக்கொண்டிக்கும் கண்களுக்கு முன்னேதானே திரையெதுவும் இல்லாமல் காட்சிகள் தோன்ற ஆரம்பிக்கின்றன!

கரிகால் மன்னனைச் சுற்றியிருக்கும் காற்றில்கூடப் பகை கலந்திருக்கும் என்று கருதிய முத்துநகை, ஓர் ஆணுக்கும் இல்லாத துணிவோடு அன்று புறப்பட்டாள்! பூரித்துக் கிடக்கும் தன் பருவத்துப் பேரெழிலை ஆண் உடைக்குள்ளே மறைத்து, பெண்மைக்கு வேலி யிட்டுக் காட்டுப்பாதையில் பயணம் நடத்தினாள். மதயானையும் மலைப்பாம்பும் வஞ்சித்து விடுமோ கொடுவேங்கைப் புலியால் தன் கொள்கை பாழாகி விடுமோ - என்றெல்லாம் கூட அவள் சஞ்சலப் பட்டதில்லை. அத்தகைய கொடிய பிறவிகளைவிடக் கடினமனம் படைத்த இருங்கோவேளை இருட்டிலிருந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வரவேண்டும்; கரிகாலனைக் காப்பாற்றிய செழியனை அந்தக் காட்டரசனிடமிருந்து மீட்டுவிட வேண்டும் - இப்படி உன்னதக் குறிக்கோளுடன் புறப்பட்ட அவள், பெண்ணாகப் பிறந்தவள்

அனுபவிக்கக்கூடாத எத்தனையோ தொல்லைகளை அனுபவித்து விட்டாள்!

தன்னைப் போல் ஒரு பெண்ணாகிய தாமரையே காதலிக்கும் விசித்திரத்தை நடத்தினாள்.

திருநீற்றுக்குள்ளே துரோகத்தை மறைத்துக் கொண்டிருந்த சிவனடியார் கூட்டத்திலிருந்து தன் கற்பை காப்பாற்றிக் கொண்டாள்!

பெற்றெடுத்த பேசும் தெய்வமாம் தன் தந்தையைத் 'துரோகி' என்று வசை பாடினாள்!

இவை மட்டுமல்ல; வேடத்திற்காக அவள் உடலிலே ஒட்டிக் கொண்டிருந்த கட்டாரியால் கொலை ஒன்றையுங் கூடச் செய்திருக் கிறாள். செழியனிடமிருந்து இருங்கோவேள் துன்புறுத்தி எழுதி வாங்கிய வஞ்சக ஓலையைக் கொண்டு, படையெடுத்து வருகின்ற பாண்டியர் தளபதியை ஏமாற்றச் சென்ற கொடுங்கோல் என்பவனின் மார்பிலே கட்டாரியைப் பாய்ச்சித் தானே அந்தக் கடிதத்தை அபகரிக்க வேண்டி யிருந்தது!

இவ்வளவு வேதனைகளுக்கும் இடையே அவள் சிறிது சிரிக்கவும் முடிந்தது; இருட்குகைக்குள்ளே பயணம் நடத்தச் சென்றவளுக்குக் கிடைத்த ஒளிவிளக்குப்போல், அவள் வீரபாண்டியைக் கருதினாள்! ஆனால் அந்தோ பரிதாபம்! இளமை உணர்ச்சி விலைக்கு வாங்கிய அந்த உறவும் அவளை அறியாமலே அவளுக்குச் சதி செய்து விட்டது. தன் குறிக்கோளுக்குப் பக்கபலமாவான் வீரபாண்டி என்று கருதி, தானே இருங்கோவேளுக்குத் துணையாக இருந்திருக்கிறாள் என்பதை அவள் அறிய முடியுமா?

இப்படிக் குறுகிய காலத்திலேயே வாலிபப் பருவத்துக்குள்ளேயே - வாழ்க்கையின் கோரமான பகுதிகளைச் சந்தித்துவிட்ட அவள், இப்போது, அதன் இறுதிக் கட்டத்திற்கே சென்றுவிட்டாள்! வீர பாண்டியை மரண முகட்டுக்கு அனுப்பி விட்டதாகச் சொல்லி, 'இனி நீ எனக்கு விருந்தாகி விடு' என்று அவளை முத்தமிடத் துடித்தானே இருங்கோவேள்...? அவன் இனிமேல் அவளை விட்டு விடவா போகிறான்? தாமரை மட்டும் தடுத்திருக்காவிட்டால் அவள் நிலை எப்போதோ அவலத்தை அடைந்திருக்குமே!

வாழ்வின் இறுதிக் கட்டத்தில் மிகச் சிக்கலான பகுதிக்கு வந்துவிட்ட ஒரு பெண் என்ன நினைப்பாளோ... அதைத்தான் முத்துநகையும் செய்தாள் ! கொள்கைகள் மாண்டு மடியலாம்; ஆனால் கற்பைச் சாகவிட எந்தப் பெண்தான் சம்மதிப்பாள் - அதுவும் தன் காதலனையே வீழ்த்தி விட்டதாகச் சொல்லும் ஒரு கயவனிடம்! இருங்கோவேளிடமிருந்து

தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, அவனிடமிருந்து தான் அபகரித்த கட்டாரியின் துணையைத்தான் நாட வேண்டும் என்று முடிவு செய்தாள் முத்துநகை!

பளபளவென மின்னிய அந்தக் கட்டாரியைத் தடவிப் பார்த்தாள் ஒருமுறை. ''இது எத்தனையோ சோழ வீரர்களது உயிரைக் குடித்திருக் கும்; நாளையோ அல்லது மறுநாளோ செழியனின் மரணத்திற்கும் இதுவே கருவியும் ஆகலாம்; அதற்குள் என் இரத்தத்தை ருசிபார்த்துத் தன் மேல் படிந்திருக்கும் கறையைக் கழுவிக் கொள்ளட்டும்! செழிய னைப் போன்ற மாவீரர்களது இதயத்தில் இத்தகைய மாசு படிந்த கருவிகள் பாயக்கூடாது!''

-முத்துநகையின் உதடுகள் இப்படி முணுமுணுத்தன! கட்டாரியைத் தன் மார்புக்கு நேரே தூக்கினாள்.

ஆனால் அதே நேரத்தில், இடியோசையைப் போல் எழும்பிய குதிரைகளின் குளம்படிச் சத்தம் அவள் செவிகளைத் தாக்கியது! உயர எழுந்த கரம், தானே சாய்ந்தது. பலகணி அருகே ஓடிச் சென்று வெளியே பார்வையைச் செலுத்தினாள்!

குதிரையிலே வந்துகொண்டிருந்த சில வீரர்கள், அங்கே எதிர்பார்த்துக் காத்திருந்த அமைச்சர் செந்தலையாரின் அருகே வந்ததும் அவசரமாகக் கீழே குதித்தனர்.




# செந்தலையாரின் முழக்கம்

''என்ன ஆயிற்று? தாமரையைக் கண்டீர்களா? அவளையும் வேளிர்குடியின் ராஜதந்திரத்தையும் ஏமாற்றிவிட்டு ஓட நினைத்த அந்தச் செழியனைப் பிடித்தீர்களா? எங்கே அவர்கள்? பின்னால் வருகிறார் களா? நீங்கள் எல்லாரும் எதற்காக முன்னே வந்து விட்டீர்கள்?'' - காட்டின் அமைதியைக் கிழித்துக் கொண்டு செந்தலையாரின் கிழக்குரல் கிரீச்சிட்டது!

''மன்னித்துவிடுங்கள் அமைச்சரே!...

- மூச்சு விடவும் தடுமாறிய வீரனொருவன் இப்படி நாக்குழறப் பேச ஆரம்பித்தான். அதற்குள் செந்தலையார் இடைமறித்தார்.

''மன்னிப்பா? அத்தகைய குற்றம் என்ன செய்து விட்டாய் வேளிர்குலத்து வீரனே? ஓகோ.. தப்பிச்சென்ற செழியனோடு போர் நடத்தினாயா? போரிலே எதிர்பாராமல் அவனைக் கொன்று விட்டாயா? அதற்காக என்னிடம் மன்னிப்புக் கேட்கிறாயா? தேவையில்லை! இந்த நேரத்தில் எதிரிகளுக்குள்ளேயே பெரும் எத்தனான செழியனின் மரணத்தை, நான் மட்டுமல்ல, மன்னர் இருங்கோவேளே மாலைசூட்டி வரவேற்பார்!...''

- வீரன் அவர் பேச்சினே இடையே குறுக்கிடத்தான் முயன்றான்; முடியவில்லை; கணீரென்று ஒலித்த அந்த முதுமைக் குரல் ஓயவில்லை!

''பழிக்குப் பழி!... கரிகாலன் மாளிகையிலே அரசி பெருந்தேவி யாரின் சவம்! இருங்கோவேளின் அரண்மனை யிலே செழியனின் பிணம்!... ஆகாகா! பழிக்குப் பழி!!''

செந்தலையாரின் இந்தக் குரலைக் கேட்டு ''அய்யோ!'' என்று வாய்விட்டு அலறிவிட்டாள் முத்துநகை! தனக்கு முன்னால் புறப்பட்டுவிட்டானோ செழியன் என்று கண நேரத்தில் அதிர்ந்துபோன அவளுடைய கையிலிருந்த கட்டாரி தானே கீழே விழுந்தது!

அப்போது, செந்தலையார் அவசரத்தில் எழுப்பிய கண நேரத்து வெற்றிக் கோட்டையைத் தகர்த்து எறிகின்ற உண்மைச் செய்தியைச் சொல்லிக் கொண்டிருந்தான் அந்தக் குதிரைவீரன்.

''உண்மை அதுவல்ல அமைச்சரே!... நாங்கள் காற்றோடு போட்டியிட்டுத்தான் சென்றோம்! தாமரையின் குதிரை கீழே விழுந்துங்கூட, ஒரே குதிரையிலே இருவரும் பறந்து விட்டார்கள்! காட்டைக் கடந்து செல்வது மன்னரைக் காட்டிக் கொடுக்கவும் வழி அமைத்து விடுமோ என்று திரும்பி விட்டோம் அமைச்சரே!''.

குதிரை வீரனின் நடுக்கம் கலந்த குரலைத் தொடர்ந்து, ''அய்யோ!'' என்கிற செந்தலையாரின் அலறல் காட்டையே கிடுகிடுக்க வைத்தது.

''அடப் பாவிகளே! இருப்பிடம் தெரிந்துவிடுமோ என்று பயந்து, நம் இதயத்தையே எடுத்து எதிரிக்கு அனுப்பி வைத்து விட்டீர்களே! இனி நடக்கப் போவது என்ன தெரியுமா?''

-செந்தலையாரின் வேதனை கலந்த கதறலை, குதிரை வீரர்களைக் காட்டிலும் முத்துநகைதான் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள்.

''வேளிர் குடியிலே நஞ்சு கக்கிய கருநாகமாம் அந்தக் கரிகாலன் தன் சூதிலே வெற்றி கண்டுவிட்டான்! அரசியார் மறைந்து விட்டார்களே! அந்த வீழ்ச்சியைத் தன் வெற்றிக்கு அடிக்கல்லாக்கிக் கொண்டான்! இருங்கோவேளுக்கு விடுத்த அழைப்பிலேதான் அந்த ஆபத்தின் முழு உருவமே புறப்பட்டது! அந்தப் பறையொலியிலேயே வேளிர்குல மரண கீதமும் கலந்து விட்டது! மனைவியின் சடலத்தைக் காணத் துடித்துச் சென்றிருப்பார் மன்னர்! அந்த மதோன்மத்தனின் கூண்டுக்குள்ளேயும் சிக்கியிருப்பார்! எஞ்சியிருந்தாள் தாமரை; அவளையும் ஏமாற்றிக் கவர்ந்து சென்றுவிட்டான் பாண்டிய நாட்டானாம் பச்சைத் துரோகி! அய்யோ! வேளிர்குடியே பூண்டோடு அழிந்துவிட்டதே! அதன் வீர வரலாற்றிலே மாசு படிந்து விட்டதே! போர்க்களத்திலே எதிரியின் வேலுக்கு மார்பு காட்டினான் என்று இருங்கோவேளின் சரித்திரம் முடிந்திருந்தால் - அண்ணனைக் கொன்றவனின் அங்கத்தைத் துண்டாடிய பின்னரே - அவன் அந்தப்புரத்துப் பேரரசிகளின் அலறலைக் கேட்ட பின்னரே மறத்தமிழச்சியாகத் தாமரை மடிந்திருந்தால் காலமெல்லாம் அந்தக் குலத்தின் மேன்மைக்குப் போராடிய இந்தக் கிழவனின் ஆவியும் நிம்மதியாகப் பிரிந்திடுமே''

-கடலலைபோல் எழுந்த அந்தக் குரல் நடுங்கியது; செந்தலையார் பொங்கிவந்த அழுகையை அடக்க முடியாமல் விம்மினார்.

அவருடைய குரல், காட்டுக்கு விளிம்பு கட்டியிருந்த மர உச்சிகளில் மோதி எதிரொலித்திருக்கத்தான் வேண்டும். குரல்கேட்டு, அங்குமிங்கும் சிதறிக் கிடந்த வேளிர்குடி வீரர்கள் ஒவ்வொருவராக ஓடிவர ஆரம்பித்தார்கள். பெருந் தேவியாரின் மரணத்தால் மனமுடைந்திருந்த அவர்கள் 'அதைவிட மேலான ஆபத்து ஏதேனும் வந்துவிட்டது

போலும்' என்று கருதிச் செந்தலையாருக்கு முன்னே பரபரப்புடன் கூட ஆரம்பித்தார்கள்.

செந்தலையார் தலை நிமிர்ந்தார். தன் விழியோரத்தில் துளிர்த்து நின்ற கண்ணீரை வழித்து உதறினார். இப்போது அவருடைய நிமிர்ந்த தோற்றத்தில் - நேரிய பார்வையில் - உயர்ந்த கரங்களில் புது வேகம் பளிச்சிட்டது! போர்வெறி பிடித்தோருக்கு மத்தியிலே நிற்கும் தானைத் தலைவனைப் போல் தோற்றமளித்தார். அவரது உருளும் செவ்விழிகளும் - உணர்ச்சியால் துடிக்கும் கரங்களும் - உரத்த குரலெழுப்பத் தயாராக நிற்கும் உதடுகளும் - இடப்போகின்ற ஆணை என்னவோ என்று காத்துக் கொண்டு நின்றது அந்தப் பெருங்கூட்டம்.

அவர் ஏதோ விபரீதத்திற்கு வித்திடத்தான் போகிறார் என்றுணர்ந்த முத்துநகையின் உள்ளத்தில் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. தான் எப்படியும் அந்த அறையிலிருந்து தப்பிவிட வேண்டும் என்று முடிவெடுத்தாள். பலகணி வழியாக வெளியே பார்த்தாள். காவலுக் கென்று வாசலில் நிறுத்தப்பட்டிருந்த வேளிர்குலத்து வீரன் இன்னும் செந்தலையாரை நோக்கி ஓடவில்லை. அவள் எப்படித் தப்புவது? அறையில் சுற்றும் முற்றும் பார்வையைச் செலுத்தினாள். ஓரே ஒரு பலகைக் கட்டிலையும், கீழே விழுந்து கிடந்த கட்டாரியையும் தவிர வேறு எந்தக் கருவியுமே கிடையாது. அவைகளைக் கொண்டு தப்புவது என்பது இயலாத காரியம். புதுவேகம் பெற்று விட்ட அவளது மூளையில் கணநேரத்தில் ஒரு யோசனை உதயமாயிற்று.

உடனே பலகணிக்கு அருகே சென்று சத்தம் வெளியே கேட்கும்படியாகக் கீழே விழுந்தாள். வீரன் திடுக்கிட்டு உள்ளே பார்வையைச் செலுத்தினான். ''தண்ணீர்! தண்ணீர்!!'' என்று கால், கைகளை உதைத்துக் கொண்டு முத்துநகை கத்தினாள். வீரனை நோக்கி, 'தண்ணீர் வேண்டும்' என்றும் சைகையால் காட்டினாள்.

படர்ந்து வந்து இருளில் அவளைச் சரியாக அடையாளம் புரியாதவீரன், உடனே தண்ணீர் எடுக்க ஓடினான். சற்று நேரத்திற் கெல்லாம் சிறிய மண் கலயம் ஒன்றில் நீர் கொண்டு வந்து அதைப் பலகணியின் வழியாக நீட்டினான். ஆனால் பலகணியில் பொருத்தப் பட்டிருந்த மரச்சட்டங்களுக்குள் கலயம் நுழையவில்லை. என்ன செய்வது என்று அவன் கணநேரம் கூட யோசிக்க இடம் வைக்காமல் முத்துநகை ''சீக்கிரம்! சீக்கிரம்!! கதவைத்தான் திறந்து கொண்டு வாயேன்!'' என்று கதறினாள்.

வீரன் கதவைத் திறந்தான். கலயத்தை நீட்டினான். அதை வாங்கிய முத்துநகை சற்றும் எதிர்பாராத வகையில்அவன் முகத்தில் வீசியடித்தாள். அதிர்ச்சியால் தடுமாறிய வீரன் தன்னைச் சமாளித்துக் கொள்வதற்குள்

''ஆ'' என்று பேரிரைச்சலைக் கிளப்பினான். இருங்கோவேளிடமிருந்து அபகரித்த கட்டாரியை அவன் அடி வயிற்றில் பாய்ச்சிய முத்துநகை, கண்சிமிட்டும் நேரத்தில் சிட்டுப்போல் வெளியே பாய்ந்து ஓடினாள். சுற்றிக் கொண்டு கீழே சாய்ந்த வீரனின் கண் இமைகள் கடைசி முறையாக மூடுவதற்குமுன் பார்த்த பார்வையில் அவள் தென்படவே இல்லை. சோழப் பேரரசின் மேல் கொண்ட தாயகப் பற்றால் தவிர்க்க முடியாத இந்த இரண்டாவது கொலையையும் செய்துவிட்ட முத்துநகை, கூடாரங்களுக்கிடையே பதுங்கிப் பதுங்கிச் சென்றாள்.

அவள் மறுபடியும் ஆண் உருவம் பூணுவதற்காக உடைகளைத் தேடுவதில் அதிகச் சிரமப்படவில்லை. செந்தலையாரிடம் ஓடிவிட்ட வீரன் ஒருவனது கூடாரத்தில் துணிவுடன் புகுந்து தேவையானவற்றை எடுத்துக் கொண்டு அவைகளால் தன் உருவையும் முழுக்க முழுக்க மாற்றிக்கொண்டு, மீண்டும் வெளியே வருகிறநேரத்தில் செந்தலை யாரின் குரல் மறுபடியும் உரக்கக் கேட்டுக் கொண்டிருந்தது. அதன் பக்கம் தன் செவிகளைத் திருப்பிவிட்டுத் தப்பும் வழியில் பார்வையைச் செலுத்தினாள் முத்துநகை!

''வேளிர்குடி வீரர்களே! வேளை வந்துவிட்டது உங்களுக்கு! நம் மன்னராம் இருங்கோவேளின் குடும்பத்தையே வேரோடு சாய்த்து, அதோ வெற்றிக்களிப்பால் கரிகாலன் எழுப்பும் சிரிப்பொலி கேட்கிறதா செவிகளில்? பின்னாலேயே எழும்புகிறது பாண்டியத் தளபதி நெடுமாறனின் குதூகலக் கூக்குரல்! அதற்கும் கணநேரம் உங்கள் காதுகளைத் திருப்புங்கள்! அதற்குள்ளே தான் மறைந்து கிடக்கிறது நம் மன்னர் எழுப்புகின்ற அபாயக் குரல்! அது மட்டுமா? வேளிர் குலத்து மணிமுடியை இடறிவிட்டு - மண் புழுதியை நம் வாழ்வில் அப்பி விட்டவர்களைப் பழி தீர்க்கப் புறப்படுவீர் என்று, அரசியாரின் மரணம் நமக்கு ஆணை இடுகிறது! வாழ்வெல்லாம் அனல்மேல் நின்றோம்! அணுஅணுவாகச் செத்தோம்! ஆசை படபடக்க - ஆவி துடிதுடிக்கக் காட்டிலே ஆட்சி நடத்தினோம்! நாகத்தால் விழுங்கப்பட்ட தவளை யெனத் தவித்தோம்! ஆகவே, சாகத் தான் வேண்டுமென்று துணிந்து விட்டவர்களே...! இனி மோதத்தான் வேண்டும் சோழ மண்ட லத்தோடு...!''

- செந்தலையாரின் உணர்ச்சி முழக்கம் இப்போது போர்ப்பரணியாக மாறிக் கொண்டிருப்பதைக் கேட்ட முத்துநகை, தான் எதிர்பார்த்த அபாயம் உருவாகி வருகிறது என்று உறுதி செய்து கொண்டே கூடாரங்களின் இடையே மறைந்து மறைந்து ஓடிக் கொண்டிருந்தாள்.

''வீரர்களே! என்ன சொல்கிறீர்கள்? உன்னத நிலையில் இருந்தீர்கள் நீங்கள்! இன்று உருமாறிக் கிடக்கிறீர்கள்!

உங்கள் சிங்காதனத்துச் சிறப்பையெல்லாம் அபகரித்துக் கொண்ட வனை நோக்கிப் படையெடுத்துப் புறப்படுவீர்! புறப்படுவீர்!!''

- ஓடிவந்து கொண்டிருந்த வேளிர்குல வீரர்களின் பார்வையிலி ருந்து தப்பி ஒரு புதருக்குள் மறைந்து கொண்டாள் முத்துநகை. அவர்கள் அவளைக் கடந்து சென்றபின் மீண்டும் தன் பயணத்தைத் துவங்கினாள். அங்கே செந்தலையாரின் குரல் ஓயாமல் ஒலித்துக் கொண்டிருந்தது. மன்னர் இருக்குமிடம் தெரியாத நேரத்தில் அவர்களைப் போர்க்களம் நோக்கி அழைப்பதற்குச் செந்தலையாரின் முழுமூச்சும் தான் தேவைப் படுகிறது!

''புறப்படுகிறோம்!'' - வீரர்கள் முழக்கமிட்டனர்.

முத்துநகை தன்மேல் பட்ட விளக்கொளியைக் கண்டு திடுக்கிட்டாள். தரையோடு தரையாகப் படுத்து விட்டாள். மண்கோபுரம் ஒன்றிலிருந்து ஒளி கிளம்பியது. மரமாளிகைக்கு ஏற்படுத்தப்பட்டிருந்த பாதுகாப்பு களில் அதுவும் ஒன்று. கலங்கரை விளக்கத்தைப்போல் சுற்றிக் கொண்டே யிருக்கும் அந்த ஒளியின் உதவியால் நாற்புறமும் பார்வையிடலாம். எதிரிகளிடமிருந்து தப்புவதற்காக அமைக்கப்பட்ட அந்த விளக்கி லிருந்து தப்பிய முத்துநகை ஊர்ந்து கொண்டே சென்றாள்.

''பகை! பகை! பகை!''

''தூள்! தூள்! தூள்!'' - இடி முழக்கமென வீரர்கள் எழுப்பிய இந்தக் குரல், காட்டைக் கடந்து பூம்புகார்ப் பாதையிலே தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்த முத்துநகையின் செவிகளில் மெல்லியதாகத்தான் கேட்டது!

பூம்புகார் சென்று அவள் என்ன செய்யப் போகிறாள்?

அவளைப் பிடித்து நிறுத்தி ''எங்கே ஓடுகிறாய் பெண்ணே புயல் போல?" என்று கேட்க முடியுமா? முடியவே முடியாது. அந்தப்பெண் புலியின் வேகப்பாய்ச்சலைத் தடுத்து நிறுத்த எந்தச் சக்தியும் கிடையாது!

கரிகாலன் அரண்மனையிலே பெருந்தேவியின் பிணம் கிடக்க வேண்டும்; அப்போது, மன்னனோ இருங்கோவேளுக்கு அழைப்பு விடுத்துவிட்டான் நிராயுதபாணியாக வரவேண்டுமென்று! நகரம் நிச்சயம் குழப்பத்திலேதான் இருக்கும்! அந்த நிலையில் காட்டுக்கு மத்தியிலே உருவாகிக் கொண்டிருக்கும் இந்தப்போர் அபாயத்தை யார் எதிர்பார்க்கப் போகிறார்கள்? நிச்சயமாக எவரும் உணர முடியாது! அதைத் தெரிந்த ஒரே ஓர் உயிர் முத்துநகைதான்! அவள்தான் சோழமண்டலத்தை இந்த திடீர்த் தாக்குதலிலிருந்து காப்பாற்றியாக வேண்டும். மன்னனிடம் சென்று 'படை திரட்டுவீர்!' என்று யோசனை

சொல்லும் நேரமும் இதுவல்ல! ஆகவே குழப்பத்தை மேலும் அதிகரிக்காமல், பெருந்தேவியாரின் சவ அடக்கமும் குலைந்துவிடாமல் அதே நேரத்தில் செந்தலையார் தலைமையில் புறப்படப் போகும் வேளிர்குடி வீரர்களின் போரையும் தடுத்து நிறுத்த என்ன வழி என்ற தீவிரச் சிந்தனையுடன், ஆண் வேடத்தில் பூம்புகார் நகரத்தில் புகுந்தாள் முத்துநகை!

புகுந்த சில விநாடிகளிலேயே தலைநகரின் நிலையைக் கவனித்த அவள் நெஞ்சில், எல்லாவற்றையுமே சமாளிக்கக் கூடிய ஒரு புரட்சிகரமான திட்டம் உருவாகி விட்டது;

அதை நிறைவேற்ற முத்துநகை மீண்டும் ஆண் வேடம் போட்டதோடு மட்டுமில்லை;

குரலை மாற்றிக் கொண்டாள்!

பெயரை மாற்றிக் கொண்டாள்!

மக்கள் மத்தியிலே புகுந்தாள்.

குமுறிக் கொண்டிருந்த மக்களிடையே ஒரு புதிரான திட்டத்தை வெளியிட்டாள்.

திடீர்த் தலைவன் ஆனாள்!

யார் அந்தத் தலைவன்?

கோச்செங்கணான் தான்!

''மக்களை மன்னருக்கு எதிராகத் திருப்பிய அந்தப் புதிய தலைவன் யார்?'' என்று அரண்மனையின் ஆலோசனைக் கூட்டத்தில் அமைச்சர்கள் தீப்பொறி பறக்கப் பேசிய போது 'யார் அந்தக் கோச்செங்கணான்?'' என்று கரிகாலன் கண்கள் சிவக்கக் கேட்ட போது, கோச்செங்கணான் என்று புதிய பெயருக்குள்ளே புகுந்து கொண்டிருந்த முத்துநகை தனக்கு ஆதரவாக மக்களைத் திரட்டிக் கொண்டிருந்தாள்!

பெருந்தேவியாரின் சடலம் புதைக்கப்பட்டபோது, அந்தப் பெருங் கூட்டம் பூம்புகாரைக் கடந்து செல்ல அதற்குத் தலைமை தாங்கிச் சென்று கொண்டிருந்தாள்!

மக்களைத் திரும்ப அழைத்துவர மன்னனே புறப்பட்ட போது கூட்டம் காட்டுப்பாதையில் அடியெடுத்து வைத்துக் கொண்டிருந்தது!

ஏன்?

சோழப் பேரரசோடு தன் உயிர் மூச்சைப் பிணைந்து விட்ட புலவரின் புதல்வி முத்துநகையின் 'மர்ம'மான திட்டத் திலேதான் இந்தக் கேள்விக்கு விடை அடங்கியிருக்கிறது!

முத்துநகையின் தலைமையில் அடவியில் புகுந்த பூம்புகார் மக்களின் உள்ளத்தை அச்சம்தொட்டுப் பார்க்கவில்லை. அவர்களின் நெஞ்சம் பிடிவாத உணர்ச்சியால் கெட்டிப்பட்டிருந்தது. தங்களின் தலைவன் கோச்செங்கணான் எங்கே அழைத்துச் சென்றாலும் போகத் தயாராக இருந்தார்கள். சோழப் பேரரசின் பெருமையை நிலை நாட்டுவதற் காகவும், பூம்புகாரின் தன்மானத்தை எடுத்துக் காட்டுவதற்காகவும் இருங்கோவேளின் மீது கொண்டுள்ள பகையுணர்ச்சியை வெளிப் படுத்துவதற்காகவும் தியாக ஊர்வலம் நடத்துவதாகவே அவர்கள் எண்ணிக் கொண்டார்கள்.

இல்லாவிட்டால் பஞ்சின்மீது நடந்தாலும் பாதம் நோகும் என்று வருந்தத்தக்க வஞ்சிக் கொடிகள், கல்லிலும் முள்ளிலும் காலில் இரத்தம் கசிய நடை பழகுவார்களா? பிஞ்சுக் குந்தைகளை இடுப்பிலே சுமந்தவாறு ஆவேச நடைபோடும் தாய்மார்களின் உணர்ச்சிக்கு எதனை உவமை காட்டுவது? முற்றிப்போன வற்றல் கிழடுகளின் நடையிலே காணும் வேகம் முரசுகொட்டிச் செல்லும் வீரர்களின் அணிவகுப்பிலே கூடக் காண இயலாத ஒன்றன்றோ? வீரக் கனல் உமிழும் கண்கள் படைத்த வாலிபர்களை, அவர்களுடன் போட்டியிடும் கிழவர்களை, உணர்ச்சி வேகம் துள்ள ஓடிவரும் தாய்மார்களை, குழந்தைகளை முத்துநகை எங்குதான் அழைத்துப் போவாள்?

அய்யோ, அவள் போகும் பாதையைப் பார்த்தால் - மரமாளிகைக் கல்லவா செல்வது போல் தெரிகிறது!

அங்குள்ள இருங்கோவேள் மன்னனின் படைகளுக் கெதிரே கொண்டுபோய்ப் போர்க்கருவி எதுவுமில்லாத பூம்புகார் நகரத்து மக்களைப் பலியிட்டு விடப் போகிறாளா?

வேலும், வாளும், ஈட்டியும், கேடயமும் நிறைந்த அந்தப் படை வரிசையின் முன்னே கையில் போர்க்கருவி எதுவுமில்லாத பூம்புகார் மக்கள் என்ன செய்ய முடியும்?

முத்துநகை, இப்படி ஒரு பைத்தியக்காரச் செயலில் ஈடுபட்டது ஏன்?

சோழ மண்டலத்திற்காக உயிர் விடவும் துணிந்து விட்ட அந்த மங்கைநல்லாளின் திட்டம் பற்றி அவசர முடிவுக்கு வந்து விடாமல் மேலும் கவனிப்போம்.

காட்டு வழியில் ஒரு மரத்தின் மீது கோச்செங்கணான் ஏறிக் கொண்டான். மக்கள் வெள்ளம் அம்மரத்தைச் சூழ்ந்து நின்றவாறு தங்கள் தலைவனின் வாயைப் பார்த்துக் கொண்டு நின்றது. கோச்செங்கணான் தன்னுடைய விழிகளை நாலா திசையிலும் ஓடவிட்டு, மாற்றார் யாரும்

தொலைவிலே கூட இல்லை என்பதைப் புரிந்துக் கொண்டு பிறகு பேசித் தொடங்கினான்!

ஒரே நாளில் காவிரிப்பூம்பட்டினத்துப் பெருமக்களின் உள்ளத்தை யெல்லாம் தன்பால் இழுத்துக் கொண்ட தன்மானப் பொலிவு கொண்ட வீரத் தமிழ்க் குரலல்லவா அது! மக்கள் கடல் அலை ஓய்ந்து அந்தக் குரலின் பக்கம் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டது.

அவள் உரையாற்றினாள்! எந்தத் தானைத் தலைவனும் ஆற்றிட இயலாத போர் உரை:

''பூம்புகார் மக்களே! நாம் நின்று கொண்டிருக்கும் இந்த இடத்திலேயிருந்து நாலைந்து கல் தொலைவிலே தான் நமது பகைவன் இருங்கோவேளினுடைய பாசறை இருக்கிறது. மரத்தால் மாளிகை யமைத்துக் கொண்டு யாரும் கண்டுபிடிக்க மாட்டார்கள் என்ற நெஞ்சுரத் தால் சோழப் பேரரசைச் சாய்க்கப் படை திரட்டிக் கொண்டிருக்கிறான். பகையை எதிர்க்கப் படை திரட்டும் வேலை முடிந்து விட்டதைப் போல் அவனுடைய அமைச்சர் செந்தலையார் போர் முரசும் கொட்டி விட்டார். அந்தக் கிழட்டுப் புலியின் உறுமலைக் கேட்ட பிறகே நான் தலைநகருக்கு ஓடிவந்தேன். உங்களையெல்லாம் அணுகினேன். உங்களிடம் இதுவரை யில் வெளியிடாத உண்மையினையும் இப்போது வெளியிடப்போகி றேன். பூம்புகார்மீது பாய்வதற்கான எல்லாவித ஏற்பாடுகளையும் முடித்துக் கொண்டு திடீரெனக் கிளம்பப் போகிறார்கள் இருங்கோ வேளின் வீரர்கள். நகரம் எப்படியிருக்கிறது என உளவறிய வந்திருந்த இரண்டொரு வேளிர்குல வீரர்களையும் நான் சந்தித்தேன். அவர்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. நான் அவர்களை யாரென்று புரிந்து கொண்டு, அவர்களுடைய செயலனைத்தையும் இடைவிடாது தொடர்ந்து கவனித்தேன். நாமெல்லாம் பூம்புகாரை விட்டுக் கிளம்பி யதும் அவர்கள் தாங்காத மகிழ்ச்சியுடன் குதிரைகளிலேறி மரமாளிகைக் குப் புறப்பட்டு விட்டனர். இந்நேரம் மரமாளிகையிலிருந்து படை புறப்படத் தயாராக இருக்கும்!

''பூம்புகாரில் மக்களே இல்லை. மக்களின் கோபத்துக்கு மன்னன் ஆளாகிவிட்டான் என்ற மகிழ்ச்சிக்குரிய செய்திகளால் அமைச்சர் செந்தலையாரின் தோள் வீங்கிப் போயிருக்கும். இருங்கோவேளின் படை இந்த வழியாகத் தான் பூம்புகார் நோக்கிப் போகப் போகிறது. 'இவ்வளவு தெரிந்திருந்தும் எங்களையெல்லாம் இங்கே ஏன் அழைத்து வந்தாய்?என்று என்னைப் பார்த்துக் கேட்பது போலிருக்கிறது உங்களுடைய பார்வை! இருங்கோவேளின் படையைச் சோழநாட்டுப் படைவீரர்கள் எதிர்த்து முறியடித்தார்கள் என்று சொல்லும் போது ஏற்படுகிற பெருமையை விட, அந்தப் படையைப் பூம்புகார்த்

தலைநகரத்து மக்களே எதிர்த்து விரட்டினார்கள் என்று கூறும்போது தான் அதிகப்பெருமை என்று நான் கருதுகிறேன், நீங்களும் அப்படித்தானே கருதுகிறீர்கள்?

- இதைக் கேட்டுவிட்டுச் சற்று அமைதியாக அவள் மக்களைப் பார்த்தாள்.

''ஆமாம் அதுதான் சரி!'' என்று மக்கட் பெருங்கடல் முழங்கியது.

முத்துநகை மீண்டும் தொடர்ந்தாள்.

''போர்க் கருவிகளைக் கொண்டு களம்புகத் துடித்து வரும் வேளிர் படை வீரர்களை வெறுங்கையுடன் நாங்கள் எப்படி எதிர்ப்பது என்று கேட்பீர்கள். வேளிர் வீரர்களுக்கு எதிராக வேலும், வாளும் பிடித்துப் போரிடுவது சோழ வீரத்துக்கு இழுக்கான செயலாகும். அதனால் நான் கூறுகிறேன், மறவர்குல மக்களே...!

''உங்கள் பரந்த நெஞ்சங்களே பகைவரின் வேல், வாட்களைத் தாங்கும் கேடயங்களாகட்டும்! உரம் வாய்ந்த உங்கள் வீரக் கரங்களே எதிரிகளின் தலைகளை அறுத்துத் தள்ளும் போர் வாட்களாக மின்னட்டும்!

''குழந்தைகள், கிழவர்கள், உடமைகள் நீங்கலாக அனைவரும் என் ஆணைக்கு அடங்கும் விதத்தில் தனி அணிவகுப்பாக வந்து நில்லுங்கள்!

தலைவனின் வார்த்தையைத் தட்டாமல் முதியவர்கள் மற்றவர்களிடமுள்ள குழந்தைகளைத் தாங்கள் பெற்றுக் கொண்டு, உடைமைகளைத் தங்கள் பொறுப்பில் ஏற்றுக் கொண்டு ஒதுங்கி நின்றனர்.

கிழவர்களின் சார்பாக ஒருவர் பேசினார், ''குழந்தைகளையும் உடைமைகளையும் காப்பாற்றும் பொறுப்பைக் கிழவிகள் ஏற்கட்டும். நாங்கள் போராடத் தயாராக இருக்கிறோம்!'' - என்பதாக.

அதை கோச்செங்கணான் மறுத்துவிட்டான்.

''அன்பார்ந்த சோழர் குலப் பெரியோர்களே! தாய்மார்களே! உங்கள் வீரத் திருமுகங்கள் கண்டு நாங்கள் புதிய பலம் பெற்று விட்டோம். நீங்கள் அனைவரும் இந்தப் பகுதியை அடுத்த இடங்களில் தங்கியிருக்க வேண்டும். நீங்கள் பெற்றெடுத்த வீர மறவர்களும் வீராங்கனைகளும் பகையை எதிர்க்கப் புறப்பட்டு விட்டார்கள். அவர்களை வாழ்த்தி அனுப்புங்கள். அனைவருமே திரும்பி வருவார்கள் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்காது என்று எனக்கு நன்றாகத் தெரியும். பல்வேறு களங்களுக்குப் பிள்ளைகளை அனுப்பிப் பழக்கப்பட்டவர்களாயிற்றே, நீங்கள்! காதலனின் விழுப் புண்ணின்மீது முத்தமிடுவதென்றால் சோழ

நாட்டுப் பெண்களுக்குத் தனி இன்பமாயிற்றே! அதிலும் பயங்கரமான சோதனைக்கு உங்கள் வீட்டுப் பிள்ளைகளை நான் அழைத்துப் போகிறேன். என்னை மன்னித்துவிடுங்கள்' இதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை. - சோழ நாட்டைக் காப்பாற்ற! இருங்கோவேளின் படைகள் புறப்படுகின்றன என்ற செய்தியை மன்னரின் காதில் போட்டாலோ, அவர் இந்நேரம் அதை அலட்சியப்படுத்திவிடுவார். நமது மன்னர் பெருவீரர், ஆற்றல் மிக்கவர், என்றாலும் எதையும் காலந் தாழ்த்தியே செய்யவேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடிக்கிறவர். இருங்கோவேளின் மனைவியை அடக்கம் செய்கின்ற நேரத்தில் அவனுக்கும் அழைப்பு அனுப்பிவிட்டு, அவன் மரமாளிகை நோக்கிப் படையெடுப்பதா என்றும் கேட்பார். அவரைச் சமாதானப்படுத்தி நம் வழிக்குத் திருப்புவதற்குள் இருங்கோவேளின் படைகள் பூம்புகாரை வளைத்துவிடும். இந்தக் காரணங்களால்தான் மன்னனை நம்புவதைவிட மக்களை நம்புவது மேல் என்ற முடிவுக்கு வந்தேன். நீங்களும் என் கையைப் பலப்படுத்தி விட்டீர்கள். நாங்கள் புறப்படுகிறோம். உங்கள் பிள்ளைகளிலே ஒருவனாகவே என்னையும் வழி அனுப்பி வையுங்கள். சோழ நாட்டின் மங்காத புகழை - குறையாத வீரத்தை மாற்றார் உணரச் செய்து, அந்த மாளிகையை நெருப்பின் வாயிலே தள்ளி விட்டுத் திரும்புகிறோம்! இருங்கோவேளின் படை அழிந்தால், பிறகு அவன் கையில் கோலில்லாத நொண்டிபோல் ஆகிவிடுவான். அவனை அடிமையாக்கிப் பூம்புகார்த் தெருவிலே இழுத்துச் செல்வோம்! என்னருமைத் தாயகத்துப் பெருமக்களே! புறப்படுங்கள்!''

- கோச்செங்கணானின் இந்த முழக்கம் கேட்டுப் போருக்கு எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களும் வீராங்கனைகளும் ஆவேசத்துடன் புறப்பட்டார்கள்.

அவர்களை முதியவர்கள் வாழ்த்தி வழியனுப்பி வைத்தனர். தங்கள் அருமைச் செல்வங்களுக்கு முத்தமளித்து விட்டுக் கோச்செங்கணான் பின்னே பூம்புகார் மக்கட்படை தொடரலாயிற்று.

அதனை விட்டு இரண்டு கல் தொலைவில் பூம்புகார்ப் படை செல்லும் போது, எதிர்த்திசையில் இருங்கோவேளின் படைகள் வருவதை முத்துநகை உணர்ந்து கொண்டாள். உடன் அவள் நின்று, பூம்புகார் மக்களுக்குப் போராட வேண்டிய முறைப்பற்றி விளக்கமுரைத்தாள். அவளது விளக்கத்தை ஏற்றுக்கொண்டு அவர்களும் செயல்படத் தொடங்கினார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் பூம்புகார் மக்கள் திடீரென மறைந்து விட்டார்கள். அவர்களின் தலைவன் கோச்செங்கணானையும் காணவில்லை. காட்டுமரங்கள் ஒவ்வொன்றின் மறைவிலும் ஒவ்வோர்

ஆளென ஒளிந்து கொண்டார்கள் கோச்செங்கணான் உயர்ந்த மரமொன் றின் உச்சியில் மளமளவென்று ஏறினான். எதிரியின் படைகள் எவ்வளவு தூரத்தில் வருகின்றன என்று பார்ப்பதற்காகவே அவன் இத்துணை பரபரப்புடன் மரத்தில் ஏறினான். அந்த அவசரத்தில் மரக்கிளையென்று மலைப்பாம்பைப் பிடித்துக் கொண்டு கிளைக்குக் கிளை தாவினான் என்றால், அவனது உணர்ச்சியை அளவிட்டுக் காட்ட முடியுமா?

உச்சியிலிருந்தவாறு இருங்கோவேளின் வேளிர் படைகள் வருகின்றனவா என்று விழி வலிக்கும் வரையில் பார்த்துக் கொண்டிருந்த கோச்செங்கணான், கீழே குனிந்து அனைவரையும் தயாராகச் சொன்னான். அதோ இருங்கோவேளின் படைகள்!

என்ன அதிசயம்! அனைவரும் பண்டார உடையில் அல்லவா வருகிறார்கள்! இப்படித்தானே முன்பொருமுறை பூம்புகாரில் நுழைந்து, செழியனைத் தூக்கிக் கொண்டு போனார்கள். முத்துநகைக்கு ஆவேசம் மிகுந்தது.

''ம்! தயார்! தயார்!'' என்று கீழே ஒளிந்துள்ள பூம்புகார் மக்களுக்கு ஆணையிட்டாள்.

இருங்கோவேளினது பண்டாரப் படை செந்தலையார் தலைமையில் புயல் வேகத்தில் வந்து கொண்டிருந்தது. மரத்துக்கு மரம் பூம்புகார்ப் படையினர் பதுங்கிக் கொண்டு தங்கள் தலைவனின் அடுத்த கட்டளைகளை எதிர்நோக்கியிருந்தனர். மரமாளிகையிலிருந்து புறப்பட்ட பண்டாரப்படை வீரர்களுக்குத் தங்களைச் சூழ்ந்து மரவியூகத்தில் எதிரிகள் ஒளிந்திருக்கிறார்கள் என்று எப்படித் தெரியும்? பண்டாரப் படையின் நீளத்தையும் அதில் வரும் வீர்களின் கம்பீரத்தையும் கண்ட முத்துநகை, தன் தலைமையிலுள்ள மக்கள் படையின் வலிமையை ஒரு கணம் எண்ணிப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். எனினும் அயர்ந்து போகாமல் ஆணையிடுவதற்குத் தன்னை தயார்ப்படுத்திக் கொண்டாள். பூம்புகார் மக்கள் எத்தனை பேரை இந்த இடத்திலே பலியிட வேண்டுமோ என நினைத்துக் கவலைப்பட்டாள். அதே சமயம் தன்னைப் போன்ற வீரப்பெண்மணிகள் பலர் எதிரியின் படை பலத்தைச் சாய்க்கும் நோக்கத்துடன் மரங்களின் பின்னே ஒளிந்திருக்கும் காட்சி அவளுக்குத் தெம்பு கொடுத்தது:

பண்டாரப்படை, மரவியூகத்திற்கு அருகே வந்து விட்டது. அனைவருமே காவி கமண்டலங்களுடன் வருகிறார்கள். அந்தச் சாய உடைக்குள்ளே சாவுக் கருவிகள் மறைக்கப்பட்டிருக்கின்றன. முன்னே

வந்து கொண்டிருக்கும் அந்தக் கிழட்டுச் செந்தலையாருக்கு இவ்வளவு பலம் எங்கிருந்து வந்தது?

இப்படி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்த முத்துநகையின் கண்களில், தூரத்தில் வேறோர் அதிசயமான காட்சி - ஆனால் அதிர்ச்சி தரக்கூடிய காட்சி - தோன்றியது,

வேறொரு பாதையில் இருங்கோவேளின் படையைச் சேர்ந்த குதிரைகள் ஓடிக்கொண்டிருந்தன. அந்தக் குதிரைகளை ஒரு சிலரே கண்காணித்துச் சென்றனர். முத்துநகைக்குச் செந்தலையாரின் தந்திரம் புரிந்துவிட்டது. 'பண்டாரப்படை தலைநகரில் புகுந்து அரண்மனையில் நுழைய நேரம் பார்த்திருக்க வேண்டியது. நுழையும் நேரத்தில் குதிரைகள் தேவைப்படுமாதலால் அதற்கான குதிரைகளை வேறொரு பாதையில் பூம்புகாருக்குக் கொண்டு செல்ல வேண்டியது.' எங்கே-எப்போது-எந்தத் தந்திரம் கையாளப்பட்டுப் பண்டாரங்கள் அந்தக் குதிரைகளை அடைவார்களோ தெரியவில்லை. செந்தலையாரின் சூழ்ச்சியில் ஒரு பகுதியை மட்டும் அவள் புரிந்து கொண்டாள். அந்தக் குதிரைகளால் இப்போது இங்கு தொல்லையில்லை என்ற மகிழ்ச்சியுடன் முத்துநகை, செந்தலையாரும் படைவீரர்களும் எதுவரையில் வந்திருக்கிறார்கள் என்று பார்த்தாள்.

இப்போது அவர்கள் மரவியூகத்துக்கு மத்தியிலே வந்து விட்டார்கள். இன்னும் தங்களுடைய தலைவனிடமிருந்து ஆணை பிறக்கவில்லையே என்று பூம்புகார் மக்கள் துடிதுடிப்புடன் மேலே மரக்கிளையின் உச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள், தங்கள் கழுத்து வலியையும் பொருட்படுத்தாமல்!

மரவியூகத்துக்குள் பண்டாரப்படையின் வரிசை வரவர முத்து நகைக்கு உள்ளத்திலே ஒரு கலக்கம் ஏற்பட்டது. போர் புரிய வேண்டுமே. அந்தப் போரில் தன் உயிர் போய்விட்டால் என்ன செய்வது என்ற கலக்கமல்ல, அது! வெறியும் முரட்டுத்தனமும் கொண்ட இருங்கோவேள் படையினரின் வாளுக்கும் வேலுக்கும் தன் நாட்டு மக்கள் அனைவரும் பலியாகிவிடக்கூடுமோ? வெற்றிபெற்ற வேளிர்படை, பூம்புகார் அரண்மனையிலும் நுழையக் கூடுமோ - என்ற ஐயப்பாட்டின் மீது எழுந்த கலக்கமே அவளை ஒரு கணம் நிலைகுலைய வைத்தது.

மிகவும் நெருக்கடியான அந்த நேரத்தில் அவளுக்குப் பின்புறமாகச் சிறிது தொலைவில் குதிரையொன்று வேகமாக வரும் காலடி ஓசையும் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். மரங்களின் மறைவிலும் புதர்களின் ஓரத்திலும் குதிரை வந்து கொண்டிருந்ததால் அதில் அமர்ந்திருந்தது யார் என்று கண்டுபிடிப்பது அவளுக்குக் கஷ்டமாக இருந்தது.

குதிரையில் வருபவனைக் கவனிப்பதா?பண்டாரப்படையின் மீது பாய்வதற்குத் தன் மக்களுக்கு ஆணையிடுவதா?

அது மட்டுமல்ல- அங்கே உள்ள பயங்கரம்! அவள் மர உச்சிக்குச் செல்லும்போது ஏறிச் சென்றாளே, மலைப்பாம்பு - அது வேறு அவள் கீழே இறங்கி வரட்டும் என்றோ என்னவோ அடிமரத்துக் கிளையிலே அமைதியோடும் ஆவலோடும் படுத்துக் கொண்டிருக்கிறது!

குதிரை, மிக வேகமாக வருவதைக் கண்டாள். மரவியூகத்துக்கு பண்டாரப்படை முழுவதும் வந்து விட்டதையும் உணர்ந்தாள். இனித் தாமதிக்கக் கூடாது; என்ன ஆனாலும் ஆகட்டுமென்று, ''கரிகால் மன்னர் வாழ்க! ம்... பாயுங்கள்!'' என்று உரத்த குரலில் கூவினாள்.

பூம்புகார் மக்கள் சிங்கம்போல் கர்ச்சித்து நடுவில் சிக்கிய பண்டாரப் படையின் மீது பாய்ந்தனர். அவர்களுக்கு ஆணை பிறப்பித்த உணர்ச்சிப் பெருக்கோடு மரத்திலிருந்து அவசரமாகக் கீழே இறங்கிப் போரில் கலந்து கொள்ள அடிமரத்துக் கிளையில் குதித்த முத்துநகையை மலைப்பாம்பு சுற்றிக் கொண்டது! அதன் பயங்கரப் பிடியிலிருந்து தப்ப முடியாமல் முத்துநகை மரக்கிளையிலிருந்து கீழே தொங்கிக் கொண்டிருந்தாள்.

தங்கள் தலைவன் கோச்செங்கணான் மலைப்பாம்பிடம் சிக்கித் தலைகீழாகத் தொங்குவதைக் கவனிக்காமல் பூம்புகார் மக்கள் வேளிர் வீரர்களை மடக்கி வீழ்த்துவதில் தீவிரமாக ஈடுபட்டனர்.

இருங்கோவேள் என்கிற கொடிய நச்சுப் பாம்பின் கோரப் பற்களுக்கிடையேயிருந்து சோழ மண்டலத்தைக் காக்கும் பயங்கரப் போராட்டத்தில் ஈடுபட்டுவிட்ட முத்துநகை, மலைப்பாம்பின் பிடியில் சிக்கிக் கொண்டதை யாருமே கவனிக்கவில்லை.

''பாயுங்கள்?'' என்ற தலைவனின் ஆணை புறப்பட்டது தான் தாமதம்; பூம்புகாரை வெற்றுப் பூமியாக்கி விட்டு வந்திருந்த பெரும்படை புயலில் பறக்கும் சருகைப் போல் பாய்ந்தது.

வஞ்சினம் ஏற்று வந்தவர்களின் மேல் மன்னனைக் காக்கும் மகத்தான கடமையைப் பெற்றுவிட்டவர்கள் பாய்ந்து விட்டார்கள்.

உடலைப் பண்டார உடைக்குள்ளும், உள்ளத்தைப் பழி வாங்கும் உணர்ச்சிக்குள்ளும் மறைத்துக் கொண்டவர்களை நோக்கி, கோச்செங்க ணானின் ஆணைக்குத் தங்கள் உடல், பொருள், ஆவி அத்தனையையும் அர்ப்பணித்து விட்டவர்கள் மோதிய அந்தக் காட்சிக்கு ஈடு.

இதுவரை எந்த ஏடுகளிலும் காணாத ஒன்று. கற்பனைக் கண்களாலும் எவரும் காணச் சகிக்காத ஒன்று.

வெல்லற்கு அரியான் இலங்கை வேந்தனின் போர்த்திறன் உணராத குலப்பகைவனாம் இராமன். ''இன்று போய் நாளை வா!'' என்று வேண்டினானாமே; அன்றிருந்த களக் காட்சியை நினைப்பதா?

'வாளுக்கு முத்தமிடும் தமிழனை இகழ்ந்தோரைத் தாள் பணியச் செய்வேன்' எனச் சூளுரைத்துச் சென்ற சேரன் செங்குட்டுவன், கனக விசயர் மண்ணிலே கண்ட இரத்தக்களரியை எடுத்துக் காட்டுவதா?

களம் பல கண்ட சரித்திரம் வெற்றித் தேவியை ஆரத்தழுவிக் கொண்ட வரலாறு - இதுவரை சந்தித்திராத புதுமையான போரல்லவா இது!

கொலைக் கருவிகளை மறைத்துக் கொண்டிருந்த புல்லர்கள் ஒரு புறம்; வெற்றுக் கைகளையே படைக் கலன்களாகப் பயன்படுத்திய மக்கள் மறுபுறம். இத்தகைய விந்தையான போரை எப்படித்தான் வர்ணிப்பது?

திடீரென்று வளைத்துக் கொள்ளப்பட்ட பண்டாரப் படை வரிசை தங்கள் இக்கட்டான நிலையைப் புரிந்து கொள்வதற்கு முன்னதாகவே பூம்புகார் மக்களால் தாக்கப்பட்டார்கள்! ''அய்யோ'' என்று எழும்பிய ஒரு பெருங்குரல் வனப்பகுதியில் மோதி எதிரொலித்தது; ஆனால் அதற்குள்ளேயா மலைப்பாம்பிடம் சிக்கிவிட்ட முத்துநகையின் அபயக்குரலும் மறைந்து அழித்துவிட வேண்டும்.

இரு கூட்டமும் மோதிக் கொண்டன.

மறைவிலிருந்த போர்க்கருவிகள் காலத்தை எதிர்பார்த்தக் கொண்டிருந்த வேல், வாள் எல்லாமே 'வேளை வந்துவிட்டது' என வெளிவந்தன.

பளபளத்த கொலைக் கருவிகள் மட்டுமா? அல்ல; அல்ல; நடுக்காட்டிலே வாழ்ந்திருந்தவர்களின் நாடி நரம்புகளிலே புதிய முறுக்கு ஏற்பட்டது. செந்தலையாரின் சிம்ம கர்ச்சனையால் சிலிர்தெழுந்தவர் செங்களம் காணத் தயாராகிவிட்டார்கள்! பகையைத் தூளாக்கத் துடித்தவர்களின் விழிகளிலே கொலைவெறி தாண்டவமாடியது!

எப்படிச் சமாளிப்பது இந்த எதிர்ப்பை? ஏதுமற்ற கரங்களால், எதிர்பார்க்காத பகைவர்களை வென்று விடுவதும் இயலுமோ? அய்யோ, எங்கிருந்தோ குதித்தவனுக்கு அடிமையானோமே; ஆணையைக் கேட்டோமே! கெட்டழியப் போகிறோமே!

- இப்படி நினைக்கவில்லை, பூம்புகார் மக்கள்!

அவர்கள் கரங்களிலே வாள் பளபளக்கவில்லை; ஆனால் கண்களிலே தோன்றிய இலட்சிய வெறியிலே தீக்குழம்பின் ஜ்வாலை தெரிந்தது!

எதிரியின் பாய்ச்சலைத் தடுக்கும் கேடயம் இல்லை அவர்களிடம். ஆனால், வேலா - வாளா - அமைதியுலகுக்கனுப்பும் சாவா - எதுவரினும் தடையில்லை; இடமுண்டு எம் நெஞ்சில் என்று வரவேற்புத்தரும் திறந்த மார்பகங்கள் தெரிந்தன!

''வேளிர் குடியினரே! வெற்றி வாசல் திறந்துவிட்டது. நம்மை நோக்கி! சோழ மண்டலத்தின் சோற்றாலடித்த பிண்டங்கள் நம்மைத் தேடிவந்து தருகின்றன உயிர்களை; இனி நாம் அடிமையல்ல; வேற்றானை அண்டிக் கிடப்போரல்ல; இதை அந்த அக்கிரமக்கார அரசனுக்குத் தெரிவிக்க அறுத்துக் கொண்டு வாருங்கள் தலைகளை; பெருக்கெடுத்து ஓடச் செய்யுங்கள் இரத்த வெள்ளத்தை! பகை! பகை! பகை!''

அந்தப் பெருங் கூச்சலிலே செந்தலையாரின் நெடிய குரல் எப்படித்தான் மற்றவர்களின் செவிகளில் பட்டதோ தெரியவில்லை. ''தூள்! தூள்! தூள்!'' என்ற முழக்கம் வானை முட்டியது!

ஆனால் பூம்புகார் மக்களின் செவிகளிலே இத்தகைய போர்க்கள எச்சரிக்கை கேட்கவில்லை; போர்க் குரல் கொடுக்கும் தானைத் தலைவன் தான் மலைப்பாம்பின் பசிக்கு உணவாகும் நிலையில் கிடக்கிறானே!

ஆனாலும், அந்த இலட்சியவாதியின் வீர உரை - பல்லாயிரம் மக்களைப் படையாகத் திரட்டிவந்த செயல் வீரனின் சிம்மக்குரல் அவர்கள் செவிகளில் ஒலித்துக் கொண்டுதான் இருந்தது. மன்னனுக்கு எதிராக அழைத்து வந்த மக்கள் வெள்ளத்தைப் போர் முகட்டுக்குத் திருப்பி விட, மரத்தின் மீது ஏறி நின்று அவன் கொக்கரித்த குரலை மீண்டும் கேட்பதாகத்தான் அவர்கள் உணர்ந்தார்கள்.

''இருங்கோவேளின் படையைச் சோழ நாட்டுப் படை வீரர்கள் எதிர்த்து முறியடித்தார்கள் என்று சொல்லும் போது ஏற்படுகிற பெருமையைவிட, அந்தப் படையைப் பூம்புகார் தலைநகரத்து மக்களே எதிர்த்து விரட்டினார்கள் என்று கூறும்போது தான் அதிகப் பெருமை என்று நான் கருதுகிறேன்...''

- ஆமாம்; அந்தப் பெருமையைச் சூடிக் கொள்ள நாங்கள் தயார் இந்தப் போர்க்கதையைக் கேட்டுச் சோழப் பேரரசர் விடப்போகும் ஆனந்தக் கண்ணீரை இறுதிக் குளியலாக ஏற்றுக் கொள்ள எங்கள் சவங்கள் தயார் - போராடிக் கொண்டிருந்த பூம்புகார் மக்களின் வீரம் இதைத் தான் பறை சாற்றியது!

''உரம் வாய்ந்த உங்கள் வீரக்கரங்களே எதிரிகளின் தலைகளை அறுத்துத் தள்ளும் போர் வாட்களாக மின்னட்டும்!''

- கோச்செங்கணானின் இந்தக் கட்டளை, காட்டுக் கெரித்த நிலவாகி விடவில்லை; படையிருந்தும், படைக்கலன் இருந்தும், எதிரியின் தலைகளைப் பந்தாடவேண்டும் என்ற பகை இருந்தும், வேளிர் வீரர்கள் தீப்பட்ட புழுவைப்போல் விழுந்து துடித்த காட்சி, ஆணையிட்ட தலைவன் கண்டாலும் அதிர்ந்துவிடக் கூடியதாகத்தான் இருந்தது!

ஆனால் அந்தப் போர்க் காட்சியைக் கண்டும் களிக்க முடியாமல் - 'வெற்றிக்கு வழிகாட்டுங்கள்!' என வீர உரை கொடுக்க ஆவல் இருந்தாலும் வாய் திறக்க முடியாமல் - மலைப்பாம்பின் மடியிலே தன் மரணத்தையல்லவா எதிர்பார்த்துத் துடித்துக் கொண்டிருக்கிறாள் முத்துநகை! மென்மையற்ற காட்டு மிராண்டிகளின் உடலையே புசித்துப் புசித்துச் சலித்துப்போன அந்தப் பசியெடுத்த மலைப் பாம்புக்கு, ஒரு மனித உடலைச் சுவைபார்ப்பதில், அதுவும் ஒரு கொள்கைவாதியின் வீரம் துடிக்கும் மேனியை விழுங்குவதில் என்ன ஆர்வமோ தெரியவில்லை. அந்தச் சுவையான விருந்துக்கு தன்னைத் தயார்செய்து கொண்டது வேக வேகமாக!

அதன் பிடி இறுகியது. முறுக்கிய கயிற்றைப் போல் அதன் நீண்ட உடலுக்கு இடையிலே சிக்கித் தவித்தாள் முத்துநகை!

இந்த மரணப் போராட்டத்தைப் பார்க்காத பூம்புகார் மக்கள், மனித உருக்கொண்டு வந்திருந்த மலைப்பாம்புகளை அழிக்கும் பெரும் பணியிலே தங்கள் உயிரையே பணயம் வைத்து ஈடுபட்டிருந்தார்கள்!

ஓட்டைக் கூரை வழியே ஊடுருவும் ஒளிபோல் பூம்புகார் வீரனின் மார்பிலே பாய்கிறது ஒரு வேல்! ''கரிகாலர் வாழ்க!'' என்று கூச்சலிட்டுச் சாகிறான் அவன்! அந்தக் குரல்கேட்டு ஓடிவரும் வேறொருவன் முகத்திலே புன்னகை! செத்து மடிந்தவனைக் கண்டு சிரித்திடக் காரணம்.; அவன் நெஞ்சிலே பாய்ந்திருக்கிற வேல் தனக்குக் கருவியாகப் பயன்படுமே என்ற மகிழ்ச்சி! ஆமாம்! உடன்பிறந்தான் ஒருவனைக் கொன்ற அந்த வேல், வேளிர்குடி வீரர்களை பலரை வீழ்த்தும் வாய்ப்பைத்தான் தேடித் தருகிறது! சாவும் சாதனைக்கு வழிகாட்டிய இத்தகைய நிகழ்ச்சிகள் அந்தப் போரிலே ஏராளமாக நடைபெற்றன! அப்படிச் செத்தும் கொடுத்தவர்களின் சவங்களின் மேல் நின்றவாறு பூம்புகார்ப் பெரும்படை போராடிக் கொண்டிருந்தது!

அதுமட்டுமா! கையிலே கருவி கிடைக்காத வீரர்கள் தங்கள் கரங்களையே கருவிகளாக்கிக் கொண்டனர். இன்னும் சிலர் இயற்கை அன்னையின் தயவையும் நாடத் தயங்கவில்லை. உருண்டு கிடந்த குண்டுக்கற்களைப் பலங்கொண்ட மட்டும் தூக்கிப் பகைவர்களின் தலைகளைக் குறி வைத்து வீசினார்கள்! தலை சிதறிய உடல்கள் பல இப்படி கீழே சாய்ந்தன!

அந்தப் போர்க்களப் பேரிரைச்சலுக்கிடையே சற்று முன்பு அங்கே எழும்பிக் கொண்டிருந்த குதிரையின் காலடி ஓசை இப்போது கேட்கவில்லை. ஆனால், கொஞ்ச தூரத்திலே குதிரை வருவது மட்டும் நன்றாகத் தெரிந்தது. குதிரைமேல் அமர்ந்திருந்த உருவம் நன்றாக புலப் படவில்லை. ஆனால், அங்கு ஏற்பட்டிருந்த இனம் புரியாத பேரொ லியைக் கேட்டு, அவன் முன்னிலும் வேகமாகத்தான் குதிரையைத் தட்டிவிடுகிறான் என்பது மட்டும் நன்றாகத் தெரிந்தது!

செத்தவர்கள் எழுப்பிய மரண ஓலம் - சாகின்றவர்கள் வாயிலிருந்து புறப்படுகின்ற புலம்பல் - வாட்கள் மோதிக் கொள்வதால் ஏற்படுகின்ற போர்க்கள ஓசை, இவ்வளவும் காட்டுப் பகுதிகளிலே மறைந்து கொண்டி ருந்த முதியவர்களின் செவிகளிலும் பட்டன!

போருக்குப் பின்வாங்குகின்ற மரபிலே வந்தவர்கள் அல்லர் அவர்கள்; முரசு ஒலி கேட்டு வீட்டுக்கொருவீரரை அனுப்பி வைப்ப தோடு மட்டுமல்ல - வேளை வந்துவிட்டால் வேலெடுத்துப் பாயும் வீரக்குடியின் பரம்பரையில் உதித்தவர்கள்தாம். இருந்தாலும் அவர்கள் முகங்களிலே கவலையின் ரேகைகள் படர்ந்தன.

அதைப் போலத்தான் முதுபெருங் கிழவிகளின் இதயங்களும் சற்றுத் துணுக்குற்றன! அடுத்தடுத்த நாட்களிலே தங்கள் குடும்பங்களின் ஆண் மக்களையெல்லாம் போருக்கனுப்பிய பின், இனியும் வீரனில்லையே என்று ஏங்கி, மழலைகளின் கையிலும் வாளெடுத்துத் தந்து, "சென்றுவா மகனே செருமுனைநோக்கி!" என்று வாழ்த்தி வழியனுப்பி வைத்த வீராங்கனைகள் அவர்களின் மூதாதையர் அல்லவா? புறமுதுகிட்டான் மகன் என்று பொல்லாங்கு கேட்டுப் புலியெனச் சீறி, மானம் கெட்டவ னுக்கு பாலூட்டிய மார்பகத்தை அறுத்தெறிவேன் என்று வஞ்சினம் ஏற்ற மறக்குடிப் பெண்டிரின் வரலாற்றை மறந்து விட்டவர்கள் அல்லவே அவர்கள்?

இருந்தாலும் வாழ்வை அனுபவித்துவிட்ட அந்த வயோதிகர்களின் கலக்கத்திற்குக் காரணம். தாங்கள் பெற்றெடுத்த வீரத் திருவிளக்குகள் தாயகத்தின் மானம் காக்க அணைந்து கொண்டிருக்கிற நேரத்தில், அவர்கள் மட்டும் மறைந்து கொண்டு நிற்பதா என்பதே?

"நாம் பெற்ற மக்கள் அங்கே மானம் காத்துக் கொண்டிருக்கிறார்கள்; மடிந்து கொண்டிருக்கிறார்கள்! காட்டு மரங்களினூடே பதுங்கிக் கிடக்க நாம் மட்டும் என்ன சுயநலக்காரர்களா? அல்லது சாவதற்குப் பயந்த கோழைகளா? புறப்படுங்கள்! துவண்டு விழும் அவர்களுக்குத் தோள் கொடுக்கப் புறப்படுங்கள்!"

- முதியவர் ஒருவரின் குரல் இப்படி எழும்பி அந்த வட்டாரத்தையே கிடுகிடுக்க வைத்தது!

மறுகணம் மறைந்திருந்த அவர்களும் சண்டை நடக்கின்ற இடம் நோக்கிச் சண்டமாருதமெனக் கிளம்பினார்கள்! குழந்தைகள் எழுப்பிய கூக்குரல் அவர்களைத் தடுத்து நிறுத்தவில்லை; ஏறுநடை போட்டு வேகவேகமாக நடந்தார்கள்.

உங்களுக்குச் சளைத்தவன் நானல்ல என்று சவால் விடுகிற முறையிலே வேளிர்குல அமைச்சர் செந்தலையார் அவர்களை நோக்கினார்; அந்தக் கிழப்புலி மீண்டும் உறுமியது!

''தொகைதொகையாகப் புறப்பட்டுவிட்டனர் பகைவர்கள்! இருங்கோவேளின் விலாப்புறத்து எலும்புகளே! நம் குல மன்னனைப் பிடித்துவிட்ட மதோன்மத்தனாம் கரிகாலன், படைக்குப்பதிலாகப் பல்லாடும் கிழவர்களையும் அனுப்பி விட்டான். வாருங்கள்! நல்ல பாடம் புகட்டுவோம். அந்த பகல்வேடக்காரனுக்கு! துவண்டு விடாதீர் கள்; துண்டாடுங்கள் துரோகிகளை; நாளை நம் மன்னர் மீண்டு வந்தால் எதிரிகளின் இரத்தத்தால் குளிப்பாட்டுவோம் அவரை! வெற்றி விழாக் கொண்டாடுவோம்; இந்த வீணர்களின் மரணக் கூக்குரலைப் பின்னணி யாக்கு. பகை! பகை! பகை!''

இப்படி மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு முழங்கிய செந்தலையார், மறுகணமே ''அய்யோ!'' என்று அலறினார். அந்தக் கதறல் காட்டையே ஓர் உலுக்கு உலுக்கி விட்டது!

வேளிர்குல வீரர்கள் திடுக்கிட்டு குரல் வந்த திசையை நோக்கி னார்கள்.

அங்கே...

நெஞ்சிலே பாய்ந்த வேல் குத்திட்டு நிற்க - குருதி வெள்ளத்திலே தெப்பமென மிதந்து கொண்டிருந்தார் செந்தலையார்!

''அய்யோ.. அமைச்சரே!''

வேளிர்குடி வீரர்களின் இந்த கூக்குரல் ஒன்றாகச் சேர்ந்து எழுந்தது. சிலர் அவரிடம் ஓடினார்கள். பலர் செயலற்று நின்றார்கள்! கடைசிக் காலத்தில் அவர்களின் பக்கத்தில் நின்று, போராடும் துணிவூட்டிக் கொண்டிருந்த ஒரே ஒரு மூச்சும் காற்றோடு கலந்துவிடப் போகிறதே- என்பதை அவர்களால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை.

''என்னை விட்டுவிடுங்கள்! என்னை விட்டுவிடுங்கள்!!'' செந்தலையார் தன்னை நோக்கி வந்தவர்களைப் பார்த்து, 'வராதீர்கள்' என்கிற பாணியில் சைகை காட்டினார்.

''நான் சாகவில்லை! நோய்க் கிருமிகள் என்னை அரித்துத் தின்று, ஈளைகட்டி, இருமி, விக்கி, வியர்த்து, விழி பிதுங்கி - நான் சாகவில்லை!

இதோ... வீரனாகச் சாகிறேன்! வேளிர்குடியின் வீரத்திற்கு இலக்கணமாய், நம் மன்னர் பெருந்தகையின் மானத்திற்கு ஒரு சின்னமாய்ச் சாகிறேன்! நீங்கள் போராடுங்கள்! உங்கள் உடலின் கடைசித்துளி இரத்தம் இருக்கும் வரையில் மானம் காக்கப் போராடுங்கள்!... எதிரிகளை மரமாளிகையின் பக்கம் போகவிடாதீர்கள்! அது நம் அரண்மனை. அங்கே இந்த அக்கிரமக்காரர்களை அண்ட விட்டுவிடாதீர்கள்!''

-செந்தலையார் முன்னிலும் உரத்த குரலெடுத்து அலறினார். கீழே விழுந்து கிடந்த அமைச்சரிடம் ஓடோடி வந்தான் ஒரு வீரன். அவரது தலையைத் தன் மடி மீது வைத்துக் கொண்டான்!

''ஏன் நீ இங்கே வந்தாய்? ஓடு ஓடு... இல்லை... இல்லை... நில் வீரனே! நீ எனக்கு ஓர் உதவி செய்வாயா?... நம் வீரர்கள் வென்று விடுவார்கள்!... நிச்சயம் வென்று விடுவார்கள்!. நாளை... நாளை நம் மன்னர் வெற்றி வீரராகப் பகைவன் கோட்டையிலிருந்து பவனி வருவார்! என்னுடைய பிணத்திற்கு அவரையே தீயிடச் சொல்வாயா?... அப்போதுதான், கால மெல்லாம் அவருக்கு உழைத்த இந்தக் கட்டை வேகும்! செய்வாயா... பகை!... பகை!!...''

- மறுகணம் செந்தலையாரின் தலை சாய்ந்து விட்டது!

அதே சமயத்தில் குதிரையின் காலடியோசை அங்கே எழும்பியது.

வீரர்கள் ஏறிட்டு நோக்கினார்கள்! குதிரைமேலிருந்த உருவம் அவர்களைச் சேர்ந்த எவருடையதுமல்ல என்பதைக் கண நேரத்தில் தெரிந்து கொண்டார்கள்! 'சோழப் படை தான் வரவேண்டும்; படை நடத்தி வருகிற தானைத் தலைவன் முன்னே வந்துவிட்டான்போலும்' என்று கருதிய அவர்கள் அப்போது திடுக்கிட்டார்கள்! தாங்கள் மிகவும் நெருக்கடியான கட்டத்தை அடைந்து விட்டதாகவும் உணர்ந்தார்கள்!

மறுகணம் தலைவனை இழந்த போர்முகப் படை என்னவாகுமோ- அது அங்கே நடந்து விட்டது!

இருங்கோவேளின் படைவீரர்கள் கருவிகளை வீசி எறிந்து விட்டுச் செந்தலையாரின் சவத்தையும் அப்படியே விட்டு விட்டுப் புறமுதுகிட்டு ஓடத் துவங்கி விட்டார்கள்!

குதிரையிலே வந்த வீரன் வேறு யாருமல்ல; கோச்செங்கணான் தலைமையில் சென்ற பூம்புகார் மக்களின் பாதச் சுவடுகளை அடையாளங்கண்டு வந்த கரிகால் மன்னனே தான்!

காட்டுவழி வந்த அவன், போர்க்களத்தைச் சென்றடைவோம்; அங்கே இருட்டுலகில் வசித்து வந்த இருங்கோவேளின் படைகள்

புறமுதுகிட்டு ஓடும் காட்சியைக் காண்போம் என்று நினைத்துக்கூடப் பார்க்கவில்லைதான்!

ஆனாலும், இந்த எதிர்பாராத நிகழ்ச்சி குறித்து அவன் மனத்திலே எந்தவிதக் கருத்தும் ஏற்படுவதற்கு முன்பு, ஒரு கோரக்காட்சியைக் கண்டு திடுக்கிட்டான்!

இருபுறத்து வீரர்களும் அவ்வளவு நேரம் அங்கே போராடிக் கொண்டிருந்தபோது, மலைப்பாம்புடன் போராடிக் கொண்டிருந்த முத்துநகை, மலைப்பாம்பின் விரிந்த வாய்க்குள் தன் தலையை உணவாகத் தரப்போகும் காட்சியைத்தான் மன்னன் கரிகாலன் கண்டுவிட்டான் அப்போது!

மறுகணம் கீழே கிடந்த வேல் ஒன்றை எடுத்து வீசினான் முழுப்பலத்துடன். அருகிலே ஓடி, மீண்டும் அந்த வேலினாலேயே மலைப்பாம்பின் உடலைத் தாக்கினான்!

மலைப்பாம்பு கீழே விழுந்தது, அதன் பிடி தளர்ந்தது. நழுவியது! விடுபட்ட முத்துநகை கண்விழிக்காது கிடந்தாள்.

மன்னன் அவள் முகத்தருகே குனிந்தான். ''வீரனே! என்னைப் பார்!'' என்று அழைத்தான்!

மெதுவாகத் திறந்த முத்துநகையின் விழிகள் எதிரே மன்னனைக் கண்டு திடுக்கிட்டன!

''அரசே...!' வீறிட்டலறிய அவள் அவன் பாதத்திலே முகம் புதைத்து விம்மி விம்மி அழுதாள்!

பரிவுடன் - பாசத்துடன் கோச்செங்கணானைத் தூக்கினான் மன்னன் கரிகாலன்!

மலைப்பாம்பின் விரிந்த வாய்க்குள்ளே தன் உடல், உயிர், அவற்றினும் மேலான இலட்சியம் - எல்லாவற்றையுமே அர்ப்பணிக்க இருந்த நேரத்தில் கூட முத்துநகையின் உள்ளத்திலே அந்தப் போராட்டம் நிகழவில்லை. காட்டுக்கு மத்தியிலே - கரிகாலனுக்கு முன்னே - கோச்செங்கணானின் உடையிலே நிற்க வேண்டிய எதிர்பாராத நிலை ஏற்பட்டபோது தணலிடைப்பட்ட புழுவாகத் துடித்தது அவளது நெஞ்சு!

வீரத்தோடு மலைப்பாம்பை வீழ்த்திவிட்டுப் பாசத்தோடு தன்னைத் தூக்கி நிறுத்திய மன்னனது கரங்களிலிருந்து தன்னை மெதுவாக விடுவித்துக் கொண்டாள். ஆனால் நெஞ்சில் நிறைந்துவிட்ட புகை மண்டலத்திலிருந்து பனி நிறைந்த மூட்டத்திலிருந்து அவளை விடுவிக்கும் சக்தி அப்போது எதற்குமே கிடையாது.

தெரிந்தோ தெரியாமலோ பூம்புகார்ச் சரித்திரத்தில் நடைபெற்றிராத செயல் ஒன்றைச் செய்துவிட்டாள் அவள். அதைப்பற்றி மன்னன் என்ன கருதுகிறான்? மக்கள் வாழ, தான் வாழ நினைக்கும் அந்தப் பெருந்தகையாளனின் பூமியிலிருந்து 'புறப்படுவீர் மக்களே!' என்று ஆணையிட்டு அழைத்துச் சென்ற அதே நேரத்தில் அவனுடைய நெஞ்சிலே குடி கொண்டிருந்த அமைதியையும் அல்லவா கூடவே அழைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள்? மன்னனுக்கு எதிராக மக்களைத் திரட்டிய குற்றமும், ஆணையேதும் பெறாமல் அவர்களை எதிரியின் பாசறை நோக்கித் திருப்பிவிட்ட குற்றமும், நடுக்காட்டிலே இரத்தக் களரியைத் தோற்றுவித்த பலரை இறப்புலகிற்கு அனுப்பிவிட்ட பயங்கரமான குற்றமும் மன்னிக்கக் கூடியவையல்ல என்பதை முத்துநகை நன்கு உணர்ந்து விட்டாள். அதனினும் பெருங்குற்றம் மன்னனை அந்த மாறுவேடத்தில் ஏமாற்றிக் கொண்டு நிற்பதல்லவா? இந்த இக்கட்டான நிலையிலிருந்து தப்புவதற்கு வேறு என்ன தான் வழி?

மின்வெட்டு நேரத்தில் முத்துநகையின் உள்ளத்தில் இந்த எண்ணங்களின் சதிராட்டம் நடைபெற்றுவிட்டது! இந்த ஊமை நாடகத்திற்கு எப்படி முடிவு காண்பது என்று தவித்துக் கொண்டிருந்த போது, அந்தத் திருப்பணியை ஏற்றுக் கொள்வதைப் போல் சற்றும் எதிர்பாராத நிகழ்ச்சி நடந்தது.

அமைச்சர் செந்தலையாரின் உடலருகே நின்று கொண்டிருந்த ஒரு வீரன், வெறிபிடித்தவனைப் போல் அவர் மார்பிலே தைத்துக் கொண்டிருந்த வேலை உருவி எடுத்தான். ''வேளிர் குலத்தை அழிக்க வந்த கொலைகார வெறியனே! எங்கள் அமைச்சரின் இதயத்தைப் பிளந்த இந்த வேல், உன்னையும் இல்லாமல் ஆக்கட்டும்!'' என்று கர்ச்சித்தான். கண் இமைக்கும் நேரத்தில் அந்த இரத்தம் தோய்ந்த வேலை 'முத்துநகையை நோக்கி வீசி எறிந்தான்.

''அய்யோ... வீரனே!'' - அலறினான் கரிகாலன்.

முத்துநகை நிலைமையைச் சமாளித்துத் தப்புவதற்குத் தயாராவதற் குள் வேல் பாய்ந்து விட்டது! நெஞ்சிலே அல்ல; அவளை மாறுவேடதாரி யாக ஆக்கி வைத்திருந்த தலைப் பாகையில்!

வேலோடு தலைப்பாகை கீழே வீழ்ந்தது! அலை அலையாய்ச் சுருண்ட அடர்த்தியான கூந்தலும் அவிழ்ந்து தொங்கியது! முத்துநகை தன் நெஞ்சிலே வேல் பாய்ந்து விட்டதைப் போல் அதிர்ச்சியில் தவித்துப் போனாள், அந்தக் கணத்தில்!

''முத்துநகையா? காரிக்கண்ணனாரின் புதல்வியா?''- கரிகாலன் தன் கண்களையே நம்பத் தயாராக இல்லாதவனைப் போல இப்படிக் கேட்டான்.

''எனனை மன்னித்து விடுங்கள் மன்னவா!'' அரசன் சற்றும் எதிர்பாராத வண்ணம் அவனது காலடியிலேயே வீழ்ந்தாள் முத்துநகை.

இந்தப் புதிரான காட்சியைக் கண்ட வேளிர்குல வீரனின் தாக்குதல் தொடரவில்லை! காரணம் 'மன்னவா, என்று முத்துநகை விளித்ததுதான்! அடுத்த கணமே எதிரே நிற்பவன் சோழ மன்னன் கரிகாலன்தான் என்பதை அவன் ஐயமறத் தெரிந்து கொண்டான். ஆகவே, அதைத் தொடர்ந்து அவன் நெஞ்சத்திலே கொஞ்ச நஞ்சம் ஒட்டிக் கொண்டிருந்த பழி வாங்கும் உணர்ச்சியும் விடை பெற்றுச் சென்றுவிட்டது.

கரிகாலன் தான் பேசினான்: ''முத்துநகை! எழுந்திரு! நான் உன்னை மன்னிப்பதா? நீ செய்த பயங்கரமான குற்றத்திற்கு இந்த உலகத்தில் மன்னிப்பே கிடையாது!''

''அரசே!'' திடுக்கிட்டு எழுந்தாள் முத்துநகை. அவளது குரலிலே பீறிட்டெழுந்த சோகத்தை மன்னன் உணர்ந்து கொண்டான்.

''ஆமாம்! சோழப் பெருங்குடி மன்னனாக மகுடம் சூட்டிக் கொண்ட என்னுடைய உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் வலக்கரமாகப் பிறந்திருக்க வேண்டிய நீ - என் இதயத்தைச் சுற்றிக் காவலிருக்கும்

எலும்புக் கூடாக, சிறைக் கதவாகச் செயலாற்றும் கண் இமையாகப் பிறவி எடுத்திருக்க வேண்டிய நீ - ஒரு பெண்ணாகப் பிறந்து விட்டது மாபெரும் குற்றமில்லாமல் வேறு என்ன?''

முத்துநகை கொண்ட அதிர்ச்சி கணநேரத்தில் அளவிடற்கரிய ஆனந்தமாக மாறிவிட்டது! அவள் விட்ட மகிழ்ச்சிப் பெருமூச்சின் சூடு தாங்காமல் தானோ என்னவோ, பிணக்குவியலில் இரை தேடவந்த காட்டுக் கழுகுகள் கூடச் சற்று பின்னடைந்து போயின!

''எனக்கு அந்தப் பெரும் பேற்றைத் தாங்கள் அளிக்கிறீர்களா மன்னவா?''

''இதை விட உயர்ந்த முறையில் உன்னைப் பாராட்ட உன்னுடைய தியாகத்தைப் புகழ - உனது தந்தையைப் போல் நானொரு புலவராகப் பிறக்கவில்லையே என்று வருந்துகிறேன் அம்மா!''

''போதும் அரசே! போதும்! இது ஒன்றே போதும்; நான் பிறவி எடுத்ததன் பயனைப் பூரணமாக அடைந்து விட்டேன்! பெண்ணாகப் பிறந்தவளின் வாழ்க்கையிலே வந்து போகும் பெருமைக்குரிய நாட்கள் இரண்டுதான் என்று நான் காவியங்களிலே படித்திருக்கிறேன்! நெஞ்சில் நிறைந்தவனுக்கு மாலை சூட்டும் திருநாளும்...''

''பெற்றெடுத்த மழலைச் செல்வம் தன் மார்பில் புரளும் பெரு நாளும் என்று சொல்கிறாயா? சோழ மாதாவின் சுந்தரத் திருமார்பிலே உரிமையோடு புரளும் பெருமையை நீ ஏற்றுவிட்டதாகவும், அதைப் போலவே இன்று நீ காப்பாற்றிய சோழர் குலத்தின் மானம்தான் நீ பெற்றெடுத்த மழலை என்றும் சொல்கிறாயா? இல்லை, முத்துநகை! இரண்டே இரண்டு தினங்கள் மட்டுமல்ல உனக்குப் பெருமையைத் தேடித் தந்தவை! உயிரைப் பணயம் வைத்து நீ போராடிக் கொண்டிருந்தாயே, அந்த ஒவ்வொரு கணமும் உன் வாழ்வினிலே பெருமைக்குரிய நேரம், குறுகிய வாழ்வுக் காலத்திலேயே கோலூன்றும் முதியோரும் எண்ண முடியாதவற்றை நீ சாதித்துக் காட்டியிருக்கிறாய் அம்மா!''

''இல்லை மன்னவா! இனிமேல்தான் பெரும்பகுதி பாக்கியிருக்கிறது! சோழ மண்டலத்தைச் சுற்றியிருக்கும் துரோகத்தை மறைத்திருந்த உடை மட்டுமே இப்போது அகற்றப்பட்டிருக்கிறது! இறைந்து கிடக்கும் இந்த பிணங்கள் - பெருகி ஓடும் இரத்த வெள்ளம் - எல்லாமே அந்த அணிகலன்கள் தாம்! ஆனால் அந்தத் துரோகம் அழிக்கப்படவில்லை, துரோகத்திற்குத் துணையாக நிற்கும் வஞ்சக சக்தியும் முறியடிக்கப் படவில்லை.''

உறுதி கலந்த அவளது குரல் மர்மமான யவனக்கிழவரையும், அவரை மறைத்து வைத்துச் சதி செய்யும் தந்தை காரிக்கண்ணனாரையும் சுற்றிக் கொண்டு சென்றது ! ஆனால் அவளது துடிப்பான பேச்சைத் தடுத்து நிறுத்தி விட்டது மன்னனது குறுக்கீடு.

''இல்லை; இல்லை! நீ அனுபவித்த கொடுமைகளே போதும்! தென்றல் சிலுசிலுக்க வேண்டிய உன் வாழ்க்கையிலே இனிப்புயல் எழுப்பும் பேரொலி கேட்கக் கூடாது. மலர்ந்து மணம் பரப்ப வேண்டிய வாழ்வு மலர். நடுக்காட்டில் மரக்கிளையில் மோதிச் சிதறிச் சுருண்டுவிடக் கூடாது! நீ வாழ வேண்டியவள்! இனிநான் உனக்கு எந்த ஆணையும் இடமாட்டேன்!

''ஆனால், ஒன்றும் மட்டும் பாக்கியிருக்கிறது மன்னவா!''

''எதைச் சொல்லுகிறாய் முத்துநகை?''

''இடையில் ஏற்பட்ட இடர்ப்பாடுகள் ஏராளம் என்றாலும் அன்றொரு நாள் நான் எடுத்துக் கொண்ட இலட்சியம் ஒன்றுண்டு. ஆணுடை பூண்டு, உங்களிடம் அனுமதி பெற்றுப் புறப்பட்டேனே- அந்த முதற் பணியை நான் மறந்து விடவில்லை! செழியனை மீட்பதுதானே எனக்கு நீங்கள் அளித்த கட்டளை...?''

''ஆம்!''

''அதை முடிப்பதற்குள் - பாண்டிய நாட்டுக்குச் சேர்ந்திட வேண்டிய அந்தச் சொத்தை மீட்டுத் தருவதற்குள் - என் கைகளுக்கு விலங்கிடக் கருதலாமா?... புறப்படுங்கள் இப்போதே, இருங்கோவேளின் மரமாளிகைக்குச் சென்று செழியனை மீட்போம்!''

- என்று சொல்லிவிட்டு முத்துநகை புறப்படத் தயாரானபோது அவர்களைச் சுற்றிலும் வேளிர்குடி வீரர்கள் பலர் சூழ்ந்து நின்றனர்.

கையொடிந்த நிலைக்கு ஆளாகிவிட்ட அவர்களால் எந்த வித ஆபத்தும் நேராது என்று இருவருக்கும் நன்றாகத் தெரியும். ஆனாலும் அவர்கள் ஏதோ சொல்ல நினைக்கிறார்கள் என்பதுணர்ந்து, 'என்ன வேண்டும்' என்று கேட்கும் பாவனையில் அவர்களைப் பார்த்தார்கள்.

''கரிகால் மன்னரே! போரிலே வீர மரணம் அடைந்து விட்ட எங்கள் அமைச்சர் செந்தலையாருடைய சவத்தை எங்களிடம் ஒப்படைத்துவிட வேண்டுகிறோம். வேளிர் குடியின் மானத்தைக் காப்பாற்றத் தன் கடைசி மூச்சுள்ள வரை போராடிய அந்த வீரத்திருவுருவை அடக்கம் செய்கின்ற பாக்கியத்தை நாங்கள் வேறு யாருக்கும் தர இணங்கமாட்டோம். அந்த உரிமையையாவது எங்களுக்குத் தருகிறீர்களா?'' - முத்துநகையின் மேல் வேலெடுத்து வீசினானே, அந்த வீரன் இப்படி உணர்ச்சியுடன் பேசினான்.

''பழி வாங்கும் உணர்ச்சியும் சதி புரியும் ஆவேசமும் உயிர் மூச்சோடு வெளியேறியபின் தூய்மையாகிறது. எதிரியின் பலம் என்ன என்பதை நான் நன்கு உணர்வேன். என்னைக் கொல்ல வந்த உங்களரசியார் நீதி தேவன் முன்னால் தானே தண்டனை பெற்றார்களே; அவர்களுடைய சவத்தைக் கூட அனாதையாக்கி விடவில்லை தெரியுமா? அரச பரம்பரை யைச் சேர்ந்தவரது இறுதி யாத்திரை எப்படியிருக்க வேண்டுமோ, அந்த அளவிலே - முறையிலே - கடுகளவும் குறையாத வகையிலேயே அடக்கம் செய்ய ஆணையிட்டேன். ஆகவே இந்த வேண்டுகோளை நான் தடுக்கவில்லை! அதைப் போலவே இந்தப் போர்க்களத்துத்தானைத் தலைவியாகிய முத்துநகையும் அதற்குக் குறுக்கே நிற்கமாட்டாள்.''

- அரசன் சொல்லி முடித்ததும் வேளிர்குடி வீரர்களது முகத்தில் நன்றி உணர்ச்சி தலை காட்டியது. செந்தலையாருடைய சவம் கிடந்த இடம் நோக்கி நடந்தார்கள். அவரது உடலைக் கணநேரம் உற்றுப் பார்த்தான் கரிகாலன்! அந்தத் தியாகிக்கு மரியாதை செய்வதைப் போல் அவனது பார்வை இருந்தது. பிறகு முத்துநகையைத் திரும்ப பார்த்தான். குறிப் பறிந்த முத்துநகை மரமாளிகை இருக்கும் திசை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

''நீங்கள் குதிரைமேல் ஏறி வாருங்கள் அரசே!'' என்றாள் நடந்து கொண்டே.

''எதற்கு?''

''காட்டுப் பாதையில் கல்லும் முள்ளும் நிறைந்திருக்கிறதே; உங்களுக்குத் தெரியாதா?...''

''அதற்கெல்லாம் பயந்தால் அரியணை ஏறியிருக்க முடியாது என்று உனக்குத் தெரியாதா? மக்களுக்காக உயிரையும், போர்க்களச் சாவுக்காக உடலையும் எந்த நேரத்திலும் அர்ப்பணிக்கத் தயார் என்ற மன உறுதியை ஏற்ற பிறகுதான் மகுடபதி என்ற தகுதியை சோழர்குல மரபினர் ஏற்றுக் கொள்வார்கள் முத்துநகை! உல்லாச புரியிலே உலவிட அல்ல; பொல்லா தவற்றை ஏற்கவும் பின் வாங்காத உடல் இது! அது மட்டுமல்லாமல் உன்னுடைய மலர்ப்பாதங்களே மேடுபள்ளங்களில் தடையின்றி நடக் கின்றபோது என்னை மட்டும் சுயநலக்காரன் என்று கருதி விட்டாயா?''

முத்துநகை இதற்குப் பதிலேதும் சொல்லாமல் நடந்தாள்.

சமீப காலங்களில் எதிர்பாராத சம்பவங்கள் பலவற்றைச் சந்தித்துப் பழகிப்போன பூம்புகார் மக்களை அங்கே நேர்ந்த அதிர்ச்சி தரும் சந்திப்பும், அதைத் தொடர்ந்த உரையாடலும் அவ்வளவாக ஆச்சரியத்

தில் மூழ்கடிக்கவில்லை. ஆகவே, மன்னனையும், மன்னனை அழைத்துச் செல்லும் மங்கையையும் அவர்களும் பின் தொடர்ந்து சென்றார்கள்.

நடுக்காட்டில் - மரங்களடர்ந்த பகுதியில் இருங்கோவேள் கட்டி வைத்திருக்கிற மரமாளிகையைக் கண்டு கரிகால் மன்னன் வியந்தான். சோழ மண்டலத்தை அழிக்கக் கருதிய நச்சு வித்து அங்குதான் முளைத்தது என்றாலும் வேளிர்குலத்தவர் அமைத்துக் கொண்டிருக்கிற ராஜரீகத்தை அவனது உள்ளம் போற்றத்தான் செய்தது!

பயங்கரச் சூழ்நிலையிலே அந்த மாளிகை இருந்த போதும், அப்போது மயான அமைதி அங்கே குடி கொண்டிருந்தது. ஆள் நடமாட்டமே எதுவுமின்றி வெறிச்சோடிப் போயிருந்தது. இன்றைக்கு முதல் நாளோ, அல்லது சில மணி நேரங்களுக்கு முன்னதாகவோ, கரிகாலனும் முத்துநகையும் அங்கே துணிவுடன் நடந்து வந்திருக்க முடியுமா? வேளிர் குடியினர் விரோதிகளைக் கண்டுவிட்ட வெறிக் கூத்தில் ஆனந்தத் தாண்டவமே ஆடியிருப்பார்களே! அவர்களது ஆட்டபாட்டப் பேரொலியில் காட்டு விலங்குகள் கூட ஓடி ஒளிந்திருக்கக் கூடுமே! 'பகை' என்றும், 'தூள்' என்றும் எழுப்புகிற பழி வாகும் பேரிரைச்சல் கேட்டுப் பறவைகள் எல்லாம் மரக்கிளையிலிருந்து பறந்தோடி மறைந்திருக்கக் கூடுமே!

சுற்றியிருந்த மரவீடுகளையும், பாசறையையும் பார்த்துக் கொண்டே வந்த மன்னன் ஓர் அறையின் வாசலுக்கருகே வந்ததும் சற்றுப் பின் வாங்கினான். முத்துநகை உள்ளே பார்த்தாள். வேளிர்குல வீரனொருவன் மார்பிலே பாய்ந்த கட்டாரியுடன் பிணமாகக் கிடந்தான், அங்கே!

''இந்த அறையிலிருந்து தப்புவதற்காக இதயத்தை இரும்பாக்கிக் கொண்டு நான் நடத்திய செயல்தான் இது!'' என்று சொல்லிக்கொண்டே சென்ற முத்துநகை, ''அதோ பார்த்தீர்களா?'' என்று சுட்டிக் காட்டினாள்.

''என்ன இது! நாம் அங்கு போகவேண்டுமா, என்ன?'' என்று கேட்டான் மன்னன்..

'சாவூருக்கு போகும் வழி!' என்ற எழுத்துக்களை அங்கே பார்த்தான் கரிகாலன்.

''இல்லை; இல்லை! உங்களைச் சாவூருக்கு அனுப்ப அன்று பூம்புகார்த் தெருவிலே சதி நடத்தினானே ஒரு வேளிர்குல வீரன்; அவனை வீழ்த்திய செழியன் இங்கு தான் இருக்க வேண்டும்! சோழ நாட்டு வீரர்களை அடைத்து வைத்து ஆத்திரம் தீரும்வரை சித்திரவதை செய்வதும் இங்குதானாம்! வாருங்கள்!'' என்று அழைத்தாள் முத்துநகை.

இருவருமே அந்த இருண்ட பகுதிக்குள்ளே நுழைந்தார்கள். பயங்கர மாகத் தோன்றிக் கொண்டிருந்த அந்த அறை, மலைக் குகையைப் போல் காட்சியளித்தது. சேறும் சகதியும் நிரம்பிய தரையில் இருவரும் மெதுவாக நடந்தார்கள். 'பூமியைக் குடைந்து அமைக்கப்பட்ட அந்தக் கொடிய சிறைச்சாலையில் செழியன் அடைபட்டுக் கிடக்கிறான். தன்னைக் காப்பாற்றிய காரணத்தால்' - என்று நினைத்த கரிகாலனின் மனம் அந்தப் பாண்டிய வீரனது தியாகத்தைப் போற்றியது. தன்னுடைய கால்களில் சரசரவென்று ஊர்ந்து சென்ற பெருச்சாளிகளைப் பற்றிக் கூட சிறிதும் கவலைப்படாமல் மேலும் நடந்தாள் முத்துநகை!

சுவரோடு இணைக்கப்பட்டிருந்த விலங்குகளில் சிறைப்பட்டிருந்த சில சோழநாட்டு வீரர்களை அவர்கள் விடுதலை செய்தார்கள். தங்கள் வாழ்வு அந்த இருட்டறையோடு முடிந்துவிடும் என்று கருதிக் கொண்டிருந்த அந்த வீரர்கள் மன்னன் தங்களைத் தேடிவந்து விட்டதை எண்ணி மகிழ்ச்சியடைந்தார்கள். ஆனால் செழியனை மட்டும் அங்கே காணவில்லை!

எல்லாருமே விடுவிக்கப்பட்ட பிறகு "யாரங்கே? இன்னும் இருப்பது யார்?" என்று குரலெழுப்பினாள் முத்துநகை.

"செழியன்! செழியன்!" என்று அதைத் தொடர்ந்து கரிகால் மன்னனும் கத்திப் பார்த்தான்!

அவர்களது குரல்கள் தான் உட்சுவரில் மோதி எதிரொலித்தனவே தவிர, பதிலேதும் கிடைக்கவில்லை, மீண்டும் அப்படி அழைத்துக் கொண்டே நடந்த அவர்கள், கடைசியில் சிறைச் சாலையின் கோடிக்கே வந்து விட்டார்கள். சற்றுமுற்றும் தேடினார்கள். செழியன் அங்கே இல்லை! முத்துநகையின் முகம் ஏமாற்றத்தை உமிழ்ந்தது. தன்னுடைய கடமைப்பணி நிறைவேற முடியாமல் இன்னும் எதிர்ப்புச் சக்திகள் குறுக்கிடுகின்றனவே என்ற ஏக்கம் அவளது முகத்தில் பிரதிபலிப்பதைக் கரிகாலனால் அந்த இருட்டிலே தெரிந்து கொள்ள முடியவில்லை.

"இங்கே செழியனைக் காணவில்லை! வெளியே செல்வோம் அரசே!" என்றாள் முத்துநகை

இருவரும் அதைவிட்டு வெளியே வந்தார்கள். மரமாளிகையைச் சுற்றியிருக்கின்ற பகுதிகளிலும் தேடி அலுத்தார்கள்.

பூம்புகாரிலே தாமரைக்குக் காவலனாக வேளிர் வீரனைப் போல் நடமாடிக் கொண்டிருக்கிற செழியனைக் காட்டிலே தேடி என்ன பயன்?

"செழியன் எங்கே?" - முத்துநகையின் உள்ளத்திலே தோன்றிய இந்த வினாக்குறி, மீண்டும் அவளிடம் ஒருவித உத்வேகத்தைத் தோற்றுவித்து

விட்டது! ''அரசே! நம்மையும் மீறிய சதி ஒன்று நடந்துவிட்டது என்று கருதுகிறேன்! என்ன செய்வது இப்போது?'' என்றாள்.

உடனே கரிகாலன் ''முத்துநகை! செழியனை இனிமேல் இங்கே தேடிப் பயனில்லை என்று நான் நினைக்கிறேன்! ஆகவே நாம் இப்போது உடனே பூம்புகாருக்குச் சென்றாக வேண்டும்! கொந்தளிப்புக்கும் குமுறலுக்கும் இடையே நான் அங்கிருந்து புறப்பட்டேன்! இப்போது அங்கே என்ன நேர்ந்திருக்கக்கூடும் என்பதை என்னால் யூகித்துப் பார்க்க முடியவில்லை! புறப்படு!'' என்றான்.

இந்த நேரத்தில் அதைத் தவிர வேறு என்ன செய்வது என்பது முத்துநகைக்கும் புரியவில்லை. தலையசைத்தாள், நடக்க ஆரம்பித்தாள்!

போகும் போது இருந்த ஆவலும், ஆர்வமும் திரும்புகிற நேரத்தில் முத்துநகையிடம் இல்லை; துவண்டு விழத்தயாராக இருந்த உடலை எப்படியோ தூக்கி நிறுத்தி நடத்திச் சென்று கொண்டிருந்தாள். வழியிலே காட்டுச் சுனை கண்களில் பட்டவுடன் அவளது உள்ளம் மேலும் வேதனையுற்றது!

பாண்டிய நாட்டு ஒற்றன் வீரபாண்டியயைச் சந்தித்துத் தனது உள்ளத்தைப் பறிகொடுத்தது அந்த இடம்தானே! ஒரே இலட்சியத்துக் காகப் போராடி வந்த இதயங்கள் இணைந்ததை - கடமைக்கு இடையே யும் காதல் விளையாட்டுக்களில் ஈடுபட்டதை - அந்தச் சுனைக்கு மட்டும் பேசும் சக்தியிருந்தால் கதை கதையாகச் சொல்லுமே! அதோ ... அந்தச் சுனை நீர் காற்றின் வேகத்தால் இங்கும் அங்கும் அசைகிறதே; அது ஏன்? தன்னுடைய காதலனை இருங்கோவேளின் கத்திக்கு உணவாகத் தந்து விட்டுத் தனிமரமாய்ச் செல்கிறாளே முத்துநகை என்ற வேதனையால் தத்தளிக்கிறதா?

முத்துநகையின் உள்ளம் எரிமலையாக மாறத் தயாராகிக் கொண்டி ருந்தது. அதைத் தவிர்த்து விடலாம் என்ற நினைவுடன் தனது பார்வை யைச் சுனையிலிருந்து நகர்த்திப் பாழ்மண்டபத்தை நோக்கி ஏவினாள்; ஆனால், மறுகணம்... அவளது விழிகள் வியப்பால் திடுக்கிட்டன!

அங்கே... சற்றுத் தூரத்தில் இருந்த பாழ்மண்டபத்தில் அவள் ஓர் உருவத்தைக் கண்டு திகைத்து விட்டாள்!

மனித நடமாட்டமில்லாத அந்தப் பகுதியிலே தோன்றும் அந்த உருவம் யாருடையது?

முத்துநகை கூர்ந்து நோக்கினாள்.

அந்த நிமிர்ந்த நெஞ்சு... உயர்ந்த தோற்றம்... உடை... நடை... உருவம்...

யார்?... யார்?... யாரது?

எங்கோ பார்த்ததுபோல் இருக்கிறதே! ஆமாம்.. வீரபாண்டியன் சாயல்தான்; இல்லை; இல்லை; அது வீரபாண்டியன்தான்!

முத்தநகை தடுமாறிப் போய்விட்டாள். இறந்து போன வீரபாண்டி எப்படி வந்தான்? இருங்கோவேள் 'கொன்று விட்டேன்' என்று கொக்கரித்த பிறகு அந்த வீரத்திரு உருவம் மீண்டும் எப்படித் தோன்றுகிறது?

அதுதான் 'பேய்' என்பதா?

''கொலை செய்யப்பட்டவர்கள் பேயுருவில் திரிவார்கள் என்று சோழநாட்டிலே புதிதாகக் கருத்தொன்றைப் பரப்பி வருகிறார்களே வைதீகர்கள்; அதைப் போன்றதா அது?''

என்னைத் தேடித்தான் வீரபாண்டியின் 'பேய்' பாழ்மண்டபத்தை முற்றுகை போட்டிருக்கிறதா?

- மன்னனிடம் 'என்ன சொல்வது?' 'எப்படிச் சொல்வது?' என்ற பதட்டத்தில் முத்துநகை துடித்துக் கொண்டிருந்தபோது, அந்த உருவம் அவளைக் கையசைத்து அழைப்பதாக அவள் உணர்ந்தாள்.

அதே நேரத்தில்...

கரிகாலன் வானமண்டலத்திலே திடீரென்று எழும்பிய செந்நிறத்தை திகைப்புடன் பார்த்தான்! ஆமாம்; அவர்கள் விட்டு வந்த மரமாளிகைப் பக்கத்திலிருந்துதான் அந்த அக்கினி ஜ்வாலை எழும்பிக் கொண்டிருந்தது! தீ நாக்குகள் வானத்தை முத்தமிடத் துடித்துக் கொண்டிருந்தன!

இந்த அதிசயத்தைச் சொல்ல, ''முத்துநகை'! என்று கத்தினான், கரிகாலன்! தன்னுடைய மனப்போராட்டத்தைத்தான் மன்னர் தெரிந்து கொண்டு விட்டாரோ என்று பதறிப்போய்த் திரும்பினாள் முத்துநகை!

திகைப்புடன் திரும்பிய முத்துநகையிடம், ''நமது மக்கள் பகைவர்களைப் பழிவாங்குவதில் வரம்புமீறிப் போய்விட்டார்கள்! அதோபார், மரமாளிகைக்குத் தீயிட்டுவிட்டார்கள்'' என்று வருத்தம் தெரிவித்தான் கரிகால் மன்னன்.

''அவர்களது ஆத்திரத்தை எப்படித்தான் தணித்துக் கொள்வது?'' எனக் கேட்டாள் முத்துநகை.

''தோற்றுப்போன பகைவனை நடத்த வேண்டிய முறையே, அவன் நாணித் தலைகுனியுமளவுக்கு அவனுக்கு நன்மை செய்வதுதான்!'' எனப் பதில் கூறிய மன்னன் மரமாளிகையை அழித்துக் கொண்டிருக்கும்

மக்களின் ஆத்திரத்தைத் தணித்து, அவர்களைத் தலைநகருக்கு அழைத்து வரும் பொறுப்பை முத்துநகையிடமே ஒப்படைத்ததும் அவளுக்குத் தூக்கி வாரிப்போட்டது. பாழ் மண்டபத்துப் பக்கம் தான் காணும் உருவத்தைப் பற்றிய ஐயத்தை நீக்கிக் கெள்வதில் முழுக் கவனத்தையும் செலுத்தியிருந்த அவளுக்கு, இப்படி ஒரு வேலை கிடைத்தது. அதிர்ச்சியாகத்தான் தோன்றியது. ஆனால் அதிலேயும் அவளுக்கு ஒரு மகிழ்ச்சி. கரிகாலன் உடனடியாகத் தலைநகருக்குத் திரும்ப முடிவு செய்ததுதான்.

''முத்துநகை! நீ, ஆத்திரம் கொண்ட மக்களை அமைதிப்படுத்தித் தலைநகருக்கு அழைத்து வா; நான் முன்னே போகிறேன். மக்கள், என்னைவிட உனக்குத்தான் அதிகம் கட்டுப்படுவார்கள். ஏனெனில், நீ அவர்களின் தலைவன் கோச்செங்கணான் அல்லவா?'' என்று கூறியதும், மன்னனின் குதிரை புறப்பட்டது.

குதிரை கண்களைவிட்டு மறையும்மட்டும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு முத்துநகை, மண்டபத்துப் பக்கம் திரும்பினாள் தன் இலட்சிய உருவம் இதயத்து நிழலில் அங்கேயே நின்று கொண்டிருப்பதாகவே உணர்ந்தாள். தொலைவில் விண்ணைத் தொடுமளவுக்கு எரிந்து கொண்டிருந்த நெருப்பின் ஆவேச நடனத்தைப் பற்றி அவள் கவலைப்படவில்லை. அதைவிட அதிகமாகத் தன் உள்ளத்தில் தீ மூண்டுவிட்டதே என்ற கவலை அவளை அலைக்கழித்தது.

மண்டபம் நோக்கி அவள் கால்கள் நடந்தன. கண்களோ கால்களை வெற்றி கண்டன. எல்லா அங்கங்களையும் இதயம் வெற்றி கண்டு ஜெயக்கொடி போட்டது. மண்டபத்தருகே அவள் வந்துவிட்டாள். எதிரே இருப்பது வீரபாண்டியேதான்! ஆனால் அவளால் நம்ப முடியவில்லை. மூட நம்பிக்கை. முழு பலத்தோடு அவளைக் கட்டித் தழுவிப் பகுத்தறிவின் கற்பை அழிக்கும் மிருக முயற்சியிலே ஈடுபட்டது.

''அத்தான்! அத்தான்! அவரில்லை! பேய்! பூதம்! பிசாசு!'' என்று அவளறியாமலேயே கத்திவிட்டாள். கத்தும் பொழுதே அவளுக்குக் கண்கள் இருண்டுவிட்டன.

வீரபாண்டி, ''முத்து!'' எனக் கூவி அவளருகே தாவிப் பாய்ந்தான்.

அவன் வருவதைக் கண்டு இன்னும் அதிகமாகப் பயந்து விட்ட முத்துநகையின் நெஞ்சு அடைத்துக் கொண்டது; தலை சுற்றியது. 'தடால்' என்று கீழே விழப் போனவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான், வீரபாண்டி. மயங்கிய நிலையில் பிரக்ஞையிழந்து அவன் மேல் சாய்ந்து கிடந்தாள் கடமையாற்றும் அந்தக் கண்மணி.

தோளிலே தலை புதைத்துக்கிடக்கும் தோகை மயிலின் முதுகைத் தடவிக் கொடுத்தவாறே மரமாளிகையிலிருந்து கிளம்பும் தீச்சுழலை உற்று நோக்கிக் கொண்டிருந்தான் வீரபாண்டி.

அந்தநேரம் அவன் உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்? பாசறை படுசூரணமாகி விட்டது. படை வீரர்கள் பலர் மாண்டனர். மிஞ்சிய சிலரும் உயிர் காக்க ஓடிவிட்டனர். அவனுக்கென உலகத்திலிருந்த ஒரே ஓர் இடத்தையும் நெருப்பு விழுங்கிக் கொண்டிருக்கிறது!

அதை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான். அந்தப் படுபாதகத்தைச் செய்தவள் அவன் மீது வாடிய கொடியெனப் படர்ந்து கிடக்கிறாள். அதையும் அவன் உணர்ந்து பார்க்காமலில்லை. மரமாளிகையில் எழும் தீயை ஒரு முறை பார்க்கிறான். அதற்குக் காரணமான தன் காதலியை ஒருமுறை பார்க்கிறான். கண்களில் கனலும், புனலும் ஒருசேரக் கிளம்பு கின்றன. கனல் கரிகாலனை நினைத்தா? புனல் அந்தப் பூங்கொடியை நினைத்தா? ஒன்றுமே புரியவில்லை! பூகம்பமாகி விட்டது நெஞ்சம்!

இருங்கோவேளின் மாளிகையைத் தகனம் செய்து விட்டு மனமகிழ்வு கொண்ட பூம்புகார் மக்கள் தலைநகருக்குத் திரும்பத் தலைப்பட்டனர். மக்கள் பெருங்கூட்டம் அந்த மண்டபத்தைத் தாண்டிச் செல்லும்போது அவன் முத்துநகையை அணைத்தவாறு தூண்களிலும் புதர்களிலும் தன்னை மறைத்துக் கொள்வதற்கு மிகுந்த சிரமப்பட்டான். கொஞ்சம் கொஞ்சமாகத் தலைநகரத்து மாந்தரும் மண்டபத்தைக் கடந்து சென்றுவிட்டனர்.

இருங்கோவேள் மாளிகைக்குத் தீயிட்ட மகிழ்ச்சியில் ஒரு வாலிப வீரன் ஆடிப்பாடிக் குதித்துக் கொண்டு வந்ததை வேளிர்குல மன்னனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவனுக்குப் பின்னால் யாரும் வரவில்லை என்பதையும் அவன் புரிந்து கொண்டான். கீழே கிடந்த ஒரு கூரிய கருங்கல்லைக் கையிலே எடுத்தான். பலங்கொண்ட மட்டும் அந்தக் கல்லை அந்த வாலிபனின் தலைக்கு நேரே குறி பார்த்து வீசினான். கொதிப்பேறியிருந்த இருங்கோவேளின் குறி தப்பவில்லை. ஆடிப்பாடி வந்த அந்த வீரன் 'அய்யோ!' என்று ஓலமிடக் கூட முடியாமல் அப்படியே தரையில் சுருண்டு விழுந்து கடைசி மூச்சைக் காற்றோடு கலக்கவிட்டான்.

அவனைக் கொன்றதிலே இருங்கோவேளுக்கு ஒரு திருப்தி. அந்தத் திருப்தியோடு மரமாளிகைப் பக்கம் திரும்பினான். மாளிகை எரிந்து முடிந்துப் புகை பரப்பிக் கொண்டிருந்தது. அவன் கண்களில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டு, முத்துநகையை வெறிக்கப் பார்த்தான். அவளை அவன் பார்த்த பார்வையில் பழியுணர்ச்சி தேங்கியிருந்தது. அவளை மெதுவாகத் தன் முன்னங்கையில் சாய்த்துக் கொண்டான். இன்னமும் அவளுக்கு மயக்கம் தெளியவில்லை. அவனது வலிமை மிகுந்த வலக்கரம் அவளது கழுத்தை நோக்கிச் சென்றது. ஒரு கையால் உடலை அணைத்து, இன்னொரு கையால் அவள் உயிரையும் அணைத்து விடுவானோ என்ற பயங்கர நிலை உருவாகி விட்டது!

அவன் கண்கள் சிவப்பேறிவிட்டன - பற்களைக் கடிக்கிறான் - வலக்கரமோ புலியின் முன்னங்கால்போல உயர்ந்து எழுந்து கழுத்துக்கருகினில் வந்துவிட்டது! அந்தக் கைவிரல்கள் ஒவ்வொன்றும்

தேளின் கொடுக்குப் போலக் காணப்பட்டன! இதோ! இமைப் பொழுதில் கொல்லப்பட்டு விடுவாள்!

'என் நாடு - நகரம் - இனம் - மானம் - மறவர் படை அனைத்தையும் சோழ நாட்டுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டு என் மடியிலும் இடம் பிடித்துக்கொள்ளக் கூடிய அளவுக்கு இவளுக்கு எவ்வளவு துணிச்சல்? அந்தத் துணிச்சலை இதோ தூளாக்குகிறேன்!'

- இப்படி எண்ணியவாறு அவள் அழகான சங்குக் கழுத்தை நெறிப்பதற்குப் போனான் இருங்கோவேள்!

அடடே! அவனது வேகத்தைத் தடுத்தது யார்?

முத்துநகையின் கழுத்தை அமுக்குவதற்கு நீண்ட கை, அவள் இடையை வளைத்துக் கொள்ளக் காரணம் என்ன?

அவனுக்குத் தெரியவில்லை அந்தக் காரணம்!

எந்த முகத்தில் சாவின் அமைதியை உண்டாக்க நினைத்தானோ - அந்த முகத்தில் மாறிமாறி முத்தமிட்டான். முத்தமிடும்போதே 'ஓ'வெனக் கதறி அழுதான். அழுது கொண்டே முத்தமாரி பொழிந்தான்.

முத்துநகை கண்களை விழித்தாள். அவளுக்கு நினைவு திரும்பியது. தன்னை அணைத்திருப்பவன் வீரபாண்டிதான் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டது. தன் அழகிய கைகளால் அவன் மார்பகத்தைத் தடவிப் பார்த்தாள். சந்தேகமில்லை; அது பேயல்ல; அவளுடைய அத்தானேதான்!

''அத்தான்!''-பலத்த கரையை உடைத்துக்கொண்டு புறப்பட்ட ஆற்றுப் பிரவாகத்தைப் போல் அந்த ஒருசொல் வெளிவந்தது.

''முத்துநகை!'' - சூடுண்ட நாக்கிலிருந்து தழுதழுத்து வரும் சொல் லைப் போன்றிருந்தது இருங்கோவேளின் குரல்.

இரு சொற்களுக்குமிடையே நீண்ட இடைவேளை இருக்கவில்லை. இருவரும் இறுகத் தழுவிக் கொண்டு மெய் மறந்து போய்விட்டனர்.

வெகு நேரத்திற்குப் பிறகு இருவரின் அன்பும் அன்புப் பிடியும் தளர்ந்தன. வீரபாண்டியின் முகம், உடல் அனைத்தையும் மிகக் கவலையோடு உற்று உற்று நோக்கினாள் முத்துநகை.

''அப்படி என்ன பார்க்கிறாய் கண்ணே?''

''ஒன்றுமில்லை; அந்தப் பாவிகள் இருங்கோவேளின் ஆட்கள் தங்கள் பொன்னுடலில் எங்கெங்கே காயப்படுத்தினார்கள் என்றுதான் பார்க்கிறேன்!''

''காயம் எல்லாம் ஊமைக் காயங்கள்தாம்! நான் செத்துவிட்டதாகக் குளத்திலே போட்டுவிட்டார்கள். அதனால்தான் பிழைத்துக் கொண்டேன், என்ன இருந்தாலும் நீ இப்படி ஏமாந்திருக்கக் கூடாது!''

''என்ன செய்வது? தங்களைப் போலவே கிழவன் வேடமிட்டு நின்றான் பாவி! வேடமணிந்ததும் தங்களுக்கும் அந்த வேல் மறவனுக்கும் வித்தியாசமே தெரியவில்லை. நான் ஏமாந்துவிட்டேன். அத்தான்! ஆனால், தாங்கள் உயிரோடு இருக்கிறீர்களே. அதுவே போதும்! நான் எத்தனை முறை ஏமாற்றப்பட்டாலும் கவலையில்லை. மன்னர் கரிகாலர் மதிவாணர் என்பதற்கு ஒரே சான்று, அவர் அந்த வேடதாரியிடம் மோசம் ஒளிந்திருப்பதைக் கண்டு பிடித்தாரே, அதுதான்!''

''முத்துநகை! அவை எல்லாம் போகட்டும். இருங்கோவேளின் படைகளை அழித்துவிட்டதாக மகிழ்ந்து பயனில்லை. அவன் மாளிகை மண்மேடாயிற்று. அவன் அமைச்சர் வீழ்ந்தார் - என்றெல்லாம் எண்ணிப் பூரிப்படைவது மட்டும் போதாது! இருங்கோவேள் உள்ள வரையில் கரிகால் மன்னனுக்கு அழிவு நிச்சயம். அவனை முதலில் ஒழிக்க வேண்டும்!''

''அவன் எங்கே இருக்கிறான்? ஏதாவது தெரியுமா?''

''கண்டுபிடிக்காமல் இருப்பேனா? அந்தக் கொடியவன் இங்கேகூட இருந்திடக்கூடும்.''

''ஆ!''

''ஆமாம், அவ்வளவு மாயங் கற்றவன் அந்த மாபாவி! இன்றிரவு அவன் மன்னனைக் கவிழ்க்கும் திட்டம் தீட்டுவதற்காகப் பூம்புகார் அரண்மனைக்குள்ளேயே வரப்போகிறான்!''

''என்ன?''

''பதறிப் பயனில்லை முத்துநகை! இன்றைக்கு அவனைக் கொன்று பழி தீர்த்துக் கொள்ள வேண்டும்!''

''அந்த நல்ல காரியத்தை நான் செய்கிறேன் அத்தான்! 'அவன் எப்போது அரண்மனைக்கு வருவான்? எப்படி வருவான்? விவரமாகச் சொல்லுங்கள்!''

''அவன் வருவதற்கு முன்பே அவனை வரவேற்பதற்கும் வஞ்சக வலை விரித்து அதிலே மன்னன் கரிகாலனைக் கவிழ்ப்பதற்கும் திட்டமிட்டு, இருங்கோவேளின் தங்கை தாமரை பூம்புகார் அரண்மனையில் நுழைந்திருக்கிறாள். அவள் மட்டுமல்ல; அவளுக்குத் துணையாக ஒரு வேளிர்குல வீரனும் சோழ நாட்டு மாளிகையில் சுற்றிக் கொண்டிருக்கிறான்!''

''அய்யோ! அப்படியானால் அரசருக்கான ஆபத்து அரண்மனைக் குள் நுழைந்து விட்டது என்பதுதானே பொருள்.''

''இன்னும் கேள், இன்றிரவு நடுச்சாமத்தில் இருங்கோவேள், யவனக் கிழவர் வேடத்தில் வந்து அரசனைக் கொல்வதற்குத் திட்டமிட்டிருக் கிறான். அத்திட்டத்திற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் உள்ளேயிருந்து தாமரை செய்து முடிக்கப் போகிறாள். மாளிகைக்குப் பக்கத்தில் அரசனின் ஆலோசனை மண்டபத்தை ஒட்டினாற் போலுள்ள சோலைவழியேதான் யவனக் கிழவர் உருவில் இருங்கோவேள் வரப் போகிறான். அவனை வரவேற்பதற்கு வேளிர்குல வீரன் தயாராக இருப்பான்!''

- இதைக் கேட்டதும் முத்துநகையின் மெய் சிலிர்த்தது; குரல் நடுங்கியது; பேச முடியாமல் தவித்தாள்.

'''இருங்கோவேள்! இன்றிரவோடு அவனுக்கு முடிவு ஏற்பட்டு விடும், இப்போதே அரண்மனைக்குச் சென்று வீரர்களைக் கோட்டை முழுவதும் பரவலாக ஒளிய வைக்கச் செய்கிறேன். இருங்கோவேள் வந்ததும் உடனே அவனுக்கு அழிவு! அஸ்தமனம்!'' எனக்கத்தினாள் முத்துநகை!

''பைத்தியமே! சொல்வதைக் கேள்! இந்தச் சதித் திட்டம் நம்மைத் தவிர வேறு யாருக்கும் தெரியக்கூடாது. பூம்புகார் அரண்மனை வீரர்களில் பலர் கரிகாலருக்கு எதிரிகள் - பகைவனின் கூலிகள். மன்னரின் சாவுக்கு அவர்களும் வெற்றிலை பாக்கு வைப்பவர்களேதாம், அதனால் இந்தச் செய்தி மன்னருக்கே கூடத் தெரியக்கூடாது. நீ இப்போதே சென்று யவனக் கிழவரின் வருகையை எதிர்பார்த்திரு! நான் செழியனைப் பற்றிய தகவல் அறிந்து கொண்டு எப்படியும் இருங்கோவேளுக்கு முன்பு மாளிகைக்கு வந்து உன்னைச் சந்தித்து விடுகிறேன். நான் வருவதற்கு முன்பு ஒரு வேளை இருங்கோவேள் முந்திக் கொண்டால் அவனை இந்தக் கட்டாரிக்கு இரையாக்கி விடு! இந்தா!''

-வீரபாண்டி தந்த கட்டாரியை முத்துநகை தன் கையில் வாங்கிக் கொண்டாள். அவள் முகம் சிவந்தது. குளிர் சிந்தும் கண்கள் கொள்ளிக் கட்டைகளாயின! 'இருங்கோவேள்' என்று தனக்குத்தானே உறுமினாள்.

''இன்றோடு தொலைந்தாய் நீ!'' என்று கர்ச்சனை செய்தாள்.

அவளைத் தழுவிக்கொண்டு, அவளது உதடுகளை ஈரமாக்கினான், வீரபாண்டியெனும் இருங்கோவேள்.

அனல் உமிழ்ந்து கொண்டிருந்த அவளது விழிகள், கையிலிருந்த கட்டாரியை நோக்கின. அதில் சில எழுத்துக்கள் செதுக்கப்பட்டிருந்தன.

கடுகினும் சிறிய எழுத்துக்கள்!

கூர்ந்து பார்த்துப் படித்தாள்; அந்த எழுத்துக்களின் கோவை... 'இருங்கோவேள்' என்று காணப்பட்டது!

முத்துநகை திடுக்கிட்டாள்.

தன் தவற்றை உணர்ந்த இருங்கோவேள் ஒரு கணம் திணறிப் போனான். என்றாலும் உடனே சமாளித்துக் கொண்டான். அவன் வெறும் வேளிர் குலத்துச் சிற்றரசன் மட்டுமல்லவே - வேளிர்குடிப்பேரரசு ஒன்றினைத் தோற்றுவிப்பதற்காகத் தன் ஆற்றலையும் அறிவையும் பெருக்கிக்கொண்டு அயராது பாடுபடுகிற இலட்சியவாதியாயிற்றே? மாபெரும் ஆபத்துக்களிலிருந்தெல்லாம் தப்பிய அவனுக்கு இந்தச் சாதாரணச் சந்தேகத்திலிருந்துதானா தப்ப முடியாது? கட்டாரியையும் தன் முகத்தையும் மாறி மாறிப் பார்க்கும் முத்துநகையின் கன்னத்தைத் தடவியவாறு அவன் ஏமாற்று மொழிகளைத் தேனிலே தோய்த்துக் கொட்டினான்.

''என்ன ஆச்சரியப்படுகிறாய்? இந்தக் கட்டாரி எனக்கு எப்படிக் கிடைத்தது என்றா? நீ உற்று நோக்குவதையும் - உன் விழிகள் உமிழும் ஆவலையும் பார்த்தால் நானே இருங்கோவேளைக் கொன்றுவிட்டு அவன் கட்டாரியை எடுத்துக்கொண்டு வந்துவிட்டேனா என்று சந்தேகப் படுகிறாய் போல் தோன்றுகிறதே! எங்கே சொல் பார்க்கலாம்! இதில் இருங்கோவேளின் பெயர் இருப்பதற்கு என்ன காரணம்?''

''சற்று முன்பு இங்கு நடைபெற்றதே போர்; அதில் சிதறி விழுந்த கட்டாரிகளில் ஒன்றாக இது இருக்கலாம்!''

நடந்துவிட்ட போர் - அதனால் விளைந்து விட்ட கொடுமைகள் எல்லாமே அந்தக் கணத்திலேயே மீண்டும் இருங்கோவேளின் நெஞ்சில் நிழலாட்டம் போட்டன! அதனால் திடீரென்று ஏற்பட்ட முகமாற்றத்தை அவனால் அவ்வளவு சுலபத்தில் மறைத்துவிட முடியவில்லை.

''ஏன் இப்படி உங்கள் முகம் மாறுகிறது? போரைக் கண்டால் பயமா?'' என்றாள் முத்துநகை, கிண்டலாக.

''நான் உங்களைப் போன்ற பெண்களைக் கண்டாவது பயப்படு வேனே தவிரப் போரைக் கண்டு பயப்படவே மாட்டேன். நீயும் களம் குதிக்க வேண்டிய காலம் வந்து விட்டதே என்று எண்ணினேன். அதன் விளைவுதான் இந்தக் கண நேரக் கலக்கம்.''

எப்படியோ சமாளித்துக் கொண்டான் இருங்கோவேள். மீண்டும் இதுபோன்ற 'காட்டிக்கொடுக்கும் சம்பவங்கள்' நடைபெற்று விடக்

கூடாதே என்று எண்ணியவனாய், "உம்... இந்த எழுத்துக்கள் எப்படி என் கட்டாரியில் இடம் பெற்றன என்று சொல்லவில்லையே, நீ?" என்றான்.

"எனக்கு எப்படித் தெரியும்?"

"அதுதான் உன் அத்தானின் திறமை; காரணம் நான் சொல்லட்டுமா? சொன்னால் என்ன தருவாய்!"

"சொல்லுங்கள்!"

"நூறு தரவேண்டும்!"

"என்ன!"

"ஒரு பெண்ணிடம் ஓர் ஆண் அந்தத் தொகையில் என்ன கேட்பான்? உடையா - உணவா - அணியா - மணியா? - புரியுமென்றுதான் கேட்கி றேன். நீயும் புரிந்துகொண்டுதான் என்னிடம் கேள்வி போடுகிறாய்!"

"அதிருக்கட்டும். இதைச் சொல்லுங்கள்!"

முத்துநகை அக் கட்டாரியை அவன் முகத்துக்கு நேரே நீட்டினாள். அவன் அதை வாங்கியவாறு "இந்தக் கட்டாரியால் இருங்கோவேள் கொல்லப்பட வேண்டும். ஆனால் அதைக் கொலை என்று நாடு நம்புவதைவிட அவனே தற்கொலை செய்து கொண்டான் என்று செய்தி பரவிவிடவேண்டும். அந்தச் செய்தி பரவுவதற்குச் சாதகமான பெயர் தான், கட்டாரியில் செதுக்கப்பட்டிருக்கிறது முத்துநகை! இருங்கோவே ளைக் கொல்லும் சந்தர்ப்பம் கிடைக்கும்போது கூட இந்தக் கட்டாரியை மிகவும் எச்சரிக்கையோடு பயன்படுத்த வேண்டும். அதாவது எதிரிகள் குத்தியதுபோல் இல்லாமல் தானே தன் நெஞ்சில் குத்திக் கொண்டது போல் கட்டாரியைப் பிடித்துக் காரியத்தை முடிக்க வேண்டும். இப்போது புரிகிறதா இதில் இருங்கோவேளின் பெயரை ஏன் செதுக்கினேன் என்பதற்குக் காரணம்" என்று கொஞ்சு மொழி பேசினான்.

"இந்தத் திறமைக்கும் அறிவுக்கும் நூறென்ன? ஆயிரமே கொடுக்கலாம்!" - என்று ஆரம்பித்தாள் முத்து. ஆனால் ஆளுக்கு நூறாக ஆயிரத்தைப் பூர்த்தி செய்தார்கள்.

பின்னர் வீரபாண்டி தந்த கட்டாரியை மறைத்துக் கொண்டு முத்துநகை அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டாள். தன் வேலைகளை விரைவில் முடித்துக் கொண்டு எப்படியும் முத்துநகைக்குத் துணையாக வந்துவிடப் பெருமுயற்சி செய்வதாக வாக்களித்தான் வீரபாண்டி. காதல் உணர்வும் கடமை உணர்ச்சியும் ஒன்றோடொன்று போட்டி போடும் உள்ளம் பெற்ற ஏந்திழையாள், அன்றோடு தன் இலட்சியம் நிறைவேறப் போகிறது என்கிற பெருமகிழ்ச்சியில் பூம்புகார் நோக்கி நடந்து கொண்டி ருந்தாள். மரமாளிகையிலே செழியனைக் காணாது திரும்பியபோது

அவள் உடலிலே ஏற்பட்ட சோர்வும், உள்ளத்திலே ஏற்பட்ட வேதனையும், இப்போது சென்ற இடம் தெரியவில்லை. புத்துணர்ச்சி பெற்றவளாய் வேகநடை போட்டாள். அவளது நடையழகையும் முதுகின் எழிலையும் சுவைத்தவாறு நின்ற இருங்கோவேள், மரங்களுக்கிடையே மறைந்ததும் உணர்வு பெற்றவனாய்த் தன் மாளிகையிருந்த திக்கை நோக்கினான்.

பொறாமைக்காரர்களின் உள்ளம் போல் எரிந்து அடங்கிப் புகைந்து கொண்டிருந்த மரமாளிகையின் முடிவு பற்றி எண்ணிப் பார்க்கவும் முடியாத அளவுக்கு மனம் வெறிச்சோடிப் போயிருந்தது.

சோழ மண்டலத்திலே வசிக்கின்ற ஈ, எறும்பு, காக்கைக் குஞ்சுகளுக்குக்கூடத் தெரியக்கூடாது என்பதற்காக வன விலங்குகளுடன் போராடி அமைக்கப்பட்ட அரண்மனையல்லவா அது? காட்டுக்குள் இடம் அமைத்துக் காரியத்தை முடித்துக் கொண்டு விடலாம் என்ற அவனுடைய தீர்மானமும் மாளிகைக்கு ஏற்பட்ட முடிவையே அடைந்து விடுமோ என்ற எண்ணம் ஏனோ அவன் மனத்திலே தோன்றியது. இருந்தாலும், அவனுடைய விழிகள் அங்கிருந்து இடம் பெயரச் சற்று நேரம் பிடித்தது.

அந்தத் துன்பக் காட்சியைப் பார்த்தவாறே பெரும்புதர்களுக்கு மறைவில் கட்டப்பட்டிருந்த குதிரையிடம் சென்றான். அதனைத் தட்டியவாறு ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு நின்றான். அவன் முகத்தில் இப்போது காதல் பொலிவுமில்லை - சோகத்தின் சாயலும் இல்லை. எல்லாம் மறைந்து ஒரு வெறிக்கூத்து ஆரம்பமாகிவிட்டது. குதிரையில் பாய்ந்து ஏறினான். வேறு வழியாகப் பூம்புகார் நோக்கிப் பறந்தான்.

அடர்ந்த காட்டுப் பகுதியொன்று கோட்டைச் சுவர் போல இருமருங்கிலும் மறைந்திருக்கும் நெருக்கமான மரங்கள்! புதர்கள்-நச்சுக் கொடிகள் நிறைந்த பயங்கரமான இடம். அதற்குள்ளே புகுந்த இருங்கோவேளின் குதிரை வெகு நேரம் வரையில் வெளிவரவில்லை.

அந்த ஆபத்தான இடத்தில் வழி தெரியாமல் திண்டாடுகிறானா? அல்லது குதிரை அந்த இருட்டில் கீழே விழுந்து விட்டதா?

இல்லை; இல்லை!

அதோ வந்துவிட்டது குதிரை!

இப்போது அதன்மீது அமர்ந்திருப்பவன் யார்? இருங்கோவேளா? அல்ல! அல்ல! கரிகாலனைக் காப்பாற்றிய அந்த உழவர் பெருமகன் வளவனல்லவா அமர்ந்திருக்கிறான்?

இருங்கோவேள் அரண்மனையில் எந்த வேடத்திலிருக்கிறானோ அதே வேடத்தில்தான் உள்ளே நுழைந்திட வேண்டும்! அதற்காக அவன் மாற்றிக் கொண்ட வேடம் அது!

தலைநகரத்து மக்கள், தங்கள் மன்னனுக்காக நாடு போற்றும் தீரச் செயல்களைப் புரிந்துவிட்டுத் திரும்பி விட்டார்கள். அந்த இன்ப நினைவு மட்டுமே மன்னன் கரிகாலனுக்குச் சிறிதளவு ஆறுதலைத் தந்தது. ஏனையபல நிலைமைகள் மன்னனின் உள்ளத்தைச் சேறு கலங்கிய குட்டை போல் ஆக்கியிருந்தன. 'அவைகளுக்கெல்லாம் எப்படி நல்ல முடிவு காணப்போகிறோம்?'- கேள்வி துளைத்தது, கணைகள் துளைக்க முடியாத கரிகாலன் நெஞ்சத்தை! இருங்கோவேளைப் பிடித்தாலன்றி மனத்தில் மூண்டிருக்கும் ஐயப்பாடுகளுக்கு விளக்கம் கிடைக்காது! இதயத்திற்கும் நிம்மதி கிடைக்காது! இந்த முடிவுக்குத்தான் மன்னன் வரவேண்டியிருந்தது.

யாரையும் பார்க்க விரும்பவில்லையென்று கண்டிப்பாக உத்தரவிட்டு விட்டுத் தன் தனி மாளிகையில் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டுத் தவித்துக் கொண்டிருந்த மன்னனின் முன்னே மெய்க் காவலன் வந்து தலைவணங்கி நின்றான்.

அவனைப் பார்த்து 'என்ன?' என்று உறுமினான் கரிகாற்சோழன்.

''மன்னிக்க வேண்டும். எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்; கேட்கவில்லை. மன்னரின் உயிரைக் காப்பாற்றிய வளவன் அவசரமாகப் பார்க்க வேண்டுமாம். மிக ஆபத்தான செய்தியாம். கண்ணீர் விட்டுக் கொண்டு நிற்கிறான்''

- என்று நடுங்கியவாறு கூறினான் காவலன்.

''ம்! அவனுக்கு உடம்பு எப்படியிருக்கிறதாம்?''

-மன்னன் கேட்டான். அவன் கோபமாகத்தான் கேட்கிறான் என்று தவறாக எண்ணிக் கொண்ட காவலன், ''நான் எவ்வளவோ சொன்னேன். அவன் கேட்கவில்லை; ஆபத்து என்றதும் ஓடி வந்தேன்'' என்று உளறினான்.

''நான் கேட்பதைப் புரிந்துகொள். உடல் நலமாயிருக்கிறானா என்று கேட்கிறேன்'' என்றான் மன்னன். சோகத்தின் இடையே வெளிப்படும் சிரிப்பையும் அடக்கிக் கொண்டு!

''சுகமாகத்தான் இருக்கிறான். இப்போது கூடக் குதிரையில் எங்கேயோ வெளியில் போய்விட்டுத்தான் வந்திருக்கிறான். அதனால் தான் மன்னனை அவசரமாகப் பார்க்க வேண்டுமாம்!''

''ம்-வரட்டும்! வரவிடு!''

அரசனின் ஆணை கேட்டு வெளியில் ஓடிய மெய்க்காவலன் வளவனை அழைத்துக் கொண்டு உள்ளே வந்தான். வளவன் மன்னனை வணங்கி நின்றான். மெய்க்காவலன் ஒதுங்கியிருந்து மன்னனின் கட்டளைக்குக் காத்து நின்றான். அரசன் அவனை வெளியில் போகச் சொல்லவில்லை.

வளவன் மன்னரின் காதோரம் அணுகிச் சென்று, ''ஆபத்தான செய்தியொன்று, அதனை அறிவிக்க வந்தேன்!'' என்றான்.

''என்ன-அப்படி ஆபத்து?'' என்றான் வேந்தன்.

''ஆயிரம் புலிகள் எதிர்த்து வந்தாலும் நெஞ்சு குலுங்காத வீரர் தாங்கள் என்றாலும், என்னால் இந்தச் செய்தியைச் சொல்லாமலிருக்க முடியவில்லை!'' என்று வளைந்து நெளிந்தான் வளவன்.

''பரவாயில்லை...சொல்லுங்கள்!'' என்று அவசரப்படுத்தினான் கரிகாலன்.

வளவன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு மெல்லிய குரலில் பேசினான்:

''அரசே, இருங்கோவேளின் தங்கை தாமரையுடன் வந்திருக்கிறானே ஒரு வேளிர்குல வீரன்; அவன் மூலம் தங்கள் உயிருக்கு ஆபத்து வரக் காத்திருக்கிறது!''

''என்ன?'' மன்னரது இந்தக் கேள்வியிலே தெரிந்த கோபத்தைக் கண்டு வளவன் சிறிதும் அதிர்ச்சி அடையவில்லை.

''உண்மைதான் மன்னவா!'' என்றான் வளவன்.

''அவன் வேளிர்குடி வீரனாக இருந்தும், நம்மவர்கள் அவனை உயிரோடு உலவ விட்டு வைத்திருக்கிறார்களே; அதற்கு நன்றியா இது?''

''எதிரிகள் நடக்கின்ற பாதையிலே நீங்கள் பூ தெளித்தாலும் உங்களுடைய பாதையிலே முள்ளை வாரி வீசத்தான் அவர்கள் தயாராக இருக்கிறார்கள்!''

''சேசே! அவனா? நானிருக்குமிடத்தில் அவனால் நுழையக்கூட முடியுமா?''

''இல்லை மன்னா! சதி வேறுவிதமாக உருவாகிறது! இருங்கோவேளுக்கும் நமது அரண்மனைக்குள்ளிருக்கும் அந்த வேளிர் வீரனுக்கும் இடையிலே செய்திகள் போய் வந்து கொண்டிருக்கின்றன. அதன்படி எனக்குக் கிடைத்த தகவலைச் சொல்லுகிறேன் கேளுங்கள்; இன்று

விடியற்காலைப் பொழுதில் நம் ஆலோசனை மண்டபத்துக்கருகேயுள்ள சோலையில் யவனக்கிழவர் வேடத்தில் இருங்கோவேள், அந்த வேளிர் வீரனைச் சந்திக்கப் போகிறான். சதி உருவாகப் போகிறது. தங்களை வீழ்த்த! என்ன விதமோ எனக்குத் தெரியாது. இருவரும் சோலையில் சந்தித்து முடிவு செய்யப் போகிறார்கள் என்பது மட்டும் எனக்குத் தெரியும்!''

''இருங்கோவேள், அவ்வளவு துணிவுடன் அரண்மனைக்குள் நுழைந்து விடுவானா என்ன?''

''அதனால்தான் யவனக்கிழவர் வேடமாமே; அந்த வேடத்தில் வரப்போகிறானாம்!''

மன்னன் யோசனையிலாழ்ந்தான். மீண்டும் வளவன் பேசத் தொடங்கினான்;

''எனக்கு ஒரு வழி புலப்படுகிறது.''

''என்ன வழி?''

''இருங்கோவேளுக்காக நடுயாமத்திலிருந்து விடியற்காலம் வரையில் வேளிர் வீரன், நான் குறிப்பிட்ட சோலையில் மறைந்திருக்கப் போகிறான். வேளிர்வேந்தன் யவனக்கிழவர் வேடத்தில் வந்து அவனது வீரனைச் சந்திப்பதற்கு முன்பு நாம் அந்த வீரனை ஏமாற்றி விஷயத்தைப் புரிந்து கொண்டால்...''

''அது எப்படி முடியும்?'

''அரசே! மன்னிக்கவும்! தாங்களே யவனக்கிழவர் வேடமணிந்து அந்தச் சோலைக்குச் செல்வது; நல்ல இருட்டானதால் வேளிர் வீரன் ஏமாந்து விடுவான். அவனிடம் தாங்கள் அடித்தொண்டையில் 'என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறாய்?' என்று கேட்டால் எல்லாவற்றையும் சொல்லிவிடுவான். அதன் பிறகு அவனைக்கொண்டே இருங்கோவேளைப் பிடிப்பதற்கும் அவன்மீது சதிக்குற்றம் சாட்டுவதற்கும் வழி ஏற்படுத்திக் கொள்ளலாம்.''

''வளவா! இதற்கேன் இவ்வளவு தொல்லை? இருங்கோவேளும் வீரனும் சந்தித்துப் பேசும்போது நமது படைகளை மறைந்திருக்கச் செய்து அவர்களை அப்படியே மடக்கிவிட்டால்?''

''அரசே! தங்கள் ஆற்றல் எனக்குத் தெரியாதா? படைகள் கூட எதற்கு? தாங்கள் தனியொருவரே பல்லாயிரம் இருங்கோவேள்களுக்குப் பதில் சொல்வீர்களே! ஆனால் நான் நினைப்பது வேறு ! நமது சோழ மண்டலத்திலேயே இருங்கோவேளின் பக்கம் யார் யார் சேர்ந்து

கொண்டு தங்களைக் கவிழ்க்க முயல்கிறார்கள் என்ற உண்மை தெளிவாக, என்னுடைய யோசனையும் பயன்படுமென்று நம்புகிறேன்!''

''ஆமாம்! நீ கூறுவதும் உண்மைதான்! சோழ நாட்டிலேயே எனக்கெதிராகச் சில தீய சக்திகள் வளர்கின்றன என்பதை நான் முதலிலேயே கேள்விப்பட்டிருக்கிறேன்!''

''நாட்டிலே மட்டுமல்ல மன்னா! நமது அரண்மனையிலேயே அந்தக் கயவர்கள் சிலர் உலவிக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பாவிகளின் பட்டியலைத் தாங்கள் அணியும் யவனக்கிழவர் வேடத்தின் மூலம் அந்த வேளிர் வீரனிடமிருந்து இன்றிரவு அறிந்து கொள்ள முடியும் என்று நம்புகிறேன்!''

வளவனின் திட்டம் மன்னனின் மனத்தைக் கவர்ந்து விட்டது.

''வளவா! நீ போ! உன் யோசனைப்படியே ஏற்பாடுகளைக் கவனிக்கிறேன். தேவைப்பட்டால், உன்னைப்பிறகு அழைக்கிறேன்!'' என்று வளவனை அனுப்பிவைத்தான். அவன் முதுகில் தட்டிக் கொடுத்தவாறு!

இரவு தன்னை வந்து சந்திக்கும்படி எதற்காக இருங்கோவேள் கூறியிருப்பான் என்ற குழப்பத்தோடு பூம்புகார் அரண்மனைக்குள் நடைபோட்டுக்கொண்டிருந்த செழியனின் காதில், மரமாளிகையின் மீது சோழப் பெருங்குடி மக்கள் நடத்திய போரும் அதில் பெற்ற வெற்றிச் செய்தியும் எட்டிவிட்டன. அந்தச் செய்தியை இளவரசி தாமரையிடம் அறிவித்தால் என்ன பாடுபடுவாள் என்ற ஆழ்ந்த இரக்க உணர்வும் அவன் இருதயத்தில் பொங்கியது. இருங்கோவேளின் பழிவாங்கும் உணர்ச்சி உச்சக்கட்டத்திற்குச் செல்லப் போகிறது. வெகுவிரைவில் அவனது வெறித்தனமான தாக்குதல் கரிகால் மன்னன் மீது ஆரம்பமாகி விடும் என்று பயந்தான் அந்தப் பாண்டியகுல வீரன்.

தனக்கு ஏற்பட்டிருக்கிற சோதனை நிறைந்த நேரத்தை அவன் நினைத்து நினைத்து மனம் புழுங்கினான். அரண்மனைக்குள் நுழைந்தி ருக்கிற ஆபத்துக்களை அரசனிடம் தெரிவித்து விடலாம் என்றாலோ, அவன் தாமரைக்குத் தந்த உறுதிமொழியை மீறியவனாகி விடுவான். வேளிர்குல வீரன் என்ற நிலையில் கரிகால் மன்னனிடம் ஆபத்தினை விளக்கினாலோ அவன் நம்பப்போவதில்லை.

வாக்குறுதியைக் காப்பாற்றுவதா? வான் புகழ் கொண்ட மன்னரைக் காப்பாற்றுவதா? இரண்டு கடமைகளையும் செய்து முடிப்பதே உண்மையான வீரனுக்கு அழகு என்று அவன் மனச்சாட்சி கூறியது.

தானே தனியாக நின்று மன்னரைக் பாதுகாப்பது என்ற முடிவுடன் அரண்மனையில் திரிந்து கொண்டிருந்தான். அவன் கால்கள் நான்கு திசையிலும் சுழன்றவண்ணமிருந்தன. எந்த ஒலியையும் கூர்ந்து கவனித்து ஆராய்ந்தன செழியனின் செவிகள். இரவு இருங்கோவேளைச் சந்திப்பதாலேயே மன்னனுக்கு ஏற்பட இருக்கும் படுநாசத்தைத் தடுத்திட முடியுமென்று அவன் நம்பினான். தாமரை தன்னைத் தேடிப்பார்த்துக் கிடைக்காத காரணத்தால், சந்தேகப்பட்டு விடக் கூடாதேயென்று நினைத்து அவள் இருக்குமிடம் நோக்கிச் சென்றான்.

அரண்மனைக்குள் வந்தது முதல் யாருடைய தடையுமின்றி விருப்பம் போல் எல்லா இடங்களிலும் திரிந்து கொண்டிருந்த அவனுக்குத் திடீரென ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. அவனை யாரோ கவனிப்பது போன்ற ஒரு

பயம். ஏதுமறியாதவனைப்போல் ஓரக் கண்ணால் தன்னைத் தொடர்ந்து மறைந்து வருபவனை அவன் கவனித்தான். கரிகாலனின் மெய்க்காப் பாளன்தான் அந்த ஒற்றன் என்பதைப் புரிந்து கொண்டான். திடுமென அவன் ஏன் தன்னைத் தொடர வேண்டும்? கேள்விக் குறி அவனை உலுக்கியது. வளவனின் எச்சரிக்கைக்குப் பிறகு, மன்னன் மெய்க்காப் பாளனிடம் செழியனைக் கண்காணிக்குமாறு பணித்திருக்கிறான் என்பது அவனுக்கு எப்படித் தெரியும்?

மன்னனின் ஆணைக்கிணங்க மெய்க்காப்பாளன், செழியனை நிழல் போலத் தொடர ஆரம்பித்து விட்டான்!

'ஆனது ஆகட்டும்' என்ற துணிவுடன் தன்னை யாரும் தொடர்ந்து வராதது போலவே நடித்த வண்ணம் செழியன், தாமரை தங்கியிருக்கும் பளிங்கு மாளிகைக்குள் நுழைந்தான். வாயிற்புரம் வரையில் தன்னைத் தொடர்ந்து வந்த மெய்க்காப்பாளன் மறைந்து விட்ட அதிசயத்தையும் அவன் கண்டான். வாயிற்புத்தில் அமைக்கப்பட்டிருந்த ரகசியக் கதவு ஒன்றினைத் திறந்து கொண்டு செழியனுக்கு முன்பாக மாளிகையின் உட்பகுதிக்குள் நுழைந்து விட்டான், அந்த மெய்க்காப்பாளன். அதை உணராத செழியன், தாமரை ஓய்வெடுத்துக் கொண்டிருந்த கூடத்திற்குள் புகுந்தான். அச்சமும் கவலையும் தோய்ந்திருந்த தாமரையின் முகத்தை அவன் கண்டு அப்படியே நின்று விட்டான்.

தாமரை, அவனைப் பார்த்ததும் நெஞ்சு மேலும் புடைக்கப் பெருமூச்செறிந்து, ''வந்து விட்டீர்களா?'' என்று கேட்டாள் பரபரப்புடன், வேளிர் படை வீரனை, அந்த நாட்டு இளவரசி இவ்வளவு மரியாதை யுடன் அழைப்பதைப் பார்த்து மெய்க்காப்பாளன் வியப்படைந்து மேலும் அவர்கள் உரையாடலைக் கூர்ந்து கவனித்தான்.

''ஓடி விட்டேனோ என்ற சந்தேகம் ஏற்பட்டதல்லவா?''

''இல்லை, உங்கள் வாக்குறுதியில் எனக்கிருந்த நம்பிக்கை சிறிதும் தேயவில்லை. பூம்புகார் வீரர்களிடம் ஏதாவது விபரீதமான தகராறுகள் ஏற்பட்டு உண்மை வெளியாகிவிட்டதோ என்று அஞ்சினேன்; அவ்வளவு தான்.''

''அப்படியெல்லாம் எதுவும் நடக்கவில்லை. சவ அடக்கம் முடிவுற்றதும் ஏதேதோ நினைவுகள் அலைக்கழிக்க அரண்மனையில் கால் போன பக்கமெல்லாம் போய் விட்டு, இறுதியில் இங்கு வந்து சேர்ந்தேன். மன்னரைப் பார்த்தால் விடை பெற்றுக் கொண்டு புறப்படலாமென்று கருதினேன்.''

''நாம் புறப்படலாமா?''

''ஏன், இன்று தங்கிவிட்டு நாளைக்குப் புறப்பட்டால் போகிறது. ஒருவேளை இந்த மாளிகையின் வசதிகள் போதவில்லையா?''

''என்னதான் இனிய வசதிகள் உபசாரங்கள் நடைபெற்றாலும் இது எங்கள் எதிரியின் வீடுதானே? உடலை வருத்துகின்ற மரமாளிகையில் படுத்துத் தூங்க வேண்டிய வேதனையிருந்தாலும் அது எங்கள் சொந்த இடமல்லவா? விரைவில் அங்கு சென்று விடவே நான் விரும்புகிறேன்.''

மரமாளிகை பற்றித் தாமரை குறிப்பிட்டதும், செழியனுக்கு நெஞ்சம் துணுக்குற்றது.

'அந்தோ பரிதாபம் - அந்த மாளிகை மண்மேடாகி விட்டதை இன்னும் அறிந்து கொள்ளாமல் உளறிக் கொண்டிருக்கிறாளே?' என எண்ணித் தனக்குத்தானே வருத்தப்பட்டுக் கொண்டான். அவளிடம் வேளிர் படையின் வீழ்ச்சியையும், அமைச்சர் செந்தலையாரின் பரிதாபகரமான முடிவையும் அறிவித்து விடலாமா என்று ஒரு கணம் நினைத்தான். ஆனால் உடனே நினைப்பை மாற்றிக்கொண்டான்.

''அண்ணன் மரமாளிகைக்குத் திரும்புவதற்குள் நாம் போய்விடுவது நல்லதல்லவா?''

தாமரையின் இந்தக் கேள்விக்குச் செழியன் சிரித்துக் கொண்டே பதில் சொன்னான்:

''இது வரையில் நமது ரகசியம் வெளிப்படாமல் இருக்குமென்ற நம்பிக்கை வேறு இருக்கிறதா? திரும்பக் கொண்டுபோய் என்னை இருங்கோவேளிடம் ஒப்படைத்து விட்ட நல்ல பெயரைத் தவிர இளவரசிக்கு வேறென்ன மிஞ்சப் போகிறது?''

''எதையும் தாங்கிக் கொள்வது என்ற முடிவுடன் தானே இந்தக் காரியத்தில் நான் இறங்கினேன்? பரவாயில்லை. தங்களுக்காக, வருவதை நான் அனுபவித்துக் கொள்கிறேன்.''

தாமரை பெருமிதத்தோடு இந்தப் பதிலைக் கூறினாள். செழியன் அவளிடம் அதிகம் பேச்சுக் கொடுக்க விரும்பவில்லை; ஏனெனில் தன்னைத் தொடர்ந்து வந்த மெய்க்காவலன் ஒருவேளை அங்கேயும் ஒளிந்திருந்து தன்னைக் கவனிக்கக் கூடுமென்று அவன் கருதினான். அந்த யூகம் சரிதான் என்பதுபோல் அவன் விழிகளில் மெய்க்காவலனின் உருவமும் தென்பட்டுவிட்டது!

''இளவரசி! ஓய்வெடுத்துக் கொள்க! நான் வெளித்தாழ்வாரத்தில் படுத்துச் சற்றுக் கண்ணயர்கிறேன்.''

-எனக் கூறிவிட்டு அவள் பதிலுக்குக் காத்திராமல் செழியன் தாழ்வாரத்துப் பக்கம் வந்தான். மெய்க்காவலனும் அவனைத்

தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். தாழ்வாரத்தில் நிறுத்தப்பட்டிருந்த தூண் ஒன்றின் ஓரத்தில் வட்ட வடிவமாகச் செதுக்கப்பட்டிருந்த ஒரு பீடத்தில் செழியன் உட்கார்ந்து சிந்தனைத் தேரைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

மெய்க்காவலன் அவனையே உற்று நோக்கியவாறு பூனைபோல் அடியெடுத்து வைத்துத் தூணின் அருகே தொங்கிக் கொண்டிருந்த இரும்புச் சங்கலியொன்றைப் பிடித்துக் கொண்டான்.

அந்த இரும்புச் சங்கிலியைப் போலவே அங்கு பல சங்கிலிகள் தொங்கி அந்த தாழ்வாரத்திற்கு எழில் தந்து கொண்டிருந்தன. ஆனாலும் மெய்க்காவலன் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தான். செழியனோ கண்களை மெதுவாக மூடிக்கொண்டு தன் முன்னே காத்திருக்கும் பொறுப்புகளோடு போராடிக் கொண்டிருந்தான்.

செழியன் அமர்ந்திருந்த இருக்கை மெல்ல மெல்ல அசைந்தது. மெய்க்காவலனின் கையிலிருந்த சங்கிலி தரையை நோக்கித் தாழ்ந்தது. செழியன், பீடத்துடன் கீழே போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தான்.

தாழ்வாரத்திலிருந்து இருள்நிறைந்த பூமியைக் குடைந்து கொண்டு எங்கேயோ போவது போன்ற திகில் அவனைப் பற்றிக்கொண்டது. கீழே கீழே அவனால் எண்ணமுடியாத அளவுக்குக் கீழே-பீடம் பயணம் நடத்துகிறது. கூச்சலிடவோ, அங்குமிங்கும் ஆடியசைந்து உடலைக் காயப்படுத்திக் கொள்ளவோ விரும்பாமல் மனத்திடத்தோடு இருந்தான் செழியன். கீழ்நோக்கிச் சென்று கொண்டிருந்த அந்த இயந்திர இருக்கை தடால் என்ற ஒலியுடன் ஓர் இடத்தில் முட்டியது.

செழியன் சுற்றும் முற்றும் பார்த்தான். முதலில் இருந்த அடர்ந்த இருள் இப்போது இல்லை. மங்கலான ஒளி பரவிக் கொண்டிருந்த ஓர் இடத்திற்கு வந்திருப்பதாக உணர்ந்தான். இயந்திர இருக்கையை விட்டு இறங்கி மெல்ல அடிவைத்து அந்த இடத்தை ஆராய்ந்தான். அவன் இறங்கியதும் அந்தப் பீடம் மேலே போய்விட்டது. அதைப் பற்றிக் கவலை கொள்ளாமல் எங்கே வந்திருக்கிறோம் என்ற தீவிர யோசனையில் ஈடுபட்டு மங்கலான ஒளி வழங்கும் விளக்கினிடம் சென்றான்.

அங்கே யாரோ ஒருவர் அமர்ந்திருப்பது தெரிந்தது. விளக்கடியில் உட்கார்ந்திருப்பது யார்? அருகே சென்று பார்க்கலாமா? அதற்கு அவனுக்குத் துணிவு வரவில்லை. எத்தனையோ பொறுப்புகளைச் சந்திக்க வேண்டிய சமயத்தில் இப்படி ஒரு பயங்கரமான தடை வந்து விட்டதே என்று அவன் ஆயாசமடைந்தான். 'விளக்கடி உருவம் எத்தகைய விளைவுகளுக்குக் காரணமாக இருக்குமோ? என்னென்ன வேதனைகள் ஏற்படுத்துமோ?' என்றெல்லாம் குழம்பினான்.

எவ்வளவு நேரமாக அந்த உருவம் இப்படி உட்கார்ந்திருக்கிறது? அதுவும் தெரியாது. அந்த இடமென்ன கொலை புரியும் சூதுச் சுரங்கமா? சித்திரவதை நடக்கும் சிறைக்கோட்டமா?

அந்த உருவம் விளக்கின் பக்கம் முகத்தைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தபடியால் செழியன் அந்த உருவின் பின்புறத்தைத்தான் பார்க்க முடிந்தது! அமைதி நிலவிக் கொண்டிருந்த அந்த இடத்தில் என்ன அதிசயம் நடக்கப் போகிறதோ என்று செழியன் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

அசைவற்று நின்றுகொண்டிருந்த செழியனின் தொண்டை அடைத் துக்கொண்டது. தன்னை மறந்து தொண்டையைக் கனைத்துக்கொண்டு, உடனே தவற்றை உணர்ந்து தன் தலையில் அடித்துக் கொண்டான்.

இந்த ஒலி கேட்ட மாத்திரத்தில் விளக்கடி உருவத்தின் தலை நிமிர்ந்தது.

நிமிர்ந்த தலை அவன் பக்கம் திரும்பியது. உருவம் தன் கைகளில் விளக்கை எடுத்து, ஒலி வந்த பக்கம் திரும்பியது. அந்த விளக்கொளியில் உருவத்தின் முகத்தைச் செழியன் கண்டான். பார்த்தவுடன் பதைத்துப் போய் ''ஆ! தாங்களா?'' என்று கூச்சலிட்டு விட்டான்.

புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் பாண்டிய நாட்டுத் தளபதி நெடுமாறனும் மிகத் தீவிரமாக ஒரு முயற்சியிலே ஈடுபட வேண்டு மென்று முடிவெடுத்ததை வாசகர்கள் மறந்திருக்க முடியாது. பட்டினப் பாலை அரங்கேற்றத்தின்போது அவைக்களத்தில் நிகழ்ந்த அமளிக்குப் பின் படைக்காவலன் நெடுமாறனும், பாவேந்தர் கடியலூராரும் சோழ நாட்டில் அரசருக்கெதிராகத் துரோக சக்தி வளர்ந்து வருவது பற்றிப் பேசிக் கொண்டார்கள். அப்போதுதான் புலவர் காரிக்கண்ணனாருக்கு நேர்ந்துள்ள நிலை பற்றியும் நெடுமாறன் உருத்திரங்கண்ணனாரிடம் கூறினான். அச்செய்தியால் தாக்குண்ட கடியலூரார் எவ்விதமாயினும் மறைந்து கிடக்கும் உண்மையினை அறிதல் வேண்டுமென்று துடித்து விட்டார். கரிகால் மன்னனுக்கிருக்கும் குழப்பங்களினிடையே இந்தக் குழப்பத்தையும் மீண்டும் புகுத்தக்கூடாது என்று நெடுமாறன் விளக்க மளித்து, அவன் அமைதி பெற்ற பிறகு அதுபற்றி பேச வேண்டுமென்ற எண்ணத்துடன் இருவரும் வந்திருந்தனர்.

அமைதிதான் தோன்றுவதற்கான அடையாளமே தெரியவில்லையே! புதுப்புதுப் புயல்கள் உருவெடுத்துக் கொண்டேயிருக்கின்றனவே! பூம்புகாரில் திடீர் திடீரென நிகழும் சம்பவங்களும், கேள்விப்படும் செய்திகளும் நெடுமாறனுக்கு மிக்க விசித்திரமாகத் தென்பட்டன. அந்த

நிலைமைகளைச் சமாளிப்பதற்கு மன்னன் மேற்கொள்ளும் முறைகள் கூட அவனுக்குப் பெரும் வியப்பை அளித்த வண்ணமிருந்தன.

ஆற்றல் மிக்க படைவரிசைகளைக் கொண்டிருந்தும், அவைகளைப் பயன்படுத்திப் பகைவன் இருங்கோவேளைப் பிடிக்கவோ, அழிக்கவோ அவர் முயற்சியெடுக்கவில்லை. சோழநாட்டின் படைகள், சேர-பாண்டியர் படைகளைக் காட்டிலும் தொகையிலும் வலுவிலும் எத்தனையோ மடங்கு உயர்ந்தவை. ஆனால் அந்த பெரும்பலம் கொண்டு இருங்கோவேளின் படைகளைச் சூழ்ந்து எதிர்த்து அவன் இருந்த இடம் தெரியாமல் ஆக்கிவிடலாம். அதுபற்றிக் கரிகாலன் சிந்தித்ததாகவே தெரியவில்லை. பாண்டிய நாட்டுப் படையெடுப்பில் அவனைக் கைது செய்து இழுத்துச் செல்லலாம் என எண்ணியதும் பாழாகும் அளவுக்கு அந்தச் செழியன் இருங்கோவேளின் கைப்பாவையாகி விட்டான்.

இருங்கோவேளின் துணைவி கொலைகாரியாக மாறி கொலுமண்டபத்திற்கு வந்தபிறகு, மன்னனின் பெருந்தன்மை மேலும் வளர்ந்ததே தவிர, பகையுணர்வுகொண்டு பழிகாரர்களைத் தொலைத்துக் கட்ட அப்போதும் எழுந்தானில்லை. அவனே குறி வைக்கப்படுகிறான். அவன் உயிருக்கே ஆபத்து. அந்தச் சமயத்திலும் முகத்தில் கோபம் பொங்கிடவில்லை. சிந்தனை ரேகைகள்தான் விழுகின்றன. அமைதி யாகக் காரியங்களில் ஈடுபடுகிறான். ஆர்த்தெழுந்து படைதிரட்டிப் பகைப்புலம் அழிக்கப் புறப்படுகின்றா னில்லை. ஒருவேளை போர்த்தொழில்கூடாது எனும் புதிய தத்துவ உபதேசத்தை நாட்டுக்கு வழங்கப் போகிறானா? படைகளைக் கலைத்துவிட்டுப் பெருந்தன்மை, அன்பு , அடக்கம் ஆகியவற்றைக் கொண்டு நாடாளப்போகிறானா? இந்தப் புதிய போக்குக்கான காரணத்தை எப்படியும் தெரிந்துகொள்ள வேண்டும் என்றெல்லாம் நினைத்துக் கிளர்ந்த நெடுமாறனுக்கு காரிக்கண்ணனார் பற்றிய விளக்கமறிய வேண்டுமென்ற ஆவலும் நெஞ்சைப் பீறிக் கொண்டு கிளம்பிற்று.

கரிகாலனிடமிருந்து தனக்குச் செய்தி கொண்டுவந்த போது அந்தப் புலவர் மன்னனிடம் காட்டிய அன்பும், மரியாதையும், நாட்டுப்பற்று மிக்க பேச்சும் நெடுமாறனைப் பெரிதும் கவர்ந்திருந்தன. அத்தகைய தமிழ்ச் சான்றோருக்கு இந்த முடிவு ஏற்படுவானேன் என்று அவன் சிந்தித்துக்கொண்டிருந்தபோது உருத்திரங்கண்ணனாரின் வருகையும் காரிக்கண்ணனார் பற்றி உடனடியாக விசாரிக்க வேண்டும் என்று அவர் காட்டிய பரபரப்பும் அவன் முயற்சியைத் தீவிரமாக்கின. ஆனால் அரண்மனையில் இருந்த நெடுமாறனுக்கும் கடியலூர்ப் புலவருக்கும் கிட்டாத வாய்ப்புச் செழியனுக்குக் கிட்டிவிட்டது.

மாமன்னனின் ஆணைப்படி மெய்க்காவலன், செழியனை வட்டமிடத் தொடங்கினான். அவனைச் சுற்றியலைந்து செய்தி கொண்டு வருவது மட்டுமல்ல; அவனுக்கும் பூம்புகார் அரண்மனையில் யார் யாருக்கும் தொடர்பு இருக்கிறது என்று ஆராய வேண்டிய பணியும் மெய்க்காவலனுக்குத் தரப்பட்டிருந்தது.

அதனால்தான் அவன் - வேளிர்குல வீரன் உடையில் இருந்த செழியன் தற்செயலாகப் பீடத்தில் உட்கார்ந்த போது எதிர்பாராமல் கிடைத்த வாய்ப்பினைப் பயன் படுத்திக்கொண்டு இயந்திரச் சங்கிலியை இழுத்துப் பீடத்தைக் கீழ்நோக்கித் தள்ளி அங்குள்ள மாளிகைக்குள் அவனை விட்டான்.

அங்கே செழியன் யாரைச் சந்தித்தான்? விளக்கடியில் உட்கார்ந் திருந்தது யார்? திரும்பியவாறு கையிலேயிருந்த ஓலைச் சுவடியையும், எழுத்தாணியையும் பார்ப்பதற்கு முன்பு செழியன் கண்டது, விரிந்த ஓலைச் சுவடி போல் நெற்றியும், எழுத்தாணிபோல் கூரிய விழிகளும் படைத்த காரிக்கண்ணனாரின் முகத்தைத்தான்.

ஆம், அந்தப் புலவர்தான் விளக்கடியில் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தார். அவர் நாட்டுத் துரோகியெனக் குற்றஞ் சாட்டப்பட்டுச் சிறையில் வைக்கப்பட்டிருந்தாலும் தமிழ்ப் புலவருக்குரிய எல்லா மரியாதைகளுடனும் அங்கு நடத்தப்பட்டார். எந்த வசதிகளும் குறைக்கப்படவில்லை. இன்னும் சொல்லப் போனால், அவர் வீட்டில் இருந்ததை விட அதிகப்படியான வசதிகள் அங்கே செய்யப்பட்டிருந்தன. எத்தனை வசதிகள் இருந்தால் என்ன? அவர் மீது கூறப்பட்டுள்ள குற்றம் அவரை அணுஅணுவாகக் கொன்று கொண்டிருக்கிறதே!

இந்த நாட்டின் நல்வாழ்வு தவிர வேறெதுவும் தேவையில்லையென முடிவு கட்டிக் கிளம்பிவிட்ட இந்த முத்துநகையின் தந்தை துரோகி! சோழ மண்டலத்தைப் பகைவனுக்குக் காட்டிக் கொடுக்கும் பாவி. கரிகால் மன்னனின் உயிருக்கு உலைவைக்கப் புறப்பட்டிருக்கும் கயவர்களுக்குத் துணை; எந்தச் சோழநாட்டு மண்மீது சுந்தரத் தமிழ்க் கவிதைகள் இயற்றினாரோ அந்தச் சோழநாட்டுக்கு அழிவு தேடித்திரியும் அக்கிரமக்காரர்.

- இப்படி முத்துநகை தனக்கு நேராகத் தேன்மொழி சிந்தும் நாவால், தேளெனக் கொட்டியதை அவரால் மறக்க முடியுமா? அந்தச் சொற்கள் அவரது உள்ளத்தை எருமைகள் புகுந்த தாமரைக் குளம்போல் ஆக்காமலிருக்குமா?

''வணக்கத்துக்குரிய தமிழ்ப் பாவாணரே! நானொருவன் வாழ்வது பிடிக்கவில்லையென்றால் என் மார்பில் வேல் நுழைத்திருக்கலாம்.

தாங்கள் அதை விடுத்துத் தாயகத்தை எதிரிக்குக் காட்டிக் கொடுக்கும் இழிசெயலை மேற்கொண்டிருக்க வேண்டியதில்லை.''

- மன்னன் அன்று பேசிய வாசகங்களை நினைத்துக் கதறினார் காரிக்கண்ணனார். அவருக்கு அந்த வசதிகள் நிறைந்த சிறை மாளிகையில் அமைதி ஏது? பெருங்காற்றில் கரை மோதும் அலைகள் போல் நினைவுகள் உயர்ந்தும் தாழ்ந்தும் அவரைக் குடைந்தெடுத்த போதும் எழுதும் பணியிலிருந்து விடுபடாமலிருந்த அவர், திடீரெனத் தன் முன்னே வந்து நிற்கும் வேளிர்படை வீரனைக் கண்டதும் வியப்புற்றார். விழிகளை அகல விரித்து எதிரேயிருந்த விளக்கைக் கையிலேந்தி மெல்ல நடந்து அவன் முன்னே வந்தார்.

செழியன் என்ன செய்வதென்று புரியாமல் நின்று கொண்டிருந்தான். அவனுடைய உள்ளத்தில் அதிசயம் மட்டுமல்ல; திகிலும் குடி கொண்டிருந்தது.. தன்னைச் சுற்றியவாறு ஒருவன் பின் தொடர்கிறான் என்றும், அவனுடைய ஏற்பாட்டின்படியே தனக்கும் புலவருக்கும் கூடச் சந்திப்பு ஏற்பட்டிருக்கக் கூடுமென்றும் ஊகித்தறிந்து கொண்ட செழியன், புலவரிடம் தன்னை யாரென்று காட்டிக் கொள்ள விரும்பாமல், அவர் அருகே வரும் வரையில் அப்படியே நின்று கொண்டிருந்தான். விளக்கைத் தூக்கிச் செழியனின் முகத்திற்கு நேராகப் பிடித்தவாறு புலவர் மெல்லிய குரலில், ''யார்?'' என்று கேட்டார்.

''நான் வேளிர்படை வீரன். இருங்கோவேளின் தங்கை தாமரையுடன் வந்திருக்கிறேன்'' என்றான் செழியன்.

வேளிர்படை!

-இருங்கோவேள்!!

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் புலவருக்குப் புதியதோர் ஆவேசமே பிறந்தது. உரக்கக் கத்தினார்:

''இருங்கோவேள்! ஆகா, இருங்கோவேள் என்னுடைய மன்னன்! அவருடைய ஆணையின்படி நான் கரிகாலனைக் கொன்று குவிக்கத் துணை நிற்க வேண்டும். அந்த ஏற்பாட்டிற்காகத்தான் இளவரசி தாமரையும் நீயும் வந்திருக்கிறீர்களா? வேளிர் வீரனே! நான் யார் தெரிகிறதா? நான் சோழ மண்டலத்தைக் காட்டிக் கொடுப்பவன், பூம்புகாரில் இருங்கோவேளின் அடிமை, கரிகாலனைக் கொல்ல வந்த காலன்.''

இந்த உணர்ச்சி மிக்க வார்த்தைகளைக் கேட்டதும் செழியனின் உடல் நடுங்கிற்று. மயிர்க் கூச்செரியும் வார்த்தைகளால் அவன் செவிகள் செவிடுபட்டன. இடி முழக்கம் கேட்டவனைப் போல் காதுகளைப் பொத்திக் கொண்டு நின்றான்.

''என்னப்பா திகைக்கிறாய்! வேளிர் வீரனே! என்னைப் பார்த்தால் சதியை நிறைவேற்றச் சக்தியற்றவனைப் போலத் தெரிகிறதா? நம்பு என்னை. நீ மட்டுமல்ல, உனது மன்னர் இருங்கோவேளிடமும் சொல்! மன்னிக்கவும், அவர் எனக்கும் மன்னன்தானே! அவரிடம் சொல்! அரசன் கரிகாலனின் முடிவை யாரும் தடுப்பதற்கு வலுவில்லாதவாறு அருமை யான திட்டம் தீட்டியிருக்கிறேன். என் அருமை மகள் முத்துநகையின் ஆத்திரத்தையும் பொறுத்துக் கொண்டு எமது மன்னன் கரிகாலன் எம்மி டம் காட்டிய அன்புக்கு ஆழக் குழி தோண்டி விட்டு வேளிர்படையின் வெற்றிக்கு உழைக்கும் வீரத்தமிழ்ப்புலவன் தீட்டியுள்ள திட்டங்களை உமது மன்னனிடம் காட்டு!''

என்றவாறு அவர் எழுதிக் கொண்டிருந்த ஓலைச் சுவடியை மடக்கிக் கட்டி, அவனுக்கு நேராக நீட்டினார் புலவர் காரிக்கண்ணனார்! அதை வாங்காமல் நின்றிருந்தான் செழியன்.

புலவர் உள்ளபடியே துரோகியாகி விட்டாரா? அல்லது பித்தம் தலைக்கேறியதால் அவரைக் கரிகால்மன்னர் அரண்மனையில் அடைத்து வைத்திருக்கிறாரா? அவரை நான் காண்பதற்கான சூழ்நிலை ஏன் அமைக்கப்பட்டிருக்கிறது?

ஒருவேளை புலவர் துரோகியெனத் தீர்மானிக்கப்பட்டு வேளிர் படை வீரனாக இருக்கும் என்னையும் அவரையும் சந்திக்க வைப்பதால் மேலும் ஏதாவது தேவையான ஆதாரங்கள் கிடைக்குமென்று மன்னர் எதிர்பார்க்கிறாரா?

-இந்தக் கேள்விக்குச் சரியான பதில் காணமுடியாமல் ஓரக்கண்ணால் சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் எதிர்பார்த்தவாறு இருண்டு கிடந்த ஒரு மூலையில் மெய்க்காவலன் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் ஏழெட்டு வாட்கள் மின்னிக்கொண்டிருந்தன. மெய்க்காவலன் காத்திருக்கிறான் என்பதைச் செழியன் புரிந்து கொண்டான். என்ன விபரீதம் ஏற்படப் போகிறதோ என்று அவன் நெஞ்சம் படபடவென அடித்துக் கொண்டிருந்தது. புலவர், செழியனை நோக்கி மேலும் சத்தம் போட்டுப் பேசலானார்:

''பைத்தியக்காரப் புலவன் பாட்டு எழுதி உன்னிடம் நீட்டுகிறான் என்று எண்ணுகிறாயா? இல்லை. இல்லவே இல்லை. இவையனைத்தும் கரிகால் மன்னனை ஒழித்துக் கட்டுவதற்கான திட்டம். இருங்கோவேள் சோழப் பெருநாட்டுக்கு எவ்வாறு மன்னனாவது என்பதற்கான வழி முறைகளடா தம்பி, ஓலையில் தீட்டப்பட்டிருப்பவை. இன்னுமா சந்தேகம்? இதைக் கொண்டுபோய்ப் பத்திரமாக வேளிர்குல வேந்தரிடம் கொடு, சதி நிறைவேறியதும் என்னை விடுதலை செய்யச் சொல். எனக்கு

எழுதி எழுதி வாழும் வேலை பிடிக்கவில்லை. இருங்கோவேளிடம் கூறி என்னை நாட்டின் அமைச்சராக்கச் சொல்! இந்தா ஓலையைப் பிடி!''

செழியனுக்கும் அந்த ஓலைச் சுவடியை வாங்கிவிட வேண்டுமென்ற எண்ணம் பிறந்தது. புலவர், தேசத் துரோகியாக இருக்க வேண்டுமென்ற முடிவுக்குக்கூட அவன் வந்துவிட்டான்! தன்னை வேளிர் வீரனென நம்பித் தன்னிடம் கொடுக்கிற ஓலையின்மூலம் வேறு பல உண்மைகளைத் தெரிந்து கொள்ளக் கூடுமென்று கருதி, செழியன் புலவர் கொடுத்த ஓலைச் சுவடியை வாங்கிக் கொண்டான்.

வாங்கியதும் தன்னைச் சூழ்ந்துவரும் மெய்க்காவல் படையினர் அந்த ஓலைச் சுவடியைப் பிடுங்கிக் கொண்டு போய்விடுவார்களோ என்ற அச்சம் வேறு பிறந்தது. அப்படியே தன் கையை விட்டுப் போனாலும் போக வேண்டிய இடத்துக்கு - அரசரிடம் தான் போய்ச் சேரும் என்ற நம்பிக்கையில் அதை தன் கையில் பத்திரமாக வைத்துக் கொண்டான்.

'அதிக நேரம் இங்கு நிற்பதில் பயனில்லை. வெளியேறிவிட வேண்டும்' என்று முடிவு செய்து புலவரிடம், ''வருகிறேன்'' என்று வணக்கம் செலுத்திவிட்டுப் புறப்பட்டான்.

எவ்வழியாக வெளியேறுவது என்று புரியாமல் திகைத்துக் கொண்டிருக்கும்போது அவனுக்கெதிரே ஒரு கதவு திறந்தது.

மகிழ்ச்சியும் மனக்கலக்கமும் ஒன்றையொன்று வென்றிடப் போட்டியிடும் இதயம் படைத்த அந்த வீரன், ஓலைச் சுவடியுடன், திறந்த கதவின் வழியே சென்றான். மெய்க்காவல் படையினரும் அவனைத் தொடர்ந்தனர். - உருவிய கத்திகளுடன்!

அனைவரும் போன பிறகு காரிக்கண்ணனார் ஒரு பெருமூச்சு விட்டுத் தனக்குத்தானே, ''அப்பாடா!! என் ஆசை நிறைவேறியது; எனக்குத் தெரியாது என்று கருதிக் கொண்டு இந்தநாட்டில் பலர் என் கண்ணைக் கட்டிவிட்டுக் காரியமாற்றுவதாகப் பெருமைப்படுகின்றனர். நான் எழுதிய ஓலைச் சுவடி சேரவேண்டிய இடத்தில் சேர்ந்து விடும்; இனிமேல் நாம் நிம்மதியாக உயிர் விடலாம்'' என்று தழுதழுத்த குரலில் கூறிக்கொண்டார். அவர் கூறிய வார்த்தைகளை அந்த அழகான அறையின் சுவர்கள் கூட எதிரொலிக்காமல் அவரை மௌனமாகச் சூழ்ந்து பார்த்துக் கொண்டிருந்தன.

வேளிர்குல வீரன் தன்னிடம் பேசிக்கொண்டிருக்கும் போதே தன்னைச் சுற்றி மெய்க்காவலர் படையினர் ஒளிந்திருப்பதைப் புலவர் கவனித்துவிட்டார்; அந்த வீரனிடம் ஒப்படைக்கும் ஓலைச் சுவடியை மெய்க்காவலர் கைப்பற்றிக் கொள்வர் என்று அவரால் ஊகித்துக் கொள்ள முடிந்தது. அப்படியிருந்தும் அவர் சுவடியைத் துணிவுடன் வேளிர் வீரனிடம் கொடுத்தார். கொடுத்தது மட்டுமல்ல; அது போய்ச் சேர வேண்டிய இடத்தில் சேர்ந்துவிடும் என்றும் எண்ணிப் பெருமூச்சு விட்டார்.

சேர வேண்டிய இடம் எது? புலவர் கருதும் அந்த இடம் இருங்கோவேளின் முன்னிலைதானா? அல்லது கரிகாலனின் கரங்களில் சேர வேண்டுமென்று விரும்புகிறாரா? ஒரு வேளை அந்த விருப்பம் நிறைவேறும் நம்பிக்கையில்தான் மறைந்தவாறு வேளிர் வீரனைத் தொடரும் மெய்க்காவலனைப் பார்த்து மகிழ்ச்சி அடைகிறாரா?

அவரது விழிகளைவிட்டு வேளிர்வீரனும், மெய்க் காவலரும் மறைந்த பிறகு முன்போலவே விளக்கடியில் உட்கார்ந்து கொண்டு சிந்தனையில் ஈடுபட்டார். பட்டினப் பாலை அரங்கேற்றத்திற்குக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் வந்திருக்கும் செய்தியைக் கேள்விப் பட்டதிலிருந்தே அவரைக் காண வேண்டுமென்ற துடிப்பு மிகுந்தது. கட்டுக்காவலில் கிடக்கும் அவருக்குக் கடியலூராரைக் காண்பதற்கான நல்வாய்ப்பை யார் வழங்கப் போகிறார்கள்? அவரைச் சந்திக்க

நேரிட்டால் தனக்குற்ற கேடுகளையெல்லாம் அவர்பால் எடுத்துரைத்துத் தக்கதோர் முடிவு காணச்செய்யலாம் என்று எதிர்பார்த்தார். அதற் கெனவே அவசர அவசரமாக ஓலைச் சுவடி எழுதத் தொடங்கினார். தனக்காக வாதாடும் ஆற்றல் மிக்க, வழக்குரைக்கும் கருவியாக அந்தச் சுவடி பயன்படுமே என்பது அவரது எண்ணம்!

நெடுங்கதை எழுதுவது போல் பல்வேறு செய்திகளைத் தொகுத்து எழுதினார். அந்தச் சுவடிகளைப் படித்துப் பார்க்கும் ஆவல் அவருக் கிருந்தது. அதனை ஒப்படைக்க வேண்டியது உருத்திரங்கண்ண னாரிடத் தில்தான் என்று தீர்மானித்து அவரது வருகையை எதிர்பார்த்துக் கிடந்த புலவர் திடுமென வேளிர்வீரனைச் சந்திக்க நேரிட்டது! அவன் தனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த சமயத்தில் தான் ஓலையில் தன்னைப் பற்றி எழுதிய புதிர் நிறைந்த வரலாற்றுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டுப் புதியதோர் பாடலை எழுதிக் கொண்டிருந்தார். அந்தப் பாடலை முடித்துவிட்டுத்தான் அவர் வேளிர்வீரனைத் திரும்பிப் பார்த்தார். அந்தப் பாடலும் அவனிடம் தரப்பட்ட ஓலைச் சுவடிக்குள்ளேதான் இருந்தது.

அவர் எழுதிய அந்தப்பாட்டை, அவரது அறையிலிருந்து வெளியே சென்ற செழியன் பிரித்துப் பார்க்கலானான். தன்னைச் சூழ்ந்து மெய்க்காவலர் வருகின்றனர் எனத் தெரிந்த பிறகும், அவன் அந்த ஓலையைப் படிப்பதிலே தீவிரம் காட்டினான். அதிசயிக்கும் வண்ணம் அமைந்த பீடம் - அதிர்ச்சியுண்டாக்கும் வகையில் தானே திறந்து கொண்ட கதவு - எல்லாமே அவனுக்கு மிகுந்த அச்சத்தை உண்டாக்கி விட்டன. ஆயினும் அவன் நிதானமாக நின்று புலவர் எழுதிய பாடலில் மனத்தைப் பரவவிட்டான்.

**“ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த**
**பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்**
**ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇத்**
**தருமண வியல்வோள் சாய னோக்கித்**
**தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை**
**வினவ லானா வெல்போ ரண்ணல்**
**யார்மக ளென்போய் கூறக் கேளினி**
**குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு**
**நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை**
**வல்வி லிளையார்க்கு கல்குபத மாற்றாத்**
**தொல்குடி மன்னன் மகளே முன்னாட்**
**கூறி வந்த மாமுது வேந்தர்க்கு**

**செருவா யுழக்கிக் குருதி யோட்டிக்**
**கதுவாய் போகிய துதிவா யெஃகமொடு**
**பஞ்சியுங் களையாப் புண்ணர்**
**அஞ்சுதக வுடைய ரிவடன் னைமாரே"**

- காதற் கதையொன்றையல்லவா காரிக்கண்ணனார் தீட்டியிருக் கிறார் என்று வியப்புற்றான் செழியன். வேந்தர் குடிப் பிறந்தவன் ஒருவன் இளமங்கை யொருத்தியின் அழகு கண்டு அவள்மீது கருத்தைச் செலுத்தி அறிவு குலைந்து நிற்கின்றான்.

மாசற்ற பொற்கொல்லன் பழுதறச் செய்த பொன்மணியணிந்த மேகலையும் கண்ணியும் திகழ்ந்திடத் தன்னை ஒப்பனை செய்து கொண்டு புதுமணலில் நடந்து செல்கிறவளின் சாயலை நோக்கி, தான் சென்ற தேரை அப்படியே நிறுத்திவிட்டு வெளுத்த பார்வையுடன் புலவரை நோக்கிக் கேட்கிறானாம். "இவளை மணக்கலாமா?" என்று! அதற்குத் தானே பதில் கூறுவது போலக் கற்பனை செய்து கொண்டு பேசுகிறார் புலவர். எவ்வாறு?

போர்க்களத்தில் வெற்றிக் கொடியைப் பறக்கவிடும் தலைவர், மலையைக் கண்டது போன்ற பல நெற்போர்களைக் கடாவிடப்பட்ட இடத்தில் குவிந்த நெல்லை, வலிய வில்வீரர்களுக்கு நாளுணவாகத் தருவதில் எந்தவித மாற்றமும் இல்லாத குடிமக்கள் நிறைந்த ஊருக்கு மன்னனாகத் திகழ்பவனின் மகள் இவள்! பெண் கேட்க வந்த பல வேந்தர்கள் இவள் தமையன்மாரிடம் பட்டபாட்டைக் கேட்பாயாக! போர்க்களத்தில் பகைவரைக் கொன்று அவர் குருதியை ஆறாக ஓடச் செய்து, வாய் மடிந்து விடுப்பட்ட கூரிய வாயையுடைய வாளுடனே அஞ்சாது நின்றவரே இவளது தமையன்மார்!

-எனச் சொல்லிப் பெண் கேட்ட பெருவீரனைப் பயமுறுத்துகிறார் புலவர்.

அதைப் படித்த செழியனுக்குப் பாட்டின் கருத்துச் சொல்லும் விதம் புரியவில்லை. புலவரின் தமிழ் திறமையை வியந்து பாராட்டினான். 'வடுப்பட்ட கூரிய வாயையுடைய வாள்' என்ற சுவைத்தொடரை எண்ணியெண்ணித் தமிழ் மணத்தின் பெருமையினை வாழ்த்தி நின்றான்.

காரிக்கண்ணனார் வெறுங் கற்பனையாக இதனை எழுதியிருக் கிறாரா? அல்லது உட்பொருள் ஏதாவது இருக்கக் கூடுமோ என்ற ஐயப்பாடு அவனை விரட்டத் தொடங்கியது!

வேந்தர் குலத்தில் வந்த அந்த வீரன் யார்? எழில் மிகுந்த அந்தப் பொற்கொடிதான் எங்கிருப்பவள்? அவள் தமையன்மார் பெருவீரர் களாமே! அந்தப் பெண்ணைக் காதலித்தவன் புலவரை எங்கே சந்தித்

தான்? சே சே! எல்லாமே கற்பனைதான். இப்படியொரு முடிவு பிறக்கும். உடன் அதனைக் கலைத்துவிட்டு வேறொரு முடிவு கிளம்பும் - ஒரு வேளை முத்துநகையை யாராவது காதலிக்கிறார்களா? அவர்களை மிரட்டுவதற்காகப் புலவர் முயல்கிறாரா? சிறையில் கிடக்கும் இவர் மிரட்டுவது யாரை? உணர்ச்சிகளை எழுதி எழுதித் தீர்த்துக் கொள்வர் புலவர் பெருமக்கள் என்பார்களே; அதுபோல் முத்துநகையை விரும்பு கிறவனின் மீது தான் கொண்ட ஆத்திரத்தை இங்ஙனம் காட்டிக் கொள்கி றாரோ காரிக்கண்ணனார் எனச் சந்தேகமுற்றான்.

முத்துநகைக்குத் தமையன் ஏது? நம் கருத்துத் தவறானது என்று இதை எண்ணி இரண்டாம் முடிவை அழித்து விட்டான்.

தாமரைக்குத் தமையன் உண்டு. அவனைப்பற்றி எழுத இவருக் கென்ன விவரம் தெரியும்? சிறிது நேரம் குழம்பிக் கொண்டிருந்தான்.

அதுவரையில் மெய்க்காவல் படையினர் பொறுத்துக் கொண்டிருக்க வில்லை. வில்லிலிருந்து விடுபட்ட கணையென அவனைச் சூழ்ந்து கொண்டனர். எதிர்பார்த்த நிகழ்ச்சிதான் என்றாலும் செழியன் ஆத்திரங்கொண்டான். ஆனால் அந்த ஆத்திரத்தை வெளிப்படுத்துவது ஆபத்தில் முடியுமென்பதை உணர்ந்து கொண்டு உடனே அமைதி பெற்றான்.

மெய்க்காவலர் தலைவன் செழியனின் கையிலிருந்த ஓலைச் சுவடியைப் பிடுங்கிக்கொண்டான்.

செழியன் அந்த வீரர்களைப் பார்த்து, ''இதெல்லாம் என்ன வேடிக்கை?'' என்று கேட்டான்.

வீரர்கள் கலகலவெனச் சிரித்தவாறு படிக்கட்டுகளின் வழியாக அவனை மேலே இழுத்துக் கொண்டுவந்தார்கள்.

''உன்னால் எங்களுக்கு ஆக வேண்டிய வேலை முடிந்து விட்டது. இனிமேல் போகலாம்'' என்று காவலர் தலைவன் செழியனின் முதுகில் தட்டிக் கொடுத்தான். வீரர்கள் தொடர அந்தத் தலைவன் ஓலைச் சுவடியுடன் அங்கிருந்து அகன்றான்.

அவர்கள் போகும் திக்கையே பார்த்துக் கொண்டிருந்தான் செழியன், பெருத்த குழப்பத்துடன் மெல்ல நடக்கலானான். சுவடியைக் கைப்பற்றிய மெய்க்காவலர்கள் அவசர அவசரமாக அரசன் மாளிகைக்கு ஓடினார்கள். காவலர் தலைவன் வீரர்களை வெளியே நிற்க வைத்து விட்டு ஓலைச் சுவடியை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றான். கரிகாலன் பொன்னும் மணியும் மின்னுகின்ற கட்டிலொன்றில் கண் மூடியவாறு சாய்ந்தி ருந்தான். மெய்க்காவலன் அருகே போய் நின்றான். கனைத்துப் பார்த்

தான். மன்னனின் சிந்தனையோ கலைவதாக இல்லை. எழுப்புவதோ கூடாது.

சிறிது நேரம் நின்று பார்த்து விட்டுப் பிறகு ஓலைச்சுவடியை மன்னனுக்கருகினில் தென்படக் கூடிய ஒரு 'யானைத் தந்த முக்காலியில் வைத்தான். வெளியில் வந்து கதவைச் சாத்திவிட்டு அவனும் மற்ற வீரர்களும் மன்னனுக்குப் பாதுகாப்பளிப்பதில் தீவிரமாக முனைந்தனர்.

சிந்தனையிலீடுபட்ட வேந்தன் இன்னும் விழிக்கவில்லை. அவன் எதிரே ஓலைச்சுவடி காத்திருக்கிறது. அதை அவன் பிரித்துப்பார்த்தால் அதிலிருந்து எத்தனை எத்தனை மாற்றங்கள் ஏற்படுமோ யார் கண்டது? சிந்தனையிலாழ்ந்த செங்கோலேந்தி விழித்துக் கொள்ளா வண்ணம் அந்த ஓலைச் சுவடியை நோக்கி மிக மெதுவாக அடிமேல் அடி வைத்து அந்த அறைக்குள் ஓர் உருவம் வருகிறதே, அது யாருடைய உருவம்?

எங்கே வருகிறது?

யார் வருகிறது ?

தன்னையொத்த தமிழ்ப் பெரியவர் அவதூறுக்கு இலக்காகி அடைப்பட்டுக் கிடப்பது கண்டு அகமும் முகமும் வாடி அல்லலுற்ற கடியலூர் உருத்திரங்கண்ணனார், காரிக்கண்ணனாரை விடுவிக்காமல் பூம்புகாரை விட்டுச் செல்வதில்லையென்று உறுதியெடுத்துக் கொண் டார். பாண்டியத் தளபதி நெடுமாறனும் திரும்பி மதுரைக்குச் செல்லாமல் பூம்புகாரிலேயே தங்கிவிட்டான்.

தான் படைகொண்டு வந்ததையும், வழியிலேற்பட்ட நிகழ்ச்சிகளை யும் பூம்புகாரில் நடைபெறும் புதுமைகளையும், ஓலைவாயிலாகப் பெருவழுதிப் பாண்டியனுக்குத் தெரிவித்திருந்தான். அதற்கு உடனடி யாகப் பாண்டிய வேந்தனிடமிருந்து பதில் வந்துவிட்டது. அந்த மடலில் கண்டவாறு இன்னும் சில நாட்கள் அவன் பூம்புகாரில் தங்கிட வேண்டி யது இன்றியமையாததுஆயிற்று. அந்த நாட்களில் காரிக்கண்ணனார் களங்கமற்றவர் என மெய்ப்பிப்பதற்கு ஏதாவது சான்றுகள் கிடைக்காதா என்று அவன் தேடிக் கொண்டிருந்தான். கடியலூரார், கரிகாலனைச் சந்தித்து அதுபற்றி விவாதிக்க வேண்டுமென்று துடித்தார். இடையில் நிகழ்ந்த எதிர்பாராத சம்பவங்கள் அவரையும் மன்னனையும் சந்திக்க வைப்பதற்கு ஏற்றனவாக இல்லை.

ஆயினும் உருத்திரங்கண்ணனாரின் உள்ளத்தில் தளர்ச்சி ஏற்பட வில்லை. எவ்வாறேனும் மன்னனைக் கண்டு தமிழுக்காக வாழ்பவரின் பக்கம் நின்று வாதிட வேண்டுமெனத் துணிந்துவிட்டார்.

செழியன் காரிக்கண்ணனாரின் முன்னே நின்று கொண்டிருந்த அதே நேரத்தில் உருத்திரங்கண்ணனார் கரிகால் மன்னனின் மாளிகை முகப்பில் நின்று கொண்டிருந்தார்.

புலவரைக் கண்ட காவலன் அவரைப் பணிந்து ''என்ன தேவை தங்களுக்கு?'' என்று கேட்டான்.

''அவசரமாக மன்னரைப் பார்க்க வேண்டும்'' என்று புலவர் கூறியதும் காவலன் உள்ளே ஓடினான்.

மாளிகையிலுள்ள கட்டிலில் சாய்ந்தபடி விழியிமைகளைச் சுருக்கியவாறு தோற்றமளித்த கரிகாலனிடம் காவலன்; ''கடியலூர்ப் புலவர் மன்னர் மன்னரைக் காணவிரும்புகிறார்'' என மொழிந்து நின்றான்.

''வரவிடு!'' என்று மன்னன் பதில் கூறினானே தவிரப் புலவர் வந்திருக்கிறார் என்ற செய்தியை கேள்விப்பட்ட ஆவலோ பரபரப்போ எதுவும் அவன் முகத்தில் தலைகாட்டவில்லை.

அவனுடைய சிந்தனையெல்லாம், அவனைச் சுற்றியும் பூம்புகாரைச் சுற்றியும் சுழன்று கொண்டிருக்கிற விசித்திரமான நிழ்ச்சிகளைத் தொடர்ந்தது! மாளிகைக்குள்ளே தனக்கெதிராக நடைபெறும் பயங்கரமான சதித்திட்டங்களைப் பற்றி உணர்ச்சி கொப்பளிக்க எண்ணிக் குமுறினான். 'வரவிடு' என்று கூறினானே தவிர வரப்போகிற புலவரை எதிர்கொண்டழைக்க எழுந்தானில்லை. காவலன் போனதுமே புலவர் வருவதை அறவே மறந்துவிட்டான். 'வரவிடு' என்று சொல்லிக் கொண்டே விழிகளை மூடிச் சிந்தனைக் கடலில் வீழ்ந்து விட்டான்.

எட்டுத் திக்கும் முரசு கொட்டி எதிரிகளைப் பணிய வைத்த அந்த ஏற்றமிகு வெற்றிவிழாத் திருநாள் எங்கே? அந்த நாளில் ஆனைமீதமர்ந்து சோழ மண்டலத்துப் பெருமக்கள் வாரியிறைத்த பூமழைக்குள்ளே சிக்கித் தவித்த சிறப்பான காட்சி எங்கே? களம் பல கண்டு கவின் தமிழ்க் கற்கண்டைக் கவிஞர்கள் தரப்பெற்றுக் கொண்டு கொலுவீற்றிருந்த மாட்சிதான் எங்கே?

எதுவும் மறைந்துவிடவில்லை. மறவர் குடிப்பெருமை ஓடிவிடவில்லை. மானங்காத்திடும் தமிழ் மரபின் மாண்பு அழிந்துவிடவில்லை. அவனது ஏக்கத்திற்குக் காரணமே, எப்படித் தன் அரண்மனைக்குள் எதிரிகளின் கையாட்கள் நிறைந்திருந்தார்கள் என்பது தான்! பூம்புகாருக்குள்ளேயே சோழ மண்டலத்தின் பகைவர்கள் இருக்கிறார்கள் என்ற ஒரே ஒரு வேதனையினால்தான் சில நாழிகை நேரத்தில் துரத்தியடித்திருக்க வேண்டிய வேளிர் மன்னனையும் அவன் படையினரையும் எதிர்த்துத்

தாக்குவதற்கு அவன் தயங்கினான். இல்லையேல் சோழ நாட்டுப் படை எப்போதோ மரமாளிகையை மண்மேடாக்கியிருக்கும்! நம்மிடமே பகைவனை வைத்துக் கொண்டு என்ன பயன்? மாற்றானின் சதிகளை வளர விட்டால்தான் நம்மிடமுள்ள துரோகிகள் எந்த அளவுக்குச் சதிவேலையின் சிகரத்தை எட்டுகிறார்கள் என்று புரியும்!

இந்த எண்ணம் மன்னனுக்கு உதித்த காரணத்தால் தான் பூம்புகார் மக்களே வியக்கவும், வெறுப்படையவும் கூடிய நிலைமைகளை யெல்லாம் உருவாக்கினான்! கொல்ல வந்த வேளிர் குல அரசிக்கும் அரச மரியாதைகளுடன் சவஅடக்கம் நடத்தி வைத்தான். இளவரசி தாமரையிடம் பகைமை பாராட்டாமல் அவளை மிக்க உபசாரத்துடன் வரவேற்றான்! அரசியின் முக தரிசனம் காண இருங்கோவேளும் வரலாம்; பாதுகாப்பு அளிக்கப்படும் என்று பறை முழங்கச் செய்தான்.

இத்தனை காரியங்கள் செய்ததும் எதிரியிடமுள்ள அச்சத்தால் அல்ல? கரிகாலனின் தனிப்பண்பு அது என்றாலும், அந்தப்பண்போடு நாகரிகமான ராஜ தந்திரமும் கலந்திருந்தது. பகைவர்கள் தடையின்றி நுழைந்து காரியங்களை செய்தால்தான் நம்மிடமுள்ள துரோகிகளுக்கும் அவர்களுக்குமுள்ள தொடர்பைத் தெளிவாக புரிந்து கொள்ளலாம் என்று அவன் கருதினான். இந்தத் தந்திரத்தால் திடீரென்று எதிர்ப்பு எரிமலை வெடித்து விட்டாலும் அதனைச் சமாளித்து வெல்லும் ஆற்றல் தன்னிடமிருக்கிறது என்பதிலே அவனுக்குச் சிறிதும் நம்பிக்கை குறையவில்லை.

ஆனால் ஆபத்தை வீட்டுக்கூடம் வரையிலே கொண்டு வந்து உட்கார வைத்து, அதன் பிறகு அதை விரட்ட வேண்டுமா? இந்தக் கேள்வி பாண்டிய நாட்டுத் தளபதி நெடுமாறனின் உள்ளத்தில் கிளர்ந்தெழுந்தது. வீட்டு மூலை முடுக்குப் பொந்துகளில் ஒளிந்திருக்கும் எலிகளை விளக்கின் உதவியால் பார்க்க முயல வேண்டுமே தவிர, பிரகாசமான ஒளியில் பார்த்து அவைகளைப் பிடித்து விடலாமென்று யாராவது வீட்டுக்கே நெருப்பு வைப்பார்களா? இவ்வாறு நினைத்து மன்னனின் செயல்களுக்காக அவன் வருந்தினான். ஆனாலும், அவனுக்கு ஒரு நம்பிக்கை. பகைத் தீ பெருமளவுக்குப் பரவினாலும் அதை அணைத்து வெற்றி பெறும் வல்லமை மன்னனுக்கு நிச்சயம் உண்டு என்பது.

அதே நம்பிக்கையில்தான் தன்னையும் நாட்டையும் வளைத்துக் கொண்டிருக்கும் சதிவேலைகளைப் பற்றிப் பயங்கொள்ளாது நிலைமை களை எப்படிச் சரி செய்வது என்ற சிந்தனையில் ஈடுபட்டான் மன்னன்.

அப்போது வந்த காவலனிடம்தான் புலவரை 'வரவிடு' எனக் கூறிவிட்டு, கூறியதையும் மறந்து கண்மூடிக் கனவுலகம் சென்றான்.

கனவுலகின் கதாநாயகனாக அவனே நின்று நடக்க வேண்டிய காரியங்களுக்குத் திட்டம் தீட்டத் துவங்கினான்.

''வரச் சொல்லுகிறார் மன்னர்'' என்று வாயிற்காப்போன் கூறியதும் மிக்க மகிழ்ச்சியுடன் புலவர் உள்ளே சென்றார்.

ஆனால் அங்கே அவர் மன்னனின் நிலைகண்டு வியப்புற்றார். தன்னை வரச்சொல்லிவிட்டு மன்னன் உறங்குகிறானேயென்று அதிசயித்தார். கனைத்துக் காட்டினார். வேந்தனின் சிந்தனை அறுபடவில்லை. அரசன் எழும் வரையில் அங்கே இருப்பது என்று முடிவு செய்துகொண்டு ஒரு புறத்தில் நின்றார்.

புலவர் பெருமக்கள் என்றால் கரிகாலர் எவ்வளவு மரியாதை காட்டுவார் - ஏழடி தூரம் பின்னால் நடந்து சென்று வழியனுப்பி வைக்காவிட்டால் பெரும் பாதகம் என்று கருதுகிற கொற்றவனாயிற்றே! அவரா என்னை வரச்சொல்லிவிட்டு அதற்குள் இவ்வளவு அலட்சிய மாகத் துயில் கொண்டுவிட்டார்? புலவர் உருத்திரங்கண்ண னாருக்கு வியப்பும் வேதனையும் மாறி மாறித் தோன்றலாயின!

அப்போது யாரோ வரும் காலடியோசை கேட்கவே புலவர் தான் நிற்பது தெரியாமல் தூணின் பக்கம் மறைந்து கொண்டார். என்ன நடக்கப் போகிறது என்று அறிய வேண்டுமென்ற ஆசையால் அல்ல! வருகிறவர்கள் தான் நிற்கிற காட்சியைப் பார்த்துத் தன்னைப் பற்றித் தகுதிக் குறைவாக நினைத்துவிடக்கூடாதே என்ற கூச்சத்தால் அவர் யார் கண்ணிலும் படக்கூடாது என்று மறைந்து நின்றார்.

உள்ளே வந்தவர்கள் மெய்க்காவல் படையினைச் சேர்ந்தவர்கள்தாம். செழியனிடமிருந்து ஓலைச் சுவடியைப் பறித்துக் கொண்டுவந்த தலைமை மெய்க்காவலன் அரசனின் அருகே சென்றான்; நின்றான். பின்னர் மன்னன் பார்வைபடும் இடத்தில் சுவடியை வைத்துவிட்டு வெளியேறினான். தூண் மறைவில் நின்ற உருத்திரங்கண்ணனாரை அவன் கவனிக்காமலே போய்விட்டான்!

புலவர் பெருமான் அவன் வைத்துவிட்டுப் போன ஓலைச்சுவடியை உற்றுப்பார்த்துக் கொண்டு நின்றார். அந்தச் சுவடியிலே பதிந்துவிட்ட அவர் விழிகளை அவரால் மீட்க முடியவில்லை. ஓலைச்சுவடியென் றாலே தமிழ்ச் செய்யுட்கள் அடங்கிய கருவூலம் என்றுதானே புலவர்கள் எண்ணுவர்? அந்த எண்ணத்தால் உந்தப்பட்டுக் கடியலூரார் அதனை யெடுத்துப் பார்க்க வேண்டுமென்ற ஆவலுக்கு அடிமையானார். ஒருவேளை அரசியல் பற்றிய கருத்துக்களோ நிலைவிளக்கங்களோ அதிலிருந்தால் என்ன செய்வது? அதனைத் தான் படிப்பதென்பது அறச் செயல் அல்லவே என்ற அச்சம் அவரைத் தயங்க வைத்தது. மேலெழுந்த

வாரியாக அது என்ன சுவடியென்று பார்த்து விடலாமே யென்று மெல்ல நடந்து அருகே வந்தார். ஓலைச் சுவடியைக் கூர்ந்து கவனித்தார்.

''ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த'' என்ற தமிழ்வரி அவர் கண்ணில் பட்டது. உணர்ச்சி கொண்டார். தமிழ் நூலே அந்தச் சுவடி; அரசியல் நிலைகுறித்த ஓலையல்ல என்று முடிவு செய்து அதனைக் கையில் எடுத்துக் கொண்டார்.

மெதுவாக அந்த இடத்தைவிட்டு நகர்ந்து மன்னனுக்குத் தலைப்புற மாக ஒதுங்கி நின்று ஓலையைப் புரட்டிப் படிக்கத் தொடங்கினார். செழியன் படித்துச் சுவைத்த அதே பாடலை அவரும் படித்துச் சுவைத்து மகிழ்ந்தார். பாட்டின் இறுதியில் காரிக்கண்ணனார் என்றிருந்த எழுத்துக்களைப் பார்த்ததும் அவருக்கு உற்சாகம் தாங்கவில்லை. ஆயினும் ஆவலையும் துடிப்பையும் பெருமகிழ்ச்சி யினையும் அடக்கிக்கொண்டு அடுத்த ஓலையைப் பிரித்தார்.

அதற்குள் ஒரு குரல் அவர் செவியைத் தாக்கிச் சிந்தையில் சூடேற்றி அவரைச் செயலிழக்க வைத்துவிட்டது! ''புலவரே மனதுக்குள் படிக்காதீர்கள். வாய்விட்டு என் காதில் விழும்படி உரக்கப் படியுங்கள்!''

இந்த வார்த்தைகள் அவர் காதில் விழுந்ததுதான் தாமதம்! அந்த மாளிகையில் உள்ள எல்லாப் பொருள்களுமே சுற்றுவதுபோல் தெரிந்தது, உருத்திரங்கண்ணனாருக்கு!

குரல் வந்த திசை நோக்கித் திடுக்கிட்டுத் திரும்பினார் புலவர். அவர் மேனி நடுங்கிற்று; நாக்குழறிற்று. மன்னன் கரிகாலன் புன்னகையுடன் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த இதழோரச் சிரிப்பிலே இயற்கையான அழகைப் புலவர் காணவில்லை. வலிந்து சிரிப்பதுபோல் அவருக்குத் தோன்றிற்று. கரிகாலனின் கண்கள் சிவந்திருந்தன. அதையும் அவர் கவனிக்கத் தவறவில்லை. அடுத்து என்ன பேசப்போகிறானோ என்ற அச்சத்துடன் பயங்கரமான அமைதியினிடையே இருளில் அகப்பட்ட சிறு குழந்தைபோல் தவித்துக் கொண்டிருந்தார். அவர் கையிலிருந்த ஓலைச்சுவடி பிரிந்து கயிற்றில் தொங்கிக்கொண்டிருந்தது.

மெத்தச் சிரமப்பட்டு நா அசைத்தார். ''அரசே!'' என்ற அழைப்புடன் நாக்கு வாய்க்குள் போய் ஒட்டிக் கொண்டு விட்டது.

புலவரின் நிலையை நன்றாகப் புரிந்து கொண்ட கரிகாலன், ''ம்! பரவாயில்லை! படியுங்கள்!'' என்று அன்பு கனிந்த மொழியில் கூறினான். அதுவும் புலவரை வேலெனத் தாக்கியது.

''என்னை மன்னித்திடுக மன்னா!'' என்றவாறு அவனருகே ஓடி வந்தார் அவர்.

அதற்குள் அரசர்க்கரசன் அவரைத் தழுவிக் கொண்டு, ''அமைதியாயி ருங்கள்! தாங்கள் எந்தத் தவறும் செய்திடவில்லையே!'' என்று ஆறுதல் கூறினான். புலவரின் கண்கள் மலையருவிகளாயின.

''சோழர்குலத் திலகமே! தங்களைக் காண வேண்டுமென்று தணியாத வேட்கையால் அனுமதி பெற்று உள்ளே வந்தேன். வந்தபோது தாங்கள் சிந்தனையிலாழ்ந்திருந்தீர்கள். உறங்கி விட்டீர்களோ என்ற ஐயப்பட்டால் சிறிது தயங்கினேன். அதற்குள் மெய்க்காவலர் இந்த ஓலைச் சுவடியினைக் கொணர்ந்து இங்கு வைத்துவிட்டு அகன்றனர். பொன்னோ பொருளோ எனில் தொட்டிருக்கமாட்டேன். என்னோடு உறவாடும் தமிழ்ச்சுவடி என்ற காரணத்தால் படிப்பதற்கு எடுத்தேன். நான் தங்களைக் காணவந்ததோ பூம்புகார்ப் புலவர் காரிக்கண்ணனாரைப் பற்றி விவாதிப்பதற்கு! வந்த இடத்தில் காண நேரிட்டதோ அவர் எழுதிய ஓலைச் சுவடியை! அந்தத் தொடர்புதான் மன்னவா இதனைத் தொடுவதற் குத் துணிவை அளித்தது!'' என்றவாறு சுவடியை மன்னனிடம் நீட்டினார் புலவர்.

கரிகாலன் அதனைப் பெற்றுக் கொள்ளாமல், ''கவி மன்னரே! பூம்புகாரில் வீசிக்கொண்டிருக்கும் புயல்பற்றித் தங்களுக்கு தெரியாதா என்ன ? வந்திருக்கிறீர்கள் என்றான் வாயிற்காப்போன்; 'வரவிடு!' என்றேன். அதற்குள் அனைத்தையும் மறந்து குழப்பத்தின் மடியில் படுத்து விட்டேன். ஏதேதோ சிந்தனை! முற்றுப் பெறாத முடிவுகள்! சிந்தனை முகட்டின் விளிம்பின் நினைவின் கால் தவறிய காரணத்தால் திடுக்கிட்டுக் கண் விழித்தேன். தங்களைக் கண்டேன். இந்தத் தவற்றுக்காக என்னை மன்னித்து விடுங்கள். பூம்புகார் அரண்மனையில் புலவர் களுக்கு இழைக்கப்பட்ட இரண்டாவது அவமானம் இது!'' என்று கரிகாலன் கூறிக்கொண்டே விம்மி விம்மி அழத் தொடங்கினான்.

வில்லும் வேலும் வாளும் கொண்ட வீரர் கூட்டம் சுற்றி நின்று தாக்கினாலும் கலங்காத கரிகாலன், விம்மி அழுவது கண்டு புலவர் உருத்திரங்கண்ணனார் திகைத்து நின்றார்.

''அரசே! அரசே!'' என்று கூறிக் கொண்டே அவரும் அழுதார்.

''தமிழ்ச் சோலையிலே சுதந்திரமாகக் கூவிக் கொண்டிருந்த இன்பக் குயிலைக் கூண்டிலே அடைத்து வைத்திடும் பெரும் பழியை என்னையன்றி வேறெந்த மன்னனும் ஏற்றுக் கொண்டிருக்க மாட்டான். பகைவரை வென்றேன். பல படைகளை வீழ்த்தினேன். இப்படிப் பாரெல்லாம் புகழ்ந்தாலும் பாவாணராம் பைந்தமிழ்த் தேர்ப்பாகனைச் சிறையிலிட்ட கொடியவன் என்ற இழி சொல்லும் என் வரலாற்றில் ஏறிக் கொள்ளத்தான் போகிறது!'' என்று புலம்பினான், பூம்புகார்க் கொற்றவன்.

''உறையூர் தந்த ஒப்பில்லா வீரனே! உத்தமச்சோழ மன்னனே! உம் கண்ணில் நீர் என்றால் அது என் போன்றோர் மனப்புண்ணில் வேல் பட்டது போலன்றோ! கவலையைத் துறந்திடுக; காரிக்கண்ணனார் தவறு செய்தார் என்ற காரணத்தால்தானே சிறை வைத்திருக்கிறீர்கள்? அநியாய மாக அவரைப் பூட்டி வைக்கவில்லையே! பிறகேன் மனம் நொந்திட வேண்டும்?'' என்று கடியலூரார் ஆறுதலையும் கேள்வியை யும் ஒன்றாக இணைத்தார்.

''எனக்கெதிராகப் புலவர் காரிக்கண்ணனார் புறப்பட்டதே எனக்கும் என் ஆட்சிக்கும் இழுக்கல்லவோ? என்னிடமோ என் ஆட்சியிடமோ அவருக்குக் குறை தோன்றிய காரணத்தால் தானே எதிரிகளுடன் உறவாட நினைத்தார்? அந்த நினைவுக்குக் காரணமானவன் நான்தானே? என் நாட்டுப் புலவரின் புகழுரையைக் கூடப் பெறமுடியாத நான், இழிதகை வேந்தனன்றோ?''

''பெருவழுதிப் பாண்டியரையும், தங்களையும் இணைத்து அவர் பாடிய பாடலை நான் கேட்டு மகிழ்ந்தேன். மன்னவா! அதில் தங்களைப் புகழ்ந்துதானே இருக்கிறார்?''

''முதலில் அந்த பாட்டைக் கேட்டபோது எனக்கு எந்த மனத்தாங்கலும் ஏற்படவில்லை. இப்பொழுது எழுந்துள்ள சூழ்நிலை களைப் பின்னணியாக வைத்து அந்தப் பாட்டை மறுபடியும் நினைத்துப் பார்த்தால், காரிக்கண்ணனாரின் எண்ணம் நன்கு தெளிவாகும்! புலவர் அவர்கள் அந்தப் பாட்டில் பாண்டியரைப் புகழ்ந்த அளவுக்கு என்னைப் புகழவில்லை!''

''அதுதான் மன்னா தமிழ்ப் பண்பு! தாங்கள் அறியாததா, என்ன? விருந்தினராக வந்த வேந்தரைத் தானே அதிகமாகப் பாராட்டிப் புகழவேண்டும்? தங்களைத் தான் காரிக்கண்ணனார் இதயத்தில் வைத்துப் புகழ்ந்து கொண்டிருக்கிறாரே!''

''இல்லை! வீண் கற்பனையே!''

''இதோ இந்த ஓலையில் எழுதியிருப்பதைப் பாருங்கள்; 'என் இதய மேவும் கரிகாலர்க்கு இச்சுவடி காணிக்கை' என்றுதான் துவங்கி யிருக்கிறார்!''

''சிறை வாசத்திலே புலவர் எழுதிய பாடல்களா இவை? எங்கே படியுங்கள்; கேட்போம்!''

''பாடல்கள் அல்ல மன்னா! தாங்கள் மட்டுமே படிக்க வேண்டிய பரம ரகசியங்கள் இதிலே அடங்கியிருப்பதாக இரண்டாவது வரி சொல்கிறது!''

''அப்படியா? எங்கே?''

ஆவலுடன் மன்னன் அந்த ஓலைச் சுவடியை வாங்கிக் கொண்டான். கடியலூராரையும் சற்றுத் தொலைவில் உள்ள ஒரு கட்டிலில் உட்காரச் சொன்னான். அவரும் அமைதியாக உட்கார்ந்து சுவடி படிக்கும் மன்னனின் முகமாறுதலைக் கவனித்துக்கொண்டிருந்தார்.

கரிகாலன் சுவடியை நெஞ்சுக்குள்ளாகப் படித்துக் கொண்டான். அவன் முகம் ஒரு சமயம் மலர்ந்தது. பிறிதொரு சமயம் சிவந்தது. கண்கள் சில நேரங்களில் குறுகிப் போயின. சில நேரங்களில் ஒளிவிட்டு விரிந்து கொண்டன. இதழோரத்தில் புன்னகை தலைகாட்டும். உடனே அதனை உள்ளே இழுத்துக் கோபம் உதட்டைத் தள்ளிவிடும்; நெஞ்சு உயரும்; அடுத்த கணம் முதுகு வளையும்; பெருமூச்சு புறப்படும்; உடன் முகத்தில் பெருமிதம் தோன்றும்!

இத்தனை வகை மாறுதல்களுடன் கடைசி ஓலையையும் படித்து முடித்த கரிகாலன், கடைசி ஓலையைப் புரட்டி, சுவடியை ஒழுங்காகக் கட்டியவாறே கடியலூர் உருத்திரங்கண்ணனாரை நோக்கி, ''காரிக் கண்ணனாருக்கு விடுதலை! விடுதலை! புலவர் பெருமானே, என்னை மன்னித்து விடுங்கள்! பெரும் பழிக்கு ஆளான இந்தப் பாவிக்கு ஏற்ற தண்டனையைப் புலவர்கள் சார்பாகத் தாங்களே அளியுங்கள். காரிக் கண்ணனார் களங்கமற்றவர். நான்தான் அவரைக் கூண்டில் அடைத்த கயவன்! கயவன்!'' என்று கதறினான்.

தன் நிலைபற்றிய உண்மைகளை ஓலைச்சுவடியில் காரிக்கண்ணனார் எழுதியிருக்கக் கூடுமென்ற யூகத்தோடு புலவர் கடியலூரார் அரசனைப் பரிவுடன் நோக்கி, ''மன்னர் மன்னா! காரிக்கண்ணனார் குற்றவாளியல்லர் என்று தாங்கள் கண்ட தீர்ப்பே தாங்கள் செய்ததாகக் கருதப்படும் தவறுகளைத் தீர்க்க வல்லது. நாட்டுக்குத் துரோகி என்று சந்தேகப்பட்டுத்தானே சிறை வைத்தீர்கள்? அதிலொன்றும் பெரும் பாதகமில்லையே! ஆகவேண்டியதைப் பாருங்கள். அரசே! நான் ஒன்று கேட்கிறேன். அதற்கு மட்டும் முடிந்தால் விடையளிக்க வேண்டுகிறேன்.தான் குற்றவாளி அல்லவென்று பூம்புகார்ப் புலவர் எப்படி நிரூபிக்கிறார் என்பதை நான் அறியலாமா?'' என்று கேட்டார்.

''தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள்! இந்த ஓலைச்சுவடியில் பதுங்கியிருக்கும் உண்மைகள் எனக்குப் பிறகு இன்னும் ஒரே ஓர் ஆளுக்குத்தான் தெரியவேண்டும். இதிலுள்ள வரிகளும் யாராலும் புரிந்து கொள்ளக்கூடிய சுலபமான வரிகள் அல்ல! அவ்வளவு கடினமான தமிழ் என்று சொல்லமாட்டேன். ஒவ்வொரு வார்த்தையும் சூசகமானது! அந்தச் சூசகத்திற்கான விளைவுகள் வெற்றிகரமாக ஏற்படுவதற்கும்

பொறுப்பேற்கக் கூடியவன் ஒருவன் இருக்கிறான். அவன் வாயிலாகத் தான் வெளிப்பட வேண்டும். இந்த உண்மைகள் தமிழ்நாட்டு மண்ணிலே மட்டுமல்ல; ரோமாபுரி மண்ணிலும் புதையுண்டு கிடக்கின்றன. இதனை அகழ்ந்தெடுக்க வேண்டிய பொறுப்புக் குரியவனை நான் உடனடியாகக் கண்டுபிடித்தாக வேண்டும்!''

மன்னன் மிக்க அக்கறையுடனும் பொறுப்புணர்ச்சியுடனும் இந்தத் தகவலைப் புலவர் உருத்திரங்கண்ணனாரிடம் வெளியிட்டான்.

உருத்திரங்கண்ணனார் காவலனின் வாய் உதிர்த்த சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்தாரே தவிர, அவர் மனதில் ஒரு கணநேரம் பிரள யமே நேர்ந்துவிட்டது. சோழ மண்டலத்திலே அடுக்கடுக்காகக் குவிந்து வருகிற அதிர்ச்சிகளில் இனிப் புதியொதொரு கூட்டமே அல்லவா இடம்பெறப்போகிறது! தமிழ் மண்ணுக்கும் ரோமாபுரிக்கு மிடையே உள்ள ஏதோ ஒரு மர்மமான உண்மையைப் பற்றி அல்லவா மன்னர் குறிப்பிடுகிறார்?

அது பற்றி மேலும் விளக்கம் கேட்க விரும்பாமல், ''அப்படியானால், காரிக்கண்ணனாரை இப்போதே விடுதலை செய்து விடலாமல்லவா?'' என்று ஆவலுடன் வினவினார்.

மன்னன் யோசித்தான். வளவன் சொன்ன வேலையை நினைத்துக் கொண்டான்! யவனக்கிழவர் வேடத்தில் வேளிர்குல வீரனைச் சந்தித்துச் சூழ்ச்சிகளை அம்பலப்படுத்த வளவன் குறித்த வேளை நெருங்கி விட்டதே என்ற பரபரப்பு அவனை வளைத்துக் கொண்டது. தானே நேரில் சென்று புலவரை விடுவித்து அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றினாலும், அவரைக் காண்பதற்கு அவன் மிகவும் வெட்கப்பட்டான்.

அதனால் அங்கிருந்த ஓர் ஓலையில் கீழ்க்கண்டவாறு எழுதினான்;

'காரிக்கண்ணனாரைச் சிறையிலிட்ட கரிகாலன் மாண்டு விட்டான். புலவர் தந்த கடமையை நிறைவேற்றப் புதுக் கரிகாலன் பிறந்திருக்கிறான். வெற்றிக்குப் பிறகு நேரில் காண்பான்.'

ஓலையைச் சுருட்டியவாறு கைதட்டி, மெய்க்காவலனை அழைத்தான். ஓடிவந்த காவலனிடம் அதனைத் தந்து, ''புலவர் கடிய லூராருடன் சென்று காரிக்கண்ணனாரை விடுதலை செய்திடுக!'' என மொழிந்து முத்திரையிட்ட கணையாழி யையும் அடையாளத்திற்குக் கொடுத்தனுப்பினான்.

வணங்கி விடைபெற்ற கடியலூராரை ஏழடி நடந்து சென்று வழியனுப்பி வைத்து, மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான் கரிகாலன்.

யவனக் கிழவர் வேடத்தில் மன்னன் வரவேண்டுமென்று சூதுவலை பின்னி விட்டு, மன்னனை இருங்கோவேள் எனத் தவறாக நினைத்துக் கொலை செய்துவிட வேண்டுமென்ற வஞ்சகத் திட்டத்தையும் முத்துநகையிடம் ஒப்புவித்துவிட்டு, வளவன் என்னும் பெயருடன் அரண்மனைக்குள் திரிந்து கொண்டிருந்த இருங்கோவேளுக்கு உள்ளத்திலே ஓராயிரம் எண்ணங்கள் புற்றீசல் போலப் புறப்பட்டு அவனை அலைக்கழித்துக் கொண்டிருந்தன.

வேளிர் மரபினர் தங்கள் குடிப்பெருமையை உயர்த்த வந்த மாவீரர் தலைவன் இருங்கோவேள் எனப் பெருமை கொண்டிருக்கின்றனர். சோழ மன்னனிடம் அவன் தோற்றுவிட்டானென்றாலும் என்றைக்காவது ஒருநாள் வேளிர் குலத்தினுடைய வெற்றிக் கொடியைப் பூம்புகார்ப் பட்டினத்துக் கோட்டை முகப்பில் பறக்க விடுவான் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர்.

ஒளிந்து திரிகிறான்; காட்டில் வாழ்கிறான்; மறைந்து நின்று மன்னனைக் கொல்லச் சதிசெய்கிறான்-என்பன போன்ற செய்திகள் நூற்றுக்கணக்கில் வந்த நேரத்திலும் அவனது மரபினர் அந்தச் செயல்களையெல்லாம் ஒரு வகைப்போர் முறை என்றே வீர முழக்கம் செய்தனர்.

ஒளிந்து திரிவது எதற்காக? சோழனை ஒழித்துக் கட்டுவதற்காக!

காட்டு வாழ்க்கை ஏன்? நாட்டுக்குரியவர் வேளிர்குடியினர் என்ற வெற்றிச் சிந்து பாடுவதற்காக!

-இப்படி அவர்கள் காரணம் கூறினர். மரமாளிகை தரைமட்டமாகி விட்டது. மன்னன் போன இடம் தெரியவில்லை என்ற செய்திகளை செவிமடுத்தபோதும் அவர்கள் தங்கள் மன்னன் தன்னந்தனியே வெற்றிச் செய்தியுடன்தான் வருவான் என்ற நம்பிக்கை மொழி உதிர்த்தனர். தன்பால் தன் மரபினர் வைத்திருக்கும் அசையாத நம்பிக்கைக்காக வாவது அவன் வெற்றி பெற்றுத் தீரவேண்டுமென்று துடியாய்த் துடித்தான்.

மதயானை போல் அவன் வீதியுலா வரும்போது வேளிர் மக்கள் வீதியில் வீழ்ந்து வணங்கிய காட்சியை ஒரு கணம் எண்ணுவான்:

''அய்யோ! என்னைப் பற்றி எவ்வளவு பெருமையாகக் கருதியிருக்கிறார்கள்! அவர்களிடம் சென்று நான் தோல்வியால் தொங்கிய தலையைக் காட்டுவதைவிட 'எங்கேயோ தொலைந்து விட்டான்' என்ற செய்தி அறிவித்து விட்டு ஓடிவிடுவது மேலன்றோ?'' எனத் தனக்குள் கூறிக் கொள்வான்.

போர் முகத்தில் கரிகாலனின் மின்னல் வீச்செனச் சுழன்ற வாளுக்கெதிர் நிற்க முடியாமல் தனது படை வீரர்கள் மிரண்டோடிய காரணத்தால்தானே அன்றைய தினம் மாபெரும் தோல்வியை அணைத்துக் கொள்ள நேரிட்டது? கரிகாலன் இல்லாத சோழர்படை தன் கால் தூசுக்குச் சமானம் என்று அவன் தீர்மானித்திருந்தான்.

அவனுடைய திட்டம் வெற்றிகரமாக நடைபெறுமேயானால் கரிகாலன் ஒழிந்து விடுவான். சோழநாட்டில் காரிருள் கப்பிக் கொள்ளும். பின்னர் இருங்கோவேள்தான் பூம்புகாரின் மன்னன், உறையூருக்குத் தலைவன். காஞ்சி விழுந்துவிடும், அந்த எதிர்காலக் கனவுகளுடன்தான் அவன் திட்டம் தீட்டினான். திட்டம் தீட்டியபோது குறுக்கிட்டுத் தடுக்காத சில விளைவுகள் அவனை வாட்டி வதைக்க ஆரம்பித்தன.

''முத்துநகை கரிகாலனைக் கொன்று விடுகிறாள் என்று நம்புவோம். உடனே அவளுக்குத் தெரியப்போகிறது நான்தான் இருங்கோவேள் என்று! பிறகு அவள் என்னை மதிப்பாளா? தங்கம் நிகர் கரங்களால் தழுவுவாளா? 'அத்தான்' என அழைப்பாளா? 'அன்பே' என அழைப்பாளா? இல்லை! நிச்சயமாக இல்லை! அவளை நான் இழந்துவிட வேண்டியதுதான். இழப்பதோடு முடியாது. என்னைப் பழி தீர்க்காமல் அவள் ஓயமாட்டாள். அல்லது தன்னையறியாமல் தான் நாட்டுக்குச் செய்த துரோகத்தை எண்ணித் தன்னைத் தானே சாவின் கையில் ஒப்படைத்து விடுவாள்! அய்யோ! அவளுக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் ஏற்படும்! என்னை அவள் உயிரைவிட மேலாக நேசிக்கிறாளே; என் நெஞ்சத்திலே முழு இடமும் அவளுக்கே சொந்தமென்று நினைத்திருக்கும் அந்தப் பவளக்கொடியாள் என் திட்டத்தின் உண்மை உருவம் வெளிப்பட்டதும் 'பாவி! பழிகாரா!' என வசைமாரி பொழிந்து சபித்துக் கொட்டிவிடுவாளே! அவளுடைய மென்மையான இதயம் வரப்போகும் இவ்வளவு பெரிய அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்தது அல்லவே!

''அவளது காதலைத் துறந்து - அவளை ஏமாற்றி-உயிரோடு வைத்துச் சித்திரவதை செய்து - கரிகாலனைக் கொன்று விடுவதால் என் வீரம் வெளிப்படவா போகிறது? சூழ்ச்சித் திறன்தான் வஞ்சகர்களால் போற்றப்படும். முத்துநகையை நான் காதலிக்கிறேன்; நெஞ்சார விரும்புகிறேன்; பெருந்தேவியின் இடத்தை அவளுக்கு என் இதயத்தில்

அளித்திருக்கிறேன். அவள் என் துணைவி. நாடில்லாத இந்த மன்னனுக்கு அவள் பட்டத்தரசி. நாடு கிடைத்தாலும் அவள் தான் அரசி.

''அப்படிப்பட்ட ஆசைக் கிளியை நான் இழக்க வேண்டுமா இந்தச் சதித்திட்டத்தால்? என் அரசி கரிகாலனைக் கொல்லக்கூடாது என்று துடித்தேன். அவளுடைய கையால் கரிகாலன் சாவது பெரும் இழுக்கு என்று கருதினேன்; 'இருங்கோவேள் தன் மனைவியை அனுப்பிக் கரிகாலனைக் கொன்றான்! அவனைப்போலக் கடைந்தெடுத்த கோழை உலகிலேயே கிடையாது, என நாடு முழுவதும் பேசும் என்றே பயந்தேன்; என் வீரத்திற்கும், தன்மானத்திற்குமே உகந்ததாக படவில்லை. அவச் சொல் ஏற்பட்டு விட்டால்-தன் ஆற்றலில் நம்பிக்கையின்றி - தோளில் பலமின்றி - நெஞ்சில் உரமின்றி மனைவியை அனுப்பி மன்னனைக் கொன்றான் என்ற மாபழி ஏற்படுமேயென்று அப்போது மட்டும் ஏன் அஞ்சினேன்? ஏன் கொலையைத் தடுத்தேன்?

''இப்போது என் துணைவியை விட்டுக் கொலை செய்யத் தூண்டுகிறேன்; என்ன காரணம்? அங்ஙனமாயின் முத்துநகை என் மனைவியில்லையா? என் இல்லக் கிழத்தியில்லையா? வழியிலே கிடைத்த காமக் கிழத்தியா அவள்? அய்யகோ! இல்லை! இல்லை! அவள் உத்தமி; கற்பு நிறை பொற்புடை மங்கை. அவளும் எனக்குத் துணைவியேதான்! அவள் கரிகாலனைக் கொன்றால் ஊர் உலகத்திற்குத் தெரியும்படியாக பழிஎன்மீது விழாது. ஆனால் மனைவியை அனுப்பிக் கரிகாலனைக் கொன்றேன்-வென்றேன்-என்ற அவமானமிக்க பழிச் சொல்லை என் மனமே என் காதுகளில் போட்டு அந்தத் தீச்சொல்லைக் கேட்டுத் துடித்துப் போகுமே!

''அப்படியானால் என்ன செய்வது? கரிகாலனைக் கொல்லாமலே விட்டு விடுவதா? வீரபாண்டி என்ற பெயரிலே முத்துநகையை வாழ்நாள் முழுவதும் ஏமாற்றுகின்ற திட்டத்துடன் எங்கேயாவது ஓடிவிடலாமா? அப்படி ஓடினால் இல்வாழ்வுச் சுகம் மிஞ்சும், இலட்சியம் நிறைவேறுவது எப்படி? வேளிர்குல மக்களை வெற்றித் திருவிழா காணவைப்பது எப்படி? சோழ மண்டலத்தை நாணவைப்பது எப்படி?

''இப்போது எனக்கு ஏற்பட்ட பிரச்சினையே இரண்டு கேள்விகளில் அடங்கி விட்டதே!''

''முத்துநகையா? சோழ மண்டலமா?''

''இந்த இக்கட்டான கேள்விகளுக்கு நான் எப்படி விடை காணப் போகிறேன்? 'எது தேவை? வாழ்வா? சாவா?' என்று கேட்டால்கூடச் 'சாவு' என்று உடனே பதில் கூறிவிடுவேன்.

''இந்தக் கேள்விகள் இரண்டும் ஈட்டிபோலவும், கூரிய கணை போலவும் தைத்துத் தைத்து என் இதயத்தைத் தேன் கூட்டிலுள்ள அறைகளைப்போலப் பொத்தலாக்குகின்றனவே!

''நான் என்ன செய்வேன்?''

''முத்துநகையா? சோழன் தரணியா''

''இந்தக் கேள்விக்கு இன்னும் சில நாழிகை நேரத்தில் நான் பதில் கண்டுபிடித்தாக வேண்டுமே!''

-எனக் குழப்பமுற்றவாறு வளவன் வேடமிட்ட இருங்கோவேள் தனக்கெனத் தரப்பட்டிருந்த மாளிகை அறைக்குள் நுழைந்தான்.

அங்கே அவனது கட்டிலின்மீது ஓர் ஓலைச் சுருள் கிடந்தது. அதை அவசரமாகப் பரபரப்புடன் எடுத்துப் படித்துப் பார்த்தான்.

அதில்-

''மாவீரனே! மானம் பெரிது; மனத்தில் உறுதி - தோளில் வலிவு - இவை இருந்தால் எதிரியைச் சந்தித்து வெற்றி பெறு! இல்லையேல் சண்டையிட்டுப் பெருமையுடன் செத்துப்போ! கோழையாகாதே! வேளிர் குலத்து மானத்தை விலை பேசாதே!''- என எழுதப்பட்டிருந்தது. அந்த வரிகளை திரும்பத் திரும்பப் ப்டித்தான் இருங்கோவேள்.

அந்த ஓலையிலிருந்த கையெழுத்து செழியனுடையது என்பதை இருங்கோவேள் புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுக்கு அந்த ஓலையை எழுதியது யார் என்ற கேள்விக்குப் பதில் கண்டுபிடிக்க ஏற்பட்ட ஆவலையும் மீறிக் கொண்டு திகில் எழுந்தது. தன்னை வட்டமிட்டவாறு யாரோ உலவிக்கொண்டிருக்கிறார்கள், பூம்புகார் அரண்மனையில் என்ற அச்சம் அவனைத் தாக்கத் தொடங்கியது. கையில் வசமாகச் சிக்கிக் கொண்ட கரிகாலனைக் கொன்றுவிடலா மென்று முடிவு கட்டிய பிறகு அந்தத் தீர்மானத்தின் விளிம்பிலே முத்துநகையின் மீது அவன் கொண்ட தூய்மையான காதல், தோகை விரித்து ஆடியவாறு, ''என்னை அறவே வெட்டியெறிந்து அழகைக் கொன்றுவிடப்போகிறாயா?'' என்று அவனைக் கேட்பது போலிருந்தது.

குழப்பம்! குழப்பம்! எங்கே திரும்பினாலும் குழப்பம்!

சோழ மண்டலத்தின் தந்தை-பெருங்குடி மக்களின் சிந்தையெல்லாம் கவர்ந்த ஏந்தல் - கரிகாலனும் குழப்பத்தின் கோரப்பிடியில் அகப்பட்டுத் தத்தளித்தான். அது போலவே அவனைத் தீர்த்துக் கட்டிப் பகை முடிக்க வந்த இருங்கோவேள் மன்னனையும் குழப்பம் தாவி அணைத்து இறுகத் தழுவிக் கொண்டு இதயத்தைப் பிழிந்தெடுத்தது!

''ஏன் மன்னனாகப் பிறந்தோம்- குடி மக்களில் ஒருவனாகப் பிறந்திருக்கக் கூடாதா?'' என்று மன 'ம் கலங்கும்.

''நீ மன்னனாகப் பிறந்ததாக யார் சொன்னது? மன்னன் வீட்டில் பிறந்தாய்; நீ குடி மக்களில் ஒருவனாகத் திகழ வேண்டுமென்று விரும்பி யதை யாரும் தடுக்கவில்லையே!'' மனத்தின் இன்னொரு பகுதி, விடையிறுக்கும்.

இந்த இரண்டு பகுதியில் எது இருண்ட பகுதி, எது ஒளிமிக்க பகுதி என்பதை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

இன்னும் சில நாழிகை நேரத்தில் நடக்க வேண்டிய காரியத்திற்கு இருங்கோவேளின் இறுதியான முடிவு என்ன? அவன் யாரைப்போய் யோசனை கேட்பது? அமைச்சர் செந்தலையாரையா, அல்லது அவனது வீரத் தளபதிகளையா? அவர்கள் தான் எலும்புப் பொடிகளாக மாறி மண்ணோடு மண்ணாகக் கலந்து விட்டார்களே-அவனுக்கு யோசனை சொல்ல அவனைத் தவிர வேறு யாருமேயில்லை!

தங்கை தாமரைக்கு அவன் திட்டமே பிடிக்காது. அவளிடம் இந்தச் சிக்கலை வெளியிட்டால் அழுது புலம்புவாள். 'அண்ணா! ஓடிவிடு! பகைவர்களிடம் சிக்கிக் கொண்டு வேளிர்குலத்தினர் மிச்ச மீதியாக வைத்திருக்கிற நம்பிக்கையையும் நாசமாக்கி விடாதே!' என்று கெஞ்சிக் கேட்பாளே தவிர, உருவான ஆலோசனை எதையும் கூறக் கூடியவள் அல்லள்.

கனல் கக்கும் கண்களில் புனல் தேங்க-இமைகளை மூடிக்கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான்.

சின்ன இடை நெளிய, கன்னக் கதுப்பில் அறுத்து வைத்த பழத்தின் அழகு வண்ணம் காட்டியவாறு, அன்னநடையாள் -அச்சடித்த சிலையனையாள்-அழகி முத்துநகை 'அத்தான்' என அழைத்தவாறு எதிரே வந்தாள். மாணிக்க மலர்க்கொடியை இழுத்துத் தோளில் படர விட்டுக் கொண்டான் இருங்கோவேள்.

''ஏனத்தான் ஒரே சிந்தனையில் மூழ்கியிருக்கிறீர்கள்? என்ன நடந்தது? என்னிடம் கூறுங்கள்!'' எனப் பொன்னிற விரல்கள் கொண்டு அவன் செந்நிறக் கண்ணோரத்தில் தடவிக் கொண்டிருந்தாள்.

''கண்ணே, முத்துநகை! இன்று ஓர் உண்மையைச் சொல்லப் போகிறேன். அது கேட்டு நீ அதிர்ச்சி அடைவாய் என்று நன்றாகத் தெரியும். அதன் பிறகு நீ என்னை வெறுக்கவும் கூடும்!'' என்று தயங்கித் தயங்கிப் பேசினான் இருங்கோவேள்.

''பரவாயில்லை! சொல்லுங்கள் அத்தான்!'' என்றாள் முத்துநகை.

''மலர்ப் படுக்கையில் படுத்திருக்கும்போது திடீரென அது முட் படுக்கை ஆகிவிட்டால் என்ன செய்வாய்?''

''இப்போது மட்டுமென்ன, நீங்கள் இல்லாமல் நான் தனியாகப் படுத்திருக்கும்போதெல்லாம் முட்படுக்கையில் தானே கிடப்பதாக உணர்கிறேன்.!''

''தேனைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாய்-திடீரென அது நஞ்சாகி விடுகிறது. அப்போது என்ன செய்வாய்?''

''மாற்றம் தேனிலே இல்லை! நம் மனத்திலேதான் இருக்கிறது. அத்தான், நினைவுதான் தேனைக் கூடத் தேளின் நஞ்சாகக் கருதச் செய்கிறது என்று என்னை நானே தேற்றிக் கொள்வேன்!''

''நீ என்னை முழு மனத்தோடு நம்பிக் காதலிக்கிறாய்...

''காதலிக்கிறேனா? காதலித்து முடிந்து விட்டது!''

''அடடா! இரு-குறுக்கிட்டுக் குழப்பாதே! சரி, காதலித்து முடிந்து விட்டது! ஒருநாள், நான் உன்னுடைய பகைவன் என்று தெரிந்து விட்டால் என்ன செய்வாய்?''

''இப்படியெல்லாம் சொல்லி என்னைப் பிரித்துவிடப் பார்க்கிறீர்களா? நீங்கள் எந்தப் பொய் சொல்லியும் என்னை ஏமாற்ற முடியாது! செம்புலப் பெயல்நீர் போல அன்புடைய நெஞ்சம் கலந்துவிட்ட பிறகு அதனைத் துண்டாட நினைக்கும் யாரும் வெற்றி பெற முடியாது என்கிறபோது அடித்தளமற்ற உங்கள் பொய்கள்தானா வெற்றி பெற்றுவிடும்?''

''இல்லை முத்துநகை! என்னைப் பார்? என் மேனியெல்லாம் நடுங்குவதைப்பார்! குத்தீட்டிகளும், கொலை வாட்களும் சூழ்ந்து வந்தபோதும் பயத்தால் துடிக்காத என் இதயம் படபடவென்று அடித்துக் கொள்வதை உன் மென்மையான கரத்தால் புரிந்து கொள்! இத்தனை நாள் உன்னை நான் ஏமாற்றி வந்தேன். என் பகைவனை அழிப்பதற்காகப் புறப்பட்ட இலட்சியப் பயணத்தில் உன்னைச் சந்தித்தேன், உள்ளத்தைப் பறிகொடுத்தேன், இனி நாம் பிரிய முடியாது.''

இருங்கோவேள் குழந்தையைப் போல் ஓவென அழுதான்.

முத்துநகை திகைப்படைந்து அவன் முகத்தோடு முகம் புதைத்துக் கொண்டு, ''அத்தான்! என்ன சொல்கிறீர்கள்? பகைவன் இருங்கோ வேளை அடக்கவந்த உங்களுடைய பாதையில் நான் குறுக்கிட்டது பெருந்தவறு என்று கருதுகிறீர்களா? என்மீது தாங்கள் கொண்ட காதலால் தங்களுக்கும் நாட்டுக்கும் ஏற்பட்ட இழப்பு என்ன அத்தான்? சொல்லுங்கள் அத்தான்!'' என்று கண்ணீர் வடித்தாள்.

''நீ கருதுகிறபடி என் பகைவன் இருங்கோவேள் அல்ல; நானும் வீரபாண்டி அல்ல. வீரபாண்டி என்ற பெயரால் உன்னை இதுவரை வஞ்சித்து வந்தேன். முதலில் உன்மீது ஆசை கொண்டேன். உன் தங்க உடல் என்னை உன் அடிமையாக்கியது. பிறகு உன் உள்ளத்தை உணர்ந் தேன். காதல் கொண்டேன். நீயே என் மனைவியென்று தீர்மானித்து விட்ட பிறகு, கணவனின் காரியங்களுக்கு மனைவியும் உதவியாக இருக்கவேண்டுமென்ற இலக்கணப்படி என் பகையழிக்கும் திட்டத்துக்கு உன்னையும் பயன்படுத்திக் கொண்டேன்!''

''அய்யோ! என்னத்தான் சொல்கிறீர்கள்; என் நெஞ்சு வீங்குகிறதே! பேசாதீர்கள்! அத்தான் பேசாதீர்கள்! என் நெஞ்சு வெடித்துவிடும்!''

''முத்துநகை! நுனிநாக்கு வரையில் வந்து உதட்டுக் கதவுகளையும் திறந்துவிட்ட உண்மை இனிமேல் உள்ளே திரும்புவது சிரமம் மிச்சத்தையும் கேள்! உன்னைக் கொண்டே என் பகைவனைச் கொல்வதற்கும் இறுதியாகத் திட்டமிட்டு விட்டேன்!''

''யார் உங்கள் பகைவன்? நீங்கள் யார்? தெளிவாகச் சொல்லுங்கள் அதுவும் விரிவாகச் சொல்லுங்கள்'' என்று சத்தம் போட்டுக் கத்தினாள் முத்துநகை.

''என் பகைவன் கரிகாலன்! நான் தான் இருங்கோவேள்!''

இந்த வார்த்தைகளைக் கேட்ட முத்துநகை ''ஆ'' என்று அலறி யெழுந்த காட்சி, திடுமென வெடித்து நெருப்புக் குழம்பு கக்கும் எரிமலையை ஒத்ததாக இருந்தது.

உறையினின்றும் வெடுக்கெனக் கிளம்பிய வாள்போல்- வில்லி லிருந்து விடுபட்ட கணை போல்-அவன் மடியைவிட்டு எழுந்த முத்து நகையின் கையைப் பிடித்தவாறு, இருங்கோவேள், ''பகைவனா யினும் உன்னிடம் பாசமுள்ளவன் நான் கண்ணே!'' என்று பாகுமொழி பேசலானான்.

''சீ! விடு கையை!'' என்று சொல்லிக்கொண்டே இடையிலிருந்த கத்தியைக் கையிலேந்தினாள். இமை கொட்டும் நேரத்தில் இருங்கோவே ளின் மார்புக்கு நேராகக் கத்தியுடன் பாய்ந்தாள்.

ஆனால் போர்மறவன் இருங்கோவேள், அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே அவளைத் தந்திரமாகத் தடுத்துக் கீழே வீழ்த்தினான்.

மீண்டும் கத்தியைத் தூக்கினாள். முன்னிலும் பன்மடங்கு ஆவேசமாக அவன்மீது பாய்வதற்கு ஓடினாள். இந்த முறையும் தோல்வி! இப்படிப் பல தடவை; அவளால் அவனைக் கொல்லவே முடியவில்லை.

''துரோகம்! துரோகம்! என் தந்தை துரோகியில்லை! நானே துரோகி!'' என்று அலறிக் கொண்டே கையிலிருந்த கத்தியைத் தன் நெஞ்சில் ஆழப் பதித்தாள்.

''அய்யோ முத்துநகை!'' - என்று இருங்கோவேள் திடுக்கிட்டு ஓடினான்.

ஆம்: உண்மையிலேயே கண்களை மூடிக் கொண்டு சிந்தனையி லாழ்ந்திருந்த இருங்கோவேள் திடுக்கிட்டுப் பரபரப்புடன் எழுந்தான். கண்களைக் கசக்கிக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான். யாருமில்லை. மனப்போராட்டத்தின் உச்சக்கட்டம் அதுவென்று தன்னைத்தானே தேற்றிக் கொண்டான்.

அந்த நினைவு அலைகளால் அவன் உள்ளத்தில் ஒரு நல்ல முடிவு தோன்றியது. அந்த முடிவினை நிறைவேற்ற வேண்டும் என்ற உறுதி யுடன் கைகால்களை உதறிக் கொண்டு எழுந்தான், புதிய உற்சாகத்துடன். நினைவில் வந்த முத்துநகை இறுதியில் மேற்கொண்ட முடிவே சாலச் சிறந்தது என்று எண்ணிக் கொண்டான்.

நினைவில் கண்ட காட்சியில் கொல்ல வந்த முத்துநகையை இருங்கோவேள் தடுத்தான். ஆனால் நேரில் வரப் போகிற முத்துநகை யைத் தடுக்காமலே இருந்துவிட்டால்?

இந்த யோசனை அவனுக்குப் புதிய உணர்வை அளித்து விட்டது. படுக்கைக்கு கீழே ஒளித்து வைத்திருந்த மூட்டையை எடுத்துப் பிரித்தான்.

அதில் யவனருக்குரிய உடைகள் இருந்தன.

அந்த உடைகளை அணிந்து கொண்டான்.

யவனக் கிழவரானான்!

''வீரனே! இன்றிரவு நடுயாமத்தில் நான் தங்கியிருக்கும் இடத்திற்கு நீ வரவேண்டும். உன்னிடம் சில முக்கியமான செய்திகளைச் சொல்ல இருக்கிறேன். அவைகளை நீ நிறைவேற்றியாக வேண்டும்.''

இருங்கோவேள் கூறிய இந்த வார்த்தைகள், செழியன் காதுகளில் ஒலித்துக் கொண்டேயிருந்தன. கரிகால் மன்னனுக்கெதிராகப் பயங்கர மான சூழ்ச்சித் திட்டம் ஒன்றினை நிறைவேற்றுகின்ற பொறுப்புத் தன்னி டம் விடப்பட இருக்கிறது என்று எண்ணிய அதே நேரத்தில், அந்தத் திட்டத்தை முறியடித்து இரண்டாவது முறையாகச் சாவின் வாயிலிலி

ருந்து மன்னனைக் காப்பாற்றும் பொறுப்பும் பெருமையும் தனக்குக் கிடைத் திருக்கின்றன என்ற மகிழ்ச்சியும் ஏற்பட்டது.

தன் சகோதரியின் சாவுக்குப் பிறகு, அவன் உள்ளத்தில் ஒரு சிறு மாறுதலுக்கான அசைவும் ஏற்பட்டிருந்தது. அவள் கல்லறையான பிறகு அந்த மாறுதல் சற்று வளரவும் தொடங்கியது. அக்காள் உயிரோடிருக்கும் வரையில் அவன் மனத்தில் தோன்றாத சொந்த பந்தமெல்லாம் அவள் பிணமான பிறகு அவனுக்குத் தோன்றியது. அவள் உயிரோடிருந்த நாட்களில் கொடிய உள்ளமும் பழி வாங்கும் வெறித் தன்மையும் கொண்ட ஒரு கணவனைத் திருத்தாமல் அவனோடு சேர்ந்து அநீதிக்கு வாழ்த்துப் பாடுகிறாள் என்று செழியன் வெறுப்படைந்திருந்தான்.

ஆனால் அவள் உயிர் பிரிந்ததும், அவன் இதயத்தில் இடம் பெற்றிருந்த வெறுப்பு உணர்ச்சி விலகிவிட்டது. அக்காளின் தியாகச் செயல் அவனை உருக்கிவிட்டது.

அவள் எந்த ஒரு கடமைக்காக இறுதி வரையிலும் பணிபுரிந்து வீழ்ந் தாளோ அக்கடமையினால் பயன் பெற வேண்டிய இருங்கோவேள் மீதிருந்த ஆத்திரத்தின் சூடு தணிந்து அவன் மீது அனுதாப உணர்ச்சி தலை நீட்டியது. 'என்ன இருந்தாலும் அக்காளின் கணவன்!. அக்காளுக் குத்தான் நல்வாழ்வு கிடைக்கவில்லை; அவளது இலட்சிய மனிதன் இருங்கோவேளுக்காவது கோர முடிவு ஏற்படாமல் இருக்கட்டும்'' என்று அவன் கருதினான்.

இருங்கோவேளின் நோக்கம் ஈடேறக்கூடாது. அதற்குத் தன்னைத் தவிர வேறு தடையே கிடையாது என்பதை அவன் தீவிரமாகச் சிந்தித்து முடிவு செய்திருந்தாலும், அந்த முடிவுக்கு எந்தப் பாதகமும் வராமல் இருங்கோவேளைத் திருத்துவதிலும் தன் பணிக்கு முக்கியத்துவம் இருக்கிறது என்று அவன் நினைத்தான். அதைத் தன் அக்காளுக்காகச் செய்ய வேண்டிய கடமையெனவும் கொண்டான்.

அதற்கான முதல் முயற்சியாகத்தான் ஓலையொன்றில் இருங்கோ வேளை எச்சரிக்கும் தோரணையில் அறிவுரையினைத் தீட்டி அவனிருப் பிடத்தில் வைத்து அவன் கண்ணில் படுமாறு செய்தான் செழியன். எதிர்பாராத வெற்றியை அந்த ஓலை தேடித்தந்தது. அந்த ஓலையில் அடங்கியிருந்த வாசகம் இருங்கோவேளை மிரட்டியது. யாரோ தன்னைச் சுற்றி வட்டமிடுகிறார்கள் என்ற பயம் சூழ்ந்து கொண்டது.

அந்தப் பயத்தின் அடிப்படையில் முத்துநகையைப் பற்றிய எண்ணம் தலைதூக்கியது. இருங்கோவேளின் திட்டம் தலைகீழாக மாறியது. செழியனின் ஆசைப்படி இருங்கோவேள் மிக நல்லவனாக ஆகி விட்டான் என்று சொல்ல முடியாது. கரிகாலனைப் பழி வாங்க வேண்டு

மென்ற ஆத்திரம் அவனைவிட்டு அகலவில்லை. ஆனால் முத்து நகையை தனக்காகப் பலியிட அவன் விரும்பவில்லை.

அவன் மனத்தில் மூண்டெழுந்த காதலும்-அந்தக் காதல் விளைவித்த குழப்பமும் தன்னையே தியாகம் செய்து கொள்ளுமளவுக்கு நிலைமையை வளர்த்துவிட்டன.

இந்த முடிவைப் பொறுத்தவரையில் செழியனுக்குத் தோல்விதான். அவன் எதிர்பார்ப்பதெல்லாம் திருந்திய இருங்கோவேளின் அமைதியான நல்வாழ்க்கையைத்தான்! அந்த அமைதியான வாழ்வை, அடிமை வாழ்வென எண்ணினான் இருங்கோவேள், அப்படி வாழ்வதைவிடச் சாவது மேல் என்று முடிவு செய்தான்.

அவன் செய்த முடிவினை உணராத செழியன், இருங்கோவேளின் இருப்பிடத்திற்கு அண்மையில் உள்ள மண்டபத்தருகே உலாவிக் கொண்டிருந்தான். ஓலையை இந்நேரம் இருங்கோவேள் பார்த்திருக்கக் கூடும் - மனமாற்றம் அடைந்திருக்கக்கூடும்-அல்லது தன்னை யாரோ கவனித்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற பயத்தில் அரண்மனையை விட்டு வெளியேறி விடக்கூடும்-என்று பலவிதமாகச் சிந்தனையை அலையவிட்டுக் கொண்டிருந்தான்.

அவன் அவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருந்த அந்த நேரத்தில்தான் உள்ளே இருங்கோவேள் முத்துநகையின் கையால் சாவதற்குத் தயாராகி, யவனக் கிழவர் வேடமணிந்து கொண்டிருந்தான். குறிப்பிட்ட வேளை வந்து விட்டதாக உணர்ந்த செழியன், வளவன் வேடத்திலுள்ள இருங்கோவேளைச் சந்திப்பதற்காக அவனிருப்பிடத்திற்குள் நுழைந்தான்.

நுழைந்தவன் கண்களில் வியப்பின் அறிகுறி தோன்றியது. திடுக்கிட்டான். அங்குமிங்கும் சென்று பார்த்தான்.

அங்கே இருங்கோவேளைக் காணவில்லை

செழியனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தான் எழுதிய ஓலையிருக்கிறதா என்று தேடிப் பார்த்தான். கிடைக்கவில்லை . அங்கு வீசிக் கொண்டிருந்த மென்காற்றில் பலகணியோரமாகப் படபடவென்ற மெல்லிய ஓசை கேட்டது. சென்று கவனித்தான். இருட்டில் சரியாகத் தெரியவில்லை. விளக்கை எடுத்துக் கொண்டு பலகணிப் பக்கம் வந்தான். அவன் எழுதிய ஓலை அளவுக்கே மற்றோர் ஓலை! அதை அவசரமாக எடுத்துப் படித்துப் பார்த்தான்.

அதில், ‘‘இருங்கோவேளை மிரட்டாதீர்கள்! அவன் வீரனாகத்தான் சாவான்!’’ என்ற வரிகள் எழுதப்பட்டிருந்தன!

செழியன் அந்த வரிகளைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்து விட்டு, அந்த ஓலையை இடுப்பில் செருகிக் கொண்டு அங்குள்ள இருக்கையொன்றில் பலத்த யோசனையுடன் உட்கார்ந்தான். இருங்கோ வேள் தன்னை வரச் சொல்லிவிட்டு எங்கே போயிருக்க முடியும் என்ற ஆராய்ச்சிக்கு அவனால் முடிவு காண இயலவில்லை .

இருங்கோவேள் போயிருக்குமிடம் அவனுக்கு எப்படித் தெரியும்! அவன் தன் அழகான காதலியின் தங்கக் கரங்களிலே மின்னிக் கொண்டி ருக்கும் கட்டாரியை முத்தமிட்டுக் கண்களை மூடுவதற்காக அவசர அவசரமாகப் போய்க் கொண்டிருந்தான். முத்துநகையிடம் சதித்திட்டம் பற்றிக் கூறிய் வார்த்தைகள் எல்லாம் இருங்கோவேள் மனத்தில் ஒன்றன்பின் ஒன்றாக அணிவகுத்தன.

''இன்றிரவு நடுயாமத்தில் இருங்கோவேள், யவனக் கிழவர் வேடத்திலே அரசனைக் கொல்வதற்குத் திட்டமிட்டிருக்கிறான். அந்தச் சதித்திட்டத்திற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் உள்ளே யிருந்து தாமரை செய்து முடிக்கப் போகிறாள். மாளிகைக்கு அருகில் அரசனின் ஆலோசனை மண்டபத்திற்கு ஒட்டினாற்போலுள்ள சோலை வழியேதான் யவனக் கிழவர் உருவில் இருங்கோவேள் வரப்போகிறான். அவனை வரவேற்பதற்கு வேளிர்குல வீரன் தயாராக இருப்பான்.''

இந்தத் திடுக்கிடும் தகவலைச் சொல்லித்தான் முத்துநகையை அதிர்ச்சி அடைய வைத்துப் பிறகு தனது சதித்திட்டத்திற்கு அவளை இணங்க வைத்தான்.அந்தக் கட்டளையை நிறைவேற்ற - கடமையினைச் செய்ய - கரிகாலனையும் அவன் நாட்டையும் காப்பாற்ற இருங்கோவேள் தந்த கட்டாரியுடன் சோலையிலே ஒளிந்திருந்தாள் முத்துநகை.

அவள் ஒளி மிகுந்த விழிகள் சோலையைச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தன. அவள் எதிர்பார்த்த வேளிர்குல வீரனையும் காணோம்; யவனக் கிழவனையும் காணோம். அவள் உள்ளத்தில் ஒரே பரபரப்பு. அவள் காதுகளால் உணர முடிந்தது, நேரம் ஆக ஆக நெஞ்சு வெடிப்பது போன்ற சங்கடம். மேனியெங்கும் ஒரே நடுக்கம். வியர்வை கொட்ட ஆரம்பித்தது. தன் வாழ்நாளில் சோழ மண்டலமே பெருமை கொள்ளக் கூடிய மாபெரும் காரியமொன்றினைச் செய்திடப் போகிறோம் என்ற துடிதுடிப்பு அவளை ஆட்டிப் படைத்தது.

அவளைவிட அதிகமான துடிப்புடன் இருங்கோவேள் சோலைப் பக்கம் வந்து கொண்டிருந்தான் - யவனக் கிழவர் வேடத்தில்! அவன்

வேகமெல்லாம் தனக்கு முன்பு கரிகாலர் அங்கு போய் முத்துநகையினுடைய கையால் முடிவெய்திடக் கூடாது என்பதுதான்! அந்த வேகத்தில் அவன் ஓட்டமும் நடையுமாகச் சென்று கொண்டிருந்தான்.

சோலையில் முத்துநகை தன் கடமைக்குத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டாள். சுழன்று கொண்டிருந்த விழிகள் ஓரிடத்தில் நின்றன; அதோ வந்து விட்டான் யவனக் கிழவன்!

அவள் இதயம் கூச்சலிட்டது.

கட்டாரியைப் பலமாகப் பிடித்துக் கொண்டு புதர் ஓரமாக நகர்ந்து சென்றாள்!

அங்கே வந்து விட்டான்!

பாய்ந்து குத்தப் போகிறாள்!

ஒரே வீச்சு! யவனக்கிழவன்! ஆம். அந்த இருங்கோவேள் செத்து மடிவான் என்ற ஆவேசத்துடன் பாய்வதற்குத் தயாரானாள்.

என்ன அதிசயம்? எத்துணை விபரீதம்!

அதோ மற்றொரு யவனக் கிழவன்!

இரண்டு கிழவர்களில் உண்மையான இருங்கோவேள் யார்? அவள் திகைத்துத் திரும்பினாள். அவளுக்குப் பின்னால் மற்றொரு யவனக் கிழவன்! அவள், கண்களைக் கசக்கிக் கொண்டாள். தன்னைச் சுற்றி மூன்று யவனக் கிழவர்கள் நிற்பதைத் தெளிவாகக் கண்டாள்.

அந்த மூன்று யவனக் கிழவர்களும் அடுத்தடுத்து வந்ததும் முத்துநகையின் மூளையே குழம்பும் வண்ணம், அவளைத் திகைப்புக் கடலிலே திணற அடிப்பது போதாதா? அவளுக்கு முதுகுப் புறமாய் வந்த மூன்றாவது யவனக் கிழவரை ஒட்டி இன்னொரு பெரியவருமா திடீரென்று தோன்றவேண்டும்?

''அவர் யார்?... என் தந்தை மாதிரித் தெரிகிறாரே? இந்த நள்ளிரவில் அவர் எப்படி இங்கே வந்தார்... பழைய துரோகத்தை இன்னும் அவர் தலைமுழுகவில்லையா?...''

-என்றெல்லாம் சந்தேக வினாக்கள் தன் நெஞ்சிலே சதிராட்டம் ஆட, மை இருளைத் தன் மை விழிகளால் துழாவியவாறே அந்த நான்காவது மனிதரின் முகத்தை நன்கு அடையாளம் கண்டிட முனைந்தாள் முத்துநகை.

**அதே வேளையில் திடு திடுவென்று குதிரைகளின் குளம்பொலி இந்தப் பூமியை மட்டுமின்றித் தன்செவி மடல்களையும் அதிரவைப் பதை அவள் உணர்ந்தாள். அவளுடைய விழிக்கதவு ஒரு முறை மூடித்**

திறப்பதற்குள் அடலேறென ஐந்தாறு வீரர்கள் புரவிமீதேறி அவளுக்கு எதிரேயே வந்து விட்டனர்! அவர்களை அழைத்து வந்தவன் யார் என்பதை வீரன் ஒருவனின் கரத்திலிருந்த தீவட்டியின் சோளக்கதிர் போன்ற ஒளிப் பிழம்பு தெளிவாகக் காட்டியது.

அந்த ஆற்றல்மறவன் - அரிமா - வேறு யாரும் அல்லன்; பெருவழுதிப் பாண்டியனின் பெருநம்பிக்கைக்குப் பாத்திரமான செழியனே!

அவன் இப்போது தோற்றமளிப்பதும், தாமரைக்குத் துணையாகப் புகார் அரண்மனைக்குள் புகுந்தானே அந்த வேளிர் குல வீரனாகவா? அல்லவே அல்ல; முன்னொரு சமயம் புலவர் காரிக்கண்ணனார் இல்லத்தில், முத்துநகையிடம் சிகிச்சை பெற்றானே அதே உண்மையான வடிவத்தில்தான் இப்போது அவன் வந்திருந்தான்!

அவனுடைய பரந்த முகத்தைப் பார்த்ததுமே முத்துநகையின் நெஞ்சத்திலே புதியதொரு நம்பிக்கையும், தெம்பும் பொங்கிப் புரண்டன கங்குகரையில்லாமல். இனி ஆயிரம் ஆயிரம் 'இருங்கோவேள்' அணிதிரண்டு கரிகாலரைக் கவிழ்க்க வந்தாலும், அவர்களை ஒரே மூச்சில் தீர்த்துக் கட்டிவிடக்கூடிய அளப்பரிய வலிமை தனக்கு வந்துவிட்டதைப்போல் விளக்கவொண்ணாத உணர்ச்சிப் பிழம்பாகவே மாறலானாள் அந்த வீராங்கனை!

ஆயினும், தன்னைச் சுற்றி நிற்கும் மூன்று யவனக் கிழவர்களுள் யார் உண்மையான இருங்கோவேள் என்பதை முதலில் அவள் கண்டுபிடித்திட வேண்டுமே!

''அரசே!'' என்று குரல் கொடுத்தான் செழியன்.

உடனே, இரண்டாவதாக வந்த யவனக்கிழவர், ''கவலைப்படாதே செழியா!'' -என்றவாறே தமது உரம் வாய்ந்த கரத்தினைத் தலைக்கு மேலே உயர்த்திக் காட்டினார். அவர்தம் விரலில் குடியேறியிருந்த வைரக் கணையாழி செம்பருத்திப் பூவின் செந்நிறத்தை உமிழ்ந்து, 'பளிச், பளிச்' சென்று மின்னிற்று.

அவனது மிடுக்கான குரலைக் கொண்டே அவன் கரிகாலன் என்று உணர முடிந்த முத்துநகை, ''மன்னவா! தாங்களா?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டாள்.

''ஆமாம் முத்துநகை, நானேதான்!'' என்று முறுவலித்த கரிகாலன், புலவர் காரிக்கண்ணனார் நின்றிருந்த திக்கினை நோக்கினான்.

'தாங்கள் ஏன், எப்படி, இங்கே வந்து சேர்ந்தீர்கள்? என்று வினவாமல் வினவின அவர் விழிகள்.

சோழப் பெருவேந்தனான திருமாவளவனே இங்ஙனம் உருமாறி வரக்கூடும் என்று கற்பனைகூடச் செய்தறியாத காரிக்கண்ணனார் தாம் அடைந்த அதிர்ச்சியினின்றும் மீள்வதற்குள் பெரும்பாடு பட்டுவிட்டார். ஆயினும் அவர் சற்று முன்னால் வந்து, ''மன்னர் மன்னவா! இங்கே ஒரு கொடிய நிகழ்ச்சி நடைபெறுவதற்குத் திட்டமிடப்பட்டிருப்பதைச் சில விநாடிகளுக்கு முன்னர்தான் தெரிந்து கொண்டேன். அதனை எவ்வாறேனும் தடுத்திட வேண்டும் என்னும் ஆர்வத்துடனேயே ஓடோடி வந்தேன். நான் சொல்வதை நம்புங்கள். மன்னா, என்னுடன் வந்திருக்கிறாரே இந்த யவனக்கிழவர், இவரைப் பற்றிப் பின்னால் விளக்குகிறேன். அதோ நிற்கிறானே, அவன் தான் இருங்கோவேள்...

காரிக்கண்ணனார் தம் வார்த்தைகளை முடிக்கும் முன்னரே முதலாவது யவனக்கிழவராக வந்த இருங்கோவேள் 'ஓ... ஓ' என்று உரத்த குரலில் சிரிக்கத் தொடங்கி விட்டான். அந்தச் சோலைப்பகுதியே அதிர்ந்துபோகும் வண்ணம் எதிரொலியினை எழுப்பிற்று அவனுடைய பெருத்த சிரிப்பு. அவனுக்குப் பைத்தியந்தான் பிடித்துவிட்டதோ என்று எண்ணும்படியாகவும் அது பிசிறு விழுந்து ஒலித்தது!

மூளையே சிதறுண்டு, அவனுக்குப் பைத்தியமே பிடித்திருந்தாலும் கூட, அதிலே வியப்புறவோ வேதனைப்படவோ என்னதான் இருக்கிறது? ஓர் உண்மையான வீரனுக்குரிய இலக்கணப்படி எதிரியை நேருக்கு நேர் சந்திக்கும் புலியாகவா அவன் பொருத முற்பட்டான்? விநாடிக்கு விநாடி வேடம் போட்டு மறைந்து வாழும் பச்சோந்தியாக அல்லவா தன் வேளிர்குலப் பண்பையே காற்றில் பறக்க விட்டான்? ஆயினும், தன்னுடைய திட்டங்கள் அனைத்துமே இத்துணை விரைவில் இடிந்து நொறுங்கும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. தான் பின்னிய சூதுவலை இரும்பாலானதாக அவன் எண்ணிக் கொண்டிருக்க, அது வெறும் நூலிழையால்கூட ஆனதல்ல என்று அம்பலப்படுத்தப்படும் என்று அவன் நினைக்கவே இல்லை - அவ்வாறு அதனை அறுத்தெறிந்த பெருமையும் செழியனையே சாரும்.

தன்னுடைய தமக்கை பெருந்தேவி இயற்கை எய்தியதும், மைத்துனனான இருங்கோவேளிடம் செழியனுக்கு ஒருவிதப் பரிவு ஏற்பட்டது என்னவோ உண்மைதான். எனினும், கரிகாலனின் உயிருக்கே உலை வைக்கும் அளவுக்கு இருங்கோவேளின் வஞ்சனைக் கரம் எல்லை கடந்து நீள்கிறது என்றதும், செழியனால் நெஞ்சம் பொறுக்க முடியவில்லை. இமைப் பொழுதைக் கூட வீணடிக்காமல் சோழ மன்னனைச் சந்தித்து எத்தகைய பேராபத்திலே அவர் சிக்கிடப் போகிறார் என்பதனை எடுத்துச் சொன்னான். இருட்டிலே அடையாளங்கண்டு கொள்வதற்காக, அவர் சிவப்புக்கல் கணையாழியை அணிந்து கொண்டு, தம் தலைக்கு

மேல் அதனை உயர்த்திக்காட்டிட வேண்டும் என்ற தந்திரத்தை வகுத்துக் கொடுத்தவனும் அவனே. இருங்கோவேளை அவன் நிழல் போலத் தொடர்ந்து கொண்டே சென்றது அவனுக்குப் பல வழிகளிலும் பயனளித்தது. இல்லையென்றால் தன் கையே தன் கண்ணைக் குத்தின மாதிரி முத்துநகையின் கட்டாரிக்கு அல்லவா இந்நேரம் கரிகாலன் இரையாகியிருப்பான்?

வேளிர் வீரனாகப் புகாருக்கு வந்து தன் அந்தரங்கங்களை ஓரளவுக்கு அறிந்து கொண்ட செழியனால்தான் சூழ்ச்சித் திறனுக்கு அழிவு ஏற்பட்டது என்பதனை அறியாத இருங்கோவேள், தான் இனிமேல் தப்புவதற்கு வழி எதுவும் இல்லை என்கிற நிலையிலேயே, விரக்தி என்னும் மலையுச்சிக்குச் சென்று விலாப்புடைக்கச் சிரித்தான். வேளிர்குல வேந்தனாக வாழ்ந்தவன், அறவழியிலேயே தன் வீரத்தையும் விவேகத்தையும் வெளிப்படுத்தித் தன் ஆட்சியை மீட்டுக் கொள்ளத் தவறிவிட்டான். அத்துடன் குள்ளநரி நடவடிக்கைகளி லெல்லாம் கூசாமல் ஈடுபட்டுத் தன் பெருமை அனைத்தும் துகிலுரியப் படும் நிலைமைக்கும் இலக்கானான். தன்னுடைய இழிந்த செயல்களே தன் மனச்சாட்சியை உறுத்த, அந்த உறுத்தலின் வெளிப்பாடாகவே அவன் விடாமல் சிரித்தான்!

அவன் சிரிக்கச் சிரிக்க, முத்துநகைக்கோ, சினத் தீ கொழுந்து விட்டெரிந்தது.

'இவனை உடனே சிறைபிடிப்பதை விட்டுவிட்டு ஏன் எல்லாரும் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள்?' என்று ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது அவளுக்கு.

சிரித்துக்கொண்டிருந்த இருங்கோவேளின் கரம் அவனுடைய மார்பை மூடியிருந்த அங்கியினுள் நுழைந்தது; பளபளக்கும் கட்டாரியொன்றினை, அது மெள்ள மெள்ள வெளியே எடுத்தவண்ணம் இருந்தது. தீவட்டியின் மங்கிய வெளிச்சத்தில் முத்துநகை அதனைக் கவனித்து விட்டாள்.

அவ்வளவுதான். தன் கையிலிருந்த கட்டாரியை ஓங்கி வீசினாள்.

''அய்யோ முத்துநகை!'' என்று அலறியவாறே தன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு கீழே சாய்ந்தான் இருங்கோவேள்.

கட்டாரி அவனது மார்பை ஆழமாக ஊடுருவி இதயப்பகுதியில் ஆழமாகப் பதிந்து கொண்டுவிட்டது.

திடீரென்று இப்படியொரு துணிச்சலான செயலில் முத்துநகை இறங்கிவிடுவாள் என்று எவருமே எதிர்பார்க்கவில்லை. எல்லாருமே

திடுக்கிட்டுப்போய் அவளையும் இருங்கோவேளையும் மாறி மாறி வெறித்து நோக்கினர்.

அடிபட்டு வீழ்ந்த வேங்கையைப் போல, ஆவி பிரியப் போகும் வேதனை தாளாமல், தன் கனத்த உடலை ஓரிடத்தில் கிடத்திக் கொள்ளவும் முடியாமல், தரையிலே தன் கால்களைப் போட்டு அடியடியென்று அடித்தவாறே துடியாய் துடித்துக் கொண்டிருந்தான் இருங்கோவேள்.

அவன் அவ்வாறு துடிப்பதைக் காணக் கரிகாலனின் இதயமும் துடிதுடித்தது. பகைவனுக்கும் அருள் புரியும் பண்பாளன் அல்லவா அவன்? அவன் உடலருகே விரைந்தான். அவனைத் தொடர்ந்து மற்றவர்களும் வந்தனர்.

இருங்கோவேளோ கட்டாரியோடு சேர்த்துச் செங்குருதி ஊற்றாகப் பொங்கி வழியும் தன் மார்பகத்தை ஒரு கையினால் அழுத்திப் பிடித்துக் கொண்டவாறே, இன்னொரு கையினால் தன் முகத்தருகே வந்துவிட்ட கரிகாலனின் கரிய தாள்கள் இரண்டையும் இறுகப் பற்ற முயன்றான்.

''மன்னர்...மன்னவா!...என்னை...மன்னித்து விடுங்கள்'' என்னும் வார்த்தைத் துளிகள் அவன் வாயினின்றும் திணறிச் சிதறின.

அந்தச் சொற்கள் தம் செவியில் விழுந்ததும் கரிகாலனின் உள்ளம் பாகாய்க் கரைந்து உருகிற்று. அவன் கீழே அமர்ந்து இருங்கோவேளின் தலையைத் தாங்கிப் பிடித்துத் தன் மடியில் போட்டுக் கொண்டான்.

''என்னுடைய எதிரி இருங்கோவேளாக உம்மை இப்போது நான் காணவில்லை; என்னுடைய உயிரைக் காப்பாற்றிய வளவனாகவே நான் காண்கிறேன்; ஆகவே 'மன்னிப்பு' என்கிற பேச்சுக்கு இங்கே இடமேது?'' என்று மொழியும்போதே, கரிகாலனின் குரல் தழுதழுத்து விட்டது. கண்ணீர் வெள்ளம் அவன் விழிகளுக்குத் திரையிட்டது. அருவியாகவும் வழிந்தது.

புலவர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய 'பட்டினப்பாலை' அரங்கேற்றமும், அந்த இனிய நிகழ்ச்சியைத் தொடர்ந்து தன் உயிரைப் பருகுவதற்காகப் பெருந்தேவியிடமிருந்து பாய்ந்து வந்த கட்டாரியும், அதனைத் துணிந்து தாங்கிக்கொண்டு தன்னை இறப்பிலிருந்து மீட்ட வளவனின் தீரச் செயலும் பழைய நினைவுச் சுருள்களாகி, காற்றடிபட்ட கருமுகில்களின் கடுவேகத்தோடு அவனுடைய கண்ணீர்த் திரையிலே மிதந்தோடிடவும் தவற வில்லை.

''நான்தான்...வள...வள....வன்...என்பதும் தங்களுக்குத் தெரிந்து விட்டதா, அரசே?'' என்று கேட்டுக் கரிகாலனின் நினைவுத் தேரை நிலையடிக்குக் கொணர்ந்திட்டான் இருங்கோவேள்.

''நீர்தான் வளவன் என்பதைச் செழியன் மூலம் நான் அறிந்து கொண்டேன். நீர் மட்டும் உமது நிலைமையைப் புரிந்து கொண்டு குறுக்கு வழிகளை நாடாது இருந்திருந்தால், உம்மை மீண்டும் குறுநில மன்னராகவே ஆக்கியிருப்பேன். சிறிது காலத்திற்கு முன்னே வடபுலத்தில் சீலம் நதிக்கரையை ஆண்ட 'போரசு' மன்னனைக் கிரேக்க மாவீரன் அலெக்சாந்தர் வெற்றிக்கொண்ட போதிலும், அவனை மன்னித்து அவனுக்குரிய மதிப்பினை அளிக்கவில்லையா? அப்படித்தான் நானும் உம்மை நடத்திட எண்ணியிருந்தேன். ஆனால் நீரோ...?''

...அதற்கெல்லாம் காலங் கடந்துவிட்டது மன்னவா! ஆத்திர...தில் என்...அறிவை இழந்து... விட்டேன்! நான் தங்களுக்கு மட்டும் துரோகி யில்லை.... என் மனைவி பெருந்தேவிக்கும் நான் பெரிய துரோகி! ஆனாலும் நான் நிம்மதியாகத்தான் சாகிறேன். யார் கையால் நான் சாக ஆசைப்பட்டேனோ அவள் கையாலேயே..''

''அப்படியானால் முத்துநகைதான்'' என்று கரிகாலன் இழுக்கும்போதே, ''ஆம்'' என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் இருங்கோவேள்.

உடனே காரிக்கண்ணனார்-

''ஆமாம் அரசே! இருங்கோவேள் கூறுவது முற்றிலும் உண்மை! தான் இறக்கத்தான் வேண்டும் என்ற முடிவுக்கு வந்து, ஆனால் தான் இறந்த பிறகு எனக்குத் தெரிந்தால் போதும் என்று கருதி, அவர் என்னிடம் மன்னிப்புக் கேட்கும் முறையில் எழுதி வைத்திருந்த ஓலை நறுக்கு தற்செயலாக எனக்கு முன்கூட்டியே கிடைத்துவிட்டது. அதிலே முத்துநகையைத் தான் விரும்பியதைப் பற்றியும், எனக்கும் இதோ இந்த யவனக் கிழவருக்குமுள்ள தொடர்பைத் தெரிந்துகொண்டு தாமும் யவனக்கிழவர் வேடமணிந்து எல்லாரையும் ஏமாற்றியதைப் பற்றியும், அதன் காரணமாக நான் சிறைப்பட நேர்ந்தது பற்றியும், அதற்காக என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு-தங்களை கொல்வதற்காகச் சூதுவலை பின்னி இந்தச் சோலைப் பக்கம் வரவழைத்தது பற்றியும், ஆனால் தன்னுடைய மனம் மாறி முத்துநகையின் கையினாலேயே தான் இறக்க விழைவதைப் பற்றியும் தெளிவாகவே குறிப்பிட்டிருக்கிறார் இருங்கோவேள். அந்த ஓலை நறுக்கைப் பார்த்து விட்டுப் பதறிப்போய்த்தான் இந்த யவனக் கிழவரையும் அழைத்துக் கொண்டு நான் இங்கே ஓடோடியும் வந்தேன்!'' - என்று படபடப்புடன் சொல்லி முடித்தார்.

**இறப்பின் தழுவலுக்கு இலக்காகப் போகும் இருங்கோவேள் ''எனக்கொரு கடைசி ஆசை; நிறைவேற்றுவீர்களா?'' என்றான்.**

''என்ன ஆசை? எதுவானாலும் சொல்லும்; உடனே நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றான் கரிகாலன்.

''முத்து... முத்துநகை மடியிலே நான் சாக வேண்டும்...

'திகீர்' என்று இருந்தது முத்துநகைக்கு; தான் ஒரு பெண் என்பதையும் மறந்து எகிறிக் குதித்தாள்; எரிமலையாகி விட்டாள்.

''அடப்பாவி! உனக்கா என் மடியைக் கொடுப்பேன்? உன்னைப் போன்ற ஒரு வஞ்சகனையா நான் காதலிப்பேன்? சாகப்போகிற வேளையிலே உனக்கு ஏன் இந்த கேடு கெட்ட ஆசை?''

இருங்கோவேளின் இதழ்களில் ஒரு வறண்ட புன்னகை இழை யோடிற்று.

''அடி பேதைப் பெண்ணே!... நான் தான் 'வீரபாண்டி,' என்னைத்தான் நீ காதலிக்கிறாய்?'' என்று நாக்குழறிற்று இருங்கோவேளுக்கு.

''என்ன! நீயா வீரபாண்டி! நீயா வீரபாண்டி! அய்யய்யோ!'' என்று ஆங்காரத்துடன் அலறினாள் முத்துநகை.

அடுத்த கணம் தலைசுற்றிய பம்பரம்போலத் 'தடால்' என்று மயங்கி விழுந்தாள்

''அய்யோ! முத்து'' என்று கதறியவாறே அவள் அருகே ஓடி அள்ளி அணைத்தார் காரிக்கண்ணனார்!

முத்துநகை மயக்கமுற்று விழுந்திடக் கண்டதும் பதறிப்போனான் கரிகாலன். தன் காதலனின் பிரிவினைத் தாங்கிட இயலாமல் சாதலினைத் தழுவிடுவாளோ என்ற கலக்கம் ஏற்பட்டது அவனுக்கு. உடனே எழுந்து சென்று அவளைக் கவனிக்க எண்ணினான். அதற்குள்-

இருங்கோவேளின் மூச்சு இயற்கையில் கலந்துவிட்டது; ஆம் அவனுடைய தலை சட்டென்று தொங்கிப்போயிற்று. அவனைத் தன் மடியினின்றும் அகற்றித் தரையிலே வைத்திட்ட கரிகாலன், முத்துநகை யின் தளிருடல் நோக்கி விரைந்தான். கண்ணீர் மழை பொழிந்து கலங்கிப் புலம்பும் காரிக்கண்ணனாரின் மார்பிலே வேரிழந்த கீரைத் தண்டாய்த் துவண்டு கிடந்த அவளுடைய முகத்தருகே தன் கரத்தினை நீட்டினான்.

''கலங்க வேண்டாம், புலவரே! முத்துநகை கண்டிப்பாகப் பிழைத்துக் கொள்வாள்; கவலைப்படாதீர்கள்!'' என்றவன் தமக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த வீரர்கள் மீது பார்வையை வீசினான்.

''ஏன் இப்படி வேடிக்கைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? யாராவது ஓடிப்போய் பக்கத்திலுள்ள பொய்கையிலிருந்து கொஞ்சம் நீர் கொண்டு வரக்கூடாதா?' என்று கடிந்தான்.

வில்லிலிருந்து கிளம்பிய அம்பெனப் பாய்ந்து சென்றான் வீரனொருவன்; ஒரு சிறு கொப்பரையில் கண்ணிமைப் பொழுதிற்குள் தண்ணீரைக் கொணர்ந்திட்டான். அதனைத் தானே தன் கையினால் அள்ளி முத்துநகையின் முகத்தில் அறைந்தான் கரிகாலன்.

பனித்துளிகளைச் சுமந்தவாறே மகிழம்பூவின் இதழ்கள் விரிந்த மாதிரி நீர்த்துளிகளை ஏந்தியவாறே அவளுடைய நீல விழிகளின் இமை இதழ்களும் திறந்தன. காரிக்கண்ணனாருக்கு மட்டுமல்ல; கரிகாலனுக்கே மீண்டும் இப்போதுதான் உயிரே வந்தது. இருவரும் பெருமூச்செறிந்தனர்.

தன் தந்தையின் மார்பகத்தில் தான் சாய்ந்து கிடப்பதையும், எதிரே தன் பூங்கரத்தினைத் தாங்கியவாறே சோழப் பேரரசன் அமர்ந்திருப் பதையும், செழியன் உட்பட மற்ற வீரர்கள் முற்றுகையிட்டாற்போல் சுற்றிலும் வளைத்து நிற்பதையும் கண்டு மிரள மிரள விழித்தாள் முத்துநகை.

மெள்ள மெள்ள மயக்கத்திலிருந்து மீட்சியுற்றுத் தன்னினைவு வரப்பெற்ற அவள், தன் பவள இதழ்களை விரித்து, ''மன்னவா!'' என்று விளித்தாள்.

அவருடைய பகைவன் என்று அறியாமலே இருங்கோவேளிடம் தன் இதயத்தையே அடகு வைத்த தன் பேதமையின் கரகரப்புத் தாளாமல் தன்மீதே தனக்கு ஏற்பட்ட அருவருப்பினாலோ என்னவோ, அவளுடைய விழிச்சுனைகளிலிருந்து நீர்த்தாரைகள் வழிந்து அவளது மாதுளங்கனிக் கன்னங்களை ஈரப்படுத்தின, மழைச்சரங்கள் போல.

அவளுடைய அழுகையின் உட்பொருளை உணர முடியாதவனா சோழப் பெருவேந்தன்?

''நீ எதற்கம்மா கலங்குகிறாய்? ஏதோ நடந்தது நடந்து விட்டது; இனி நடக்க வேண்டியவைகள் நல்லவைகளாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றித்தான் நாம் சிந்திக்க வேண்டும். சென்றதை நினைத்தே சிந்தைகலங்குவதால் என்ன ஆகப் போகிறது?'' என்று அவளது இதயச் சுமையை இறக்கிடும் வகையில் தேறுதல் மொழிந்தான், அவன்.

''என்ன இருந்தாலும் இப்படிப் படுகேவலமாக ஏமாறுவேன் - ஏமாற்றப்படுவேன் என்று நான் நினைக்க வில்லை; அரசே, நினைக்கவே இல்லை! '' என்று உள்ளங்கைகளைத் தொன்னையாகக் குழித்து, அவற்றில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு விசும்பி விசும்பி அழுதிட்டாள் முத்துநகை.

''நீயாவது பெண்; பேதமை என்பது பெண்ணோடு பிறந்தது என்று சொல்வார்கள். ஆனால் நானோ...? இந்தப் பரந்த சோழ மண்ணையே ஆள்கின்றவன். அகவையில் (வயதில்) மட்டுமின்றிப் பட்டறிவிலும்

பழுத்தவன் என்று பெயரெடுத்தவன். நானே இந்த இருங்கோவேளிடம் ஏமாந்து விட்டேன் என்றால் நீ எந்த மூலை? வளவனாக வந்து, என் உயிரையே காப்பாற்றியவராக எப்படியெல்லாம் என்னுடைய பரிவி னையும் பாசத்தினையும் அவர் பெற்றுவிட்டார்! என்ன இருப்பினும், இருங்கோவேளின் அறிவினை மெச்சிடத்தான் வேண்டும். ஆற்றலைப் போற்றிடத்தான் வேண்டும். இத்துணைத் தேர்ந்த நடிகராக அவர் திகழ்வார் என்று நான் எண்ணிடவே இல்லை. ஆனால் அந்தக் கூர்மை நாட்டின் நடப்புக்கும் மக்களின் நல்வாழ்வுக்குமே பயன்படுவதாக அமையக் கூடாதா? அரங்கத்தில் நடிப்பதோடு நில்லாமல் வாழ்க்கை யில் நடித்திடவும் அது தூண்டிட வேண்டுமா? அந்த நடிப்பாற்றலும் சூழ்ச்சிக்கும் சூதுக்கும்தான் துணை போக வேண்டுமா? உண்மையைத் திரித்திடவும், பொய்ம்மையைப் பரப்பிடவுந்தான் அது உரமாக வேண்டுமா? நல்ல உள்ளங்களை யெல்லாம் கொல்லெனச் சிரிக்க வைத்து, அவர்கள் சிரிக்கும் பொழுதே குடிக்கப் போகும் பாலில் கொடிய நஞ்சினைக் கலப்பது போல அடாத செயலுக்கெல்லாம் அது இடந்தர வேண்டுமா? என்ன வேண்டு மானாலும் பேசி, எப்படி வேண்டுமானா லும் நடந்து எந்த வகையிலாவது தனக்குப் பெயர் வந்தால் போதும் என்று, தன்னுடைய பிற்போக்குத்தனத்தை நோக்கி மக்களைத் திசைதிருப் பிக் கேவலமான செல்வாக்குப் பெறும் கீழ்த்தரமான நிலைக் குத்தான் ஒருவருடைய அறிவும் ஆற்றலும் இறங்கிட வேண்டுமா? அதுவும் இடையில் வந்து வளவனாக நம்மிடம் ஒட்டிக் கொண்ட இருங்கோவேள், இப்படிக் கூட இருந்தே குழிபறிக்க முனைந்திடுவார் என்று நான் கனவுகூடக் கண்டிடவில்லை. செழியன் மட்டும் தக்க சமயத்தில் வந்து என்னை எச்சரித்திடத் தவறியிருந்தால்...'' விண்ணிலே பூத்துக் கிடக்கும் மீன்களை அண்ணாந்து வேடிக்கை பார்த்தவனாக ஒரு வறண்ட சிரிப்பினை உதிர்த்தான் கரிகாலன்.

''அதற்கு மேல் சொல்ல வேண்டாம் அரசே, சொல்ல வேண்டாம். நினைத்தாலே நெஞ்சம் 'திகீர் என்கிறது! ஆனால் இத்துணை வஞ்சகமாக அவர் நடந்து கொண்டுங்கூட அந்த ஆளை இன்னும் தாங்கள் 'அவர்...அவர்' என்று மரியாதை குறையாமல் குறிப்பிடுவதுதான் எனக்கு வியப்பைக் கொடுக்கிறது...'' என்று குமுறலுடன் கூறினாள் முத்துநகை.

''அதுதானே அம்மா நம்முடைய தமிழ்ப் பண்பாடு! இருங்கோ வேளே, 'இந்தக் கரிகாலனுக்கு என்ன தெரியும்? இவனுக்கெல்லாம் ஆளத்தெரியுமா?' என்று எடுத்தெறிந்து ஏசியிருக்கலாம்; ஏகடியம் பேசியிருக்கலாம். ஆனால் உயிரையே குடிக்க வந்த எதிரியே ஆயினும் உரிய மரியாதை அளிப்பதுதான் இந்த மண்ணுக்கே சொந்தமான உயரிய

பண்பாடு அல்லவா? அந்த பண்பாட்டிலிருந்து நம்மவர்களே சிலர் நழுவலாம்-வழுவலாம்; அதற்காக நாம் வருந்துவதைத் தவிர வேறு வழி யில்லை. இப்பொழுதுங்கூட இருங்கோவேளின் சவ அடக்கத்தினை அரச மரியாதைகளுடன் நடத்திடத்தான் ஆணை பிறப்பிக்கப் போகி றேன். ஆனால் உன்னுடைய எதிர்காலத்தை எண்ணும் பொழுதுதான்'' கரிகாலனால் அதற்கு மேல் தொடர முடியாமல் தொண்டையை அடைத்தது; கண்களும் பனித்தன.

''என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் மன்னவா! தங்களைப் போன்ற அறிவும் ஆற்றலும் நிரம்பிய - அதே சமயம் பண்பாட்டிலும் தலைசிறந்த ஒரு பேரரசரின் அன்புக்குப் பாத்திரமானதே வாழ்க்கையில் நான் அடைந்த பெரும் பேறு! தங்களுடைய உயிருக்கும் ஆட்சிக்கும் ஊறு வராமல் பணிபுரிவதைவிட எனக்கு வேறு இலட்சியம் குறிக்கோள் - இன்பம் என்ன இருக்கிறது? என்றாலும், மூளையோடு முன்னேற வேண்டியவர்கள் மூட நம்பிக்கைகளுக்குப் பலியாவதைப் போலக் கடமையாற்றிடப் புறப்பட்டுச் சென்ற நான், உடல் உணர்ச்சி களுக்கு அடிமையாகலாமா? ஆணுடை அணிந்து தாமரையை ஏமாற்றி னேன். அதற்குத்தான் அவளுடைய அண்ணன் 'வீரபாண்டி' யாக வந்து என்னைப் பழிவாங்கி விட்டார்!''

முத்துநகை இவ்வாறு பகர்ந்ததும் ''அரசே! இருங்கோவேள் இறந்த செய்தியை உடனே நாம் தாமரைக்கு தெரிவிக்க வேண்டும் அல்லவா?'' என்று கேட்டான் செழியன்.

''ஆமாம், தெரிவிக்கத்தான் வேண்டும். ஆனால் இந்த நள்ளிரவில் உறங்கிக் கொண்டு இருப்பவளை எழுப்பி இந்தச் செய்தியைச் சொன்னால், அவள் அதிர்ச்சியடைந்து அந்த அதிர்ச்சியிலேயே...'' என்று தயங்கினான் கரிகாலன்.

''தாங்கள் நினைப்பதும் சரிதான் அரசே! அவளுடைய அண்ணி இறந்து சில நாட்கள் கூட ஆகவில்லை. அந்த ஆற்றொணாத்துயரமே அவளை வாட்டிக் கொண்டிருக்கும் பொழுது அண்ணனும் இறந்து விட்டான் என்றால் அவளால் எப்படித்தான் தாங்கிட இயலும் அந்த அதிர்ச்சியினை! தன்னுடைய குலமே இப்படிப் பூண்டோடு அழிந்து விட்டதே என்கிற ஏக்கமே அவளுடைய உயிரைக் குடித்து விடாதா? ஆகவே, படிப்படியாக மெள்ள மெள்ள இந்தச் செய்தி அவள் செவியில் விழுமாறு செய்வதுதான் நல்லது. அத்துடன் இந்த நள்ளிரவில் போர் அறத்திற்குப் புறம்பான முறையில் தன் அண்ணனைக் கொன்று விட்டார்களோ என்று தவறாகவும் தங்களைப்பற்றி அவள் எண்ணிடக்கூடும். மேலும், துயிலில் ஆழ்ந்திருக்கும் புகார் நகரத்து மக்கள், திடுக்கிட்டெழுந்து இங்கே திரண்டோடி வருவதால் என்ன

நன்மை ஏற்படப் போகிறது. எனவே, விடிவதற்குள் இருங்கோவேளின் இறப்புச் செய்தியைப் பரப்பி ‹ிடாமல் இருப்பதே நல்லதென்று படுகிறது'' என்றார் மூன்றாவது யவனக் கிழவர்.

அவரது கூற்றும் சரியென்றே பட்டது கரிகாலனுக்கு.

''ஆமாம், செழியா! பொழுது புலர்ந்ததும் நானே தாமரையிடம் சென்று நயமான முறையில் அவள் இடிந்து போகா வண்ணம் செய்தியை எடுத்துச் சொல்லித் தேற்றி இங்கே அழைத்து வருகிறேன். நீ இப்பொழுதே அரண்மனைக்குச் சென்று மெய்க்காவலரைக் கலந்து கொண்டு, இருங்கோவேளின் இறுதிக் கடனுக்கான ஏற்பாடுகளைக் கவனி. முத்துநகையையும் உடன் அழைத்துச் செல். சோர்ந்து போயிருக்கின்ற அவள் சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளட்டும். பனியும் கடுமையாகப் பெய்கிறது. நானும் காரிக்கண்ணனாருடன் சற்றுத் தனியே உரையாட வேண்டியிருக்கிறது'' என்றான் கரிகாலன்.

செழியன் தான் ஏறிவந்த குதிரையுடன் அரண்மனை நோக்கி நடந்தான். முத்துநகையும் துயரத்தின் மொத்த வடிவமாகத் துவளும் கால்களுடன் தளர் நடைபோட்டாள்.

கரிகாலன் வீரன் ஒருவனை அழைத்து, ''அந்த மண்டபத்தின் பக்கம் யாராவது இருக்கிறார்களா என்று பார்த்து விட்டு ஒரு சிறு தீவட்டியையும் நட்டு வைத்து விட்டு வா'', என்று கட்டளையிட்டான்.

அவன் போய் மண்டபத்தைச் சுற்றிலும், உள்ளேயும் தன் கூரிய கண்களால் புலனாய்வு புரிந்துவிட்டு ''யாருமே இல்லை'' என்று கூறினான்.

பின்னர் கரிகாலன் அந்த மண்டபத்தை நோக்கி அடிகளை எடுத்து வைத்தான். காரிக்கண்ணனாரும், மூன்றாவது யவனக்கிழவரும் அவனைப் பின்தொடர்ந்து சென்றனர்.

புகார் நகரத்தில் எங்கோ ஒரு தெருக்கோடியில் படுத்துக்கொண்டு இருங்கோவேளின் சாவுக்கு இரங்கல் தெரிவிப்பதைப் போல நாய் ஒன்று ஊளையிட்டு அழுதது.

பொழுது விடிவதற்கு நெடுநேரம் இருப்பது புரியாமலே அவசரக்காரச் சேவல் ஒன்று நீட்டி முழக்கிக் கூவியது.

மண்டபத்தை அடுத்த மரங்களின் இலைகள், காற்றின் வலிமையான தழுவலைத் தாங்க முடியாமல் சரசரவென்று முனகித்திணறின.

மற்றபடி, எந்தவகையான ஓசைகளின் ஆர்ப்பரிப்பும், இல்லாமல் எங்குமே ஒரே அமைதி! அமைதி!

மண்டபத்தில் அமர்ந்து, கீழே வாசலில் எரிந்து கொண்டிருந்த தீவட்டியின் ஒளிக்கற்றையின் மீதே சிறிது நேரம் தன் விழிகளைப் பதித்திருந்த கரிகாலன் தொண்டையைக் கனைத்து அமைதியைக் கலைத்தான்.

''என்ன புலவர் அவர்களே? தங்களை எதற்காக இங்கே தனியே பேசுவதற்கென்று அழைத்து வந்திருக்கிறேன் தெரியுமா?'' என்று வினவினான்.

''ஓ! நன்றாகத் தெரியுமே! இந்த யவனக் கிழவரைப் பற்றிப் பின்னால் விளக்குவதாகச் சொன்னேன்; இவரைப் பற்றி அறிந்து கொள்ளத்தான் இங்கே அழைத்து வந்திருக்கிறீர்கள்.''

''ஆமாம் இவராவது கிரேக்க நாட்டையோ, ரோமாபுரியையோ சார்ந்த உண்மையான யவனக்கிழவரா? அல்லது தமிழ்நாட்டவர் தானா?'' வேடிக்கையாகக் கேட்டான் கரிகாலன்.

''இவரும் தமிழ்நாட்டவர்தான்!'' என்றார் காரிக்கண்ணனார்.

''பரவாயில்லையே! நம் நாட்டில் இப்போது நடந்து காட்டுகின்றவர் களைவிட நடித்துக் காட்டுகிறவர்களுக்குத் தான் பஞ்சமே இல்லை என்று தெரிகிறது. ஆமாம். இவரும் இருங்கோவேளைப் போலவே ஆட்சி யைப் பிடிக்கத்தான் இப்படி வேடம் போடுகிறாரா?''

''இல்லை அரசே! ஓர் அணங்கின் கையைப் பிடிக்கத்தான் இந்த யவனக்கிழவர் வேடம்!''

''பலே பலே! அப்படி யார் இந்தக் கிழவரிடம் மயங்கிய கிள்ளை? ஒரு வேளை அவளுக்கும் இவரைப் போல் அறுபது வயதிற்குக் குறையாமல் இருக்குமோ?'' என்று கேட்டுவிட்டு இடியென நகைக்க லானான் கரிகாலன்.

''உண்மையில் இவர் கிழவர் இல்லை மன்னவா! இளைஞர்தான்!''

''ஆம்! அரசே! இனிமேல் தங்களிடம் எதற்குத்தான் மறைக்க வேண்டும்?'' என்றவாறே அந்த மூன்றாவது யவனக் கிழவர், மேலே உடுத்தியிருக்கிற பெரிய அங்கியையும் தலையை மூடியிருந்த போலி முடியையும் களைந்தார்.

பார்த்தால் அசல் இளைஞர். களையொழுகும் முகம். எந்த நாட்டுக் கேனும் இளவரசராகத்தான் இருக்க வேண்டும் என்று திடமாகப்பட்டது கரிகாலனுக்கு! சற்றுத் திகைப்புற்றவனாக அந்தப் புதிய ஆணழகனையே வைத்த விழியினை எடுக்காமல், மேலும் கீழுமாக ஆளையே அளந்து விடுவது போல் நோக்கினான் அவன்.

''நான் சிறையிலிருந்தவாறே ஓலைச்சுவடியில் செழியன் மூலமாக எழுதி அனுப்பிய அந்தப் பாடல் தங்கள் நினைவில் இருக்கிறதா அரசே?'' என்று கரிகாலனின் சிந்தனையைக் கலைத்தார் காரிக்கண்ணனார்.

''ஓ நன்றாக நினைவில் வைத்திருக்கிறேனே! 'ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த...' என்று தொடங்கும் அந்த இலக்கிய மலரின் இனிய மணத்தினை என்னால் எங்ஙனம் மறக்க இயலும்? பலாச் சுளையினும் மேலாக இனித்த அந்தப் பாடல் வரிகள் பசுமரத்தாணிபோல் என் நெஞ்சிலே நன்றாகப் பதிந்துதான் இருக்கின்றன. அவற்றைப் படித்ததாலும், கடியலூர் உருத்திரங்கண்ணனார் எடுத்துச் சொன்னதனா லுந்தானே தங்களைப் பற்றிய ஐயப்பாடு என்னைவிட்டு அகன்றது!

அதன் பின்னர்தானே, தங்களுக்கு நான் இழைத்துவிட்ட பிழையினை உணர்ந்து வருந்திச் சிறையினின்று தங்களை விடுதலை செய்யுமாறு உடனே ஆணை பிறப்பித்தேன்!''

''அந்தப் பாடலில் வேந்தர் குலத்தில் பிறந்த காளையொருவனைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன் அல்லவா?''

''ஆமாம்...

''அந்தக் காளை யாராக இருக்கும் என்று தாங்கள் எப்பொழுதாவது தங்கள் கற்பனையைப் படர விட்டதுண்டா?''

''அவற்றுக்கெல்லாம் எனக்கு நேரம் ஏது புலவரே? ஆனால் ஒரு வேளை செழியனாக இருக்கக் கூடுமோ என்று முதலில் நான் எண்ணியதுண்டு. அடுத்த கணமே 'அவன் சாதாரண மறவன்தானே! மன்னர் குலத்தில் பிறந்தவனாகத் தெரியவில்லையே! ஆகவே அவனாக இருக்க மாட்டான்'- என்ற எண்ணமும் எனக்கு உண்டாயிற்று.''

''நான் குறிப்பிட்டிருந்த அந்தக் காளை இந்த இளைஞர்தான்!''

''அப்படியா? வியப்பாக இருக்கிறதே! ஆமாம். இவர் எந்த நாட்டின் இளவரசர்?''

''இவருடைய முகச்சாயலைக் கொண்டே இவர் எந்த நாடாக இருக்குமென்று கண்டுபிடிக்க முடியவில்லையா?''

''முகச்சாயலைப் பார்த்தால் சேர மன்னரின் மகனாகவும் இவர் தெரியவில்லை... பெருவழுதிப் பாண்டியரின் பிள்ளையாகவும் இவர் தோன்றவில்லை...''

''அப்படியானால் தாங்கள் தோற்றுவிட்டீர்கள்?'' என்று சிரிக்கலானார் காரிக்கண்ணனார்.

''தாங்கள் என்ன சொல்கிறீர்கள்!''

''இவர் வேறு யாருமல்ல; நம்முடைய பெருவழுதி பாண்டியரின் பிள்ளையே தான் இவர்!''

''அப்படியா?.... ஆனால் முகச்சாயல் பெருவழுதிப் பாண்டியரை அவ்வளவு ஒத்திருப்பதாகச் சொல்ல முடியவில்லையே!''

''தந்தையின் சாயல்தான் தனயனுக்கு அமைய வேண்டும் என்பது என்ன நியதி? தாயின் சாயலையும் ஒத்திருக்கலாம் அல்லவா?''

''இருக்கலாம். இருக்கலாம். ஆமாம்! இவர் ஏன் நம்முடைய நட்புறவு விழாவின்போது தம் தந்தையுடன் வரவில்லை?''

''பாண்டியர்களின் மரபுப்படிப் பிற்காலத்தில் அரசராக அரியணை ஏற உரிமை பெற்றவர்கள், கொற்கைப் பட்டினத்தில் இளவரசராகப் பட்டஞ் சூட்டப்பெற்று அங்கேயே தங்கி ஆட்சித்துறைப் பயிற்சி பெற் றாக வேண்டும். அந்த மரபின்படியே தற்பொழுது கொற்கையில் தங்கி யுள்ளார் நம் இளவரசர். நாம் திடீரென்று விழாவுக்கு ஏற்பாடு செய்து விட்டபடியால் இவரால் குறித்த காலத்தில் வந்து சேர இயல வில்லையாம்!''

''ஓ! இப்பொழுதுதான் பெருவழுதிப் பாண்டியர் இவரைப் பற்றிச் சொன்னவையெல்லாம் நினைவிற்கு வருகின்றன'' என்ற கரிகாலன் இளைஞரை நோக்கி.

''உங்கள் பெயர் இளம்பெருவழுதிதானே?'' என்று கேட்டான் நேரடியாக.

''ஆம், அரசே!'' என்று பணிவுடன் பகர்ந்து முறுவலித்தான் இளம்பெருவழுதி.

''நீங்கள் ஓர் இயற்கைப் பாவாணராமே! சிறு பிள்ளையாக இருந்தபொழுது அருமையாகப் பாடல்கள் புனையத் தொடங்கி விட்டீர்களாமே?''

''ஆம் அரசே! இவரது பாக்கள் கற்பனைப் பூக்காடு மட்டுமல்ல; கருத்துப் புதையலும்கூட! இவருடைய உணர்ச்சிக் கடலான பாடல்களில் என் உள்ளத்தைப் பறிகொடுத்துத்தான் இவர்தம் நட்பினை நான் வலிந்து பெற்றேன்'' என்றார் காரிக்கண்ணனார்.

''அப்படியானால் தமிழ்ப் புலமைதான் உங்கள் இருவரையும் இணைத்து வைத்த உறுதியான பாலம் என்று சொல்லுங்கள்!''

''அதிலே ஐயப்பாடு என்ன மன்னவா? அந்த நட்பின் ஆழத்தை ஆதாரமாகக் கொண்டே என் எண்ணத்தை ஈடேற்றிக் கொள்ள நான் துணிந்து முற்பட்டேன். என்னால் இந்தப் புலவர் பெருந்தகை அடைய நேர்ந்த எல்லையற்ற தொல்லைகளெல்லாம் தங்களுக்கே தெரிந் தவைதான். ''நான் புரிந்த ஒரு சிறு தவற்றினால் - என் இடுப்பில் செருகியிருந்த 'இருங்கோவேள்' எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பதக்கம் இவர் வீட்டிலே தவறி விழுந்துவிட - அதனால் இவர் மகளே இவரை ஐயமுற்றுத் தங்களின் துரோகியாகவே கருதிச் செயல்படுகின்ற கொடிய நிலையும் உருவாயிற்று'' என்றான் இளம்பெருவழுதி.

''ஆமாம்; அந்த இருங்கோவேள் பதக்கம் உங்களுக்கு எப்படித்தான் கிட்டியது?''

''அதுவா.. அதனைத் தாமரைதான் என்னிடம் தந்தாள்!''

''என்ன! தாமரை உங்களிடம் தந்தாளா? அவளை எங்கே சந்தித்தீர்கள்!''

சற்று உரத்த குரலிலேயே திகைப்புடன் கேட்டான் கரிகாலன்.

''அது பெரிய கதை மன்னவா, பெரிய கதை! தங்களுடைய நேரத்தைப் பாழடிக்கக் கூடாதே என்று நினைக்கிறேன். தாங்கள் மட்டும் சற்றுப் பொறுமையோடு செவிமடுப்பதானால் விடிவதற்குள்ளே சுருக் கமாகச் சொல்லிவிடுவேன். என்னுடைய கதை தங்களுக்கும் தெரிந்தி ருக்க வேண்டியதுதான். ஏனெனில் என்னுடைய எதிர்கால வாழ்வே, தங்களின் ஆதரவைக் கொண்டுதான் அமையப் போகிறது. சொல்லட் டுமா?'' என்று இறங்கிய குரலில் வேண்டினான் இளம்பெருவழுதி.

''சரி! சொல்லுங்கள் கேட்போம்'' என்று தம் செவி மடலைத் தீட்டிக் கொண்டான் கரிகாலன்.

இளம்பெருவழுதி மொழிந்த அந்த இனிய கதைப் பெட்டகம் என்ன தெரியுமா?

அன்று கொற்கைப் பட்டினத்திலே கோலாகலமான முத்துக் குளிப்பு விழா!

பொய்கை நீரிலே தலை நீட்டி எட்டிப் பார்த்திடும் தாமரை மொட்டுக்கள் மட்டுமல்ல. மனிதப் பிறவிகளின் இதயத் தாமரையும் எழுச்சிபெற்றுச் சிரித்திடும் வண்ணம் - உதய சூரியனின் ஒளிக்கதிர்கள் உலகைத் தழுவிட வரும் இளங்காலை-இனிமையான வேளை!

துறைமுகப் பகுதியில் வழக்கமான ஏற்றுமதி -இறக்குமதிகளின் இரைச்சலோ, பரபரப்போ எதுவும் இல்லை. மாறாக, மரக்கலங்கள் யாவும் மலர்ச்சரங்கள் சூடி, 'நாங்கள்தான் நாள்தோறும் இந்த நீலக்கடலின் நீளத்தை அளக்கிறோம்! இன்று ஒரு நாள் இந்த மனிதர்கள் அதன் ஆழத்தை அளக்கட்டுமே!' என்று ஏளனம் புரிவது போல் அசைவற்று நின்றிருந்தன.

அவற்றில் அடுக்கடுக்காகக் குடியேறியிருக்க வேண்டிய முத்துப் பரல்கள், முறுகிய சங்குகள், பவள மணிகள், பட்டுத்துணிகள், மயிலின் தோகைகள், ஏலம்-கிராம்புகள், தங்கம், தந்தம், அரிசி, சந்தனம் முதலான பொருள்களின் மூட்டைகள் எல்லாம் வறியவர்கள் வாழும் சிறிய குடிசைகள் போல் அங்கங்கே தேங்கிக் கிடந்தன.

முத்துக் குளிப்பு விழாவினைத் தாங்களும் கண்டு களித்திட வேண்டு மென்னும் கரை கடந்த ஆசையினால், யவனரும் பிறரும் விழா நடக்கும் இடம் நோக்கி விரைந்தோடி விட்டதாலேயே அந்தப் பொருள்கள் அவ்வாறு தேக்கமுற்றுக் கிடந்திட நேர்ந்தது.

இளவரசன் இளம்பெருவழுதியும் விடியற்காலையிலேயே விழித் தெழுந்து விட்டான். பன்னீர்ப் பூ மணம் கமழும் வெந்நீரில் குளித்து விட்டுப் புத்தாடை பூண்டு புறப்படுவதற்கு ஆயத்தமானான் - கடற் கரையினை நோக்கி.

பாவையரின் பல்வரிசையோ, சுரைக்காய் விதைகளின் தோரணமோ எனச் சொல்லிடத்தக்க வகையிலே, முத்துச் சரங்களால் அலங்கரிக்கப் பட்ட தேர் ஒன்று, புரவிகள் பூட்டப்பெற்று, அரண்மனை வாயிலில் அவனுக்காகக் காத்திருந்தது. அந்த அழகிய தேரினில் ஏறி நின்று மிடுக்கான தோற்றப் பொலிவோடு அதனை அவன் ஓட்டிச் சென்ற காட்சி, காண்போரையெல்லாம் மகிழ்ச்சி வெள்ளத்திலே மிதக்கவிட்டது.

இளம்பெருவழுதியின் எழில் குலுங்கிடும் தேரினைக் கண்டதும் அவர்கள் வழிவிட்டு, ''இளவரசர் வாழ்க! வாழ்க!'' என்று வாழ்த்து மழையும் பொழிந்தனர்.

'பொதிகையிலே பிறந்து பொங்கிப் புரண்டால் என்ன? ஆழிக்கணவ னிடம் அடைக்கலம் ஆவதை விடச் சாலச் சிறந்த தனி இன்பம் ஏது?' என்று தவழ்ந்தோடி வந்து, தன் சுழி முகத்திலே, கொற்கை நகருக்கும் வளத்தைக் கொடுப்பதல்லவா பொருநையாறு!

அதன் பக்கமாக இளம்பெருவழுதி தன் தேரினைச் செலுத்தினான். அங்கே அவ்வளவாகக் கூட்டம் இல்லை. ஒரு திருப்பத்தில் வளைந்து நெடுஞ்சாலையை விட்டுப் புரவிகள் கீழே இறங்கிக் கடலினை நோக்கி நடந்த பொழுது தன் கண்களைத் தானே நம்பமுடியாமல் அவற்றை நன்றாக கசக்கி விட்டுக் கொண்டு பார்த்தான் இளம்பெருவழுதி.

தழைத்துப் படர்ந்து கிடந்த ஒரு தாழம்புதர் அருகே தனித்து நடந்து கொண்டிருந்தாள் ஒரு தாழம்பூ மேனியாள்! தழையத் தழைய வெண் துகில் உடுத்தியிருந்த அவளுடைய மென்மையான அடிகள் பஞ்சுப் பொதியாய்ப் பரந்து கிடந்த மணல்வெளியில் மிதந்தும், புதைந்தும், மிஞ்சியும், கெஞ்சியும் அன்ன நடைபயின்றன.

'தங்கச் சிலையோ? தங்கக் கடைசலோ?' என்னும்படியான அவளது உருவத் தளதளப்பு, ஒடுங்கிய இடை, ஒயிலான நடை - எல்லாம் கூடி இளம்பெருவழுதியின் உள்ளத்திலே கதகதப்பை ஊட்டின; காமக் கனலை மூட்டின!

ஆம், அவளுடைய பின்புற அழகிலேயே அவன் தன்னை மறந்தான்.

அவள் முழுமையாகத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. தலையினைச் சற்றே சாய்த்துத்தான் நடந்தாள். அந்தச் சாயலிலேயே அவளுடைய கதுப்புக் கன்னங்களின் மிதப்புத் தெரிந்தது. அவன் அதன் மாதுளங்கனி மெருகிலே தன் மதியினை இழந்தான். விழாவினைத் தாம்தான் தொடங்கி வைத்திட வேண்டும் என்னும் நினைப்பையும் இழந்தான். தேரைவிட்டுக் கீழே இறங்கி அவள் செல்லும் திசையையே பார்த்த வண்ணம் கல்லாகவே சமைந்துவிட்டான் அவன்!

பின்னால் சற்றுத் தள்ளியே குதிரைமீது மெள்ள வந்து கொண்டிருந்த மெய்க்காவலன், தேர் நின்றதைக் கண்டதும் திடுக்கிட்டான். கடையாணி தான் கழன்றுவிட்டதோ. அச்சுத்தான் முறிந்துவிட்டதோ என்னும் கவலையுண்டாகி விட்டது. ஆனால் அருகில் நெருங்கி வந்ததும் தொலைவில் அசைந்து செல்லும் தோகையொருத்தியினால் இளவரசனின் சிந்தனைதான் கழன்றிருக்கிறது என்பதனை முழுதும் புரிந்து கொண்டான்.

அதனைக் காட்டிக் கொள்ளாமல், ''ஏன் இளவரசே, இறங்கி விட்டீர்கள்? தேருக்கு ஏதாவது...?'' என்று திகைத்தாற்போல் கேட்டான்.

''என் தேருக்கு எதுவுமில்லை. ஆனால் அந்த அழகுத் தேர்!''

''ஓ! அதுதானே? விரைவிலேயே யார் என்று தெரிந்து வந்து சொல்லிவிடுகிறேன். ஆனால் நாம் இப்போது உடனே விழா நடக்கும் இடத்திற்குச் செல்ல வேண்டும். எல்லாரும் தங்கள் வருகைக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள்.''

...ம் சரி...'' என்று தயங்கியவாறே இளம்பெருவழுதி தேரிலே ஏறினான். புரவிகளை மிக விரைவாக முடுக்கி விட்டான்.

அவன் கண்கள் மட்டும் தாழம்புதருக்கு அப்பால் ஆற்றுப்படுகையில் இறங்கி மறைந்துவிட்ட அந்த அணங்கு சென்ற திக்கையே துழாவித் துழாவி அலைந்தன.

தனக்கு ஆட்சித்துறைப் பயிற்சியளிக்கும் ஆய்வுரையாளர் (ஆலோசகர்) நிலையிலுள்ள அறவாணர், கடற்கன்னிக்கு முறைப்படி வணக்கஞ் செலுத்திவிட்டு வலம்புரிச் சங்கினை எடுத்துத் தன்னிடம் வழங்கியதும் அதனை மூச்சைப் பிடித்துக் கொண்டு ஊதி முழக்கம் எழுப்பினான் இளம்பெருவழுதி.

உடனே, தமக்குரிய தற்காப்பு உடைகளோடும் கருவிகளோடும் அலைகள் முத்தமிடும் கரையோரத்தில் வரிசையாக நின்றிருந்த மீனவக்

காளைகள் தத்தம் கட்டுமரங்களைத் தள்ளியவாறே கடலினுள் பாய்ந்தனர்.

குழுமி நின்ற பொதுமக்கள் கையொலி எழுப்பி ஆர்ப்பரித்து, முத்துக்குளிக்கச் செல்வோருக்கு உற்சாகம் ஊட்டினர்.

சங்கினை ஊதி விழாவினைத் தொடங்கி வைத்திட்ட இளம்பெரு வழுதியோ மக்களின் களியாட்ட ஆரவாரங்களில் கருத்தினைச் செலுத் திடவில்லை. சிறிது நாழிகைக்கு முன், தான் கண்ட சேயிழையின் பேரழகு தந்த பெருமயக்கத்திலேயே தன் எண்ணங்கள் யாவும் பின்னிட நின்றிட்டான். தன் கரத்திலிருக்கும் வாழை மடலின் வழுவழுப்போடு கூடிய வலம்புரிச் சங்கினைக் காணக்காண அந்த அணங்கு நல்லாளின் அழகுக் கழுத்தே நினைவினில் வந்து அலைகளை எழுப்பியது. ஆனால் அந்தச் சங்கின் அகண்ட வாயை நோக்கிய அவன், 'அவளுடைய வாயும் இப்படித்தான் நீளமாக இருக்குமோ?' என்று எண்ணிய உடனே தனக்குள் தானே சிரிக்காமல் இருக்க அவனால் முடியவில்லை.

அருகில் நின்ற மெய்க்காவலனை நோக்கி, ''ஆமாம்! இன்னும் நீ புறப்படவில்லையா?'' என்று மெல்லக் கேட்டான். முதலில் ஒன்றும் விளங்கிடாமல் விழித்த அவன் பின்னர் புரிந்து கொண்டவனாக, ''ஓ! அதற்கா? ஆனால் தங்களை அரண்மனைவரை திரும்பக் கொண்டு போய்ச் சேர்க்காமல் கிளம்பினால் அறவாணர் என்னைச் சும்மா விடமாட்டாரே?'' அவன் தலையினைச் சொரிந்து நின்றான்.

''அவரிடம் நான் சொல்லிக் கொள்கிறேன்; நீ உடனே புறப்படு.''

''அப்படியானால் சரி...'' என்று குறும்பாக நகைத்தவாறே தன் குதிரையைத் தட்டிவிட்டான் மெய்க்காவலன்.

அந்த ஆரணங்கு தன் கண்ணில் படமாட்டாளா என்று ஒருமுறை விழிகளை எங்கணும் சுழல விட்டுவிட்டு இளம்பெருவழுதியும் தன் தேரினில் ஏறிக்கொண்டு அரண்மனைக்குத் திரும்ப முற்பட்டான்.

'இன்று அங்காடிகளில் வகை வகையான அணிமணிகளெல்லாம் ஏராளமாகக் குவிந்து ஒரே திருவிழாக் கோலமாக இருக்குமே! அவற்றையும் பார்த்துக் கொண்டே சென்றால் என்ன?' என்று ஆசையெழுந்து விட்டது அவனுக்கு. உடனே அந்தப்பக்கமாகத் தன் தேரினைத் திருப்பினான் அவன்.

ஓர் அங்காடியில், 'முத்துக் கடுக்கண்', 'முத்துக்கண்டி' 'முத்துச் சல்லி' முதலான அணிகள் பல தொங்கியது, விழிகளைப் பறித்தன.

அடுத்த அங்காடியில் கன்னியர்களின் கலீர்ச்சிரிப்பு, எதிரொலி எழுப்பிக் கொண்டிருந்தது. அந்த வணிகன் நகைச்சுவையாகப் பேசுவதில் நன்கு தேர்ந்தவன் போலு ம்! குழலில் அணியக்கூடிய 'முத்துக் கொண்டை' யைக் கையிலே வைத்துக் கொண்டு ஏதோ விலையினைக் கூறியவாறிருந்தான் வேடிக்கையாக.

அதற்கு எதிர்த்தாற்போலுள்ள இன்னொரு அங்காடியில் முதியவன் ஒருவன் மருந்தாகப் பயன்படக்கூடிய 'முத்துக் கற்கம்' 'முத்துச் சுண்ணம்' முதலானவற்றை விற்றுக் கொண்டிருந்தான். மணப்பந்தலில் தூவக்கூடிய 'முத்து மண'லும் அவனிடம் இருந்தது.

சிறிது தூரத்தில் கட்டுடல் அமைந்த காளையொருவன் சங்குப் பொருள்களாகப் பரப்பி வைத்தவாறு ஏதேதோ கதைகள் அளந்து கூட்டத்தைக் கூட்டிக் கொண்டிருந்தான். அவன் கூறினான்;

''இதோ, இது ஆயிரம் சிப்பி சூழ்ந்த இடம்புரிச்சங்கு! சாதாரணமானதுதான்! கழஞ்சுகள் நிறைய இல்லாதவர்கள் இதை வாங்கிக்கொள்ளலாம். ஆனால்... இதோ, இது ஆயிரம் இடம்புரிச் சூழ்ந்த வலம்புரிச் சங்கு! இதை வைத்திருப்பவர்களுக்கு செல்வங்களெல்லாம் தானாக வந்து குவியும்! வாங்கத் தவறி விடாதீர்கள்! வாய்ப்பினை இழந்து விடாதீர்கள்!''

அந்தக் காளையின் அங்காடிக்கு எதிர்த்தாற்போல் ஒரு நடுத்தர வயதினன் ''இதோ, இந்தச் 'சலஞ்சலச் சங்கு' வலம்புரியைவிட உயர்ந்தது; ஆயிரம் வலம்புரி சூழ்ந்ததுதான் சலஞ்சம்! இதோ! இது இதைவிட உயர்ந்தது. பாஞ்சசன்னியம்!'' என்றெல்லாம் உரக்கக் கூவினான்.

அவன் அத்துடன் நிறுத்தவில்லை. ''இதோ, இந்தச் சங்கு என்ன தெரியுமா? வடபுலத்தில் உள்ள சாஞ்சியிலே அசோக மன்னர் அழகான பெருந்தூபியை எழுப்பியிருக்கிறார் இல்லையா? அதிலுள்ள சங்குச் சிற்பங்களெல்லாம் இந்தச் சங்கைப் பார்த்துத்தான் செதுக்கப்பட்டன!'' - இதைக் கேட்டதும் இளம்பெருவழுதியால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

''அசோகன் காலம் எங்கே? இங்கே நிற்கும் இவனுடைய காலம் எங்கே? அந்தச் சங்காகவே இருந்தாலும் அதனைக் கருத்தோடு பாதுகாத்திருக்க மாட்டார்களா? இத்தனை ஆண்டுகள் கழித்து இவ்வளவு பளபளப்போடா இவன் கைக்கு அது எளிதில் கிட்டியிருக்க முடியும். ம் வணிகம் என்றாலே பொய்ம்மைகளின் புதையல்தான் போலும்'' என்று எண்ணியவாறே தன் தேரினை நகர்த்தினான்.

சிறிது தூரத்தில், கிழவியொருத்தி, 'முத்துக் கொம்பன்' என்னும் மீன்களையும் வேறு பல கயல்களையும் விரிவாகப் பரப்பி விலைகளைக் கூவினாள்.

பிறிதோர் அங்காடியில், ஓரங்களில் முத்துமணிகள் மினுமினுக்கும், மேலே போட்டுக் கொள்ளக்கூடிய முத்துத் தரயங்களும், முத்து வண்ணச் சேலைகளும் பளபளவென்று பார்வையை ஈர்த்தன.

சற்றுத் தொலைவில் நிழற்பந்தர் விரித்து நின்றது ஒரு பசுமையான வன்னிமரம். அதன் கிளையிலமர்ந்திருந்த குரங்கு ஒன்று தன் குட்டியை மடியிலே போட்டுக் கொண்டு முத்துக்கள் உள்ளே செலுத்தப்பட்ட கிளிஞ்சல்களை ஆட்டி வேடிக்கை காட்டியது. அந்த அழகிய கிலுகிலுப் பையைக் கொண்டு குழந்தையின் அழுகையை நிறுத்த முயன்ற குரங்கின் 'கூர்மையைக்' கண்டு வியந்து களிப்புற்றான் இளம்பெருவழுதி.

ஆனால்.... அடுத்த கணமே, களிப்புத் தவழ்ந்த அவனது பரந்த முகத்திலே கனல் தெறிக்கலாயிற்று. ஏனெனில், வன்னிமரத்திற்கு எதிர்த்தாற்போல் இருந்த அங்காடியின் முகப்பிலே தொங்கிய பெயர்ப் பலகையில் தமிழ் இல்லை; ஆம். தமிழ் எழுத்துக்கள் இல்லை!

அதனைக் கண்டதுமே அவனுடைய குருதி கொதித்தது! தன்மான உணர்வு கொழுந்து விட்டு எரிந்தது!

எனினும் தன் ஆத்திரத்தையெல்லாம் பொறுப்புணர்வோடு அடக்கியவனாக, எதிரே வந்து கொண்டிருந்த காவல் மறவனைக் கையசைத்து அழைத்தான். அவனிடம், ''உடனே அந்தப் பெயர்ப் பலகையை அகற்றிடவேண்டும் என்று அந்த அங்காடிக்காரனிடம் சொல்!'' என்று ஆணை பிறப்பித்து விட்டுத் தன் தேரினை மிகக் கடிதாக அரண்மனையை நோக்கிச் செலுத்தினான்.

காலையில் கடற்கரையோரமாகத் தான் கண்ட காரிகையைப் பற்றிய கற்பனைகளெல்லாம் இப்பொழுது இளம்பெருவழுதியிடம் அறவே இல்லை. அவனுக்கு உறங்கவும் தோன்றவில்லை; உட்காரவும் முடியவில்லை. இருப்புக் கொள்ளாமல் அவன் அங்குமிங்கும் உலவிய வண்ணமே இருந்தான்.

அவனுடைய நினைவுகள் அனைத்தும் 'மாகதி மொழி'யில் வரையப்பட்டிருந்த பெயர்ப் பலகையையும், அதனைத் துணிச்சலோடு மாட்டி வைத்திருந்த அங்காடிக்காரனையுமே சுற்றிச் சுற்றிச் சுழன்றன.

ஆய்வுரையாளராகிய அறவாணர் வயதிலே முதிர்ந்தவர். நண்பகல் உணவு அருந்தியதும், சில நொடிகளாவது உடலைக் கீழே கிடத்தி அறிது யிலில் ஆழ்ந்திருப்பது அவர் வழக்கம். அது இளம்பெருவழுதிக்கும் தெரியும்.

என்றாலும் தனக்கு ஏற்பட்டுவிட்ட நெஞ்சக் கொந்தளிப்பில், அவர் ஓய்வெடுக்கட்டுமே என்று விடுவதற்குக் கூட அவனுக்குப் பொறுமை இல்லை. காவலன் ஒருவனை அனுப்பி அவரை உடனே அழைத்து வருமாறு செய்து விட்டான்.

அவர் வந்து சேர்ந்ததும், அவருக்குரிய மரியாதையோடு வரவேற்று இருக்கையிலே அமரச் சொன்ன இளம்பெருவழுதி, ''என்ன அறவாணர் அவர்களே! நம்முடைய கொற்கை மண்டலத்திலே ஒரு விந்தையான ஊடுருவல் நடந்திருக்கிறதே, தெரியுமா?'' என்று கேட்டான்.

''ஊடுருவலா? என்ன ஊடுருவல்? எனக்குத் தெரியவே தெரியாதே,'' என்று பதற்றத்துடன் பகர்ந்தார் அறவாணர்.

''அது படை ஊடுருவலாக இருந்தாலும் பரவாயில்லை. நம் கட்புலனுக்கு அது தெளிவாகத் தெரியும். நாமும் படைகளைத் திரட்டி நேருக்கு நேர் பொருதலாம். புறமுதுகிட்டு ஓடச் செய்யலாம். அல்லது நாமே விழுப்புண்பட்டு வெஞ்சமர்க் களத்திலேயே வீழ்ந்து மடியலாம். ஆனால் இந்த ஊடுருவல் வேறு வகையானது.''

''அது என்ன ஊடுருவல், இளவரசே? சற்று விளக்கமாகத்தான் சொல்லுங்களேன்.''

''இது மொழி ஊடுருவல்!''

''அப்படியா? அது நிரம்ப நிரம்பப் பொல்லாததாயிற்றே! முளையிலேயே கிள்ளி எறியவேண்டியதாயிற்றே! கொஞ்சம் வளரவிட்டாலும் நாட்டின் எல்லாத் துறைகளிலுமே அது நஞ்சினைக் கலந்து விடுமே! நாளாவட்டத்தில் நம் செந்தமிழையே சிதறிடச் செய்திடுமே! நம் வருங்கால வழித்தோன்றல்களையும் வழிமாற வைத்திடுமே!''

அறவாணர் இவ்வாறு உணர்ச்சிப் பெருக்கோடு உரைத்திடவும், இளம்பெருவழுதி ஒரு வறட்டுச் சிரிப்பினை உதிர்த்தான்.

''அறவாணர் அவர்களே! இந்த தள்ளாத பருவத்திலும் தங்களுக்குள்ள தணியாத தாய்மொழிப் பற்றுக்கு நான் உளமாரத் தலை வணங்குகிறேன். ஆனால், தங்களிடம் பொங்கிப் பெருக்கெடுக்கும் இந்தத் தாய்மொழிப்பற்று தன்மான உணர்வு - இந்தமண்ணிலே பிறந்திட்ட எல்லாருக்குமே இருந்திடக் கூடாதா? அதனை எண்ணிடும் போதுதான் என்னால் கலங்காமல் இருக்க முடியவில்லை. அறவாணரே, கலங்காமல் இருக்க முடியவில்லை!''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள், இளவரசே? அயல் மொழிகளின் ஆதிக்கம் வருவதற்கு நடைபாவாடை விரித்துவிடும் நச்சுச் செயலும் இந்த நாட்டில் முளைவிட முடியும் என்று நீங்கள் நம்புகிறீர்களா!''

''நம்புவதென்ன? நான் நேரிலே என் கண்ணாறவே கண்டு விட்டேனே!''

''என்ன! கண்ணாறக் கண்டீர்களா?''

''ஆம்; அறவாணரே! இன்று காலை முத்துக்குளிப்பு விழா எத்துணைக் கோலாகலமாக நடந்தேறியது! அவற்றுக் கெல்லாம் சேர்த்து வைத்துக் கரியைப் பூசினமாதிரி தான் அந்தக் காட்சியை நான் கண்டேன். விழா முடிவுற்றதும் அங்காடிகளின் வழியாகத் தேரினில் வந்து கொண்டிருந்தேன்; அப்போது அங்கே ஒரு வன்னிமரம் நிற்கிறதல்லவா? அதன் எதிரேயுள்ள அங்காடியின் முகப்பிலே, நம் மக்களுக்கு தெரியாத - தெரியத் தேவையும் இல்லாத - 'மாகதி'- மொழியிலே தன் அங்காடி யின் பெயரை ஒருவன் வேண்டுமென்றே பலகையில் எழுதித் தொங்க விட்டுள்ளான். தமிழைப் புறக்கணிக்கும் போக்கிலே உள்ள அதனை எடுத்துவிடுதலே அறம் என்று நாம் சொன்னால், 'நம்மவர்கள்' சிலரே அதற்கு எதிர்ப்பினைக் காட்டுகின்றனராம்!''

''தாங்கள் சொல்வதைக் கேட்கும்பொழுது மிகுந்த வேதனையாக இருக்கிறதே! மிகவும் விழிப்போடு நாம் இருக்க வேண்டுமே! அயல் மொழிக் 'களை' களுக்கெல்லாம் ஆக்கம் தந்தால் பிறகு தமிழ்ப் 'பயிர்' தானாகவே மடிந்திட வேண்டியதுதான். பெற்றெடுத்த தாயினைப் பட்டினி போட்டுவிட்டு எதிர் வீட்டுக்காரிக்கு இனிப்புப் பொங்கலா? நன்றாக இருக்கிறதே நம்மவரின் போக்கு. ஆமாம்; அந்த மாகதி மொழியை இப்போது இங்கே திணித்திடவேண்டிய இன்றியமையாமை தான் என்ன? அந்த அங்காடிக்காரன் அயல் நாட்டவனா? அல்லது நம் நாட்டவன் தானா?''

''அவன் எந்த நாட்டவனாக இருந்தாலும் இருந்து தொலையட்டும். அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால், இந்த மண்ணிலே குடியேறிய பிறகு. இந்த மண்ணைக் கொண்டே பிழைக்க முற்பட்டு விட்ட பிறகு இந்த மண்ணுக்கு நன்றியுள்ளவனாக அவன் நடந்து கொள்ள வேண்டாமா? ஊழூழிக் காலமாக இந்த மண்ணுக்கே உரிமை யுள்ள மொழியைக் கெடுக்கலாமா? உணர்வைப் பொசுக்கலாமா? இனத்தைக் குலைக்கலாமா? நம்முடைய தமிழை அவனுடைய நாட்டிலே கொண்டு போய்ப் புகுத்திட முற்பட்டால் அவன் பொறுத்துக் கொள்வானா?: எனவே, இவ்வாறெல்லாம் நம் மொழியை -பண் பாட்டை - நெறியைக் குறுக்கு வழியிலே கொல்லப் பார்ப்பது அறம் பிறழ்ந்த செயலல்லவா என்று எடுத்துக் காட்டினால், நாம் குறுகிய நோக்கம் கொண்டவர்களாம்! சிறுபான்மையர் நலத்தைப் பேணிடத் தவறுகிறோமாம்!''

''சிறுபான்மையர் நலத்திற்காகப் பெரும்பான்மையர் தங்கள் மானத்தையே இழந்திட வேண்டுமா? வந்தாரையெல்லாம் வாழ வைத்திடும் செந்தமிழ் நாட்டானையா குறுகிய நோக்கம் கொண்டவன் என்று கூசாமல் கூறுகின்றான்? இத்துணை வாய் நீளம் காட்டிப்பவனை நாம் வாளா விடக்கூடாதே! அவன்மீதுதானே நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள்?''

''முதியவராகிய தங்களுக்கே இத்துணைக் கொதிப்பு என்கிறபோது என்னுடைய இளமை உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்! என்றாலும், என் உணர்ச்சிக் கொந்தளிப்பையெல்லாம் அடக்கிக் கொண்டேன். காவல் மறவன் ஒருவனை அனுப்பிப் பெயர்பலகையை எடுத்துவிடுமாறு அங்காடிக் காரனிடம் கூறச் சொன்னேன். அவனோ அதற்கு மறுத்து விட்டான். அது மட்டுமா? அவன் நம் இனிய தமிழை எவ்வளவோ இழிவாகவெல்லாம் பேசியிருக்கிறான். 'நீங்கள் பகுத்தறிவுப் பகலவனாகக் கொண்டாடும் கவுதம புத்தரே எங்கள் 'மாகதி' மொழியில்தான் தம் அறிவுரைகளைக் கூறியுள்ளார். அவ்வளவு உயர்ந்த மொழி உங்கள் நாட்டிலே பரவினால் என்ன குடி முழுகி விடும்?' என்று வாதிட்டிருக்கிறான்.''

''கவுதம புத்தரை நாம் கொண்டாடுவது அவர்தம் அரிய கருத்துக்களுக்காகவே அன்றி, அவர்தம் மொழிக்காகவா ? அதே கவுதமர் இலத்தீனிலோ, எகிப்தியத்திலோ, கிரேக்கத்திலோ தம் சிந்தனைகளை வெளிப்படுத்தியிருந்தால் கூட நாம் அவற்றைச் சிறப்பாகத்தான் போற்றியிருப்போம்! இன்னொரு பேருண்மை. அந்த அங்காடிக்காரனுக்குத் தெரியாதுபோல் இருக்கிறது. பௌத்த சமயம் தலையெடுப்பதற்கு முன்னர் சமணம்தானே தழைத்து வந்திருந்தது! அந்தச் சமணத்தைச் சார்ந்தவர்கள் பல்லாயிரக்கணக்கானோர் நம் நாட்டில் இருக்கிறார்களே! அவர்களில் யாரும் தங்களுடைய தீர்த்தங்கரர்கள் பேசிய 'அர்த்தமாகதி' மொழியினை பிற இனத்தவரிடமெல்லாம் திணித்திட வேண்டும் என்று துடித்திடவில் லையே? அந்தநாளில் கடற்கோளுக்கு இரையான கபாடபுரத்தினில் 'நிலந்தரு திருவிற் பாண்டியன்' அவையினிலே அரங்கேற்றம் பெற்ற ஒப்பில்லாத நூல் தொல்காப்பியம். அது வகுத்தளித்துள்ள வரையறையை - பழம் மரபை மீறிடாமல் தானே சமணப் புலவர்களும் பெரும்பாலோர் இன்றும் தங்கள் பனுவல்களை யாத்து வருகின்றனர். இவன் கொடிய சூதுக் காரனாக இருப்பான் என்றே தோன்றுகிறது. அவனுடைய மொழித்திணிப்பு முயற்சிக்கெல்லாம் இப்போதே முற்றுப்புள்ளி வைக்காவிட்டால் பிறகு நம்முடைய தாய்மொழியை நமது பிள்ளைகளுக்குப் புகட்டுவதையே 'மொழித் திணிப்பு' என்று கயிறு திரிப்பான்; கதை அளப்பான்; திசை திருப்புவான். மேற்போக்காகப் பார்த்தால் அயல் மொழிகளைப் பயில்

வதில் தவறில்லைதான். ஆனால் நாளடைவில் அவற்றின் ஆதிக்கம் நம்முடைய செந்தமிழையே சிதைத்திடும்; அழித்திடும்; எனவே மிக மிக எச்சரிக்கை தேவை.''

''தாங்கள் மொழிவது நூற்றுக்கு நூறு உண்மைதான். அறவாணர் அவர்களே! இப்பொழுதே அவன் கழஞ்சுகளையும், மதுப் பொருள் களையும் அன்பளிப்பாக அள்ளி வீசி நம்மவர் சிலரையே தன் கைக்குள் போட்டுக் கொண்டிருக்கிறான் என்று கேள்வி. அவனை உடனே சிறைப்படுத்திடலாம் என்றாலும் மிகவும் சிந்திக்க வேண்டியுள்ளது. முழுப் பூசணிக்காயையும் சோற்றில் மறைப்பது போல் - தமிழை இழிவுபடுத்தும் தன் உள்நோக்கத்தை ஒளித்துக் கொண்டு பொதுவாக அங்காடிக்காரர்களையே நாம் அவமதித்து விட்டதாக அவன் திசை திருப்புவானோ என்றும் எண்ண வேண்டியுள்ளது. ஆயினும் என்ன நேர்ந்தாலும் - என் உயிரே போவதானாலும் என் அன்னை மொழிக்கு ஊறு ஏற்பட நான் எந்தக் காலத்திலும் இடந்தரவே மாட்டேன்''- இளம்பெருவழுதி இவ்வாறு அறைகூவல் விடுத்திடும்பொழுதே மெய்க்காவலன் பரபரப்புடன் நுழைந்தான்.

''இளவரசே! ஒரு திடுக்கிடும் செய்தி!''என்றான்.

''திடுக்கிடும் செய்தியா? என்ன அப்படி?'' என்று மெய்க்காவலனை நோக்கிப் பரபரப்புடன் வினவினான் இளம்பெருவழுதி.

''அந்த அங்காடிக்காரன், வேற்றுமொழியிலே வேண்டுமென்றே பெயர்ப்பலகையை எழுதித் தொங்கவிட்டி ருந்தான் அல்லவா? அதனை எடுத்திடுமாறு நம் காவல் மறவன் வலியுறுத்தியதையும், அதற்கு அவன் முடியாது என்று வாதிட்டதையும் கேட்டுக் கொண்டிருந்த பொதுமக்களில் சிலரே இப்போது கிளர்ச்சியில் இறங்கி விட்டார்கள்''.

''கிளர்ச்சியா? எதற்கு?''

''அந்தப் பலகையை அவன் அகற்றியே தீர வேண்டும் என்றுதான்.''

''அதுதானே பார்த்தேன்! நம்முடைய மக்களுக்குத் தாய்மொழிப் பற்றும், தன்மான உணர்வும் பட்டுப் போய் விடாது!'' என்று நிம்மதியுற்ற அறவாணர், தாமே மெய்க்காவலனைப் பார்த்துக் கேட்டார்.

''மற்ற அங்காடிக்காரர்கள் எல்லாரும் எப்படி இருக்கிறார்கள்? தொழில் துறை என்கிற அளவில் ஒரே பிரிவினர் என்னும் உணர்வைப் பெரிதுபடுத்தி எதையும் ஆராய்ந்து பார்த்திடாமல், அவனுக்கேதான் துணை நிற்கிறார்களா?''

''இல்லை, அறவாணர் அவர்களே! அங்காடிக்காரர்களுள் பெரும்பாலோர் நம் பக்கத்தில்தான் இருக்கிறார்கள். முதலில் சிறிது

தெளிவில்லாமல் அவனுக்குப் பரிந்து பேசியவர்களும்கூட இப்போது திரும்பிவிட்டார்கள்; தங்கள் கருத்தினைத் திருத்திக் கொண்டு விட்டார்கள். இதிலே இன்னொரு வேடிக்கை என்ன தெரியுமா? ஊமையன் முன்னால் மூக்கினைச் சொரிந்து ஆத்திரத்தை மூட்டிடும் போக்கில், அந்த அங்காடிக்காரன் நடந்துகொண்டது தவறுதான் என்றும், தமிழைப் புறக்கணித்துத் தமிழர்களின் உணர்வுகளை அவமதிக்கும் அவனுடைய புன்மையான செயலினைத் தடுத்திடத்தான் வேணடும் என்றும் ரோமாபுரியைச் சார்ந்த யவனர்கள் மட்டுமல்ல. வடபுலத்தைச் சார்ந்த சிலரும் கூட ஒப்புக் கொள்கிறார்கள்''.

''இது இன்னும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாக இருக்கிறதே! பார்த்தீர்களா, இளவரசே! தொடக்கத்திலே தோல்விகளைச் சந்தித்திடினும், அறத்திற்கும் உண்மைக்கும் என்றைக்குமே அழிவில்லை என்பது தெரிகிறதல்லவா?'' என்று பெருமிதத்தோடு பகர்ந்து மகிழ்ந்தார் அறவாணர்.

''ஆமாம்; இப்போது கிளர்ச்சியின் நிலைமை என்ன? அதை முதலில் சொல்'' என்று மெய்க்காவலனை வினவினான் இளம்பெருவழுதி.

''அது தான் வருந்திடத்தக்க வகையில் திரும்பிவிட்டது இளவரசே! அந்த அங்காடிக்காரனிடம் கழஞ்சுக் கடனும் அன்பளிப்புகளும் பெற்றிருந்த சிலர், அமைதியான முறையில் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த பொதுமக்கள் மீது முரட்டுத் தனமாகப் பாய்ந்து மூன்று பேரைக் கொன்று விட்டார்கள்; முப்பது பேருக்கு மேல் கொடிய காயம்...''

''என்ன! மூன்று பேர் மடிந்து விட்டார்களா? நம்முடைய கரங்களைக் கொண்டே நம் கண்களைக் குத்தியிருக்கிறானே அந்த அங்காடிக்காரன்!''

''ஆம் இளவரசே! இந்தக் கலகத்திலே ஒரு காரிகைக்கும் வலுவான அடி-காயம். ஆனாலும் அதை அவள் பொருட்படுத்தவே இல்லை; வீராங்கனையாகச் சீறிப் பாய்ந்து அந்த வேற்று மொழிப் பலகையைப் பிடுங்கி வீசியெறிந்து விட்டாள் புழுதியிலே. அந்த அங்காடிக்காரனின் ஆட்கள் அவளை நையப்புடைக்க முற்பட்டனர். அவள் அந்தப் பலகையை எடுத்துத் தற்காத்துக் கொண்டே நகர்ந்தவள், அருகிலிருந்த கிணற்றிலே அதனைப் போட்டு விட்டு ஓடியே போய்விட்டாள் மாயமாக!''

''இதற்கு மேலும் நாம் பொறுமையைக் காட்டிட வேண்டிய தேவை இல்லையே இளவரசே! உடனே அந்த அங்காடிக்காரனையும் அவனைச் சார்ந்த ஆட்களையும் சிறைப்படுத்திட வேண்டியதுதான்; படை வீரர்களை அனுப்பி உடனே கொந்தளிப்பை அடக்குவதும் இன்றிய

மையாதது. எதற்கும் இப்போதே நான் அங்காடிகளின் பக்கம் சென்று நிலைமையை நேரில் அறிந்து வருகிறேன். பிறகு தாங்கள் மாண்டவர் களையும், காயமுற்றவர்களையும் பார்வையிடச் செல்லலாம்.''

-என்றவாறே அறவாணர் அங்கிருந்து புறப்பட்டு விட்டார். அவர் சென்றதும் மெய்க்காவலன் சொன்னான்;

''அந்த வீராங்கனை யார் தெரியுமா? இளவரசே! தாங்கள் காலையில் கண்டு மெய்மறந்தீர்களே. அவளே தான்!''

''அப்படியா?வியப்பாக இருக்கிறதே! அவள் யார்?''

''அவள் நமது கொற்கை நகரத்துக் கோதையில்லையாம். ஏதோ வெளிநாட்டிலிருந்து முத்துக் குளிப்பு விழாவினை வேடிக்கை கண்டிட வந்தவள்தானாம். அதற்கு மேல் அவளைப் பற்றி உசாவுவதற்கு நேரம் இல்லை; கிளர்ச்சி பற்றி, உடனே தங்களுக்கு தகவல் தெரிவிக்க வேண்டுமே என்று ஓடோடி வந்துவிட்டேன்.''

''அந்த அங்காடிக்காரனும் அவன் ஆட்களும் அவளை வாளாவிட மாட்டார்களே! வாள் கொண்டு அவளை வெட்டித் தீர்த்தாலும் தீர்த்து விடுவார்களே! அவளை எவ்வாறேனும் நாம் காப்பாற்றியாக வேண்டுமே! சரி; முதலில் நம் சிறுபடைத் தளபதியை வரச்சொல். அந்த அங்காடிக்காரனும் அவன் ஆட்களும் எங்கே ஒளிந்திருந்தாலும் சிறைப்படுத்திடத்தான் வேண்டும்'' என்று புலியென உறுமியெழுந்தான் இளம்பெருவழுதி.

அவனுடைய எண்ணங்கள் யாவும் தமிழின் மானத்தைக் காப்பாற்றி டத் தன்னையே காணிக்கை ஆக்கத் தயங்கிடாத அந்தத் தையலைப் பற்றியே தழுவிப்படர்ந்தன.

விளக்குகள் ஏற்றப்பட்டுச் சில நாழிகைப் பொழுதே சென்றிருந்த முன்னிரவு நேரம்.

சூலுற்ற பெண் சேய் பிறந்திடும் வேளையில், வேதனை தாங்கிடாமல், முனகிப் புலம்பித் துடியாய்த் துடித்திடுவாள் அல்லவா? அப்படித்தான் கருமுகிலைச் சுமந்திட்ட வான நங்கையும் பொருமி, அரற்றினாள் இடியும் மின்னலுமாக!

மழைக் குழந்தை, மண்ணின் மடியிலே தாவி விழுந்து தவழ்ந்திடத் தொடங்கிற்று.

குடிகாரக் கணவன் தன் மனைவியின் கூந்தலை இறுக்கிப் பற்றிக் குலுக்கிச் சுழற்றுவதுபோல, மரம்-செடிகளின் கிளைகளும், இலைகளும் படாத பாடுபட்டுத் தவித்திடக் கோரமான காற்றும் சீறிச்சீறி வீசியது.

தமிழைப் புறக்கணித்த பெயர்ப்பலகையை வீசியெறிந்திட்ட தளிர்கொடியைத் தேடிக் காப்பாற்றுமாறு தன் அரண்மனை வீரர்களை அனுப்பியதோடு அமைதியுறவில்லை இளம்பெருவழுதி; தானே புரவி மீதேறி அவளைத் தேடிடும் முயற்சியில் இருளோடு இருளாக அவன் ஈடுபட்டான்.

கடற்கரையோரமாகவே சில கற்கள் தூரம் சென்றிருப்பான்.

'பளீர்'-என்று கண்ணைப் பறித்திடும் மின்னல் வெட்டு.

அந்த வெளிச்சத்திலே, ஒரு நெடிய தென்னை மரமும் அதன் அடியிலே வெள்ளைக் குதிரையொன்றும் தெரிந்தன. நன்றியுணர் வோடு, கீழே விழுந்து கிடக்கும் ஓர் உருவத்தைச் சுற்றி வந்தது அந்த வெண்புரவி.

அந்த இடத்தினை அணுகிவிட்ட இளம்பெருவழுதி கீழே குனிந்து கூர்ந்து நோக்கினான்.

அடுத்த மின்வெட்டில்...

நிலைகுலைந்து கிடந்த அந்த உருவம் ஓர் அணங்குதான் என்பது தெளிவாகத் தெரிந்தது. சிவந்திப் பூக்களாலே யாரோ சிலை வடித்துப் போட்டாற்போலத் துவண்டு கிடந்தாள் அந்தச் சேயிழை. அவளுடைய

பூரிப்பான அங்கப் பகுதிகளில் மழைத்துளிகள் விழுந்து தெறித்துப் புதுமெருகினைச் சேர்த்தன. அவளுடைய காலடிகளையோ கடலலைகள் முத்தமிட்டன; மோதித் திரும்பின.

தன் புரவியிலிருந்து இளம்பெருவழுதி கீழே குதித்து அவள் அருகினில் விரைந்தான்.

தான் காலையில் கண்டு மயங்கிய அன்னப்பேடுதான் அந்த ஆரணங்கு என்று உறுதியாக்கப்பட்டது அவனுக்கு.

முகத்தில் நீரைத் தெளித்தாலே மயக்கந் தெளிவது இயற்கை; மழையே பொழிந்தும் கூட அவள் நினைவிழந்து, நிலைகுலைந்து கிடந்தது அவனுக்குப் புதிராகவே இருந்தது. முதலில் அவளைக் கண்விழிக்கச் செய்திட வேண்டுமே என்னும் கவலையோடு அவளது பூவுடலை அள்ளியெடுத்து அவளைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்த புரவியின் முதுகில் குறுக்காகப் போட்டான்.

மேற்கே சிறிது தூரத்தில் 'மினுக் மினுக்' என்று ஏதோ வெளிச்சம் தெரிந்தது. அதனை நோக்கி இரண்டு குதிரைகளையும் கால்நடை யாகவே இட்டுச் சென்றிட்டான் அவன்.

அருகில் நெருங்க நெருங்க அது ஒரு பாழ்மண்டபமே என்று தெரிந்தது. கற்றாழை நார்போலத் தலைவெளுத்திட்ட மூதாட்டி ஒருத்தி அங்கே கற்களையே அடுப்பாக்கிச் சோறு பொங்கிக் கொண்டிருந்தாள். சுருக்கங்கள் விழுந்து முதுமைச் சுவடுகள் படர்ந்திட்ட அவளது மேனி, காய்ந்து போன பீர்க்கங்காயையே நினைவுபடுத்தியது.

குதிரையிலிருந்து அந்த இளம் பெண்ணை இறக்கிக் கொணர்ந்து மண்டபத்தின் உள்ளே படுக்க வைத்திட்டான் இளம்பெருவழுதி.

''அந்தப் பெண்ணுக்கு என்ன மயக்கமா?'' என்று அக்கறையுடன் கேட்டாள் கிழவி.

''ஆமாம் பாட்டி! உன்னிடம் மஞ்சள் துண்டு ஏதாவது இருக்கிறதா?''

''இருக்கு. இதோ கொண்டு வருகிறேன்'' என்று கூறிய அவள், தன்னுடைய துணி முடிச்சிலிருந்து, ஒரு மஞ்சள் துண்டினைத் தேடி எடுத்தாள். அடுப்பு நெருப்பிலே காட்டிச் சிறிது பற்றத்தொடங்கியதும், அதனை அப்படியே அந்த அணங்கின் மூக்கின் அருகே காட்டினாள். சுருள்சுருளாகக் கிளம்பிய மஞ்சள் புகை, மடந்தையின் மண்டையில் நன்றாக நெடியேற்றி அவளை விழித்திடச் செய்து விட்டது.

சில விநாடிகள் அவளுக்கு எதுவுமே விளங்காத புதிர் நிலை; எப்படித்தான் விளங்கிட முடியும்? மிரள மிரள விழித்துப் பார்த்த அவள்

பிறகு தன்னினைவு வரப்பெற்றவளாகத் தானே தலையினைக் கிளப்பிச் சுவரினை ஒட்டிச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

''நல்லவேளை, தம்பி! நான்கூட இந்தப் பெண் பிழைப்பாளோ, மாட்டாளோ என்று பயந்தே போய்விட்டேன்'' என்று ஆறுதலாகப் பெருமூச்செறிந்த மூதாட்டி மீண்டும் தன் அடுப்பினைக் கவனிக்கச் சென்றிட்டாள்.

''இங்கே எப்படி வந்தோம் என்று திகைப்பாக இருக்கிறதா?'' என்று முறுவலுடன் கேட்டான் இளம்பெருவழுதி, அந்த ஏந்திழையைப் பார்த்து.

''ஆம்'' என்று அவள் இதழ்களைத் திறந்துவிடவில்லை - தலையையே அசைத்தாள்.

''மழையில் நனைந்து கொண்டு கடலை ஒட்டிக் கிடந்த உன்னை நான் மட்டும் கண்டிராவிட்டால் இந்நேரம் அந்த அலைகளே உன்னை விழுங்கி ஏப்பம் விட்டிருக்குமே! மதியத்திலிருந்து பட்டினிதானே?'' பரிவுடன் கேட்டான் அவன்.

அதற்கும், ''ஆம்'' என்பதற்கு அடையாளமாகத் தலையையே அசைத்தாள் அவள்.

''அந்தப் பசி மயக்கத்தோடு, தலையில் பட்ட காயத்திலிருந்து குருதியும் நிறைய வெளியாகியிருக்கும் என்று நினைக்கிறேன். அதனால்தான் குதிரையில் வந்து கொண்டிருந்த நீ நினைவினை இழந்து கீழே விழுந்திருக்கிறாய்'' - இவ்வாறு அவன் கணிப்பினை வெளிப்படுத்தியதும், அவள் தொண்டையைக் கனைத்துக்கொண்டு மெலிந்த குரலில், ''எனக்குக் காயம்பட்டது உங்களுக்கு எப்படித் தெரியும்'' என்று அவனை நோக்கினாள்.

''என்னுடைய மெய்க்காவலன்தான் முதலில் வந்து சொன்னான். தமிழின் மானத்தைக் காப்பதற்காக நீ புரிந்த வீரச் செயலைக் கேட்டதும் நான் எவ்வளவு பூரிப்படைந்தேன் தெரியுமா? எங்கே அந்தத் தமிழ்ப்பகைவர்கள் பழிக்குப் பழி வாங்கத் திட்டமிட்டு உன் உயிரையே பறித்திடுவார்களோ என்று அஞ்சி, உன்னைத் தேடிக் காப்பாற்றுவதற்காக நான்கு திக்குகளுக்கும் ஆட்களை அனுப்பி விட்டு, நானும் புறப்பட்டு வந்தேன். நீயோ இப்படிக் கடல் விழுங்குவதற்கு ஏதுவாகக் கண்ணை மூடிக்கிடக்கிறாய்.... ஆமாம், நான் யார் என்று உனக்குத் தெரிகிறதா?''

''கொற்கைப்பட்டினத்தை ஆண்டு கொண்டிருக்கும் பாண்டிய இளவரசர் தானே தாங்கள்?''

''உனக்கு எப்படி நான் இளவரசன் என்று தெரியும்?''

''முத்துக்குளிப்பு விழாவைத் தாங்கள் தொடங்கி வைத்ததை நான்தான் நேரில் பார்த்தேனே!''

''ஆனால் நான் உன்னை...'' என்று ஏதோ சொல்லிட வாயை எடுத்த அவன், பேச்சை மாற்றி, ''ஆமாம், நீயார், எந்த ஊர் என்று தெரிந்து கொள்ளலாமா?'' என்று இரங்கிய குரலில் கேட்டான்.

''என்னைப் பற்றி தெரிந்து கொண்டு தங்களுக்கு என்ன ஆகப்போகிறது?''

''என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்? சீறி வந்த புலியையே முறத்தினால் துரத்தியடித்தாள் தமிழ் மறத்தி ஒருத்தி என்று சொல்வார்கள். அவளுடைய துணிச்சலைக் காட்டிலும் உன்னுடையது ஒன்றும் குறைந்தது அல்லவே! அதற்காக உன்னை என் அரண்மனைக்கே அழைத்துச் சென்று என் மண்டல மக்களுக்கெல்லாம் உன்னை அறிமுகப் படுத்திடவும், பாராட்டு விழா நடத்திப் பரிசளிப்பு உனக்கு ஏராளமாக வழங்கிடவும் நான் எத்தனை எத்தனையோ திட்டங்களையெல்லாம் என் நெஞ்சிற்குள்ளே தீட்டி வைத்திருக்கிறேன் தெரியுமா?''

''தாங்கள் சொல்வதைக் கேட்டால் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.''

''ஏன்? என்னுடைய சொற்களில் உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''நம்பிக்கை இல்லாமல் இல்லை. ஆனால் நான் யார் என்று தெரிந்தால் தாங்களே என் மீது அருவருப்படைவது மட்டுமல்ல, வெறுப்புற்றாலும் வியப்பதற்கில்லை. பிறகு, தங்கள் திட்டங்கள் எல்லாம் தவிடுபொடி ஆகிவிடும்!''

''நீ யாராக இருந்தாலும் எனக்குக் கவலையே இல்லை. நீ எந்தக் குடியில் பிறந்தவள் ஆனாலும் சரி; எத்தகைய குணம் கொண்டவள் ஆனாலும் சரி; நீ இந்த நாட்டுக்குரிய மொழியைப் புறக்கணித்தவர்களுக்கு - அவமதிப்புச் செய்தவர்களுக்கு-சரியான பாடம் புகட்டியிருக்கிறாய்; அதற்காக உன் உயிரைக்கொடுத்திடவும் தயங்கிடாமல் போராடியிருக்கிறாய். அது ஒன்றுக்காகவேனும் நான் உன்னை கொண்டாட வேண்டாமா? இல்லையென்றால் நான் நன்றி கொன்றவன் - மொழிப் பற்றோ, இனப்பற்றோ இல்லாதவன் என்று என் நாட்டு மக்களே என்னைத் தூற்றமாட்டார்களா? அதற்காக நான் உன்னை என் அரண்மனைக்குக் கூட்டிக் கொண்டு போய்தானே ஆக வேண்டும்?''

''இளவரசே! தாங்கள் என்னிடம் வைத்துள்ள பெருமதிப்பிற்கு நான் மிகவும் தலை வணங்குகிறேன். ஆனால் நான் தற்பொழுது தங்கள் அரண்மனைக்கு வருவதால், தங்களுக்கே என் வருகை கெடுதலாக

முடியலாம்; தங்கள்மீது மற்றவர்களுக்கு ஐயப்பாடுகளும் வரலாம்; ஏன் சில அரசியல் சிக்கல்களேகூட எழலாம். எதற்கு வீணான வம்பு?''

''நீ என்ன சொல்கிறாய்?''

''ஆம், இளவரசே; நடக்கக் கூடியதைத்தான் சொல்கிறேன். என்ன இருந்தாலும் தாங்கள் என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறீர்களே. அதற்கு நன்றியறிதல் காட்டிடவாவது, நான் என்னைப் பற்றிய சில உண்மைகளை இப்போதே தங்களிடம் சொல்லிடத்தான் வேண்டும். தாங்கள் நினைப்பதுபோல நான் எளிய குடியில் பிறந்தவள் அல்லள். ஓர் அரசர் குடியினைச் சார்ந்தவளே!''

''அப்படியா? நீ எந்த நாட்டு இளவரசி?''

''என்னுடைய நாடு எது என்று தெரிந்தால் தங்களால் சினத்தைக் கட்டுப்படுத்திட முடியாதோ என நான் அஞ்சுகிறேன்.''

''அந்த அச்சம் உனக்குத் தேவையே இல்லை. அதுவும் உன்னைப் பொறுத்தவரையில் என்னிடம் சினமாவது எழுவதாவது?''

''நான் வேளிர்குடியில் பிறந்தவள். என் பெயர் தாமரை. சிற்றரசர் இருங்கோவேள் என் உடன்பிறந்த அண்ணன். சோழப் பேரரசர் கரிகாலரிடம் தோற்ற பிறகு தலைமறைவாக மரமாளிகை கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகிறோம். இந்த நிலையில் நான் எப்படி வெளிப்படையாகத் தங்கள் அரண்மனையின் விருந்தாளியாக வரமுடியும்? ஏனெனில், தங்கள் தந்தையார் பெருவழுதிப்பாண்டியரும், கரிகால் மன்னரும் நட்புறவை வளர்த்துக் கொண்டு வரும் நல்ல நேரம் இது. கரிகாலரின் பகைவராகி விட்டவரின் தங்கையைத் தாங்கள் பாராட்டுகிறீர்கள் என்றால், தங்கள் மீது தங்கள் தந்தையாருக்கே சீற்றம் உண்டாகாதா? அத்துடன் கரிகாலருக்கே தங்கள் தந்தையார்மீது ஐயப்பாடு எழக்கூடும் அல்லவா? அதைத் தொடர்ந்து புதிய அரசியல் சிக்கல்கள் தோன்றுவதற்கு இடம் ஏற்படும் அல்லவா? அப்படியானால் நான் ஏன் இப்போது கொற்கைப் பட்டினம் வந்தேன் என்று தாங்கள் எண்ணக்கூடும். ஏதேனும் ஒற்று வேலையை மேற்கொண்டுதான் வந்திருப்பேனோ என்கிற ஐயப்பாடு தங்களுக்கு எழலாம். ஆனால்... தாங்கள் நம்பினாலும் சரி. நம்பாவிட்டாலும் சரி; என் மனச்சான்றின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன்; நான் எளிய குடிமகளாகக் கொற்கைப்பட்டினத்திற்கு வந்ததே முத்துக்குளிப்பு விழாவினைக் கண்டிடும் ஒரே ஆசையினால் தான்.''

''வியப்பாக இருக்கிறதே! இந்த விழாவுக்காகவா இத்தனை தூரம், அதுவும் தன்னந்தனியாக வந்திட்டாய்?''

''ஆம், இளவரசே! தங்களால் நம்பக்கூட முடியாது தான். ஆனால், இதற்குக் காரணம் ஒருவகையில் என் அண்ணியார்தான். அவரும்

தங்களுடைய பாண்டியநாட்டைச் சேர்ந்தவர் அல்லவா? பொற்புமிக்க கொற்கை பற்றியும், அங்கே நடக்கும் பொலிவுமிக்க முத்துக்குளிப்பு பற்றியும் கதை கதையாகச் சொல்லிக்கொண்டே இருப்பார். வாழ்நாளில் எவ்வாறேனும் ஒருமுறையாவது இந்த முத்துக் குளிப்பு விழாவினைப் பார்த்திட மாட்டோமா என்னும் ஏக்கமே என் நெஞ்சை அரிக்கலாயிற்று. இன்னும் சிறிது காலம் சென்றால், கரிகாலரிடம் என் அண்ணன் வளர்த்துக் கொண்டு வரும் பகைமையினால், எங்கள் எதிர்காலமே கவிழ்ந்த கப்பலாகி விடுமோ என்கிற உள் நடுக்கமும் எனக்கு உண்டாகிவிட்டது. எனவே, இந்த ஆண்டு எப்பாடுபட்டாவது முத்துக்குளிப்பு விழாவிற்கு வந்தே தீருவது என்று துணிந்து கிளம்பிவிட்டேன். குதிரையோடு கொற்கைக்கே வந்திட்டால், நான் மன்னர்குடிப்பிறந்த மங்கைதான் என்று மற்றவர்கள் புரிந்து கொண்டு விடலாம் இல்லையா? அந்த அச்சத்தினால், கொற்கைக்கு வடக்கேயுள்ள ஒரு குப்பத்திலேயே குதிரையைக் கட்டி வைத்து விட்டுக் கால்நடையாகவே தங்கள் நகருக்குள் நுழைந்தேன். நான் இவ்வாறு புறப்பட்டு வந்தது என் அண்ணிக்கு மட்டுமே தெரியும்; அண்ணனுக்குத் தெரியாது. இந்த நிலையில் நான் தங்கள் அரண்மனைக்கு விருந்தாளியாக வந்தால் - ஆடம்பரமான வரவேற்புகளையெல்லாம் ஏற்றால் - அந்தச் செய்தி எப்படியும் என் அண்ணனுக்கு எட்டாமலா போகும்? பிறகு என்னை அவர் வாழ விடுவாரா? தங்களைப் பற்றியுந்தான் தங்கள் தந்தையார் என்ன நினைப் பார்? கரிகாலருந்தான் என்ன கருதுவார்? பொதுமக்களும் தாறுமாறான வதந்திகளையெல்லாம் தவழவிட மாட்டார்களா....?''

- தாமரை இப்படி ஒரு வினாவினை எழுப்பி தன் பேச்சினை நிறுத்திடவும் இளம்பெருவழுதிக்கு என்ன விடை பகர்வது என்றே தோன்றிடவில்லை.

வாயினைத் திறந்திடாமல், அவன் அமைதியிலேயே அமிழ்ந்து போனான். ஆனால் அவன் விழிகளோ...!''

மண்டபத்திற்கு வெளியே இருளைத் துழாவி, எதனையோ தேடுவது போல், பாசாங்குதான் செய்தன இளம்பெருவழுதியின் கண்கள். உண்மையில் தாமரையின் தளிருடலை மொய்த்திடவே அவை தவி யாய்த் தவித்தன. அவனைப் போலவே அவளும் நன்றாக நனைந்து விட்டாள் அல்லவா, மழையில்? அதனால் அவளது உடலோடு நெருக்க மான உறவு கொண்டுவிட்ட ஈரத்துகில்கள், இடியாப்பத்தின் மேல் இறைந்து கலந்திட்ட தேங்காய்ப் பூமாதிரி, அவளுடைய பருவச் செழு மையைப் பன்மடங்கு பெருக்கியே காட்டின. பால்வடியும் முகம் என்பார்களே அப்படி எழில் வழியும் முகம் - நிலவு முகம்! அதனைக் காணக்காண இளம்பெருவழுதியின் இதயத்தில் விளக்கவொண்ணாத

கிறக்கமே விளைந்துவிட்டது. எனினும், தன் மனத்தினை அவன் மிகவும் கடினத்துடனேயே கட்டுப்படுத்திக் கொண்டான்.

முன்போல, இப்போது மழையின் இரைச்சல் இல்லை. ஓய்ந்து விட்டது. காற்றின் சீற்றமும் இல்லை; அடங்கிப் போயிற்று. ஆயினும் கிழக்கே சிறிது தொலைவில், எம்பிக் குதித்து ஆர்ப்பரித்தன கடல் அலைகள், அவற்றை வம்புக்கு இழுப்பதுபோல் எழுந்து நிமிர்ந்து சுருண்டு விழுந்தன அவனுடைய நினைவின் அலைகள்.

சட்டென்று இளம்பெருவழுதியின் சிந்தனை வானிலே ஓர் எண்ணக்கீற்று. மின்னல் வீச்சு! தொண்டையைக் கனைத்தவாறே ''சரி, தாமரை! நீ கூறியவற்றையும் ஆராய்ந்திட வேண்டியதுதான். என்னால் உன் அண்ணனின் சீற்றத்துக்கு நீ ஆளாவதை இப்போதைக்கு நான் விரும்பிடவில்லை. ஆனாலும் நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்'' என்றான் அவன்.

''என்ன முடிவு?''

''உன் அண்ணனை நானே வந்து எப்படியாவது சந்தித்துச் சில தலையாய செயல்களைப் பற்றி முறையாகவே விவாதித்திட விரும்புகிறேன்.''

''இப்போதுள்ள இக்கட்டான சூழ்நிலையில் அவ்வாறு தாங்கள் சந்தித்து உரையாடுவது சரியாக இருக்குமா? நான் முன்னே சொன்னதைப்போன்று, தங்கள் தந்தையாரும் கரிகாலரும் தங்களுடைய செயலை அறிந்தால் வெகுள மாட்டார்களா?''

''ஒரு காலத்தில் பகைவர்களாக விலகிட நேர்ந்தவர்கள் எந்தக் காலத்திலும் நண்பர்களாக இணையவே கூடாது என்று ஏதேனும் இலக்கண வரம்பு இருக்கிறதா? மேலும், பாண்டிய நாட்டவருக்குப் பகையாளிகளா வேளிர்குடியினர்? இல்லையே! அந்தநாள் முதற்கொண்டு 'கொள்வினை கொடுப்பினை' - உறவு முறையும் இந்த இரண்டு மரபினர்க்கிடையேயும் இருந்துதானே வந்திருக்கிறது! நான் சிறுவனாக இருந்தபொழுது என் தந்தையார் அடிக்கடி 'வெண்ணிப் போர்' பற்றி விரிவாகப் பேசியதெல்லாம் இன்னும் என் நெஞ்சிலே பசுமையாகப் பதிந்துள்ளது. அந்தப் போரில் வேளிர்க்குடியினருக்கு ஆதரவாகத்தானே பாண்டியநாட்டுப் படைகள் கரிகாலரை எதிர்த்துக் களத்திலே குதித்தன! எனவே, உன் அண்ணனைச் சந்தித்து நம்முடைய பழைய உறவினைப் புதுப்பித்துக் கொள்ள முனைவதில் எந்தவிதத் தவறும் இருப்பதாக எனக்குப் படவில்லை. அத்துடன், நான் கேள்வியுற்ற அளவில், சோழப் பேரரசர் பகைவர்க்கும் அருள் புரியும் பண்பாளரா கவே எனக்குத் தோன்றுகிறார். பிஞ்சுப் பருவத்திலேயே அவ்வரைத்

துஞ்சிடச் செய்யத் தொடர்ந்து ஈடுபட்டவர்கள்தாம் பாண்டிய-சேரர்கள். என்றாலும் அந்தப் பழைய பகைமையினைப் பாராட்டிக் கொண்டே இராமல், நட்புரிமையோடு அவர்களுடன் பழகுவதற்கும் தம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டவர் கரிகாலர்; அத்தகைய விண்ணைப் போல் விரிந்த நெஞ்சம் படைத்தவர், வேளிர்குடியினரை மட்டும் காலாகாலத் திற்கு வெறுத்துக் கொண்டே இருக்கவா நினைப்பார்? முறையோடு அவரை அணுகினால், ஏதேனும் ஓர் உடன்பாட்டுக்கு அவர் இசைந்திடு வார் என்றே எனக்குப்படுகிறது... அது எவ்வாறாயினும் சரி; உன் அண்ணனை நான் விரைவில் வந்து சந்தித்திடவே விரும்புகிறேன்.''

இளம்பெருவழுதி இவ்வாறு பகர்ந்தது. தாமரைக்கு மகிழ்ச்சியையே அளித்தது. கரிகாலனைப் பற்றி அவளும் நல்ல முறையிலேயே கேள்வியுற்றிருந்தாள். அவனிடம் தன் தமையன் மட்டும் கொடும்பகை யினை விடாப்பிடியாகக் காட்டி வருதல் விளங்கிடாத புதிராகவே இருந்தது. எவ்வாறேனும் சோழ மாமன்னனுடன் உடன்பாடு கொண்டு விட்டால், தற்போது போலத் தன் மதிப்பினை இழந்து தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்திடும் இழிந்த நிலை இராதே என்று அவள் எண்ணினாள். அதற்கு இளம்பெருவழுதி போன்றவர்களின் எத்தகைய முயற்சியும் பயன் அளித்திடுவதாக அமைந்திடல் நல்லதுதானே என்றும் அவளுக்குத் தோன்றியது.

''தாங்கள் மொழிவது சரி என்றே என் மனத்திற்குப் படுகிறது. பகைமையினை வளர்த்துக் கெண்டே செல்வதால் என்ன நன்மைதான் ஏற்படப் போகிறது? கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போவதால் குடியா முழுகிவிடும்? தங்களைப் போன்றவர்கள் வந்து எடுத்துரைத்தால் என் அண்ணனின் மனமும் ஒருவேளை மாறினாலும் மாறக்கூடும்.''

''ஆனால், இப்போதைக்கு உன் அண்ணனும் நானும் வெளிப்படை யாகச் சந்திப்பதோ, வேறு யாருக்கும் அது தெரிவதோ அத்துணை நல்லது அன்று. மேலும், நான் நல்லெண்ணத்தோடுதான் வருகிறேன் என்கிற நம்பிக்கையும் அவருக்கு என்மேல் விழவேண்டும் அல்லவா?''

''ஆமாம்... அதைப் பற்றியும் நாம் சிந்திக்கத்தான் வேண்டும்... ம்... எனக்கு ஒரு வழி தென்படுகிறது.''

''என்ன வழி?''

''தாங்கள் என் உயிரையே காப்பாற்றியவர் என்கிற உண்மை தெரிந்தால், தங்களிடம் அவருக்குத் திண்ணமாகப் பெருமதிப்பு மட்டுமல்ல, நன்றியுணர்வே உண்டாகிவிடும். அதனைப் பக்குவமான முறையில் என் அண்ணியார் மூலமே எட்டிடுமாறு செய்து விடுகிறேன்.

அத்துடன் தமிழின் மானத்தைக் காத்திடுவதில் தாங்கள் எத்துணை ஆர்வத்தோடு ஈடுபட்டுச் செயலாற்றினீர்கள் என்கிற செய்தியும் தெரிந்தால் தங்கள் மீது இயற்கையாகவே ஒரு தணியாத பாசம்.. தளராத இதயப் பிடிப்பு-பிணைப்பு எல்லாமே உண்டாகிவிடும். தங்களைச் சந்தித்திட அவரே முந்திக் கொள்ள முனைவார். ஆனால்...''

''என்ன ஆனால்...''

''நாங்கள் தங்கியுள்ள மரமாளிகையைக் கண்டு பிடித்து வந்து சேர்வதுதான் தங்களுக்கு மிகவும் கடினமாக இருக்கும். எங்களுடைய வீரர்கள் எளிதில் யாரையும் உள்ளே விட்டுவிடமாட்டார்கள். ஒன்று செய்யலாம்; என் அண்ணனின் பெயர் பொறித்த அரச முத்திரைப் பதக்கமொன்று என்னிடம் இருக்கிறது. அதனைத் தங்களிடம் தருகிறேன். எங்கள் ஆட்களிடம் அதனைக் காட்டினீர்களானால் தங்களை எதுவுமே கேட்டிட மாட்டார்கள். பிறகு, தாராளமாக எங்கள் மாளிகைப் பக்கம் வரலாம்'' என்றவாறே தன் இடையினில் செருகி வைத்திருந்த அந்த முத்திரைப் பதக்கத்தினை எடுத்து நீட்டினாள் தாமரை.

அதனை மகிழ்ச்சிப் பெருக்கோடு பெற்றுக்கொண்ட இளம்பெரு வழுதி, ''மெத்த நன்றி, தாமரை! உன் அறிவுக் கூர்மையைக் கண்டு நான் பெரிதும் வியக்கிறேன். உன்னை எவ்வாறு பாராட்டுவது என்றே எனக்குப் புலனாகவில்லை; விரைவில் உன்னை வந்து சந்திக்க முயல் வேன். ஆனால் என்னைப் பற்றிய தகவல்களை உன் அண்ணனிடம் இப்போதே அவசரப்பட்டுச் சொல்லிட வேண்டாம்'' என்று உளந்திறந்து மொழிந்தான் இளம்பெருவழுதி.

இதற்குள் சோற்றினைப் பொங்கி முடித்துவிட்டாள் மூதாட்டி.

''நேற்று வைத்த முடக்கத்தான் சாறுதான். ஆனாலும் உடம்புக்கு நல்லது'' என்று தயங்கித் தயங்கி அவள் கூறினாலும் அவர்கள் இருவருக்கும் உணவு படைப்பதில் விரைந்தே ஈடுபட்டாள்.

அப்போதிருந்த ஆற்றொணாப் பசிக்கு, அந்தச் சோறும் சாறும் அருமையான விருந்தாகவே இனித்தன தாமரைக்கு!

'இருங்கோவேள்' எழுத்துக்கள் பொறிக்கப் பெற்ற முத்திரைப் பதக்கத்தினைத் தாமரையிடமிருந்து பெறுவது தான் எளிதாக இருந்ததேயன்றி, அவள் தங்கியிருந்த மரமாளிகையைக் கண்டுபிடிப்பது அத்துணை எளிதாக இல்லை பெருவழுதிக்கு.

அவனுடைய தலையாய நோக்கம், இருங்கோவேளையும் கரிகால ரையும் இணைத்து வைத்திடல் மட்டுந்தானா? அல்ல; தாமரையை எவ்வாறேனும் தன் வாழ்க்கைத் துணையாக எய்திட வேண்டும் என்பதுமாகும்!

ஆனால், அப்போது மூட்டம் போட்டிருந்த அரசியல் முகில்களுக் கிடையே தன்னுடைய எண்ணம் ஈடேறல் எளிதல்ல என்பதும் அவனுக்குத் தெரிந்திடாமல் இல்லை.

அந்த வேளையில் தான் புலவர் காரிக்கண்ணனாரைப் பற்றிய நினைவு வந்தது. அவர்தம் அன்பினால் மட்டுமின்றிப் பண்பினாலும் கவரப்பெற்றவனே இளம்பெருவழுதி.

....அவருடைய பாடல்வரி ஒவ்வொன்றும் இனிக்கும் மலைவாழை; மணக்கும் மருக்கொழுந்து. அவரது உள்ளமோ மெல்லிய மல்லிகைப்பூ; கள்ளமே இல்லாதது...'' என்றெல்லாம் தன் தோழர்களிடம் அவரைப் பற்றி அவன் ஏற்றிப் போற்றுவதுண்டு.

இத்தகைய ஈடுபாடு அவரிடம் அவனுக்கு ஏற்பட்டதற்குக் காரணம் இல்லாமலும் இல்லை.

மதுரை மாநகரிலே பாட்டரங்கம் ஒன்று நடைபெற்றது. அதிலே இளம்பெருவழுதியும் தன்னுடைய பாடற் புனலை இனிமை பொங்கிடப் பாயவிட்டான். அதனைக் கேட்டுத் திளைத்திட்ட காரிக்கண்ணனார் தம்மை விட இளைஞன் தானே என்று இளக்காரமாக எண்ணிடவில்லை; அழுக்காற்றுக்கும் இடம் அளித்திடவில்லை; இவனுக்கெல்லாம் உலகப் புகழ் ஏற்படுவதா? என்று வயிற்றெரிச்சல் கொண்டு இழிந்த போக்கிலும் நடந்திடவில்லை. மாறாக, ''அவையோர்களே! என்னைப் 'புலவன்' என்று எல்லாரும் கொண்டாடுகிறீர்கள். அவ்வாறு உங்களால் ஒப்புக் கொள்ளப் பெற்ற புலவனாகிய யானே, இந்த இளம்பெருவழுதியின் பாக்களைச் சுவைத்து மெய்சிலிர்த்து நிற்கிறேன். இவர் என்னை விடப் பெரும் புலவர் மட்டும் அல்லர்; 'உலகப் பெரும் புலவரே' ஆவார்!'' என்று மனம்விட்டுப் புகழ் மழை பொழிந்தார். அதுமட்டுமா? அவனைக் கட்டியணைத்து முன் நெற்றியிலே முத்தமும் ஈந்தார்; அந்தக் கண்கொள்ளாக் காட்சியினைக் கண்டு பாட்டரங்கமே துள்ளிக்குதித்துக் கரவொலி எழுப்பி, இன்ப வெள்ளத்திலே நீச்சலடித்தது.

இவ்வாறு பரந்த மனப்பாங்கு கொண்ட அவர்தம் அரிய முயற்சியினால்தான் தன்னுடைய தந்தைக்கும் கரிகாலருக்குமிடையே நட்பு அரும்பிடலாயிற்று என்பதனை நன்றாக அறிவான் இளம்பெருவழுதி. எனவே தன்பால் எல்லையில்லாத அன்பு பூண்ட அவர் மூலமாகவே - அவர்தம் அறிவுரையையும் துணையையும் கொண்டே - தான் விரும்பியவளை அடைந்தால் என்ன என்னும் எண்ணமும் உண்டாயிற்று அவனுக்கு. அதே சமயம், சோழ மண்ணில் வாழும் அவரைக் கொற்கைப்பட்டினத்து இளவரசன் என்கின்ற நிலையில் வெளிப்படையாகப் போய்ச் சந்திக்கவும் அவன் விழைந்திடவில்லை.

அதனால் சில சிக்கல்கள் எழுந்திடுமோ என்கிற அச்சமே! எனவேதான் யவனக்கிழவர் வேடத்தை அவன் மேற்கொண்டான்.

காரிக்கண்ணனாரும் அவனுடைய உள்ளார்ந்த காதலை எண்ணி உதவிட இசைந்தார். அதே சமயம் அவசரம் கூடாதென்று அணை போடுவதிலும் குறியாக இருந்தார். அடிக்கடி தம்மைச் சந்தித்து அறிவுரை கேட்டிட வந்த அவனைக் காட்டிக் கொடுத்திடாமலும் காப்பாற்றினார். அதனாலேயே சொல்லொணாத் துன்பங்களையும் பழிச் சொற்களையும்கூடச் சுமந்திட்டார்.

-இளம்பெருவழுதி இவ்வாறாகத் தன் கதையினைச் சொல்லி முடித்திடும்பொழுது, கடைச்சாம வேளையாக இருக்கலாம்.

புகார் நகரத்துச் சேவல்கள் போட்டியிட்டுக் கொண்டு கூவலாயின. கீழ்வானில் வெள்ளி முளைத்து வெகு தொலைவுக்கு மேலேறி இருந்தது. தீவட்டி வெளிச்சத்தையே கூர்ந்து நோக்கியவண்ணம் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தான் கரிகாலன். பின்னர், ''உங்களுடைய எண்ணம் பெருவழுதிப் பாண்டியருக்குத் தெரியுமா!'' என்று அமைதியாக வினவினான்.

''இன்னும் தெரியாது அரசே! தங்களுடைய எதிரியான இருங்கோ வேளின் தங்கையை நான் மணக்க விழைகிறேன் என்பது கடுகளவு தெரிந்தாலும் போதும்; என் தந்தை கொடுஞ்சினம் கொண்டு விடுவார் என் மீது! அதனால் தான் முதலில் தங்களுடைய ஒப்புதலைப் பெற்றுத் தங்கள் மூலமாகவே அவரை நான் அணுகிட எண்ணுகிறேன். தாங்கள் தான் அவரிடம் நயமாக எடுத்துரைத்து என் நம்பிக்கை நலிந்திடாதவாறு காப்பாற்றிட வேண்டும். இன்னொன்றையும் தெளிவுபடுத்தினால் தாங்கள் தவறாகக் கருதிட மாட்டீர்கள் என எண்ணுகிறேன்.''

''என்ன அது?''

''நான் தாமரையை மணப்பதால் அவள் சார்ந்த வேளிர் குடியின ருக்குப் பரிந்து கொண்டு ஏதேனும் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடு வேனோ என்று தாங்கள் ஐயுறவே தேவையில்லை. என்னால் எத்தகைய சிக்கலும் எழுந்திடவே எழுந்திடாது. இருங்கோவேள் தான் இயற்கை எய்திவிட்டார். அவருக்குப் பின்னர் வேளிர்குடியினரின் செல்வாக்கை உயர்த்திடும் அளவுக்கு அங்கே தளபதிகளோ தலைவர் களோ இருப்ப தாகவும் தெரியவில்லை. செந்தலையார் உயிரோடு இருந்தாலாவது ஏதேனும் செய்வார் என்று நாம் எண்ணிட இடம் உண்டு. அவரும்தான் இறந்து போனார்!'' - இளம்பெருவழுதி இவ்வாறு புகன்றிடவும்-

''ஆம்; மன்னர் மன்னவா! இளவரசர் இயம்புவது முற்றிலும் உண்மை. இருங்கோவேள் நெஞ்சிலே நஞ்சினைப் பாய்ச்சிக் கொண்டே இருந்த

வர் அந்தச் செந்தலையார்தாம்? குரங்கினை ஆட்டி வைத்திடும் கோல் போலக் குழப்பங்கள் அத்தனைக்கும் வித்திட்டவர் - ஏன், விதை யாகவே வேலை செய்தவர்-அவர்தாம்'' என்றார் காரிக்கண்ணனார்.

''அதற்கென்ன செய்வது புலவர் அவர்களே! செந்தலையாருக்குத் தாம் தொடர்ந்து அமைச்சராகவே பதவியில் நீடித்து, இந்த நாட்டு மக்களை ஆட்டிப் படைத்து அதிகாரஞ் செலுத்துவதற்கு முடியாமல் இந்தக் கரிகாலன் குறுக்கே வந்துவிட்டானே என்கிற ஆத்திரம். அதனால் தான் இருங்கோவேளைத் தூண்டிவிட்டு இந்தச் சோழ மண்டலத்தையே கைப்பற்றிடச் சூழ்ச்சிகள் பல புரிந்தார். அவருடைய உள்நோக்க மெல்லாம், இருங்கோவேளையும் அழித்துவிட்டுத் தாமே பேரரசர் ஆகிவிடவேண்டும் என்பது தான். நாட்டிலே அமைதியோ குழப்பமின் மையோ நிலவினால் அவருக்கு அறவே பிடிக்காதே! ஏதேனும் குட்டையை குழப்பிவிட்டு மீன் பிடிக்காவிட்டால் அவருக்கு உறக்கமே வராதாமே! பதவி வெறியைப் பற்றியோ சொல்லிடவே வேண்டாம்! 'செந்தலையார் - மற்றவர் வளர்ச்சியைக் கண்டால் வெந்தலைவார்!' என்று வேளிர் மக்களே அவரை கேலி செய்திடுதல் உண்டாம். வெளியிலே என்னவோ 'ஏழை பங்காளர்' என்றே பெரிய பெயர். அவர் வாழ்வதோ அடுக்கு மாளிகையில்; படுப்பதோ பட்டு மஞ்சத்தில்; குளிப்பதோ பன்னீர்த் தொட்டிகளில்! அவர் எப்படியோ வாழட்டும்; வசதிகளைத் துய்க்கட்டும்; அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. ஆனால், தம்முடைய பதவி வெறியைத் தணித்துக் கொள்வதற்காக இருங்கோவேளின் மனத்தையே கெடுத்து, இந்தச் சோழ மண்டலத்திற்கே தலைமை அமைச்சர் ஆகிவிடுவதற்கும், பின்னால் தாமே அரியணை ஏறுவதற்கும் சதிகள் புரியலாமா? பொய்களையே தளவரிசையாகப் போட்டு அதிலே புகழ் மாளிகையினை எழுப்பிட முயன்றால், அது எத்துணை காலத்திற்குத்தான் இடியாமல் நிலைத்து நிற்கும்? போகட்டும். அவர் இறந்துவிட்டார். அதற்காக நான் வருந்தாமல் இல்லை. அவர் உயிரோடு இருந்திருந்தால் நான் எவ்வளவோ மகிழ்ந்திருப்பேன்... ம் எங்கோ பேச்சைத் தொடங்கினோம்; எங்கோ வந்துவிட்டோம். இளவரசே! தாமரையைப் பொறுத்தவரை நீங்கள் உறுதியாகத்தான் இருக்கிறீர்கள். இல்லையா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''ஆம்; மன்னர் அவர்களே! என்னுடைய உறுதிப்பாட்டில் இம்மி அளவுகூட விரிசலுக்கோ தளர்ச்சிக்கோ இடமே இல்லை. தங்களிடம் மனம்விட்டுச் சொன்னால்தான் என்ன தவறு? நான் கலையுணர்வு மிகுந்தவன்தான் என்றாலும் தாமரையைத் தவிர இதுகாறும் எந்த காரிகையையுமே நான் ஏறெடுத்துப் பார்த்ததே இல்லை; இனி பார்க்கப் போவதும் இல்லை. சுருக்கமாகச் சொன்னால், தாமரை இல்லை என்றால்

பிறகு எனக்கு வாழ்வே இல்லை!'' அழாத குறைதான் இளம்பெருவழுதி யின் குரலில்; அவ்வளவு உருக்கமாக எடுத்துச் சொன்னான் தன் உள்ளக் கிடக்கையை!

...ஏதேது. தாமரைக்காக பாண்டியநாட்டு அரியணையைக் கூட துச்சமெனக் கருதித் துறவுக் கோலமே பூண்டு விடுவீர்கள் போல் இருக்கிறதே!'' என்று கேலியாகச் சிரித்த கரிகாலன் மேலும் தொடர்ந்தான்:

''அதற்காக உள்ளத்தை உடையவிட்டு விடாதீர்கள்! எது எப்படி இருந்தாலும் தமிழுக்குப் புறக்கணிப்பு என்றதுமே நீங்கள் இருவரும் கொதித்து எழுந்திருக்கிறீர்கள். அந்த உங்களுடைய ஆழமான தன்மான உணர்வுக்கும் தாய்மொழிப் பற்றுக்காகவுமே உங்கள் இருவரையும் இணைத்துவைத்திட வேண்டாமா? உங்களைப் போன்றவர்களால் தானே எதிர்காலத்தில் நம் இனப்பெருமையையும் மொழிச் செழுமையை யும் அழித்திடாமல் காப்பாற்றிட முடியும்? எனவே, உங்கள் மனம்போல நீங்கள் மணம் புரிந்திட நான் உடனே பெருவழுதிப் பாண்டியருக்கு மடல் விடுத்து இசையச் செய்துவிடுகிறேன். போதுமா?'' -சோழ மாமன்னனின் இந்தச் சொற்கள் இளம்பெருவழுதியின் இதயக் கிண்ணியில் தேன் துளி யாகவே விழுந்தன. அவன்பால் நன்றி- நம்பிக்கை - பூரிப்பு- புல்லரிப்பு எல்லாமே ஒன்றிக் கலந்து, அவன் விழியோரத்தில் நீர்த்துளி களாக அரும்பு கட்டின.

''மிகுந்த நன்றி மன்னவா! ஆனால் ஒரு சிறிய வேண்டுகோள்''.. என்று தயங்கியவாறே தன் உதடுகளை அசைத்தான் அவன்.

''என்ன?''

''பொழுதுந்தான் விடிந்திடப் போகிறது. இருங்கோவேள் இறந்திட்ட செய்தியினை நானே போய்ப் பக்குவமான முறையில் தாமரையிடம் எடுத்துச் சொல்லி, அவளை இங்கே அழைத்து வருகிறேனே?'' - இதனைக் கேட்டதும் கரிகாலனால் நகைக்காமல் இருந்திட முடிய வில்லை. அவன் காரிக்கண்ணனாரை நோக்கி மொழிந்தான்.

''பார்த்தீர்களா, புலவர் அவர்களே! சிறிது இடம் கொடுத்துப் பேசியதும் தன் காதலியை விரைவில் சந்தித்துப் பேசிட, எவ்வளவு திறமையாக திட்டம் இடுகிறார்!'' பிறகு அவன் இளம்பெருவழுதியின் பக்கம் திரும்பி, ''ஏன், பார்த்துப் பலநாள் ஆயிற்றோ?'' என்று வேடிக்கை யாகக் கேட்டான்.

இளம்பெருவழுதி அவனுக்கு என்ன விடையளிப்பான்? வெட்கத் தால் அவனது முகம் வெளிறிப் போயிற்று!

கரிகாலனும் சிந்தித்துப் பார்த்தான் - இருங்கோவேள் இறந்திட்ட செய்தியினை அவனுடைய எதிரியான தம் வாய் மூலம் நேரடியாகக் கேட்பதைவிடத் தன்னுடைய காதலன் வாயிலாகக் கேட்டால் தாமரை யின் துயரச்சுமை என்ன இருப்பினும் சற்றுக் குறைந்திடுதல் இயற்கைதானே என்று தோன்றிற்று.

''சரி இளவரசே! உங்களுடைய ஆசையைத்தான் கெடுப்பானேன்!... ஆனால் ஒன்று, இளமைத் துடிப்பில் உங்கள் அவசரத்தைக் காட்டி விடாதீர்கள்! சற்று நிதானமாகவே இருங்கள்!'' என்று கரிகாலன் பகர்ந்ததும், இளம் பெருவழுதிக்கு மகிழ்ச்சிப் பெருக்குப் பிடிபடவே இல்லை. அவனுடைய இதயம் முழுதும் நொடிப் பொழுதில் இனிப்புக் கடலாகவே மாறிப் பொங்கி ஆர்ப்பரித்தது.

''மிக மிக நன்றி அரசே! தங்களுடைய வாக்கினை மீறிடவும் மாட்டேன்; வழி தவறிச் சென்றிடவும் மாட்டேன். தாங்கள் உறுதியாக நம்பலாம். நான் விரைவிலேயே தாமரையுடன் இங்கு வந்து சேர்கிறேன்''என்று உணர்ச்சிப் பெருக்குடன் உரைத்துக் கரிகாலனிடமும் காரிக் கண்ணனாரிடமும் விடைப்பெற்றுக் கொண்ட இளம்பெருவழுதி, தாமரை தங்கியுள்ள அரண்மனை மாளிகை நோக்கி விரைந்து தன் அடிகளை நீட்டிப்போட்டான்.

சிறிது நேரத்தில்...

ஒரு காவலன் ஓடோடி வந்தான், அவன் கொணர்ந்திட்ட செய்தி கரிகாலன், காரிக்கண்ணனார் இருவரையுமே திடுக்கிடச் செய்தது.

அவன் பரபரப்புடன் பகர்ந்த செய்தி இதுதான்.

''தாமரையைக் காணோம்!''

காவலன் கழறிய செய்தி கரிகாலனைத் திடுக்கிட வைத்ததோடு நின்றிடவில்லை; உள்ளூரச் சினநெருப்பு அவனிடம் சீறிக் கனன்றிடுமாறும் செய்துவிட்டது.

எனினும் தான் அப்போது அடைந்திட்ட திடுக்கீட்டையோ, சினத்தையோ வழக்கம்போல் வெளிப்படையாகப் புலப்படுத்திட வில்லை அவன்; விண்ணிலே ஒரு பனைமர உயரத்திற்கு மேல் பூவரசம் பூவைப்போல் மலர்ந்து சிரித்திட்ட விடிவெள்ளியையே வெறித்து நோக்கிய வண்ணம் இருந்தான் அமைதியாக. அவனுடைய அமைதிக்கு எப்பொழுதுமே இரண்டு பொருள்கள் உண்டு. ஒன்று, ஆழ்ந்த சிந்தனை; மற்றது ஆத்திரம்! இப்போதைய அவனது அமைதிக்குக் காரணம், ஆத்திரமே! ஏனெனில் காணாமற்போயிருப்பது பச்சிளங் குழவி இல்லை! பசும் பொன் நகையும் இல்லை. உலகம் புரிந்த ஒரு மடந்தையே அரண்மனையை விட்டு மறைந்திருக்கிறாள்! அவள் தானாகத்தான் மதில் சுவர்களைக் கடந்து சென்றாளா. அல்லது மற்றவர்களால் கடத்திச் செல்லப்பட்டாளா என்றும் விளங்கிட இயலவில்லை.

கரிகாலனின் எண்ணப் பேராற்றிலே என்னென்னவோ சுழற்சிக ளெல்லாம் ஏற்படலாயின.

''...அந்த நாளில் தென்னிலங்கையை ஆண்டிட்ட வேந்தன் இராவண னின் இளவல் கும்பகர்ணன்தான், உறக்கத்தில் மன்னன் என்று கேள்வியுற் றிருக்கிறேன்; என்னுடைய அரண்மனைக் காவலாளிகளில் சிலரோ, அந்தக் கும்பகர்ணனையே மிஞ்சிவிடுவார்கள் போல் இருக்கிறதே! அவர்கள் மட்டும் கண் விழிப்போடு மட்டுமல்ல - கருத்து விழிப்போடும் இருந்திருந்தால் தாமரை தப்பிச் சென்றிட முடிந்திருக்குமா?''

''சரி, புலவர் அவர்களே! இனியும் நாம் இங்கே உரையாடிக் கொண்டிருப்பதால் என்ன பயன்? வாருங்கள் அரண்மனைக்குப் போவோம்; அங்கே என்னதான் நடக்கிறது என்பது தெரிந்திட

வேண்டாமா?'' என்றவாறே கரிகாலன் அந்த மண்டபத்தை விட்டுக் கிளம்பினான். காரிக்கண்ணனாரும் அவனைப் பின் தொடர்ந்தார்.

இருங்கோவேள் சவமாகிக் கிடந்திடும் இடத்தினைத் தாண்டிச் சில அடிகள் தூரம் கூடச் சென்றிருக்க மாட்டார்கள். செழியன் அவர்களுக்கு முன்னே வந்து இறங்கி நின்றான், குதிரையிலிருந்து

''அரண்மனையிலிருந்துதானே வருகிறாய் நீ? தாமரையைப் பற்றிய செய்தி ஏதாவது தெரியுமா?'' என்று வினவினான் கரிகாலன்.

''தாமரை காணாமற் போய்விட்ட செய்திதானே? தெரியும். நானும் அரண்மனைக்கு உள்ளேயும் வெளியேயும் எங்கும் தேடிப் பார்த்து விட்டேன். தென்படவே இல்லை. எனக்கோர் ஐயப்பாடு...''

''என்ன?''

''தங்கள் இருவரோடும் இருந்தாரே யவனக்கிழவர், அவர் இப்போது எங்கே?''

''ஏன்?''

''தாமரை தங்கியிருந்த மாளிகை அறையருகே யவனக் கிழவர் உருவம் ஒன்றைப் பார்த்ததாகத் தங்கள் மெய்க்காவலனிடம், காவலாளி ஒருவன் கூறியதைக் கேட்டேன். ஒரு வேளை அந்த மூன்றாவது யவனக்கிழவர்தான் தாமரையைக் கடத்திச் சென்றிருக்கலாமோ என்று கருதினேன்'' செழியன் இவ்வாறு மொழிந்ததும் கரிகாலன், காரிக்கண்ணனார் இருவருமே திகைப்புற்று, ஒருவரையொருவர் பொருட்செறிவோடு பார்த்துக் கொண்டனர்.

இருவருடைய நெஞ்சின் அடிப்பரப்பிலும் இளம் பெருவழுதியைப் பற்றிய நினைவோட்டம், இனம் விளங்கிடாத கீறல்களை ஏற்படுத்திட முனைந்தது.

காதல் மயக்கம் என்பது ஒரு விந்தையான வழுக்குப் பாறை அல்லவா? அதிலே கண்ணியம் என்னும் கட்டை விரலை ஊன்றி, இடறி விழாமல் நெடுநேரம் நடப்பதென்பது எல்லாருக்கும் எளிதான செயல் அல்லதான். ஆயினும் இளம்பெருவழுதி கொற்கை இளவரசன் என்னும் ஓர் உயர்ந்த பொறுப்பினுக்கும் உரிமை படைத்தவன் ஆயிற்றே? அவனும் மற்ற மற்ற மனிதர்களைப்போல் தன் மனம் போன போக்கிலே மையல் குளத்திலே விளையாட விழையலாமா? இளம்பெருவழுதி, மனிதர்கள் நடந்து செல்லும் வழியினைக் காத்திடும் காவலன் மட்டும் அல்லன்; புதிய வழிகளைப் படைத்துக் காட்டிடும் பாவலனும் ஆவான்; மற்றவர்களுக்கு வழிகாட்டிடும் அளவுக்குப் பாக்கள் புனைந்திடும்

அவன், தானே வழிதவறிச் சென்றிட மாட்டான் என்னும் திடமான நம்பிக்கையும் அவர்களுக்கு இல்லாமல் இல்லை. எனினும் இளமைத் துடிப்புப் பொல்லாததாயிற்றே!

கரிகாலன் தொண்டையைக் கனைத்துக் கொண்டவனாக, "என்ன புலவர் அவர்களே! ஒரு வேளை...?" என்று இழுத்தாற்போல் தொடங்கினான்.

"இருக்கவே இருக்காது அரசே! உறுதியாக நம்பலாம்" என்று தெளிந்த குரலில் மொழிந்தார் காரிக்கண்ணனார்.

அவர்களுடைய சொற்களில் புதைந்துள்ள மறைபொருளை உணர்ந்து கொண்டவனைப் போல் செழியன் குறுக்கிட்டான்.

"அப்படியானால் தாமரையின் அறைப்பக்கம் காணப்பட்ட அந்த ஆள் நாலாவது யவனக்கிழவராக இருப்பாரோ? வேறு எப்படித்தான் அவள் வெளியேறினாள் என்பது புரியாத புதிராக இருக்கிறதே!"

"சரி! அந்தப் புதிரை அவிழ்ப்பது பற்றி அப்புறம் சிந்திக்கலாம். இப்போது இருங்கோவேளின் இறுதிக் கடனுக்குரிய ஏற்பாடுகளைப் பற்றிக் கவனிப்போம்!" என்று முத்தாய்ப்பு வைத்துவிட்டு மேலே நடந்தான் கரிகாலன்.

பொழுது புலர்ந்தது. இருங்கோவேளின் இறப்புச் செய்தி புகார் நகரம் முழுவதுமே எதிரொலிக்கலாயிற்று. அதற்குக் காரணம், வானக் கவிகையே கிழிந்திடும் வண்ணம் அதிர்ந்திட்ட பறை முழக்கமே!

மணவேளையின் போது ஒரு வகையாகவும், பிண வேளையின் போது வேறு வகையாகவும், பறையினை முழக்குவதற்கே வரையறை வகுத்து வாழ்ந்தவர்கள் அல்லவா தமிழ்ப் பெருங்குடியினர்! அந்தக் கலையிலே கைதேர்ந்தவர்கள் இப்போது இருங்கோவேள் மறைவுச் செய்தியை ஒலிபரப்புவதிலே தங்கள் திறமை அனைத்தையும் காட்டிப் பறைகளை முழக்கினர்.

இடையிடையே வினாக்குறியினை ஒத்த கொம்புகள் யானைகள் பிளிறினாற் போல் ஓலமிட்டு அழுதன.

இறுதி வேளை நெருங்கிவிட்டது.

இன்னும் சில வினாடிகளில், தன் தமக்கையின் கணவனான இருங்கோவேளின் சடலம் மண்ணோடு மண்ணாகப் போகிறதே என எண்ணிய அளவில் செழியனால் துயரத்தினை அடக்கிட இயலவில்லை. என்ன இருப்பினும் இரத்த பாசம் அல்லவா? ஒரு மரத்தின் மறைவிலே நின்று கொண்டு அவன் குமுறிக் குமுறி அழுதிட்டான்.

அதே நேரத்தில் முத்துநகையோ, தீப்பட்ட தேனீயாகத் துடியாய்த் துடித்தாள். இருங்கோவேளை வேண்டுமானால் அவள் வெறுத்திடலாம்; அவனுடைய உயிரையே பறித்திடலாம். ஆனால் வீரபாண்டியை - அவனுடைய வீறுநடையினை - விரிந்த மார்பினை - ஆரத்தழுவலை. அன்புக் கொஞ்சலை அவளால் எங்ஙனம் மறந்திட இயலும்? அதுவும் தன் கையினாலேயே அவனைக் கொன்றிட நேர்ந்ததே என்று நினைத்திட்ட அளவில், அவளுடைய இதயமே வெடித்துப் பிளந்திடும்போல் இருந்தது.

இவ்வாறாக இரண்டு இரங்கத்தக்க உயிர்கள் தனித்துப் புலம்பித் தத்தளித்திட, இருங்கோவேளுக்குரிய இறுதிக் கடன்கள் எல்லாவிதமான அரச மரியாதைகளுடனும் இனிது நிறைவேறின.

கரிகாலன் தன்னுடைய மாளிகைக் கூடத்தினில் ஓய்வாக அமர்ந்திருந் தான். புலவர் காரிக்கண்ணனாரும் உடனிருந்தார். தம்முடைய செல்ல மகள் முத்துநகையின் எதிர்காலம் இனி என்ன ஆகுமோ என்னும் கவலையின் நிழல் அவரது பழுத்த முகமெங்கும் படர்ந்து கிடந்தது.

சிறிது நேரத்தில் மெய்க்காவலன், கரங்கள் கட்டப்பெற்ற ஒரு காவலாளியை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

''மன்னவா! தாமரை தப்பிச் செல்லுவதற்கு இவனும் துணை புரிந்திருப்பானோ என்று ஐயுறும்படியாக இருக்கிறது. ஏனெனில் அவள் அணிந்திருந்த முத்துமாலையை இவன் 'கையூட்டாக'(இலஞ்சமாக)ப் பெற்று ஒளித்து வைத்திருக்கிறான். அதற்கு இவன் கூறும் காரணங்கள் நம்பும்படியாக இல்லை'' என்றான்.

''நீ என்ன சொல்கிறாய்? கையூட்டு வாங்கிக் கொண்டு இவன் தாமரையைத் தப்பவைத்து விட்டானா...?''

''ஆம் அரசே! அப்படித்தான் நாம் எண்ணும்படியாக இருக்கின்றன இவனது சொல்லும் செயலும்...''

''வேடிக்கையாக இருக்கிறது மெய்க்காவல! வேடிக்கையாக இருக்கிறது! உழைத்திடாமல் எவரிடமிருந்தும் ஒரே ஒரு சல்லிக் காசினைப் பெறுதல் கூடத் தகாத 'இரத்தல்' எனக்கருதுகின்ற இந்தத் தமிழ் மண்ணிலே 'கையூட்டு' என்கிற கொடிய பழக்கம் குடியேறிட இடம் தருவதாவது? அதனை முளையிலேயே கிள்ளி எறிந்திட வேண்டுமே!, இல்லையென்றால் இவனைப் போன்ற ஒரு சில புல்லுருவிகளின் பொல்லாங்கான போக்கினால், அரசுப் பணியாற்றும் அத்தனை பேருக்குமே அவப்பெயர் உண்டாகிவிடுமே!... சரி, உடனே இவனைச் சிறையிலே தள்ளி, மேற்கொண்டு துப்புகளைத் துலக்குவதற்கான நடவடிக்கைகளை விரைந்து முடிக்கி விட்டிட வேண்டும்!'' என்று ஆணை பிறப்பித்தான் கரிகாலன்.

மெய்க்காவலனும், அந்தக் குற்றவாளியும் அப்பால் சென்று மறைந்ததும், காரிக்கண்ணனார் கரிகாலனை நோக்கி மெல்லக் கேட்டார்: ''ஆமாம்; அந்தக் காவலாளியின் முகத்தினைப் பார்த்தால் நம் தமிழ் நாட்டவனாகத் தெரியவில்லையே!''

''தாங்கள் குறிப்பிடுவது சரிதான், புலவர் அவர்களே! அவன் வச்சிர நாட்டைச் சார்ந்தவன்.''

''அப்படியா? அவன் எப்படி நம்முடைய அரண்மனையிலே வந்து இடம் பிடித்தான்?''

''நான்தான் அவனை அலுவலில் அமர்த்தினேன். அவன் மட்டுமா, இன்னும் சில வெளிநாட்டுக்காரர்களும் கூட நம் அரண்மனையில் புதிதாக அலுவல் பார்க்க அனுமதிக்கப்பட்டுள்ளனர். ஆனால், இங்கே வந்து குடியேறி விட்டவர்களுக்கு நாம்தானே வாழ்வளிக்க வேண்டும் என்று நாம் ஏதோ இரக்கப்பட்டு வேலையில் அமர்த்தினால், அவர்கள் ஒழுங்குமுறையோடு நடக்க மறுக்கிறார்கள்; நம்முடைய அரசு நிர்வாகம் நெறியோடு இயங்காதவாறு அதற்கு உலைவைத்திடவும் தலைப்படுகிறார்கள்; என்ன செய்வது?''

''ஆமாம்; இவ்வளவு தொலைவு கடந்து வந்து அவர்கள் எவ்வாறு இங்கே குடியேறிட முடிந்தது?''

''ஓ! அதைப் பற்றிக் கேட்கிறீர்களா? நான் 'வாகை' என்னும் இடத்திலே குறுநில மன்னர்கள் சிலரைப் புறங்கண்ட பின்னர் இமயமலை சென்று நம்முடைய புலிக்கொடியினை நாட்டிவிட்டுத் திரும்பி வந்தேன் அல்லவா?''

''ஆமாம்! அங்கே கொடியை மட்டுமா நாட்டினீர்கள்? எந்தக் காலத்திலும் இந்தச் சோழ மன்னனின் பெருமை வடபுலத்திலே சுடர் வீசிடவேண்டும் என்பதற்காக இமயமலையின் இரும்பன்ன பாறைகளில் நம் புலிக்கொடியின் சின்னங்களையும் பல இடங்களிலே பொறித்தீர்களே! அது மட்டுமா! ஒரு கணவாய்க்குச் 'சோழர் கணவாய்' என்றும், ஒருமலைத் தொடருக்குச் 'சோழ மலைத்தொடர்' என்றும் கூடப் பெயர்களைச் சூட்டி வரலாற்றிலே ஓர் இடத்தினை அங்கே பதித்துவிட்டுத் தானே திரும்பினீர்கள் !''

''தாங்கள் என்னவோ நான் இமயத்திலே சின்னங்கள் பொறித்திட்டதையும், பெயர்களைச் சூட்டியதையும் பெருமையாகப் பேசுகிறீர்கள்! ஆனால், நம்மவர்கள் சிலரே என்னுடைய அந்த நடவடிக்கைகளையெல்லாம் எவ்வளவு ஏளனமாக ஏசியிருக்கிறார்கள் தெரியுமா?'' என்று வருத்தத்துடன் பகர்ந்தான் கரிகாலன்.

''அவர்களுக்கு என்ன அரசே! எதனை வேண்டுமானாலும் இளக்கார மாகப் பேசிடுவார்கள்; எதற்கு வேண்டுமானாலும் எதிர்ப்புக் காட்டிடுவார்கள். அறிஞர்கள், கவிஞர்கள், ஆன்றோர்கள் இவர்களுக் காகச் சிலைகள் அமைப்பது, சின்னங்கள் பொறிப்பது, பெயர்களைச் சூட்டுவது எல்லாம் வெறும் வேடிக்கைக்காகவா? அல்லது வீண் பொழுது போக்கிடவா? பிற்காலத்தில் இந்த மண்ணிலே பிறக்கப்போகும் பிள்ளைகளும், பேரர்களும், ''ஆகா; நம்முடைய முன்னோர்கள் எங்ஙனமெல்லாம் பேரறிஞர்களாகவும், பெருங்கலைஞர் களாகவும், ஆற்றல் மறவர்களாகவும், அரசியல் வல்லுநர்களாகவும் உலகப்புகழை அடைந்திருக்கிறார்கள்! அவர்களைப் போலவே நாமும் ஏன் ஆகக் கூடாது - புகழினை அணைத்திடக் கூடாது? என்றெல்லாம் எண்ணிட- இறும்பூது எய்திட - அதன் மூலம் எழுச்சியினைப் பெற்றிடத் தான் அந்தச் சின்னங்கள், சிலைகள், பெயர்கள் யாவும் தோற்றுவிக்கப்படு கின்றனவே அல்லாமல் வேறு எதற்கு?''

''அவர்கள் தூற்றினால் தூற்றிவிட்டுப் போகட்டும் புலவர் அவர்களே! தூய்மையான உள்ளத்துடன் நாம் துவங்கிவிட்ட பயணத்தை பாதியி லேயே அவர்களுக்கு அஞ்சி நிறுத்திடப்போகிறோமா?... அது கிடக் கட்டும்; நான் இமயத்திலிருந்து திரும்பும் வழியில் வச்சிரநாட்டு மன்ன னையும், மகதநாட்டு அரசனையும், அவந்தி நாட்டு வேந்தனையும், தோற்கடித்தேன் அல்லவா?''

''ஆமாம், அந்த வெற்றிகளின் சின்னங்களாகத்தானே வச்சிர நாட்டுச் சிற்பிகள் சமைத்த முத்துப் பந்தரும், மகத நாட்டுச் சிற்பிகள் எழுப்பிய பட்டிமண்டபமும், அவந்தி நாட்டுக்காரர்கள் அழகுற அமைத்த தோரண வாயிலும் இன்றும் நம் பூம்புகார் நகருக்குப் பொலிவினைத் தந்த வண்ணம் உள்ளன!''

''அந்தச் சிற்பிகளோடு வந்த சில பணியாட்கள்தாம் இங்கே குடியேறியவர்கள். அவர்களைத்தாம் நம் அரண்மனையில் வேலைக்கு அமர்த்தி வைத்தேன். அவர்கள் என்னவென்றால், இப்படிக் 'கையூட்டுப்' போன்ற கேவலமான பழக்கங்களுக்கெல்லாம் இரையாகின்றார்கள்; கீழறுப்பு வேலைகளிலும் ஈடுபடுகின்றார்கள்...'' - கரிகாலன் இவ்வாறு மொழிந்து கொண்டிருக்கும் பொழுதே பாண்டியத் தளபதி நெடுமாறன் பரபரப்புடன் உள்ளே நுழைந்திட்டான்.

''வாரும் நெடுமாறரே! தாமரையைப் பற்றிய புதுச் செய்தி ஏதேனும் உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் சோழ மாமன்னன்.

''இல்லை! அரசே! ஆனால் எங்களுடைய வேந்தர் பெருவழுதிப் பாண்டியர் அவர்கள் அனுப்பியுள்ள ஒரு முக்கியமான மடலைத்

தங்களிடம் தந்திடவே இப்போது வந்துள்ளேன். மேலும் இன்னொரு செய்தியையும் தங்களிடம் தெரிவித்திடக் கடமைப்பட்டுள்ளேன். நானும் செழியனும் மற்ற பாண்டிய நாட்டு மறவர்களும், ஏன் காரிக்கண்ண னாரும் கூட, உடனடியாக மதுரை மாநகருக்கு வந்திடவேண்டும் என்றும் எங்கள் மன்னர் சொல்லியனுப்பியுள்ளார் அத்துடன் ரோமாபுரி நாட்டிலிருந்து தூதுவர் ஒருவரும் இப்போது அங்கே வந்துள்ளாராம்...'' என்று கூறியவாறே பட்டுத் துகிலினால் பத்திரமாக மூடப்பெற்ற ஒரு மடலினை எடுத்துக் கரிகாலனிடம் பணிவுடன் நீட்டினான் நெடுமாறன்.

''என்ன, ரோமாபுரியிலிருந்து தூதுவர் வேறு வந்திருக்கிறாரா?'' என்று திகைப்புடன் கேட்டவாறே மடலினைப் பிரித்துப் படிக்க முற்பட்டார் கரிகாலர்.

ஆனால்...

அடுத்த கணமே அவரது பரந்த முகத்திலே இருள் கவிழ்ந்தது.

பெருவழுதிப் பாண்டியன், திடீரென்று உடல் நலங்குன்றிப் படுக்கையில் விழுந்துவிட்டான் என்னும் செய்தியே கரிகாலனின் முகத்திலே இருளினைப் படரவிட்டதாகும்.

புலவர் காரிக்கண்ணனாரின் பெரு முயற்சியினால் அண்மைக் காலமாகத்தான் அவனது நட்பினில் திளைத்திடும் நல்வாய்ப்பினைப் பெற்றிருந்த போதிலும், படிக்கச் சுவைத்திடும் பழச்சுவைத் தமிழ்நூல் போல் பழகுதற்கு இனிய பண்பாளனே பாண்டிய வேந்தன் என்பதனை நன்கு உணர்ந்திருந்தான் சோழ மன்னன். தன் அரிய நண்பர் விரைவினில் குணம் பெற்றிட வேண்டுமே என்று அவன் வருத்திக் கொண்டான் மனத்திற்குள்ளேயே!

ஆயினும் நோய் மிகக் கடுமையானதாகத்தான் இருந்திட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றுகிறது. அதற்குக் காரணம் தளபதி நெடுமாறனையும், செழியன் முதலான மறவர்களையும், உடனே தலைநகருக்கு அனுப்பி விடுமாறு மடலில் குறிப்பிடப்பட்டிருந்தது மட்டும் அன்று; அந்த மடலே மன்னனின் கைப்பட வரையப் பட்டிருக்க வில்லை; அவனது கையொப்பமும் அதிலே காணப்பட வில்லை. மாறாகப் பாண்டிய அரசின் நிர்வாகத்தினை இயக்கும் பல்வேறு ஆட்சித்துறைத் தலைவர்களுள் ஒருவரான (இக்கால 'அரசாங்கச் செயலாளர்' அல்லது இயக்குநர்களை நிகர்த்த) 'திருமுகம் எழுதுவோர்' தான் அம்மடலினைத் தீட்டியிருந்தார்.

...இத்துணைக் கடுமையாகப் பெருவழுதி பிணியுற்றி ருக்கும் செய்தி, கவணிலிருந்து புறப்பட்ட கல்லாகக் கொற்கைப்பட்டினத்தை நோக்கியும்

விரைந்து பறந்திருக்குமே! ஆனால், அதனைக் குறித்த காலத்தில் அறிந் திடவும், உடனே தன் தந்தையைக் கண்டிடும் பொருட்டு மதுரை மாநகர் நோக்கிக் கிளம்பிடவும் இளம்பெருவழுதி இந்நேரம் அங்கே இருந்திட முடிந்திருக்குமோ? தாமரையை அழைத்து வருவதாகக் கூறிச் சென்ற அவ்விளவரசன், திரும்பிவந்திடவில்லையே! அவளைக் காணோ மென்று கேள்வியுற்ற அளவிலேயே அவளைத் தேடிக்கொண்டு வேறெங்கேனும் சென்று விட்டாரோ? அப்படியானால், பாண்டிய மன்னன் நோய்வாய்ப்பட்டுவிட்ட நிலையில், மதுரை மாநகரிலேயே பல்வேறு அரசியல் சிக்கல்கள் பல்கிப் பெருகிடவும், புதிய வடிவங்கள் பெற்றிடவும் இடம் ஏற்பட்டு விடுமே!'' என்றெல்லாம் எண்ணத் திவலைகள் கரிகாலனின் இதயத்தினுள்ளே தெறித்து விழுந்தன. ஆயினும் அவற்றினை வெளிக்காட்டிக் கொள்ளாமல்,

''சரி நெடுமாறரே! நீங்களும் உங்கள் வீரர்களும், இருங்கோவேள் எழுப்பிய பகைமைத் தீ பரவி விடாமல் அணைத்திடும் வகையில் எவ் வளவோ பணியாற்றினீர்கள்; துணை புரிந்தீர்கள். அவற்றை யெல்லாம் இந்தச் சோழ மண்ணிலே பிறந்தவர்கள் என்றுமே மறந்திட மாட்டார்கள். நீங்கள் உடனே மதுரை மாநகருக்கு திரும்பிச் செல்லுங்கள். நானும் உங்களுடனேயே புறப்பட்டு வந்து பெருவழுதிப் பாண்டியரைப் பார்த் திட வேண்டும் என்னும் பேராவல்தான் எனக்கும்; ஆனால், தாமரை காணாமற் போயுள்ள இக்கட்டான நிலையில் சிலமுக்கியமான நடவடிக் கைகளையெல்லாம் முனைந்து மேற்கொள்ள வேண்டியுள்ளது. நீங்கள் பாண்டிய நாட்டுத் தலைநகர் சென்றதும் மன்னனின் உடல்நலம் பற்றி உடனுக்குடன் மடல் விடுத்திட வேண்டும், மறந்திட மாட்டீர்களே?'' என்று கரிகாலன் கேட்டான்.

''இல்லை, அரசே! கண்டிப்பாக அடிக்கடி மடல் விடுக்கிறேன். ஆமாம். காரிக்கண்ணனார் அவர்களும் எங்களுடனேயே புறப்படு கிறார் அல்லவா?'' என்று வினவினான் நெடுமாறன்.

''அவரும் உடனே வந்திட வேண்டியதுதான். ஆனால் நீங்களும், உங்கள் மறவர்களும் கிளம்பி விடுங்கள்; அவரும் செழியனும் அடுத்து வந்துவிடுவார்கள்.''

நெடுமாறன் விடைபெற்றுச் சென்ற பின்னர், கரிகாலன் காரிக்கண்ண னாரை நோக்கினான்.

''நான் ஏன் பாண்டியத் தளபதியை முதலில் கிளம்பி விடுமாறு பகர்ந்தேன் தெரியுமா, புலவர் அவர்களே? இந்த மடலினைப் பொறுத்துச் சில அந்தரங்கச் செய்திகளை யெல்லாம் தங்களிடம் சொல்லி அனுப்பிட வேண்டியுள்ளது.''

''ஏன்? மடலிலே மன்னரின் உடல்நிலை பற்றிய செய்தி வேறு ஏதேனும் இடம் பெற்றுள்ளதா?''

'அங்ஙனம் இடம் பெற்றிடாததுதான் என்னைப் பல வகையான சிந்தனைகளுக்கு இலக்காக்கியுள்ளது. புலவர் அவர்களே! நெடுமாறன் இங்கே வந்து நுழைந்திடும் பொழுது ரோமாபுரியிலிருந்து தூதுவர் ஒருவர் வந்திருப்பதாகக் கூறியதைக் கேட்டீர்கள் அல்லவா?''

''ஆம், அரசே?''

''ஆனால், அதைப் பற்றிய குறிப்பே இந்த மடலினில் இல்லை. பெருவழுதி அவர்களே தம் கைப்பட இதனை வரைந்திருந்தால், அந்த இன்றியமையாத செய்தியினைக் கண்டிப்பாகத் தெரிவித்தே இருப்பார். ஆட்சித் துறைத் தலைவர்களுள் ஒருவரான 'திருமுகம் எழுதுவோ'ருக்கு அயல்நாட்டுத் தூதுவர் ஒருவர் நம்நாட்டுக்கு வந்துள்ள நிகழ்ச்சியின் அருமை புரியாதிருக்கலாம். அல்லது சோழ நாட்டுக்கோ, சேர நாட்டுக்கோ அதனைப்பற்றித் தெரிவித்தல் கூடாதென்று தவறாகவும் அவர் கருதியிருக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை, ரோமாபுரி மாமன்னர் தூதுவரை அனுப்பியுள்ளமை, பாண்டிய நாட்டுக்கு மட்டுமே கிட்டிய பெருமையாக நான் கருதிடவில்லை. சேர, சோழ, பாண்டியர் ஆளும் முப்பெரு நாடுகளும் அடங்கிய தமிழ்நாடு முழுமைக்குமே கிட்டிய பெருமையாகவே எண்ணிப் பெருமிதம் கொள்கிறேன். நானே, ரோமாபுரிக்கு ஒரு தூதுவரைத் தமிழகத்தின் சார்பில் அனுப்பி வைத்திட எண்ணிக் கொண்டிருந்தேன். ஏனோ, இருங்கோவேள் தந்திட்ட தொல்லைகளாலும், வேறு சில சிக்கல்களினாலும் என் எண்ணத்தினைச் செயற்படுத்திட இயலாது போயிற்று. இப்போது அந்த முதல் வாய்ப்பு, பாண்டிய நாட்டினுக்கு வந்துள்ளது. அதனைச் சரியாக அவர்கள் பயன் படுத்திட வேண்டுமே என்பதுதான் எனக்கு இப்போது கவலையாக உள்ளது. ஏன் தெரியுமா?''

''ஏன் அரசே?''

''பாண்டிய நாட்டிலிருந்து ரோமாபுரிக்குச் சென்றிடக் கூடிய தூதுவர், அரசியல் அறிவு மிக்கவராக இருந்தால் மட்டும் போதாது! நம்முடைய பழம் பெருமையினையெல்லாம் நன்கு பறைசாற்றிடவல்ல நாநயமும் கூர்மதியும் கொண்டவராக இருத்தல் வேண்டும். கிரேக்கப் பேரரசர் அலெக்சாந்தர் வடபுலத்தின்மீது படையெடுத்து வந்ததாலோ என்னவோ, மேனாட்டினர் வடநாட்டினை அறிந்து கொண்ட அளவுக்குத் தென்னகத்தினைப் பற்றி அறிந்திடவில்லையோ என எண்ணும்படியாக இருக்கிறது. இப்போது இங்கிருந்து செல்கிற தூதுவர், இந்நாவலந்தீவின் தொன்மையான வரலாறு தெற்கிலிருந்துதான்

தொடங்குகிறதே அன்றி, வடக்கிலிருந்து அல்ல என்பதனைத் தெளிவு படுத்தினால்தானே அவர்கள் முறையாக நம்மைப்பற்றித் தெரிந்து கொள்ள முடியும்?''

''தாங்கள் மொழிவது சரிதான் மன்னவா! பஃறுளியாறு பாய்ந்திட்ட நிலக்கோளத்தின் நடுப்பகுதிதானே முதன் முதலாக மனிதர்கள் தோன்றிய இடம்! அந்த மனிதர்களும் நம்முடைய முன்னோர்களான திராவிட இனத்தவர்தாமே! அவர்கள் பேசிய திராவிடத் தமிழ்தானே இன்றுள்ள 'செந்தமிழ்' ஆகச் செப்பம் பெற்றுச் சிறந்து விளங்குகிறது! நடுஆசிய மொழிக் கூட்டமான 'சிதியன்குடி'யினைவிட நம் செந்தமிழ் தனித் தன்மை வாய்ந்தது-கனிச்சுவை மலிந்தது என்பதனை நாம் உருவான வகையில் எடுத்துரைத்தால்தானே வெளி நாட்டினர் நம்மைப் பற்றிய உண்மைகளை நன்றாக விளங்கிக் கொள்ள இயலும்! ஆகவே, ரோமா புரிக்குச் சென்றிடும் பாண்டிய நாட்டுத் தூதுவர் தாங்கள் பகர்ந்த தைப்போல வெறும் அரசியல் அறிவு படைத்தவராக இருந்தால் மட்டும் போதாதுதான்! வரலாற்று அறிவினில் வல்லுநராகவும், மொழிப்புலமை யில் முதிர்ச்சியுடையவராகவும்கூட இருந்திடத்தான் வேண்டும். அது மட்டுமா? அறிவிலும் ஆற்றலிலும் எத்துணைதான் நிறைந்து நின்றிட்ட போதிலும், நம்முடைய மொழி-இன-நாட்டு நலன்களில் உள்ளார்ந்த பற்று, நம்பிக்கை, அக்கறை அனைத்தும் இல்லாதவராக இருந்திட்டால் அத்தகைய தூதுவரால் நமக்கு எந்தவிதப் பயனுமே ஏற்படாது.''

''அதனால்தான் புலவர் அவர்களே, எல்லாவற்றிற்கும் பொருத்த மான ஒருவரைப் பெருவழுதிப் பாண்டியர் மிகுந்த எச்சரிக்கையோடு தேர்ந்தெடுக்கும் வண்ணம் தாங்கள் முன்னின்று அவருக்கு ஆய்வுரை வழங்கிட வேண்டுமென்று நான் விழைந்தேன். ஆமாம்! தாங்கள் அறிந்த அளவிலே பாண்டிய நாட்டவருள் யாரைத் தகுதி மிக்கவராகக் கருதுகிறீர்கள்?''

''எனக்கென்னவோ, இளவரசர் இளம்பெருவழுதியே எல்லாவற் றுக்கும் பொருத்தமானவராகப் புலப்படுகிறார். ஆனால், பெருவழுதிப் பாண்டியர் வேறு யாரை எண்ணிக் கொண்டிருக்கிறாரோ?''

''எனக்கும், இளம்பெருவழுதி சிறந்த தூதுவராகத் திகழத் தக்கவர் என்றே தோன்றுகிறது. ஆனால், அவர் தாமரையின் மீதுள்ள மயக்கத்தில் எங்கே அலைந்து கொண்டிருப்பாரோ தெரியவில்லை?''

''ஆம் மன்னவா! அதுதான் எனக்கும் என்ன செய்வது என்று புரியவில்லை. எவ்வாறாயினும் பாண்டிய வேந்தரை நம் இருவருடைய கருத்தினுக்கும் இசையுமாறு செய்திடலாம் என்னும் நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அப்புறம் இன்னொரு வேண்டுகோள், அரசே!''

''என்ன?''

''முத்துநகையையும் என்னுடன் பாண்டிய நாட்டுக்கு அழைத்துச் சென்றிட விரும்புகின்றேன்.''

''அப்படியா? அவள் புகார் நகரிலேயே இருந்தால் அரசியல் சிக்கல்களுக்குத் தீர்வு கண்டிடுவதில் எனக்குத் துணை புரிவாள் என்றல்லவா எண்ணினேன்? ம்... ஆனால் இப்போது அவளுக்கு ஏற்பட்டுவிட்ட மன அதிர்ச்சிக்கு வெளிநாடுகளுக்குச் சென்று வருவதும் நல்லதுதான். சரி; அழைத்துச் செல்லுங்கள்!'' என்றான் கரிகாலன்.

நெடுமாறன் தன் மறவர்களுடன் முதல்நாள் மாலையே புரவிகள் மீதேறி மதுரை மாநகருக்குப் புறப்பட்டு விட்டான். மறுநாள், நிலந்தெளிந்திடும் நேரத்தில், ஒரு சிறு தேரினில் புலவர் காரிக்கண்ணனார், முத்துநகை, செழியன் ஆகிய மூவரும் கிளம்பினர்.

இந்த நெடும்பயணம் முத்துநகையின் துயர்மேகம் சூழ்ந்த உள்ளத்திற்கு அயர்வினை நீக்கிடும் அருமருந்தாகவே அமைந்து விட்டது. வழி நெடுகிலும், எழிலைப் பொழிந்திடும் இயற்கைக் காட்சிகள், அவளது இதயத்திற்குக் குளிர்ச்சியைக் கொடுத்தன. மகிழ்ச்சியை அளித்தன!

பாண்டிய நாடு கடல்வளம் மட்டுமன்றி மலை வளமும் பூண்டதல்லவா? விண்ணிலே மிதந்தோடும் கருமுகில்களைப் போலவும், மலைக்குன்றுகள் ஆங்காங்கே படுத்துக் கிடந்த வண்ணம், எத்தகைய இடர்வரினும், மலைவுறா மனங்கொண்ட மனிதர்களை நினைவுபடுத்தின.

குன்றுகளை அடுத்த பள்ளத்தாக்குகளில் பச்சைப் பசேல் என்னும் செந்நெற் பயிர்கள். இடையிடையே அதில் சந்தன மரங்கள் நெடிதோங்கி நிழல் பரப்பின. நெல் வயல்கள் மட்டுமின்றி. இஞ்சி, மஞ்சள் செடிகளும் விழிகளுக்கு விருந்தளித்தன.

அது முசுண்டைக் கொடிகள் பூத்திடும் காலம் போலும். அவற்றிலே வெள்ளித் திருகாணிபோல் பூக்கள் மலர்ந்து பாறைகளிலெல்லாம் பால் விரித்தாற் போன்று சிதறிக் கிடந்தன. அவற்றின் நடுநடுவே ஓடிய பீர்க்கங் கொடிகளிலோ தங்கப் பில்லாக்காகத் தகதகக்கும் மஞ்சள் மலர்கள். செங்கொன்றைப் பூக்களும் பவளமணிகளை நினைவூட்டிப் பூத்துக் குலுங்கின.

மதுரை மாநகரை நெருங்க நெருங்க, முத்துநகையின் மூட்டம் போட்டிருந்த மனநிலை-வாயைத் திறந்திடாத அமைதிப் போக்கு - அவளைவிட்டு முற்றிலும் விடைபெற்று விட்டது. ஏதோ புதிய உலகினில் அடிவைத்தாற் போல அவளது இதயமே இதழ்கள் அவிழ்ந்திட்ட மலராக மாறிவிட்டது. ஒவ்வொரு பகுதியினைத் தங்களுடைய சிறுதேர் கடந்திடும் பொழுதும், 'அது என்ன குன்று அண்ணா? - இது என்ன சுனை

அண்ணா?... இது என்ன ஊர், அண்ணா?' என்றெல்லாம் செழியனை நச்சரிக்கத் தொடங்கி விட்டாள் அவள். அவனும் சளைக்காமல் அவள் வினவியவற்றுக்கெல்லாம் விடையளித்துக் கொண்டே வந்தான். தன் சொந்த மண்ணிடம் உண்மையான பற்றுக் கொண்ட எவனுக்கும் அதன் வற்றாத வளத்தினையும் வரையில்லாப் பெருமையினையும் பிறரிடம் சொல்லிச் சொல்லிப் பூரிப்பதில் சலிப்பா ஏற்படும்?

பறம்பு மலையினைக் கடந்து சென்றிடும் பொழுது முத்துநகை செழியனை நோக்கிச் சொன்னாள்:

''சோழநாட்டினை வறுமையில்லா நாடு என்று சொல்லிப் பெருமிதப்படுவோம் நாங்கள். ஆனால், இங்கே வந்த பின்னரோ அதற்கும் ஒரு வகையில் வறுமையுண்டு என்பதனை நான் உணர்கின்றேன்.''

''எதனை வைத்து அப்படிச் சொல்கிறாய்?'' என்று கேட்டான் செழியன்.

''உறையூரையொட்டிய மிகச் சிறிய பகுதிகளைத் தவிர இந்தப் பாண்டிய நாட்டினைப் போல் மிகப் பெரிய மலைவளம் சோழநாட்டுக்கு இல்லை அல்லவா?''

''நீ புகல்வதும் உண்மைதான். ஆனால் சேரநாடு இதனைவிட மலைவளம் மிகுந்தது.''

''அப்படியா? எனக்குத் தெரியாது; நான் அங்கே போனதே இல்லை. இந்தப் பாண்டிய நாட்டுக்கும், விவரம் புரிந்த பின்னர் இப்பொழுதுதானே முதன் முறையாக வருகிறேன்!''

''ஆமாம், செழியா! முத்துநகை பிறந்து ஓராண்டு முடியுந்தறுவாயில் இவள் அன்னையையும், இவளையும் அழைத்துக் கொண்டு ஒரு முறை மதுரைக்கு வந்திருக்கிறேன். அதன் பின்னர் நான்தான் அடிக்கடி இங்கே வருவதுண்டேயன்றி, இவள் அன்னையையோ, இவளையோ அழைத்து வந்ததில்லை'' என்று இடைமறித்துக் கூறினார் காரிக்கண்ணனார்.

''ஆமாம், புலவர் அவர்களே! எங்கள் மன்னருக்குப் 'பஞ்சவர்' என்னும் பெயரும் உண்டு என்பது தங்களுக்குத் தெரியுமா?'' - செழியன் இவ்வாறு கேட்டதும் காரிக்கண்ணனார் மெல்ல நகைத்திட்டார்.

''எனக்கா தெரியாது? குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களையும் கொண்ட நாட்டினை ஆள்வதாலேயே பாண்டிய மன்னனுக்குப் 'பஞ்சவன்' என்னும் பெயர் உண்டாயிற்று.

''நான் ஓர் அறிவிலி! பெரும் புலவராகிய தங்களுக்குத் தெரியாதது என்ன இருக்க முடியும்?'' என்று தனக்குத் தானே சலித்துக் கொண்ட செழியன், குலைகுலையாகக் காய்த்துத் தொங்கும் கமுக மரங்கள் சூழ்ந்த ஒரு பொய்கையருகே வந்ததுமே தேரினை நிறுத்தினான்.

அந்தப் பொய்கை விந்தையான காட்சியினை அளித்தது. இயல் - இசை-நாடகம் என்னும் முத்தமிழ் போல தாமரை, அல்லி, செங்கழுநீர்ப் பூங்கொடிகள் ஆகிய மூன்றுமே அங்கே விரவிக் கிடந்தன. ஒரு துறையிலே வாளிப்பான உடற்கட்டமைந்த கன்னிப்பெண்டிர் நீராடிக் கொண்டிருந்தனர். அதற்கு எதிர்த்துறையிலே இளங்காளையர்கள் மூச்சினைப் பிடித்துக்கொண்டு மூழ்கிக் கிடப்பதிலும், நீச்சலடிப்பதிலும் தங்கள் திறமையைக் காட்டியவண்ணம் விளையாடினர்.

புரவிகள் நீரினைப் பருகி நிமிர்ந்த பின்னர் அவற்றை மீண்டும் தேரிலே பூட்டுவதற்காகச் செழியன் திரும்பிடும் போது - ஆடவர் துறையிலே நீராடிக் கொண்டிருந்த இருவர் உரையாடுவது அவன் செவியிலே தெளிவாக வந்து விழுந்தது.

''மதிவாணா, உனக்குச் செய்தி, தெரியுமா?''

''என்ன செய்தி, அறிவுடை நம்பி!''

''இங்கே தந்தை சாகக்கிடக்கிறார், ஆனால் தனயனோ எங்கே இருக்கிறார் என்றே தெரியவில்லையாம்?''

''நீ யாரைச் சொல்கிறாய்?'

''பெருவழுதிப் பாண்டியரையும் அவர் மகன் இளம் பெருவழுதி யைப் பற்றியுந்தான் சொல்கிறேன். இரண்டு முறை கொற்கைப்பட்டி னத்துக்கு ஆட்கள் போய்த் திரும்பி விட்டார்களாம்; இளவரசரையே காணோமாம்!''

''இது என்ன விந்தையாக இருக்கிறதே! ஒருவேளை பெருவழுதிப் பாண்டியர் இறக்க நேரிட்டால், உடனே பட்டஞ் சூட்டிக் கொள்ளக் கூட அவர் வந்திட மாட்டாரோ?''

''எனக்கும் இதுதான் அச்சமாக உள்ளது. பாண்டிய நாட்டு நிலைமை என்னதான் ஆகப்போகிறதோ தெரியவில்லை'' - அதற்குமேல் அவர்கள் உரையாடியது செழியனின் செவியில் ஏறிடவில்லை.

அந்தக் குடிமக்களுக்கு ஏற்பட்ட அச்சத்தினைவிடப் பன்மடங்கு பெரிய அச்சம் இப்போது செழியனை வாட்டிடலாயிற்று.

அவன், கவலை தோய்ந்த முகத்துடன் புரவிகளைத் தேரினில் பூட்டி ஓட்டத் தொடங்கிய பொழுது - பின்புறமாகத் தடதடவெனக் குதிரைகள் விரைந்து வரும் குளம்படியோசை அவன் காதுகளைப் பிளந்தது.

செழியன் திரும்பிப் பார்த்தான்.

வேப்பமாலை முனையிலே சூட்டப்பெற்ற வேலினைக் கரத்தினில் ஏந்தியவாறே மறவன் ஒருவன் குதிரைமீது விரைந்து வந்து கொண்டிருந்தான்.

அவன் முகத்தினை கண்டதுமே...?

அணை கடந்திடும் மகிழ்ச்சிவெள்ளம் பொங்கிற்று செழியன் மனத்தினில், அந்த மறவன் ஏதேனும் ஒரு நற்செய்தியினை ஏந்தியே வந் திருப்பான் என்னும் நம்பிக்கையும் அவனுக்கு ஏற்பட்டது. இல்லை யென்றால் வேப்பமாலை சூட்டப்பெற்ற வேலினைத் தாங்கி வந்திட வேண்டிய தேவையே இல்லையே?

தங்களது சிறுதேரின் அருகே அவன் நெருங்கியவுடன் குறுக்கே சென்று அவனைத் தடுத்து நிறுத்திட நினைத்திட்டான் செழியன். அந்த மறவனோ அத்தகைய கடினமான பணியினைச் செழியனுக்கு வழங்கி டுவதா என்று கருதியவனைப் போலக் குதிரையைவிட்டுத் தானே கீழே குதித்திட்டான்.

''வணக்கம் அண்ணா! நலமா?'' என்று கேட்கவும் கேட்டான்.

''வணக்கம்... வணக்கம்; நீ இப்போது கொற்கையில் தானே அலுவல் பார்க்கிறாய்?''

''ஆம் அண்ணா; அங்கே இளவரசருக்குத் துணை மெய்க்காவல னாகப் பணியாற்றுகிறேன்!''

''அப்படியா? மெத்த மகிழ்ச்சி! உன்னை முதலில் சந்தித்தபொழுது நீ நன்றாக முன்னேறிவிடுவாய் என்று திண்ணமாகவே நான் எண்ணினேன்.''

''எல்லாமே தங்களுடைய கருணையினால் வந்திடும் பரிசுகள்தானே அண்ணா! தளபதி நெடுமாறர்கூட என்னைப் படையினில் சேர்த்திட முடியாது என்றுதானே முதலில் மொழிந்துவிட்டார்? தாங்கள்தானே அவரை வற்புறுத்தி இசைந்திட வைத்தீர்கள். அந்த நன்றியறிதலை என் உயிர் உள்ளளவும் என்னால் மறந்திட இயலுமா?'.

''அப்படி ஒன்றும் உனக்கு நான் பெரிதாகச் செய்திடவில்லையே வடிவம்பலம்? உன்னிடம் இயற்கையாகவே திறமை இருக்கிறது; நீ முன்னுக்கு வருகிறாய், இடையிலே நான் வேண்டுமானால் சிறு கருவியாகப் பயன்பட்டிருப்பேன். அவ்வளவுதான். மேலும் ஒருவருடைய திறமை இருக்கிறதே. அது உதயசூரியனின் ஒளிக்கதிரைப் போன்றது; பெருந்தூணையே நட்டு வைத்தாலும், நீண்ட சுவரையே

எழுப்பி விட்டாலும் அதன் ஓட்டத்தினை - உயர்வினை - ஆற்றலைத் தடுத்திடவோ, அழித்திடவோ முடிந்திடுமா?''

செழியன் இவ்வாறு பகர்ந்திடும் போதே, தேரினுள் அமர்ந்திருந்த புலவர் காரிக்கண்ணனார் தம் தலையினைச் சற்று வெளியே நீட்டி, ''ஆமாம்; இளவரசர் இளம்பெருவழுதி இப்போது எங்கே? கொற்கைப்பட்டினத்தில் இல்லையா?'' என்று குரல் கொடுத்தார்.

''ஏன், கொற்கையில்தானே இருக்கிறார்? விரைவினில் மதுரைக்கு வந்திடுவார்'' என்றான் வடிவம்பலம்.

''நான் வேறு ஏதேதோ கேள்வியுற்றேனே! தலைநகருக்கு வந்திடு மாறு பாண்டிய வேந்தரிடமிருந்து தகவல் வந்தபொழுது இளவரசர் கொற்கையில் இல்லையாமே?'' என்று வினவினான் செழியன்.

''ஓ அதைப் பற்றிக் கேட்கிறீர்களா? சிறிது காலத்திற்கு முன்னர் கொற்கை நகரிலே 'மாகதி மொழிக்காரன்' ஒருவன் வேண்டுமென்றே மொழிப்பூசலைக் கிளப்பி விட்டான் அல்லவா? அதன் தொடர்ச்சியாகப் பழி வாங்கத் தயங்கிடாத அவன், தன்னந்தனியாக உலவச் சென்றிட்ட நம் இளவரசரைத் தன் ஆட்களை விட்டு மடக்கித் தெற்கு வெள்ளாறு வரை கொண்டு சென்றிருக்கிறான். அந்த வேளையில்தான் தலைநகரிலிருந்து செய்தி வந்தது. ஆனால் அந்த மொழிப் பகைவர்களை முறியடித்து வீழ்த்தி விரட்டி விட்டு வெற்றியோடு கொற்கைக்குத் திரும்பி விட்டார் நம் இளவரசர். அவர் மதுரைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்னும் செய்தியினை முன்கூட்டியே தெரிவித்திடவே என்னை இப்போது அனுப்பி வைத்திட்டார்.''

....அந்த அங்காடிக்காரன் அடாத செயல் பற்றி இப்போது தேரினில் வந்திடுங்காலைதான் புலவர் காரிக்கண்ணனார் மூலம் அறிந்து கொண்டேன். எனக்கோர் ஐயப்பாடு...''

''என்ன அண்ணா?''

''பொதுவாக நம் அங்காடிக்காரர்கள் தங்களிடம் விற்பனைக்குள்ள பண்டங்களைக் குறித்திடும் கொடிகளை நட்டு வைத்தோ. ஆட்டியோ வாங்குவோரைக் கூவி அழைப்பதுதானே வழக்கம்? அந்த 'மாகதி மொழிக்காரன்' மட்டும் ஏன் கொடி எதனையும் பயன்படுத்திடாமல் பலகையிலே தன் அங்காடியின் பெயரை வழக்கமில்லாத வழக்கமாக எழுதிப்,போட்டு வைத்திருந்தான்!''

''அதுதானே அண்ணா, எல்லாருக்கும் புதிராகவும், ஏன் அதிர்ச்சியாகவும் கூட இருந்தது. ஏதாவது ஒரு புதிய முறையினைக் கையாண்டு இங்குள்ள மக்களை வியப்பிலே ஆழ்த்தி அதன் மூலம்

எப்படியாவது தன்மொழியினைப் புகுத்திட...பரப்பிட - வேண்டும் என்கிற ஒரே உள் நோக்கத்தைத் தவிர வேறு என்ன காரணம் இருந்திட முடியும். அவனுடைய வம்புச் செயலுக்கு?''

''ஆமாம் வடிவம்பலம்; நீ புகல்வதும் சரிதான்; புதுமை என்றாலே பொதுமக்களிடையே ஒரு 'கவர்ச்சி' எற்படுவது இயல்புதானே? ஆழ்ந்து சிந்தித்திடாதவர்களின் அந்த மெல்லிய உணர்ச்சியினைப் பயன்படுத்திக் கொண்டுதான் சில பொல்லாங்குக்காரர்கள் மேன்மை அடைந்திடப் பார்க்கிறார்கள்... ஆனால் இந்த மொழிப் பூசலிலே நம் இளவரசர் உறுதியோடு செயல்பட்டாராமே?''

''ஆம், அண்ணா; அவரைப் போலவே, இன்னொரு வீராங்கனையும் தான் உண்மையான தமிழச்சிதான் என்பதனை மெய்ப்பித்துக் காட்டினாள். நம் தாயகத்தின் தன்மானத்தையும் காப்பாற்றினாள்.''

''நானும் கேள்வியுற்றேன்; புலவர் அவர்கள்தாம் அவளைப் பற்றியும் கூறினார்கள்'' என்று மொழிந்தான் செழியன்.

அவனுடைய முகமோ சட்டென்று கறுத்துவிட்டது கவலை நிழலால்.

இந்நேரம் தாமரை எங்கே இருப்பாளோ, யாரிடம் சிக்கினாளோ, என்னென்ன இடர்களுக்கெல்லாம் இலக்கானாளோ என்றெல்லாம் எண்ணங்கள் முகிழ்த்து அவனது இதயத்தைக் குடைந்தன, ஈட்டியாக!

அவனுடைய அமைதிக்குரிய உட்பொருளை உணர்ந்திடாத வடிவம்பலம், ''சரி, அண்ணா! நான் கிளம்பட்டுமா? இளவரசர் வந்திடும் செய்தியினை நான் விரைவாகச் சென்று மதுரையில் தெரிவித்திட வேண்டுமல்லவா?'' என்று விடை கேட்டான்.

''ஆமாம், ஆமாம், நீ உடனே புறப்படு, இத்தனை நாழிகை உன்னைத் தவக்கப்படுத்தியதே தவறு'' என்றான் செழியன்.

வடிவம்பலம் தன் புரவி மீதேறிக் கடுகிப் பறந்ததும், செழியனும் தன் சிறு தேரினைப் பூட்டி விட்டான்.

''எனக்கு இப்பொழுதுதான் கவலை நீங்கியது. செழியா!'' என்று பெருமூச்செறிந்தார் காரிக்கண்ணனார்.

''ஆமாம், புலவர் அவர்களே! இளவரசர் தலைநகருக்கு வந்திடுவார் என்ற செய்தியினைக் கேட்ட பின்னர்தான் என்னுடைய அச்சமும் அகன்றது'' என்று அவரோடு ஒத்துப் பாடினான் செழியன்.

ஆனால், காரிக்கண்ணனாருக்கு உள்ளூர நிம்மதி மட்டுமல்ல; நகைப்பும்கூட! ஏன் தெரியுமா?

''புகார் அரண்மனையிலிருந்து தாமரை காணாமற் போன செய்தியினை அறிந்ததும், யவனக்கிழவர் வேடத்திலிருந்த இளம்பெருவழுதி அவளைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காக எங்கேனும் அலைந்திருக்கலாம். அதனால் குறித்த காலத்தில் கொற்கைப் பட்டினத்தை அடைய முடியாது போயிருக்கலாம். இதற்குள் மதுரையிலிருந்து மன்னரைப் பற்றிய செய்தி வந்திருக்க வேண்டும். அந்த நேரத்தில், தான் கொற்கையில் இல்லாமல் போனதற்குப் பொருத்தமான - மற்றவர்கள் நம்பும்படியான - ஒரு காரணம் வேண்டாமா? அதற்குத்தான் அந்த 'மாகதி' மொழிக்காரனைத் தனக்கு வாய்ப்பாக அவர் பயன்படுத்தி இருக்கலாம்?'' என்று எண்ணிய அளவில்தான் காரிக்கண்ணனாருக்கு நகைப்பு ஏற்பட்டது.

இன்னொன்றும் இங்கே குறிப்பிடத்தக்கதாகும். கொற்கையிலே புகைந்திட்ட மொழிப்பூசல் பற்றி செழியனிடம் புகன்றிட்ட புலவர் அவர்கள், அதிலே இளம்பெருவழுதியும் தாமரையும் எங்ஙனம் முனைந்து ஈடுபட்டுத் தங்கள் தாய்மொழியிடம் நன்றி மிகுந்த சேய்களாக நடந்து கொண்டனர் என்பதனை நவின்றிட்டாரே அன்றி, இளம்பெருவழுதி தன் இதயத்தினைத் தாமரையின்பால் பறி கொடுத்தமை பற்றியோ, அதற்காக அவன் யவனக் கிழவர் வேடம் புனைந்தது பற்றியோ எதுவுமே பகர்ந்திடவில்லை.

அந்தச் சிறிய தேர் - முத்துநகை, காரிக்கண்ணனார், செழியன் ஆகிய மூவரையும் சுமந்திட்ட அந்தச் சிங்காரமான தேர் - பசுமையான பொழில்கள் புடைசூழ்ந்த வையை ஆற்றினைக் கடந்து மதுரை மாநகரினுள்ளே நுழைந்திட்ட பொழுது பகலவன் தன் முதுமைப் பருவத்தை நோக்கி வெகு வேகமாக விழுந்த வண்ணம் இருந்தான்.

முத்துநகைக்கோ, தங்கத் தமிழை வளர்த்திடும் - சங்கந் தழைத்துச் சிறந்திடும் - நான்மாடக்கூடலின் பேரழகினைக் கண்டிட வேண்டும் என்னும் பேராவல்! அவள் தேரினுள் இருந்தவாறே தலையை வெளியே நீட்டி நகரின் எழிலைத் தன் விழிகளால் பருகிட முனைந்தாள்.

குன்றுகள் படுத்துக்கிடப்பதைப் போன்று நீண்ட மதில்கள்.

பலகாலம் நெய் தடவப்பட்டதால், களிற்றின் வயிற்றினைப் போல் கறுத்திட்ட நெடிய நிலைக்கதவுகள் -

அந்த மதிலின் கதவுகளைத் தாண்டி உள்ளே புகுந்திட்டால் நீரோடும் பேராறுகளைப் போல் நீண்டு கிடக்கும் அகலமான தெருக்கள்-

அந்தத் தெருக்களிலே சுறுசுறுப்பாகப் பாய்ந்திடும் மனித வெள்ளம்.

ஆற்றிலே இலை தழைகளும் பூவிதழ்களும் மிதந்து வருகின்ற மாதிரி அந்த மனித வெள்ளத்தின் இடையிடையே ஊர்ந்து சென்றிடும் யானைத் தேர்கள், குதிரைத் தேர்கள், தெருவின் இருமருங்கிலும்

விண்ணளாவி நின்றிடும் அழகான மாளிகைகள், அவற்றின் சாளரங்களைத் தழுவி முத்தமிடும் பூங்கொடிகள் இன்னோரன்ன காட்சிகளெல்லாம் முத்து நகையின் உள்ளத்திலே உவகைத் தேனைச் சொரிந்தன.

தேர் இப்பொழுது அங்காடிகளின் பக்கமாகத் திரும்பிற்று. பூம்புகாரிலுள்ள நாளங்காடி - அல்லங்காடிகள் எவ்வாறு தோற்றமளிக் குமோ அவ்வாறே மதுரை அங்காடிகளும் பொலிவோடு விளங்கின. ஆங்காங்கே கண்ணைக் கவரும் வண்ணக்கொடிகள் காற்றிலே அசைந்தாடி, இன்ன இடத்தில் இன்னபொருள் விற்கிறது என்பதனைக் குறிப்பால் உணர்த்திய வண்ணம் இருந்தன. அவை மட்டுமின்றிக் கோவில்கள் விழாக்களைப் புலப்படுத்திடும் கொடிகள்; போர்க்களத் திலே பெற்ற வெற்றியினை அறிவித்திடும் கொடிகள், அறிஞர்களால் ஏற்றி வைக்கப்பெற்ற கல்விக் கொடிகள், கொடை-தவம் ஆகியவற்றை உணர்த்திடும் தியாகக் கொடிகள் முதலியவையும் அருவிகள் போல் அசைந்தாடின.

ஒரு திருப்பத்திலே பறந்து கொண்டிருந்த கொடி, ‘களிப்பளிக்கும் கள் விற்கும் அங்காடி இங்கேதான் இருக்கிறது’ என்று கூறாமல் கூறியது.

அந்தக் கள் அங்காடியைக் கடந்து தேர் நகர்ந்திட்ட பொழுது, தெருவோரமாக இரு திண்டோள் மறவர்கள் தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தனர்.

பனம்பழம் போலக் கறுத்த மேனியினையுடைய அவர்களது கண்களோ நெருப்புத் துண்டுகளாகச் சிவப்பேறியிருந்தன. நட்டுவா க்கலி போல் நறுக்கி முறுக்கி விடப்பட்ட தங்கள் மீசையைத் தடவிய வாறே அவர்கள் ஏதேதோ உளறிச் சென்றனர்.

''உனக்குச் சேதி தெரியுமா? ரோமாபுரியிலிருந்து தூதுவர் வந்திருக்கிறாரே, அவருக்குப் பதிலாக நம் பாண்டிய நாட்டின் தூது வராகத் தளபதி நெடுமாறன்தான் செல்லப்போகிறாராம்!''

''அப்படியா! இளவரசர் இளம்பெருவழுதி போகக் கூடும் என்றல்லவா நான் கேள்விப்பட்டேன்?''

''அவரைத்தான் கொற்கையில் காணோமாமே?''

''வேடிக்கையாக இருக்கிறதே! எங்கே போயிருப்பார் இளவரசர்?'

''யார் கண்டார்கள்? அவருக்குக் கடலிலே பயணம் போவதென்றால் கரை கடந்த மகிழ்ச்சி, ஒரு வேளை, எங்காவது கரை சேர்ந்திட மனமே இல்லாமல், கடலிலேயே விளையாடிக் கொண்டிருக்கிறாரோ என்னவோ?''

கள்ளுண்ட களிப்பினில் மிதந்த அவர்கள் கற்பனையால் உரையாடுவதைக் கேட்டுச் சிரிப்புத்தான் வந்தது செழியனுக்கு.

''என்ன புலவர் அவர்களே! அவர்கள் உளறிச் செல்வதைக் கேட்டீர்களா?'' என்று தேரினை ஓட்டியவாறே காரிக்கண்ணனாரைத் திரும்பிப் பார்த்திட்டான் அவன்.

''கேட்டேன்; கேட்டேன், ஆனால் அவர்கள் உளறலிலும் ஓர் உண்மை ஒளிந்து கிடக்கிறது'' என்றார் புலவர்.

''என்னப்பா அது?'' என்று ஆர்வம் ததும்பக் கேட்டாள் முத்துநகை.

''ரோமாபுரிக்குத் தூதுவராகச் சென்றிடும் ஆசை, தளபதி நெடுமாறருக்கும் ஏற்பட்டிருக்கிறது என்பது தான் அந்த உண்மை. அத்துடன் இன்னொரு ஆறுதல் தரக்கூடிய காட்சியினையும் நான் காண்கிறேன்.''

''ஆறுதல் தரக்கூடிய காட்சியா?'' என்று வியப்புடன் கேட்டான் செழியன்.

''ஆம் செழியா! நாம் கவலையுற்று வருந்திய அளவுக்குப் பெருவழுதிப் பாண்டியரின் உடல்நலம் அவ்வளவு கடுமையாக நலிவடைந்திடவில்லை; சற்றுத் தேறியும் இருப்பார் என்றே தோன்றுகிறது. இல்லையென்றால், மதுரை மாநகரினை இந்நேரம் துயர இருள் கவ்வியிருக்காதா? இத்துணை ஆரவாரமாக, ஆடம்பரமாக - மக்கள் இயங்கிடுவதைத்தான் நாம் கண்டிட முடிந்திருக்குமா?''

''தாங்கள் மொழிவது சரிதான் புலவர் அவர்களே! என் மனத்திற்கும் மன்னர் நலம் பெற்றிருப்பார் என்றே படுகிறது'' என்றவாறே செழியன் தேர்ப்புரவிகளை மேலும் முடுக்கிவிட்டான்.

அவர்கள் மூவரும் அரண்மனையில் நுழைந்திடும் பொழுது நன்றாக இருட்டிவிட்டது.

அந்திப் போதில் மட்டுமே மலர்ந்திடும் பிச்சிப் பூக்களைச் சூடிய அணங்குகள், நெய் நிறைந்த 'பாவை விளக்கு'களில் நீண்ட பெரிய திரிகளைத் தோய்த்து எரிய விடுவதில் முனைந்து ஈடுபட்டிருந்தனர். அந்த விளக்குகள் யாவும் அழகான வேலைப்பாடுகள் உடையவை.

''இவை என்ன புதுமாதிரியான விளக்குகளாக இருக்கின்றனவே!'' என்று வியந்திட்டாள் முத்துநகை, அங்கே திரியினை எரிய விட்டுக் கொண்டிருந்த ஒரு சேயிழையை நோக்கி இதுபற்றிக் கேட்டாள்.

''ஆமாம்; இவை யவன நாட்டுப் பக்கத்திலிருந்து வந்தவை. அண்மையில் ரோமாபுரியிலிருந்து தூதுவர் ஒருவர் நம்நாட்டுக்கு வந்திருக்கிறார் அல்லவா? அவர் நம் பாண்டிய வேந்தருக்கு அளித்திட்ட பல பரிசுப்பொருள்களில் இந்தப் பாவை விளக்குகளும் இருந்தன'' என்று பதில் வந்தது.

அந்த விளக்குகளின் எழிலைப் பருகியவாறே, பாண்டிய மன்னன் படுத்திருக்கும் தனிக் கூடத்திற்குச் சென்றனர் மூவரும்.

அங்கே, நாற்பது ஆண்டுகள் முதிர்ந்த யானையின் தந்தத்தால் செதுக்கப்பட்ட பூவேலைகள் நெளிந்தோடும் நீண்ட கட்டிலில் அன்னத்தின் அடிவயிற்றுத் தூவிகளாற் செய்திட்ட தலையணைகளின் அரவணைப்பில் அயர்ந்து படுத்திருந்தான் பெருவழுதிப பாண்டியன்.

''மன்னவா!'' என்று காரிக்கண்ணனார் குரல் கொடுத்திடவும் அவனுடைய இமைக்கதவுகள் திறந்து கொண்டன; புலவருக்கு மரியாதை தரும் பொருட்டு எழுந்திருக்கவும் முயன்றிட்டான் அரசன்.

ஆனால் காரிக்கண்ணனார்,

''வேண்டாம் அரசே! எதற்கு எழுந்திருக்கிறீர்கள்?'' என்று அவனது கரத்தினைப் பற்றித் தடுத்திட்டவாறே கட்டிலை ஒட்டிக்கிடந்த இருக்கை யொன்றில் அமர்ந்து கொண்டார்.

மன்னன் தலையினைத் திருப்பிடாமல் பார்ப்பதற்கு வாய்ப்பாகப் புலவரின் பின்னால் வந்து நின்றனர் செழியனும், முத்துநகையும்.

அவர்கள் மூவரையும் கண்டதும் பெருவழுதியின் முகத்திலே தனியானதொரு மலர்ச்சி ஒளிர்ந்தது. முறுவல் இழையோடிற்று.

''தற்போது தங்கள் உடல்நலம் எவ்வாறுள்ளது மன்னவா?'' என்று பரிவுடன் கேட்டார் காரிக்கண்ணனார்.

''தேவலாம்; ஒன்றும் கவலைப்படும்படியாக இல்லை'' என்று மென்குரலில் பகர்ந்தான் பாண்டிய மன்னன்.

''நல்லவேளை;கரிகாலர் உட்பட நாங்கள் எல்லாருமே பதறியே போய்விட்டோம். சோழ மன்னருக்குத் தங்களை உடனே வந்து பார்த்திட வேண்டும் என்கிற துடிப்புத்தான். ஆனால் எதிர்பாராதவிதமாக ஏற்பட்டுவிட்ட சில சிக்கல்களினால் நகர முடியாத நிலை. எனினும் தங்கள் உடல் நலம் பற்றி ஒவ்வொரு நாளும் மடல் விடுத்திட வேண்டும் என்று கண்டிப்பான அன்புக் கட்டளை இட்டிருக்கிறார் எனக்கு.''

''அவ்வாறெல்லாம் கவலைப்படும் அளவுக்கு எனக்கு ஒன்றும் ஆகிவிடவில்லை. ஆனால் ஒருநாள் என்னையறியாமல் மயக்கமுற்று விழுந்திருக்கிறேன். அதைக் கண்டு அரண்மனையிலிருந்த அத்தனை பேருமே நடுங்கிப் போயிருக்கிறார்கள். அந்த அச்சத்தின் விளைவாகத் தான் நம்முடைய அமைச்சர்கள் முதலானவர்கள், எச்சரிக்கையாக இருந்திட வேண்டுமே என்கிற போக்கில், பதற்றப்பட்டுக் கரிகாலருக்கும் 'திருமுகம்' தீட்டியிருக்கிறார்கள். பரவாயில்லை. அதுவும் ஒருவகையில் நல்லதாகத்தான் முடிந்தது. இல்லையென்றால் உங்களையெல்லாம் இப்படி ஒரே சமயத்தில் சந்தித்து மகிழ்ந்திடும் வாய்ப்புக்கிட்டுமா?'' என்று புன்னகை புரிந்திட்ட மன்னன் முத்துநகையை நோக்கி, ''என்னம்மா? நலந்தானா? பல ஆண்டுகளாக உன்னை மதுரைக்கு அழைத்து வருமாறு பன்னிப் பன்னிக் கூறினேன்; புலவர் கேட்டிட வில்லை. இப்போதாவது அழைத்து வந்தாரே. அதற்காக அவருக்கு நன்றி சொல்லிடத்தான் வேண்டும்!'' என்றான். பின்னர் செழியனை நோக்கினான். ''என்ன செழியா, நலந்தானே? இருங்கோவேள் ஆட்களிடம் சிக்கி எல்லையில்லாத தொல்லைகளுக் கெல்லாம் இலக்காகி விட்டாய் அல்லவா? ஆனால் நீயும் முத்துநகையும் இல்லாதிருந்தால் அந்த இருங்கோவேளை இத்துணை விரைவில் வீழ்த்தி இருக்க முடியாது!''

பாண்டிய வேந்தனின் இந்தப் பாராட்டுரையால் செழியன் வாய் திறந்து எதுவுமே பேசிட இயலவில்லை.

ஆனால் காரிக்கண்ணனாரோ, பெருவழுதியோடு சேர்ந்து கொண்டு தாமும் புகழ் மழை பொழிந்தார்.

''தாங்கள் மொழிவது முற்றிலும் உண்மைதான் அரசே! இருங்கோவேள் வீழ்ந்தது ஒருபுறம் இருக்க கரிகாலன் உயிர் தப்பியதே செழியனின் திறமைமிக்க திட்டங்களினால்தானே! அதற்காகச் சோழநாடே செழியனுக்கு அளப்பரிய கடன்பட்டிருக்கிறது.''

''போகிறது; சோழநாட்டை மூட்டம் போட்டிருந்த அரசியல் சிக்கல்களெல்லாம் ஒருவாறு அகன்றுவிட்டன. அங்கே வானம் வெளி வாங்கிவிட்டது. ஆனால் இங்கேயோ?...''

''ஏன் அரசே அப்படிச் சொல்கிறீர்கள்? இங்கே அவ்வாறெல்லாம் சிக்கல்களுக்கு இடம் இருப்பதாகத் தெரிந்திடவில்லையே?''

'' ஏன் இல்லை? முதலில் என் மகன் இளம்பெருவழுதியை எடுத்துக் கொள்ளுங்களேன்! என் உடல் நலம் குன்றிவிட்டது என்று கேள்வி யுற்றதும் எங்கோ வெகு தொலைவில் உள்ள பூம்புகாரிலிருந்து கூடத் தாங்கள் எல்லாரும் வந்துவிட்டீர்கள். அவனோ, இதோ பக்கத்திலுள்ள கொற்கையிலிருந்தும்கூட என்னை வந்து இன்னும் பார்த்திட முடியவில்லை. என்ன செய்வது?''

''தவிர்க்க முடியாத சூழ்நிலைகளின் காரணமாகத்தான் அவரால் இதுகாறும் வரமுடியாது போயிருக்க வேண்டும் என்று நான் நம்புகிறேன்.''

''தாங்களும் நம்பலாம், நானும் நம்புகிறேன். புலவர் அவர்களே! ஆனால் பொதுமக்கள் நம்பிட வேண்டுமே! அவர்கள் நம்பிடாத வகையில் பொய்ச் செய்திகளை பரப்பி, அவன் ஒரு பொறுப்பற்றவன் என்கிற தவறான ஒரு கருத்தினை நாடெங்கும் தவழவிட்டு விட்டானே தளபதி நெடுமாறன்! அதற்கு என்ன சொல்கிறீர்கள்!''

''ஆமாம்; அவர் ஏன் அப்படிச் செய்திட வேண்டும்? அதனால் அவருக்கு என்ன நன்மை?''

''இளம்பெருவழுதி பொறுப்பில்லாதவன் என்னும் அவப்பெயரை மக்கள் மனதிலே அழுத்தமாகப் பதித்தால் புதிய பொறுப்புக்களை ஏற்றிடும் நிலை வரும்பொழுது அவைகளுக்கு அவன் தகுதியானவன் அல்லன் என்று மக்களைக் கொண்டே எதிர்ப்புக்குரல் எழுப்பிடலாம், அல்லவா? அதற்காகத்தான்! ஏன், இப்போது ரோமாபுரிக்குப் பாண்டிய நாட்டிலிருந்து ஒரு தூதுவரை நாம் அனுப்பிட வேண்டிய நிலைமையுள்ளதே! அதற்கு, எங்கே நான் இளம்பெருவழுதியைத் தேர்ந்தெடுத்து விடுவேனோ என்கிற அச்சம்; அவன்மீது எனக்கு

ஆத்திரம் ஏற்பட்டு அவனை ஒதுக்கி விட்டேனானால் தன்னைத் தவிர வேறு தகுதியான ஆளே இந்தத் தென்பாண்டிச் சீமையிலே இல்லை என்கின்ற தன்னம்பிக்கை; நப்பாசை.''

''யாருக்கு?'' என்று வியப்புடன் வினவினார் காரிக்கண்ணனார்.

''எல்லாம் நம் தளபதி நெடுமாறனுக்குத்தான்!''

''அப்படியா! வருகிற வழியில், கள்-அங்காடிக்கு அருகே இரு குடிகாரர்கள் பேசிக்கொண்டு போனது சரிதான் போல இருக்கிறது! நெடுமாறருக்கு இத்தனை உள் எண்ணங்கள் இருந்திடக்கூடும் என்று என்னால் கற்பனை கூடச் செய்திட முடியவில்லையே! படைத்தளபதி என்கிற ஒன்றைத் தவிர அப்படி என்னதான் அவருக்குத் தனித்திறமை இருக்கிறது. நம் இளவரசரை விட?''

''இளம்பெருவழுதியே கிடக்கட்டும், புலவர் அவர்களே! ரோமாபுரி நாட்டுக்குச் செல்லும் பாண்டிய நாட்டுத் தூதுவர் என்றால் அது என்ன சாதாரணப் பொறுப்பா? அதற்கு ஒருவரை 'தேர்வு' செய்கிறோம் என்றால் எவ்வளவு விழிப்போடு நாம் இருந்திட வேண்டும். நெடுநெடுவென்று வளர்ந்திருந்தாலோ அல்லது அடியாட்களை வைத்து மிரட்டும் ஆணவம் இருந்தால் மட்டும் போதுமா?''

''அந்தப் பொறுப்பான பதவிக்கு ஒருவரை நாம் தேர்ந்தெடுக்கிறோம் என்றால், அவர் நல்லவரா, வல்லவரா? எல்லாருடனும் இணைந்து பழகிடும் இனிய இயல்புகள் உள்ளவரா, நம்பிக்கைக்கு உரியவரா, வம்பு வழக்குகளுக்குப் போகாதவரா, நாணயம் கொண்டவரா, பிறநாட்டுத் தலைவர்களைக் கவரும் அளவுக்கு நாநயமும் பூண்டவரா, பகுத்தறிவு நிறைந்தவரா, பண்பாட்டில் சிறந்தவரா, தரணியெல்லாம் வியந்திடும் வண்ணம் தமிழைப் பரப்புகின்றவரா, இல்லை-தமிழால் பிழைத்துக் கொண்டு, தமிழைப் பழித்துக் கொண்டே தன் வயிற்றை மட்டும் நிரப்புகின்றவரா, அல்லலுறும் மக்களுக்காக அயராது உழைப்பவரா, இல்லை-செல்வர்களின் அரவணைப்பில் செழிப்பாக வளர்ந்து கொண்டே 'ஏழைகளின் தோழன்' எனப் போலி வாழ்க்கை வாழ்பவரா, தாய் நாட்டைக் காப்பவரா, தன்மானந் தழைப்பவரா, பரந்த அறிவு பெற்ற - பல கலைகளிலும் வல்லுநரா என்றெல்லாம் நாம் ஆழ்ந்து சிந்தித்திட வேண்டாமா?''

''தாங்கள் புகல்வது சரிதான் அரசே! ஆனால் இத்துணைத் தகுதிகளையும் படைத்தவராகத் தாங்கள் யாரைக் கருதுகிறீர்கள்?'' என்று கேட்டார் காரிக்கண்ணனார்.

''அவர் யார் என்று சொன்னால் தாங்கள் நம்பக்கூட மாட்டீர்கள். சொல்லட்டுமா?'' என்று சிரித்திட்டான் பெருவழுதிப் பாண்டியன்.

ஆனால் அவன் வாயைத் திறந்திடுமுன் ஒரு நெடிய உருவம் அந்தக் கூடத்தினுள் நுழைந்தது.

அந்த நெடிய உருவம் வேறு யாரும் அல்ல; ஒரு சமணத் துறவியே ஆவார்!

வெள்ளை வெளேர் என்று விழிகளைப் பறித்திடும் வகையினில், தும்பைப் பூவினும் துல்லியமான வெண்துகில் உடுத்தியிருந்தார் அவர். அவர் தம் பரந்த முகத்தினிலோ சரஞ்சரமாக அரும்பு கட்டியிருந்தன வேர்வை முத்துக்கள். அத்துடன், புலியைக் கண்டு மிரண்டோடி வந்திட்ட முயலைப் போல அவரது உடல் தடதடவென்று ஆடிற்று; மேல் மூச்சு - கீழ் மூச்சு வேறு வாங்கிற்று.

பெருவழுதிப் பாண்டியனை நோக்கிக் கரங்கூப்பித் தொழுதிட்ட அவர், ''பாண்டிய வேந்தே! தங்கள் நாட்டிலே இனி நாங்கள் நடமாடவே முடியாதுபோல் இருக்கிறதே! பௌத்த சமயத்தினர் எங்களைப் பழிப்பது போதாது என்று பலி வாங்கவும் தலைப்பட்டு விட்டனர். எங்கள் ஊர்வலங்களுக்கு ஊறு செய்கின்றனர்; எங்கள் சமணக் கோவிலுக்கருகிலேயே தங்கள் சங்கத்தினைக் கூட்டி, எங்கள் தத்துவங்களையெல்லாம் சாடுகின்றனர்; எங்கள் தீர்த்தங்கரர்களையும் திட்டித் தீர்க்கின்றனர்.

எங்கள் எருதுக் கொடியினையும் இழித்துப் பேசுகின்றனர். ஏனென்று கேட்டால் எதிர்த்து அடிக்கவும் வருகின்றனர். தாங்கள் உடனே தலையிட்டு அவர்களுடைய தகாத போக்கினையெல்லாம் தடுத்திடமாட்டீர்களா? அவர்களுடைய அடாத செயல்களையெல்லாம் இப்போதே அறவே களைந்திடாவிட்டால் நாங்கள் அமைதியான முறையில் வாழவே முடியாது. அரசே! வாழவே முடியாது! பிறகு, நாங்கள் அத்தனை சமணர்களும் 'சல்லேகனை' புரிந்து சாவதைத் தவிர வேறு வழியே இல்லை! என்று படபடப்புடன் பொரிந்து தள்ளினார்.

''ஆமாம்; தாங்கள் இப்போது எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று மென்குரலில் கேட்டான் பெருவழுதி.

''பசு மலையிலிருந்துதான், அரசே!''

''பசுமலைதானா? அங்கே பௌத்தர்கள் குறைவுதானே! சமணர்கள் தாமே மிகுதி!''

''ஆட்டு மந்தை எத்துணை பெரிதாக இருந்திட்டால்தான் என்ன? ஒரேயொரு ஓநாய்க்கு ஈடு கொடுத்திட இயலுமா?''

தாக்கப்பட்ட காரணத்தால்தான் துறவியின் வாயிலிருந்து தப்பான வார்த்தைகள் வருகின்றன என்று எண்ணியோ என்னவோ, பாண்டிய

மன்னன் மேற்கொண்டு வினாக்களைத் தொடுத்திடவில்லை. புன்னகை மட்டுமே புரிந்தவனாக சிந்தனையில் ஆழ்ந்திட்டான்.

புலவர் காரிக்கண்ணனாருக்கோ அந்தத் துறவியின் போக்குத் துளியும் பிடித்திடவில்லை. அவருடைய திடீர் வருகையும், படபடப்பான சொற்களும் அருவருப்பையே அளித்தன. என்னதான் நமக்குத் தாங்கிட இயலாத இடுக்கண் என்றிட்ட போதிலும் காவலர்களிடமோ அமைச்சர் களிடமோ வேறு தொடர்புடைய கருமத் தலைவர்களிடமோ முதற்கண் முறையிட்டுக் கொள்வதனை விடுத்து, நோய்வாய்ப் பட்டுள்ளாரே என்பதை ஆய்ந்து பார்த்திடாமல், எடுத்த எடுப்பிலேயே இங்ஙனம் மன்னருக்கு இன்னல் தருகிறாரே என்றும் புலவர் எண்ணிடலானார்.

அவருக்குச் சமணத் துறவியார் மீது எரிச்சல் ஏற்பட்டமைக்கு இன்னொரு காரணமும் உண்டு. ரோமாபுரிக்குத் தாம் அனுப்ப விழைந் திடும் தூதுவர் யார் என்று அரசன் குறிப்பிடப்போகும் வேளையாகப் பார்த்து இப்படிக் குறுக்கே வந்து கெடுத்து விட்டாரே என்பதுதான் அது!

அவருடைய கவனத்தைத் திருப்பிடும் வகையில் முத்துநகை அவர் தம் செவியில் மட்டுமே விழுந்திடும் வண்ணம் மெல்லக் கிசுகிசுத்தாள்.

''இந்தத் துறவி என்னவோ 'சல்லேகனை' என்றாரே, அப்படி யென்றால் என்ன அப்பா?''

''அதுவா? தருப்பைப் புற்களை அடுக்கடுக்காகப் பரப்பி அவற்றின் மீது வடக்குத் திக்கினை நோக்கி அமர்ந்து உண்ணா நோன்பு மேற்கொண்டு உயிர் விடுதலைதான் 'சல்லேகனை' என்பார்கள்.''

''ஓகோ! வடக்கிருத்தல் என்று புகல்வார்களே அது தானா?''

''அதுவேதான்!'' தந்தையும் மகளும் அதற்கு மேல் தங்கள் உரையாடலைத் தொடர்ந்திடவில்லை.

பெருவழுதிப் பாண்டியன் தன்னுடைய சிந்தனை அமைதியிலிருந்து விடுபட்டவனாகத் தன் தொண்டையைக் கனைத்திட்டான்.

''சரி, துறவியாரே! பௌத்தர்களால் தங்களுக்கு என்னதான் இடர் ஏற்பட்டது என்பதனைக் குறிப்பிட்டுக் கூறிட முடியுமா?''

''ஒன்றா இரண்டா? எத்தனையோ இடர்கள் அரசே! ஆனால் இன்றைக்கு நிகழ்ந்ததை மட்டும் இப்போது எடுத்துரைக்கிறேன். அரசே, பசுமலையில் எங்கள் கோவிலுக்கு எதிரேயுள்ள திடலில் பௌத்தர்கள் தங்கள் சங்கக் கூட்டத்தைக் கூட்டினார்கள். அதிலே எங்கள் சமண முனிவராகிய கனகநந்தி அவர்களை எவ்வளவு இழிவாக ஏசிட முடியுமோ அவ்வளவு இழிவாக ஏசினார்கள். எங்ஙனம் பொறுத்திட

முடியும்? எனவே, அவர்கள் கூட்டத்தில் புகுந்து சில வினாக்களை எழுப்பினோம். அதற்காக என்னையும் என்னைச் சார்ந்தவர்களையும் அடித்து நொறுக்கி விட்டார்கள். அத்துடன் கனகநந்தி அவர்களே நேரில் வந்து, தங்களிடம் வருத்தம் தெரிவித்திட வேண்டும் என்று வற்புறுத்திச் சமணக் கோவிலையே முற்றுகையிட்டு நிற்கிறார்கள். எங்கே அவரைக் கொன்று விடுவார்களோ என்ற அச்சத்தின் காரணமாகவே இப்போது தங்களிடம் ஓடோடி வந்தேன்.''

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அங்கே நிலைமை மிகவும் மோசமாக இருக்கும் போல் தோன்றுகிறதே!''

''ஆம் வேந்தே! பசுமலை முழுவதுமே ஒரே கொந்தளிப்பாக இருக்கிறது!'' - துறவியார் இவ்வாறு சொல்லிடவும் செழியன் குறுக்கிட்டான்;

''மன்னவா, நான் ஒன்றைச் சொல்லலாமா?''

''ஓ! தாராளமாகச் சொல்லலாமே.''

''இவர் கூறுவதைப் பார்த்தால் இது சாதாரணச் சிக்கலாகத் தோன்றவில்லை. இரு சமயங்களுக்கும் இடையே இத்துணை கடுமையாகப் பகைமை நிலவுவதற்கு வேறு சில அடிப்படைக் காரணங்களும் இருந்திடல் வேண்டும். எனவே எடுத்த எடுப்பிலேயே அரசர் அளவிலே இந்தச் சிக்கலுக்குத் தீர்வு காண முற்படுவது முறையில்லை என்பதே என் பணிவான கருத்து. முதலில் இவரோ இவரைச் சார்ந்தவர்களோ நம் அறங்கூறு அவையத்திடம் முறையிட்டுக் கொள்ளட்டும். அதற்கு முன்னர் இப்பொழுது உடனடியாக நம் படை வீரர்களை அனுப்பிப் பசுமலை எரிமலை ஆகிவிடாமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்!''

''ஆம், செழியா! நீ மொழிவதுதான் முற்றிலும் சரி. தளபதி நெடுமாறனை அனுப்பி வைப்போமா?'' என்று சிந்தித்த மன்னன், ''ஏன் செழியா! நீயேதான் சில படை வீரர்களை அழைத்துக் கொண்டு பசுமலை நிலைமையை ஒழுங்கு படுத்திவிட்டு வாயேன்!'' என்றான்.

''தங்கள் ஆணை எதுவாயினும் நிறைவேற்றிட நான் என்றுமே காத்திருக்கிறேன் அரசே!'' என்ற அவன், நொடிப்பொழுதினைக்கூட வீணடித்திடாமல் பெருவழுதியிடம் மட்டுமின்றிக் காரிக்கண்ணனார், முத்துநகை இருவரிடமும்கூட விடை பெற்றுக்கொண்டு வெளியேறினான்.

''நன்றி மன்னவா; மிக மிக நன்றி; இவ்வளவு விரைவினில் இத்துணைச் சுறுசுறுப்புடன் தாங்கள் நடவடிக்கை எடுப்பீர்கள் என்று நான் நம்பிடவே இல்லை. எங்கள் அறக்கடவுளான அருகதேவரின் அருளாலே தாங்கள் நெடுங்காலம் வாழ்ந்திட வேண்டும். செழியன் உரைத்திட்டவாறே அறங்கூறு அவையத்திடம் முதலில் எங்கள்

வழக்கினைத் தொடுக்கிறோம். தாங்கள் பிணியுற்ற நிலையில், இரவுப் பொழுதாயிற்றே என்றும் பாராமல், அடியேன் தொல்லை கொடுத்திட்ட போதும் தாங்கள் பொறுமையோடு என் உரைகளையெல்லாம் செவிமடுத்தீர்கள். அதற்காக மீண்டும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று நவின்றுவிட்டுச் சமணத் துறவியும் கூடத்தினை விட்டு அகன்றார்.

''சோழ நாட்டிலிருந்து நீண்ட பயணம் வந்த உடல் அலுப்புக்கூடத் தீர்ந்திடாத நிலையில் மீண்டும் படைப் பணியினை மேற்கொள்வது செழியனுக்கு மிகவும் கடினமாகத்தான் இருக்கும்! அல்லவா?'' என்று பரிவுடன் பகர்ந்திடலானார் காரிக்கண்ணனார்.

அதற்குப் பெருவழுதிப் பாண்டியன், ''என்னசெய்வது புலவர் அவர்களே! செழியனைப் போலப் பொறுப்போடு, உண்மையோடு உழைக்கக் கூடியவர்களை - திறமையோடு செயலாற்றக் கூடியவர்களை - நாம் எங்கே காண முடிகிறது? அதுவும் சமயப் பூசல்களுக்குத் தீர்வு காண்பது இருக்கிறதே?அது மிகுந்த கடினமான வேலை. மிகமிக எச்சரிக்கையோடு ஈடுபட வேண்டும். தனிப்பட்ட முறையிலே எனக்கென்று சில அசைக்க முடியாத-அறிவுக்கு இசைந்த- அடிப்படை யான கொள்கைகள் இருந்திட்ட போதிலும் நம்முடைய அரசினைப் பொறுத்தவரையில் எல்லாச் சமயங்களுமே நமக்கு இணையானவை தான். ஒன்றைத் தாக்குவதோ இன்னொன்றைத் தூக்குவதோ நம்முடைய தொழில் இல்லை. இந்த நடுவு நிலைமை யினின்றும் நாம் கடுகளவு பிறழ்ந்திட்டாலும், நம் வளர்ச்சியினைக் கண்டு வயிற்றெரிச்சல் கொண்டிடுவோர் புழுதியினை வாரிப் பொலபொல வென்று தூற்றிட மாட்டார்களா? அதனால்தான் பொறுப்புணர்ந்து நடந்திடக்கூடிய செழியனைப் போன்றவர்களின் தோள்களின் மீதே தொல்லை மிகுந்த பணிகளையெல்லாம் அடிக்கடி சுமத்திட வேண்டியுள்ளது...'' என்று பெருவழுதிப் பாண்டியன் புகன்றிடும் பொழுதே இளம்பெருவழுதி வந்துவிட்டான்.

பிணியினால் நலிவுற்று மெலிந்து களைத்துக் காணப்பெற்ற தன் தந்தையினைக் கண்டதும் இளவரசனின் இதயக் குருத்தினைத் துயரம் துளைத்திட்டது, சுளுக்கியைப் போல!

காரிக்கண்ணனார் குரல் எழுப்பினார்;

''இளவரசருந்தான் வந்துவிட்டார்; இனி நமக்குக் கவலை இல்லை. அப்புறம் இங்கு வருவதற்காகக் கிளம்பு முன், கரிகாற் சோழர் ஓர் இன்றி யமையாத கருத்தினைத் தங்களிடம் எடுத்துரைக்குமாறு கூறினார்...

''எதைப்பற்றி?'' என்று வினவினான் பெருவழுதி.

''ரோமாபுரிக்குத் தூதுவராக யாரை அனுப்பினால் பாண்டிய நாட்டினுக்கு மட்டுமின்றி முத்தமிழ் வேந்தர்கள் ஆண்டிடும் தமிழகம் முழுமைக்குமே நலம் பயக்கும் என்பதைப் பற்றித்தான்!''

''அப்படியா?...ம்... அதைப்பற்றி நாம் அப்புறம் பேசிக் கொள் வோமே!''

பெருவழுதி இங்ஙனம் மொழிந்திடுவான் என்று காரிக்கண்ணனார் எதிர்பார்த்திடவில்லை. 'தம்முடைய தனயனுக்கு முன்கூட்டியே அது பற்றித் தெரிந்திட வேண்டாம் என்று நினைத்திருப்பாரோ? அல்லது நெடுநேரம் உரையாடிக் கொண்டே இருந்துவிட்டதால் ஏற்பட்ட களைப்பினால்தான் அவ்வாறு புகன்றிருப்பாரோ?' என்றெல்லாம் குழம்பிடலானார் புலவர்.

அன்று 'அறங்கூறு அவை' யத்தினில் வழக்கத்திற்கு மாறாகக் கூட்டம் நிரம்பி வழிந்தது.

பௌத்த சமயத்தினர் ஒருபுறமும், சமண சமயத்தினர் அவர்களுக்கு எதிர்ப்புறமாகவும் அணிவகுத்தாற்போல் அமர்ந்திருந்தனர். பிற சமயங் களைச் சேர்ந்தவர்களும் எந்தச் சமயத்தினையும் சாராதவர்களும் கூடப் பெரும் எண்ணிக்கையில் திரண்டிருந்தனர்.

அந்த விந்தையான வழக்கு எங்ஙனம் நடைபெறுகிறது என்று கண்டிடும் ஆர்வத்தில் அமைச்சர்கள், அறவோர்கள், படைத்தளபதிகள், தூதுவர்கள், ஒற்றர்கள் ஆகிய ஐம்பெருங்குழுவினர் மட்டுமின்றி, 'கரும விதிகள்' எனப்படும் பல்வேறு அரசுத் துறைகளின் செயலாளர் போன்றவர்களும் பார்வையாளர் பகுதியிலே அமர்ந்திருந்தனர்.

ரோமாபுரி நாட்டிலிருந்து வந்திருந்த தூதுவரும் அங்கே வருகை புரிந்திருந்தார்.

புலவர் காரிக்கண்ணனார், முத்துநகை, இளம்பெருவழுதி ஆகி யோரும் ஒருபுறத்தில் உட்கார்ந்திருந்தனர்.

அறங்கூறு அவையத்தின் தலைவர் முதலில் தம் வழக்கினை யாவரும் அறிந்திட முறையிட்டுக் கொள்ளுமாறு சமணத் துறவியை அழைத் திட்டார்.

பசுமலையிலே தம் சமயத்தினர் எவ்வாறு பௌத்தர்களால் தாக்கப்பட்டனர் என்பதனை விரிவாக எடுத்துரைத்தார் அந்தச் சமணத் துறவி.

''இந்தத் தமிழகத்திலே பௌத்த சமயம்போல இன்று நேற்று வந்து நுழைந்தது அல்ல எங்கள் சமண சமயம். இருபத்து நான்காவது தீர்த்தங் கரர் மகாவீரருக்குப் பின்னே பல சமணத் தலைவர்கள் தோன்றினார்கள். அவர்களுள் பத்திர பாகு மிகவும் குறிப்பிடத்தக்கவர். அவர் சந்திரகுப்த மவுரியருக்கே குருவாக இருந்தவர். அவரது சீடரான விசாக முனிவர் என்பவரே முதன் முதலாகச் சோழ - பாண்டிய நாடுகளில் சமணத்தைப் பரப்பிட வந்தவர்...''

சமணத் துறவி இவ்வாறு வாதிடும்பொழுதே, எதிர்வழக்காடிட வந்திருந்த புத்தபிக்கு எழுந்து குறுக்கிட்டார்.

''மேன்மை தங்கிய அறங்கூறும் அறிஞர்களே! எனது மதிப்பினுக்குரிய நண்பர் சமணத் துறவியார், தங்கள் வழக்கினை எடுத்துரைக்க வந்தாரா அல்லது தங்கள் சமயத்தின் வரலாற்றைப் பரப்பிட வந்தாரா என்று விளங்கிடவில்லை. தொடர்பில்லாத செய்திகளையெல்லாம் அவர் சுற்றி வளைத்துப் பேசிக் காலத்தை வீணடிக்க வேண்டாமெனக் கட்டளை இடுமாறு பணிவோடு வேண்டிக் கொள்கிறேன்.''

உடனே அவையத் தலைவர், ''புத்த பிக்குவின் மறுப்பு முறையானதே! இனி சமணத் துறவி வழக்கினுக்குத் தொடர்பில்லாதவற்றைச் சொல்வதனைத் தவிர்த்திடல் வேண்டும்'' என்றார்.

அந்த ஆணைக்குப் பணிந்த சமணத் துறவி தொடர்ந்திட்டார்.

...பசுமலை நிகழ்ச்சி மட்டும்தான் பௌத்தர்கள் எங்களைத் தாக்க முனைந்திட்ட முதற்களம் என்பதில்லை. இதற்கு முன் பலமுறை எங்களை அவர்கள் தாக்கியிருக்கிறார்கள். தரக்குறைவாகப் பழித்தும் இருக்கிறார்கள். நாங்கள் கார்த்திகை முதலான மாதங்களில்; அட்டமி முதல் பௌர்ணமி வரையுள்ள நாட்களில், தெய்வப் பொம்மைகளை வைத்துத் தேர் ஊர்வலம் நடந்திடுவது எங்கள் சமண வழிபாட்டு முறைகளிலே ஒன்று. அதனை ஏன் இந்த பௌத்தர்கள் பழித்திட வேண்டும்? எங்கள் முதல் தீர்த்தங்கரரின் சின்னம் எருது ஆகும். அதனைக் கொடிகளில் பொறித்து நாங்கள் ஏந்திச் சென்றால் இவர்களுக்கு என்ன வந்தது? எங்கள் மனம் புண்படும் வண்ணம் ஏன் பேசிட வேண்டும்? இவ்வாறு ஒரு சமயத்தினர் இன்னொரு சமயத்தினரின் மனத்தைப் புண்படுத்தலாமா? பௌத்தர்கள் மட்டும் தங்கள் புத்தரை வழிபட்டிட வில்லையா?''

அவையத் தலைவர் மெல்ல முறுவலித்தார்:-

''மனம் புண்படுகிறது, மனம் புண்படுகிறது என்றெல்லாம் கூறுவது இருக்கிறதே அது ஒரு விந்தையான வறட்டு வாதம். பண்படுகிற மனம் புண்படாது; புண்படுகிற மனம் பண்படாது. தங்களுடைய கருத்துக்கு இன்னொருவர் மாற்றுக் கருத்தினைக் கூறிடுவதா என்னும் மமதை எண்ணங் கொண்டோர்தாம் இங்ஙனம், 'மனம் புண்படுகிறது; மனம் புண்படுகிறது' என்றெல்லாம் புலம்பிடுவார்கள். கருத்தைக் கருத்தினால் மோதுங்களேன்! இலட்சியத்தை இலட்சியத்தால் வெல்லுங்களேன்! அதனை விடுத்து உங்கள் சமயங்களில்... - தத்துவங்களில் - சாத்திரங்களில் - சடங்குகளில் உள்ள குறைபாடுகளை மற்றவர்கள் சுட்டிக் காட்டவே கூடாது என்று உங்களுடைய சிந்தனை வளத்திற்கு நீங்களே ஏன் சிறையிட்டுக் கொள்கிறீர்கள்? 'இந்தச் சமணர்கள் இன்னும்

பொம்மை வணக்கத்திலேயே புதைந்து கிடக்கிறார்களே! அவர்கள் இன்னும் பரிநிருவாணம் அடைவதற்குரிய சரியான பாதையினைத் தேர்ந்தெடுத்திடவில்லையே! அவர்களுடைய இந்தத் தடுமாற்றமே எங்கள் மனத்தைப் புண்படுத்துகிறதே!' என்று பௌத்தர்களும் வாதிக்கலாம் அல்லவா? இது எப்படி இருக்கிறது தெரியுமா? புலால் உண்பவனைப் பார்த்து, 'அய்யோ! ஓர் உயிரைக் கொன்று இப்படி உண்கிறாயே! என் மனம் எவ்வளவு புண்படுகிறது தெரியுமா?' என்றானாம் புலால் மறுத்தவன். உடனே அவனை நோக்கி புலால் உண்பவன் 'அய்யோ! உன் உடல் எவ்வளவு இளைத்து விட்டது! இறைச்சி உண்டால்தானே உன் இளைத்த உடம்பு தேறும்! இல்லையென்றால் விரைவிலேயே நாடி நரம்புகள் தளர்ந்து செயலற்று மடிந்திடுவாயே! உன் நிலையினைக் காண என் மனம் எவ்வளவு புண்படுகிறது தெரியுமா?' என்று கூறினானாம். அப்படித்தான் வேடிக்கையாக இருக்கிறது இந்தச் சமயவாதிகள் மனம் புண்படுவதாகப் பேசிடும் பொழுது! உண்மையான - அழுத்தமான சமயவாதியின் முதல் இலக்கணமே சகிப்பு உணர்ச்சிதான். அத்தகைய சகிப்பு உணர்ச்சியினால் பக்குவப்பட்ட சமயவாதி, பிறருடைய பழிப்பையோ எதிர்ப்பையோ பொருட்படுத்திடவே மாட்டான்; பொருட்படுத்திடவும் கூடாது. ஆகவே பௌத்தர்களால் மனம் புண்படுகிறது என்கின்ற வாதம் ஏற்றுக் கொள்ளத்தக்கது அன்று. நீங்கள் மேலே தொடரலாம்...'' என்றார் அவையத் தலைவர்.

பின்னர் புத்தபிக்கு தம் வாதத்தினைத் தொடங்கினார்.

''மேன்மை தங்கிய அறங்கூறு அவையத்தோரே! எனது நண்பர் சமணத் துறவியார் பசுமலை நிகழ்ச்சிக்கு இல்லாத காரணங்களையெல்லாம் ஏராளமாக அடுக்கியதைக் கேட்டீர்கள். அவருடைய வழக்கும் சரி, வாதமும் சரி, எழுதாத பனுவலுக்கு எழிலான பாயிரம் என்பதைத் தவிர வேறென்ன? உண்மையிலேயே பசுமலை நிகழ்ச்சிக்கு அடிப்படையான காரணம் என்ன தெரியுமா?'' என்று வினவி, சில நொடிகள் இடைவெளிவிட்டு, அந்த அறங்கூறு அவையம் முழுமையையுமே தம் பார்வையினால் அளந்திட்ட அவர், ''ஒரு பெண்! ஆம், ஒரு பெண்! அதுவும், சமண முனிவரான கனகநந்தி என்பவர் புகலிடம் கொடுத்து அவளை வெளியே அனுப்பிட முடியாது என்று வீராப்பாகப் பேசிடுகின்றாரே, அந்தப் பெண்!'' என்று அழுத்தமாக மொழிந்திட்டார்.

குழுமியிருந்த அத்தனை பேருடைய விழிகளுமே வியப்பினால் விரிந்தன.

எடுத்த எடுப்பிலேயே எல்லோரையும் திகைப்புக் கடலினில் திணறிடச் செய்துவிட்ட அந்தப் புத்த பிக்கு, தம்முடைய கூர்மையான வாதங்களை மிடுக்கான குரலில் மேலும் அடுக்கிடலானார்.

''பெருமதிப்பிற்குரிய அறங்கூறு அவையப் பெரியோர்களே! மற்றவர்களை வியப்பினில் ஆழ்த்திடவோ வீண்பழி சுமத்திடவோ நான் ஏதோ கற்பனைச் சரடு விடுவதாகக் கருதிட வேண்டாம். என்னுடைய ஒவ்வொரு வாதத்திற்குமே அசைத்திட முடியாத ஆதாரம் உண்டு; ஆதாரம் இல்லையென்றால் நான் வாதிடவே மாட்டேன். அதுவும் மூதறிஞர் கனகநந்தி அவர்களிடம் எனக்குப் பெருமதிப்பே உண்டு.

ஆனால் ஒரு மூதறிஞரிடமோ, ஒரு பெருந்தலைவரிடமோ மதிப்பு வைக்கிறோம் என்றால், அதற்காக அவர்களுடைய முரண்பட்ட மொழிகளுக்கும் அறம் பிறழ்ந்த செயல்களுக்கும் நாம் எப்பொழுதுமே தலையாட்டிக் கொண்டே இருந்திட வேண்டுமா? காலப் போக்கிற்கு ஒவ்வாத அவர்களுடைய தவறான பாட்டுகளுக்கே தாளம்போட்டு வாழ்ந்திட வேண்டுமா? அவ்வாறு தலையாட்டிடவில்லை-தாளம் போட்டிடவில்லை என்பதற்காகத்தான் எங்களுடைய பழைய நட்பினை மறந்து நன்றியினையும் கொன்று. மூதறிஞர் கனகநந்தி அவர்களும் அவரைச் சார்ந்தவர்களும் எங்கோ திசைமாறிச் செல்கிறார்கள்? எங்கள்மீது வசை மாரியும் பொழிகின்றார்கள்.

இங்கே சமணத் துறவியார் எத்துணையோ அவதூறுகளையெல்லாம் ஏராளமாக அள்ளி வீசினார். அவரைப்போல, ஒருவர் மீது குற்றங்கூறுவதும் எளிது; ஊழல் புகார்கள் பலவற்றினை உலவிடச் செய்வதும் எளிது. ஆனால் மற்றவர்களைப் பற்றி ''ஊழல் ஊழல்'' என்று உரக்கக் கூவிடுமுன் தாமும் தங்களைச் சார்ந்தவர்களும் அத்தகைய ஊழல்களுக்கும்-குற்றங்களுக்கும்-அப்பாற்பட்டவர்களா என்பதனை யும் ஒரு கணம் எண்ணிப் பார்த்திட வேண்டாமா? தன்னுடைய வேட்டியிலே கையகலத்திற்கு மேல் உள்ள கறையினை வைத்துக் கொண்டு மற்றவர்கள் துண்டிலே உள்ள ஒரு சிறு புள்ளியை பெரிது படுத்திப் பேசுவதா? இதனால் எங்களைப் பற்றிக் குறையே கூறக்கூடா தென்று நான் வாதிடவில்லை. எங்களிடம் தவறுகள் இருந்தால்- அவை தக்க சான்றுகளோடு மெய்ப்பிக்கப்பட்டால் - அவற்றைத் தவிர்த்திடவும் திருத்திக் கொள்ளவும் நாங்கள் என்றைக்குமே தயங்கியதில்லை. அதற்காக ஒருவர் மீது வீண்பழி சுமத்துவதற்கும் ஒரு வரம்பு இல்லையா? சரி; ஒருவன் மீது ஊழல் புகார் என்னும் வாளினைப் பாய்ச்சிடும் பொழுது, அந்த வீரன் தன் கரத்திலிருக்கும் கேடயத்தினால் தன்னைத் தற்காத்துக் கொள்ள முற்படுவது எப்படித் தவறாகும்? அவன் எழுப்பிடுகின்ற எதிர் குற்றச்சாட்டுதான் அவனது கரத்திலுள்ள கேடயம்! அந்தக் கேடயத்தைக் கண்டதுமே - எதிர்க் குற்றச்சாட்டு பாய்ந்து வந்ததுமே நமது சமண நண்பர்கள் இடிந்து போவானேன்? எரிச்சலைக் கக்குவானேன்? முதலில் அவர்கள் தங்கள் சமணக் கோவிலிலே சிதறிக்

கிடக்கும் குப்பைகளை அப்புறப்படுத்தித் துப்புரவாக்கட்டும். அதற்குப் பிறகு எங்களைப் பற்றி இழிவாகப் பேசட்டும்...'' புத்த பிக்கு இவ்வாறு இயம்பிடும் பொழுதே அந்தச் சமணத் துறவி இடையிலே குறுக்கிட்டார்.

''எங்கள் சமணக் கோவில்கள் என்றைக்குமே தூய்மையானவைதாம். ஆனால் அவர்களுடைய புத்த விகாரங்களிலேதான் குப்பைகள் மலைமலையாகக் குவிந்து கிடக்கின்றன''என்று அனலினைக் கக்கினார் அவர்.

''அறங்கூறு அவையப் பெரியோர்களே! சமணத்துறவி அவர்களின் ஆத்திரத்தைக் கண்டு என்னால் வருந்திடாமல் இருக்க முடியவில்லை. முதலில் புத்த பிக்குகளாகிய நாங்கள் உறைகின்ற இடத்தின் பெயரை யாவது அவர் சரியாகத் தெரிந்து வைத்திருக்க வேண்டாமா? அவருக்கு எப்பொழுதுமே வடபுலத்தில் இடம் பிடிப்பதிலேயே குறி போலும்! அதனால் தான் அங்கே உள்ள புத்த விகாரங்களை நினைவில் வைத்திருக் கிறார். ஆனால், தென்புலத்திலே, அதாவது விந்திய மலைக்குத் தெற்கே உள்ள தமிழகம் முதலான பகுதிகளிலே, புத்த பிக்குகள் ஒரு குழுவாக - சங்கமாக உறைகின்ற இடம் பௌத்தக் 'குகை' என்றுதான் அழைக்கப் படுகிறதேயன்றி புத்த 'விகார்' என்று அல்ல. புத்த 'விகார்' இருப்பதெல் லாம் வடபுலத்திலேதான்! அது போகட்டும்; இந்த வழக்கினை பொறுத்தமட்டில் சமணத் துறவியார் சாட்டியுள்ள குற்றச்சாட்டுகளை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம் என்று கருதுகிறேன். முதலாவது குற்றச்சாட்டு சமண சமயத்தினரின் வழிபாட்டினைக் கேலி புரிந்து அவர்கள் மனத்தினைப் புண்படுத்துகிறோம் என்பது; இரண்டாவது குற்றச்சாட்டு, அவர்களுடைய சமயத்தலைவர் கனகநந்தி அவர்கள்மீது வேண்டுமென்றே களங்கம் கற்பிக்கிறோம் என்பது; எங்கள் பௌத்த சங்கக் கூட்டம் ஒன்றிலே தங்கள் ஐயப்பாடுகளைத் தெளிவுபடுத்திக் கொள்ள வந்த சில சமண நண்பர்களை நாங்கள் நையப்புடைத்தோம் என்பது, மூன்றாவது.

''முதலாவது குற்றச்சாட்டினைப் பொறுத்தமட்டில் சமண சமயத்தினர் அண்மைக் காலமாகக் கையாண்டு வருகின்ற வழிபாட்டு முறைகளிலும், ஊர்வலக் காட்சிகளிலும் உண்மையிலேயே எங்களுக்கு கருத்து வேறுபாடு உண்டு. அதனை மழுப்பிடவோ மறுத்திடவோ நான் விரும்ப வில்லை. சமயத்துறையிலே குழந்தைப் பருவத்தில் அரிச்சுவடிப் பயிற்சி பெறுவோர்க்கு வேண்டுமானால் பொம்மை வணக்கம் - உருவ வழி பாடு - தேவையாக இருக்கலாம்.அறிவில் முதிர்ந்திட வேண்டிய பெரிய வர்களும் அந்தத் தொடக்க முறைகளிலேயே தங்களுடைய சிந்தனை வளர்ச்சியை முடக்கிக் கொள்வானேன்? சின்னஞ் சிறுவர்களுக்கு விளக்கிடுவதற்காக, 'இதோ பார், இதுதான் மரம் என்பது; இதோ பார்.

இதுதான் மாடு என்பது...' என்று சொல்லிக் கொடுத்திடும் முதல் பாடத் தினையே எத்தனை காலத்திற்குத்தான் உருப்போட்டுக் கொண்டிருப் பது? மேலும் உருவ வழிபாடு என்பது 'வேறோர்' சமயத்திற்குத்தான் உரிமையுடையது. அந்த வேறோர் சமயத்தின் கோட்பாடுகளை முறியடித்திட முளைத்ததுதானே சமண சமயம்! நான் அறிந்த அளவிலே, விருடபதேவர் முதல் மகாவீரர் வரை சமணத் தீர்த்தங்கரர்கள் உருவ வழிபாட்டினை வரவேற்றிடவில்லை என்பதே எனது தாழ்மையான கருத்து. இந்த நிலையில் இன்றையச் சமணர்கள் தங்களுடைய பண்டைய வழிகாட்டிகளின் பாதையினைவிட்டுத் தடம் புரண்டிடும் பொழுது மற்றவர்கள் மறுப்புக் கணையினைத் தொடுப்பது இயற்கை தானே? அந்த மறுப்பு சில வேளைகளில் 'கேலி, கிண்டல்' வடிவத்திலும் வருகின்றது. அவர்கள் மட்டும் எங்கள் பௌத்த சமயத்தினைக் கேலி செய்ததில்லையா?''

இப்போது சமணத் துறவி மீண்டும் எழுந்தார்.

''எங்களுடைய வழிபாட்டைப்பற்றி இவ்வளவு விரிவாக அலசுகிறீர்களே, நீங்கள் மட்டும் கவுதமபுத்தரை எதற்காக வழிபடுகிறீர் கள்? அந்த வழிபாடுகளெல்லாம் ஒழுங்கு முறையோடு தான் நடக்கின்றனவா?''

''சமணத் துறவியாரின் இந்த வினா, அவர் இன்னும் எங்களை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதையே காட்டுகின்றது. நாங்களும் புத்தரை வழிபடுகிறோம்; இல்லையென்று சொல்லிவிட வில்லை; ஆனால் எந்த ஒரு பௌத்தனாகட்டும் அவனுடைய வழிபாட்டு முறைகளிலே தான் விரும்பியவற்றையெல்லாம் அடைந்திட விழைகின்ற விண்ணப்ப இயல்பு இருக்கவே இருக்காது. அவன் புரிகின்ற வழிபாடுகளெல்லாம் தன்னைத் 'தம்மபத' விளக்கொளி கொண்டு நன்னெறிப் படுத்திய கவுதம புத்தருக்கு நன்றி தெரிவித்திடும் முறை யினில் அமைந்திட்ட வழிபாடுகளே அன்றி வேறல்ல. உண்மையிலேயே மற்ற சமயவாதிகளை விட முதிர்ச்சியுற்றவன் பௌத்தன் ஒருவனே! ஏனெனில், மற்றவர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் இறைவனிடம் சென்று, 'அது வேண்டும்: இது வேண்டும்', என்று குழந்தைகளைப் போலக் கெஞ்சுகிறார்கள். பௌத்தன் அப்படியெல்லாம் கெஞ்சமாட்டான். அவன் ஒருவன் தான் எதனையுமே இச்சிக்காமல் - எதற்குமே கவலைப்பட்டிடாமல் - பகுத்தறிவு ஒன்றினையே வழித் துணையாகக் கொண்டு உண்மையை நாடிச் செல்கிறான்.

''பௌத்த வழிபாட்டின் இந்த அடிப்படையினைப்புரிந்து கொள்ளா மல் யாராவது புத்தரை வணங்குவதில் ஈடுபட்டார் களானாலும் அவர்களும் சரியான பாதையினில் நடைபோடவில்லை என்றே

பொருளாகும். ஆகவே சமணத் துறவி அவர்கள் எங்கள் வழிபாட்டு முறைகளைப் பற்றி நுனிப்புல் மேய்ந்திட வேண்டாம். அதே வேளையில், எங்கள் நெறிகளிலேயே முரண்பாடுகள் தென்பட்டால் தாராளமாகக் கண்டிக்கட்டும். அவ்வாறு கண்டிப்பதாலேயே நாங்கள் ஒன்றும் 'வைதீக சமய' த்தினரைப் போலக் குடியே முழுகி விட்டதாக இடிந்து போய்விட மாட்டோம். அவர்கள்தான் தங்களுடைய தத்துவங்களை - சாத்திரச் சடங்குகளை - யாராவது கடுகளவு கண்டித்தாலும் மலையளவு பெரிது படுத்தி அலறுவார்கள்; 'எங்கள் மனம் புண்படுகிறது... மனம் புண்படு கிறது...'என்றெல்லாம் ஓலமிடுவார்கள்; ஊரையே கூட்டுவார்கள்.எனக்கு ஏற்படுகின்ற வேதனையும் வியப்பும் என்ன தெரியுமா? பௌத்த சமயத்தினராகிய எங்களைப்போல் 'எதையும் தாங்கும் இதயம்' படைத்திட வேண்டிய சமண சமயத்தினரே 'மனம் புண்படுகிறது' என்று கூசாமல் கூறுகிறார்களே என்பதுதான்; நற்காலமாக, அறங்கூறு அவையத் தலைவராகிய தாங்களே அதுபற்றித் தெளிவான தீர்ப்பினை வழங்கிவிட்டீர்கள். அதற்குமேல் நான் ஒன்றும் புதிதாக விரித்துரைக்கத் தேவையில்லை.

அடுத்து, சமணத் துறவியார் சாட்டிய இரண்டாவது, மூன்றாவது குற்றச்சாட்டுகள் எந்தவித ஆதாரங்களும் இல்லாதவை ஆகும். வெறும் வதந்திகளை மட்டும் நம்பி எழுப்பப்பட்ட மணல் வீடுகள் அவை! விளக்கமான முறையிலே அவற்றுக்கு மறுப்புத் தெரிவித்திடுமுன் ஒருவருடைய உண்மையான சாட்சியத்தைக் கேட்பது இன்றியமை யாதது என்று எண்ணுகிறேன். ஏனெனில், இந்த இரு குற்றசாட்டுகளுக்கும் பின்னணியாக எழுந்திட்ட பெரும் பூசலுக்கும் அவருக்கும் நெருக்கமான தொடர்பு உண்டு. அவர் வேறு யாரும் அல்லர், பாண்டிய வேந்தரின் பேரன்புக்கு உரியவரும் அவர் தம் மெய்க்காவல் மறவருமான செழியன் அவர்களே. அவர்தான் கடைசி நேரத்தில் எங்கள் இரு சமயத்தினரும் குருதிக் குளத்திலே மிதந்திடாதவாறு அமைதியினை ஏற்படுத்தியவர். அவர் எத்தகைய சாட்சியம் அளித்திடினும் அதனை ஏற்பதற்கு நாங்கள் உடன்படுகிறோம்'' என்று மொழிந்துவிட்டுப் புத்தபிக்கு அமர்ந்து விட்டார்.

செழியன் சாட்சியம் அளித்திடப் போகிறான் என்றதும் அந்த அவையத்தில் குழுமியிருந்த அத்தனை பேருடைய உள்ளத்திலும், ஏதோ புதுமையான பொருட்காட்சியினை கண்டிடப் போகும் ஆர்வம் ததும்பிற்று.

காரிக்கண்ணனார், இளம்பெருவழுதி மற்றும் அமைச்சர்கள் முதலானோர் தத்தம் இருக்கைகளில் நிமிர்ந்து உட்கார்ந்து, கூர்ந்து கவனிக்க முற்பட்டனர்.

முத்துநகைக்கோ இனம் விளங்கிடாத உவகைப்பெருக்கு. 'இந்த அண்ணனுக்கு இத்தனை பேர் நடுவே தட்டுத் தடங்கலின்றி நன்றாகப் பேசிட முடியுமா?' என்கிற ஐயப்பாடும் அவளுக்கு எழாமல் இல்லை. எனினும் வியப்பினால் உந்தப்பட்டவளாகச் செழியன் மொழிவதைக் கேட்டிடத் தன் செவிகளைத் தீட்டிக் கொண்டாள்.

அவள் நினைத்திட்டதைப் போல் சாட்சியம் மொழிந்திடுவதில் எந்தவிதத் தடுமாற்றத்தினையும் அடைந்திடவில்லை செழியன். தட்டுத் தடங்கலின்றிச் சொற்கள் யாவும் அருவித் திரைபோல் மிகவும் இயல்பாக விறுவிறுப்பாக-வந்து விழுந்தன. அவனது கனமான கம்பீரக்குரல் வீணையே வந்து பேசுவதுபோல் இருந்தது. ஆம்; அவனது குரலிலே இழைந்த ஓர் இனிமையான இசை மணம், அந்த அவையம் முழுவதிலுமே கமழ்ந்து வழிந்தது!

...மேன்மை தங்கிய அவையப் பெரியோர்களே! ஒரு சமயத்தினர் தான் தவறுகளைப் புரிந்திட்டார்கள், இன்னொரு சமயத்தினர் எதுவுமே செய்திடவில்லை என்று என்னால் கூறிட இயலவில்லை. சுருங்கச் சொன்னால், இரு சாராருமே தாங்கள் சமயவாதிகள் என்பதனை மறந்து விட்டார்கள். பொறுப்பு உள்ள ஒரு சமயவாதிக்குரிய தரமோ - தன்னல மறுப்போ - முதிர்ச்சியோ - சகிப்புணர்ச்சியோ- அவர்களிடம் இல்லவே இல்லை. செந்நெற்பயிரின் செழுமையைக் கெடுத்திடும் கோரைப் புல் மாதிரி பகுத்தறிவினைப் பாழ்படுத்த வந்தவைதானே மூட நம்பிக்கைகளும், சாதிப் பாகுபாடுகளும்! அவற்றை விடாப்பிடியாக வேரூன்றித் தழைக்க வைத்திடும் ஒரு பொது எதிரியின் கரம் ஓங்கிடாமல் விழிப்போடு வேலை செய்திட வேண்டிய இந்த இரு சமயத்தினரும் தாங்களே ஒருவருக்கொருவர் பொருத முற்பட்டுவிட்டது வேதனைக்குரியதே யாகும். சமணம், பௌத்தம் இவற்றிடமுள்ள பற்றினாலோ அல்லது வேறோர் சமயத்திடமுள்ள வெறுப்பினாலோ நான் இவ்வாறு விளம்பிடவில்லை. எல்லாச் சமயங்களும் எனக்கு ஒன்றுதான்! எந்த சமயத்திலே உயர்ந்த நெறிகள் இருப்பினும் அவை நம் போற்றுதலுக் குரியவையே - இதனால் எனக்கென்று தனிக்கொள்கை ஏதும் இல்லாமலும் இல்லை. 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்!' என்பதே என் கொள்கை! உருவ வழிபாட்டிலிருந்து ஒளி வழிபாட்டுக்கு - உதயசூரியன் வழிபாட்டுக்கு - உயர்ந்திட்ட பண்டைக்காலத் திராவிட சமயத்தின் ஒப்பற்ற கொள்கையே என் கொள்கை! புறத்தினில் உள்ள கோவில்களுக்குச் செல்வதைவிட அகத்தையே - உள்ளத்தையே - பெருங்கோவிலாகக் கண்டு வழிபட்ட திருமூலரின் திருவாக்காக மலர்ந்திட்ட கொள்கையும் அதுவே! 'திராவிட சமயமா?' என்று சிலர் விழிகளை அகல விரித்திடக்கூடும், சமண-பௌத்த சமயங்களில் உள்ள

கொல்லாமை, கள்ளுண்ணாமை போன்ற அடிப்படைக் கொள்கைகளை யெல்லாம் அண்மைக்காலமாக எந்த சமயம் தன்னுடையதாக்கிக் கொண்டு தழைத்துப் படர்கிறதோ, அந்தச் சமயம் தான் திராவிட சமயத்தின் உயிர்நாடியான தத்துவங்களையும் தனக்கே உரித்தாக்கிக் கொண்டு வளர்ந்து, திராவிட சமயத்தின் பெயரே மறைந்திடுமாறு செய்து வருகிறது...''

''ஆமாம்; திராவிட சமயம், பௌத்த சமயம், சமண சமயம் இவற்றின் கருத்துக்களை இரவல் வாங்கி வளரும் அந்த வேறோர் சமயத்திற்கும் இந்த வழக்கத்திற்கும் என்ன தொடர்பு''

''தொடர்பு இருக்கிறது! அவையத் தலைவர் அவர்களே; தொடர்பு இருக்கிறது! இந்த பௌத்த-சமணச் சமயத்தினர் இடையே கசப்பு ணர்ச்சியை மறைமுகமாக நின்று வளர்த்து விட்டவர்களே அந்த வேறோர் சமயத்தினர்தான். ஒரு புத்த பிக்குவோடு ஒரு பெண்ணைத் தொடர்புபடுத்திப் புரளியைக் கிளப்பிவிட்டவர்களும் அவர்கள்தான். பௌத்தர்கள், கனகநந்தி முனிவர் மீது களங்கம் கற்பித்திட முனைந்தார் கள். அதனாலேயே பசுமலைக் கலவரமும் எழுந்தது.''

''அப்படியானால் இந்த வழக்குப் புகையினை எழுப்பி விட்ட நெருப்புத் துண்டே, புத்தபிக்குவைப் பற்றிய புரளிதான் என்கிறீர்களா?''

''ஆம்; அவையத் தலைவர் அவர்களே! மாரிக்காலத்திலே பிச்சை எடுத்திடும் பொருட்டு வெளியே ஏகிடும் எந்த பிக்குவும் ஏழு நாட்களுக்குள் தங்கள் பௌத்தக் குகைக்குத் திரும்பிட வேண்டும் என்பது பௌத்த சங்க விதி. ஆனால் ஒரு புத்த பிக்கு அவ்வாறு வந்திடவில்லை. அதற்குக் காரணம், மூலிகையொன்றின் மணத்தினால் அவர் மயக்கமுற்று விழுந்துவிட்டதேஆகும். முல்லைத் திணையினைச் சார்ந்திட்ட பெண்ணொருத்தி அவரைத் தன் முதுகிலே சுமந்து வந்து குகையினில் சேர்த்திருக்கிறாள். அதனைக் கண்டு விட்டுத்தான் பிக்குவுக்கும் அந்தப் பூவைக்கும் நெடுங்காலமாகத் தொடர்பு உண்டு என்று புரளியைக் கிளப்பிவிட்டுவிட்டனர். தனக்கு உணவினையே அளித்திடும் பெண்ணாக இருந்த போதிலும் எந்த ஒரு புத்த பிக்குவும் அவளை நிமிர்ந்து பார்ப்பதோ, அவளோடு உரையாடுவதோ, அவளு டைய அழகையோ, அழகின்மையையோ ஊன்றிக் கவனிப்பதோ அறவே கூடாது என்பதும் பௌத்த சங்கத்தின் கடுமையான விதி. தங்களுடைய இந்தச் சங்க விதிக்கே இழுக்கினை உண்டாக்கியதாகப் புத்த பிக்குவின் மீது அபாண்டப் பழியைச் சமணர்கள் சுமத்துகிறார்களே என்கிற ஆத்திரம் உண்டாகி விட்டது பௌத்தர்களுக்கு. அவர்கள் எதிர்க்குற்றச்சாட்டினை எழுப்பிடும் வகையிலே கனகநந்தி முனிவரும் ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டார்.''

''என்ன சிக்கல் அது?''

''ஒரு நாள் நள்ளிரவு நாலைந்து பேர் ஒரு பெண்ணோடு கனகநந்தி முனிவரிடம் வந்திருக்கிறார்கள். தங்களை யாரோ கொல்வதற்கு வருவதாகவும் தங்களுக்குப் புகலிடம் தர வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார்கள். இவ்வாறு அடைக்கலம் தேடி வருகின்றவர்களைச் சமணக் கோவிலை ஒட்டியுள்ள 'அஞ்சினான் புகலிடம்' என்னும் பகுதியில் தங்கிடச் செய்து காப்பாற்ற வேண்டியது சமணர்களின் கடமை. அந்தக் கடமையினை நிறைவேற்றிடும் முறையில்தான் அந்தப் பெண்ணுக்குப் புகலிடம் அளித்தார் கனகநந்தி. ஆனால் அந்தச் செயலையே தங்களுக்கு வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டு அவர்மீது களங்கம் கற்பிக்க முற்பட்டு விட்டனர் பௌத்தர்கள்.''

''அது சரி, அந்தப் பெண் இன்னும் கனகநந்தி முனிவரின் பாதுகாப்பில்தான் இருக்கிறாளா?'' - என்று வினவினார் அறங்கூறு அவையத்தலைவர்.

''இல்லை என்று கனகநந்தி முனிவர் நான் உசாவிய பொழுது மறுத்து விட்டார்'' என்றான் செழியன்.

''அப்படியா? அந்தக் கனகநந்தி முனிவர் இப்போது இங்கே வந்திருக்கிறாரா?''

''இதோ வந்திருக்கிறேன்.'' என்று எழுந்து நின்றார் கனகநந்தி முனிவர்

''ஆமாம். நீங்கள் ஒரு பெண்ணுக்குப் புகலிடம் அளித்தது உண்மையா?''

''உண்மைதான்''.

''அவள் இப்போது உங்களுடைய 'அஞ்சினான் புகலிட'த்தில் தான் தங்கியிருக்கிறாளா?''

''இல்லை, அவளும் அவளோடு வந்த ஆடவர்களும் அன்று விடிவதற்குள்ளேயே தப்பிவிட்டார்கள்.''

''சமணத் தலைவர் பொய் சொல்கிறார்! சமணத் தலைவர் பொய் சொல்கிறார்!'' என்று பௌத்தர்கள் கூச்சலிட்டார்கள்.

அவர்களை அமைதிப்படுத்திட முனைந்திட்ட அறங்கூறு தலைவர், ''இப்படியெல்லாம் நீங்கள் கூச்சல் போடுவது முறையில்லை. கனகநந்தி முனிவர் கழறுவது பொய்தான் என்றால் அதற்குரிய நடவடிக்கையிலிருந்து அவர் தப்பிவிட முடியாது. அந்தப் பெண் இன்னும்

'அஞ்சினான் புகலிட'த்தில் தான் இருக்கிறாளா, இல்லையா என்பதை அரசு ஒற்றர்கள் புலனாய்ந்து தெரிவித்திட வேண்டும். அதுவரை வழக்கு ஒத்தி வைக்கப்படுகிறது'' என்று மொழிந்தவாறே எழுந்துவிட்டார்.

ஒரே பரபரப்பு நிலவிற்று, அந்த வழக்கு மன்றத்தினில்.

அத்துணை பரபரப்பிலும் இளம்பெருவழுதிக்கு மட்டும் ஒரு விந்தை யான எண்ணம் உதிக்கத் தவறிடவில்லை. அவன் தன் அருகிலிருந்த காரிக்கண்ணனாரை நோக்கி, ''ஒருக்கால், அந்த இளம் பெண் நம் தாமரையாகவே இருப்பாளோ?'' என்று வினவினான் மெல்லிய குரலில்.

அவன் இவ்வாறு கேட்டிடவும் காரிக்கண்ணனாருக்கு மட்டுமல்ல, முத்துநகைக்கும்கூட அத்தகைய ஐயப்பாடு எழலாயிற்று. அடுத்த சில விநாடிகளிலேயே, அந்த அறங்கூறு அவையத்தினைவிட்டு வெகுவேக மாக வெளியேறினான் இளம்பெருவழுதி.

நண்பகல் உணவினை அருந்திவிட்டுப் பெருவழுதிப் பாண்டியனைக் காணச்சென்றார் காரிக்கண்ணனார். அவருடன் முத்துநகையும் போனாள்.

அவர்களுடைய உரையாடல் எடுத்த எடுப்பிலேயே செழியனைப் பற்றியே திரும்பியது.

''ஆமாம். செழியன் இன்று சாட்சியம் அளித்ததைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று பாண்டிய வேந்தன் ஆர்வத்துடன் கேட்டான்.

'மிகமிக அருமையாக அமைந்திருந்தது அரசே! அவரை வெறும் மறவர் என்றுதான் இதுவரை எண்ணிக் கொண்டிருந்தேன்; இந்த அளவுக்கு வரலாற்று அறிவும், சமய ஆராய்ச்சியும், வாதிடும் ஆற்றலும், எல்லாவற்றையும் விட நடுவு நிலைமை பிறழாத நல்ல பண்பாடும் அவரிடம் அமைந்திருக்கும் என்று நான் நினைத்திடவே இல்லை!''என்று தம் வியப்பினை வெளியிட்டார் புலவர்.

''ஆமாம் அரசே! இவ்வளவு தெளிவாக - இனிமையாக - கம்பீரமாக, அவை நடுவே அண்ணா முழக்கமிடுவார் என்று நானும் எதிர்பார்க்கவே இல்லை'' என்று முத்துநகையும் உவகை மேலிட உரைத்தாள்.

''ஆமாம்; நாம் ரோமாபுரிக்குத் தூதுவர் அனுப்புவது பற்றிக் கரிகாற்சோழர் ஏதோ கருத்தினைத் தெரிவித்ததாகக் கூற வந்தீர்கள் அல்லவா?''

''ஆம், மன்னவா! அவர் தங்களுடைய மகன் இளம்பெருவழுதியை அனுப்புவதே சாலச் சிறந்தது என்று...''

''அப்படியா... ஆனால் நான் அவனை அனுப்பப் போவதில்லை. செழியனைத்தான் அந்தப் பொறுப்பான பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் போகிறேன்.''

பாண்டிய மன்னன் இவ்வாறு பகர்ந்திடவும், ''அது தான் சரியான முடிவு! பொருத்தமான ஆள் என் அண்ணா தான்! ஆம். என்னுடைய அண்ணாவேதான்!'' என்று களிப்பினில் மிதந்து உரக்கவே மொழிந் திட்டாள் முத்துநகை.

ரோமாபுரிக்கு யாரைத் தூதுவராக அனுப்புவது என்பதைப் பற்றிப் பெருவழுதிப் பாண்டியன் வெளியிட்ட முடிவினைக் கேட்டதும் முத்துநகைதான் களிப்புக் கடலிலே மூழ்கித் திளைத்திட்டாளேயன்றிக் காரிக்கண்ணனார் கருத்து எதனையும் கூறிடவில்லை; ஆழ்ந்த சிந்தனை யுடனேயே அவர் அமர்ந்திருந்தார்.

அந்தப் பொறுப்பும் புகழும் மிக்க பதவிக்குப் பொருத்தமான ஆள் இளம்பெருவழுதியா, நெடுமாறனா என்று இருவரைப் பற்றி மட்டுமே பொதுமக்கள் தத்தம் ஊகங்களை உலவவிடச் செய்து கொண்டிருக்கும் வேளையில் ‘இளம்பெருவழுதி ஏற்புடையவன்’ என்று தாமும் சோழப் பேரரசருமே திண்ணமாக எண்ணிக் கொண்டிருக்கிற நிலையில் - செழியனின் பெயர் சற்றுத் திகைப்பினையே அளித்திட்டது புலவருக்கு.

பெருவழுதியின் முடிவு பாண்டிய நாட்டு மக்களிடையே எத்தகைய வரவேற்பிற்கு இலக்காகிடுமோ என்பது ஒரு புறம் இருக்கக் கரிகாலன் உள்ளத்திற்கு அது கசப்பினைக் கொடுத்திட்டால் என்ன செய்வது என்னும் கலக்கமும் உண்டாகாமல் இல்லை அவருக்கு.

ஆனால், புலவரின் நெஞ்சக் கடலினடியில் ஓடிடும் நினைவோட்டத்தினை அப்படியே ஊடுருவிப் படம் பிடித்து விட்டவரைப்போல், ‘‘என்ன புலவர் அவர்களே! தாங்கள் கருத்து ஏதும் பகர்ந்திடாமல் அமைதியாக இருக்கிறீர்களே! கரிகாலன் வருத்தமுறுவாரோ என்கிற வாட்டமா?’’ என்று முறுவலித்தவாறே கேட்டான் பாண்டிய வேந்தன்.

‘‘ஆம், மன்னவா. அவர் விழைந்ததும் - என்னிடம் மொழிந்ததும் இளவரசன் இளம்பெருவழுதியைப் பற்றித்தான். இப்போது செழியன் செல்லப் போவது குறித்துக் கேள்வியுற்றால் அவர் என்ன சொல்லி விடுவாரோ என்று தான்’’

‘‘கவலைப்படாதீர்கள், புலவர் அவர்களே! செழியனைப் பற்றிய சிந்தனையே இல்லாத நிலையில், இளம்பெருவழுதி ஏற்றவன் என்று அவர் எண்ணியிருத்தல் கூடும். ஆனால், இப்போது செழியனைப்பற்றிக் கேள்வியுற்றதும், அவர் கண்டிப்பாகத் தம் கருத்தினை மாற்றிக் கொண்டு விடுவார். அதுமட்டும் அன்று; அவன்தான் பொருத்தமான தூதுவன் என்று அவர் வாயாலேயே புகன்றிடவும் போகிறார் பாருங்களேன்!’’

‘‘தங்கள் கூற்றினை நான் மறுத்திடுவதாக நினைக்க வேண்டாம், அரசே! ஆனால் இளவரசரைத் தூதுவராக அனுப்பி வைப்பதில் தங்களுக்கு ஏன் தயக்கம் என்பதை நான் அறிந்திடலாமா?’’

‘‘அவன் இளவரசனாக இருப்பதுதான்!’’ என்று சிரித்திட்டான் பெருவழுதி.

''தாங்கள் விளம்புவது எனக்கு விளங்கிடவில்லையே!'' என்று தம் திகைப்பினை வெளிப்படுத்தினார் காரிக்கண்ணனார்.

''வேறொன்றும் இல்லை, புலவர் அவர்களே! இளம்பெருவழுதி சாதாரண நிலையில் உள்ளவன் அல்லன். நம்முடைய பாண்டிய மண்டலப் பேராளுகையின் கீழ் உள்ள கொற்கைப்பட்டினத்தை ஆண்டு கொண்டிருப்பவன். அவனை இப்போது அங்கிருந்து கிளப்பி ரோமாபுரிக்கு அனுப்பி வைத்திட்டால், பிறகு, யாரை அங்கே இளவரசனாக அமர்த்துவது? வழிவழியாக வந்துள்ள மரபினை ஒட்டிக் கொற்கைப்பட்டினத்தின் தனி நிருவாகத்தினை யாரிடம் ஒப்படைப்பது என்பதே பெருஞ் சிக்கலாக உருவெடுத்து விடாதா?''

''ஏன், வேறு மாற்றுவழி மூலம் தீர்வு கண்டிட முடியாதா?''

''எப்படி முடியும் புலவர் அவர்களே!''

''கொற்கைப் பட்டினத்தைத் தங்களுடைய நேரடி ஆளுகையின் கீழ் கொண்டு வந்துவிட்டால் என்ன?''

''தாங்கள் மொழிவதும் ஒரு வகையில் சரிதான். ஆனால் நான் அவ்வாறு விழைந்திடவில்லை. ஏன் தெரியுமா? நம்முடைய பாண்டிய மண்டலம் இருக்கிறதே, இது ஒரு பரந்த நாடு; பல்வேறு வகைப்பட்ட மக்கள் உறைந்திடும் நாடு. இங்கே ஆட்சிப் பொறுப்பு - அதிகாரக் குவிப்பும் ஒரே இடத்தினில் திரண்டிருப்பது நல்லது அல்ல; ஏனெனில் நம்முடைய ஆளுகையின் சீரிய பலன்கள் நேரிய திட்டங்கள், ஏழை நடுத்தர மக்களை எளிதாக -விரைவாக - எட்டிடமாட்டா, அதன் பொருட்டு, இந்த மாபெரும் பாண்டிய மண்டலத்தையே ஐந்தாறு மாநிலங்களாகப் பகுத்து, அவற்றின் முன்னேற்றத்திற்கு எத்தகைய முட்டுக்கட்டையும் ஏற்படாத வண்ணம் சுயாட்சியினையே வழங்கி, அதே சமயம் அவை அனைத்தும் ஒரே பேராளுகையின் கீழ் இயங்கிடும் கூட்டாட்சி முறையினைத் தோற்றுவித்திடலாமா என்று அண்மைக் காலமாக நான் சிந்தித்து வருகிறேன்.

ஆகவே தன்னாட்சித் திட்டத்திற்கு முன்னோடியாகத் திகழ்ந்திடும் கொற்கையின் தற்போதைய ஆட்சி அமைப்பினைக் குலைத்திட வேண்டாம் என்றே கருதுகிறேன்.''

''தாங்கள் விரிவாக உரைத்த பின்னரே எனக்கும் தெளிவாக விளங்குகிறது அரசே! சுயாட்சி என்பது மாட்சி மிக்க அரிய திட்டம்தான். ஒரு பரந்த கொல்லையிலே சிறுசிறு பாத்திகளைக் கட்டிப் பயிர்களைச் செடிகளை விளைவித்தல் போல ஒரு பெரிய நாட்டினைச் சிறு சிறு மாநிலங்களாகப் பிரித்து அவற்றுக்குத் தன்னாட்சியினை வழங்கிடுதல்

வரவேற்கத்தக்க முயற்சியே! அதுவும் கொற்கை போன்ற புகழ் மிக்க துறைமுகப் பட்டினங்கள்-நகர்கள்- முதலானவை நம் இளவரசர் போன்ற திறமைசாலிகளின் தனி நிருவாகத்தினில் இருந்திட்டால்தான் வெளிநாட்டினர் பலர் இங்கே வந்திடவும், நமது மண்ணின் வளத்தைக் கண்டு வியந்திடவும். வாணிகத் தொடர்புகள் மேலும் வளர்ந்திடவும் வாய்ப்புகள் ஏற்படும்.''

''இப்போதாவது புரிகிறதா புலவர் அவர்களே, நான் இளம்பெருவழுதியை ரோமாபுரிக்கு அனுப்ப விரும்பிடாததற்கான காரணம்? மேலும் செழியன் இருக்கிறானே, அவன் ஒரு திறமைச் சுரங்கம்-சிந்தனைச் சுடர்! அதனால்தான் அந்தப் பொறுப்பான பதவிக்கு ஆள் அவனே என்று திடமாகத் தோன்றியது; அவனையே தேர்ந்தெடுத்தேன்.''

''தங்களுடைய முடிவு முற்றிலும் சரியானதே என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். மன்னவா! தக்கவாறு எடுத்துரைத்தால் கரிகாலரும் ஒப்புக்கொள்ளாமல் போக மாட்டார்''

- காரிக்கண்ணனார் இவ்வாறு இயம்பிடவும் அதுகாறும் அவர்கள் இருவருடைய உரையாடலையும் பொறுமையோடு கவனித்துக் கொண்டிருந்த முத்துநகை மீண்டும் தன் குரலை எழுப்பினாள்:

''நீங்கள் என்னப்பா, செழியன்தான் ரோமாபுரிக்குப் போகிறார் என்று அறிந்தவுடனேயே, சோழப் பேரரசர் இரட்டிப்பு மகிழ்ச்சியினை எய்திடமாட்டாரா? செழியன் அண்ணாவின் அறிவிலும் ஆற்றலிலும் அவருக்கு எத்துணை நம்பிக்கை - நன்மதிப்பு உண்டு என்பதனை நானல்லவா அறிந்திடுவேன்!'' என்றெல்லாம் அவள் புகலப் புகல, அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும் தமக்கே சூட்டப்பெற்ற மகுடமாக எண்ணிய பூரிப்பில் மிதந்திட்டார் பெருவழுதிப் பாண்டியர்.

அறங்கூறு அவையத்திலிருந்து புறப்பட்ட இளம்பெருவழுதி புரவி மீதேறி நேரே பசுமலைக்குத்தான் சென்றான். அங்கேயுள்ள சமணக் கோவிலையும் அதனை ஒட்டிய 'அஞ்சினான் புகலிடத்'தையும் நோட்டம் விட்டான். எப்படியாவது கனகநந்தி முனிவரால் காப்பாற்றப் பட்ட காரிகை தாமரையாகவே இருந்திடமாட்டாளா? அவளும் அங்கேயே ஒளிந்திருக்கமாட்டாளா? என்கிற ஏக்கம் அவனுக்கு. சில பௌத்தர்கள், சமணர்கள், வைதீகச் சமயத்தினர் எல்லாரிடமும்கூட மெல்ல உசாவிப் பார்த்தான். பகலிலே சரியாகத் துப்புத்துலக்கிட இயலாதென்று இரவிலே மாறுவேடம் பூண்டும் தன் புலனாய்வு வேலையினில் முனைந்து ஈடுபட்டான். எனினும் தாமரையைப் பற்றி எந்தவிதத் தடயமும் அவனுக்குக் கிட்டவில்லை.

கடந்த சில நாட்களாகத் தன்னுடைய காதற் கிள்ளையை எவ்வா றேனும் கண்டிடமாட்டோமா என்கிற மாளாத வேட்கை வெறியினால் அவன் பட்டிருக்கும் பாடுகள் எண்ணிலும் அடங்கா; ஏட்டிலும் அடங்கமாட்டா. கரிகாலனிடமும் காரிக்கண்ணனாரிடமும் அந்தப் பாழ் மண்டபத்தில் விடைபெற்றுக் கொண்டு தாமரையை அழைத்து வருவதற்காகப் பூம்புகார் அரண்மனையை அடைந்தவனை அதிர்ச்சி தரும் செய்தியொன்றே வரவேற்றது. பரபரப்புடன் அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருந்த காவலர்களில் ஒருவன்தான் தாமரை தப்பிவிட்ட அந்தச் செய்தியினைக் கூறி அவனை அதிர்ச்சிக்கு ஆளாக்கியவன். அதன் பின்னர் சில தவறான தகவல்களை நம்பி, அவளைத் தேடிடும் முயற்சியில் தன் புரவியினைத் தட்டிவிட்ட அவன், அலைந்திட்ட அலைச்சல் - கிடந்திட்ட பட்டினி - அடைந்திட்டமயக்கம் - தவித்திட்ட தவிப்பு - ஏராளம், ஏராளம்! அதனாலேயே அவன் குறித்த நேரத்தில் கொற்கைப் பட்டினத்திற்குத் திரும்பிவர முடியாமலும், பிணியுற்ற தன் தந்தையைக் கண்டிட உடனே மதுரை மாநகர்க்கு வந்திட முடியாமலும், தான் கெட்ட பெயரினைச் சுமந்திட வேண்டிய நிலைமையும் அவனுக்கு நேர்ந்திட்டது.

இந்த ‘தேடு படலம்’ இன்னும் நீடிக்கிறதே என்று நினைத்திட்ட அளவில் அவனது நெஞ்சிலே வலி எடுத்திடாமல் இல்லை. கனகநந்தி முனிவராவது தனக்குக் கை கொடுத்திட மாட்டாரா என்னும் அவனது கனவும் பலித்திடவில்லை. தான் அடைக்கலம் அளித்திட்ட அணங்கின் பெயர் என்ன என்பதையாவது அந்த மனிதர் அறிந்து வைத்திருக்கக் கூடாதா?

மதுரை வந்திட்ட பின்னரும் தாமரைக்காக அலைந்திட்ட அலைச்ச லில் உடல்கூடச் சற்று இளைத்துவிட்டது இளம்பெருவழுதிக்கு; மனச்சோர்வுக்கோ எல்லையே இல்லை.

இந்நிலையில்-

ஒருநாள், உழைத்துக் களைத்துவிட்ட கதிரவன் ஓய்வெடுக்கச் சென்று கொண்டிருக்கும் மாலை வேளை.

வைகையாற்றங்கரையை அடுத்திட்ட வளங்கொழித்திடும் சோலை யொன்றில், தன்னந்தனியாக உலவிட வந்த இளம்பெருவழுதி ஒரு மருத மரத்தின் வேரினில் தலையைச் சாய்த்த வண்ணம் படுத்திருந்தான். அவ னுடைய வலக்கரத்தில் எழுத்தாணியும், இடக்கரத்தில் பன்னீர்ப்பூவின் நிறத்தில் சற்றே மஞ்சள் பூசப்பெற்ற பனை ஓலைகளும் இருந்தன.

அவனுடைய எண்ணங்களோ கற்பனை வானிலே சிறகடித்துப் பறந்து திரிந்து - தாமரையின் எழில் வழியும் தளிருடல் மீதே மொய்த்து,

முக்குளித்துப் பழக்குலைப் பாக்களாகப் புதுவடிவம் பெற்றுக் கொண்டிருந்தன.

அந்த இனிமையான வேளையில் யாரோ ஒருவருடைய கனைப்பு இளம்பெருவழுதியின் சிந்தனையைக் கலைத்திட்டது. அவன் எழுதுவதை நிறுத்தி நிமிர்ந்து உட்கார்ந்து எதிரே நோக்கினான். அப்போது சோலையினுள் வந்து நுழைந்தவன் வேறு யாரும் அல்லன்; தளபதி நெடுமாறனே.

''என்ன இளவரசர் அவர்களே! பாக்கள் புனைவதற்கு அருமையான இடமாகத்தான் தேர்ந்தெடுத்து வந்திருக்கிறீர்கள். ஆனால், என்னுடைய வருகை, கடிதாகப் பறந்து சென்றிடும் தங்கள் கற்பனைப் புரவிக்குக் கடிவாளம் போட்டு நிறுத்திவிட்டதா?'' என்று வேடிக்கையாக கேட்டுக் கொண்டே வந்தான் அவன்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. ஆனால் தாங்கள் எங்கே இங்கே இவ்வளவு தூரம் - அதுவும் தன்னந்தனியாக?''

''எல்லாம் தங்களைச் சந்தித்திட வேண்டித்தான். இன்று காலை யிலிருந்து மதுரை மாநகர் முழுவதையுமே அலசிவிட்டேன் ஆட்களைவிட்டு. தங்களைக் கண்டுபிடித்திட முடியவில்லை''

''ஏன் அவ்வாறு தேடினீர்கள்? ஏதேனும் முக்கியமான செய்தியா?''

''முக்கியமான செய்தி மட்டும் இல்லை; தலையே போகிற சிக்கல்! பாண்டிய மண்டலத்தின் பெருமைக்கே அறைகூவல் விடுத்திடும் பெருஞ்சிக்கல்!'' என்றவாறே இளம்பெருவழுதிக்கு எதிரே, உழைப்பாளி யின் நரம்பினைப்போல் புடைத்து நீண்டு கிடந்த மரத்தின் இன்னொரு வேரின்மீது அமர்ந்திட்டான் நெடுமாறன்.

''அப்படியென்ன அவிழ்த்திடவே முடியாத பெருஞ்சிக்கல் தளபதி யாரே? அதுவும் திடீரென்று...''

''இது திடீரென்று முளைத்திட்ட சிக்கல் இல்லை; சில நாட்களாகவே நாடு முழுவதும் கனன்று கொண்டிருந்த சிக்கல்தான், இன்று வெடித்து விட்டது.''

''தாங்கள் எதைப் பற்றிக் கூறுகிறீர்கள் தளபதியாரே?''

''ரோமாபுரி நாட்டுக்குத் தூதுவர் ஒருவர் சென்றிட வேண்டியுள்ளதே, அதைப் பற்றித்தான்.''

''ஆமாம், அதிலே என்ன சிக்கல் இருக்கிறது? யாராவது ஒருவரை அனுப்பி வைத்திட வேண்டியது தானே?''

''என்ன இவ்வளவு சாதாரணமாகக் கூறிவிட்டீர்கள், இளவரசர் அவர்களே! இன்று இந்தப் பாண்டிய மண்டலம் முழுவதுமே என்ன எதிர்பார்க்கிறது; என்ன பேசிக் கொண்டிருக்கிறது தெரியுமா?''

''என்ன பேசிக் கொண்டிருக்கிறது?''

''ரோமாபுரி நாட்டுக்குத் தூதுவராகச் சென்றிடக் கூடிய தகுதியும் திறமையும் படைத்த ஒரே தலைவர் தாங்களே என்றுதான் நாட்டு மக்கள் மனம்விட்டுப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.''

''அப்படியா? நான் அதைப்பற்றிச் சிந்தித்திடவே இல்லையே!''

''தாங்கள் வேண்டுமானால் பதவி ஆசை இல்லாதவராக - தாமரை இலைத்தண்ணீராக - ஒதுங்கி இருந்திட முற்படலாம். ஆனால் நல்லவர்கள், நாட்டு நலனில் அக்கறை உள்ளவர்கள் அவ்வாறெல்லாம் கண்ணைப் பொத்திக்கொண்டு வாளா இருந்திட முடியுமா? அதனால்தான் தங்களைத் தூதுவராக அனுப்பி வைத்திட வேண்டும் என்று எல்லாரும் விரும்புகின்றார்கள்; நானும் விரும்புகின்றேன். எனினும் நமது மன்னர் அவர்களோ வேறுவிதமாக முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. அதைக்கேட்டு நாடே கொந்தளிப்பில் ஆழ்ந்திடுமோ என அஞ்சுகிறேன்.''

''மன்னர், யாரை அனுப்புவதற்கு முடிவு செய்திருக்கிறார்?''

''மிகமிகச் சாதாரணக் குடியில் பிறந்து - மெய்க்காவல் மறவனாக அலுவல் பார்க்கிறானே செழியன்; அவனைப் போய்த் தேர்ந்தெடுத்திருக்கிறாராம்.''

''செழியன்தானா? அப்படியானால் அது மிகச்சிறந்த தேர்வு ஆயிற்றே!''

''என்ன இளவரசே இப்படிக் கூறிவிட்டீர்கள்? செழியன் யாரென்று தங்களுக்குத் தெரியுமா?''

''ஓ! நன்றாகத் தெரியுமே? அவனுக்கு ஈடாக நான் என்ன, நம்மவர்களில் யாருமே இல்லை என்று நான் துணிந்து கூறிடுவேன். அவன், சுறுசுறுப்பு மிகுந்தவன்; தூங்காமல் உழைப்பவன்; நம்பிக்கைக்கு உரியவன்; நாணயம் நிறைந்தவன்; கருணையுள்ளம் கொண்டவன்; கடமையாற்றுவதில் வல்லவன்; அரசுக்கு உண்மையோடு தொண்டாற்றிடும் பொழுதே ஏழைகளின் சிரிப்பிலே இறைவனைக் காணத்துடிப்பவன்; அவன் அடக்கமானவன்; வயதில் இளையவன் என்பதனால் எதையுமே அறிந்திடாதவன் என்று இளக்காரமாக எண்ணிடாதீர்கள்! அவனுடைய ஆற்றலைப் பற்றித்தான் நாட்டுமக்கள் நன்றாக அறிவார்

களே! கரிகால் சோழரை காப்பாற்றிய பெருமையும் அவனுக்கு உண்டா யிற்றே! எல்லாவற்றுக்கும் மணிமகுடம் சூட்டினாற் போல் அண்மையில் அறங்கூறு அவையத்திலே அவன் நடு நிலைமையோடு அளித்திட்ட சாட்சியத்தைக் கேட்டு நாடே வியந்ததே! இந்நிலையில், அவன் நம் தூதுவனாகச் செல்வதற்கு நம்முடைய மக்கள் எதிர்ப்பினையாவது எழுப்பிடவாவது? என்னால் நம்ப முடியவில்லை தளபதியாரே.''

''தாங்கள் மொழிவதைக் கேட்டு என்ன புகல்வதென்றே எனக்குப் புரியவில்லை. செழியன் அறிஞனாக - ஆற்றல்மிக்க மறவனாக இருந்திடலாம். ஆனால் அவனுடைய குடிப்பிறப்பு என்ன? பிற்பட்ட குடியினில் பிறந்தோரையெல்லாம் நாம் பெரிய பதவிகளுக்குத் தேர்ந்தெடுத்திடலாமா? பிறகு அந்தப் பதவிகளுக்குரிய பெருமை தான் என்ன என்று பெரியவர்கள் சிலர் கேட்கின்றார்கள். அவர்களுக்கு நாம் என்ன மறுமொழி தருவது?

''தாங்கள் சொல்வதைக் கேட்டு எனக்குச் சிரிப்புத் தான் வருகிறது தளபதியாரே: குடிப்பிறப்புப் பற்றிப் பெருமிதம் பேசிடும் கொடிய பிணி நமது மண்ணையும் தொற்றிக் கொண்டு விட்டதா? மேட்டுக் குடியிலே பிறந்தவர்கள்தான் மேலான பதவிகளைத் தாங்கிடவேண்டும் என்பது என்ன நேர்மை? என்ன நீதி? என்ன அறம்? அதுவும் கடவுள் நம்பிக்கை மிகுந்தவர்களாகத் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்கின்றவர்களே, அதே கடவுளின் குழந்தைகளிடம் உயர்வு தாழ்வு கற்பித்துச் சாதிச் சழக்குகளை ஊடுருவவிட்டு, உயர்ந்த குடியினில் பிறந்தவர்களே மேலும் உச்சிக்குச் சென்றிட வழிவகுக்கலாமா? சதி புரியலாமா? பிற்பட்ட குடியில் பிறந்த ஒருவன் எத்துணைத் திறமைசாலியாக இருப்பினும் பெரிய மனிதன் ஆவதா என்ற வயிற்றெரிச்சல் கொள்ள லாமா? இது அவர்கள் வழிபடுகின்ற தெய்வத்திற்கே அடுக்குமா? அவர் களுக்கு மனச்சாட்சி என்று ஒன்று இருந்தால், அந்த மனச்சாட்சிக்கே அது ஒருப்படுமா? குடிப்பெருமையில்லை என்கிற காரணத்திற்காக ஒருவனு டைய அறிவை - திறமையை இழிவாக எண்ணுவதைப் போன்ற கேவல மான குணம் - நச்சுப் பண்பாடு வேறு எதுவுமே இல்லை. அந்தப் போக் கினை நான் அறவே வெறுக்கிறேன். மேட்டுக்குடிப் போக்கினை நான் அறவே வெறுக்கிறேன். மேட்டுக் குடியினில் பிறந்திருப்பதாகப் பீற்றிக் கொள்ளும் அந்த அகங்காரர்களின் வாயினை அடைப்பதற்காகவேனும் செழியனைத்தான் நாம் தூதுவராகத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்திட வேண்டும்; மன்னர் அவனைத் தேர்ந்தெடுத்தது முழுக்க முழக்கச் சரியானதே!'' என்று அழுத்தமாக மொழிந்திட்டான் இளம்பெருவழுதி.

தன்னைத் தூதுவர் பதவிக்குத் தேர்ந்தெடுத்திடவில்லையே என்கிற ஆத்திரம் நெடுமாறனுக்கு. எனவே, தனயனின் கரத்தினைக் கொண்டே

தந்தையின் கண்ணைக் குத்துவதற்குச் சதி புரிய முயன்றிட்டான் அவன். ஆனால் அவனுடைய சூழ்ச்சி பரந்த உள்ளம் படைத்திட்ட பாவலனும், தனிப்பெரும் பண்பு உடைய நாவலனும், இனக்காவலனுமான இளம்பெருவழுதியிடம் பலித்திடவில்லை.

ஒரு கிழமை உருண்டோடிற்று.

பெருவழுதிப்பாண்டியன், காரிக்கண்ணனார் உட்படப் பெரியோர் கள், பேரறிஞர்களின் வாழ்த்து மலர்களை மலை மலையாகச் சுமந்த வண்ணம், பொறுப்புமிக்க அந்தப் பதவியினை ஏற்றிட, ரோமாபுரி நோக்கி புறப்பட்டுச் சென்றிட்டான் செழியன்.

தென்பாண்டிக் கடற்கரையே அன்று திருவிழாக் கோலம் பூண்டு அவனைக் கோலாகலமாக வழியனுப்பி வைத்தது.

செழியனின் விழிகள் இரண்டும் செக்கர் வானம் போல் சிவந்து பளபளத்தன. கண்ணீர் சுனைகளாகிக் கடகடவென்று நீரையும் பொழிந்து தள்ளின. ஏழ்மை ஒன்றினையே தோழமையாகக் கொண்டிட்ட தனக்கு - குடிப்பெருமை பேசிக் கும்மாளங்கொட்ட முடிந்திடாத தனக்கு - இத்துணை கோலாகலமாக ஒரு வழியனுப்பு விழா நிகழ்ந்திடக் கூடுமென்று அவன் நினைத்ததே இல்லை. அதுவும், பெருவழுதிப் பாண்டியன் பிணியோடு போராடி அப்பொழுதுதான் தேறி எழுந்திட்டான். தன்பொருட்டே மதுரை மாநகரினின்றும் கொற்கை வரை வந்து வாழ்த்து மலர்களை வாரிச் சொரிந்திடுவான் என்று அவன் கனவிலும் கருதிடவில்லை. அளவிடற்கரிய பாசப்புனல், செழியனின் உள்ளத்தைப் புல்லரிக்க வைத்திட்டது. உடம்பையும் குன்றிடச் செய்திட்டது. அந்த நன்றியுணர்வின் வெளிப்பாடே கண்ணீர் அருவியாகி அவனது கன்ன மேட்டினில் தவழ்ந்து வழிந்தோடிற்று.

தான் ஏறி நிற்கும் அந்த மாபெரும் மரக்கலம், நீலக்கடலினை உழுதுகொண்டு நெடுந்தொலைவு வந்திட்ட பின்னரும், செழியனின் பரந்த முகம் கொற்கைத் துறைமுகத்தினை நோக்கியே திரும்பி இருந்திட்டது. நினைவுகள் அனைத்துமே தமிழ் மண்ணைப் பற்றியே தழுவிக் கிடந்தன.

கடந்த ஒரு கிழமைக்கு முன்னர்கூடத் தான் இப்படியொரு நெடும் பயணத்தில் ஈடுபடக் கூடுமென்றோ, தனக்காக ஒரு பொறுப்பு மிக்க பெரும்பதவி காத்திருக்குமென்றோ செழியன் எண்ணிடவே இல்லை. அறங்கூறு அவையத்திலே அவன் சாட்சியம் அளித்திட்ட அன்று மாலை தான் யாரும் அருகினில் இல்லாத வேளையாகப் பார்த்துப் பாண்டிய வேந்தன் தம் முடிவினை அவனிடம் பகர்ந்தார். முதலில் அவனால் அதனை நம்பிடக்கூட முடியவில்லை. தம்முடைய மகன் இளம்பெரு வழுதிக்குக் குறுக்கே தளபதி நெடுமாறன் தடைச்சுவர்களை எழுப்புகின்றானே என்னும் ஆத்திரத்தில் அல்லது மன அலுக்கையில் தான் தன்னை அந்தத் தூதுவர் பதவிக்குத் தேர்ந்தெடுத்திருப்பதாக மன்னன் வேடிக்கைக்காக மொழிகின்றானோ என்று கூட அவன் எண்ணினான்.

ஆனால், கொற்கையைவிட்டு இளம்பெருவழுதியை ஏன் வெளியே அனுப்பிட இயலாது என்பதனையும், ரோமாபுரியிலே மேற்கொண்டிட வேண்டிய பணிகளைப் பற்றியும் அவன் விளக்கிய பிறகே, உண்மை யாகத்தான் அரசர் உரைக்கின்றார் என்று உணர்ந்து தெளிந்திட்டான் செழியன்.

பதவி என்றதுமே பல்லக்கிலே பவனி வந்திட லாம்; பஞ்சணையிலே படுத்துப் புரண்டிடலாம்; இட்ட பணியினைச் செய்திட - ஏவியதை முடித்திட - எடுபிடிகள் ஏராளமிருப்பர்; எனவே இன்பக் குளத்திலே தன் இச்சைப்படி யெல்லாம் நீச்சலடித்திடலாம் என் றெல்லாம் சிலர் கற்பனைச் சரங்களை அற்புதமாகத் தொடுத்திடக்கூடும்!

ஆனால் செழியனைப் பொறுத்தவரை, பதவி என்பது களியாட்ட அரங்கமல்ல; கனி இதழ் அமுதும் அல்ல; கடமையைப் புரிந்திட, நுடமுற்று நலிவார்க்கு ஊன்று கோலாய்உதவிட, கருணையைப் பொழிந்திட, தடங்காணாது அலைவார்க்குத் தக்க வழித்துணையாகிட, அது ஓர் அருமையான வாய்ப்பு; வழி-கருவி-ஏற்பாடு அவ்வளவே!

எனினும் இன்னோர் எண்ணம் முகிழ்த்து அவனது இதயக் கருத்தினையே வாட்டி வதைத்திட்டது.

அந்த எண்ணம் வேறு எதனைப் பற்றியதும் அல்ல; தாமரையைப் பற்றியதே!

இருங்கோவேளின் தங்கையாகப் பிறந்திட்ட போதிலும் அவள் இரும்பு நெஞ்சம் கொண்டவள் அல்லள்; தன்பால் கரும்பு மனம் பூண்டவளே என்பதனை அவளோடு குறுகிய காலமே பழகிட நேர்ந்திட்ட போதிலும், உறுதியாக அவன் உணர்ந்திருந்தான்.

புகார் அரண்மனையினின்றும் அவள் காணாமற்போய் விட்டாள் என்றதுமே அவளை உடனே தேடிக் கண்டுபிடித்திடவேண்டும் என்று செழியனுடைய உள்ளம் துடியாய்த் துடித்திட்டது. ஆனால், அந்தச் சமயம் பெருவழுதிப்பாண்டியன் உடல்நலம் குன்றிவிட்டதாக வந்த செய்தியும் அதனையொட்டிக் கரிகாலன் விடுத்த கட்டளையும் அவனை அங்கே இங்கே அசைந்திடவிடாமல் மதுரைக்கே கொண்டு வந்து தள்ளின.

பாண்டியத் தலைநகரில் நுழைந்ததுமே பசுமலைப் பூசல் அவனைத் தன்பால் ஈர்த்து முழுவேலை வாங்கி விட்டது. அறங்கூறு அவையத்திலே சாட்சியம் கூறியதும் பின்னர் அதன் தொடர்பாகப் புலனாய்ந்திட வேண்டிய கண்டிப்பான கடமையும் தாமரையைப் பொறுத்து எந்த முயற்சியினையும் அவன் மேற்கொண்டிட இயலாதவாறு அவனது கை கால்களைக் கட்டிப் போட்டுவிட்டன.

இப்போதோ ரோமாபுரிக்கே தூதுவனாகச் சென்றிட வேண்டிய பெரும் பொறுப்பு!

இந்நிலையில் அவன் இனிமேல் தாமரையை எங்கே போய்த்தேடு வது? எங்ஙனம் அவளைச் சந்திப்பது? எப்போதுதான் அவள் இன்முகத் தினைக் கண்டு களிப்பது? தன் இதய மூட்டையில் சிறையிருக்கும் காதல் மணிகளைத் தான் இனி எந்தக் காலத்தில் அவிழ்த்து விடுவது?

'உன்னை ரோமாபுரிக்குத் தூதுவனாக அனுப்பி வைத்திட எண்ணி யுள்ளேன்,' என்று பாண்டிய மன்னன் பகர்ந்திட்ட அந்த நாள் முதல், நாவாயில் ஏறி ரோமாபுரிக்குப் பயணந் தொடங்கிடும் இந்த நாள்வரை மற்ற எல்லாவற்றையும்விடச் செழியனின் சிந்தனையை இறுக்கிப் பிசைந்திட்டது தாமரையை இனி, எப்போது, எங்ஙனம் சந்தித்திடப் போகிறோம் என்கிற ஏக்கமே !

அந்த ஏக்கத்தின் உறுத்தல் புலவர் காரிக்கண்ணனாரிடம் தாமரை யைப் பற்றி விவாதித்திடும் அளவுக்கும் செழியனைக் கொண்டுபோய் நிறுத்திற்று.

''தங்களுடைய அறிவுரைப்படியே தளபதி நெடுமாறர் கூறுவது போன்ற அவதூறு மொழிகளைக் கூடத் தள்ளிவிட்டே நான் ரோமாபுரி செல்வதற்கு ஆயத்தமாகி விட்டேன். ஆனால் இன்னொரு நினைப்புத் தான் செவியினில் நுழைந்திட்ட சிற்றெறும்பு போல என் நெஞ்சினையே துளைக்கின்றது; நோயினைக் கொடுக்கின்றது'' என்று இறங்கிய குரலில் இயம்பினான் செழியன்.

''எதைப் பற்றிய நினைப்பு, செழியா?'' என்று பரிவுடன் வினவினார் காரிக்கண்ணனார்.

''தாமரையைப் பற்றித்தான் குறிப்பிடுகிறேன். அவள் காணாமற் போய்விட்ட புதிரை விடுவிக்காமல் போகின்றோமே என்பதுதான் என்னை மிகவும் வாட்டுகிறது.''

''அந்தக் கவலை உனக்கு ஏன் செழியா? கரிகாற் சோழரும், பெருவழுதிப் பாண்டியரும் பார்த்துக் கொள்ள மாட்டார்களா? அவர் களைவிட இளவரசர் இளம்பெருவழுதி அவளைக் கண்டு பிடித்திடாமல் விடவே மாட்டாரே!'' ''

''அவருக்கு என்ன அவ்வளவு அக்கறை?''

''நீ வினவுவது வேடிக்கையாக இருக்கிறதே? காணாமற்போன காதலியைக் கண்டுபிடித்திடும் துடிப்பும் அக்கறையும் காதலனுக்குத் தானே மிகுதியாக இருந்திட முடியும்?''

''தாங்கள் உரைப்பது உண்மைதானா புலவர் அவர்களே'' பதைபதைப்புடன் கேட்டான் செழியன்.

''இதுவும் என்ன, பாக்களில் வரக்கூடிய கற்பனைக் காட்சிகளில் ஒன்றாகத்தான் இருந்திடும் என்று எண்ணிவிட்டாயா செழியா? மெய்யாகவே இளவரசர்-தாமரையைக் காதலிக்கத்தான் காதலிக்கிறார். கொற்கையில் நிகழ்ந்திட்ட மொழிப் போரினைப் பற்றிப் புகாரிலிருந்து நாம் மதுரை வந்திடும்பொழுதே புகன்றேன் அல்லவா? அந்த அறப் போரில் ஈடுபட்டிருந்த வேளையிலேயே நம் இளவரசர் தம் இதயத் தினைக் கொள்ளை கொடுத்துவிட்டார் அந்தக் கோதையிடம்! முத்துநகை உடன் வந்ததால் அவர்களுடைய காதலைப் பற்றிய உண்மையை வெளிப்படையாக அப்போது உனக்கு நான் உரைத்திட விரும்பவில்லை'' - காரிக்கண்ணனார் இவ்வாறு கூறக் கூறத் தன்னை யாரோ கழுத்தினை நெறித்திடுவதாகவே நொந்து மடிந்திட்டான் செழியன்.

கரைகடந்திடும் வெள்ளத்தின் நடுவே தெப்பம் ஒன்று தென்பட்டாற் போல, 'இளவரசரின் காதல் வெறுங்கைக் கிளையாக இருந்திட்டால்?' என்னும் எண்ணம் முகிழ்ந்திட்டது மின்னலாக; ஆனால், அடுத்த நொடியே '....உம்! என்ன இருந்தாலும் அவளும் இளவரசி. அவனும் இள வரசன்; பொருத்தமான இணை! நானோ சாதாரண மறவன்! என்னை எப்படி அவள் ஏற்றுக் கொண்டிட இயலும்? என்னுடைய காதல்தான் 'கைக்கிளையாக இற்று ஒடிந்திட வேண்டும்' என்று எண்ணி நைந்திட்டான் அவன்.

'அப்படியானால் அந்தத் தளிர்க்கொடியின் குளுகுளுப்பான கூரிய பார்வை, பன்னீர்ப்பூவின் மெல்லிய புன்னகை? காதினில் தேன் பாய்ச்சிய கனிவான மொழிகள் எல்லாமே நடிப்புத்தானா? நாடகந்தானா?' - பெருமூச்செறிவதைத் தவிர வேறு வழி என்ன இருக்கிறது செழியனுக்கு?

ஆனால் தாமரை இனி தனக்குக் கிட்டிடப் போவதில்லை என்னும் ஆறாத் துயரமே அவனது உள்ளத்தில் வெறுமையைத் தோற்றுவித்து, 'சரி; இந்தத் தமிழ் மண்ணிலே தங்கியிருந்து - தாமரையை இளம்பெருவழுதி யோடு சந்திக்கவும் நேர்ந்து - உள்ளுக்குள்ளேயே புழுங்கிச் சாவதைவிட வெளிநாடு சென்றிடுவது நல்லதுதான்!' என்னும் உறுதியான முடிவினை அவன் எடுத்திடவும் தூண்டியது.

வெளியிட்டுச் சொல்ல முடியாத அளவுக்கு இவ்வாறு எத்தனையோ அவதூறுகளும் அபாண்டப் பழிகளும் அலைக்கழித்திட்ட போதிலும் - தன்னுடைய காதற் கோட்டை வெறும் கானல் நீராக, மணல் வீடாகச் சரிந்து விழுந்து தன் இதயப்பரப்பினையே சுக்கல் நூறாக இடிந்து

நொறுங்கிடச் செய்திட்ட போதிலும் பெருவழுதிப் பாண்டியன் கொற்கை வரை வந்து வழியனுப்பி வைத்திட்ட காட்சி ஆறாத புண்கள் அத்தனைக்கும் அருமருந்தாகவே அமைந்து விட்டது!

சிப்பியோவின் உரத்த குரல் செழியன் உறக்கத்தைக் கலைக்கத் தவறிடவில்லை. உள்ளங்கையால் அழுத்திக் கசக்கி, இமைக் கதவுகளைத் திறந்து கொண்ட அவன், கொட்டாவி விட்டவாறே படுக்கையில் எழுந்து அமர்ந்திட்டான்.

காலைப் பகலவனின் கோல ஒளி, அந்த மரக்கல அறையினுள் வட்டவடிவமான சிறு சாளரத்தின் வழியே மெள்ள எட்டிப் பார்த்திட முனைந்தது.

உடம்பினை நெளித்துச் சோம்பலைத் துரத்திட முயன்றிட்ட செழியன், ''நாம் இப்போது எங்கே வந்திருக்கிறோம்?'' என்று தன் எதிரே நின்று கொண்டிருந்த சிப்பியோவை நோக்கிக் கேட்டான்.

''டைபர் நதி கடலில் கலந்திடும் இடத்துக்கு வந்து விட்டோம். தூதுவர் அவர்களே!'' என்று விடையிறுத்தான் அந்த ரோமாபுரி இளைஞன்.

''இங்கிருந்து ரோமாபுரி நகருக்கு இன்னும் எவ்வளவு தொலைவு இருக்கும்?''

''ஏறத்தாழப் பதினைந்து கற்கள் இருக்கலாம்.''

''அப்படியானால் விரைவிலேயே நம்முடைய இந்த நெடும் பயணம் முடிவு பெறப்போகிறது என்று சொல்லுங்கள்!''

''ஆம், தூதுவர் அவர்களே!''

''இத்தனை நாட்கள் கடலிலேயே பயணம் புரிந்திட்ட போதிலும், அலுப்போ, சலிப்போ அவ்வளவாக எனக்கு ஏற்படாமல் இருந்ததற்கு என்ன காரணம் தெரியுமா, சிப்பியோ?''

''என்ன காரணம்?''

''நீங்கள் எனக்கு வழித்துணையாக வாய்த்திட்டது தான்!''

செழியனின் இந்தப் புகழுரையைக் கேட்டதும், வெட்கத்தால் உடல் குன்றிப் போனான் அந்த இளைஞன்.

பாண்டிய நாட்டுத் தூதுவனும், வெறும் முகத்துதிக்காக அவனைப் பாராட்டிடவில்லை. தான் தமிழகத்தை விட்டுக் கிளம்பும்பொழுது தனக்குத் துணையாகக் கொற்கைப் பட்டினத்து இளவரசரின் துணை மெய்க்காவலனாகப் பணியாற்றிடும் வடிவம்பலம் என்னும் மற வனையே தன்னோடு அழைத்து வந்திடுவதற்கு எண்ணியிருந்தான் அவன். ஆனால், தாமரையைத் தேடிடும் வேலையில் ஈடுபடுத்திட வேண்டி,. அவனை அனுப்பி வைக்க இசைந்திடவில்லை இளம் பெருவழுதி. தன்னுடைய முழு நம்பிக்கைக்கும் உரியவனாக வேறு யாரைத் தேர்ந்தெடுப்பது என்று செழியன் குழம்பிக் கொண்டிருந்த வேளையில், "நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? உங்களைப் போலவே தமிழ் மட்டுமே அறிந்த ஒருவரைத் துணைக்கு அழைத்துச் செல்வதை விடத் தமிழ் இலத்தீன் இரண்டு மொழிகளும் அறிந்த ஒருவர் துணையாக வந்தால் நல்லதுதானே? எங்கள் நாட்டிலிருந்து வணிகத்தின் பொருட்டு அயல்நாடு களுக்கெல்லாம் சென்று அனுபவங்கள் நிறையப் பெற்ற இளைஞன் ஒருவன் என்னுடன் இங்கே வந்துள்ளான். அவன் பெயர் 'சிப்பியோ' என்பதாகும். அவனை உங்களுக்குத் துணையாக அனுப்பி வைக்கிறேன். நீங்கள் விரும்பினால், ரோமாபுரி சென்ற பிறகும் உங்களுடைய மொழிபெயர்ப்பாளனாக அவனைப் பயன்படுத்திக் கொண்டிடலாம்" என்றார் பாண்டிய நாட்டுக்கு வந்திருந்த ரோமாபுரி யின் தூதுவர். அவருடைய வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டே, சிப்பியோ என்னும் அந்த இளைஞன் செழியனுக்கு இதுகாறும் வழித்துணையாக வந்ததோடு, அவனுக்குத் தேவையான பற்பல வசதிகளையும் கவனித்துக் கொண்டான்.

மரக்கலம் கடந்திட்ட ஒவ்வொரு நிலப் பகுதியைப் பற்றியும் அவன் அளித்திட்ட விளக்கங்கள் - வரலாற்று உண்மைகள் - கற்பனைக் கதைகள் யாவற்றிலும் சுவை கூட்டித் தன்பால் ஈடுபாடு கொள்ளுமாறு செய்துவிட்டான் செழியனை.

செழியனிடம் அசைத்திட முடியாத ஓர் அன்புப் பிணைப்பு உண்டாயிற்று சிப்பியோவுக்கு! அதனால்தான் ரோமாபுரி மன்னர் மற்றும் அரசாங்க அதிகாரிகளுடன் தான் உரையாடுவதற்கு உரிய பாலமாக - மொழி பெயர்ப்பாளராக உதவிடவேண்டும் என்ற செழியனின் கோரிக்கையை அவனால் உதறித் தள்ளிட - புறக்கணித்திட முடிந்திட வில்லை.

காலைச் சிற்றுண்டியை ஒருவழியாக முடித்துக்கொண்டு செழியன், அந்த அறையிலேயே முடங்கிக் கிடந்திடாமல் வழக்கம் போல், அந்த மரக்கலத்தின் மேல்தளத்திற்குச் சென்றிட்டான். சிப்பியோவும் அவனைப் பின் தொடர்ந்தான்.

காலைநேரத்தில் 'சுள்' என்று வீசிடும் இளவெயிலில் அவனைத் தொற்றிக் கொண்டிருந்த குளிர் பறந்தோடிற்று. உடம்பிற்கும் உள்ளத் திற்கும் ஒரு தனியான சுறுசுறுப்பு உண்டாயிற்று.

''டைபர் நதி இத்துணை அகலமாக இருக்குமென்று நான் நினைத்திடவே இல்லை'' என்றான் செழியன்.

''அகலமானது மட்டுமல்ல; தத்துவப் பேரறிஞர்களின் சிந்தனையைப் போல் இந்த நதி ஆழமானதும் கூட!'' என்றான் சிப்பியோ.

''இதன் கரையிலேதான் ரோம் நகரம் அமைந்துள்ளது இல்லையா?''

''ஆம், தூதுவர் அவர்களே!''

''ஆற்றங்கரையிலே அமைந்திருக்கும் எந்த நகருமே ஒரு தனி அழகுதான்! ஆனால் பூம்புகாரைப் போலக் கடலை ஒட்டியே ரோமாபுரி இருந்திருந்தால் இன்னும் அதன் சிறப்பு மேலோங்கியிருக்கும் இல்லையா?''

''மாவீரன் ரோமுலசுக்கும் முதலில் அந்த எண்ணம் தான் ஏற்பட்ட தாம். ஆனால், இங்கே கடற்கொள்ளைக்காரர்களின் கொடுமையான நடவடிக்கைகளைக் கண்டு அஞ்சியே உள்நாட்டில் ரோம் நகரை அவனே நிறுவினானாம். இப்போதும் அதன் எழிலுக்கு ஒன்றும் குறைவு இல்லை. அதுவும் எங்கள் அகஸ்டஸ் மன்னர் அரியணை ஏறிய பின்னர் அவருடைய அற்புதமான வீடு கட்டும் திட்டங்களால், தலைநகருக்கு ஒரு தனிப்பொலிவே உண்டாகியுள்ளது.''

''ஆமாம், அகஸ்டஸ் மன்னர் ஜூலியஸ் சீசரின் நேரான வழித் தோன்றல் இல்லையாமே? அவருடைய உடன்பிறந்தவர் ஒருவரின் பேரப்பிள்ளைதானாமே! அப்படியானால் ஜூலியஸ் சீசரின் பெயரைச் சொல்லிட அவருக்கு என்று பிள்ளையே பிறந்திட வில்லையா?''

''ஏன் பிறந்திடவில்லை? எகிப்து நாட்டில் எழிலரசி கிளியோபாத்ரா பெற்றெடுத்த 'சீசரியோன்' என்பவர் ஜூலியஸ் சீசரின் மகன்தானே! ஒரு காலத்தில் சீசர் மன்னர் தம்முடைய தலைநகரையே அலெக்சாண்டிரி யாவுக்கு மாற்றிக் கொள்ளப் போகிறார் என்றும், அங்கே ஆண்டிடும் கிளியோபாத்ராவை மணந்து கொண்டு தங்களுக்குப் பிறந்திட்ட சீசரியோனைத் தம்முடைய சட்டப்படியான - முறையான மகன் என்று அறிவித்திடப் போகிறார் என்று கூட வலுவான வதந்திகள் உலவினவாம். ஆனால், தம்முடைய பெருமைமிக்க 'ஹெலனி'யப் பரம்பரையில் உதித்திட்ட ஒருவரே தமக்குப் பின்னர் ரோமாபுரிப் பேரரசின் மாமன்ன ராக மகுடம் சூட்டிட வேண்டும் என்று விழைந்ததாலேயே,. அவர் அந்த எண்ணத்தைக் கைவிட்டு விட்டாராம். அத்துடன் பிஞ்சுப் பருவத்தி

லேயே பெருஞ் சூட்டிகையோடு துறுதுறுவென்று விளங்கிய தம்முடைய ஒன்றுவிட்ட பேரப் பிள்ளையாகிய ஆக்டேவியன் பிற்காலத்திலே இணையற்ற வீரராய் இலங்கிடுவார் என்னும் எண்ணம் சீசரின் இதயத்திலே அழுத்தமாகப் பதிந்து விட்டது. அதனால் தான் தம்முடைய வழித்தோன்றலாக - தத்துப் பிள்ளையாக ஆக்டேவியனைப் பற்றி தமது உயிலிலேயே குறிப்பிட்டிருந்தாராம் அவர். அந்தக் குறிப்பு மட்டும் இல்லாமற் போயிருந்தால், கதையே வேறு விதமாக மாறியிருக்கும்.''

''எப்படி?''

''தம்முடைய மனைவி கல்பூர்னியா எவ்வளவோ அச்சத்துடன் தடுத்திட்ட போதிலும், கருவி ஏதுமின்றி வெறுங்கரத்தோடு செனெட் சபையினை நோக்கிச் சென்றிட்ட ஜூலியஸ் சீசரை வஞ்சகமாய் வளைத்துக் கொண்டு கொன்றார்கள் அல்லவா? அந்தச் சதி நாடகத்தின் தலையாய கதாநாயகர்களான கேசியசோ, புரூட்டசோ அல்லது மாவீரன் மார்க்அந்தோணியோ, லெபிட்சோ அரியணைக்கு உரிமை கொண்டாடி யிருப்பார்கள். அரசர் ஆக்டேவியனே, சீசரின் உயிலைப் பற்றி அறியாமல் போயிருந்தால் தாழ்வு மனம் கொண்டு ஒதுங்கியோ சென்றிருந்தாலும்கூட வியப்படைவதற்கு இல்லை?''

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் ஜூலியஸ் சீசருக்குப் பின்னுள்ள ரோமாபுரியின் அரசியல் வரலாற்றிலே அவருடைய உயிலுக்குப் பெரும் பங்கு உண்டு என்று தெரிகிறதே!''

''ஆம், தூதுவர் அவர்களே, அந்த உயிலினால் அரசர் ஆக்டேவியன் மட்டும் பலன் பெறவில்லை. ரோம் நகர மக்களும் பெரும்பயன் அடைந்தார்கள்!''

''எப்படி?''

''டைபர் நதிக்கு அப்பால், தாம் அரும்பாடுபட்டு வெகு தொலைவு வரை செழிப்போடு வளர்த்து வைத்திருந்த அழகான தோட்டங்களை, ஒவ்வொரு ரோம் நகரக் குடி மகனுக்கும் தலைக்கு இவ்வளவு பரப்பளவு என்று உரிமைப்படுத்தி எழுதியிருந்தார் சீசர்!''

''வியப்பாக இருக்கிறதே! இணையற்ற மாவீரன் என்று மட்டுமே இதுவரை ஜூலியஸ் சீசரைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தேன்; அவர் தலை சிறந்த கொடை வள்ளலாகவும் திகழ்ந்திருக்கிறாரே. ஆமாம்; உங்களுடைய அகஸ்டஸ் மன்னர்தானே அந்த ஆக்டேவியன்?''

''அதிலே சந்தேகம் என்ன? தூதுவர் அவர்களே, இருவரும் ஒருவரேதான்!'' என்று சிரித்திட்டான் சிப்பியோ,

''அதுசரி; ஆக்டேவியன் என்னும் இயற்பெயரை விட்டுவிட்டு 'அகஸ்டஸ்' என்னும் புதுப்பெயரை ஏன் வைத்துக் கொண்டார்''

''அவராக ஒன்றும் வைத்துக் கொள்ளவில்லை; செனேட் மன்றமும், ரோமானிய மக்களும் சேர்ந்துதான் அந்தப் பட்டத்தை - புதுப் பெயரை அவருக்கு வழங்கினர். ஏன் தெரியுமா? ஜூலியஸ் சீசருக்குப் பின்னர், இந்த மாபெரும் ரோமாபுரிப் பேரரசு துண்டு துண்டாகச் சிதறி விடும் என்று எதிரிகள் எதிர்பார்த்தனர்; உள்நாட்டிலும் பலர் பதவி வேட்டையாடிக் கலகம் விளைக்க முற்பட்டனர். அவர்களுடைய சூழ்ச்சிகளையெல்லாம் முறியடித்து நாட்டின் பெருமையைக் காத்திட, மக்களுக்கு நல்வழ்வு கிட்டிட, உயிரைப்பணயம் வைத்துப் போராடினார் ஆக்டேவியன். ஆனால், சிறிது காலத்திற்கு முன்னர் செனேட் மன்றத்தைக் கூட்டித் தம்முடைய அதிகாரங்களையும் தம்முடைய ஆளுகைக்குட்பட்ட மாநிலங்களையும் உடனே துறக்கப் போவதாகவும் அவற்றை செனேட் மன்றம், பொதுமக்கள் இவர்களுடைய பொறுப்பில் விட்டுவிடுவதாகவும் திடீரென்று அறிவித்து விட்டார் அவர். அவருடைய 'பதவித் துறப்பு' எல்லாருக்குமே அதிர்ச்சி அளித்திட்டது. அவர்பால் பெருமதிப்பையும், அன்பையும் பொது மக்களிடையே அது உருவாக்கி விட்டது. செனேட் மன்றம் அவருடைய பெருந்தன்மைக்கு நன்றி செலுத்திடும் வகையில், நாட்டு நலனை முன்னிட்டு ஆட்சிப் பொறுப்புகளை அவர் ஏற்றிடத்தான் வேண்டும் என்று வற்புறுத்திற்று. ஏராளமான அதிகாரங்களை வழங்கிடவும் அது முன் வந்தது. அதுமட்டுமா? அவர் மீது அளவிடற்கரிய சிறப்புப் பட்டங்களையும் அள்ளிச் சொரிந்தது. அவருடைய வீரம், கருணை, நீதி, நேர்மை ஆகிய பண்பு நலன்களைப் பாராட்டிடும் வகையினில் தங்கத்தால் ஆன பட்டயம் செனேட் மண்டபத்தினுள்ளேயே பதிக்கப் பெற்றது. அப்போதுதான் முதற்குடிமகன் 'அகஸ்டஸ்' என்னும் மிக உயர்ந்த சிறப்புப் பட்டம் அவருக்கு வழங்கப்பட்டது. அது முதலாக ஆக்டேவியன் என்னும் இயற்பெயரே மறையும் அளவுக்கு 'அகஸ்டஸ்' என்னும் சிறப்புப் பெயரே நிலைக்கலாயிற்று.

''நீங்கள் கூறியவற்றையெல்லாம் சிந்தித்துப் பார்த்தால் உலகத்தின் கவனத்தை ஈர்ப்பதில் ஜூலியஸ் சீசரையும் மிஞ்சி விடுவார் போல் இருக்கிறதே உங்கள் அகஸ்டஸ் மன்னர்!'' என்று தன் வியப்பினை வெளிப்படுத்தினான் செழியன்.

''நீங்கள் மொழிவது முற்றிலும் சரிதான் தூதுவர் அவர்களே! போரிலே புயவலிமையினைக் காட்டிடும் புலியாகப் பாய்வதைப் போன்று அமைதியை நிலைநாட்டுவதிலும் அழகுப் புறாவாக அவர் திகழ்கின்றார்.கலைகளை வளர்த்திட வேண்டும். இலக்கியங்களைப்

பெருக்கிவிட வேண்டும் என்றெல்லாம் அவர் கொண்டிருக்கும் பேரார்வம் இருக்கிறதே, அது அளவிடற்கரியது, அழகான வீடுகளை எழுப்புவதிலும், ஆட்சித் துறையினைச் செப்பனிடுவதிலும் அவர் காட்டிடும் அக்கறையும் கொஞ்ச நஞ்சமல்ல.

மொத்தத்தில் நாடு முழுவதும் வறுமை அகன்று, வளங்கள் நிறைந்து, புதுமை மணம் கமழ்ந்திடும் பொருட்டுப் புதுப்புதுத் திட்டங்களைத் தீட்டிய வண்ணமே உள்ளார் எங்கள் அகஸ்டஸ் மன்னர். பழம்பெருமை வாய்ந்த தமிழகத்தோடு தூதுவராகத் தொடர்புகளை அவர் மேற்கொள்ள முற்பட்டதே வேறு யாருக்குமே தோன்றிடாத புதுமையான ஏற்பாடல்லவா?'' என்று பெருமிதத்தோடு கூறி மகிழ்ந்திட்டான் சிப்பியோ.

மரக்கலம் ரோம் நகரினை நெருங்கிற்று. செழியனை வரவேற்றிட செனேட் உறுப்பினர்கள், அரசாங்க அதிகாரிகள் மட்டுமின்றிப் பொதுமக்களும் வந்திருந்தனர்.

இவ்வளவு திரளாக ரோமானியர்கள் குழுமிநின்று தனக்கு உற்சாகமான வரவேற்பினை வழங்கிடுவர் என்று செழியன் எதிர்பார்த்திடவே இல்லை.

நானிலம் போற்றிடும் நாகரிகத்தின் தொட்டிலாகத் தன் புகழ்ப் பதாகையின் பட்டொளி வீசிப் பறக்க விட்டுக் கொண்டிருக்கும் அந்த ரோமாபுரி மண்ணில் தன்னுடைய காலடிகளை வைத்ததுமே செழியனுடைய உடலும் உள்ளமும் புளகமுற்றுச் சிலிர்த்தன.

அயல்நாடு ஒன்றிலே பல நூறு மனிதர்களின் பார்வைக்கு விருந்தாகப் பாராட்டிற்கு உரியவனாக - தன்னை உயர்த்திவிட்டு எங்கோ தொலை தூரத்திற்கு அப்பால் அமைதியாக அமர்ந்திருக்கும் பெருவழுதிப் பாண்டியனையே அப்போது தன் நெஞ்சினுள் நினைத்து நன்றியறிதலோடு வழிபாடு புரிந்து கொண்டான் செழியன்.

மரக்கலத்தைவிட்டு இறங்கித் தரையினில் அவன் அடி வைத்ததுமே அங்கே நெருக்கியடித்துக் கொண்டு நின்றிருந்த கூட்டத்தை விலக்கிக்கொண்டு, அவனுக்கு முதன் முதலில் வரவேற்பு மாலையைச் சூட்டிட வந்தது யார் தெரியுமா?

ஓர் அழகுப் பதுமை!

அவளுடைய நீல விழிகள் நெஞ்சின் அடிக்குருத்தையே வருடி விடுவதுபோல் வந்தன செழியனை நோக்கி.

''இவள் யார்?'' என்று தன் அருகில் நிற்கும் சிப்பியோவைத் தணிந்த குரலில் அவன் கேட்டு முடிப்பதற்குள் - ஆரணங்கின் அழகு மாலை, செழியனின் கழுத்தில் வந்து விழுந்து விட்டது!

கரவொலிகள் விண்ணைப் பிளந்தன; இன்னிசைக் கருவிகள் பண்மாரி பொழிந்தன.

மாலையை அணிவித்த அந்த மடந்தை அத்துடன் திரும்பிடவில்லை; வாழைக் குருத்தினையொத்த தன் வாளிப்பான பூங்கரத்தினால் செழியனின் கையை இறுக்கிப் பற்றிக் குலுக்கினாள்.

''ரோமாபுரிப் பெருநாட்டின் ஆட்சித் தலைவர் அகஸ்டஸ் அவர்களின் சார்பிலே உவகைப் பெருக்குடன் உளமார வரவேற்கிறேன். தமிழ் வளர்த்திடும் பாண்டிய நாட்டின் தூதுவராக வந்திருக்கும் தங்களுக்கு எங்கள் மக்கள், செனேட், அரசாங்கம் ஆகிய எல்லாருடைய சார்பிலும் இதயங்கனிந்த வாழ்த்துக்கள்!'' என்று அவள் இலத்தீனில் உரைத்திட்டவற்றை மொழிபெயர்த்திட்டான் அருகினில் நின்றிருந்த சிப்பியோ.

''தங்களுடைய சிறப்பு மிக்க வரவேற்புக்கு என் உளங்கனிந்த நன்றி! கலை, வாணிகம், பண்பாடு - முதலான எல்லாத் துறைகளிலுமே தமிழகமும் ரோமாபுரியும் இணைந்து முன்னேறிட முடியும் என்கிற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்கிறேன். எங்கள் மூவேந்தர்கள் உட்பட தமிழக மக்கள் அத்தனை பேருடைய நல்லெண்ணத்தையும் உரித்தாக்குகிறேன்'' என்ற செழியனின் மறுமொழியையும் சிப்பியோ மொழி பெயர்த்திட்டான்.

சிறிது நேரத்தில் நன்கு அலங்கரிக்கப்பட்ட புரவிகள் பூட்டப்பெற்ற தேர் ஒன்றில் செழியன் ஏறி நின்றான்.

''நீங்களும் தேரில் ஏறிக் கொள்ளுங்கள். அப்பொழுதுதானே தேர் கடந்து சென்றிடும் ஒவ்வொரு முக்கியப்பகுதியைப் பற்றியும் அவருக்கு நீங்கள் விளக்கம் உரைத்திடலாம்!'' என்று இலத்தீனில் கூறினாள் அந்த ஆரணங்கு.

அவளுடைய வார்த்தைகளுக்கு இணங்க, சிப்பியோவும் செழியனுடன் ஏறி நின்றான்.

வாழ்த்தொலிகளுக்கிடையே - வரவேற்பு முழக்கங்களுக்கிடையே அந்த அழகான தேர் அசைந்து நகர்ந்திட்டது.

''ஆமாம், அந்தப் பெண் யார் என்று முன்பேகேட்டேன்; நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே!'' என்று தன் ஆவலைக் கட்டுப்படுத்திட இயலாமல் சிப்பியோவை வினவினான் செழியன்.

''மன்னரின் சார்பில் மலர் மாலை சூட்டியதிலிருந்தே அவள் எத்தகைய உயர்ந்த இடத்தினில் இருந்திட வேண்டும் என்பது தெரியவில்லையா!'' என்று சிரித்தான் சிப்பியோ.

''ஒரு வேளை அகஸ்டஸின் அருமை மகளோ?''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்.''

''அது என்ன, வைத்துக் கொள்வது?''

''சொந்த மகள் இல்லை; ஆயினும் தனக்குப் பிறந்த ஜூலியாவைவிட எத்தனையோமடங்கு மேலாக அவளை நேசிக்கின்றார் அகஸ்டஸ் மன்னர். அதனால்தான் அப்படிச் சொன்னேன்!''

''அவள் பெயர் என்ன?''

''ஜூனோ,'' என்ற சிப்பியோ அதற்கு மேலும் செழியனின் பொறுமையினைச் சோதித்திட விழையாதவனாக அவரைப் பற்றிய விவரங்களை விளம்பிடத் தலைப்பட்டான்.

''எகிப்திய எழிலரசி கிளியோபாத்ராவைப் பற்றித்தான் கேள்விப்பட்டிருப்பீர்களே?''

''அழகினை அழியாமல் காப்பாற்றிடக் கழுதைப்பாலிலே குளித்தாள் எனக் கதை கதையாகப் பேசப்படும் அவளைப் பற்றி யார்தான் அறிந்திட மாட்டார்கள்?''

''அந்தக் கிளியோபாத்ராவிடம் - பணிப்பெண்ணாகத் தோழிக்குத் தோழியாகத் - தன் பிஞ்சுப் பருவத்தில் தொண்டு புரிந்து வந்தவளே இந்த ஜூனோ. அகஸ்டஸ் மன்னர் எகிப்தின் மீது படையெடுத்து வெற்றிக் கொடியினை நாட்டியபொழுது அந்தத் தோல்விச் சுமையினைத் தாங்கிடும் நெஞ்சுரத்தின் இழந்திட்ட நிலையில், தன் ஆசைக்கிளியும் மடிந்து விட்டாள் என்னும் தவறான செய்தியினை நம்பித் தற்கொலையைத் தழுவிக் கொண்டார் மாவீரர் அந்தோணி. அப்போது அரண்மனையில் நுழைந்துவிட்ட அகஸ்டஸ் மன்னரிடம் தங்கள் அரசியை இழிவாக நடத்திடக்கூடாது என்று இறைஞ்சி நின்றவள் இதே ஜூனோதான். தன் அரசியிடம் இவளுக்கிருந்த நன்றியுணர்வினைக் கண்டு வியப்பினில் ஆழ்ந்திட்டார் அகஸ்டஸ். ஆனால் அவருடைய கையினில் அகப்பட்டு விட்டால், அவமானம் அடைந்திட நேருமோ என்று அஞ்சிய கிளியோபாத்ரா, சீறும் நாகத்தை தன் சிவந்த இதழ்களிலே முத்தமிட வைத்துச் சாவின் மடியிலே போய் வீழ்ந்திட்டாள். தன் தலைவியின் பிணத்தைக் கட்டிக் கொண்டு ஜூனோ கதறிய கதறல், அகஸ்டசின் இதயத்தையே மெழுகென உருகிடச் செய்தது; அந்தச்

சிறுமியின் மீது தணியாத பாச ஊற்றுப் பொங்கிப் பீரிடுமாறும் அது செய்துவிட்டது. எகிப்திலேயே அவளை விட்டுவிட்டுத் திரும்பிட மனம் இல்லாத அகஸ்டஸ் மன்னர், அவளைத் தம் கையோடு ரோமாபுரிக்கு அழைத்து வந்திட்டார். அன்று முதல் அவருடைய மகளுக்கு மேலான மகளாக, அவருடைய உள்ளமென்னும் அரியணையிலே செல்லப் பெண்ணாக -செல்வாக்குமிக்கவளாகக் கொலுவேறி விட்டாள் இந்த ஜூனோ! இன்று இவள்தான் அவருடைய அந்தரங்கச் செயலாளர் என்றாலும் மிகையில்லை.

''அவளைப் பார்த்தாலே அறிவு மிகுந்தவள் - ஆற்றல் நிறைந்தவள் - என்று நாம் எண்ணிடும்படியான தோற்றத் தினையே அவள் தருகிறாள். மற்றவர்களின் இதயத்திலே இரக்க உணர்வினைச் சுரக்க வைத்திடும் சோகச் சாயலும் அவளது முகத்திலே இழையோடுகிறது...

''ஏதேது, உங்களுக்கும் அவள் மீது இரக்கம் உண்டாகி விடும்போல் இருக்கிறதே!... பிறகு, இரக்கம் உருக்கம் ஆகி, உருக்கம் மயக்கமாகி, மயக்கம் மையலாகி...!'' என்று முடிக்காமலே சிரித்திட்டான் சிப்பியோ.

செழியனும் அவனது அடுக்குச் சொற்களைக் கேட்டு ஒரு வரட்டுச் சிரிப்பினை உதிர்த்திட்டான். எனினும் 'மையல்' என்னும் சொல்லைக் கேட்டதும் தாமரை என்னும் அந்தத் தையலே செழியனின் எண்ணத் திரையினில் மின்னினாள். அவளைப்பற்றிய நினைவுகள் படருமுன்னே, சிப்பியோ மீண்டும் தொடர்ந்திட்டான்.

''உங்கள் நாட்டிலே, காதலியோ மனைவியோதான் ஓர் ஆடவன் கழுத்தில் மாலை சூட்டுவாள் என்று எப்போதோ கேள்விப்பட்டதாக நினைவு. நான் கூறுவது சரிதானா?''

''சரிதான் சிப்பியோ. ஆனால் கிழவர்களின் கழுத்திலே எந்தப் பெண்ணும் சூட்டலாம்.'' என்று செழியன் சிரித்திட்டான்.

''ஆனால் நீங்கள் ஒன்றும் கிழவர் இல்லையே! உங்கள் கழுத்திலோ ஜூனோ மாலை சூட்டியிருக்கிறாள், என்ன ஆகப் போகிறதோ?''- குறும்பு நெளிந்திடக் கண்களைச் சிமிட்டினான் சிப்பியோ.

''எங்கள் நாட்டுப் பெண்ணொருத்தி இப்படி எனக்கு மாலை அணிவித்திருந்தால் நானும் உங்களைப் போலவே அஞ்சியிருப் பேன்.ஆனால் ஜூனோ உங்கள் நாடாயிற்றே! சின்னச் சின்னச் செயல்களுக்கெல்லாம் பெரிய பெரிய உட்பொருள்களைக் கற்பித்து உள்ளத்தைக் குழப்பிக் கொள்ளாமல், எதையுமே மேலோட்டமாகப் பெரும் போக்காகவே - மேனாட்டாராகிய நீங்கள் பார்ப்பீர்கள் என்பது எனக்குத் தெரியாதா? மேலும் எங்கள் நாட்டு வழக்கங்கள்

ஜூனோவுக்கு எப்படித் தெரியும்? அத்துடன் அவளைப் போன்ற அறிவாளியான பெண்கள் திடீர்க் காதலுக்கெல்லாம் அவ்வளவு எளிதாக இரையாகிவிடுவார்களா என்ன?''

''நீங்கள் உரைப்பதும் உண்மைதான் தூதுவர் அவர்களே! ஜூனோ ஒரு நெருங்க முடியாத நெருப்புத் துண்டுதான் என்று எல்லாரும் சொல்வதை நானும் கேட்டிருக்கிறேன்.''

தேர் இப்போது ஓர் அகலமான வீதியில் திரும்பிற்று.

இருமருங்கிலும் உயரமான கட்டடங்கள் புதுமெருகுடன் பளபளத்தன. அவற்றின் வகைவகையான வண்ணப்பொலிவு கண்ணைக் கவர்ந்திட்டது.

''இந்தக் கட்டடங்கள் எல்லாம் விண்ணையே தொட்டு விடும்போல் இருக்கின்றனவே!...'' என்று தன் வியப்பினை வெளிப்படுத்தினான் செழியன்.

''அப்படியெல்லாம் அவை விண்ணைத் தொட்டிட முடியாது தூதுவர் அவர்களே! அவற்றின் உயரத்திற்கும் உச்சவரம்பு வைத்திருக்கிறார் எங்கள் அகஸ்டஸ் மன்னர்!'' என்றான் சிப்பியோ.

''கட்டடத்தின் உயரத்திற்குக்கூட உச்ச வரம்பா? வேடிக்கையாக இருக்கிறதே!''

''வேடிக்கை இல்லை; விளையாட்டும் இல்லை; உண்மையாகத்தான் உரைக்கிறேன். அணி அணியாக உள்ள இந்தக் குடியிருப்பு வீடுகள் அறுபது அடிக்குமேல் உயரமாக இருந்திடக்கூடாது என்று வரையறை செய்துள்ளார். அதோ தெரிகிறதே பார்த்தீர்களா? பழமையான கட்டடங்கள் கொண்ட ஒரு பகுதி?''

''ஆமாம், உயரமான தூண்கள் கொண்ட ஒரு கற்பீடம் கூடத் தெரிகிறதே! அது என்ன?''

''அதுதான் பழைய ஃபோரம் என்பது; அதாவது நகரப் பொதுமன்றம். மிகமிகத் தொன்மையான காலத்திலேயே உருவானது அது.''

''அங்கே புதிய கட்டடங்களும் தென்படுகின்றனவே?''

''அவையெல்லாம் இப்போது அகஸ்டஸ் மன்னரால் புதுப்பிக்கப் பட்டவை.''

''அந்தக் கட்டடங்களுக்கு நடுவே ஒரு புதிய ஆலயம் கூடத் தெரிகிறதே! அது எந்தத் தெய்வத்திற்கு உரியது?''

''ஜூலியஸ் சீசர் ஆலயம்தான் அது.''

''அப்படியானால் அந்த மாவீரரைத் தெய்வமாகவே வழிபடுகிறீர்கள் என்று சொல்லுங்கள்!''

''எங்களுடைய நன்றியுணர்வின் அறிகுறியாகத்தான் அவருக்கு இவ்வாறு ஆலயம் எழுப்பி வழிபடுகிறோமே அல்லாமல் வேறு எதனையும் எதிர்பார்த்து அல்ல; வீழ்ச்சியுற்றுக் கிடந்த ரோமாபுரியை எழுச்சி மிக்கதாக வரலாற்றிலே என்றென்றும் நிலைத்து நிற்பதாக உருவாக்கி, இந்த மாபெரும் பேரரசுக்கு மறுமலர்ச்சியினை அளித்திட்டவரே ஜூலியஸ் சீசர்தானே! பழிக்குப் பழி வாங்க நினைத்திடாத, பகைவர்க்கும் அருள் பாலித்திட்ட, பண்புத் திலகம் அவர். அந்த மாமேதைக்கு - தலைமகனுக்கு இந்த நாட்டு மக்கள் எந்தக் காலத்திலும் தலை வணக்கம் புரிந்திட வேண்டாமா? அதற்காகவே நிலையான நினைவுச் சின்னமாக இந்த ஆலயத்தினை எழுப்பிச் சீசருக்குக் காணிக்கையாக்கினார் அகஸ்டஸ் மன்னர்'' - சிப்பியோ இவ்வாறு விளம்பிடும்பொழுதே செழியன் குறுக்கிட்டான்.

''அதோ தெரிகிறதே, அது என்ன வளைவு?''

''அதுவா? அதுதான் புதிதாக எழுப்பப்பட்ட அகஸ்டஸ் வளைவு!''

''அது என்ன இவ்வளவு பெரிதாக இருக்கிறதே?''

''வெறும் அழகுக்காகவோ கவர்ச்சிக்காகவோ மட்டும் எழுப்பப் பட்டது அல்லவே அந்த வளைவு! இந்த ரோமானியக் குடியரசை மாட்சிமைமிக்கதாக ஆக்குவதற்கு அரும்பாடுபட்ட தனி மனிதர்கள், பெருங் குடும்பங்கள், தளபதிகள், தலைமை நீதிபதிகள் - முதலான தனிச்சிறப்பு வாய்ந்தவர்களின் பெயர்களெல்லாம் அதிலே பொறிக்கப் பட்டுள்ளன. அத்துடன் கால ஓட்டத்தின் கணிதமாகிய 'நாள்காட்டி'யும் அதிலே பொறிக்கப்பட்டுள்ளது. அதனால்தான் இவ்வளவு பெரிதாக அந்த வளைவு அமைந்துள்ளது. சுருங்கச் சொன்னால் அந்த வளைவே ஒரு வரலாற்றுப் பட்டியல்தான்!''

சிப்பியோ கூறிடும் விளக்கங்களைக் கேட்கக் கேட்கச் செழியனுக்கு ஒரே வியப்பாக இருந்தது. ''எத்தகைய புதுமைகளையெல்லாம் இந்த ரோமாபுரியிலே கொண்டு வந்திருக்கிறார்கள்!'' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தான் அவன்.

அந்த வளைவினுக்கு அப்பால் தேர் கடந்திட்டதும், பழைய பொது மன்றக் கட்டடங்களுக்கு வடக்காக ஒரு பெருந்திடல் தென்பட்டது. அங்கே பல புதிய தளவரிசைகளும், தூண்களும், சலவைக் கற்களின் குவியல்களும் காணப்பட்டன.

''இங்கேயும் புதிதாகக் கட்டடங்கள் எழும்பிடும்போல் தெரிகிறதே!'' என்றான் செழியன்.

''ஆம் தூதுவர் அவர்களே! அகஸ்டஸ் பொதுமன்றம் எழும்பிக் கொண்டிருக்கிறது. இது மட்டுமா? குளிக்கும் அறைகள், குழாய்க் கால்வாய்கள், அரைவட்ட வடிவமான கலையரங்கங்கள், மற்போர்க் களங்கள், நுழை வாயில்கள் அலங்கார வளைவுகள், ஆலயங்கள் என்று ரோமாபுரியையே எழில்மிக்க நகரமாக உருமாற்றுவதற்கு இடையறாது திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார் எங்கள் அகஸ்டஸ் மன்னர்!'' என்று பெருமிதத்துடன் சிப்பியோ பகர்ந்திடவும், செழியன் இடைமறித்தான்.

''இவற்றுக்கெல்லாம் நிறையச் செலவாகுமே! அரசாங்கக் கருவூலம் எல்லாவற்றுக்கும் இடங்கொடுக்குமா?''

''அது எப்படி முடியும்? தன்னுடைய சொந்த சொத்துக்களைக் கொண்டுதான் அகஸ்டஸே ஈடுசெய்கிறார்; போதாததற்கு, அக்ரிபா, டைபீரியஸ் போன்ற அவருடைய மிக நெருக்கமான நண்பர்களும் பொருள் கொடுத்து உதவுகிறார்கள்.''

தேர் எங்கெங்கோ வளைந்து விரைந்து ஓடிக் கொண்டிருந்தது.

''ஆமாம்; நாம் இப்போது எங்கே போகிறோம்?''- திடீரென்று செழியன் இப்படிக் கேட்டதும், சிப்பியோ ஒரு கணம் திகைத்திட்டான். பிறகு தானே மறுவினா எழுப்பினான்.

''என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? நாம் முதலில் அகஸ்டஸ் அவர்களைச் சந்தித்திட வேண்டாமா?''

''சந்திக்கத்தான் வேண்டும்; ஆனால் இந்தத் தேர் எங்கோ குன்றுப் பகுதியை நோக்கிச் செல்கிறதே?''

''அஞ்சாதீர்கள், அகஸ்டஸ் பெருமகனார் குடியிருக்கும் பாலதீன் குன்றுக்குத்தான் இந்தத் தேர் செல்கிறது. அப்புறம் இன்னொன்றையும் உங்களுக்கு நினைவுபடுத்திட வேண்டுமே!''

''எதைப்பற்றி சிப்பியோ?''

''அகஸ்டஸ் அவர்களைச் சந்தித்திடும்பொழுது, நம் அரசரை 'மன்னர்' அல்லது 'பேரரசர்' என்று அழைத்தது போல, அந்தச் சொற்களைக் கொண்டு இவரை விளித்திட வேண்டாம்.''

''ஏன்?''

''தம்மை 'மன்னர்' என்று மற்றவர்கள் அழைப்பதை அவர் விரும்புவதில்லை. மக்களாட்சியின் மாண்பு ஓங்கிடும் பொருட்டு ரோமானியக் குடியரசின் 'முதற்குடிமகன்' என்று தாம் அழைக்கப்

படுவதையே அவர் பெரிதும் விழைகின்றார். ஆகவே, நீங்களும் அவரை 'பிரின்செப்ஸ்' என்றோ அல்லது உங்களது மொழியில் நயமான முறையில் 'பெருமகனார்'என்றோ குறிப்பிட்டாலே போதும்.''

''நல்லது சிப்பியோ! அப்படியே நான் மறந்துபோய் ஏதாவது சொல்லிவிட்டாலும் நீங்கள் மொழிபெயர்க்கும் போது சரிசெய்து விடுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டான் செழியன்.

சிறிது நேரத்தில் அந்த அழகிய சிறு தேர், பசுமை கொழித்திடும் பொழில் நடுவே உள்ள அகஸ்டஸின் இல்லத்தின் முன்னே நின்றது.

சில நொடிகளில் அகஸ்டஸே வெளிவாயிலுக்கு வந்திட்டார் செழியனை வரவேற்றிட!

அவருடைய பரந்த தோளுக்குப் பின்னாலே இரு மான் விழிகள் - மலர் விழிகள் - தெரிந்தன.

அந்தப் பொன்வண்டு விழிகளுக்குரிய பூங்கொடி யார் என்று ஊகித்திடச் செழியனுக்கு நெடுநேரம் தேவைப்படவில்லை. ஏனெனில் அகஸ்டஸ் மாவீரனின் முகச்சாயலை அப்படியே உரித்து வைத்தாற் போல் நின்றிருந்தாள் அவள்.

அத்துடன் அவரே சிறிது நேரத்தில், ''இவள்தான் என் மகள் ஜூலியா'' என்று அறிமுகப்படுத்தி வைத்தார்.

செழியன் இரு கரங்களையும் கூப்பி அவளுக்கு வணக்கம் புரிந்திடும்பொழுதே, ''தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கும் தூதுவர் இவர்தானா?'' என்று கேட்டவாறே வந்தாள் ஒரு நடுத்தர வயது நாரீமணி. தழையத் தழைய மெல்லிய துகில் உடுத்தியிருந்த அவள் முகத்திலே தளிர்நிலை கடந்திட்ட இலையின் முதிர்ச்சி படர்ந்திருந்த போதிலும் அவளுடைய குவளை விழிகளிலே ஒருவகைக் குறுகுறுப்பு நெளிந்திட்டது.

''இவள்தான் என் மனைவி லிவியா'' என்று அறிமுகப்படுத்தினார் அகஸ்டஸ்.

அவளுடைய கூற்றினைத் தமிழில் மொழி பெயர்த்திடும்பொழுதே. ''இவள் இவருடைய இரண்டாவது மனைவி. நான் முன்பு சொன்னதை மறந்திருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்'' என்றான் சிப்பியோ.

தேரினில் வந்திடும்பொழுதே அகஸ்டஸின் குடும்ப வாழ்க்கை யினைப் பற்றி அவன் செழியனிடம் பகர்ந்திட்ட கதை இதுதான்;

ஜூலியஸ் சீசரை வஞ்சகமாய்த் தீர்த்துக் கட்டிய கேசியஸ், புரூட்டஸ் இருவரும் முறியடிக்கப்பட்டு அவர்கள் தற்கொலையைத் தழுவிக் கொண்ட பின்னர். ஆட்சியைக் கைப்பற்றுவதில் அகஸ்டஸுக்குட்

போட்டியாகக் கிளம்பி வீழ்ச்சியுற்றவர்கள் அந்தோணியும் லெபிடசும் மட்டும் அல்லர்; சேக்ஸ்டஸ் பாம்பியஸ் என்று இன்னொரு பேராசைக் காரனும் இருந்தான். சிசிலி, சார்டினியா மாநிலங்கள் முதலில் அவனு டைய கட்டுப்பாட்டிலேயே சிக்கியிருந்தன. ‘ஸ்கிரிபோனியா’ (Scribonia) என்பவள் அவனுடைய சொந்தக்காரி. அவளைத்தான் அகஸ்டஸ் முதலில் மணந்து கொண்டார். அவளுக்குப் பிறந்திட்டவளே ஜூலியா. அகஸ்டஸ் - ஸ்கிரிபோனியா இல்லறப் படகின் ஓட்டம் நெடுநாள் நீடித்திடவில்லை. கருத்துக்கள் மோதின; கசப்புகள் வளர்ந்தன. அந்தக் கசப்பின் அரிப்பில் இதயப்பிணைப்பு விழுந்திட்ட பின்னர் இணைந்து வாழ்ந்திடுவதில் என்ன பொருள் இருக்கிறது என்று எண்ணிய அகஸ்டஸ் ஸ்கிரிபோனியாவை மணவிலக்குச் செய்திட்டார். இதிலே வருந்துவதற்குரியது என்னவென்றால் ஜூலியாவை என்றைக்கு இவள் பெற்றெடுத்தாளோ அதே நாளிலேதான் அந்த மணவிலக்கு! அதன் பிறகு கிளாடியஸ் நீரோ என்பவரின் மனைவியாக வாழ்க்கைப் பட்டிருந்த இந்த லிவியாவின் பேரழகு அகஸ்டஸின் இதயத்தினைக் காந்தம் போல் ஈர்த்திட்டது. அவளைத் தம் இரண்டாவது மனைவியாக ஏற்றுக் கொண்டு விட்டார். அதனால் தமது முதல் மனைவி பெற்றுத் தந்த ஜூலியாவிடம் அவருக்குள்ள இரத்த பாசம் சிறிதும் வற்றிடவில்லை - ஜூலியா பருவச் சிட்டாக வளர்ந்த பின்னர், தம் உயிருக்குயிரான நண்பனும் தம் பகைவர்களை முறியடிப்பதிலும் தமக்கு உறுதுணையாய் - வலக்கரமாய் - விளங்குபவனுமான அக்ரிபா என்பனுக்கே அவளை மணம் செய்து கொடுத்திட்டார் அகஸ்டஸ். அவன் இப்போது வெளிநாடுகளுக்குச் சென்றுள்ளான்.

சிப்பியோ மொழிந்திட்ட இந்தத் தகவல்களைச் செழியன் மனத்தினுள்ளே அசைபோட்டுக் கொண்டிருக்கும் பொழுதே அகஸ்டஸ் தம் இல்லத்தினுள் அவனை அழைத்துச் சென்றிட்டார்.

ஒரு நீண்ட அகலமான கூடம், நடுநடுவே பருமனான தூண்கள், சுவர்களும் தூண்களும் அத்திக்காயின் வெளிர் பச்சை வண்ணம் பூசப் பெற்றுக் கண்ணுக்கு விருந்தளித்தன. கூடத்தின் ஒரு புறத்திலே விதவிதமான கலைப்பொருள்கள் - சிற்பங்கள் அழகை உமிழ்ந்தன. அக்டேவியன் என்னும் இயற்பெயரோடு இருந்த காலத்தில் அகஸ்டஸ் பல பந்தயங்களில் ஈடுபட்டு அள்ளிக் கொணர்ந்திட்ட பரிசுப் பொருள்கள் வரிசை வரிசையாக இருந்தன. வேறொரு புறத்தில் நூல்கள் - சுவடிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அங்கிருந்த அத்தனை பொருள்களிலுமே செழியனைக் கவர்ந்தது கூடத்தின் மையப் பகுதியில் சுவர் ஓரமாக வைக்கப்பெற்றிருந்த ஜூலியஸ் சீசரின் சின்னஞ்சிறு பளிங்குச் சிலைதான்.

அந்தச் சிலையினை ஒட்டிக் கிடந்த இருக்கையில் அகஸ்டஸ், செழியன், லிவியா, ஜூலியா வந்து அமர்ந்தனர். அந்த இல்லத்தினில் பணியாற்றிடும் அகஸ்டஸின் அடிமைகளும், உரிமை மனிதர்களுமாகச் சூழ்ந்து கொண்டு ஆர்வத்துடன் செழியனைப் பார்க்க முற்பட்டனர்.

சில விநாடிகளில் சிரியா நாட்டினில் தயாரான 'சுவை நீர்' கொண்ட எகிப்து நாட்டுக் கண்ணாடிக் குவளைகள் அடங்கிய தட்டினை ஏந்தி வந்திட்டாள் ஒரு பணிப்பெண். அகஸ்டஸின் மனைவி, தானே அந்தச் சுவை நீரை எடுத்துச் செழியனிடம் நீட்டினாள்; மற்றவர்களுக்கும் வழங்கினாள்.

அதனைப் பருகியவாறே பெருவழுதிப் பாண்டியன், கரிகாற்சோழன், சேரமாமன்னன் முதலானோரது நலன்கள் பற்றியும், தமிழகத்தின் வளங்கள், துறைமுகங்களின் சிறப்பு, வணிகப் பொருள்களுக்குப் பிற நாடுகளில் உள்ள வரவேற்பு முதலானவை பற்றியும் பரவலான முறையில் உரையாடினார் அகஸ்டஸ்.

அதே வேளையில் செழியனின் நெஞ்சிலோ அலைகளை எழுப்பிய வண்ணம் இருந்தது அந்தப் பெருவீரரின் பண்பு நலன்.

அது வேறொன்றும் இல்லை. அவரது எளிமையே!

ரோமாபுரியைப் போன்ற ஒரு மாபெரும் பேரரசின் செல்வாக்கு மிக்க ஆட்சித் தலைவராகத் திகழ்ந்திடும் அகஸ்டஸ், ஈடு இணையற்ற ஆடம்பரமான அரண்மனையில்தான் உறைந்திடுவார் என்றே கற்பனை செய்து வைத்திருந்தான் செழியன். நேரினில் வந்து பார்த்திட்ட பிறகோ, அவனுடைய இதயப்பரப்பு வியப்பினால் விம்மிப் புல்லரித்திட்டது.

ஒரேயொரு உப்பரிகை மட்டுமே பூண்டதாக அவரது இல்லம் இத்துணை எளிமை மலிந்து இருந்திடக்கூடுமென்று அவன் எண்ணிடவே இல்லை. அந்த இல்லத்தில் மட்டுமின்றி அவருடைய நடை, உடை, பேச்சு, பழக்கம் எல்லாவற்றிலுமே எளிமை! எளிமை!

பரந்த ரோமானியப் பேரரசு முழுவதும் படர்ந்து தழைத்தவண்ணம் உள்ள அகஸ்டசினுடைய செல்வாக்குத் தருவின் ஆணிவேர் எங்கே இருக்கிறது? அவர்தம் ஆண்மை மிக்க அரிமா வீரத்திலோ புதுமைச் சிந்தனைகளிலோ, முன்னேற்றத் திட்டங்களிலோ மட்டுமா அது அடங்கியுள்ளது? இல்லை! அவரது எளிமைப் பண்பாட்டிலேயே அது பொதிந்து பொலிகிறது என்பதனை நொடியில் புரிந்து கொண்டு விட்டான் செழியன். தன்னலக் கலப்பற்ற அடக்கம் நிறைந்திட்ட உண்மையான குடியரசுவாதியாக வெறுஞ்சொல்லில் மட்டுமின்றி எண்ணம் செயல் எல்லாவற்றிலுமே அவர் நடந்து காட்டுவதால்தான்

உலகப் புகழின் ஒளி வட்டம் அவரது தலையைச் சுற்றிலும் விரிந்த வண்ணம் உள்ளது என்பதனையும் உணர்ந்து மகிழ்ந்திட்டான் அவன்.

சில நொடிகள் சென்றிட்ட பின்னர்-சுவை நீரினைத் தானும் பருகியவாறே லிவியா இங்ஙனம் இயம்பினாள்;

''உங்களுடைய பாண்டியநாட்டு 'முத்தாரம்' என்றால் எனக்கு அளவில்லாத ஆசை! என்ன விலையென்றாலும் வாங்கி விடுவேன்''

உடனே அகஸ்டஸ் இடைமறித்தார், ''பார்த்தீர்களா, தூதுவர் அவர்களே? நீங்கள் இந்த நாட்டில் அடி வைப்பதற்குள்ளேயே உங்கள் நாட்டு முத்து மீதுதான் என் மனைவியின் சிந்தனை செல்கிறது. ஆமாம்.. உங்கள் நாட்டுப் பெண்களும் இப்படித்தான் - நகை என்றால் பைத்தியம் பிடித்து அலைவார்களா?''

''பெண்கள் எந்த நாட்டில் பிறந்தால் என்ன? எந்த மொழியில் பேசினால் என்ன? அவர்கள் இதயம் ஒன்று தானே? எத்தனை நகைகளைப் பூட்டினாலும் அவர்களுடைய ஆசைப்பசி அடங்கவே அடங்கிடாது!''

''சரியாகச் சொன்னீர்கள், தூதுவரே! சரியாகச் சொன்னீர்கள்! பெண்களின் நெஞ்சக் கடலை நீங்கள் மிகச் சரியாகத்தான் அளந்து வைத்திருக்கிறீர்கள்'' என்று கை கொட்டி நகைத்திடலானார் அகஸ்டஸ்.

''ஏதேது! இந்தத் தூதுவர் மிகப் பொல்லாதவராக இருப்பார்போல் இருக்கிறதே! பெண்கள் குலத்தையே ஒரே மட்டமாகத் தாக்கிவிட்டாரே! ஒரு வேளை அவருடைய மனைவி படாதபாடுபடுத்தி இவருக்கு நிறையச் செலவு வைத்திருப்பாளோ என்னவோ?'' என்று விளையாட் டாகவே மறுப்புக் கணையினைத் தொடுத்திட்டாள் ஜூலியா.

''இவர் இன்னும் ஒன்றிக் கட்டைதான்!'' என்று சிப்பியோ இலத்தீனில் மறுமொழி பகர்ந்திட்டான்.

''அதற்கும் அவள் விட்டுக்கொடுத்திடாமல், இவருடைய காதலி எவளாவது ஏமாற்றியிருப்பாள்; அந்த தோல்வியைத் தாங்கிட முடியாமல் தான் பெண்குலத்தின் மீதே இவர் ஆத்திரத்தைக் கக்குகிறார்!'' என்றாள்.

அவளுடைய கூற்றினுக்குச் செழியன் பதிலடி கொடுத்திடு முன்னர் அகஸ்டஸ் முந்திக்கொண்டுவிட்டார்.

''மணம்புரிந்தோ, மையல் கொண்டோதான் ஒரு பெண்ணின் மன இயல்பைத் தெரிந்துகொள்ளவேண்டுமா, என்ன? பார்த்தாலே

தெரியாதா? அலையில்லாத கடலாவது, ஆசையில்லாத பெண்ணாவது இந்த உலகத்திலே ஏது!''

''ஏன், ஆண்கள் மட்டும் ஆசையே இல்லாதவர்களோ? ஆண்களுக் குப் புகழாசை! நகை ஆசையால் பெண்கள் ஒரே ஒருவருடைய-தங்கள் கணவருடைய மனத்தை மட்டுமே வதைப்பார்கள். ஆனால் ஆண்கள் புகழாசையால் நாடு பிடித்திடக் கிளம்பி எத்தனையோ பேருடைய மனத்தை வதைப்பதில்லையா? உயிரையே ஏப்பம் விடுவதில்லையா?''

''நீ ஏனடி ஜூலியா அவரிடம் வாதம் பண்ணுகிறாய்? பெண்கள் என்றாலே உன் அப்பாவுக்கு எப்போதுமே ஓர் இளக்காரம்,'' என்று செல்லமாகச் சிணுங்கிய லிவியாவின் விழிகள் சட்டென்று வியப்பினால் விரிந்தன.

அதற்குக் காரணம் அகஸ்டசிடம் செழியன் எடுத்து நீட்டிக் கொண்டிருந்த ஓர் அழகான சிறிய பேழைதான்.

''இதற்கென்ன இப்போது அவசரம்?''- திகைப்புடன் கேட்டார் அகஸ்டஸ்.

''தங்களுடைய குடும்பத்திற்கு இது என்னுடைய தனிப்பட்ட முதற்பரிசு. அருள் கூர்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். அரசாங்கச் சார்பிலான பெரும் பரிசுப் பொருள்கள் மரக்கலத்திலே உள்ளன. அவை பின்னர் தங்கள் செனேட் மன்றத்தில் கொலுவேறி இருந்திடும் பொழுது முறைப்படி அன்பளிப்புக்களாக வழங்கப்படும்'' என்று விளக்கினான் செழியன்.

''என்ன இருந்தாலும் நீங்கள் கெட்டிக்காரர்தான், தமிழகத் தூதுவரே! என் குடும்பத்தினரை மகிழ்வித்தாலே போதும் என்றுதானே அவர் களுக்கு மட்டும் முதல் பரிசு கொண்டு வந்திருக்கிறீர்கள். எனக்கும் அப்படித் தனிப்பட்ட முறையில் பரிசு கொண்டு வந்திருக்கக்கூடாதா?'' என்று கண்களை சிமிட்டியவாறே கேலியாக வினவினார் அகஸ்டஸ்.

''மன்னிக்க வேண்டும், 'பிரின்செப்ஸ்' அவர்களே! தங்கள் குடும்பம் என்றால் அதில் தாங்களும் ஓர் அங்கம் தானே - அடக்கம்தானே என்பது என் தாழ்மையான கருத்து. மேலும் இந்த எளிய பரிசினை இப்பொழுது நான் அளிப்பது தங்களிடம்தானே அன்றி, அவர்களிடம் அல்லவே!''

செழியன் இவ்வாறு கழறியதும் ஏதோ காணாத புதுமையைக் கண்டுவிட்டவள் போலத் துள்ளிக் குதித்திட்டாள் ஜூலியா.

''சரியாக மடக்கினீர்கள், தூதுவர் அவர்களே! சரியாக மடக்கினீர்கள்! என் தந்தைக்குக் குடும்பம் என்கிற ஒன்று இருக்கிறது என்னும் நினைப்பே இருப்பதில்லை. அதில் தானும் ஓர் அங்கம் என்கிற கருத்தும்

இருப்பதில்லை. எப்போது பார்த்தாலும் 'நாடு-நாடு-மக்கள்-மக்கள் என்று வெளியுலகைப் பற்றித்தான் கவலைப்படுகிறாரே அன்றி வீட்டைப் பற்றியே சிந்திப்பதில்லை. இவருடைய மருமகனையும் (ஜூலியா அண்மையில் மணந்து கொண்ட அக்ரிபா) தம்மைப் போலவே பொதுநலப் பைத்தியமாக்கி வெளிநாடுகளுக்குப் போகுமாறு செய்து விட்டிருக்கிறார்.''

''ஓகோ! இதுதான் சரியான சமயம் என்று என்னைத் தாக்குகிறாயா? இரு, இரு! அக்ரிபா வந்ததும் அவனிடம் சொல்லி உன் வாய்க்குச் சரியாகப் பூட்டுப் போடச் சொல்கிறேன்!'' என்று செல்லமாகக் கடிந்தவாறே செழியன் அளித்த பேழையினைத் திறந்திட்டார் அகஸ்டஸ்.

'பளிச் பளிச்' சென்று முத்தாரங்கள் கண்களைப் பறித்தன. இலுப்பை மொட்டுக்களை கொண்டு சரந்தொடுத்திட்டாற் போல் எழிலினை வழியவிட்டன அவை!

''ஓ! என்ன அருமை! என்ன அற்புதம்!'' என்று நொடிக்கு ஒருமுறை கூவிடலானாள் லிவியா.

''இவ்வளவு அழகான முத்துமாலைகளை நானும் இதுவரை பார்த்ததே இல்லை'' என்று தன் மாற்றாந்தாயோடு சேர்ந்துகொண்டு ஜூலியாவும் தன் வியப்பினை வெளிப்படுத்தினாள்.

பேழையிலிருந்த முத்தாரங்களை ஒவ்வொன்றாக மேலே தூக்கி பார்த்திட்ட அகஸ்டஸ் செழியனை நோக்கி, ''ஆமாம், எப்படி இவ்வளவு கணக்காக எங்களுக்கு மூன்று மாலைகள் தேவைப்படும் என்று கொண்டு வந்தீர்கள்? வியப்பாக இருக்கிறதே!'' என்று சிரித்திட்டார்.

''இதிலே கணக்கு ஒன்றும் இல்லை, 'பிரின்செப்ஸ்' அவர்களே! ஆனாலும் எங்கள் நாட்டிலே 'மூன்று' என்கிற எண்ணிக்கையில் ஒரு தனி ஈடுபாடு தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கிறது. எங்களுடைய தமிழ் மொழியே இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்று மூன்று வகைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. எங்கள் தமிழகப் பெருவேந்தர்களும் சேர, சோழ, பாண்டியர் என மூவர் ஆவர். எங்கள் கொடிகளும் கயல், புலி, வில் என மூன்று ஆகும். நாங்கள் உணவிலே விரும்பிச் சுவைத்திடும் கனிகளும் மா, பலா, வாழை என மூன்று ஆகும்.''

''ஏதேது, இந்த மூன்று என்னும் எண்ணிக்கையிலே இந்த உலகிலுள்ள அத்தனைப் பொருள்களையும் அடக்கி விடுவீர்கள் போல் இருக்கிறதே!

நல்லது. இப்போது இந்த முத்தாரங்களை உங்கள் சார்பிலே ஒவ்வொருவருக்கும் பரிசளிக்கட்டுமா?'' என்றவாறே அகஸ்டஸ் ஒரு முத்தாரத்தை முதலில் தன் மனைவி லிவியாவிடம் நீட்டினார். இன்னொன்றை எடுத்துத் தன் மகள் ஜூலியாவிடம் வழங்கினார்.

மூன்றாவது முத்தாரத்தைத் தாமே அணிந்து கொண்டார் அகஸ்டஸ்.

''உங்களுக்கு நன்றாக இருக்கிறது; மிக நன்றாக இருக்கிறது!'' இரண்டு பெண்மணிகளும் கூவினார்கள்.

''சாதாரணமாகப் பரிசுப் பொருள்களைக் கண்டோ, பாராட்டு மொழிகளைக் கேட்டோ நான் மயங்கிவிடுவதில்லை. அவற்றைக் கொண்டு என்னை யாரும் மயக்கிடவும் முடியாது. ஆனால், உங்களுடைய தமிழகத்து முத்தாரம் என்னுடைய அந்த உறுதிப் பாட்டைக்கூடத் தளர்த்திடும்போல் இருக்கிறதே!'' - உற்சாகத்தில் மிதந்து தெறித்து விழுந்திட்ட, அகஸ்டஸின் இந்த உளந்திறந்த பாராட்டு மொழிகள், செழியனின் செவிகளில் தேனாகவே இனித்தன.

அந்தப் பாராட்டு மொழிகள் மட்டுந்தானா?

அவருடைய கலகலப்பான பேச்சு - சிரிப்பு ஒரு நாளிலேயே பலநாள் பழகிய நட்புரிமையோடு பாசத்தைப் பொழிய விட்டிடும் உயரிய பண்பாடு - எல்லாமேதான் அவனுக்கு இனித்தன. அதே நேரத்தில்,

'ஆனால் இத்தனைக்கும் நடுவே இவர் ஓர் ஆழமான ஆள்தான். வெற்றுப் புகழ்ச்சியாலோ விதவிதமான பரிசுகளாலோ இவரை விலைகொடுத்து வாங்கிட முடியாதுதான்; தமக்கு என்று ஒரு நெறியினை வகுத்துக்கொண்டு அந்த நெறியிலிருந்து பிறழாத ஓர் உறுதிப்பாடே இவரை இந்த நிலைக்கு உயர்த்தியுள்ளது' என்கிற ஓர் அழுத்தமான மதிப்பீட்டையும் தூதுவன் என்கிற முறையிலே தன் சிந்தையில் பதிய வைத்துக்கொள்ளத் தவறிடவில்லை செழியன்.

சிறிது நேரம் சென்ற பின்னர் ''நம்முடைய தூதுவர் நாளைக் காலையில் எங்கே வரவேண்டும் தெரியுமா?'' என்று சிப்பியோவை நோக்கிக் கேட்டார் அகஸ்டஸ்.

''ஓ! எனக்குத் தெரியும்!'' - குயிலின் குரல் ஒன்று திடீரென்று மிதந்து வந்தது.

அகஸ்டஸின் அந்தக் கேள்வியும் சரி, அதற்குக் கிடைத்திட்ட மறுமொழியும் சரி இலத்தீன் மொழியிலேயே இருந்தமையால் அவர்கள் பேசிக்கொண்டது செழியனுக்கு புரிந்திடவில்லை.

ஆயினும் அவனுடைய சிந்தனையோ, 'இந்தக் குரலை எங்கோ கேட்டிருக்கிறோமே! எங்கே கேட்டோம்?'' என்னும் ஆராய்ச்சியிலே ஈடுபடாமல் இல்லை!

புல்லாங்குழலொத்த இனிமைக்குரல் கொண்ட அந்த ஏந்திழை செழியனின் ஆராய்ச்சிக்கு - நினைவாற்றலுக்கு - மேலும் வேலை

கொடுத்திடவில்லை; விரைவிலேயே அவர்கள் எல்லாருடைய எதிரிலும் நடுக்கூட்டத்தில் வந்து நின்றிட்டாள்.

ரோம்ாபுரி மண்ணிலே செழியன் அடிவைத்திட்ட பொழுது அகஸ்டஸ் பெருமகனாரின் சார்பில் ஆரத்தினைச் சூட்டி முதன் முதல் வரவேற்பினை வழங்கினாளே, அதே ஆரணங்குதான் அவள்!

ஆம்! ஜூனோ!

''நீதானா? ஆமாம், ஏன் இவ்வளவு நேரம்?'' - என்று வினவினார் அகஸ்டஸ்.

''தூதுவர் தங்கப்போகும் இல்லத்தில் எல்லா வசதிகளும் இருக்கின்றனவா என்று கவனிக்கச் சென்றிருந்தேன்.''

''பரவாயில்லை, இப்படியெல்லாம் தனக்காக அக்கறை எடுத்துக் கொள்ளக்கூடிய ஒருத்தி இங்கே இருக்கக்கூடும் என்பது இந்தத் தூதுவருக்கும் முன்கூட்டியே தெரியும் போலும்! இல்லையென்றால் உனக்கும் சேர்த்து ஒரு பரிசினைக் கொண்டு வந்திருப்பாரா?''

கேலியாக நகைத்திட்டார் அகஸ்டஸ்.

''எனக்காவது, பரிசாவது?'' என்று எதிர்க் கேள்வியினை ஜூனோ எழுப்பிடும்பொழுதே, அவளும் அகஸ்டஸும் இலத்தீனில் உரையாடியவற்றைச் செழியனிடம் மொழி பெயர்த்துக் கூறினான் சிப்பியோ.

சற்றைக்கெல்லாம், தாம் விளையாட்டாக அணிந்து கொண்ட மூன்றாவது முத்தாரத்தை அகஸ்டஸ் தம் கழுத்தைவிட்டு கழற்றினார்.

''நான் ஒன்றும் வேடிக்கைக்குச் சொல்லவில்லை ஜூனோ ! இதோ, இதுதான் அவர் கொண்டு வந்திருக்கும் பரிசு!'' என்று அந்த முத்தாரத்தை அவளிடம் நீட்டினார்.

''அப்படியா? ரொம்ப அழகாக இருக்கிறதே!'' என்று அதனை வாங்கிப் பார்த்திட்ட அவள் ஓரக்கண்ணால் செழியனை நோக்கினாள். அவளுடைய பார்வையிலே நன்றியுணர்வு பொங்கி வழிந்திட்டது.

அகஸ்டஸின் செயல், செழியனைத் திகைப்பில் ஆழ்த்தியது. அவர் இவ்வாறு தங்கள் குடும்பத்திற்கு வந்த ஒரு பரிசினை ஜூனோவுக்குக் கொடுத்திடுவார் என்று அவன் நினைக்கவே இல்லை. அவள்மீது அகஸ்டஸ் வைத்துள்ள எல்லையில்லாப் பாசத்தைப்பற்றி சிப்பியோ மொழிந்தவை யாவும் உண்மை என்பதை அவருடைய செயல் மூலம் உணர்ந்து கொண்டான் செழியன்.

அதே வேளையில், தன் தந்தையின் பரந்த மார்பினில் மின்னிய முத்தாரம் ஜூனோவின் கைக்குச் சென்றதுமே மோவாயினால் தன்

தோளினை இடித்தவாறே ஜூலியோ ஓசைப்படாமல் அந்த இடத்தினை விட்டு அகன்றதையும் அவன் கவனிக்காமல் இல்லை.

'பெண்களுக்குள்ள ஆசை கடல் என்றால் அழுக்காறோ வானந்தான்!' என்று எண்ணிக்கொண்டான்.

மறுநாள் காலை

ரோமாபுரி செனேட் - பாராளுமன்றம் - கோலாகலமான மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்து திளைத்திட்டது. அதற்குக் காரணம் தமிழகத்திலிருந்து செழியன் கொண்டு வந்திருந்த பலவகையான பரிசுப் பொருள்களே. முத்துச் சரங்கள், யானைத் தந்தங்கள், மெல்லிழைத் துகில்கள், கிராம்பு, மிளகு, சந்தனம் மற்றும் வாசனைப் பொருள்கள் முதலானவற்றை தொட்டுப் பார்ப்பதிலும், நுகர்ந்து பார்ப்பதிலும் செனேட் உறுப்பினர்கள் தங்கள் வயது முதிர்ச்சியினையும் மறந்து ஆர்வம் காட்டினர். ஆர்ப்பரித்தனர்.

பரிசுப் பொருள்கள் வழங்கப்படுவதற்கு முன்னர் செனேட் உறுப்பினர்களுக்குச் சிறப்பான முறையிலே செழியனைப் பற்றி அறிமுகம் செய்து வைத்தார் அகஸ்டஸ்.

''மாண்புமிகு உறுப்பினர் அவர்களே! எந்தநாடு இந்த உலகிலேயே தொன்மைமிக்கதாகச் சொல்லப்படுகிறதோ; எந்த நாட்டுப் பொருள்கள் ரோமானியர்களை மட்டுமின்றி மேனாட்டார், கீழ்நாட்டார் எல்லாரையுமே கவர்ந்துள்ளனவோ, எந்த நாட்டினுடைய தாய்மொழி, அதாவது தமிழ்மொழி இனிமை மிக்கதென்றும் பழைமை வாய்ந்ததென்றும் பாராட்டப்படுகிறதோ அந்த நாட்டிலிருந்து வந்திருப்பவரே இந்த தூதுவர். இவருடைய நாடு செழிப்பு மிகுந்தது என்று சொல்வார்கள். அந்தச் செழிப்பு என்னும் பொருளை உணர்த்தத்தானோ என்னவோ இவரது பெயரும் 'செழியன்' என்பதாகும். வயதில் - வடிவத்தில்தான் இவர் இளைஞரே அன்றி அறிவில் - ஆராய்ச்சியில் - பண்பில் - பழக்கத்தில் இவர் முதியவரே. நாம் தெய்வங்களுககு இணையாக வைத்துக் கொண்டாடுகிற மேன்மை தங்கிய 'ஜூலியஸ் சீசர்' அவர்களைப் போலவே இன்று கீழை நாடுகளிலே இணையற்ற மாமன்னராகத் திகழ்பவர் கரிகால் பெருவளத்தான் என்னும் சோழப் பேரரசர் ஆவார். அவருடைய உயிரினைத் தக்க சமயத்தினில் காப்பாற்றிட்ட பெருமையும் படைத்தவர் இச்செழியன். நம்முடைய ரோமானியத் தூதுவர் இவர்களுடைய பாண்டிய நாட்டுக்குச் சென்றிருப்பதைப் பற்றித் தாங்கள் யாவரும் முன்பே அறிவீர்கள்.

அவருக்கு மாற்றாகவே இப்போது இவர் இங்கே வந்துள்ளார். இவருடைய வருகையால் நம் இரு நாடுகளுடைய வணிகத்தொடர்பு கள், கலச்சார உறவுகள் மேலும் வளர்ந்திடும் என்று நான் திண்ணமாக நம்புகிறேன். நம்முடைய மக்களின் சார்பாக அரசின் சார்பாக - செனேட்டின் சார்பாகத் தமிழகத்திலிருந்து வந்துள்ள இந்த இளந் தூதுவரை வரவேற்கிறேன், வாழ்த்துகிறேன்.''

-அகஸ்டஸ் இவ்வாறு அறிமுகப்படுத்தி அமர்ந்திடவும் அந்த செனேட் மண்டபமே அதிர்ந்திடும்படியாகக் கரவொலிகள் எழுந்து முழங்கின.

அவருடைய உரையினை சிப்பியோ அவ்வப்போது மொழி பெயர்த்திடுவதைக் கேட்கக் கேட்கச் செழியனின் மேனியெல்லாம் புளகமுற்றுச் சிலிர்த்தது. தேனில் விழுந்திட்ட வண்டெனக் கிறங்கிப் போனான் அவன்.

பின்னர் தன் நன்றியுரையினை அவன் நவின்றிட எழுந்திட்டான்.

''மாட்சிமை தங்கிய அகஸ்டஸ் பெருமகனார் அவர்களே, மாண்புமிக்க செனேட் உறுப்பினர்களே! தங்கள் நல்வரவேற்பிற்கு என் நன்றியறிதலைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். தங்களுடைய தலைவரின் அன்பார்ந்த பாராட்டு மழையிலே நனைந்து போன நான், என் நாவினைப் புரட்டி நாலுவார்த்தை பேச முடியாத அளவுக்கு இன்பத்தில் சிலிர்த்து நிற்கிறேன். திக்கெட்டும் புகழொளி வீசிடும் தங்களுடைய ரோமாபுரிப் பேரரசின் கீர்த்தியினையோ வீர வரலாற் றையோ நான் ஒன்றும் புதிதாகப் புகன்றிடத் தேவையில்லை. எனினும் ஒரு சிலவற்றைப் பற்றி குறிப்பிடாமல் போனால் கடமையிலிருந்து வழுவிய குறைபாட்டுக்கு இலக்கானவன் ஆகிவிடுவேன். தங்கள் மாநகரிலே மலர்ந்துள்ள கட்டடக் கலை என் மனத்தினை மிகவும் கவர்கிறது. செங்கல்லாகத் தாம் கண்ட ரோம் நகரைச் சலவைக் கல்லாக மாற்றிய சிற்பியே அகஸ்டஸ் என்னும் புகழ் மகுடத்தினை வருங்கால வரலாற்றாசிரியர்கள் பொருத்தமாகப் புனைந்து மகிழ்ந்தாலும் நான் வியப்படைந்திட மாட்டேன். இத்தகைய கட்டட அமைப்புத் திட்டங்க ளால் எத்தனையோ ஏழைகளையும் வாழவைக்கிறார் தங்கள் தலைவர். அடுத்து, மக்களுக்கும் மக்களின் பிரதிநிதிகளாகிய தங்களுக்கும் அவர் தந்திடுகின்ற மதிப்பு என் இதயக் கிண்ணியில் தேனைச் சொரிகின்றது. 'மாமன்னன்' என்று மற்றவர்கள் தம்மை அழைப்பதையே வெறுக்கின்ற அளவுக்கு அவர் அதிகாரப் பித்து அற்றவராக உண்மையான குடியரசுவாதியாகத் தம்மை உயர்த்திக் கொண்டுள்ளார். குடிமக்களின் எண்ணப்படியேதான் எங்கள் நாட்டுக் கொற்றவர்களும் கோலோச்சு

கிறார்கள் என்றாலும், இது எங்களுக்குப் புதுமையான அரசியல் நெறியே என்பதனை ஒப்புக் கொள்வதற்கு நான் வெட்கப்படவில்லை.

ஆட்சித் துறையில், அரசு நிர்வாகத்தில் ‘பிரின்செப்ஸ் அவர்கள் கொணர்ந்துள்ள சீர்திருத்தத் திட்டங்கள் என் சிந்தனைக்கு விருந்தளிக்கின்றன. என் நெஞ்சைக் கவர்ந்திட்ட மேலும் ஒரு புதுமை, காலத்தைக் கணக்கிடத் தங்கள் நாட்டவர் கண்டுபிடித்துள்ள ‘காலண்டர்’ நாட்காட்டி முறை. இவை போன்று தங்கள் ரோமாபுரிப் பேரரசுக்குப் பெருமை தரக்கூடியவைகளை எவ்வளவோ அடுக்கிக் கொண்டே போகலாம். எனினும் நேரம் கருதி இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். தங்கள் எல்லாருடைய நல்லெண்ணத்திற்கும் எங்களுடைய வேந்தர் பெருவழுதிப் பாண்டியர் சார்பிலும் தமிழகம் முழுமையின் சார்பிலும் மீண்டும் ஒரு முறை நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்''.

-செழியனின் உரையினை சிப்பியோ மொழி பெயர்த்திடக் கேட்ட செனேட் உறுப்பினர்கள் அடிக்கடி கரவொலிகளை எழுப்பித் தங்கள் களிப்பினைப் பறைசாற்றினர். அவனுடைய வாக்கு வன்மையினையும், எதனையும் நுணுகி நோக்கிடும் அறிவுக் கூர்மையினையும் அவர்கள் தங்களுக்குள் மெச்சிக் கொண்டனர்.

சில நொடிகளில் ஒரு பருமனான மனிதர் எழுந்து நின்றார். அவருடைய சட்டையிலே காணப்பட்ட ஊதா நிறப் பட்டைக்கோடு, காலணியிலே தென்பட்ட பிறை வடிவமான அலங்கார அணி, மார்பின் குறுக்காகப் போர்த்திருந்த ‘டோகா’ என்னும் மேலங்கி ஆகியவற்றைக் கொண்டு அவரும் ஒரு செனேட் உறுப்பினரே என்னும் தெளிவினைப் பெற்றிட்டான் செழியன்.

''புதிதாக வந்திருக்கும் தூதுவரிடம் அவருடைய நாடு, மொழிகளைப் பற்றி எனக்கு ஏற்பட்டுள்ள சில ஐயப்பாடுகளைத் தெளிவு படுத்திக் கொள்ளலாமா?'' என்று அகஸ்டஸை நோக்கிக் கேட்டார் அந்த செனேட் உறுப்பினர்.

''ஓ! தாரளமாகக் கேட்கலாமே! நீங்கள் எந்த ஐயப்பாட்டினை எழுப்பினாலும் அவர் சரியான விளக்கந்தந்திடுவார் என்றே கருதுகிறேன்.''

அகஸ்டஸ் இவ்வாறு பகர்ந்திடவும் செழியன் - செனேட் உறுப்பினர் இருவருக்குமிடையே இணைப்புப் பாலமாகத் தட்டுத் தடங்கலின்றி மொழி பெயர்த்திடத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டான் சிப்பியோ.

''திராவிட இனத்தவராகிய நீங்கள் இப்போதுள்ள தமிழகப் பகுதிக்குத் தெற்கே இருந்துதான் வந்தீர்கள் என்று சொல்கிறார்களே, சரிதானா?'' என்று தம் முதல் கணையினைத் தொடுத்திட்டார் செனேட் உறுப்பினர்.

''தெற்கே இருந்து வந்தோம் என்பது சரியல்ல. இப்போதைய தமிழகம் முன்னொரு காலத்தில் தெற்கே பரந்து கிடந்திட்ட இலமூரியக் கண்டத்தின் ஒரு பகுதியாக இணைந்து இருந்தது என்பதே பொருத்தமான கூற்றாகும். அந்தக் கண்டத்தில் பாய்ந்திட்ட பஃறுளியாறு ஓங்கி உயர்ந்து நின்றிட்ட குமரிமலை எல்லாவற்றையுமே கடல் விழுங்கிவிட்டது'' என்றான் செழியன்.

''மலையைக்கூடக் கடல் விழுங்க முடியுமா என்ன?'' என்று தம் வியப்பினைத் தெரிவித்து விட்டார் செனேட்டர்.

அதற்குச் செழியன் விடையளிக்கு முன்னரே அகஸ்டஸுக்கு நெருங்கிய நண்பரும், பெருங்கவிஞருமான வெர்ஜில் என்பவர் எழுந்து ''இமயமலையே ஒரு காலத்தில் கடலாகத் தான் இருந்தது என்கிறபோது குமரி மலையைக் கடல் விழுங்கியதில் என்ன வியப்பு இருக்கிறது? கடல் மலையாவதும், மலை கடலாவதும் இயற்கைக் கொந்தளிப்பின் விளைவுகளே அன்றி வேறல்ல'' என்று சிரித்திட்டார்.

''இந்த நேரத்தில் இன்னொரு பேருண்மையைக் கூறவும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். இமயமலையும் கங்கையாறும் கடற் பகுதிகளாக இருந்த காலத்தில் சிந்து நதி பாயும் நிலப்பரப்பிலே எங்கள் முன்னோர்களான திராவிட இனத்தவர்களே சிறப்போடு வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய நாகரிகமே நாளாவட்டத்தில் அங்கிருந்து கிளம்பி பாபிலோனிய நாகரிகமாக - போனிசிய நாகரிகமாக- கிரேக்க நாகரிகமாக - எகிப்திய நாகரிகமாகப் பல வடிவங்கள் எடுத்துப் பரவியதாக எங்கள் நாட்டு அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர்'' என்றான் செழியன்.

''ஆமாம், ஆமாம்! நானும் கூட அப்படித்தான் ஒரு கிரேக்க அறிஞர் சொன்னதைக் கேட்டதாக நினைவு'' என்றார் கவிஞர் வெர்ஜில்.

உடனே ஹொரஸ் என்னும் இன்னொரு கவிஞர் எழுந்தார்.

''இப்பொழுது உள்ள தமிழகத்தில் உள்ள திராவிடர்களுக்கும் விந்திய மலைக்கு வடக்கே உள்ள மக்களுக்கும் உறவு முறைகள் உண்டா?''

''அறவே இல்லை; இடையில் எழுந்த மலைகளே எங்களுக்கும் அவர்களுக்கும் பெரிய தடுப்புச் சுவர்கள் ஆகிவிட்டன. நெடுங்காலத்திற்கு முன்னரே அங்கேயே தங்கியிருக்க நேர்ந்திட்ட திராவிடர்கள் வேண்டுமானால் புதிதாக வந்த இனத்தவரோடு கலந்து அவர்களாகவே மாறியிருக்கலாம். ஆனால் வடக்கே எத்தகைய சமூக மாறுதல் ஏற்பட்ட போதிலும் தென்பகுதியில் வாழ்கின்ற திராவிடர்களாகிய நாங்கள் அத்தகைய மாறுதல் எதற்கும் இலக்காகாமல் தனித்துத் தான் வாழ்ந்து வருகிறோம்.''

''இப்போது வடக்கில் மட்டும் உள்ள ஆரியர் பிற்காலத்தில் தெற்கேயும் வரலாம் இல்லையா?''

''அதைப்பற்றி இப்போதே நான் எப்படி ஆருடம் கூற முடியும்?''

''உங்கள் நாட்டினருக்கு ஆருடம் பற்றிக்கூடத் தெரியுமா?'' என்று வியப்போடு வினவினார் வேறொரு செனேட்டர்.

''ஏன் இல்லை? ஆனால், விண் அறிவினை அடிப்படையாகக் கொண்டிட்ட ஆருடம், சோதிடம் - போன்றவற்றை விஞ்ஞானக் கண் ணோட்டத்துடன் அணுகி வளர்த்திடாமல் வேறெங்கோ திசை திருப்பிக் கொண்டு போய்விட்டதால் தான் என் போன்றவர்களுக்கு அவற்றிலே நம்பிக்கை இல்லையேயன்றி, அந்தக் கலைகளில் ஈடுபாடு கொண்டவர் களும் எங்கள் நாட்டில் இருந்தார்கள்; இருக்கின்றார்கள். அதுமட்டுமல்ல, எல்லாத் துறைகளைப் பற்றிய நுண்ணறிவும் எங்கள் நாட்டவருக்கு உண்டு. அதனால்தான் தமிழில் மருத்துவ நூல், நீதி நூல், இலக்கண நூல், இலக்கிய நூல் முதலான பலதரப்பட்ட நூல்களும் இருக்கின்றன.''

''போகட்டும், உங்களுடைய முத்து, பொன்னை விட உயர்ந்ததா?'' என்று திடீரென்று ஒரு வெடிகுண்டை வீசினார் முதலில் வினா எழுப்பிய செனேட்டர்.

''கண்டிப்பாக உயர்ந்ததுதான்! அதிலே ஐயப்பாடு ஏது? எங்களு டைய ஒரேயொரு முத்துவுக்கு அதைப்போல மூன்று மடங்கு எடை யுள்ள பொன்னை வைத்தால் கூட அதற்கு ஈடாகுமா?'' - அறைகூவலே விடுத்தான் செழியன்.

அவனுடைய மிடுக்கான குரல், ஆணித்தரமான வாதங்கள், தயக்கம் துளியும் இன்றி உடனுக்குடன் சுறுசுறுப்பாக அளித்த விடைகள் எல்லாமே அங்கே குழுமியிருந்த அத்தனை பேரையுமே மூக்கின்மீது விரல் வைத்திடுமாறு தூண்டின.

செனேட்டின் அன்றைய நடவடிக்கைகள் முடிவுக்கு வந்ததும் எல்லா உறுப்பினர்களுமே போட்டி போட்டுக் கொண்டு செழியனின் கரத்தைப் பற்றிக் குலுக்கினர். கட்டித் தழுவினர்; வாழ்த்து மலர்களைச் சொரிந்தனர்; 'தகுதியான திறமைசாலியைத்தான் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிறார் பாண்டிய வேந்தர்' என்று பாராட்டு மகுடத்தையும் புனைந்தனர்.

அன்று மாலை வேளை.

தனக்கு ஒதுக்கப்பட்டிருந்த இல்லத்தின் உப்பரிகையில் நின்றவாறே தன் பார்வையைப் பறக்கவிட்டுக் கொண்டிருந்தான் செழியன். சற்றுத் தொலைவில் டைபர் நதி கடல் குஞ்சாகக் காட்சி அளித்திட்டது; அதிலே படகுகளும்-நாவாய்களும் மிதந்து கொண்டிருப்பது தெரிந்தது.

தனிமைச் சிறையில் சிக்கிவிட்ட செழியனுக்கு சிப்பியோ பேச்சுத் துணைக்கு இல்லாமற் போனது பெருங்குறையாக மனத்தினை வெறுமைப்படுத்தி வாட்டிற்று. இத்தனை நாட்களாக அங்கே இங்கே அசைந்திடாமல் அவனோடேயே ஒட்டிக் கொண்டு துணைபுரிந்திட்ட அந்த ரோமானிய இளைஞன் தன்னுடைய குடும்பத்தினரையும் போய்ப் பார்த்து வர வேண்டாமா?

செழியனின் விழிகள் சட்டென்று கீழே சென்றன. அவன் தங்கியுள்ள இல்லத்தினை நோக்கி ஜூனோ வந்து கொண்டிருந்தாள்.

வேறு யாரோடும் அல்ல; தன்னந்தனியளாக!

இயற்கைக் காட்சிகள் பரிமாறிடும் எழில் விருந்தினில் தன் விழிகளை மிதக்கவிட்டுக் கொண்டிருந்த செழியன், ஜூனோவைக் கண்டதும், அவளை வரவேற்றிடும் பொருட்டுத் தன் அறைக்குள் திரும்பினான்.

அவனது மனத்தினுள்ளே புதியதொரு சிக்கல் முளைத்து விட்டது; தனக்கோ இலத்தீன் மொழி தெரியாது. அவளுக்கோ தமிழ் தெரிந்திருக்க வழியில்லை. இந்நிலையில் இருவரும் எவ்வாறு நெடுநேரம் தனியாக உரையாடிட இயலும் என்பதே அந்தச் சிக்கல்.

'இரண்டு, ஊமைகள் சந்தித்துக் கொண்டால் எட்டி இருந்து பார்ப்பவர்களுக்கு எவ்வளவு வேடிக்கையாக இருக்கும்! அத்தகைய சைகை நாடகத்தினைத்தான் நாங்கள் இருவரும் நடித்திட வேண்டுமோ?' என்று எண்ணிய அளவில் உள்ளூர அவனால் சிரிக்காமல் இருந்திட முடியவில்லை.

மேகங்களில் மிதந்து வரும் மணிப் புறாவினைப் போலச் சாம்பல் நிற உடைகள் அணிந்து, 'மெல்லியல்' என்னுஞ் சொல்லுக்கேற்ப மெல்ல வந்து சேர்ந்திட்டாள் ஜூனோ.

அறையினுள் நுழைந்திட்ட அவள், அல்லி மொட்டாகத் தன் கரங்களைக் குவித்து வணக்கம் புரிந்திட்டாள். செழியனும் மறுவணக்கம் செய்தான். தன் எதிரே கிடந்திட்ட இருக்கையில் அமர்ந்திடுமாறு கையினால் சைகை காட்டினான்.

அவளோ உடனே அங்கு அமர்ந்திடவில்லை. அந்த இருக்கையின் அருகினில் வந்து அதனை ஒரு கரத்தினால் பற்றியவாறே அவனை நேருக்குநேர் நோக்கினாள்; இமைக்க மறந்து நோக்கினாள்.

முட்டை வடிவு கொண்ட முகப்பூ மலர்ந்திடத் தேன் சொட்டும் செவ் விதழ்கள் மெல்லவே விரிந்திட, வெள்ளரிவிதைப் பற்கள் வெள்ளிபோல் மின்னிச் சற்றே தெரிந்திடத் தலை சாய்த்துப் பார்த்திட்டாள்.

வாய் மலரைத்தான் திறந்து வார்த்தைத் தேன் சிந்தவில்லை. ஆயினும் அவள் விழிகள் ஆயிரம் கதைகள் பேசின!

பறிகொடுத்த பொன்னகையை மறுபடியும் அடைந்தவள் போல் பருகினாள் அவன் முகத்தைப் பார்வையால், பாவையவள்!

கூர்வேலாய்ப் பாய்ந்து வந்த கோதையின் விழிவீச்சை நேராகச் சந்திக்கும் வலுவேது செழியனுக்கு? நிலைகுலைந்தான்; ஒருகணத்தில்! நாணம்தான் இடம் மாறத் தலை குனிந்தான்; தளிர்க்கொடியாள் தாமரையை நினைத்திட்டான்; அலை பாயும் கடலெனவே ஆடிற்று அவன் இதயம்!

'மலையென்றும், மடுவென்றும் மண்ணிலே ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தியதோடு நின்றிருக்கக் கூடாதா? உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்னும் பிளவுகளுக்கு விளை நிலமாய் மனித இதயங்களிலும் மேடு - பள்ளங்களை உண்டாக்கிவிட்ட ஒருவன் எவ்வாறு நடுநிலைமை பிறழ்ந் திடாத இறைவனாக இருந்திட முடியும்?' என்னும் அறிவாராய்ச்சி யினாலோ என்னவோ ஆண்டவன் இருந்திடுவதாகக் கூறப்படும் அற்புதங்களையெல்லாம் நம்புவதே இல்லை செழியன்.

ஆனால், இந்த ஜூனோவைப் பார்த்திடும்பொழுது அந்தத் தாமரைதான் ஆண்டவனிடம் வரம் பெற்றுத் தேவதைகளைப்போல் இறக்கைகளைக் கட்டிக்கொண்டு இப்படித் திடீரென்று ரோமாபுரி மண்ணிலே குதித்திருப்பாளோ என்று வேடிக்கையாக எண்ணிடலா னான் அவன்.

தாமரைக்குள்ள அதே மிதப்புக் கன்னம் - அதே சங்குக் கழுத்து - அதே இளஞ்சிரிப்பு - அதே கிறங்கும் பார்வை எல்லாமே அவளேதான்! எனி னும் அவளிடமிருந்து இவளைப் பிரித்துக் காட்டிடும் சில வேறுபாடு களும் இல்லாமல் இல்லை.

தாமரையோ இளவரசிக்கே உரிய முறையில் கச்சையும் சேலையுமாக ஒயிலாக உடையுடுத்துப் பொற்சிலை போல் காட்சியளிப்பாள்; இந்த ஜூனோ தனது நாட்டுப் பாணியில் மெல்லிய அங்கியொன்றினை மேலேபோர்த்துக் கொண்டு தலையையும் ஓரளவு முக்காடிட்டவாறு பொம்மைபோல் தோற்றமளிக்கிறாள். தாமரைக்குத் தொடையினைத் தொடும் அளவுக்குக் கருமையான கூந்தல்; ஜூனோவுக்கோ செம்மறிக் கடாவின் மேலுடல் போலச் சுருள் சுருளான தலைமுடி. தாமரை, கண்களுக்கு அஞ்சனம் மட்டுமே தீட்டியிருப்பாள். இந்த ஜூனோவோ இமைக் கூட்டினிலிருந்து புருவம் வரையுள்ள அகலமான விழி மேடு எங்கும் காயாம்பூ நிறத்தில் வேறு எதனையோ மினுமினுவென்று பூசியிருக்கிறாள்.

'இவள் தாமரையாகவே இருந்திடக் கூடாதா?' என்று ஏங்கித் தவித்திட்டான் செழியன்; 'எகிப்து மண்ணிலே பிறந்து ரோமாபுரியிலே

அகஸ்டஸின் செல்ல மகள் போல் வாழ்ந்து வரும் இவள் எப்படித் தாமரையாக முடியும்?' என்று தன்னைத்தானே சமாதானமும் படுத்திக் கொண்டான், அடுத்த கணமே!

ஒன்று மட்டும் அவனுக்குத் தெளிவாகப் புரிந்து விட்டது; சிப்பியோ செப்பியதைப்போல், மற்றவர்களுக்கெல்லாம் கனல் துண்டாய்க் காட்சி அளித்திட்ட அவள் செழியனைப் பொறுத்தமட்டில் அனலை வீசிட மாட்டாள் என்பதே அது. அவளுடைய பசித்த பார்வைக்கு - மயக்கும் முறுவலுக்கு வேறு என்ன தான் பொருள்?

'ஆனால் - தாமரை கொலுவேறிக் கோலோச்சிடும் என் இதய பீடத்தில் இந்த ஜூனோவுக்கு இடமா?' - எண்ணங்கள் சிலிர்த்தெழுந்தன செழியனின் நெஞ்சினுள். அதே சமயம்...

''உங்களுக்கு இங்கே ஏதாவது வசதிக்குறைவாக இருக்கிறதா?'' என்று கேட்டாள் ஜூனோ.

செழியனுக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது, அவளுடைய வினாவினைக் கேட்டதும்.

''உனக்குத் தமிழ்க் கூடத் தெரியுமா?'' என்று உணர்ச்சிப் பெருக்கோடு மறு கேள்வியினைத் தொடுத்திட்டான்.

''ஓ தெரியுமே! நான் எகிப்து நாட்டில் இருந்திட்ட பொழுதே எங்கள் பேரரசி கிளியோபாத்ராவிடம் மஸ்லின் துணிகளை விற்பதற்காக இந்தப் பக்கத்து யவனக்கிழவர் ஒருவர் அடிக்கடி வருவார். அவர் உங்கள் நாட்டுக்கும் வாணிகத்தை முன்னிட்டுப் போய் வருவாராம். அவர்தான் உங்களுடைய தமிழ் மொழியின் இனிமையைப்பற்றி எடுத்துச் சொல்லி எனக்கும் கற்றுக் கொடுத்தார்.

''உனக்குத் தமிழ் தெரியும் என்பதை அகஸ்டஸ் பெருமகனாரும் அறிவாரா?''

''நன்றாக அறிவார்! ஆனால் அண்மைக் காலம்வரை இந்த உண்மையை அவரிடம் உரைத்திடவேண்டிய தேவை எனக்கு ஏற்பட்டிடவில்லை. நீங்கள் முத்தாரத்தைப் பரிசளித்துவிட்டுத் திரும்பினீர்கள் அல்லவா? அதற்குப் பிறகுதான் எனக்கும் தமிழ் தெரியும் என்று அவரிடம் கூறினேன். தமிழைப் பற்றிய சிறப்புக்களையும் எடுத்துரைத்தேன். நான் சொன்னவற்றை நினைவில் வைத்துக் கொண்டுதான் அவர் செனேட்டர்களிடம் அவ்வளவு அருமையாக உங்களை அறிமுகப் படுத்தினார்''.

''அப்படியா? நீ புகல்வதைக் கேட்கக் கேட்க எனக்கு எவ்வளவு பூரிப்பாக இருக்கிறது தெரியுமா? எங்கள் நாட்டைப் பற்றி - மொழியைப்

பற்றி - சரியான முறையில் உங்கள் ஆட்சித் தலைவரிடம் எடுத்துச் சொன்ன உனக்கு எவ்வாறு நன்றி கூறுவது என்றே தெரியவில்லை. அது சரி; உனக்குத்தான் தமிழ் தெரியுமே! பிறகு ஏன் இலத்தீன் மொழியில் முதல் முதலில் என்னை வரவேற்றாய்?''

''என்ன, அப்படிக் கேட்டு விட்டீர்கள்? வெளிநாட்டுத் தூதுவர் ஒருவரை வரவேற்றிடும்பொழுது சொந்த நாட்டுக்குச் சிறப்பிடம் தருவதுதானே சரியான முறை - ஒழுங்கு - மரபு?''

''ஆமாம், ஆமாம்; நீ மொழிவது முற்றிலும் சரி தான்.''

சிறிது நேரம் அமைதியில் கழிந்திட்டது. இருவருக்குமே மேலும் என்ன பேசுவது என்னும் திணறல் போலும்!

''எங்கள் ரோமாபுரி உங்களுக்கு எப்படி இருக்கிறது? பிடித்திருக் கிறதா?'' -ஜூனோவின் கொவ்வைச் செவ்வாயிலிருந்து வார்த்தைகள் தான் இப்படி வந்தனவே அன்றி, அவளுடைய பளிங்கு விழிகளோ, 'என்னைப் பிடித்திருக்கிறதா?' என்று கேட்பது போலவே பேசின!

அவளுடைய பார்வையின் பொருளைப்புரிந்தும் புரியாதவனைப் போல, ''ஓ! மிக நன்றாகப் பிடித்திருக்கிறதே!'' என்றிட்டான் செழியன்; தன்னுடைய பரந்த முகத்தினை இப்போது தரையை நோக்கியே கவிழ்த்துக் கொண்டான் அவன்.

''இங்கே, நீங்கள் பார்த்துக் களித்திட வேண்டிய இடங்கள் நிறைய இருக்கின்றன. ரோமாபுரியையே பளபளவென மின்னும் அழகுத் திருநகராக மாற்றுவதில் முனைந்து ஈடுபட்டுள்ளார் எங்கள் அகஸ்டஸ் பெருமகன்!''

''சிப்பியோ கூட அப்படித்தான் சொன்னார்.''

''ஒரு நாளைக்கு, 'ஸ்டாடிலஸ்டராஸ்' அரைவட்டக் கலையரங்குக்குச் செல்வோம். அங்கே விலங்குகள் - வீரர்கள் - வேடிக்கையான முறையில் சண்டை போடுவார்கள்.''

''அப்படியா'' என்று வியப்போடு கேட்ட செழியன் 'உன்னுடனா வரச்சொல்கிறாய்?' என்று உள்ளூர எண்ணிக் கொண்டான்.

சற்றைக்கெல்லாம் தேர்ச் சாரதி ஒருவன் வெளியில் நின்றவாறே அறைப் பக்கம் தலையைக் காட்டினான்.

''ஓ! நீ வந்துவிட்டாயா?'' என்று ஜூனோ, செழியனை நோக்கி, ''சரி கிளம்புங்கள் விரைவாக'' என்றாள்.

திகைப்பின் நிழல் சட்டென்று தன் முகத்தினில் படிந்திட, ''எதற்கு...எங்கே...?'' என்று மென்று விழுங்கியவாறே கேட்டான் செழியன்.

'களுக்' கென்று பாளைச் சிரிப்பொன்றை வெடித்திட்ட ஜூனோ, ''ஏன், என்னோடு தனியாகப் புறப்படுவதற்குப் பயமாக இருக்கிறதா? உங்கள் முகமே மாறிவிட்டதே! எவ்வளவோ பெரிய வீரர் என்று கேள்விப்பட்டேன். இப்படி பயந்து சாகிறீர்களே! பரவாயில்லை; நான் உங்களை ஒன்றும் செய்துவிடமாட்டேன். நாம் இப்போது போகப் போவது எங்கள் ஆட்சித் தலைவரின் இல்லத்திற்கு, ஒரு விருந்திலே கலந்து கொள்வதற்கு!'' என்று குறும்பு நெளிந்திட அவனை நோக்கினாள்.

''விருந்தா? எதற்கு?''

''எங்கள் நாட்டுப் புகழ்மிக்க எழுத்தாளர்கள், கவிஞர்கள், அரசியல் வாதிகள், கலைவல்லுநர்கள் ஆகியோரை உங்களுக்கு அறிமுகப் படுத்திடவேண்டுமாம்... அதற்காகத்தான் தனியாக இந்த விருந்து'' - ஜூனோ இவ்வாறு புதிரை அவிழ்த்த பின்னரே மனத்தெம்பு வந்தவனாக அவளோடு புறப்பட ஆயத்தமானான் செழியன்.

சிறிது நேரத்தில் ஓர் அலங்காரமான தேர் ஜூனோ, செழியன் இருவரையும் சுமந்து கொண்டு அகஸ்டசின் இல்லம் நோக்கி விரைந்தது.

'டிரிப்லினியம்' என்று அழைக்கப்படும் விருந்துக்கூடத்தில் அவர்கள் நுழைந்ததுமே, ''ஏன், சிப்பியோ வரவில்லையா?'' என்று வினவினார் அகஸ்டஸ்.

''இல்லை, தம்முடைய பெற்றோரைக் கண்டு வருவதற்காகப் பிற்பகலிலேயே போய்விட்டாராம் அவர்'' என்றாள் ஜூனோ.

''விருந்திலே நான் அறிமுகம் செய்வதை உடனுக்குடன் மொழி பெயர்த்துக் கூறினால்தானே நம் தூதுவர் உடனுக்குடன் விளங்கிக் கொள்ள முடியும்?.... ம் ஒன்று செய்தால் என்ன? உனக்குத்தான் தமிழ் தெரியும் என்று சொன்னாயே!''

''ஆம்...?''

''அப்படியானால் நீயே மொழிபெயர்ப்பு வேலையை மேற்கொண்டு விடேன்!''

''தங்கள் கட்டளைப்படியே மொழி பெயர்த்துக் கூறிட நான் ஆயத்தமாகவே இருக்கிறேன். ஆனால்...''

''என்ன 'ஆனால்...? நம்முடைய விருந்துகளில் பொதுவாகப் பெண்கள் இருப்பதை நாம் அனுமதிப்பதே இல்லையே என்று தயங்குகிறாயா?''

''ஆம்''

''நீயும் எங்களோடு சேர்ந்து' விருந்தினை அருந்தினால்தானே தவறாகும்! நீ வெறும் மொழி பெயர்ப்பு மட்டுந்தானே செய்யப் போகிறாய்? ஆகவே மற்றவர்கள் மறுப்பேதும் சொல்லமாட்டார்கள்; அஞ்சாதே!'' என்று ஊக்கமூட்டினார் அகஸ்டஸ்.

எதிலுமே எளிமையைக் கடைப்பிடித்திடுவதைப் பெரிதும் விழைந் திடும் ரோமானியப் பேரரசின் ஆட்சித் தலைவரான அகஸ்டஸ், உணவு முறைகளிலும் ஆடம்பரத்தை விரும்புவதில்லை. ஆனால் அன்றைக்கு என்னவோ விருந்து வகைகள் சற்று ஆடம்பரமாகவே பரிமாறப்பட்டன.

வேக வைக்கப்பட்ட கிளிஞ்சல் மீன்கள், பன்றியிறைச்சி வறுவல், தோல் உரிக்கப்பட்ட முழுக் கோழி, கோதுமை ரொட்டி, அவியல் செய்யப்பட்ட முட்டைக் கோசு, பீட்ரூட், வெள்ளரிக்காய்கள், ஆப்பிள் பழங்கள், பேரிக் காய்கள்-என்று பல்வேறு உணவுப் பண்டங்கள் அங்கே தட்டுத் தட்டாகக் கட்டுப்பாடின்றி நிரம்பி வழிந்தன. போதை அளித்திடும் ஒயினும் ஆங்காங்கே கண்ணாடிக் கோப்பைகளில் ஊற்றித் தரப்பட்டது.

செழியனுக்கு இறைச்சி வகைகள் அவ்வளவாகப் பிடித்திடவில்லை. மீன்களை மட்டும் சுவை பார்த்தான். காய்கறிகளை விரும்பியுண்டான். ஜூனோ அவன் அருகிலேயே நின்று கொண்டு ''அது நன்றாக இருக்கும். இது நன்றாக இருக்கும்...'' என்று அவனை விடாப்பிடியாக உண்ண வைத்த வண்ணம் இருந்தாள்.

உணவை அருந்தியவாறே, விருந்திலே கலந்து கொண்டுள்ள புகழ் பெற்ற கவிஞர்கள் - அரசியல்வாதிகள் - கலை வல்லுநர்கள் - முதலா னோரை அறிமுகம் செய்திடலானார் அகஸ்டஸ்.

''இதோ இருக்கிறாரே, இவர்தான் மேசனஸ், நுட்பமான அரசியல் அறிஞர். ஆக்டியம் சண்டையில் நான் அந்தோணியின் படைகளைத் தோற்கடிக்கச் சென்ற வேளையில் இங்கே ரோமாபுரியில் அமைதி காத்திட்ட பெருமை இவரையே சாரும். தேர்ந்த நிருவாகத் திறமை படைத்தவர். எல்லாவற்றையும்விட இலக்கியத் தாகம் மிகுந்தவர். எழுத்தாளர்களையும், கவிஞர்களையும் ஒரு குழுவாக இணைத்து அவர்களிடம் வேலை வாங்குவதில் வல்லவர், நெடுங்காலமாகவே இனிய நண்பர்....

''இதோ இவர்தான் கவிஞர் வெர்ஜில், எங்கள் நாட்டின் பழம் பெருமை வாய்ந்த மாட்சியினைப் பழச்சுவையினையும் மிஞ்சிடும் வண்ணம் பாக்களாக வடித்திடுவதில் வல்லவர்; வரலாற்றறிவு மிகுந்தவர்;

கிரேக்கர்களுக்கு ஹோமர் எவ்வாறோ அப்படித்தான் ரோமானியர்களாகிய எங்களுக்கு இவர் மாபெரும் கவிஞர்

அகஸ்டஸ் இங்ஙனம் இயம்பிடும் பொழுதே மேசனஸ் இடைமறித்தார்.

''கவிஞர் வெர்ஜில் அவர்கள் வெறும் பாவாணர் மட்டுமல்ல; பெரிய தொலைநோக்காளரும் (தீர்க்கதரிசியும்) கூட ! பிற்காலத்தில் பிறந்திடப் போகும் ஓர் ஆண் குழந்தை இந்த உலகிற்கே ஒரு பொற்காலத்தைக் கொணரப் போவதாக இவர் முன்பே எழுதி வைத்துள்ளார். நம்முடைய அகஸ்டசின் தங்கை ஆக்டேவியாவுக்கும் அந்தோணிக்கும் பிறந்திட்ட மார்செல்லஸ் என்னும் பையன்தான் அத்தகைய ஒளி விளக்காகத் திகழ்வானோ என்று நாங்கள் எல்லோரும் எண்ணினோம். ஆனால் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னே அவன் இறந்து போனான். என்றாலும் கவிஞர் வெர்ஜிலின் ஆருடம் பலித்தே தீரும் என்று நாங்கள் எல்லோரும் உறுதியாக நம்புகிறோம்.''

மேசனஸ் இப்படிக் கூறி முடித்ததும் அகஸ்டஸ் மேலும் தொடர்ந்திட்டார்.

''அதோ... இருக்கிறாரே அவர்தான் கவிஞர் ஹோரேஸ், பாடல்களிலே நகைச்சுவையினை வழியவிடுவதில் கைதேர்ந்தவர், போலி வாழ்க்கை வாழ்பவர்களும் வாய்ச்சொல்லில் வீரர்களும் இவருடைய நையாண்டிக் கணைகளால் நையப் புடைக்கப்படுவார்கள். அதற்காக ஓரவஞ்சனையாகவோ ஒரு சார்பாகவோ குறை கண்டு பிடிப்பதனையே தொழிலாகவும் இவர் கொண்டிடவில்லை. சிரிக்க வைப்பதோடு நில்லாமல், சிந்திக்க வைக்கவும் செய்வார்; சீர்திருத்த நோக்கங்களுக்கு ஆக்கம் அளிப்பவர்....''

அகஸ்டஸ் தொடர்ந்து விருந்தினரை அறிமுகம் செய்தார்:

''அதோ, அந்தப் பக்கம் அமர்ந்திருக்கிறாரே அவர் தான் மாபெரும் எழுத்தாளர் லிவி. கவிஞர் வெர்ஜில் எங்ஙனம் காப்பியம் இயற்றுவதில் வல்லவரோ, அவ்வாறே வரலாற்று நூல்களை உரைநடையில் வடித்துத் தள்ளுவதில் இவர் தலை சிறந்தவர்.''

இன்னும் டிபுலெஸ், பிராபெர்சியஸ் - முதலானவர்களையும் அறிமுகப்படுத்திக்கொண்டே சென்றிட்ட அகஸ்டஸ் கோப்பையில் ஊற்றி வைக்கப்பட்ட ஒயினைச் செழியன் குடிக்காமலேயே இருப்பதைக் கவனித்துவிட்டார்.

''ஏன், ஒயின் உங்களுக்குப் பிடிக்காதா?''

''இல்லை,'' என்று தலையை அசைத்திட்டான் செழியன்.

''வியப்பாக இருக்கிறதே! சோமரசமே பருகிடக்கூடிய கீழை நாட்டுப் பகுதியிலிருந்து வந்துவிட்டு ஒயின் பிடிக்கவில்லை என்கிறீர்களே!'' -அகஸ்டஸ் இவ்வாறு பகர்ந்திடவும் கவிஞர் வெர்ஜில் குறுக்கிட்டார்.

''சோமரசம் பருகுகிறவர்கள் விந்திய மலைக்கு வடக்கே வாழ்ந்திடும் ஆரியர்களே அன்றி இவர்கள் அல்லர்.''

''அப்படியானால் உங்கள் தமிழ்நாட்டில் மதுப்பொருளே கிடை யாதா?'' என்று செழியனை நோக்கி ஓர் ஐயப்பாட்டினை எழுப்பினார் அகஸ்டஸ்.

''ஏன், 'கள்' என்று ஒரு போதைப் பொருள் இருக்கிறது.''

''அது எப்படி இருக்கும்? ஒயினைப்போல் உடல் நரம்புகளுக்கு உணர்ச்சியூட்டக்கூடியதா?''

''அது பாலைப் போல் வெண்மையாகத்தான் இருக்கும். உழைக்கும் பாட்டாளிகளின் அலுக்கையை அகற்றக்கூடிய உயிர்ச்சத்து அதில் இருப்பதாகச் சிலர் உரைப்பார்கள்.ஆப்பம் முதலான உணவுப் பண்டங் கள் நன்றாக வெந்து மலர்வதற்குச் சில தாய்மார்கள் அதனைப் பயன் படுத்தியதையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனாலும், மயங்கித் தடுமாறி டும் அளவுக்குக் கள்ளே கதியென்று கிடப்பவர்களை எங்களு டைய மக்கள் அவ்வளவாக மதிப்பதில்லை.''

''நீங்கள் கூறுவது உண்மைதான் தூதுவரே! அளவுக்கு மீறினால் எதுவுமே நஞ்சுதான். மதுப்பொருள்களை மருந்துப் பொருள்களாகப் பயன்படுத்துவதோடு நின்று கொள்வதே நல்லது. அதனால்தான் நான் கூட எங்கள் நாட்டிலுள்ள மற்றவர்களைப் போல் ஒயினை மிகுதியாகப் பருகுவதில்லை''- அகஸ்டஸ் தம் வார்த்தைகளை முடிக்கு முன்னரே மேசனஸ் என்பவர் எழுந்தார்; கரகரப்பான குரலில் இவ்வாறு கூறலானார்:

''தூதுவரே! இங்கே வந்திடாத இன்னொரு தீவிரமான இளம் எழுத்தாளரைப் பற்றியும் உங்களுக்கு நான் சொல்லி வைப்பது என்னுடைய கடமையாகும்; ஓவிட் என்பது அவரது பெயர். காதலைப் பற்றி வருணிப்பதிலே அவர் மாபெரும் மன்னன். ஆண்-பெண் உறவுகளை...

''நிறுத்து மேசனஸ், நிறுத்து! சிறுமையைச் சேர்ப்பவர்களைப் பற்றியெல்லாம் இங்கே விளம்பரப்படுத்திட தேவையில்லை. போலிப் புகழுக்காக -வயிற்றுப் பிழைப்புக்காக - காமக் களஞ்சியங்களை அவிழ்த் துவிட்டு இளம் உள்ளங்களைக் கெடுப்பவனெல்லாம் தரமான எழுத்தாள

னாக ஆகிவிட முடியுமா? எழுதுகோலை எடுத்தவன் தன்னைச் சுற்றிலும் உள்ள அசிங்கத்தைப் 'படம்' வரைந்தால் மட்டும் போதாது; அதனை அகற்றுவதற்குரிய 'பாடம்' புகட்டுகின்ற சிந்தனைத் தெளிவு உள்ளவனாக வும் அவன் இருந்திட வேண்டும்!''

''ஆமாம்; எழுத்தாளனுக்குரிய இலக்கணத்தைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? ஏன் வீணாகக் கதை அளக்கிறாய்?''-மேசனஸ் இப்படிக் குறுக்கிட்டு வெட்டியதும் அகஸ்டஸின் விழிகள் இரண்டும் இரு நெருப்புத் துண்டங்களாகச் சிவந்து விட்டன.

ஆயினும் அவர் உடனே ஆத்திரத்தைக் கக்கிடவில்லை வார்த்தை களின்மூலம். அவரது பார்வை எதிரே சிரித்துக் கொண்டிருந்த மலர்க் கொத்தின் மீதே நிலை குத்தி நின்றிட்டது. தம்முள் சீறி எழுந்திடும் சினத்தினைத் தணித்துக் கொள்ளத்தானோ என்னவோ, கோப்பையில் பாதிக்குமேல் எஞ்சியிருந்த ஒயினைத் தம்முடைய வழக்கத்திற்கு மாறாக ஒரே விழுங்கில் மடமடவென்று விழுங்கனார்.

குழுமியிருந்த எழுத்தாளர்கள், கவிஞர்கள் எல்லாரும் மேசனஸ் இப்படிக் குத்தலாக அகஸ்டஸை சாடியதைக் கேட்டு அதிர்ச்சியே அடைந்தனர். அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணம் ஊமை நாடகமாகவே தங்கள் உள்ளத்து உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டனர். சில காலமாகவே அகஸ்டஸ்-மேசனஸ் நட்புப் பாலத்திலே வெடிப்பு விழுந்துவிட்டதை அவர்கள் நன்கு அறிவார்கள் என்றாலும், வெளிநாட்டுத் தூதுவர் முன்னிலையில் தங்கள் ஆட்சித் தலைவரை மட்டந்தட்டிப் பழி வாங்கிடுவார் என்று அவர்கள் எதிர்பார்த்திடவே இல்லை.

கலகலப்பாக விளங்கிய விருந்துக்கூடம் சட்டென்று கல்லறைக் கூடம் போல் அமைதியில் ஆழ்ந்திட்டது செழியனுக்கு வருத்தத்தையே அளித்திட்டது. மேசனஸ் ஏதோ வரம்புமீறித் தாக்கியிருக்க வேண்டும் என்று அவன் ஊகித்துக்கொண்டான். ஆனால் அவருடைய தாக்குதலை ஜூனோ மொழி பெயர்த்திடவில்லை. தன் உதடுகளை இறுக்கி மூடிக்கொண்டு விட்டாள் அவள்.

சிறிது நேரத்தில் ஹொரேஸ் எழுந்தார். குரலைக் கனைத்துக் கொண்டார்:

''மதிப்பிற்குரிய மேசனஸ் அவர்களே! நம்முடைய ஆட்சித் தலைவரை இவ்வளவு அலட்சியமாகத் தாங்கள் பேசியது எனக்கு மிகுந்த துயரினைக் கொடுக்கிறது. இந்த ரோமாபுரி நாட்டிலே இலக்கிய

வளர்ச்சிக்காகக் கவிஞர் வெர்ஜிலைப் போன்றவர்களையும் ஆதரித்துத் தாங்கள் ஆற்றியுள்ள அரும்பணியை யாரும் குறைத்து மதிப்பிட வில்லை. அதற்காக அகஸ்டஸ் பெருமகனாரையே ஏதும் அறியாதவர் என்று பேசுவதா? ''நம்முடைய அகஸ்டஸ் இந்த நாட்டின் காவலர் மட்டுமல்லர்; கவிதையிலும் அவர் கை தேர்ந்த சிற்பி!'' என்று தாங்களே ஒரு முறைக்குப் பலமுறை அவரைப்பற்றி உயர்வாகப் புகழ்ந்திருக் கிறீர்கள். அன்று அப்படி வானளாவப் போற்றிவிட்டு இன்று இப்படி எடுத்தெறிந்து பேசிடலாமா என்று எண்ணிப் பார்த்திட வேண்டுகிறேன்.''

- ஹொரேஸ் இவ்வாறு கூறியதும் அடுத்துக் கவிஞர் டிபுலெஸ் என்பவர் எழுந்தார். அவருக்கு இன்பியல் பாட்டுகளை பாடுவதை விட இரங்கற்பாக்களை - துன்பியல் செய்யுட்களை இயற்றுவதிலேயே தனி இன்பம். போர் என்றாலே உள்ளம் பொருமுகின்றவர். அமைதி என்றாலோ அவருக்கு அளவற்ற மகிழ்ச்சி. மேசனஸ் எங்ஙனம் ஓர் இலக்கிய வட்டத்தை ஏற்படுத்தினாரோ அவ்வாறே அவருக்கு போட்டியாக வாலெரியஸ் மெசல்லா என்பவரும் பிறிதொரு இலக்கிய வட்டத்தை உருவாக்கினார். அந்தக் குழுவினைச் சார்ந்தவரே டிபுலெஸ்.

''எழுத்துலகின் ஆக்கத்திற்குப் பாடுபடும் வள்ளல் என்று புகழப்படும் மேசனஸ் அவர்கள், நம்முடைய ஆட்சித் தலைவரின் அறிவாற்றலைக் குறைத்து மதிப்பிடுவதை கண்டு-ஏன், எடை போடவே தெரியாமல் இருப்பதைக் கண்டு உண்மையிலேயே நான் அதிர்ச்சியடைகிறேன்; வெட்கப்படுகிறேன். இங்கே இல்லாத ஒருவரைப் பற்றி எதற்குப் பேசிட வேண்டும்? மேலும், நேற்றுவரை யாரைத் தூற்றினாரோ அவரையே இன்று எதற்காகப் போற்றிட வேண்டும். அதுவும், அயல்நாட்டுத் தூதுவர் ஒருவர் முன்னிலையில் நம்முடைய ஆட்சித் தலைவரைப் பற்றி நாமே இடித்துரைக்கலாமா? ஏளனப்படுத்தலாமா? ஆகவே, தம்முடைய ஆணவப் பேச்சுக்காக மேசனஸ் அவர்கள் உடனடியாக மன்னிப்புக் கேட்டிட வேண்டும்'' -டிபுலெஸ் இவ்வாறு அழுத்தமாக உரைத்திடவும் முதுபெருங்கவிஞர் வெர்ஜில் உட்பட அனைவருமே, ''ஆம் ஆம்'' என்று கூச்சலிட்டனர்.

விருந்து மண்டபமே அதிரும்படியான அந்த முழக்கத்தினைக் கேட்டதும் மேசனசுக்கும் ஆத்திரம் வந்து விட்டது. அதற்காகத் தம் பிடிவாதத்தை விட்டுக் கொடுத்திடவும் அவர் ஆயத்தமாக இல்லை.

''நான் எதற்காகவும் எவரிடத்தும் மன்னிப்புக் கேட்டிடத் தேவையே இல்லை. நீங்கள் அத்தனை பேரும் ஒன்று கூடினாலும் என்னை இம்மிகூட அசைத்திட முடியாது. உங்கள் சலசலப்புக்கெல்லாம் நானா அஞ்சுகிற வன்?'' என்று அவர் விரைந்து அங்கிருந்து வெளியேறி விட்டார்.

''வெட்கம்! வெட்கம்!''... என்று தம் செவிகளே கிழிந்திடும்படி எழுந்திட்ட கூக்குரல்களையெல்லாம் அவர் பொருட்படுத்திடவே இல்லை!

சில விநாடிகள் சென்றதும் அகஸ்டஸின் பரந்த முகத்தினில் வறட்டுப் புன்னகையொன்று இழையலாயிற்று. ஜூனோவிடம் ''இனி, நீ மொழி பெயர்க்கலாம்.'' என்ற அவர், செழியனை நோக்கினார்.

''மேசனஸ் இவ்வாறு விருந்தின் நடுவே எழுந்து போனமைக்காக நீங்கள் ஒன்றும் வருந்திட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். முதுமையின் காரணமாகவோ என்னவோ அவரது மனநிலை இப்பொழு தெல்லாம் சரியாக இருப்பதில்லை. எனவே, அவருடைய செய்கையை நீங்கள் பொருட்படுத்திடவேண்டாம்'' என்றார் அகஸ்டஸ்.

''அவருடைய செய்கையைக் கண்டு எனக்கு வருத்தம் ஏதும் இல்லை; ஆனால் தங்கள் மனம் நொந்திடும் அளவுக்கு நிலைமை மாறியதைக் கண்டுதான் என்னால் வருந்திடாமல் இருக்க முடியவில்லை. தங்கள் பொறுமை, பொறுப்புணர்ச்சி, பெருந்தன்மை எல்லாமே என் உள்ளத் தினை மிகவும் கவர்கின்றன.'' என்று மறுமொழி பகர்ந்திட்டான் செழியன்.

மகிழ்ச்சி ஆரவாரத்தின் இறுதியில் மௌனத்தில் புதைந்துவிட்ட அந்த விருந்து மண்டபத்தினின்றும் செழியன் வெளியே வந்திட்ட பொழுது ரோமாபுரி நகரமே இருளில் மூழ்கியிருந்தது.

ஆயினும் அந்தப் 'பாலத்தின்' குன்றிலிருந்து சற்றுக் கீழே பார்த்திட்டபோது மரங்களை மொய்த்திடும் மின்மினிப் பூச்சிகளைப் போல், ஆங்காங்கே விளக்குகள் எரிவதும் தனி அழகாகத்தான் இருந்தது.

வாசல்வரை வந்து தன் கையைக் குலுக்கி விடை கொடுத்துவிட்டு அகஸ்டஸ் திரும்பிய பின்னர், செழியன் தனக்காகக் காத்துக்கொண்டு நின்றிருந்த தேரினை நோக்கி நடந்தான். அவன் பின்னாலேயே வந்திட்ட ஜூனோ ''சரி, போய் வருகிறீர்களா?'' என்றாள்.

''ஏன், நீ வரவில்லையா?'' என்று கேட்டான் செழியன்.

''நான் எதற்கு வரவேண்டும்?''

''வந்து... ஒன்றுமில்லை... ஒருவேளை நீ வருவாயோ என்று தான் கேட்டேன். '' என்று மென்று விழுங்கினான் செழியன்.

''நான் வரத்தான் வேண்டுமென்று தாங்கள் விரும்பினால், நான் வருவதற்குத் தயாராக இருக்கிறேன்.''

அவன் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''என்ன இப்படித் திகைத்துப்போய் நிற்கிறீர்கள்? ஆசை-அச்சம் இரண்டும் தங்களை அலைக்கழிக்கின்றன இல்லையா?'' -'களுக்'கெனச் சிரித்தவாறே வினவினாள் ஜூனோ.

''ஆசையாவது அச்சமாவது? அதெல்லாம் ஒன்றுமில்லை!'' -சமாளித்திட முயன்றான் செழியன்.

''ஏன் மறைக்கிறீர்கள்? சற்று முன்பு விருந்து மண்டபத்திலே மேசனசுக்கும் மற்ற கவிஞர்களுக்கும் வார்த்தைப் போர் நடைபெற்றதே; அதை என் மூலம் அறிந்திடவும் தங்களுக்கு ஆசை; அதற்காக என்னை இப்போது இந்த இரவிலே தனியாக அழைத்துச் சென்றால் மற்றவர்கள்

என்ன கதை கட்டி விடுவார்களோ என்றும் தங்களுக்கு அச்சம், அப்படித்தானே?''

தன்னுடைய நெஞ்சில் நெளிந்திடும் நினைவலைகளை எவ்வாறு இவ்வளவு சரியாக இந்த ஜூனோ கண்டுபிடித்தாள் என்று வியப்புற்ற அந்த தமிழகத் தூதுவனுக்கு, ''ஆமாம், ஆமாம்; உன் ஊகம் சரிதான்'' என்று தலையாட்டுவதைத் தவிர வேறு வழி ஏது?

''இருந்தாலும் நீங்கள் இப்படியெல்லாம் அஞ்சிச் சாகக்கூடாது! மேலும், இந்த ரோமாபுரி நகரிலே அகஸ்டஸ் பெருமகனார் முதல் சாதாரண அடிமைவரை என் இயல்பைப் பற்றி - நடத்தையைப்பற்றி அறிவார்கள். நானே ஒரு வேளை தவறி நடந்திட்டால்கூட யாரும் இங்கே நம்பிடமாட்டார்கள். ஏனென்றால் ஆண்களைப் பொறுத்தமட்டில் நான் அவ்வளவு பொல்லாதவள்'' என்று நகைத்திட்ட ஜூனோ செழியனின் மறுமொழி எதையும் எதிர்பார்க்காதவளாகத் தேரினில் போய் ஏறிக்கொண்டாள்; அவனும் அவளைப் பின் தொடர்ந்தான்.

சாரதியிடம் ஜூனோ ஏதோ கூறினாள். அடுத்த கணமே, வரும்பொழுது இருந்த விரைவினைக் காட்டிலும் கடுங்காற்றுப்பட்ட கருமேகத் திரள்போலக் கடுகிப் பறக்கலாயின புரவிகள்.

ஆனால், ஒவ்வொரு திருப்பத்தினையும் கடந்திடும் பொழுது, மிகுதியாகவே குலுங்கிப் பாய்ந்திட்டது தேர். அவ்வாறு குலுங்கிடும் பொழுதெல்லாம், ஜூனோவின் கட்டுக்குலையாத பட்டுடல், செழியன் மீது மெல்ல விழுவதும், பின்னர் விலகுவதுமாக வேடிக்கைகள் புரிந்திட்டது.

செழியனுக்கோ... அந்தப் பருவக் கிள்ளையின் மெல்லிய உராய்வினால் மேனியெங்கும் புல்லரிப்பு - புது வெப்பம் பரவிட நேர்ந்தாலும், அந்தச் சமயத்தில் தாமரையின் நினைவு வந்து அவனுக்கு எச்சரிக்கைக் கவசமாய்த் துணை புரிந்திட்டது.

தேரின் குலுக்கல்களால் தனக்கும் செழியனுக்கும் ஏற்பட்டிடும் மேனி நெருக்கங்களைப் பற்றிய நினைவே இல்லாதவளைப் போல, விருந்து மண்டபத்திலே புயலினை எழுப்பிய சொற்போர்களைப் பற்றி விரித்துரைத்தாள் ஜூனோ.

அவளுடைய கூற்றுகளைக் கூர்ந்து கவனித்துக் கேட்டு வந்திட்ட செழியன் ''மேசனஸ் இந்த அளவுக்குப் பழி வாங்கிடும் உணர்ச்சியுள்ளவராக இருக்கிறாரே; அவர் ஒருவேளை தமக்கென்று ஆட்களைத் திரட்டி அகஸ்டசை வீழ்த்திட முயல்வாரோ.'' என்று வினவினான்.

''ஊம்... அப்படியெல்லாம் எது'வும் நடக்கவே நடக்காது. மேசனஸ் இருக்கிறாரே, அவர் இப்போது பல் இல்லாத நச்சுப்பாம்பு; காலொடிந்து விட்ட கிழட்டுப்புலி! அவருடைய பேச்சை இனி யார் கேட்பார்கள்?''

''என்றாலும் அவர் பெரிய செல்வச் சீமான் இல்லையா?''

''சீமானாக இருந்தால் மட்டும் போதுமா? எதையும் செய்துவிட முடியுமா?''

''போகட்டும் , மேசனசுக்கு மனைவி மற்றும் எல்லாரும் இருக்கிறார் களா? பெருங்குடும்பமா?''

''ஏன், அவர் வீட்டிலே பெண் எடுக்கலாம் என்கின்ற எண்ணமா?'' -கேலியாகச் சிரித்திட்டாள் ஜூனோ.

''ஒரு பேச்சுக்குக் கேட்டு வைத்தால் இப்படி குறுக்கே வெட்டு கிறாயே? மேலும் அவரது குடும்பத்தைப் பற்றி எதற்காகக் கேட்கிறேன் தெரியுமா?''

''ஏதற்கு?''

''தம் தந்தைக்கு ஓர் அவமானம் - எதிர்ப்பு - என்றால் அதனைத் தகர்த்தெறியக் கிளர்ந்தெழும் அளவுக்கு மேசனசுக்குப்பிள்ளைகள் இருக்கிறார்களா என்று அறிந்து கொள்ளத்தான்.''

''அவருடைய பிள்ளைகளைப் பற்றியெல்லம் எனக்கொன்றும் தெரியாது.''

''நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே! நேற்று வரை அகஸ்டஸின் நெருங்கிய நண்பர்தானே மேசனஸ்?''

செழியனின் இந்த வினாவுக்கு உடனடியாக விடையிறுத்திடாத ஜூனோ, சில நொடிகள் சென்றதும் மிகவும் மெல்லிய குரலில் இப்படிக் கேட்டாள்:

''ரோமாபுரியிலுள்ள பெரிய மனிதர்களின் குடும்பங்களைப் பற்றியோ அகஸ்டஸின் பகைவர்களைப் பற்றியோ அறிந்துகொண்டு உங்களுக்கு என்ன ஆகப்போகிறது? நான் கேட்கிறேனே என்று கோபித் துக் கொள்ளக்கூடாது; தமிழகத்துக்கும் ரோமாபுரிக்கும் இடையே உறவை வளர்க்க வந்தீர்களா? இல்லை, உளவறிய வந்தீர்களா?''

ஜூனோ இப்படி மடக்கியதும் செழியன் உண்மையிலேயே வெல வெலத்துப் போய்விட்டான். தன் மீது தவறான ஐயப்பாடு கொண்டு விட்டாளோ என்றும் அஞ்சினான். எனினும் அந்த அச்சத்தினை வெளிக் காட்டிக் கொள்ளாமல், ஏதோ வியப்பினில் ஆழ்ந்தவனைப் போல் நகைப்பொலியை உதிர்த்திட்டான்.

''உன் கேள்வியைக் கேட்டு எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. பல்லாயிரக்கணக்கான கற்களுக்கு அப்பால் இருக்கும் உங்கள் நாட்டிலே உளவு அறிவதால் எங்கள் நாட்டுக்கு என்ன ஆகப்போகிறது? அத்துடன் அகஸ்டஸ் பெருமகனைப் புரிந்துகொள்ளாமல் இருப்பது குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். நாலா திக்குகளிலும் புகழொளி வீசிடும் உங்கள் நாட்டின் நாயகன், உட்பகையென்னும் நரிகளால் - நச்சரவங்களால் தீண்டப்படக்கூடாதே என்னும் நல்லெண்ணத்தால்தான், நான் மேசனைசப்பற்றி அறிந்துகொள்வதில் ஆர்வம் காட்டினேனேயன்றி வேறல்ல; ஆகவே எனக்கு ஏதோ உள்நோக்கம் இருப்பதாக நீ எண்ணிக் கொண்டால் அது முழுக்க முழுக்கக் கற்பனைதானே தவிர, உண்மை ஆகாது! இந்த விளக்கத்திற்குப் பிறகும் என் மீது எழுந்த ஐயப்பாடு விலகிடவில்லையென்றால் நீயே ஒற்றர்களை வைத்து என்னைக் கண்காணிக்கலாம்.''

செழியன் இங்ஙனம் உணர்ச்சிப்பெருக்குடன் உரைத்திடவும் ஜூனோவோ கடகடவென்று வாய்விட்டுச் சிரித்திட்டாள்; தன் உடம்பு குலுங்கிட அவள் சிரித்த சிரிப்பில் விழிகளிலிருந்து கண்ணீர்கூட வழியலாயிற்று.

''உங்கள்மீது எனக்கு ஐயப்பாடு என்றால், இத்துணைக் கலகலப்பாக உங்களுடன் மனம்விட்டு பேசிடுவேனா? பழகிடுவேனா? நீங்கள் உளவு அறிவதாகக் கொஞ்சம் தெரிந்தாலும் அதை உங்களிடமா நேரிலேயே கேட்பேன். ஆட்களை வைத்துக் கையுங்களவுமாகப் பிடித்திட மாட்டேனா? நல்ல வேடிக்கை!... இந்த ஆண்கள் மிகவும் மோசம்! உடனே உணர்ச்சி வசப்பட்டுவிடுவதுதான் உங்களுக்கு வாடிக்கை!''

ஜூனோவின் இந்தச் சொற்களைக் கேட்டதும் செழியன் வெட்கித் தலைகுனிந்தான்.

'வெளித்தோற்றத்தில் - பேச்சில் - விளையாட்டுப் பெண் போல இருக்கிறாள்' ஆனால் எல்லா வகையிலும் என்னை மடக்கி விடுகிறாளே! பொல்லாத குறும்புக்காரிதான் இவள்; இவளைக் கட்டிக் கொள்கிறவன் படாதபாடுதான் பட வேண்டும்' என்று உள்ளூர எண்ணிக் கொண்டான் அவன்.

இதற்குள் அவன் தங்கியிருக்கும் மாளிகை வாசலுக்கு வந்து விட்டது அந்தத்தேர். அதனின்றும் இறங்கிய அவனிடம் ''என்மேல் கோபமா?'' என்று செல்லமாகக் கேட்டாள் ஜூனோ.

'இல்லை,' என்று சொல்லாமலே தலையை மட்டும் அசைத்திட்டான் செழியன்.

தமிழகத்தைவிட்டு ரோமாபுரிக்குக் கிளம்பிடும்பொழுது செழியனின் சிந்தனையை உராய்ந்திட்ட சிறு கவலை ஒன்று உண்டு; தனக்கு மொழி தெரிந்திடாத - நண்பர்களும் இல்லாத - ஒரு நாட்டிற்குச் செல்கிறோமே; அங்கே பொழுது எப்படிப் போகுமோ என்பதே அந்தக் கவலை.

ஆனால், அவனுடைய கவலைக்கு இடமே ஏற்படாத வகையினில் பல்வேறு களியாட்ட அரங்குகளைக் கொண்டு அவனைக் கவர்ந்து இழுத்திட்டது ரோமாபுரி.

ஒருநாள் பிற்பகல்!

நீராட்டக் கட்டத்திலிருந்து தான் தங்கியுள்ள மாளிகைக்குத் திரும்பிய செழியன், வாசலில் வெண்புரவிகள் பூட்டப்பெற்ற தேர் ஒன்று நிற்பதனைக் கண்டு திகைப்புற்றான்.

தேரின் ஓரமாகவே அதன் நிழலில் நின்றுகொண்டிருந்த சாரதியின் வணக்கத்தினை ஏற்றுக்கொண்ட அவன் ‘இந்த நேரத்தில் ஜூனோ ஏன் வந்திருக்கிறாள் - அதுவும் தேரோடு? அகஸ்டஸ் ஒருவேளை அழைத்துவரச் சொல்லியிருப்பாரோ?’ என்று எண்ண ஓட்டங்களை அசை போட்டவாறே படிகளில் மேலேறிச் சென்றான் பரபரப்போடு.

அவன் எதிர்பார்த்திட்டவாறு முன்கூடத்தில் ஜூனோ இல்லை. பணியாளையும் காணோம். ஆனால், அறைக் கதவுகள் எல்லாம் திறந்து கிடந்தன. தற்செயலாக அவனது பார்வை படுக்கையறை நோக்கிச் சென்றிட்டது. அங்கோ?

அவன் துயில்கின்ற கட்டில் மெத்தையில் ஒயிலாகப் படுத்திருந்தாள் ஜூனோ!

‘சே! இந்த ரோமானியப் பெண்களுக்கு எந்த வரைமுறையுமே கிடையாதா? யார் படுக்கையில் யார் படுப்பது என்று எள்ளளவேனும் எண்ணிப் பார்த்திட வேண்டாமா?’ என்று எரிச்சலுற்ற செழியன் அவள் அருகினில் சென்றிட்டான்.

மூங்கில் குருத்தினைப்போல் மழுமழுப்பான தன் கரங்களையே தலையணையாக மடக்கிக்கொண்டு மல்லாந்து கிடந்திட்ட அவள், அயர்ந்து உறங்குவதுபோல் காணப்பட்டாள். அவளுடைய நிலாப் பிஞ்சு நெற்றியிலே பசும் புல்லில் தேங்கிய பனித்துளி போல வேர்வை முத்துக்கள் அரும்பியிருந்தன. தந்தையின் கட்டுப்பாட்டுக்குள் அடங்காத தறுதலைப் பிள்ளைகள்போல் அவளுடைய சுருள் முடியின் பிடிப்புக்குள் அடங்காமல் ஒன்றிரண்டு சுருள் கேசங்கள் காற்றிலே சிலிர்த்தெழுந்து அந்த வேர்வை முத்துக்களுக்கு வெண்சாமரம் வீசிடக் காத்திருந்தன. பாதியாக அறுத்தும் அறுக்காமலும் விரிந்திட்ட கொய்யாக் கனிபோல்

சற்றே பிளந்திருந்த செவ்விதழ்கள் 'பல் என்னும் வெள்ளிச் சுரங்கம் உள்ளே இருக்கிறது!' என்று சொல்லாமற் சொல்லின.

அயர்ந்து உறங்கிடும் தன்னை மறந்திட்ட நிலையிலும் அவளுடைய பூமுகம் எங்கணும் இழைந்திட்டது ஓர் அருமையான காந்தப்புன்னகை! தாமரையின் தளிர் முகத்தினில் தவழ்ந்திடுமே, அதே கனவுக்கோலக் காந்தப்புன்னகை.

சட்டென்று ஓர் அச்சம் வந்து ஆட்டிப்படைத்திட்டது செழியனை.

'இந்த நேரத்தில் சிப்பியோவோ பணியாளோ வந்து ஜூனோ இந்தக் கோலத்தில் படுத்துறங்குவதைப் பார்த்து விட்டால் என்ன செய்வது? ஏதோ ஓர் உரிமையில்லாவிட்டால் அவனுடைய தனி அறையில், அதுவும் கட்டில் மெத்தையில் அவள் இப்படிக் கண்மூடிக் கிடந்திடு வாளா என்று எண்ணிட மாட்டார்களா? இவளுடைய விளையாட்டுத் தனமான போக்கினால் பெரும் இடர்கள் எல்லாம் விளைந்திடும் போல் இருக்கிறதே' என்று கிலியுற்ற செழியன் ''ஜூனோ! ஜூனோ!'' என்று எழுப்பினான்.

ஊகூம்.. அவளோ விழிப்பதாக இல்லை.

யாராவது வந்து பார்த்திடப் போகிறார்களே என்ற துடிப்பு மிகுதி யாகிவிட்டது செழியனுக்கு. வேறு வழியில்லை. எனவே தலையணை யாக மடங்கிப் பிணைத்திருந்த அவளுடைய கரங்களைத் தொட்டுப் பிடித்து விலக்கிவிட்டான். உடனே அவளுடைய இமைக் கதவுகள் திறந்தன. தூக்கக் கலக்கத்தில் மலங்க மலங்க விழித்திட்ட அவள் செழியனின் முகத்தினைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்தாள்.

''நீங்கள் வந்து நெடுநேரம் ஆகிவிட்டதா?'' என்று வினவியவாறே பரபரப்புடன் தன் உடையினைச் சரிசெய்து கொண்டாள்.

''இப்போது தான் வந்தேன். ஆமாம், நீ இப்படி வந்து இங்கே தூங்கிட லாமா?'' -சற்றுக் கடுமை தெறித்தது செழியனின் குரலில்.

''உடல் அலுக்கை; ஒரே அசதி. தாங்கமுடியவில்லை. அதனால்தான் படுத்துவிட்டேன். கோபித்துக் கொள்ளாதீர்கள்!''- கொஞ்சும் முறுவலு டன் கெஞ்சிய அவள், ''எங்கே போயிருந்தீர்கள்? உங்களுக்காக எவ் வளவு நேரமாகக் காத்திருக்கிறேன் தெரியுமா? உங்கள் பணியாளைக் கூடத் தேடி அழைத்து வருமாறு அனுப்பி வைத்தேன். அவனைப் பார்க்க வில்லையா நீங்கள்?'' என்று கேட்டாள்.

''இல்லையே! நான் நீராட்டக் கட்டத்திற்கு போய் இருந்தேன்!''

''எந்த 'பாத்'திற்கு?'

'உங்கள் ரோம் நகரத்தில் தான் நூற்றுஎழுபது 'பாத்' துக்கள் போல் இருக்கின்றனவாமே! எந்த 'பாத்'தின் பெயரை நான் நினைவில் வைத்துக்கொண்டு சொல்வது?'

''போகட்டும், இன்னும் நீங்கள் உணவு அருந்தவில்லை அல்லவா?''

''இனிமேல்தான்!''

''நல்லது. உணவுக் கூடத்துக்கு வாருங்கள். அங்கே உங்களுக்குப் புதுமையான விருந்து கிடைக்கும்?'' என்றவாறே, அவனை முந்திக் கொண்டு, துள்ளிக் குதித்தோடினாள் ஜூனோ.

'என்ன புதுமையான விருந்தாக இருக்கும்?' என்று எண்ணியவாறே முகம், கை கால்களை அலம்பிக்கொண்டு உணவுக் கூடத்திற்கு வந்திட்ட செழியன், அங்கே மேசை மீது ஜூனோ பரிமாறிக்கொண்டிருந்த வற்றைப் பார்த்ததும் வியப்பில் ஆழ்ந்திட்டான்.

மலர்ந்த மல்லிகை இதழ்களைப் போல் வெள்ளை வெளேர் என்று தென்பட்ட அரிசிச் சோறே அவனை அவ்வாறு வியப்பில் ஆழ்த்தியது.

உண்பதற்காக மேசையை ஒட்டிக் கிடந்திட்ட இருக்கையினில் வந்து அமர்ந்திட்ட செழியன்.,

''ஆமாம், உங்கள் ரோம் நாட்டிலே கோதுமை தானே கிடைக்கும்; இந்த அரிசி உங்களுக்கு எப்படிக் கிட்டியது?'' என்று கேட்டான்.

''நீங்கள் கேட்பது வேடிக்கையாக இருக்கிறது? எங்கள் அகஸ்டஸ் பெருமகனார் மனம் வைத்திட்டால், இந்த உலகத்திலே கிடைத்திடாத எந்த பொருளேனும் உண்டா? ஆனால், இது உங்களுக்கென்றே உங்கள் நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட உயர்ந்த வகை அரிசியே ஆகும்!''

''குழம்புகூடத் தமிழ் நாட்டில் வைக்கப்படுவது போலவே மூக்கைத் துளைக்கிறதே!''

''உங்கள் நாட்டு ஏலம், இலவங்கப்பட்டை முதலான மணம் வீசிடும் பொருள்களைச் சேர்த்துச் செய்திட்டால் மூக்கை துளைத்திடாமல் வேறு என்ன செய்யுமாம்!''

''இது என்ன வெறும் ஈரல் துண்டுகளாக எடுத்துப் போடுகிறாய்! அதுவும் இவ்வளவு பெரிய துண்டுகளாக!''

''ஆட்டு ஈரலாக இருந்திருந்தால் சிறிய துண்டுகளாக வெட்டிப் போட்டிருப்போம்!''

''அப்படியானால் இது வேறு எதனுடைய ஈரல்?''

''நீங்கள் தான் கண்டு பிடியுங்களேன் எதனுடைய ஈரல் என்று'' - கேலியாக நகைத்திட்டாள் ஜூனோ. நன்றாகச் சுவைத்து மென்றிட்ட செழியனால் சரியாக அதனைக் கண்டுபிடித்திட முடியவில்லை.

''ஊகூம். எனக்குத் தெரியவில்லை''

''இதைக்கூட உங்களால் கண்டுபிடித்திட முடியவில்லையே! நீங்கள் என்ன பெரிய தூதுவர்!''

''கேலி புரிவது இருக்கட்டும், முதலில் இது எதனுடைய ஈரல் என்று சொல்!''

''நீங்கள் இப்போது சுவைக்கின்ற இவை எல்லாமே ஈரல் துண்டுகள் அல்ல.''

''பிறகு?''

''பலாமூசுத் துண்டுகளும் கலந்து இருக்கின்றன!''

''அப்படியா? வியப்பாக இருக்கிறதே! அது சரி; இத்துணை அருமையாகச் சமையல் செய்தது யார்?''

''நான்தான்!''

''நீயா? ஏன் பொய் சொல்கிறாய்?''

''ஏன் ? என்னைப் பார்த்தால் சமையல் செய்யக்கூடியவளாக உங்களுக்குத் தெரியவில்லையா?''

''அகஸ்டஸ் பெருமகனாரின் அந்தரங்கச் செயலாளரைப் போலவே இயங்கி, வெளி அலுவல்களில் ஈடுபடும் உனக்குச் சமையல்கட்டிலே நுழைந்திட நேரம் எங்கே இருந்திடப் போகிறது? அது ஒருபுறம் இருக்க, ரோமாபுரியைச் சார்ந்திட்ட உனக்குத் தமிழகச் சமையலைப் போலவே செய்வது என்பது அவ்வளவு எளிதா என்ன?''

''நீங்கள் என் வார்த்தைகளில் நம்பிக்கை வைத்திடாதது பற்றி நான் வருந்திடவும் இல்லை; வியந்திடவும் இல்லை. ஏனெனில் உங்கள் தமிழ்நாட்டுச் சமையலைச் சுவையாகச் செய்வது என்பது சற்றுக் கடினந்தான். ஆனால் இதனை நான் எப்படிக் கற்றுக் கொண்டேன் தெரியுமா?''

''எப்படி?''

''அலெக்சாண்டிரியா அரண்மனையிலே கிளியோபாத்ரா அரசியிடம் பணிப்பெண்ணாகப் பணியாற்றிய போது, ஒரு யவனக்கிழவரிடம் உங்கள் தமிழ்மொழியினைக் கற்றுக் கொண்டேன் என்று உரைத்திட்டேன் அல்லவா?''

''ஆமாம்.''

''அதே யவனக் கிழவர்தான் உங்கள் தமிழகச் சமையலையும் கற்றுத் தந்திட்டார். ஆனால் பல ஆண்டுகள் கழித்துச் செய்வதால் எப்படி இருந்திடுமோ என்று நான் அஞ்சிக்கொண்டேதான் இருந்தேன்; உண்மையைச் சொல்லுங்கள்! எப்படி இருக்கிறது?''

''எவ்வாறு பாராட்டுவதென்றே எனக்குத் தெரியவில்லை! இத்துணை அற்புதமாக - மணங் கமழ்ந்திட நீ சமைக்கக்கூடும் என்று என்னால் நம்பவே முடியவில்லை. பல நாட்களுக்குப் பிறகு இன்றுதான் என் நெஞ்சம் நிறைந்திட - வயிறு நிரம்பிட - உணவினை உட்கொள்கிறேன் என்றால் பார்த்துக் கொள்ளேன்!'' -செழியனின் உவகைப் பெருக்கிலே நீராடி வந்த புகழுரைகளை செவிமடுத்ததும் ஜூனோவின் ஆப்பிள் கன்னங்களிலே செக்கர் படர்ந்திட்டது, நாணத்தினால்!

அவன் உணவருந்திடும் அழகினையே தன் பார்வையினால் பருகித் திளைத்திட்டாள் அந்தப் பருவச் சிட்டு.

வயிறு புடைக்கத் தின்று முடித்திட்ட செழியனுக்கு உடனே படுத்துப் புரள வேண்டும்போல் இருந்தது. ஆனல் ஜூனோ அதற்கு இடந் தந்திடவில்லை.

...சிறிது நேரமாவது கண்ணயர்ந்து எழுந்திட்டால்தான் உண்ட களைப்பு நீங்கும் என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் என்ன செய்வது? உங்கள் வருகைக்காக இந்நேரம் எங்கள் அகஸ்டஸ் பெருமகனார் அங்கே வட்டக் கலையரங்கிலே காத்திருப்பாரே! விலங்குகள் - மனிதர்களுக்கிடையே நடைபெறும் சண்டை விளையாட்டுக்களையெல்லாம் நிறுத்தியும் வைத்திருப்பாரே!'' என்று அவனை விரைவுபடுத்திட்டாள் அவள்.

சற்றைக்கெல்லாம், வாசலில் காத்துக் கொண்டிருந்த அழகிய தேர், ஜூனோ குறிப்பிட்ட வட்டக் கலையரங்கினை நோக்கி காற்றாய்ப் பறந்திட்டது.

மக்களை மகிழ்ச்சி வெள்ளத்திலே ஆழ்த்திடும் அந்தக் கலையரங்கினுள் நுழைந்திட்டபொழுது, செழியனுக்கு உற்சாகமான வரவேற்பு வழங்கப் பெற்றது. பல செனேட்டர்கள் தமிழக முறைப்படி வணக்கம் புரிந்தனர். அகஸ்டஸ் பெருமகனோ, அவனுடைய கரத்தினைப்பற்றி, அழுத்தி குலுக்கித் தம் அருகிலேயே அமர்த்திக் கொண்டார். அவர்கள் இருவருக்கும் பின்புறமாகச் சற்று உயரமான இருக்கையில் மொழி பெயர்ப்பதற்கு ஏதுவாக உட்கார்ந்து கொண்டாள் ஜூனோ.

'காலரிகள்' புடைசூழத் தற்கால சர்க்கஸ் கூடாரங்கள் எப்படித் திகழ்கின்றனவோ அப்படிப்பட்ட அமைப்பினை ஓரளவு உடையதே அந்த வட்டக் கலையரங்கம். ஏறத்தாழ இருபதாயிரம் மக்களுக்கு மேல் குழுமி இருந்திடக்கூடும் என்று செழியன் தன் மனத்திற்குள் கணக்கிட்டுக் கொண்டான்.

கலையரங்கின் மையத்திலுள்ள அடித்தளத்தில், முதலில் மல்லர்கள் வீராவேசத்துடன் பொருதிட முற்பட்டனர். 'கிளேடியேட்டர்கள்' என்று அழைக்கப்பட்ட அம்மல்லர்கள்; சாதாரணப் பொதுமக்கள் சமூகத்தினையோ, செனேட்டர் போன்ற செல்வக் குடிகளையோ சார்ந்தவர்கள் அல்லர். சாவு அல்லது ஆயுள் தண்டனை போன்ற கடுமையான சிறைத் தண்டனை பெற்றவர்களிலிருந்தும், போர்க் கைதி களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே அவர்கள். நாளாவட்டத்தில் அவசரகாலப் படைப் பயிற்சி பெற்றவர்களும் மல்லர்கள் ஆனார்கள்.

அன்று நடைபெற்றிட்ட மற்போரிலே சண்டை தொடங்கி அரை நாழிகைக்கெல்லாம் ஒரு மல்லன் இரங்கத்தக்க முறையில் கழுத்து நெரிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான். அவனைக் கொன்றவனை மெச்சிடும் வகையினில், பார்வையாளர்கள் அத்தனை பேரும் கரவொலிகள் எழுப்பி 'யே... யே.!' என்று உற்சாகமாக ஆர்ப்பரித்தனர்.

இறந்துபோன மனிதனுக்காக ஒருவர் கூட இரங்காதது செழியனுக்குத் திடுக்கீடாக இருந்திட்டது.

அடுத்துச் சிங்கத்திற்கும் மனிதனுக்குமிடையே போர் தொடங்கிற்று.

''இவனும் அந்த மல்லர்கள் வகையினைச் சார்ந்திட்டவன்தானா?'' என்று வினவினான் செழியன்.

''இல்லை, ஆனால் இவனும் சாவுத் தண்டனைப் பெற்ற கைதியே'' என்றார் அகஸ்டஸ்.

சிறிது நேரம்கூடச் சென்றிருக்காது. அந்த முரட்டுச் சிங்கம், கையிலே கருவியேதும் இல்லாமல் தனித்து மாட்டிக் கொண்டு விட்ட அந்த மனிதனைத் தன் கால் நகங்களாலும், கூரிய பற்களாலும் நார் நாராய்க் கிழித்துப் போட்டிட முனைந்தது. குருதி வெள்ளமோ குபுகுபுவென்று ஆறாய்ப் பாய்ந்திடலாயிற்று. தன் உயிரினை, விலங்கு மன்னனின் வெறிப் பசிக்கு இரையாகப் படைக்க நேர்ந்திட்ட அந்த அப்பாவி மனிதன் கதறித் துடித்திட்டான். அவனுடைய கதறல் ஒலி அந்த அரங்கத்தினையே அதிர்ந்திடச் செய்து விட்டது.

ஆனால்; அவன், 'குய்யோ! முறையோ!' என்று கூவக் கூவ - அவன் உடலிலிருந்து குருதி வெள்ளம் பாயப் பாய ரோமானியர்கள் ஆர்ப்பரிப்பு அதிகமாயிற்றே அல்லாமல் குறைந்திடவில்லை.

அவர்களுடைய இந்தக் கருணையற்ற போக்கினைக் கண்டு, செழியனுக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது.

''இந்த ரோமானியர்கள் என்ன மிருகங்களைவிட மிருக மனம் கொண்டவர்களாக இருக்கிறார்களே! ஒரு மனிதன் இறப்பதை - அதுவும் ஒரு சிங்கத்தினால் சின்னாபின்னமாகக் கிழிக்கப்பட்டு இறப்பதை - இப்படியா மகிழ்ச்சியாரவாரம் செய்து வேடிக்கை பார்ப்பது? இவ்வளவு கேவலமாகவா இவர்களுடைய இதயக் கூடு பழுதுபட்டிட வேண்டும்?'' அவன் வாய்விட்டே கூறி விட்டான், உணர்ச்சிவயப்பட்டு.

ஆனால் அவன் புகன்ற சொற்களைக் கேட்டு ஜூனோ திடுக்கிட்டுப் போனாள். அவற்றை எப்படி மொழி பெயர்ப்பது. அங்ஙனமே மொழி பெயர்த்திட்டால் அகஸ்டசுக்கு ஆத்திரம் வந்திடுமே? என்ன செய்வது என்றெல்லாம் திணறினாள் அவள்.

அகஸ்டசோ, ''என்ன சொல்கிறார்?'' என்றார் பின்புறம் திரும்பி.

ஜூனோவோ வாயினைத் திறந்திடாமல் மிரள மிரள விழித்திட்டாள்.

''ம் என்ன விழிக்கிறாய்? அவர் என்ன கூறினார்?'' என்று மீண்டும் அதட்டினார் அகஸ்டஸ்.

கடுமை கனன்றிட்ட அகஸ்டசின் அதட்டலைக்கேட்ட பின்னரே, 'தான் எவ்வளவு பெரிய தவறினைப் புரிந்திட்டோம்' என்று உணர்ந்திட லானான் செழியன், அத்துடன் ஏதுமறியாத ஜூனோவையும் ஓர்

இக்கட்டில் தள்ளித்திணறிடச் செய்துவிட்டோமே என்றும் வருந்திட லானான் அவன்.

உடனே பின்புறமாகத் தன் முகத்தினைத் திருப்பி ''எனக்கு என்ன நேர்ந்திடுமோ என்று அஞ்சி, அவருடைய அவநம்பிக்கைக்கு - ஐயப்பாட்டுக்கு நீ ஆளாகி விடாதே! உன்னுடைய கடமையை நீ ஒழுங்காகச் செய்; ஊம்... தயங்காதே!'' என்று எச்சரித்திட்டான்.

அதற்குமேல் ஜூனோ நேரத்தை வீணாக்கிடவில்லை. தொண்டை யைக் கனைத்துக் கொண்டாள். ரோமானியர்களின் மிருக மனம் பற்றிச் செழியன் உணர்ச்சி வயப்பட்டு உரைத்தவற்றையெல்லாம் மடமட வென்று மொழிபெயர்த்துத் தள்ளினாள்.

அவள் பகர்ந்து முடித்ததும், அகஸ்டசின் பரந்த முகத்தினிலே ஆத்திரம் படர்ந்திடவில்லை; அனலும் கொழுந்திடவில்லை; மாறாக ஆழ்ந்த சிந்தனையில் காலூன்றிய - பொருட்செறிவோடு கூடிய புன்னகையே இழையோடிற்று!

''நீ தூதுவரைக் கவனித்துக் கொள்; அவருக்கு ஏதேனும் ஐயப்பாடு எழுந்திட்டால் அதனைத் தெளிவுபடுத்து'' என்று இயம்பிவிட்டு மெல்ல நகர்ந்திட்டார் அகஸ்டஸ்.

அடித்தளத்தில் நிகழ்ந்திடும் விலங்குச் சண்டைகளை வேடிக்கை பார்ப்பதில் முழுமையாக-மும்முரமாக ஈடுபட்டு இருந்தமையால், பார்வையாளர்கள் யாரும் அகஸ்டஸ் அந்த அரங்கத்தினைவிட்டு வெளி யேறியதைக் கவனித்திடவில்லை.

கீழே இப்போது வெள்ளை யானை ஒன்று பல விந்தைகளைப் புரிந்த வண்ணம் இருந்தது.

''இந்த யானை ஆப்பிரிக்கக் காடுகளிலிருந்து வந்ததா?'' என்று வினவினான் செழியன்.

''ஆமாம்,'' என்றாள் ஜூனோ.

'ஆப்பிரிக்கா'என்னும் சொல் தன் செவியினில் விழுந்ததால் ஏற்பட்ட ஏதோ ஓர் எண்ணக் குறுகுறுப்பினால் - ''தூதுவர் என்ன கேட்டார்?'' என்று ஜூனோவை நோக்கினாள் லிவியா.

செழியனின் வினாவினை அவள் மொழிபெயர்த்துக் கூறினாள். உடனே, ''இது ஆப்பிரிக்க யானை இல்லை; இது சயாம் நாட்டுக் காட் டைச் சார்ந்தது. அண்மையில்தான் தனி ஏற்பாடுகளுடன் என் கணவர் இதனை வரவழைத்தார்'' என்று விளக்கமளித்திட்டாள் அகஸ்டசின் மனைவி.

பின்னர், அக்கலையரங்கம் முழுவதிலும் களிப்பு வெள்ளம் கங்கு கரையற்றுப் பொங்கிப் பெருகிட, தன் பருத்த உடலினை நெளித்து நெளித்து ஆடிடும் யானையின் நடனத்திலேயே ஆர்வத்துடன் அவள் பார்வையைச் செலுத்திடலானாள்.

லிவியா என்ன, யாருமே இனிமேல் தங்களைக் கவனிக்கப் போவ தில்லை என்னும் துணிச்சல் வந்து விட்டது போலும் ஐனோவுக்கு. அவள், செழியனின் வாயைக் கிளறத் தொடங்கிவிட்டாள்.

''நீங்கள் என்ன மரக்கட்டையா? இல்லை; மண் பொம்மையா?''

''ஏன் அப்படிக் கேட்கிறாய்?'' என்று சற்றுத் திகைப்புடனேயே கேட்டான் செழியன்.

''இல்லை எல்லோருமே இங்கே ஒவ்வொரு வேடிக்கையினைக் கண்டிடும் பொழுதும் உற்சாகத்தோடு கைகளைத் தட்டி ஆர்ப்பரிக் கிறார்கள். நீங்கள் மட்டும், 'உம்' என்று கற்சிலை மாதிரி உட்கார்ந்திருக் கிறீர்களே!''

''மனிதர்கள் மடிந்து விழுந்திடும்பொழுது மகிழ்ச்சியாவது, மண்ணாங்கட்டியாவது? இதற்குப்போய் நான் கைகளை வேறு தட்ட வேண்டுமா? நன்றாக இருக்கிறது!''

''என்ன செய்வது? இம்மாதிரியான வேடிக்கைகளைக் கண்டு களிப்பது எங்கள் நாட்டில் தொன்று தொட்டு வளர்ந்து வந்துள்ள பழக்கம். ஏன், உங்கள் தமிழகத்திலே மாட்டுச் சண்டைகள், கோழிச் சண்டைகள் எல்லாம் நடத்தி வேடிக்கை பார்ப்பீர்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேனே!''

''நீ சொல்வதைப் பார்த்தால் மாடு - கோழிகளுக்கும், மனிதர்களுக் கும் வேறுபாடே இல்லை என்று கருதுவதாகத் தெரிகிறதே!''

''தவறு, வாய் பேசாத - வஞ்சனையற்ற - அந்த விலங்கினத்தையும், பறவை இனத்தையும்விட மனிதர்கள் அத்துணை உயர்ந்தவர்கள் அல்லர் என்பதே என் தாழ்மையான எண்ணம். நீங்களேதான் பாருங்களேன்; அகஸ்டஸ் பெருமகனார் எவ்வளவோ பொறுமையோடு - நல்லெண் ணத்தோடு-பெருந்தன்மையோடு விரைந்து செயலாற்றிட முற்படும் பொழுதும் மேசனஸ் போன்றவர்கள் புழுதியை வாரித் தூற்றிடவில் லையா? ஏசல் - ஏளனம் - ஏகடியம் ... என்று தங்கள் பயன்பாட்டினைப் பலவீனப்படுத்திக் கொள்வதில்தானே அவர்கள் குதூகலம் அடை கிறார்கள்.''

''ஆமாம், முன்பே உன்னைக் கேட்க நினைத்தேன். அகஸ்டஸ் பெருமகனார் ஏன் இப்படித் திடீரென்று எழுந்து போனார்? உண்மையிலேயே அவருக்கு உடல் நலம் இல்லையா?''

''உங்களுக்குத் தெரியாதா? சில ஆண்டுகளாகவே அவருடைய உடல்நலம் பாதிக்கப்பட்டுத்தான் இருக்கிறது. அதுவும் தம் தங்கை ஆக்டேவியாவின் மகன் மார்செல்லஸ் இளவயதில் இறப்பைத் தழுவியதும் அவர் உடம்பு மிகவும் கெட்டுவிட்டது. தமக்குப் பின்னர் அந்த மார்செல்லஸ் தான் ஆட்சித் தலைவராக வரவேண்டும் என்று அவர் பெரிதும் கனவு கண்டு இருந்தார். எனவே அவரது இறப்பு இவருக்குத் தாங்கொணாத இடியாகிவிட்டது. இப்போது வெளித் தோற்றத்தில்தான் அவர் இரும்புக் கோட்டை; உள்ளூரவோ உளுத்த மூங்கில். உடலைப் பொறுத்தமட்டில் தான் இப்படி உரைத்திடலாமேயன்றி அவருடைய உள்ளம் எப்போதுமே வைரம்தான்; உறுதி - உயர்நோக்கு - எல்லாவற்றிலுமே வைரம்தான்!'' ஜூனோ இவ்வாறு உரைத்திடும் பொழுதே மேசனஸ், அவர்களுக்கு அருகினில் வந்திட்டார்.

''நான் இவரைப்பற்றிக் கூறியது இவர் காதில் விழுந்திருக்குமோ? அதற்காக வம்பு செய்யத்தான் வந்திருப்பாரோ?'' என்னும் அச்சம் படர்ந்திடாமல் இல்லை அந்த அழகுக் கிள்ளையின் முகத்தினில்! அவரோ செழியனை நோக்கி, ''என்ன தூதுவர் அவர்களே! உங்களை மாபெரும் வீரர் என்கிறார்களே? அதோ கீழே மல்லர்களை வீழ்த்திக் கொண்டிருக்கிறதே அந்தக் காண்டாமிருகம், அதனை நீங்கள் ஏன் அடக்கிடக்கூடாது? அதன் மூலம் இங்கே உங்கள் வீரத்தினையும் நீங்கள் ஏன் நிலைநாட்டிடக்கூடாது?'' என்றார்.

மேசனசின் இந்தக் குத்தலான சொற்களைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனாள் ஜூனோ.

ரோமாபுரிப் பேரரசு முழுவதிலுமே 'இலக்கிய வட்ட ஏந்தல்' என்றும், 'அரசியல் புலி' என்றும் பெரும் புகழினைப் பெற்றுள்ள மேசனஸ் தன்னைப் பார்த்து பகர்ந்தவற்றை ஜூனோ ஏன் உடனே மொழிபெயர்த்திடாமல் உதடுகளை மூடிக்கொண்டு விட்டாள் என்பது செழியனுக்கு விளங்கிடவில்லை.

...இவள் முகம் கூட ஒருமாதிரியாக வெளிறிவிட்டதே. ஏன்?' என்று எண்ணிய அவன் அவளை நோக்கி, ''இந்தப் பெரியவர் என்ன சொல்கிறார்?'' என்று வினவினான்.

''ம்.. நீங்கள் அந்தக் காண்டாமிருகத்தோடு சண்டை போட வேண்டுமாம்'' - பல்லிடிக்கில் பகர்ந்திட்ட ஜூனோ ''ஆனால் நீங்கள் அதற்கு ஒப்புக்கொள்ளாதீர்கள்!'' என்று எச்சரிக்கவும் செய்தாள்.

மேசனசுக்கும் ஏதோ ஐயப்பாடு எழுந்துவிட்டது.

''நான் உரைத்தவற்றையெல்லாம் முழுவதுமாக அவரிடம் நீ மொழி பெயர்த்திட்டதாகத் தெரியவில்லையே!'' என்று இலத்தீனில் கூறினார் அவர்.

இதற்குள் அகஸ்டசின் மனைவி லிவியா இடைமறித்திட்டாள்.

''ஆமாம், மேசனஸ்என்ன கேட்கிறார், ஜூனோ?''

''ம்.. தமிழகத் தூதுவர் அந்தக் காண்டாமிருகத்தோடு சண்டைபோட வேண்டுமாம்!''

''அப்படியா'' என்று வியந்திட்ட லிவியாவின் பார்வை இப்போது மேசனசை நோக்கித் திரும்பிற்று

''அவர் எதற்கு அவ்வாறு மிருகங்களோடு போய்ச் சண்டை போட வேண்டும் '' - அழுத்தமாகவே கேட்டாள் லிவியா.

''ஒரு வேடிக்கைதான்! அத்துடன் பலபேரை மாய்த்திடும் ஒரு விலங்கினை வீழ்த்தினார் என்றால் அவருடைய வீரத்திற்கும் வெற்றிப் பெருமிதந்தானே.''

''அவர் இங்கு வந்திருப்பது மற்போர்த் திறனைக் காட்டிட அல்ல; நட்புறவை நாட்டிட! மேலும் அவர் என்ன சாதாரண கிளேடியேட்டரா? அல்லது மரண தண்டனையோ, கடுங்காவல் தண்டனையோ பெற்ற கைதியா? அவரைப் போய் ஒரு மிருகத்தோடு சண்டை போடச் சொல்வது, அவரை அவமானப்படுத்துவதற்கே ஒப்பாகும்''.

''நீ சொல்வதைக் கேட்கும்பொழுது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. விலங்கோடு சண்டை போடுவதை அவமானமாக கருதுகிற வன் உண்மையான வீரனாக இருந்திட முடியுமா? சரி, இப்போது அடித்தளத்திலுள்ள ஒரு காண்டாமிருகம் வெறி பிடித்துப்போய் மேலே ஏறி வந்து எல்லாரையும் தாக்கிட முற்பட்டால்... அப்போது ஒரு ஆண்மகன் அதனை அடக்கிடத்தானே வேண்டும்; அவ்வாறு அடக்குவது அவமானம் ஆகிவிடுமா?''

''அந்த மாதிரி ஒரு தவிர்க்க முடியாத சூழ்நிலை ஏற்படும்பொழுது வந்துள்ள அத்தனை பேர்களுடைய உயிரை மட்டுமல்ல, உங்களுடைய உயிரையும் சேர்த்துக் காப்பாற்றித் தந்திடுவார் இந்தத் தமிழக தூதுவர்; கவலைப்படாதீர்கள்'' என்று கேலியாக நகைத்திட்டாள் லிவியா.

அவர்கள் உரையாடிக்கொண்டதை உடனுக்குடன் மொழி பெயர்த் திடுமாறு ஜூனோவை வற்புறுத்திக்கேட்டு அறிந்து கொண்ட செழியன்

மேசனசை நோக்கி, 'காண்டாமிருகத்தோடு சண்டை போட்டிடத் தயார்' என்பதாகக் கைகளினால் சைகை செய்ததுடன் தலையினை ஆட்டி ஒப்புதலும் தந்திட்டான்.

அந்தக் கிழட்டு வேங்கையின் உற்சாகத்தைக் கேட்டிட வேண்டுமா? பார்வையாளர்கள் அத்தனை பேருடைய கவனமும் தன் பக்கம் திரும்பி டும் வண்ணம், ''யே...! நான் சொல்வதைக் கேளுங்கள்! உங்களுக் கெல்லாம் மகிழ்ச்சியினை ஊட்டிடும் மகத்தான செய்தி! இதோ! இந்தத் தமிழகத் தூதுவர் அந்தக் காண்டாமிருகத்தோடு பொருதிடப் போகிறார்!'' என்று உரக்கக் கூவினார்.

அந்த அறிவிப்பினைக் கேட்டதும் கலையரங்கம் முழுவதும் கரவொலிகளால் அதிர்ந்திட்டது; களிப்பு வெறி பீரிட்டது.

அதே சமயம் அகஸ்டசுக்கு மிகவும் நெருக்கமான செனேட்டர்கள், கவிஞர்கள், கலைஞர்கள் முதலானோர் திகைப்பிலே மூழ்கினர்; எனினும் தாங்கள் மிகச் சிறந்த மேதையெனக் கொண்டாடிடும் மேசனசே அத்தகைய ஓர் அறிவிப்பினைச் செய்திட்டதால், அவரை மறுத்துப் பேசிடவோ, எதிர்ப்புக் குரல் எழுப்பிடவோ அவர்களில் யாருக்கும் துணிவு வந்திடவில்லை. குழுமியிருந்திட்ட பல்லாயிரக்கணக்கான மக்க ளின் வேடிக்கை காணத்துடித்திடும் வேட்கை வெறியின் முன்னே, தங்கள் வார்த்தைகள் ஆற்று வெள்ளத்திலே விழுந்திட்ட அனல் பொறி களாய் ஆகிவிடலாம் என்கிற அச்சம் , அவநம்பிக்கை ஆகியவையும் அவர்களது வாயினை அடைத்திருக்கலாம்.

லிவியா, ஜூலியா முதலான பெண்மணிகளோ அதிர்ச்சியால் தாக்குண்டு மீள முடியாமல் தத்தளித்தனர்.

ஜூனோவுக்கோ அணையைத் தகர்த்திடும் பிரளயமாகப் பொங்கிற்று அழுகை! அதனைத் தடுத்திடவே அவளால் முடியவில்லை; தன் இதய மொட்டே நடுநடுங்கிட, பலரும் தன்னைப் பார்ப்பார்களே என்னும் வெட்கத்திற்குக் கூட விடுதலை வழங்கிவிட்டு, அவள் விசிம்பி அழத் தொடங்கிவிட்டாள். அவளைப் பார்த்ததும், லிவியா, ஜூலியா இருவரது கன்னங்களிலும்கூடக் கண்ணீர் வழிந்திடத் தொடங்கிற்று.

''நீங்கள் எதற்காக இப்படி அழுகிறீர்கள்? என்னுடைய வீரத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா! இந்தக் காண்டா மிருகம் என்ன, எத்தனையோ, வேங்கைகள், சிறுத்தைகள், ஏன் சிங்கங்களையே அடக்கிவிடக் கூடிய ஆற்றல் எனக்குத் திண்ணமாக உண்டு. எங்கள் தமிழகத்திலே ஒரு சாதாரணப் பெண்ணே பாய்ந்துவரும் புலியினை முறத்தினாலேயே துரத்தி அடித்திடக் கூடிய வலிமை வாய்ந்திட்டவள்

என்றால், அவளுடைய வயிற்றிலே பிறந்திடும் என்போன்ற தமிழ் இளைஞர்களுக்கு இந்த விலங்குகளெல்லாம் எந்த மூலை? கால் தூசு மாதிரி!'' என்று வீரங் கொப்பளித்திடும் சொற்களைக் கொண்டு சோகங் கப்பிடும் அந்தச் சுந்தரவல்லிகளுக்கு தேறுதல் மொழிந்திட்டான் செழியன்.

ஜூனோவின் அச்சம் - நடுக்கம் - அழுகையினை அகற்றிடுவது அத்துணை எளிதாக இல்லை.

''இந்த நாட்டுக் காண்டாமிருகங்களைப் பற்றி உங்களுக்குத் தெரியாது; அதிலும் இன்று வெறிபிடித்து நிற்கும் அது மிகவும் பொல்லாதது; எத்தனையோ மல்லர்களைக் கொன்று குவித்தது. அதனிடம் போய் உங்கள் உயிரை ஏன் அநியாயமாகப் பலியிட வேண்டும்? எனக்கு அப்போதே தெரியும் மேசனஸ் ஏதாவது இப்படி செய்வார் என்று. அகஸ்டஸ் பெருமகனாரிடமும் ரோமாபுரி மக்களிடமும் நீங்கள் பெற்றுள்ள செல்வாக்கை கண்டு அவருக்கு வயிற்றெரிச்சல்; அந்தப் பொறாமையினால் தான் உங்களைத் தீர்த்துக் கட்டிடவே இப்படிச் சூழ்ச்சி செய்கிறார் மேசனஸ்! அந்த மிருகத்தோடு சண்டை போடப் போகாதீர்கள்! உங்களுக்கு ஏதாவது என்றால்... பிறகு... நான்-''

தேம்பித் தேம்பியே கூறிவந்திட்ட ஜூனோவுக்குச் சட்டென்று தொண்டையே அடைத்துக் கொண்டு விட்டது!

''உன்னுடைய உள்ளன்புக்கு நான் நன்றி தெரிவிக்கிறேன்; என்றாலும் நீ இவ்வளவு கோழையாக இருந்திடக் கூடாது. எனக்காக நீ அழுவதைப் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? உன்னையே தவறாகக் கருதிடமாட்டார்களா? எனவே, உடனே உன் விசும்பலை நிறுத்து! நான் எத்தனையோ சூழ்ச்சிகளையெல்லாமல் எதிர்ப்பட நேர்ந்தவன்; எதிர்நீச்சல் அடித்தவன், இந்த மேசனசின் சூழ்ச்சியை மட்டும் என்னால் முறியடித்திட முடியாதா? அவருக்கு என் மீது பொறாமை என்றால் இருந்து விட்டுப் போகட்டுமே! நெருப்புச் சூடுபட்டுப் பாகு கரையலாம்; ஆனால் பாறை கரைந்திடாது; அப்படித்தான் ஒருவருடைய அழுக்காற்றின் காரணமாக இன்னொருவருடைய ஆற்றல் அவிந்திடாது; செல்வாக்கும் தேய்ந்திடாது. ஆகவே என்னைப் பற்றிய கவலையை விட்டுவிட்டு நீ மகிழ்ச்சியோடு நான் போடப் போகும் சண்டைகளைக் கவனித்துப் பார்!'' என்ற செழியன், மிடுக்கோடு அந்த இடத்தைவிட்டு அகன்றிட்டான்.

சற்றைக்கெல்லாம் அந்த வட்டக் கலையரங்கத்தின் அடித்தளச் திலே புழுதி கிளம்புகிறதா, புகைதான் எழும்புகிறதா என்று இனம் பிரித்திட முடியாதவாறு தூள் பறந்திட்டது.

மதங்கொண்ட யானை என்பார்களே அப்படித்தான் திமிர் ஏறிய அந்தக் காண்டாமிருகம் வெறியாட்டம் ஆடிற்று; செழியனைப் பாய்ந்து பாய்ந்து தாக்கிற்று.

தமிழினத்தின் தனிப்பெருந்திருநாளாம் பொங்கற் பெருவிழாவின் போது எத்தனையோ ஏறுதழுவுதல் விளையாட்டுக்களிலெல்லாம் மற்றவர்களால் அடக்கமுடியாத காளைகளைக்கூட அடக்கிக் கைதேர்ந் தவன் செழியன்! அந்தத் துணிச்சலிலேயே இந்தக் காண்டாமிருகத் தையும் வீழ்த்திடலாம் என்னும் நம்பிக்கை உண்டாயிற்று அவனுக்கு. ஆனால் அந்தக் காளைகளைவிடக் கொழுத்துப் பருத்திட்ட அதற்கு வலிமை மிகுதி என்பதனைப் பொருதமுற்பட்ட பின்னரே புரிந்துகொள்ள முடிந்தது அவனால்.

தொடக்கத்தில், அவன் சற்றுப் பின்வாங்கிடும்படி நேர்ந்திட்டது. அதனைக் கண்டு, பார்வையாளர்கள் கேலியாக நகைக்கவும் செய்திட்டனர்.

நேரம் செல்லச் செல்ல பின்வாங்கிக் கொண்டிருந்த செழியன் முன்னேறிடத் தலைப்பட்டான். தன் திறமை - தந்திரம் எல்லாவற்றையும் ஒருங்கு திரட்டித் தன் பலங்கொண்டமட்டும் அவ்விலங்கோடு மல்லாடினான்; வெட்டுக் கிளியினைப்போல் ஒரே தாவாகத் தாவிப் பறந்து அதன் முதுகின் மேல் ஏறி நின்று வேடிக்கைகள் சிலவும் புரிந்திட்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஆண்மையிற்சிறந்த அந்தத் தமிழ் மறவனின் வலிமை மிகுந்த நெடுங்கரங்களின் கிடுக்கிப் பிடியிலே சிக்குண்டு, அந்தக் காண்டாமிருகத்தின் தொளதொளப்பான பெருங் கழுத்துத் துவண்டு நெரியுண்டது. புயலின்போது புளியமரம் சாய்ந்திடு வது போல 'மடார்' என்று தரையிலே வீழ்ந்திட்ட காண்டாமிருகம் மீண்டும் தலை தூக்கிடவே இல்லை!

செழியன் இவ்வாறு வெற்றி கொண்டதும், அந்த வட்டக் கலையரங்கத்திலே எதிரொலி எழுப்பிய ஆரவாரங்களுக்கு எல்லையே இல்லை. ரோமானியர்கள் அத்தனை பேருமே தத்தம் இருக்கையை விட்டுத் துள்ளிக் குதித்தனர்; ''செழியன் வாழ்க! செழியன் வாழ்க! வெற்றி பெற்ற தமிழகத் தூதுவருக்கு வணக்கம் செய்வோம்...!'' என்றெல்லாம் தங்கள் மொழியினில் தொண்டை கிழிய முழங்கினர்.

ஜூனோவுக்கோ கால்கள் தரையில் பாவிடவில்லை. இன்பப் பூரிப்பிலே மிதந்தவளாக - இல்லை - பறந்தவளாக அவனை வாழ்த்தி வரவேற்றிட அடித்தளத்தினை நோக்கி ஓடினாள்.

...ஆனால், அங்கே செழியனைக் காணோம்!

'அதற்குள் எங்கே மாயமாய் மறைந்திட்டார்?' என்று எண்ணிய அவள், மற்போர்க் களத்தின் வாயிற்புறத்தே நின்றிட்ட ஒரு மல்லனைப் பார்த்து,

''தமிழகத் தூதுவர் எங்கே?'' என்று பரபரப்போடு கேட்டாள்.

''இந்தப் பக்கந்தான் போனார்'' என்றான் அவன்.

''அவருக்குப் பலத்த காயமா?''

''இல்லை; முழங்கையில் மட்டும் சிறாய்ப்புக்கள் இருந்தன. தோள்பட்டையிலே சிறு கீறல் ஏற்பட்டு குருதி வழிந்திட்டது. மற்றபடி காயம் எதுவும் தெரிந்திடவில்லை'' - அதனைக் கேட்டு நிம்மதியாய்ப் பெருமூச்செறிந்தாள் ஜூனோ.

'தூதுவர் அந்தக் காண்டாமிருகத்தினையே மண் கவ்வச் செய்திட்ட செய்தியினைக் கேட்டால், அகஸ்டஸ் பெருமகனாருக்கு அளவில்லாத பூரிப்பு உண்டாகுமே! மற்றவர்கள் போய்த் தெரிவிக்குமுன், நானே முந்திக்கொண்டு சென்று முதலில் சொன்னால் என்ன?' என்னும் விந்தையானதோர் ஆசையும் உண்டாயிற்று அவளுக்கு.

தேரினை நிறுத்தி வைத்துவிட்டு வந்த இடத்தை நோக்கி விரைந்திட்டாள்.

அங்கோ... அவளுடைய தேரினைக் காணோம்!

'அடிமை' யொருவன் அவளை நோக்கி ஓடோடி வந்தான்.

''தேரைக் காணோமே என்று தேடுகிறீர்களா? தமிழகத் தூதுவரும் சிப்பியோவும் இப்போதுதான் அதில் ஏறிக் கொண்டு போனார்கள்'' என்றான்.

''அப்படியா? அவர்கள் எந்தப்பக்கம் போனார்கள் என்று தெரியுமா?''

''பாலத்தின் குன்றுப் பக்கம்தான் தேர் பறந்து சென்றதைப் பார்த்தேன்'' என்றான் அடிமை.

ஆனால் அதே நேரத்தில் செழியனோ...?

அவள் நினைத்திட்டது போல் அகஸ்டஸைச் சந்தித்து அளவளாவிக் கொண்டா இருந்திட்டான்?

அல்லது, தனக்கு ஏற்பட்டு விட்ட சிறு காயங்களுக்குச் சிகிச்சைதான் பெற்றுக் கொண்டிருந்தானா?

அல்ல.

பிறகு...?

அகஸ்டஸின் இல்லம் இருந்திடும் 'பாலத்தீன்' குன்றுக்கும் அருகே 'பரமபதம்' விளையாடும் படத்திலே காணப்படும் பாம்பினைப்போல் நெளிந்து வளைந்து செல்கிறதல்லவா ஒரு நெடுஞ்சாலை? அதிலே மேசனஸ் என்னும் வில்லிலிருந்து கிளம்பிய அம்புகளாகப் புரவிகள் மீதேறிப் பறந்து கொண்டிருந்த சில வீரர்களைப் பொருதிய வண்ணம் இருந்திட்டான் செழியன். சற்று முன்னர், காண்டாமிருகத்தோடு புரிந்திட்டானே அதனைவிடக் கடுமையான சண்டை; சாலை ஓரத்திலே தொடங்கிய அது, சற்றைக்கெல்லாம் சாலையை ஒட்டிய இறக்கத்தில் உள்ள ஊசி இலைகளைக் கொண்ட 'பைன்' மரங்கள் அடர்ந்திட்ட பகுதிக்கும் நகர்ந்துவிட்டது.

முதலில் வெறுங்கையனாகத்தான் அந்த வீரர்களிடையே புகுந்திட்டான் செழியன். ஆனால் கண்ணின் இமை திறந்திடும் அந்தக் கண நேரத்திற்குள் ஒரு வீரனுடைய வயிற்றினைத் தன் தலையினால் மோதித் தாக்கி அவனைத் தடுமாறி விழுந்திடச் செய்து, அவன் கரத்தில் இருந்திட்ட வாளினைப் பறித்துவிட்டான் அவன். அந்த வாளுக்குச் சிலர் வகையான உணவாகி வீழ்ந்தனர். பின்னர் நம் நாட்டுச் சூலாயுதம் போன்ற கருவியொன்றும் அதே வீர்களிடமிருந்து இவனுக்குக் கிட்டிவிட்டது.

சிலம்பு விளையாட்டிலே, தேர்ச்சி மிகுந்திட்ட இவன், 'போத்துச் சுற்றல்' முறைப்படி அந்தச் சூலாயுதத்தைச் சுழற்றித் தன்னைக் காத்துக் கொண்டதுடன் தாக்கிடவும் முற்பட்டான். இவனுடைய சுழல்வீச்சுப் பாய்ச்சலுக்கு ஈடு கொடுத்திட இயலாமல் திணறிப் போயினர் எதிரிகள்; எனவே எடுத்தனர் ஓட்டம் விரைவிலேயே! பழைய உடம்போடு அல்ல; பழுத்த காயங்களோடு? ஒரு சிலர் இடுப்பு ஒடிந்து போய் எழுந் திருக்கவே முடியாமல் தரையினையே முத்தமிட்டுக் கிடந்தனர்.

அவர்களுடைய முனகலும், மற்றவர்களின் ஓட்டமும் சிப்பியோ வுக்குச் சிரிப்பையே அளித்திட்டன. இத்துணை எளிதாக - விரைவாக அந்த முரட்டு வீரர்களைச் செழியன் முறியடித்துவிடக் கூடும் என்று அவன் எதிர்பார்த்திடவே இல்லை.

கொடிய காண்டாமிருகத்தோடும் அதைவிடக் கொடிய மனிதர் களோடும் நெடுநேரம் சண்டையிட்ட களைப்பு நம் தமிழகத் தூதுவனை யும் தழுவிக் கொள்ளத் தவறிடவில்லை. இரைக்க இரைக்க - மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கிட - ஒரு 'பைன்' மரத்தினடியிலே உட்கார்ந்து விட்டான் அவன்.

கரங்கள் இரண்டினையும் முதுகுப்புறம் முட்டுக் கொடுத்தவாறு அவன் அமர்ந்திட்டதைக் கண்ட சிப்பியோ ஓடோடி வந்தான். செழியனின் இடக்கரத்திலே குருதி வழிவதனைக் கண்டதுமோ அவனுடைய பதற்றம் பன்மடங்காயிற்று.

''காயம் பலமாக இருக்கும்போல் தெரிகிறதே! சரி, வாருங்கள்! உடனே ஒரு மருத்துவரிடம் போய்க் காண்பித்து விடுவோம்.''

''காயம் அப்படி ஒன்றும் கடுமையானதாக இராது என்றே எண்ணு கிறேன். என்றாலும் ஏதேனும் சிகிச்சை செய்திடாமல் இருந்திடவும் கூடாதுதான்'' என்ற செழியன், மெல்ல எழுந்திட்டான். சாலையில் நின்றிருக்கும் தேரினை நோக்கிச் சென்றிடும்போதே சிப்பியோவின் பக்கமாகத் திரும்பியவாறு நோக்கி இப்படிக் கூறினான்.

''நீர் மட்டும் தக்க சமயத்தில் மேசனசின் சதியினை உளவறியாமல் போயிருந்தால், வட்டக் கலையரங்கத்திலேயே வேடிக்கை பார்த்துக் கொண்டு வீண்பொழுது கழித்திருந்தால் இந்நேரம் அகஸ்டஸ் பெருமகனாரின் உயிரே பறி போயிருக்குமே!''

''நீங்களும் தக்க சமயத்தில் அந்த மிருகத்தை வீழ்த்திய களைப்பைக் கூட பொருட்படுத்தாமல் உடனே புறப்பட்டு வந்தீர்களே அதைச் சொல்லுங்கள்! வேறு யாராக இருந்தாலும் இவ்வளவு விரைவில் இந்த புல்லர்களைப் புறமுதுகிட்டு ஓடிடச் செய்திருக்கவே முடியாது!''

''இவர்களைத் தவிர இன்னும் வேறு யாராவது அகஸ்டஸ் அவர்களின் உயிருக்கு உலை வைக்கச் சென்றிருக்கலாம் அல்லவா?''

''அப்படி யாராவது சென்றிருந்தால் அவர்களுடைய தலை இந்நேரம் துண்டாடப்பட்டிருக்கும்''.

''அது எப்படி அவ்வளவு திட்டவட்டமாகச் சொல்கிறீர்கள்?''

''சாலையைவிட்டுக் கீழே இறக்கத்தில் நீங்கள் சண்டைபோடும் பொழுதே அகஸ்டஸ் அவர்களுக்கு மருந்து வாங்கிக்கொண்டு வீரனொருவன் புரவிமீது வந்தான். தற்செயலாக அவனிடம் மேசனசின் சூழ்ச்சியைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்லி, ஆட்சித் தலைவரின் பாதுகாப்புக்கு ஆவன செய்திடுமாறு கூறி அனுப்பிவிட்டேன். அது மட்டும் அல்ல; நமக்கு துணையாகவும் சில படைவீரர்களை அனுப்பிடச் சொல்லியிருக்கிறேன்.''

''அப்படியா! மிக நல்ல நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள் சிப்பியோ! ஆமாம், 'அரசியல், புலி' - என்று அழைக்கப்படும் மேசனஸ் இப்படி ஏன் தன் தரத்தினைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும்! சிறிது நேரத்திற்கு முன்னர் வட்டக் கலையரங்கிலே, என்னோடு எவ்வளவு இனிமையாகச் சிரித்துப் பேசினார்? நான் யாரை அறவே வெறுக்கிறேன் தெரியுமா? என்னை நேருக்கு நேர் பொருத வந்திடும் எதிரிகளை அல்ல; கூட்டுறவு கொண்டு குழைந்திடும் பொழுதே குழியையும் பறித்திடும் துரோகிகளையே! அன்று ஜூலியஸ் சீசரை எப்படி புரூட்டஸ் - கேசியஸ் போன்றவர்கள் வஞ்சகமாகக் கொன்றார்களோ, அப்படித்தானே இன்று அகஸ்டசையும் தந்திரமாகக் கொல்ல முயன்றிருக்கிறார் மேசனஸ்! எல்லாரும் வேடிக்கைகளிலே ஈடுபட்டிருக்கும் வேளையாகப் பார்த்து, அகஸ்டசும் உடல் நலம் குன்றித் தனியாக இருந்திடும் சமயம் பார்த்துச் சூழ்ச்சியாக இப்படி ஆட்களை அனுப்பி இருக்கிறாரே! ஆனால் இனியும் இம்மாதிரியான நரிக்குணம் கொண்டோரின் நடவடிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்காவிட்டால் அகஸ்டசிற்கு மட்டுமல்ல இந்த பரந்த ரோமாபுரிப் பேரரசுக்கே பெருங்கேடுதான் வந்திடும்!''

''நீங்கள் என்னதான் சொல்லுங்கள்! மேசனசைப் பழிக்குப் பழி வாங்கிடவே மாட்டார் நம்முடைய ஆட்சித் தலைவர். அவர் , இப்படி விட்டுக் கொடுத்துக் கொண்டே போவதுதான் எதிரிகளுக்கு இடங்கொடுத்துவிட்டது. பத்து ஆண்டுகளுக்கு முன்பு வீராவேசம் மிக்க வேங்கையாகப் பாய்ந்திட்ட அவர் இப்போது அமைதியை நாடிடும் வெண்புறாவாக மாறிவிட்டார் என்பதைப் புரிந்து கொண்டு விட்டார்கள் அவர்கள். அதனால் எதையும் செய்திடலாம். எப்படியும் ஏசிடலாம் என்று எண்ணுகிறார்கள்; என்னைப் பொறுத்த வரையில் நம் ஆட்சித்

தலைவரைப் பற்றி அவர்கள் அவ்வாறு கருதிடக் காரணமே, அவர் படை அணிகளின் எண்ணிக்கையைப் 'படிப்படியாகக் குறைத்திட்டதுதான். ஒரு காலத்தில் இந்த நாட்டில் அறுபது 'லீஜன்'கள் வரை இருந்தன. ஆனால் இன்றைக்கோ நாற்பது - முப்பது - என்று குறைந்து கொண்டே வந்து விட்டன.''

''ஒரு 'லீஜன்' என்றால் ஒருபடை அணி அல்லவா? அதிலே சாதாரணமாக எத்தனை வீரர்கள் இருப்பார்கள்?''

''ஐயாயிரம் பேர் இருப்பார்கள்''

''ஆமாம், அகஸ்டஸ் ஏன் இப்படிப் படைக் குறைப்பைச் செய்திட்டார்?''

''அமைதியின் மீதுள்ள ஆர்வந்தான். அடிக்கடி சண்டைகளில் ஈடுபட்டுக்கொண்டே இருந்தால் மக்கள் பலர் கொடூரமாக மாள்கிறார்களே என்பது ஒருபுறம் இருக்க, நாட்டுக்குத் தேவையான வசதி வாய்ப்புகளை வழங்கிட முடியாதல்லவா? கலை, இலக்கியம் முதலானவற்றை வளர்த்திடவும் முடியாதல்லவா? அதனால் தான் போர் என்றாலே வெறுக்கத் தலைப்பட்டுவிட்டார் அகஸ்டஸ்.''

''நீங்கள் சொல்வதைக் கேட்டிடும்பொழுது நாவலந்தீவின் வடப் புலத்தினில் கோலோச்சிய அசோக மன்னனின் நினைவே வருகின்றது. என்றாலும் குச்சியைக் குச்சியால் சந்திக்க வேண்டும்; அப்படியே கூர்வாளைக் கூர்வாளால்தான் சந்திக்க வேண்டும். அதனை விடுத்துக் கூர்வாளைக் குச்சியால் சந்திக்கலாமா? அதனால்தான் விட்டுக் கொடுத்தல் - பொறுத்துக் கொள்ளல் - பகைமைக்குப் பரிசாகப் பாசத்தை அளித்தல் முதலான பண்பு நலன்களையே பலவீனங்களாகக் கருதிடுகின்றனர் சிலர். ஆமாம், இப்போது நம் அகஸ்டஸ் பெருமகனாரைச் சந்தித்து நடந்தவற்றைக் கூறினால் என்ன?''

''உங்கள் கைக்கும் மற்றக் காயங்களுக்கும் முதலில் சிகிச்சை செய்துவிட்டுப் பிறகு அவரை நாம் சந்திக்கலாம். ஏனென்றால் இப்போதே நன்றாக இருட்டி விட்டது; விளக்கு வைத்திட்ட பிறகு பெரும்பாலான ரோமானியர்கள் நெடுநேரம் விழித்திருக்க மாட்டார்கள். நம்முடைய மருத்துவரும் உறங்கிப் போய்விட்டால் என்ன செய்வது?''

''ஏன், உறங்கியவரைத் தட்டி எழுப்பினால் விழித்துக் கொள்ள மாட்டாரா என்ன?'' என்று செழியன் சிரித்திட்டான்.

''விழித்துக் கொள்வார். ஆனால் தூக்கக் கலக்கத்தில் மருந்தினைப் பூசுவதாக நினைத்துக்கொண்டு மணலை எடுத்துத் தூவி விட்டால் என்ன செய்வது?'' என்று சிப்பியோவும் நகைத்திட்டான். இருவரும் தேரினை அடைந்து ஏறிக் கொண்டனர். சற்றைக்கெல்லாம் ஒரு மருத்துவரின் இல்லத்து வாசலில் போய் நின்றது தேர்.

ரோமாபுரிச் செல்வச் சீமான்கள் பொதுவாக மேலே ஓரடுக்கோ ஈரடுக்கோ கொண்ட மாளிகைகளிலே அந்தநாளில் வாழ்ந்து வந்தனர். நடுவே சிறு உள் முற்றம் அதனைச் சுற்றிலும் நெடிய தூண்கள் எழுப்பப்பட்ட நீண்ட சதுரமான 'ஆப்ரியம்' என்று அழைக்கப்படும் கூடம் போன்ற பிரகாரத்தளம். அதனை ஒட்டிச் சிறுசிறு அறைகள், சலவைக்கற்கள் பளபளக்கும் தரைகள், சுவர்கள், உப்பரிகையின் மேலே தனிப் பொலிவோடு கண்களைக் கவரும் பசுமையான 'கூரைப்பூங்கா.'

செழியன் சென்றடைந்திட்ட மருத்துவருடைய இல்லமோ அவன் கற்பனை செய்திருந்தவாறு, பெரிய மாளிகையாக இல்லை; சாதாரண எளிய வீடாக இருந்தது. பணக்காரர்கள் மட்டுமே பயன்படுத்தக்கூடிய 'ஆலிவ்' எண்ணெய் விளக்குகளும் அங்கே எரிந்திடவில்லை; மிருகங்களின் கொழுப்பினாலான மெழுகுவர்த்திகளே அடக்கமான முறையில் ஒளியினைச் சிந்தின. குளிரை விரட்டுவதற்கான கணப்பு இல்லாத வீட்டினையே ரோமாபுரியிலே கண்டிட முடியாது. ஆனால் செல்வர்கள் தங்கள் மாளிகையின் பிராசியர்ஸ் எனப்படும் கலை வேலைப்பாடுகள் கொண்ட பித்தளைத் தட்டிலேதான் மரக்கரித் துண்டு களால் கணப்புப் போட்டு எரியவிட்டிருப்பார்கள். இந்த மருத்துவரின் இல்லத்திலே கொள்ளிக் கட்டைகளே தகதகவென்று கணப்பாக அனலை வீசிக் கொண்டிருந்தன. கட்டில், பீரோ போன்ற மரச்சாமான்களும் நிறைய இல்லை; இரண்டு மூன்று முக்காலிகளும், ஒரேயொரு நாற்காலியுமே கிடந்தன.

செழியனும் சிப்பியோவும் உள்ளே நுழைந்த பொழுது அந்த வயது முதிர்ந்த மருத்துவர், ஏதோ மூலிகையை ஆய்ந்த வண்ணம் இருந் திட்டார்.

சிப்பியோவைக் கண்டதும் மலர்ந்த முகத்துடன் வரவேற்ற அவர், ''இவர், தமிழகத் தூதுவர்தானே?'' என்று கேட்டார்.

''ஆம் அவரேதான்,'' என்றான் சிப்பியோ.

''இது என்ன கையிலே குருதி வழிந்து உறைந்திருக்கிறது?''

''இன்று ஆம்பி தியேட்டரில், காண்டாமிருகத்தோடு ஒரு வேடிக்கைக் காகச் சண்டைபோட நேர்ந்துவிட்டது. அதனால் சிறிது காயங்கள் ஏற்பட்டுவிட்டன''

பாதிப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைத்திட்டான் சிப்பியோ!

''இது என்ன கொடுமை! காண்டாமிருகத்தோடெல்லாம் இவரைப் போய் சண்டையிடச் சொல்வதாவது? அதனிடமிருந்து உயிரோடு தப்புவதே கடினமாயிற்றே! சரி. இப்படி முக்காலியில் அமருங்கள்! நான்

இதோ மருந்து கொண்டு வருகிறேன்'' என்றவாறே பின்கட்டினை நோக்கி விரைந்திட்டார் மருத்துவர்.

சிப்பியோவின் முகம் ஏனோ சட்டென்று கறுத்து விட்டது. அவரைப் பின் தொடர்ந்தே சென்றிட்ட அவன், ''என்ன மருத்துவரே! அவர் தமிழகத் தூதுவர் என்று தெரிந்திருந்தும் அவரைப் போய் முக்காலியில் உட்காரச் சொல்லிவிட்டு நீங்கள் பாட்டுக்கு உள்ளே வந்துவிட்டீர்களே! மரியாதைக்குரிய பெரிய மனிதர்கள், முதியவர்கள், சிறப்பு விருந்தினர்கள் ஆகியோரை நாற்காலியில் அமரச் செய்திடுவதுதான் நம்நாட்டுப் பண்பாடு - பழக்கம் என்பது உங்களுக்கு தெரியாதா?'' என்று தாழ்ந்த குரலில் இலத்தீன் மொழியினில் கடிந்து கொண்டான்.

''மன்னித்துக் கொள் சிப்பியோ! ஏதோ நினைப்பினில் மறந்தே போய்விட்டேன்'' என்று மொழிந்திட்ட அவர், பரபரப்போடு நாற்காலியை எடுத்து வந்து செழியனின் அருகே போட்டு, அதிலே அமர்ந்திடுமாறு சைகை காட்டினார்.

சிப்பியோவும் அவரும் உரையாடியவற்றைப் புரிந்து கொள்ளாத செழியன், அவர் சைகை காட்டியவாறே நாற்காலியில் போய் உட்கார்ந்திட்டான்.

சிறிது நேரத்திலேயே சிகிச்சை முடிந்துவிட்டது.

சிப்பியோ, 'டெனரீ' எனப்படும் வெள்ளி நாணயங்கள் இரண்டினை எடுத்து மருத்துவரிடம் நீட்டினான். அவரோ அதனை வாங்கிட அறவே மறுத்துவிட்டார்.

பின்னர் இளைஞர்கள் இருவரும் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வீதிக்கு வந்தனர். தேரினில் ஏறிக் கொண்டதும், ''இந்த மருத்துவர் பெரிய செல்வச் செழுமை உள்ளவராக இருந்திடுவார் என்று எண்ணினேன். இவரோ மிகமிக எளிமையான இல்லத்தில் - எளிய வாழ்க்கையே வாழ்கின்றாரே!'' என்று தன் வியப்பினைத் தெரிவித்திட்டான் செழியன்.

''ஓகோ! 'மருத்துவர்' என்றதும் அவர் உயர்குடியில் பிறந்தவராக - வசதி, வாய்ப்புகள் மிகுந்தவராகத்தான் இருப்பார் என்று எண்ணிவிட்டீர்கள் போல் இருக்கிறது! ஆனால் எங்கள் ரோமாபுரியிலே மற்ற எல்லாத் துறைகளும் தழைத்துச் சிறந்திட்ட போதிலும், பன்னெடுங் காலமாகவே மருத்துவத் துறை மட்டும் வளர்ச்சியுற்றிடவே இல்லை. கிரேக்கர்கள்தாம் முதன்முதலில் இங்கே மருந்து வகைகள் சிகிச்சை முறைகள் முதலானவற்றைப் பரப்பினார்கள். அந்த மருத்துவர்களோ பெரும்பாலும் அடிமைகள் - அல்லது அடிமைகளாக இருந்து விடுதலை பெற்

றவர்கள் - என்ற வகையினராகத்தான் இருந்தார்களேயன்றி, உயர் குடியில் பிறந்தவர்களாக இருந்திட்டதில்லை. ஜூலியஸ் சீசர்தான் அவர்களுக்குத் தகுந்த மரியாதையினைத் தந்து குடியுரிமையும் வழங்கினார். இப்போதுதான் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் இருட்டிலிருந்து வெளிச்சத்தை நோக்கி வந்தவண்ணம் உள்ளது. உங்களுக்கு சிகிச்சை அளித்திட்டாரே, இந்த மருத்துவரும் கிரேக்கர் வழியில் வந்தவரே. அதனால்தான் எங்கள் நாட்டுப் பழக்கவழக்கங்களை அடிக்கடி மறந்து போய்த் தடுமாறுகின்றார்'' என்றான் சிப்பியோ.

செழியனும் சிப்பியோவும் ஏறி வந்திட்ட தேர், அகஸ்டஸின் இல்லத்தினை அணுகிய பொழுது, அங்கு ஒரே பரபரப்பு நிலவிற்று.

தலையினைக் குனிந்து, தன் முழங்கால்களிலே முகத்தினைப் புதைத்திட்டவாறே விசும்பி விசும்பி அழுது கொண்டிருந்தாள் ஜூனோ.

'அவள் ஏன் இப்படி அழுகிறாள்? ஒருவேளை அகஸ்டசுக்குத்தான் ஏதாவது?' என்று திடுக்கிட்டுப் போனான் செழியன்.

தன்னை மறந்து அழுகையில் அழுந்திக் கிடந்திட்ட ஜூனோ தனக்கு மிக அருகினில் தேர் நெருங்கிவிட்ட பிறகே ஏதோ ஒலி கேட்கிறதே என்னும் உணர்வினைப் பெற்றவளாகத் தலைநிமிர்ந்து பார்த்திட்டாள்.

செழியன் - சிப்பியோ இருவருடைய உருவங்களைக் கண்டதும் அவளது உள்ளத்தினை நெருப்பிலே தள்ளிய துயரச்சுமை கரைந்திட்டது. கவலையிருள் மறைந்திட்டது; துள்ளிக் குதித்தோடினாள் இளங்கன்றாக. தேரினைவிட்டுக் கீழே இறங்கிடும் ஆணழகனை - தமிழகத் தூதுவனை - அள்ளித் தழுவிக்கொண்டாள் ஆர்வத்தோடு. அவனுடைய பரந்த மார்பினிலே அவளது முகமலர் பதிந்திட்டது. விழிச்சுனையிலிருந்தோ கண்ணீர் அருவி - சூடேறிய இன்பப் பாலின் நுரைச் சிதறலாக வழிந்து கொட்டியது. அவள் இதுகாறும் அழுது புலம்பியது தன்னைக் காணாமல் தான் என்பதனை விரைவில் உணர்ந்து கொண்டான் செழியன்.

அவளுடைய அணைப்பினின்றும் மெல்ல விடுபட முயன்றிட்டவனாக அவளது தலையினை நிமிர்த்தி, ''அகஸ்டசுக்கு ஏதாவது பேராபத்தா?'' என்று பதற்றத்துடன் வினவினான்.

''உங்களைக் காணோமே, என்ன நேரிட்டதோ என்கிற இதயத் துடிப்பினைத் தவிர, அவருக்கு வேறு எந்த ஆபத்தும் இல்லை. உங்களை எங்கெல்லாம் தேடுவது? மேசனசின் ஆட்களை விரட்டிவிட்டபிறகு நீங்கள் எங்கேதான் போனீர்கள்?'' என்று விசும்பலுக்கிடையே விடையிறுத்ததுடன் மறு கேள்வியும் தொடுத்திட முயன்றாள் ஜூனோ.

''காயங்களுக்கு சிகிச்சை பெறுவதற்காக மருத்துவரிடம் சென்றிருந் தோம். ஆமாம், மேசனசின் ஆட்களை விரட்டிவிட்டோம் என்பது உனக்கு எப்படித் தெரியும்?'

''உங்களுக்குத் துணை புரிந்திடப் படைவீரர்களை அனுப்பி வைத்திடுமாறு சிப்பியோ செய்தி சொல்லி அனுப்பிடவில்லையா? அதன்படி நீங்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்த இடத்திற்கு விரைந்திட்ட வீரர்கள் உங்களுடைய தாக்குதலுக்கு இரையாகித் தரையிலே முனகிக் கிடந்திட்ட ஓர் எதிரியினைக் கண்டுவிட்டார்கள். அவன்தான் அங்கே நடந்தவற்றைப் பற்றிய முழு விவரங்களையும் மொழிந்திருக்கிறான். அவனுடைய கூற்றினை படைவீரர்கள் திரும்பி வந்து அகஸ்டஸ் அவர்களிடம் பகர்ந்திடும்பொழுது, நானும் வட்டக் கலையரங்கத்திலிருந்து வந்து விட்டேன். சரி; வாருங்கள் உள்ளே. உடனே நாம் ஆட்சித் தலைவரைப் பார்த்திட வேண்டாமா? உங்களைக் கண்டதும் அவர் எத்தனை பூரிப்பு அடைவார் தெரியுமா?'' என்று செழியனை உயிரோடு பார்த்துவிட்டதால் உண்டான பூரிப்புடன் பொங்கிய கண்ணீரை வழித்தெறிந்திட்டவாறே ஆடவர் இருவரையும் இல்லத்தினுள் அழைத்துச் சென்றாள் ஜூனோ.

அவள் புகன்றவை அனைத்தும் பொய்யல்ல என்று மெய்ப்பிப் பவரைப் போலவே உணர்ச்சிப் பிழம்பாக நடந்து கொண்டார் மேன்மை மிகு அகஸ்டஸ் அவர்களும், செழியனைக் கண்டதும், அப்படியே ஆரத்தழுவிக்கொண்டு விட்டார் - பங்காளி காய்ச்சல் இல்லாத - பாசப் பிணைப்பினால் கட்டுண்ட - தம்பி உடையான் படைக்கஞ்சான் என்னும் இறுமாந்த - நிலையினை எய்திட்ட ஒரு மூத்த அண்ணனைப் போலவே அவனை அணைத்துத் திளைத்திட்டார் அவர். நன்றியறிதலின் உந்துத லால் தூர் அள்ளிய கேணியில் பீரிட்டடிக்கும் நீரூற்றுப் போலப் பாய்ந் திடும் கண்ணீர் வெள்ளத்தினை அவரால் கட்டுப்படுத்திட முடிய வில்லை.

''என்னுடைய உயிரினைத் தக்க சமயத்தில் காப்பாற்றிட எங்கோ தமி ழகத்திலிருந்து ஒரு தூதுவர் வந்திட வேண்டும் என்று இருந்திருக்கிறதே, அந்த விந்தையைப் பார்த்தீர்களா? உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்திடப் போகிறேன், செழியன்!'' என்று கூறிடும்பொழுதே குரல் தழுதழுத்தது அகஸ்டசுக்கு.

மறுநாள் காலை.

செழியன் கண் விழித்திட்ட பொழுது தன் முகத்திற்கு மேலே ஒரு செந்தாமரைப் பூ சிரித்து மலர்ந்திருப்பதைக் கண்டான்.

தாமரை எங்கே வந்தாள்? என்னும் ஐயப்பாட்டினைக் கொண்டிட் டான் அவன். ஆனால் சாம்பல் நிறங்கொண்ட சுருள் முடியினை ஊன்றிக் கவனித்திட்ட பின்னரே அவள் ஜூனோதான் என்னும் தெளிவு உண்டாயிற்று அவனுக்கு.

படுக்கை மெத்தையில் அவனது தலைமாட்டில் அமர்ந்திருந்த ஜூனோ தன் தலையினை அவனுக்கு மிகநெருக்கமாகக் கவிழ்த்திட்ட வண்ணம் அவனது முடியினைக் கோதுவதும் நெற்றியைப் பிடித்து விடுவதுமாக இருந்திட்டாள். முந்தினநாள் கடுஞ்சண்டைகளினால் ஏற்பட்ட உடம்பு அலுக்கையினை மறக்க அடித்திடும் வகையில் அவளது மலர்க்கரம் தன் மேனியிலே தவழ்ந்திடுவது இதமாக - இன்பமாகவே இருந்திட்டது செழியனுக்கு - என்றாலும் மற்றவர்கள் பார்த்துவிட்டால் என்ன நினைப்பார்கள் என்னும் எண்ணம் எழுந்திட்டதுமே அவளுடைய கையினை மெல்ல அப்புறப்படுத்திவிட்டுப் படுக்கையினின்று கீழே இறங்கி நின்று கொண்டான் அவன்.

போலித்தனமான ஒரு புன்முறுவலைச் சிந்தியவாறே, ''நீ எப்போது வந்தாய்?'' என்று கேட்டான் ஜூனோவை நோக்கி.

''சிறிது நேரத்திற்கு முன்னர்தான் வந்தேன். அகஸ்டஸ் அவர்கள் உடனே உங்களை அழைத்து வரச் சொன்னார்கள்.''

''எதற்கு?''

''உங்களுடைய உடல் நலம் பாதிக்கப்படாமல் இருப்பதற்காக ஆலயங்களுக்கெல்லாம் சென்று வழிபாடுகள் நடத்திட வேண்டுமாம். முக்கியமாக பாலத்தீன் குன்றில் அவர் புதிதாக எழுப்பியுள்ள 'அப்பல்லோ' தெய்வத்தின் ஆலயத்திற்கும், 'கேபிடால்' குன்றிலுள்ள ஜூபிடர் ஆலயத்திற்கும், ரோமாபுரிப் பேரரசின் வெற்றிக்கே காரணமான தெய்வமாகக் கருதப்படும் 'மார்ஸ்' ஆலயத்திற்கும் போக வேண்டுமாம்.''

''எனக்கென்னவோ என் உடல் நலம் தேறுவதற்கு இப்போது தேவையானது தேர்ச்சி பெற்ற மருத்துவர்களின் சிகிச்சைதானே அன்றித் தெய்வ வழிபாடு அல்ல என்றே தோன்றுகிறது!'' என்று சிரித்திட்டான் செழியன்.

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்களுக்குக் கடவுள் நம்பிக்கையே இல்லை என்று தெரிகிறதே!''

''கடவுளை நாம் நம்புகிறோமா என்பதைவிடக் கடவுள் நம்மை நம்பிடும் அளவுக்கும் நாம் நாணயமானவர்களாக, நச்செண்ணங்கள் இல்லாதவர்களாக, கருணை மிகுந்தவர்களாக, கடமையிலிருந்து வழுவாதவர்களாக - நடந்து கொள்கிறோமா என்று சிந்தித்திட வேண்டும்; செயலாற்றிடவும் வேண்டும்.''

''நீங்கள் பொல்லாத ஆள்தான்! எல்லாவற்றையும் புரிந்து வைத்திருக்கிறீர்களே! சரி நேரமாகிறது, புறப்படுங்கள். இந்நேரம் உங்கள் வருகை

யினை ஆவலோடு எதிர்பார்த்து வழிமேல் விழி வைத்திருப்பார் அகஸ்டஸ் பெருமகனார்.''

மூன்று நாட்கள் கழித்து 'செனேட்' மன்றம் கூடிய பொழுது தமிழகத் தூதுவனுக்குத் தனிப்பட்ட முறையிலே கோலாகலமான வரவேற்பு அளிக்கப்பட்டது. வாழ்த்து மலர்கள் வழங்கப்பட்டன.

''எங்களுடைய அகஸ்டசின் உயிரைக் காப்பாற்றிய அற்புத வீரரே! உங்களுக்கு எங்கள் நன்றியினை எப்படித்தான் தெரிவித்திடப் போகிறோம்!'' என்று ஒவ்வொரு செனேட்டரும் அவனுடைய கரத்தினைப் பற்றிக் குலுக்கித் தங்கள் பேரன்பினைப் -பெருமதிப்பினைத் தெரிவித்துக் கொண்டனர்.

அவர்கள் அத்தனை பேரிடமும் செழியன் மட்டும் என்ன நவின்றிட்டான் தெரியுமா?

''உங்கள் ஆட்சித் தலைவரின் உயிரினை நான்தான் காப்பாற்றினேன் என்பதில் முழு உண்மை இல்லை; உங்கள் நாட்டு சிப்பியோதான் அவரைக் காப்பாற்றிடும் கேடயமாக விளங்கியவர். அவர் மட்டும் தக்க சமயத்தில் தீயவர்களின் திட்டங்களை உளவறிந்து வந்து உரைத்திடாமல் போயிருந்தால், நானும் உடனே செயல்பட்டிருக்க முடிந்திராதல்லவா? எனவே உங்களுடைய பாராட்டுத் தேனமுதைப் பெரும் அளவு பருகித் திளைத்திட வேண்டியவர் சிப்பியோதான்!''

தன்னடக்கமான உண்மையை ஒளித்திடாத சாதாரணமானவர்களுடைய தொண்டினையும் பெரிதாக மதித்திடத் தவறிடாத - செழியனின் இச்சொற்கள், செனேட்டர்களிடம் மேலும் நன்மதிப்பினையே வாங்கிக் கொடுத்தன.

அவனை எவ்வாறெல்லாம் சிறப்பிக்க வேண்டும் என்பது பற்றிப் புதிய திட்டங்களையெல்லாம் தீட்டித் தந்திடப் போட்டியிட்டனர் அந்த செனேட்டர்கள்.

ஒருவர், ''செழியன் அவர்களை நம்முடைய செனேட் உறுப்பினராகவே நியமித்திட வேண்டும்'' என்றார்.

இன்னொருவர், ''தமிழகத் தூதுவரின் பெயரிலே ஓர் 'ஆம்பி தியேட்ட' ரையே உருவாக்கினால் என்ன?'' என்று கேட்டார்.

வேறொருவர், ''நம் நாட்டுப் படைத்தளபதிகளுள் ஒருவராக பதவி அளித்து அவரைச் சிறப்பிக்கலாம்'' என்றார்.

மற்றொருவர், ''அவருக்கு என்று சில 'லீஜன்'களை (படை அணிகளை) ஒதுக்கினால் என்ன?'' என்று அடித்துப் பேசினார்.

செனேட்டர்கள் இவ்வாறு செழியனை உச்சிமேல் வைத்துப் போற்றிப் புகழ்வதைக் கேட்கக் கேட்க அகஸ்டசுக்குப் பூரிப்புத் தாங்கவில்லை.

''மதிப்புக்குரிய செனேட்டர்களே! உங்களுடைய உணர்ச்சிகளுக்கெல்லாம் எந்த அளவுக்கு வடிவம் கொடுத்திட இயலுமோ அந்த அளவுக்குத் தமிழகத் தூதுவருக்கு நம் நன்றியறிதலைத் தெரிவித்திட நடவடிக்கைகள் எடுத்திடுவேன் என்பதனை இங்கே உறுதியோடு உரைத்திட விழைகிறேன். தனிப்பட்ட முறையிலே அவருக்கு நான் எத்துணை கடன்பட்டிருக்கிறேன் என்று இயம்பிடத்தேவையில்லை. அவர் மட்டும் வேங்கைப் பாய்ச்சலில் விரைந்து வந்து மேசனசின் ஆட்களை விரட்டிடத் தவறியிருந்தால்... அதனை நினைத்தாலே என் நெஞ்சம் நடுக்குறுகின்றது.''' - அதற்கு மேல் அந்த மாபெரும் ஆட்சித் தலைவரின் நாவிற்கு வலுவில்லை, தான் எண்ணியவற்றை எடுத்துரைத்திட!

உணர்ச்சிகளின் இறுக்கத்தினை தாங்கவொண்ணாமல் அவரது இதயம் விம்மிற்று. அந்த விம்மலின் வெளிப்பாடாகக் கண்ணீரும் வழிந்தோடிற்று.

அந்த நேரத்தில்-

தமிழகத்திலோ...?

மதுரை மாநகர் மட்டுமல்ல - பாண்டி மண்டலமே துயரப் பெருமூச்சினைவிட்டுக் கொண்டிருந்தது; அந்தப் பெருமூச்சு எந்த நேரத்திலும் கதறலாக - கண்ணீர் வெள்ளமாக - வெடித்திடலாம் என்னும் நிலையும் அப்போது நிலவிற்று.

அதற்குக் காரணம் என்ன? அணைந்திடப்போகும் விளக்காக - உதிர்ந்திடப் போகும் பழுத்த மட்டையாக - பெருவழுதிப் பாண்டியன் மறுபடியும் படுக்கையிலேயே விழுந்திட்டதுதான் !

சில திங்களுக்கு முன்னர் உடல் தேறி நடமாடியவன் ரோமாபுரிக்குத் தூதுவனாகப் புறப்பட்ட செழியனை வழியனுப்பி வைத்திடக் கொற்கைப் பட்டினத்துக் கடற்கரைக்கே சென்றிட்டவன். - இப்போது கால்களை அசைத்திடாமல், கரங்களை இயக்கிடாமல் கட்டிலோடு கட்டிலாக ஒட்டிக் கிடந்திட்டான்.

எனினும், ஒளி குன்றிடாத விழிகளும், மிக மெல்லிய குரலில் என்றாலும் பேச்சினை இழந்திடாத வாயுமே இன்னும் அரசன் கவலைக்கிடமான நிலையினை எய்திடவில்லையெனப் பகராமல் பகர்ந்தன.

தங்களுடைய மாமன்னர் இங்ஙனம் மரணத்தின் வாயிலை நோக்கி அடியெடுத்து வைத்துவிட்டாரே என்று மக்கள் எல்லோரும் மனம் நொந்து வேதனை நெருப்பினில் வெந்திடும் வேளையில் -

அரசனின் அருமை மகனான இளம்பெருவழுதியோ எழிலரசி தாமரையை இன்னும் கண்டுபிடித்திட முடியவில்லையே என்னும் ஏக்கச் சேற்றிலேயே புழுவாய் நெளிந்திட்டான். இரவோடு இரவாக ஊருக்கு ஊர் அவளைத் தேடித் தேடி அலைந்திட்டான்.

தளபதி நெடுமாறனுக்கோ அரியணையை எவ்வாறு கைப்பற்றுவது என்பது பற்றியே ஓய்ந்திடாத சிந்தனை, அடங்காத ஆசைப் பசி!

இந்நிலையில், புலவர் காரிக்கண்ணனாரும் அவருடைய செல்ல மகள் முத்துநகையுமே, ஊண், உறக்கம் பாராது ஓய்வுதனை நாடாது

பாண்டிய வேந்தன் அருகிலேயே இருந்து பரிவோடு கவனித்துக் கொண்டனர், அவனுக்கு ஆகவேண்டியவற்றை.

பிணியின் கொடுமை ஒருபுறம் இருந்திடப் பொறாமை மிக்க தளபதியும், பொறுப்பே இல்லாத இளவரசனும் தனக்குப் பின்னால் இந்த நாட்டினை எந்தத் திக்கினில் இட்டுச் செல்வரோ என்னும் பெருங்கவலையே பெருவழுதிப் பாண்டியனைப் பெரிதும் வாட்டிற்று; வதைத்திட்டது!

அவன் முத்துநகையையும், புலவர் காரிக்கண்ணனாரையும் தனக்கு மிக அருகாக அழைத்து, அவர்களுடைய செவிகளில் மட்டுமே விழுந்திடுமாறு தன் எண்ணங்கள் சிலவற்றைத் திணறித் திணறியே வெளிப்படுத்தினான்;

...புலவர் அவர்களே! சாவின் சிறகுகள் விரைவில் என்னைத் தழுவிக் கொள்ளும் என்பதை என்னால் நன்றாக உணர முடிகிறது. மரண மண்டலத்தின் பயங்கரமான ஓலம் ஒன்று, என் காதிலே இரைச்சலை எழுப்புவதையும் என்னால் தெளிவாகக் கேட்கமுடிகிறது. கொந்தளிப் பிலே கடல் குமுறுவதைப்போல் - புயல் வீச்சிலே மரங்கள் பொருமு வதைப்போல் - என் இதயக்குலை அதிர்ந்து நடுங்குவதை உங்களுக்கு எப்படித்தான் எடுத்துரைத்திடுவேன்?... ஆனால் இந்த மண்ணுக்கு என் உடலும், காற்றுக்கு என் உயிர் மூச்சும் உரிமை யாக்கிடுமுன் 'நான்' என்னும் புலனறிவுக்கெல்லாம் புலப்பட்டிடாத ஓர் உள்ளுணர்வோடு இயங்கி வந்திட்ட நான், என்னைப் பற்றிய சில உண்மைகளை - மறை பொருளான செய்திகளை - வெளிப்படுத்திட விழைகிறேன். அதற்குள் சோழப் பேரரசர் கரிகாலரையும், ரோமாபுரி யிலுள்ள செழியனையும் நான் பார்த்திட வேண்டும். அவர்களை உடனே வரவழைத்திட ஏற்பாடு கள் செய்யச் சொல்லுங்கள்.''

தான் இறக்கப்போவதைப் பற்றிப் பாண்டியவேந்தன் கூறிய சொற் களால் காரிக்கண்ணனாரின் உள்ளம் நெகிழ்ந்து விட்டது; கண்களும் குளமாகிவிட்டன. முத்துநகையோ தன் கொடியுடலே குலுங்கிடும் வண்ணம் தேம்பித் தேம்பி அழத் தொடங்கிவிட்டாள்.

வழிந்திட்ட விழிநீரைத் தம் கொன்றைக்காய் போன்ற விரல் நுனியால் வழித்தெறிந்திட்ட புலவர், ''...சோழப் பேரரசரை விரைவில் அழைத்து வந்திடலாம்; ஆனால் எங்கோ நெடுந்தூரத்திற்கு அப்பால் உள்ள செழியனை எவ்வாறு கடிதில் கொணர்ந்திட முடியும் என்பதுதான் கவலையினை அளிக்கின்றது'' என்று தயக்கத்துடன் மொழிந்திட்டார்.

''ஏன், அவன் வருகிறவரை இந்த உடம்பிலே என் உயிர் தங்குமோ என்னவோ என்று அஞ்சுகிறீர்களா? ஆனால் புலவர்அவர்களே! நான்

இப்போது கூறுவதை நன்றாக உங்கள் மனத்திலே பதிய வைத்துக் கொள்ளுங்கள். செழியனின் முகத்தினைக் கடைசியாக ஒரு முறையேனும் கண்டிடாமல் என் கண்கள் கண்டிப்பாய் மூடிட மாட்டா. இப்போது உடனே செழியனின் வருகைக்கு ஆவன செய்யுங்கள்.''

''அவனை அழைத்து வருவதற்கு யாரை அனுப்பி வைக்கலாம் என்பதனையும் மன்னர் அவர்கள் தெரிவித்திட்டால் நல்லது.''

''ஆமாம்; இங்கிருந்து சென்றிடக் கூடிய ஆள். நம்முடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானவராக இருந்திடல் வேண்டும். ஏனெனில், இங்கு நிலவிடும் சில நெருக்கடியான அரசியல் நிலைமைகளைப் பற்றியெல்லாம் அந்தரங்கமான செய்திகளை அந்த ஆளிடம் நான் சொல்லி அனுப்பவேண்டியுள்ளது. அச்செய்திகளை முன்கூட்டியே அறிந்திட்டால்தான் சிந்தனைக் குழப்பமின்றித் தெளிந்த நெஞ்சத்தோடு இங்கு வந்தவுடனேயே சிக்கல்கள் பலவற்றிற்குத் தீர்வு கண்டிட இயலும் செழியனால்! அதோடு அவனை அழைத்து வந்திட ரோமாபுரிக்கு செல்கின்றவர் நம்முடைய நம்பிக்கைக்கு உரியவராகத் திகழ்ந்திட்டால் மட்டும் போதாது; செழியனின் நல்லெண்ணத்தைப் பெற்றவராகவும் விளங்கிடல் வேண்டும். அப்போதுதான் அந்த ஆள் கூறிடக்கூறிய அந்தரங்கச் செய்திகளை அவனால் நம்பிட முடியும். அலட்சியப்படுத் திடாமல் உடனே கிளம்பிடவும் தோன்றும். ஏன் புலவர் அவர்களே, இப்படி நாம் செய்திட்டால் என்ன?''

''எப்படி மன்னவா?''

''தங்களுக்குத்தான் யவனக் கிழவர்கள் பலரிடமும் நெருக்கமான பழக்கம் உண்டே! அவர்களுள் நற்பண்பு வாய்ந்திட்ட ஒருவரோடு நம் முத்துநகையையே அனுப்பி வைத்திட்டால் என்ன?''

''அதுவும் சிறந்த ஏற்பாடாகவே அமைந்திடும்; ஆனால்... என்றவாறே தன் மகளின் நிலை எங்ஙனம் இருந்திடுமோ என்று அறிந்திட விழைந்தவர்போல் அவளுடைய முகத்தினை நோக்கினார் புலவர்.

அவளோ...?

''ஆனால்... என்று ஏன் இழுக்கிறீர்கள் அப்பா? நம்முடைய பாண்டிய வேந்தரின் விருப்பங்களை நிறைவேற்றுவதை விட வேறு என்னதான் எனக்கு இன்பம் அளித்திடக் கூடியதாக இருந்திடப் போகிறது? செழியன் அண்ணாவையும் நான் நன்கு அறிந்திடுவேன்; அவருக்கும் என்னைப் பற்றி மிக நன்றாகத் தெரியும். எனவே, அவரை அழைத்து வந்திட எனக்கு அட்டியேதும் இல்லை; இவ்வளவு நெடுந்தூரம் பயணம் செய்திட வேண்டுமே என்கிற அச்சமும் எனக்கு இல்லை.''

முத்துநகை இவ்வாறு மொழிந்திடக் கேட்டதும் பெருவழுதிப் பாண்டியனின், துயர நிழல்படர்ந்து கூம்பிக் கிடந்திட்ட முகம் கூடச் சற்றே விரிந்து மலர்ந்திட்டது. பூரிப்பினால் !

...உன்னைப் பற்றி - உன் ஆற்றலைப் பற்றி - உன் அஞ்சாமையைப் பற்றி நான் அறிந்திட மாட்டேனா, முத்துநகை? செழியனின் உயிரினைக் காப்பாற்றிடத்தானே கரிகாலனின் இசைவோடு நீ ஆணுடை அணிந்து காடுமேடெல்லாம் சுற்றிப் படாதபாடுகளையெல்லாம் பட்டுத் தவித்திட்டாய்! உன்னுடைய நாணயத்திற்கும் நேரிய நெஞ்சினுக்கும் இந்த நானிலமேதான் ஈடாகுமா? தந்தை என்கிற சொந்த உறவு முறைகளைக் கூடத் தூரத்தள்ளி வைத்துவிட்டு, ஆட்சிக்கு அணுவளவும் ஊறு வந்திடக் கூடாது என்று அரும்பணியாற்றிய உன் ஆர்வத்திற்கு எதனைத்தான் இணையாக இயம்பிட முடியும்? எனவே நீ என் பொருட்டு ரோமாபுரிக்குச் சென்றிட முன் வந்தது குறித்து எனக்கு அளவு கடந்த மகிழ்ச்சி! என்னை மடக்கிப் போட்டு விட்ட முடக்குவாத நோயே பாதி தீர்ந்து விட்டது போல் நான் இப்போது எத்துணைக் களிப்பினைத் துய்த்திடுகிறேன் தெரியுமா?''

பல நாட்களாக நான்கு வார்த்தைகளைச் சேர்ந்தாற் போல் உதிர்த்திடவே திணறலைக் காட்டிய பாண்டிய வேந்தர், இன்று நெடுநேரம் தெளிவாக உணர்ச்சிப் பெருக்கோடு பேசியது, புலவருக்கும் முத்துநகைக்கும் உவப்பினை மட்டுமின்றி வியப்பினையும் அளித்திட்டது. மறுநாளே முத்துநகை யவனக் கிழவர் ஒருவர் துணையோடு ரோமாபுரி நோக்கி மரக்கலத்தில் கிளம்பிவிட்டாள்.

இருங்கோவேளினால் கொப்பளித்துக் கொண்டிருந்த உள்நாட்டுப் பூசல்கள் - உட்பகைகள் - அவனுடைய மறைவோடு மறைந்துவிட்ட போதிலும், பூம்புகாரில் மட்டுமின்றிச் சோழ மண்டலத்தின் பிற பகுதிகளிலும், பல முன்னேற்றத் திட்டங்களை செயற்படுத்திட முனைந்து ஈடுபட்டு இருந்தமையால் கரிகாற்சோழனுக்கு ஓய்வு என்பதே எள்ளளவு கூட இல்லாமல் அருகிப்போய்விட்டது. என்றாலும் கூடப் பாண்டிய வேந்தன் மீண்டும் படுக்கையோடு படுக்கையாக விழுந்திட்டான் என்றும், தன்னுடைய இறுதிக்கால ஆசைகளை - ஏற்பாடுகளைத் தெரிவித்திடக் கரிகாலனைக் காண விழைகின்றான் என்றும் புலவர் காரிக்கண்ணனாரிடமிருந்து மறவன் ஒருவன் மூலம் மடல் வந்திடவும், தன்னுடைய அலுவல்கள் அத்தனையையும் ஒத்திவைத்துவிட்டான் சோழப் பேரரசன்; மதுரை மாநகரினை நோக்கி உடனே புறப்பட்டும் விட்டான்.

முத்தமிழ் வளர்த்திடும் வித்தாரத் தொட்டிலாம் பாண்டிய நாட்டுத் தலைநகரமே அன்று விழாக் கோலம் பூண்டிருந்தது.

தலைநகரத்தின் வாயில் முகப்பினை வந்தடைந்திட்ட பெருந் தேரினை விட்டுக் கீழே இறங்கியதுமே, கரிகாலனின் கழுத்தினிலே பட்டத்து யானை ஆள் உயர மாலை ஒன்றினைச் சூட்டியது.

முரசங்கள் முழங்கின.

பறைகள் அதிர்ந்தன.

யாழும் குழலுமோ போட்டியிட்டுக் கொண்டு இசையருவியை பொழியவிட்டன!

இத்தகைய கோலாகலமான வரவேற்பு அதுவும் அந்த நேரத்தில் - தனக்கு வழங்கப்பெறும் என்று கரிகாலன் எதிர்பார்த்திடவே இல்லை.

தளபதி நெடுமாறன், கரங்கூப்பித் தொழுது அரசனை வரவேற்ற வாறே, ''தாங்கள் இந்த யானையின் மீதே ஏறிக் கொள்ளலாம்'' என்று பணிவுடன் வேண்டிக்கொண்டான்.

''முதலில் பாண்டியப் பேரரசரின் உடல்நலம் எவ்வாறுள்ளது என் பதைப் பற்றிக் கூறுங்கள்'' என்று ஆர்வத்துடிப்புடன் வினவினான் சோழ மாமன்னன்.

''அப்படி நம்பிக்கை போய்விடக்கூடிய நிலை இல்லை; வெறும் வாதநோய்தானே! அத்துணை விரைவில் ஒன்றும் ஆகிவிடாது!'' - அலட்சியச் சிரிப்புடன் நெடுமாறன் இவ்வாறு உரைத்ததைக் கேட்டுக் கரிகாலன் ஒருகணம் திகைத்துப் போனான். 'எவ்வளவு கபடு நிறைந் தவன் இவன்! மன்னரின் உயிரை மதிக்காமல் எத்துணை எளிதாகப் பேசுகிறான்!' என்று உள்ளூர எண்ணிக் கொண்ட கரிகாலன், ஒரு குறுஞ் சிரிப்பினை முகத்தினில் தவழவிட்டவாறே, தன் திருவடிகளை எடுத்து வைத்து நகரினுள் நுழைந்திடலானான்.

''தாங்கள் யானைமீதே வலம் வருவதற்குத்தான் இந்த ஏற்பாடுகளை சிறப்பான முறையில் செய்துள்ளேன். அப்பொழுதுதான் எங்கள் தலைநகரத்து மக்களும் தங்களைக் கண்டு களிப்பார்கள்'' என்று மீண்டும் மொழிந்திட்டான் நெடுமாறன்.

அவனுடைய ஆசை என்ன தெரியுமா?

'யானையின் முதுகிலுள்ள அழகிய - சிறிய கொலு மண்டபம் போன்ற இருக்கையிலே கரிகாலன் அமர்ந்து கொள்வார்; அவருக்கு அருகிலேயே தானும் அமர்ந்திடலாம். சோழப் பேரரசனைக் கண்டு களித்திடும் மக்கள் தன்னையும் நன்கு நோக்குவார்கள். பெருவழுதிப் பாண்டியன் மறைவுக்குப் பின்னர் தான் ஊர்வலம் வருவதற்கு இந்த ஊர்வலமே ஒரு வெள்ளோட்டம் ஆகத்தான் அமையட்டுமே!'

என்றெல்லாம் கற்பனைக் கடலிலே மிதந்து கொண்டிருந்தான் நெடுமாறன்.

ஆனால் கரிகாலனோ...?

''உங்கள் மன்னன் உயிரோடு போராடிக் கொண்டிருக்கும்போது எனக்கு மட்டும் யானைமீது ஊர்வலமா? நன்றாக இருக்கிறது, தளபதி யாரே! நன்றாக இருக்கிறது உங்கள் ஏற்பாடு! முதலில் இந்த முரசங்கள் முழங்குவதையெல்லாம் நிறுத்தச் சொல்லுங்கள். இத்தகைய போலித் தனமான வரவேற்புகள் எல்லாம் எனக்கு அறவே பிடிக்கமாட்டா'' என்று கூறிய அவன், தொடர்ந்து நடந்தே சென்றிட்டான்.

சற்றைக்கெல்லாம் புலவர் காரிக்கண்ணனார் கரிகாலனை எதிர்கொண்டழைக்க வந்து சேர்ந்தார்.

காவலரும் பாவலரும் உரையாடியவாறே மதுரை வீதியூடே நடந்து சென்றனர்.

அரண்மனைக்குள் வந்து, படுக்கையில் கிடந்திடும் பெருவழுதிப் பாண்டியனைப் பார்த்தவுடனே திடுக்கிட்டுப் போனான் கரிகாலன்.

வற்றிய பீர்க்கங்காய் போலப் பாண்டிய வேந்தனின் உடல், ஒட்டிச் சுருங்கி உலர்ந்திருக்கக் கூடுமென்று அவன் நினைத்திடவே இல்லை; அவனுடைய விழிகள் நீரிலே மிதந்தன.

சிறிது நேரம் சென்றது.

அந்தத் தனியறையில் கரிகாலனையும், காரிக்கண்ணனாரையும் தவிரத் தனக்குச் சிகிச்சை அளித்திட்ட அரண்மனை மருத்துவர் உட்படத் தன்னைக்காண வந்திருந்த அத்தனை பேரையும் ஏன், தளபதி நெடுமாற னையே கூட - வெளியேறி விடுமாறு தன் கையினாலேயே சைகை செய்திட்டான் பெருவழுதிப் பாண்டியன்.

அவர்கள் யாவரும் அகன்றிட்ட பின்னர், தன் தலைப்புறத்தே சுவர் ஓரமாகக் கிடந்திட்ட ஒரு சிறிய பேழையினை எடுத்து வருமாறு கூறினார், காரிக்கண்ணனாரிடம்.

புலவர் அதனைத் தூக்க முடியாமல் தூக்கி வந்தார். பெருவழுதி தந்த திறவுகோலினால் அதனைத் திறந்தார்.

உள்ளே, ஒரு பகுதியில் பல்வேறு வயிரக் கற்கள், அணிமணிகள், பதக்கங்கள் மின்னின;' மறு பகுதியில் ஓலை நறுக்குகள் நிறைய அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

பாண்டிய வேந்தனின் வேண்டுகோளின்படி அந்தச் சுவடிகளைப் படிக்கத் தொடங்கினான் கரிகாலன்.

அந்தச் சுவடிப் புதையலில் அவனது விழிகள் தோயத் தோய, அவனது பரந்த முகத்திலோ வியப்பு - வேதனை - தவிப்பு - கவலை - எல்லாமே இருளும் ஒளியும்போல மாறி மாறிப் படர்ந்தன !



# 46

# தூதுவர்க்குச் செய்தி



யவனக்கிழவருடன் ரோமாபுரி மண்ணை மிதித்திட்ட முத்துநகை, ஏதோ ஒரு புதிய உலகுக்கு வந்துவிட்ட உணர்வுகளால் தழுவப்பட்டு இன்பக் கிளுகிளுப்பிலே மிதந்திட்டாள்.

கடலின் கரம்போல் நீண்டு பாய்ந்தோடும் டைபர் நதி - தேர்ச் சப்பரம்போல் வடிவம் அமைந்திட்ட ஊசியிலை மரங்கள் - அஞ்சறைப் பெட்டிகளை ஒன்றின்மீது ஒன்றாக அடுக்கி வைத்தாற்போல் ஓங்கி உயர்ந்திட்ட கட்டடங்கள் - அவற்றுள்ளும் சேல்கெண்டை மீனின் செதில் போலப் பளபளத்திடும் சலவைக்கல் கட்டடங்கள் எல்லாமே அவளது உள்ளக் கிண்ணியிலே வழிய வழியப் பொழிந்திட்டன உவகைத் தேனை!

செழியனைச் சந்திப்பதற்காகச் சென்று கொண்டிருந்த அவளை வழியிலே காண நேர்ந்திட்ட சில ரோமானியர்கள். ஒருகணம் திகைத்துப் போய்த் தேங்கி நின்றனர்; வியப்பு மின்னிடும் தங்கள் விழிகளால் அவள் உருவத்தினையே ஏற இறங்க அளந்தனர்; பின்னரே மேலே நடந்தனர். ஏன் அப்படி?

முத்துநகையைப்போல் புதுமையான முறையிலே புடவை உடுத்தியவளை - கச்சை அணிந்தவளை - கடயம் பூண்டவளை - அவர்கள் இதுவரை தங்கள் நாட்டிலே கண்டதில்லை. அதனால்தான் அவர்களுக்கு அத்துணை வியப்பு - திகைப்பு!

சிலர், யவனக்கிழவரை அணுகி அவள் யார்? எந்த நாட்டிலிருந்து வருகிறாள் என்றெல்லாம் வினவிடவும் தவறவில்லை. அவள் தமிழகத் துத் தளிர்க்கொடிதான் - செழியனுக்கும் உறவினர்தான் என்று அறிந் திட்டவுடனே, அவர்கள் மிக்க மகிழ்ச்சியோடும் மரியாதை யோடும் அவளுக்கு வணக்கம் புரிந்து வரவேற்புக் கூறினர்.

முத்துநகையையும் யவனக்கிழவரையும் சுமந்திட்ட சிறிய தேர், நகர்மன்றமாகிய ஃபோராத்தின் வழியாகச் சென்றிட்ட பொழுது, அங்கே அகஸ்டஸினால் புதிதாக எழுப்பப்பெற்ற கருத்தரங்க மேடையை ஒட்டி, ஏழெட்டுப் பேர் கும்பலாகக் குழுமி இருந்தனர். உரத்த குரலில் அவர்கள் எதைப்பற்றியோ உரையாடிய வண்ணமும் இருந்தனர். சூடு பறந்திடும்

அவர்களுடைய பேச்சினூடே இரண்டு சொற்கள் அடிக்கடி உச்சரிக்கப் பட்டன; ஒன்று அகஸ்டஸ், மற்றது செழியன்.

முத்துநகை ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாகப் பெருமூச்செறிந் திட்டாள்.

உரையாடிக் கொண்டு வந்ததில் நேரம் போனதே தெரியவில்லை; தூரம் போனதும் தெரியவில்லை. அவர்களைச் சுமந்து வந்திட்ட சிறு தேர் விரைவிலேயே செழியன் இல்லத்தினை நெருங்கிவிட்டாற்போன்ற உணர்வே இருவருக்கும் உண்டாயிற்று.

தேரினைவிட்டுக் கீழே இறங்கிய முத்துநகை, தமிழகத் தூதுவன் தங்கியுள்ள மாபெரும் மாளிகையினைக் கண்டதும் மலைத்தே போய்விட்டாள்.

செழியன் அண்ணாவை ஓர் இளவரசரை போலத்தான் அகஸ்டஸ் நடத்தி வருகிறார் என்று தெரிகிறது; இல்லையென்றால் இவ்வளவு அழகிய பெரிய மாளிகையை அளித்திருப்பாரா?' என்று எண்ணிக் கொண்டு அவள், யவனக்கிழவர் பின்தொடர, மேல் உப்பரிகைக்கு விரைந்திட்டாள்.

அங்கே, மிகப் பரந்தவெளிக்கூடத்தில் அவள் நுழைந்திட்டபொழுது படுக்கையறைப் பக்கமிருந்து வந்த குரலொலிகள் அவளைத் திகைக்க வைத்திட்டன.

''தாமரையைத்தான் இளம்பெருவழுதி என்கின்ற இளவரசரும் காதலிப்பதாகக் கூறுகிறீர்களே! அப்படியிருக்க அவளையே இன்னும் ஏன் நீங்கள் நினைத்துக் கொண்டு அழவேண்டும்? உங்களை நீங்கள் ஏன் பாழடித்துக் கொள்ள வேண்டும்?''

''அதுதான் எனக்கும் புரிந்திடவில்லை. ஓலைச்சுவடியில் வரையப் பட்ட எழுத்தினைப்போல அவள் என் இதயமடலிலே ஆழமாக, அழுத்தமாகப் பதிந்துவிட்டாள். அவளை எப்படி அவ்வளவு எளிதாக என் நெஞ்சினைவிட்டுப் பிய்த்து எறிந்திட முடியும்? தாமரையையாவது நான் மறப்பதாவது?''

''உங்களை வஞ்சித்துவிட்டு இன்னொருவனுக்குத் தன் கழுத்தை நீட்டத் துணிந்துவிட்ட அந்தக் கேடு கெட்டவளை நீங்கள் நினைத்துக் கொண்டே இருப்பதில் என்ன பொருள் இருக்கிறது? என்ன பயன் இருக்கிறது?''

''ஆனால் தாமரை என்னை வஞ்சித்தாள் என்று சொல்ல முடியாதே! அவளிடந்தான் நான் என் காதலைப் பற்றி மனத்திறந்து பேசிட வில்லையே!''

''அப்படியானால் அது ஒருதலைக்காதல்; அந்த அப்பாவித்தனமான ஒருதலைக் காதலுக்காகவா வறண்ட பாலைவனமாக வாழ்வையே அழித்துக் கொள்வது! இது எல்லாவற்றையும்விடப் பெரிய முட்டாள் தனம்! இருங்கள், நான் இப்போதே போய் அகஸ்டஸ் பெருமகனாரிடம் சொல்லி உங்கள் பைத்தியக்காரத்தனம் எல்லாம் பறந்தோடுவதற்கு வழிசெய்து விடுகிறேன்?''

''அய்யய்யோ இதைப்பற்றியெல்லாம் அவரிடம் போய் ஏதும் சொல்லித் தொலைக்காதே! என்ன கிளம்பி விட்டாய் ? சொல்வதைக் கேள்!'' என்று உரக்கக் கத்தியவாறே ஜூனோவை பின்தொடர்ந்து வெளிக்கூடத்திற்கு விரைந்து வந்திட்டான் செழியன்.

அங்கோ... முறுவல் பூத்து நின்றிருக்கும் முத்துநகையைக் கண்டதுமே அவன் செயலற்றுத் திகைத்திட்டான்; திகைப்பு வெள்ளத்தில் ஆழ்ந்து விட்டான்.

அவனைவிட ஜூனோதான் மிகவும் திடுக்கிட்டு விட்டாள்.

தனக்குப் போட்டியாகத் தமிழகத்திலிருந்து இன்னொருத்தி வந்து முளைக்கிறாளே என்கிற அச்சமோ? இல்லையென்றால் சாயம் கலந் திட்ட சல்லாத் துணிபோல் அவள் முகம் அப்படி வெளுத்துப் போவானேன்?

''என்ன முத்துநகை இது? இப்படித் திடீரென்று...? நீ வரப் போவதைப்பற்றி முன் கூட்டியே எனக்குத் தகவல் தெரிவித்திருக் கலாமே!''

''தெரிவிக்கலாம்தான், ஆனால் அதற்கெல்லாம் நேரம் ஏது? பெருவழுதிப்பாண்டியர் மீண்டும் படுக்கையில் விழுந்துவிட்டார்...''

''என்ன! பாண்டிய மன்னர் மீண்டும் படுக்கையில் விழுந்து விட்டாரா?'' - பதறிப்போய் கேட்டான் செழியன்.

''ஆமாம்; இனிமேல் அவரால் நடக்கக்கூட முடியாது. ஏனென்றால் முடக்குவாத நோயும் சேர்ந்துகொண்டுவிட்டது. இனி அவர் பிழைத் தெழுவதே அரிதுதான்!'' முத்துநகை இவ்வாறு மொழிந்திடவும் செழியன் கன்னப் பரப்பிலே கண்ணீர்வெள்ளம் வழிந்தோடியது.

அந்தத் துயரச் சூழ்நிலையில் சில விநாடிகள் வார்த்தைகள் வெளிவந்திடவில்லை எவருக்குமே.

சிறிது நேரம் சென்றது.

''நான் புறப்படட்டுமா?'' என்று மெல்லக் கேட்டாள் ஜூனோ.

''ஊம்...'' என்று செழியன் சட்டென்று ஏதோ நினைவு வந்து விட்ட வனைப்போல், ''ஆமாம்; முத்துநகையும் உன்னோடு வந்து தங்கட்டுமே! உங்கள் ஆட்சித் தலைவரின் இல்லத்தையும் அவள் பார்த்த மாதிரி இருக்கும்'' என்றான்.

''அதுவும் நல்ல யோசனைதான்; நாளைக்கே நானும் உங்களுடன் தமிழகத்திற்குத் திரும்பிட வேண்டுமே? அதற்குள் இந்த அழகான ரோமாபுரியை நான் எங்கே சுற்றிப் பார்த்திட முடியும்? ஆகவே, அந்த ஆட்சித் தலைவரின் இல்லம் ஒன்றையாவது பார்க்க முடிந்ததே என்கிற நிறைவாவது எனக்கு கிடைத்திடட்டும்'' என்றாள் முத்துநகை.

''நீங்கள் நாளைக்கே கிளம்பிடத்தான் வேண்டுமா?'' -கேட்கும் பொழுதே ஜூனோவின் குரல் தழுதழுத்து விட்டது!

'வேறு வழி...?' என்பதைத் தவிர வேறு என்ன விடையைத்தான் அளித்திட முடியும் செழியனால்?

இரவு முழுவதும் உறக்கமே வந்திடவில்லை செழியனுக்கு; மண் ணிலே புரட்டி எடுக்கப்படும் மட்டக்குதிரையினைப் போலப் பற்பல வகையான நினைவுக் கயிறுகளின் இழுப்புக்கு ஏற்ப அவன் படுக்கை யிலேயே புரண்டு புரண்டு நெளிந்திட்டான்.

தன்னை வளர்த்து ஆளாக்கிவிட்ட பெருவழுதிப் பாண்டியனின் பெருந்தன்மை - பாசமழை -

தான் ரோமாபுரிக்குத் தூதுவனைத் தேர்ந்தெடுக்கப்பட்டதைச் செரித்துக் கொள்ள முடிந்திடாமல் தளபதி நெடுமாறன் கக்கிய புகைச்சல்கள்- பொறாமைக் கொழுந்துகள்

சுழலும் விழியாலும் சுவை கொட்டும் மொழியாலும் தன்னைச் சொக்க வைத்திட்ட தாமரையை, இளம்பெருவழுதியும் காதலிக்கிறான் என்பது தெரிந்தும்கூட அவளைத் தன் மனத்திரையினின்றும் பிய்த் தெறிய இயலாமல் அவளிடம் தான் கொண்டிருக்கும் ஈடுபாடு இதயத்தாகம் -

அதே தமிழகத் தளிர்க்கொடியின் முகவெட்டும் உடற்கட்டும் பூண்டு, இந்த ரோமாபுரி மண்ணிலே தன்னையே வளைய வளையச் சுற்றி வந்து, தனக்காக உயிரினை விடவும் தயங்கிடாத கட்டழகி ஜூனோவின் விழிவீச்சு - மதுப்பேச்சு.

'ஜூலியஸ் சீசருக்கு பின்னால் ரோமானியப் பேரரசு என்ன ஆகுமோ?' என்று - வேண்டியவர்களின் அச்சமும், வேண்டாதவர்களின் ஆசையும் நிறைவேறிடா வண்ணம், அவரைப் போலவே தன்னாலும்

பெயர் எடுத்திட முடியும் என்று மெய்ப்பித்துக் காட்டிடும் அகஸ்டஸ் பெருமகனாரின் செயல் வேகம் - சீரிய திட்டங்கள் -

அவர் தன்னை மிக மேலாக மதித்து நடத்துவதோடு நில்லாமல் தன்னுடைய உடன்பிறப்பாகவே ஏற்றுக் கொண்டாற் போல் காட்டிடும் அரவணைப்பு - அன்பு வெள்ளம் -

எல்லாமே செழியனின் இமைக் கூட்டினுள்ளே அரங்கேறி அவனை அயர்ந்து உறங்கவிடாமல் ஆட்டிப் படைத்திட்டன.

பொழுது புலர்ந்திடு முன்னரே அவன் படுக்கையை விட்டு எழுந்துவிட்டான். தன்னுடைய ஆடைகள், போர்க் கருவிகள், ரோமாபுரி வந்த பின்னர் தான் வாங்கிய விந்தையான பொருள்கள் எல்லாவற்றையும் பெரிய - சிறிய பேழைகளில் அடுக்கித் தமிழக பயணத்திற்குத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ள வேண்டுமல்லவா? அதற்காகத்தான் அத்துணை விரைவாக அவன் படுக்கைக்கு விடை கொடுத்திட்டான்.

நேரமோ ஓடிக் கொண்டிருந்தது.

காலைக் கதிரவனின் பொற்கதிர்களில் சாதாரணமாகத் தவழ்ந்திடும் - தாங்கிக் கொள்ளத்தக்க குடமிளகாய்க் காரம் கூட மாறி, கொதி உலையின் அனல் வீச்சும் ஏறத்தொடங்கிவிட்டது.

அப்படியும் ஜூனோ வந்தபாடில்லை. முத்துநகையையாவது அனுப்பி வைத்தாளா என்றால், அதுவும் இல்லை. செழியனுக்கு என்று ஒதுக்கப்பட்டிருந்த தேர், முந்தின நாள் பழுதடைந்துவிட்டது. அதற்கு மாற்றாக இன்னொரு தேரினை அனுப்புவதாகச் சொல்லியிருந்தாள் அவள். அதுவும் வந்து சேர்ந்திடவில்லை. இவ்வாறு தேர் இல்லாமற் போனதே அவனுக்கு மிகுந்த எரிச்சலைக் கொடுத்திட்டது.

'இந்த ஜூனோ என்ன இப்படிச் செய்துவிட்டாள்? நான் உடனே அகஸ்டஸ் அவர்களிடம் விடைபெற்றிட வேண்டாமா? அப்பொழுது தானே மரக்கலத்தினுக்கு ஏற்பாடு செய்துகொண்டு இன்றே தமிழகத் திற்குக் கிளம்பிட இயலும்?' என்று தவியாய்த் தவித்திட்ட செழியன் நொடிக்கு நொடி பொறுமையினை இழந்திட்டவனாய் உப்பரிகையின் தாழ்வாரப் பகுதியிலே அங்கும் இங்குமாய் உலவிய வண்ணம் இருந்தான்.

ஒரு 'பைன்' மரத்தின் உயரத்திற்குப் பகலவன் வான மண்டலத்தில் மேலேறிய பின்னரே முத்துநகை மட்டும் தனியே வந்து சேர்ந்தாள்!

''ஏன், ஜூனோ இங்கே வரவில்லையா?'' என்று பரபரப்புடன் வினவினான் செழியன்.

''அவள் எங்கே இப்போது வரப்போகிறாள் ? எதையோ நினைத்துக் கொண்டு சின்னக் குழந்தை மாதிரித் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே இருக்கிறாள்'' என்றாள் முத்துநகை.

''என்ன காரணமாம்?''

''தன் நெஞ்சிலே நிறைந்தவர்களைப் பிரிவதென்றால் யாருக்கும் அழுகை வராமல் சிரிப்பா வரும்?'' - நகைப்புடன் கேலியாகக் கேட்டாள் முத்துநகை.

''அவளுடைய நெஞ்சில் நிறைந்தவர்கள் யாரும் அண்மையில் இறந்து போனதாக எனக்குத் தெரியவில்லை!''

''ஏன் இப்படியெல்லாம் அமங்கலமாகப் பேசுகிறீர்கள்? ஓர் அப்பாவிப் பெண்ணின் மனத்தைக் கெடுத்துவிட்டு இப்படிப பாரா முகமாய் நடிப்பது உங்களுக்கே அழகாக இருக்கிறதா?''

''நீ என்ன சொல்கிறாய் முத்துநகை?''

''உண்மையைத்தான் உடைத்துச் சொல்கிறேன். அண்ணா! அவள் உங்கள் மீது பைத்தியமாகவே இருக்கிறாள். என்னைப் பொறுத்தவரை யில் வெளித்தோற்றத்திலேதான் அவள் முகத்தைக் கடுகடுபபாக வைத்துக் கொண்டு வீராங்கனையாக விளங்குகிறாளே யன்றி உள்ளூர அவள் ஓர் உணர்ச்சிப் பிழம்பே. நீங்கள் மட்டும் அவளுக்கு ஏதாவது ஒரு வழி செய்யாமல் தமிழகத்திற்குப் புறப்பட்டீர்களோ, அவள் இந்த டைபர் நதியிலேயே விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டாலும் நான் வியப்படைந்திட மாட்டேன். அந்தப் பழி உங்களைப் பிறகு வாளா விடாது. நீங்கள்தான் அவளை மணம்புரிந்து கொண்டு நம் தமிழகத் திற்கே கூட்டி வந்துவிட்டால் என்ன?''

''அது எப்படி அவளை நான் மணந்திட முடியும்? காதலிப்பது ஒருத்தியை, மணம் முடிப்பதோ வேறொருத்தியை என்றால், அது காதலையே சூதாட்டக் காயாக்கிடும் வஞ்சகச் செயல் இல்லையா?''

''நீங்கள் என்ன புதிர் போடுகிறீர்கள்? உண்மையிலேயே நீங்கள் ஜூனோவைக் காதலித்திடவில்லையா?''

''இல்லை. அறவே இல்லை; அவள் வேண்டுமானால் என்னைக் காதலித்திருக்கலாம்; அதற்கு நானா பொறுப்பாளி? நான் காதலித்த தெல்லாம் ஒரே ஒருத்தியைத்தான் - தாமரையைத்தான்!''

''நன்றாக இருக்கிறது நீங்கள் சொல்வது! தாமரையை நம் இளவரசர் இளம்பெருவழுதி அல்லவா காதலிக்கிறார்? அவர்தானே இன்றைக்கும் அவளைத்தேடி அல்லும் பகலும் ஆலாய்ப் பறந்து கொண்டிருக்கிறார்?''

''ஏன், இன்னும் அவளைக் கண்டுபிடித்திட முடியவில்லையா?''

''அது அவ்வளவு கிள்ளுக்கீரையா என்ன? அந்த இருங்கோவேளின் ஆட்கள் அவளை எங்கே ஒளித்து வைத்திருக்கிறார்களோ! இல்லை, கொன்றுவிட்டார்களோ - கொளுத்தி விட்டார்களோ? யார் கண்டது? அது சரி. நீங்கள் தாமரையைக் காதலிக்கின்ற அழகு இவ்வளவு தானா?'' - ஏளனமாக வினவினாள் முத்துநகை.

''என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? என் காதல் உண்மையானதுதான் என்று உன்னால் நம்ப முடியவில்லையா?''

''நம்பும்படியாக நீங்கள் நடந்துகொள்ளவில்லையே! காணாமற் போன தாமரையைக் கண்டுபிடித்திட நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டீர்கள்? தூதுவர் பதவி கிட்டியது!. ரோமாபுரிக்கு ஓடிவந்து உட்கார்ந்து கொண்டு விட்டீர்கள்...''

''நான் ஒன்றும் இந்தப் பதவிக்காக ஏங்கிப் போய்ப் பேராசை பிடித்து இங்கே ஓடிவந்து விடவில்லை. மக்களில் பெரும்பாலோர் இந்தப் பொறுப்பிற்கு நான் பொருத்தமானவன் என்று நம்பினார்கள்; விரும் பினார்கள்; மன்னரும் கட்டளையிட்டார்; அவருடைய கட்டளையை நான் எப்படி மீறிட முடியும்? காதல் பெரிதா, கடமை பெரிதா என்று சிந்திக்கும்பொழுது கடமையே பெரிதென்று எனக்குப் பட்டது. உன் தந்தையாகிய புலவர் அவர்களும் அவ்வாறே வற்புறுத்தினார்கள். அதனால்தான், இந்தப் பதவியினை ஏற்றுக் கொண்டேனே தவிர வேறில்லை!''

''நான் சொல்ல முற்பட்டதும் அதனைத்தான். உங்களை பொறுத்த வரை காதலைவிடக் கடமைதான் பெரிது; அந்த உங்கள் கண்ணோட்டத் தினை நான் குறைத்து மதிப்பிடவே இல்லை. அதேசமயம் நம் இளவரசரைப் பார்த்தீர்களா? கொற்கைப்பட்டினத்தின் நிர்வாகத்தைப் பற்றிய கவலையைவிடத் தாமரையைத் தேடிக் கண்டுபிடிப்பதில் உள்ள கவலையே அவருக்கு மிகுதியாகி விட்டது. அவரைப் போலக் காதலுக்காகக் கடமையை மறக்கவோ - துறக்கவோ - முடியாத நீங்கள், பிறகு அந்தக் காதலியை மட்டும் மறக்காமல் மனம் புழுங்குவானேன்? மகிழ்ச்சியினைத் துறப்பானேன்? இன்னோர் உண்மையையும் உரைத் திட்டால் உங்களுக்குச் சினம் வந்திடாதே?''

''என்ன உண்மை அது?''

''உங்களை ரோமாபுரியில் கொண்டு வந்து நிறுத்தியதில் உங்களு டைய கடமையுணர்வுக்கு முக்கால் பங்கு பெருமை உண்டென்றால், இளவரசரே காதலிக்கிறார் என்கிறபோது இனிமேல் தாமரை எங்கே நமக்குக் கிட்டிடப்போகிறாள்?' என்கிற உங்கள் 'விரக்தி'க்கு - வெறுப்புணர்வுக்கு - கால் பங்கேனும் இடம் உண்டல்லவா?''

''நீ சொல்கிறபடியே தான் வைத்துக் கொள்ளேன்!''

''அப்படி நீங்களே அடைய முடியாது என்று ஒதுக்கி விட்டு விட்டவளை இன்னும் ஏன் நினைத்து நினைத்து உருகிட வேண்டும்.?''

''நீ கூறுவதைப் பார்த்தால் ஜூனோவையே மணந்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துவாய் போல் தெரிகிறதே!''

''கண்டிப்பாக! எனக்கென்னவோ ஜூனோ உங்களுக்கு எல்லா வகையிலும் பொருத்தமானவள் என்றே தோன்றுகிறது. அத்தோடு, நாம் தேடிச் செல்கின்ற பொருளைவிட நம்மைத் தேடி வருகின்ற பொருளே நமக்கு ஏற்றது - இனிப்பானது - அப்புறம் இன்னொன்றை உங்களுக்குச் சொல்ல மறந்துவிட்டேனே!'

''என்ன அது?''

''இன்று நாம் தமிழகத்திற்குப் புறப்பட முடியாது! நாளை மறுநாள் தான் கிளம்பலாம்.'

''ஏன் அப்படி? இந்த ஒத்திவைப்பும் ஜூனோவின் தந்திரம்தானா?''

''இல்லை, இல்லை; அகஸ்டஸ் பெருமகனாரே என்னிடம் நேரில் சொன்னார். நாளைக்கு உங்களுக்கு ஒரு பெரிய பிரிவு விழா விருந்தினை நடத்தியே தீரவேண்டுமாம்!''

''ஆமாம்; நீ எப்போது அகஸ்டஸ் அவர்களைச் சந்தித்தாய்?''

''சற்று முன்னர்தான் அவரைச் சந்தித்தேன்; ஜூனோதான் என்னை அறிமுகப்படுத்தி வைத்தாள்; நான் எதிர்பாராத அளவுக்கு என்னைப் பற்றி வானளாவப் புகழ்ந்திட்டாள்''

''ஓகோ! அந்தப் புகழ்ச்சியில் மயங்கித்தான் அவளுக்காகப் பரிந்து பேசிடவும் முனைந்தாயாக்கும்!'' - கேலியாக நகைத்திட்டான் செழியன்.

''நான் ஒன்றும் புகழ்ச்சிக்கு மயங்கிவிடுபவள் இல்லை என்பது உங்களுக்குத் தெரியாதா அண்ணா?... அப்புறம் இன்னொன்றையும் அகஸ்டஸ் வற்புறுத்தினார் !''

''எதைப் பற்றி?''

''நாளை நடக்கப்பேகும் விருந்தைப் பற்றித்தான். சில தலையாய விருதுகளையும் பரிசுப் பொருள்களையும் அவர் அளித்திட திட்டமிட்டுள்ளாராம்; அவற்றுள் எதையுமே மறுத்திடாமல் நீங்கள் எல்லாவற்றையுமே ஏற்றுக் கொண்டிட வேண்டுமாம்!''

''அப்படியா?... ஆனால் அவற்றை நான் தமிழகத்திற்குக் கொண்டு சென்றால், அங்கேயுள்ள தளபதி நெடுமாறன் போன்றவர்கள் வயிற் றெரிச்சல் கொண்டிட மாட்டார்களோ?''

''இப்படியெல்லாம் பொறாமைப் புழுக்களுக்கு அஞ்சி அஞ்சி நம்மை நாமே எத்தனை காலத்திற்குத்தான் ஒடுக்கி ஒடுக்கி உடைந்து சிதைவது? நாமாக, ஒருவருடைய விருப்பத்திற்கு மாறாக, அவருக்கு உரிமையுள்ள பொருளைப் பறித்திடவில்லையே!''

முத்துநகை இவ்வாறு மொழிந்திடவும், செழியன் வேறொரு சிந்தனையில் ஆழ்ந்திட்டான்.

மறுநாள்.

முத்துநகை செழியனுக்குத் தந்திட்ட முன்னறிவிப்புப் பொய்யில்லை என்பதைப்போலவே, செனேட் மண்டபம் மனித வெள்ளத்தால் நிரம்பி வழிந்திட்டது. அங்கே செனேட்டர்கள் மாத்திரமின்றி, செல்வச் சீமான்கள், கவிஞர்கள், கலை வல்லுநர்கள், படைத்தளபதிகள், உயர் அதி காரிகள் முதலானோரும் தத்தம் குடும்பத்தினருடன் குழுமியிருந்தனர். மண்டபத்திற்கு வெளியே ஏழை, எளிய நடுத்தர மக்கள் பல்லாயிரக் கணக்கில் திரண்டிருந்தனர்; வெறுங்கையுடன் இல்லை; பரிசுகளுடன்!

தமிழகத் தூதுவன் [illegible] படி இந்தச் சாதாரண ரோமானியர்களின் நெஞ்சிலே இத்துணை விரைவில் - எளிதில் - இடம் பிடித்திட இயன்றது? அதற்கு இரண்டு தலையாய நிகழ்ச்சிகளே காரணங்கள் ஆகும். ஒன்று, அடக்கிடவே முடியாது என்று கருதப்பட்ட காண்டாமிருகத்தினையே அவன் வீழ்த்தியது; இரண்டாவது, மேசனசின் சதி நெருப்பினால் சாம்பலாகி விடாவண்ணம் ஆட்சித் தலைவர் அகஸ்டஸையே அவன் காப்பாற்றியது.

தங்கள் தலைவரின் உயிருக்கு உறுதுணையாய் - பேரரணாய்த் - தன் வீரத்தினைப் பயன்படுத்திய தமிழ் மறவனுக்குத் தாங்கள் ஏதேனும் நன்றியின் சின்னமாகத் தந்திடவே வேண்டும் என்கிற துடிப்புடனேயே அந்தச் சாதாரணப் பொதுமக்கள் பெரும் எண்ணிக்கையில் கூடினர். கடற் பரப்பாகவே [illegible]சியளித்திட்டனர். செழியனைக் கண்டிடவும், அவன் கரத்தினைக் குலுக்கித் தாங்கள் கொண்டு வந்திட்ட பரிசுகளைத் தந்திடவும் [illegible]ர்வத்திற்கு ஆல்பஸ் மலையினைக் கூட இணையாகக் [illegible] முடியாது. இடித்துப் புடைத்துக் கொண்டு செனேட் மண்டபத்திற்குள் ஒவ்வொருவராகச் சென்று திரும்பிய அவர்களைக் கட்டுப்படுத்துவதற்குள், ரோம் நகரப் படை அணியைச் சார்ந்திட்ட வீரர்களுக்குப் பெரும்பாடாகிவிட்டது.

பொதுமக்களும், செனேட்டர்கள் முதலான பெருமனிதர்களும் பரிசுகளை வழங்கி முடிந்ததும், அகஸ்டஸ் எழுந்து நின்றார். அவரது பரந்த முகத்தினில் துயரத்தின் நிழல் நன்றாகப் படர்ந்திருந்தது. தழுதழுத்த குரலில் உரையாற்றிடத் தொடங்கினார் அவர்.

தமிழகத் தூதுவர் செழியனைப் பாராட்டிட நம்முடைய வார்த்தைகளுக்கு வலுவோ பொலிவோ இருப்பதாக நான் கருதிடவில்லை இங்கே உள்ளேயும் வெளியேயும் பல்லாயிரக்

கணக்கினில் திரண்டிருக்கிறார்களே, இந்த மக்களின் மாக்கடலைவிட வேறு மாபெரும் பாராட்டு அவருக்குத் தேவையும் இல்லை. ஆனாலும் இந்த நேரத்திலே உங்கள் எல்லாருடைய சார்பிலும் சில விருதுகளையும் பட்டங்களையும் வழங்குதல் மிகவும் பொருத்தமாக இருக்குமென்று எண்ணுகிறேன். இன்றுமுதல் செழியன் அவர்கள், இந்த ரோமானியப் பேரரசின் 'நிரந்தர குடிமகன்' ஆக ஏற்றுக் கொள்ளப்படுகிறார்; அத்தோடு சிறப்புப் படைத் தளபதிகளுள் ஒருவராகவும் உயர்த்தப்படுகிறார்; அவருடைய தற்காப்பிற்காகவும் நாட்டின் பொதுப் பாதுகாப்பிற்காகவும் அவருக்கென்று சில 'லீஜன்கள்' (படையணிகள்) ஒதுக்கப்படும். இன்று அவர் நம்மை விட்டுப் பிரிந்து தம் தாயகம் சென்றிட்டாலும் அவர் விரைவில் திரும்பிடுவார் என்னும் நம்பிக்கையுடனும், திரும்ப வேண்டும் என்னும் கோரிக்கையுடனும் இந்தச் சிறப்புகள் செய்யப் படுகின்றன. அடுத்து, அவருக்கு ஒரு புதிய பட்டத்தினை வழங்கிட விழைகின்றேன்; '**ரோமாபுரிப் பாண்டியன்**' என்பதே அந்தப் பட்டம்.''

அகஸ்டஸ் இவ்வாறு மொழிந்து முடிப்பதற்குள்ளேயே செனேட் மண்டபம் மட்டுமல்ல, வெளியே வானமண்டபமே அதிர்ந்திடும் படியாகக் கரவொலிகள் எழுந்து முழங்கின. ''ரோமாபுரிப் பாண்டியன் வாழ்க! ரோமாபுரிப் பாண்டியன் வாழ்க!'' என்ற ஆர்ப்பரிப்பும், எதிரொலி கிளப்பி விண்ணைப்பிளந்திட்டது.

தொண்டையைக் கனைத்துக் கொண்டு அகஸ்டஸ் மீண்டும் தொடர்ந்தார்: ''...விலையுயர்ந்த அணிமணிகள், வைரக்கற்கள் அடங்கிய இந்த அழகிய பேழையையும் அவருக்குப் பரிசாக அளிக்கிறேன். இத்துடன் என் உயிருக்குயிரான இன்னொரு பொருளையும் நான் பரிசாக அவருக்கு வழங்குகிறேன். அந்த விலைமதிக்க முடியாத பொருள் எது தெரியுமா?...'' என்று அவர் கேட்டு நிறுத்தியதும் எல்லாருமே இமைக்க மறந்து அவரையே திகைப்புடன் நோக்கினர்.

இதோ, இந்தப் பொருளைத்தான்!'' என்று அகஸ்டஸ் பெருமகனார் சுட்டிக்காட்டியது ஏதோ ஓர் அஃறிணைப் பொருளையா?

அல்ல.

பட்டுத் தளிர்மேனி படைத்திட்ட பாவை - தேன் சொட்டும் மொழிக் கிள்ளை - சுடர் வீசும் அறிவு மயில் - ஜூனோவைத்தான்!

தங்களுடைய ஆட்சித் தலைவர் அளித்திட்ட அற்புதமான பரிசினைக் கண்டு ரோமானிய மக்கள் துள்ளிக் குதித்தனர். உற்சாகந் தாங்கிடாமல்! அவர்களுடைய கரவொலி கலந்த ஆரவாரம் நீர்வீழ்ச்சி யின் பேரிரைச்சலையே எழுப்பிற்று.

அதே வேளையில் செழியனோ?

அகஸ்டஸ் இவ்வாறு தன்னைப் பல்லாயிரக்கணக்கானோர் முன்னிலையில் மடக்கிவிடுவார் என்று அவன் எதிர்பார்த்திடவே இல்லை. அவருடைய பரிசினை மறுத்திடவும் துணிவின்றி - மகிழ்ச்சியோடு ஏற்றிடவும் மனம் இன்றி - அவன் தவியாய்த் தவித்தான்; தத்தளித்துத் திணறினான்.

அவனுக்கு அருகினில் அமர்ந்திருந்த முத்துநகைக்கோ, எங்கே அவன் ஜூனோவை ஏற்றிட மறுத்து, முரண்பாடான கருத்துக்களை மொழிந்திடுவானோ என்னும் அச்சம். எனவே இவ்வாறு எச்சரித்திட முனைந்து விட்டாள்:

...செழியன் அண்ணா! அருள் கூர்ந்து உங்கள் நன்றியுரையிலே ஏறுமாறாக ஏதும் இயம்பிவிடாதீர்கள். அகஸ்டஸ் அவர்களின் பரிசளிப்பிலே ஜூனோவைப் பற்றி - ஏன் இந்த ரோமாபுரி நாட்டைப் பற்றி - எத்தனையோ இரகசியங்கள் எல்லாம் ஒளிந்திருக்கின்றன இலை மறை காய்களாக! அவை என்ன என்பதனைப் பின்னர் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறேன். இப்போது என் பேச்சினைத் தட்டிடாமல் ஜூனோவை ஏற்றுக் கொண்டு விடுங்கள்.''

முத்துநகையின் இந்த வேண்டுகோளில் பொதிந்திருந்த அழுத்தம் ஜூனோவைப் பற்றி மாறுபாடாக மறுத்துரைக்கவோ -வெறுத்துப் பேசவோ இடங்கொடாமல் செழியனின் நாவினை முடக்கிப் போட்டு விட்டது.

எனவே தன்னுடைய நன்றியுரையின்போது ஜூனோவைப் பற்றி என்ன நவின்றிட்டான் செழியன்? எதுவுமே இல்லை. பிரியாவிடை பெற்றிட்ட அந்த வேளையில் தன் உள்ளத்தில் பொங்கிடும் உணர்ச்சிகளுக்கெல்லாம் உருவம் தீட்டி, அகஸ்டஸ் அவர்களின் ஆற்றலை வியந்து போற்றி, ரோமானிய மக்களின் நெஞ்சமெல்லாம் உருகிட - உவந்திட - அவன் சொற்பொழிவாற்றிய பகுதியின் சாரம் இது தான்: 'நம்மிரு நாடுகளுக்கும் இடையே புதியதொரு கடல் வழியினைக் காண்பதற்கு உங்கள் ஆட்சித் தலைவர் மேற்கொண்டுள்ள முயற்சிகளுக்கு எங்கள் முழு ஆதரவு உண்டு.''

இவ்வாறு செழியன் ஆற்றிய சொற்பொழிவினை உடனுக்குடன் சிப்பியோ மொழி பெயர்த்திடும் பொழுதே செனேட்டர் ஒருவர் குறுக்கிட்டார்.''ஏன் இப்போதுள்ள கடல் வழியால் நன்மை இல்லையா? அதனால் உங்கள் தமிழகத்திற்கு எந்த வகையில் குறைபாடு ஏற்பட்டுள்ளது என்பதை விளக்குவீர்களா?''

''இப்போதுள்ள வழியினால் எத்தனையோ இடையூறுகள் எங்கள் நாட்டுக்கும் ஏற்பட்டுள்ளன. அதனால் மரக்கலங்கள் செல்லவேண்டிய

தொலைவும் மிகுதி. காலமும் மிகுதி. தற்போது கலங்கள் யாவும், ரோமாபுரியிலிருந்து தென்கிழக்கேயுள்ள செங்கடல், ஏடன் நகர் - மற்றும் அரேபியா நாடுகளின் தென் கடற்கரை ஓரத்தினையெல்லாம் தொட்டுக்கொண்டு, சிந்துநதியின் முகத்துவாரத்தை அடைகின்றன; பிறகுதான் அங்கிருந்து நாவலந்தீவின் மேற்குக் கரையோரமாகவே வந்து எங்கள் தமிழகத் துறைமுகங்களைச் சேர்கின்றன. இடையிலே 'ஷீபா' நாட்டினைச் சார்ந்திட்ட 'சபீனியர்கள்' தரகர்களாக இருந்து கொண்டு தந்திடும் தொல்லைகளுக்கோ அளவே இல்லை. இரண்டு நாட்டுப் பொருள்களின் விலைமதிப்பையும் தங்கள் இச்சைப்படி யெல்லாம் அவர்கள் ஏற்றி விட்டு விடுகிறார்கள். இத்தகைய இடைத் தரகர்கள் கொழுப்பதற்கு இடம் அளிப்பது நம்முடைய வணிக வளர்ச்சிக்கு நல்லதே அல்ல.''

செழியன் இவ்வாறு ஆணித்தரமாகச் சாற்றிடவும், அகஸ்டஸ் பெருமகனாரும் தக்கவாறு நிலைமையைத் தெளிவுபடுத்தினார்.

''தமிழகத் தூதுவர் புகல்வது முற்றிலும் உண்மையே! அதனால்தான் புதிய கடல் வழியை - வணிக வழியை - எப்படியாவது கண்டுபிடித்து விடுவதற்கான வழி துறைகளை ஆராய்ந்திடுமாறு கப்பல் மாலுமியான 'ஹிப்பில்ஸ்' என்பவருக்கு ஆணையிட்டுள்ளேன். அராபியக் கடற்கரைப் பகுதிகளைத் தொடாத வண்ணம், ஏடனிலிருந்து நேராகச் சென்றிடக் கூடிய வழியினைக் கண்டுபிடிப்பதில் அவர் முனைந்து ஈடுபட்டுள்ளார். அவரது முயற்சி விரைவில் வெல்லும் என நம்புவோமாக!'''

''எத்தனையோ புதுப்புதுத் திட்டங்களால் என் இதயத்தைக் கவர்ந்து விட்ட தங்கள் ஆட்சித் தலைவர், இந்தப் புதிய கடல்வழித் திட்டத்தாலும் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டார். அவருக்குத் தமிழகத் தின் சார்பில் என் பணிவார்ந்த நன்றியறிதலைக் காணிக்கையாக்குகி றேன்! பெருமக்களே! தாங்கள் என்மீது பொழிந் திட்ட பாச மழைக்கு காட்டிய கனிவுக்கு - அளித்திட்ட மதிப்பிற்கு அள்ளிக் கொடுத்திட்ட ஆயிரமாயிரம் அற்புதப் பரிசுகளுக்கு - என் உளங்கனிந்த நன்றியினை மீண்டும் ஒருமுறை உங்களுக்கு உரிமையாக்கி அமர்கிறேன்.''

செழியனின் நன்றியுரை முடிந்ததும் 'ரோமாபுரிப் பாண்டியன் வாழ்க!' 'ரோமாபுரிப் பாண்டியன் வாழ்க!' என்னும் வாழ்த்தொலிகள் மறுபடியும் செனேட் மண்டபத்தினை அதிர அடித்தன.

அகஸ்டஸ் பெருமகனாரே துறைமுகத்திற்கு நேரே வந்து வழியனுப்பி வைத்திட செழியன், முத்துநகை, ஜூனோ முதலானோரைச் சுமந்திட்ட மரக்கலம், ரோமாபுரியை விட்டு தமிழகம் நோக்கிப் புறப்பட்டது.

இந்தப் பயணத்தின்போது, சிப்பியோ, உடன் வரவில்லை. பிணியுற்றுவிட்ட தன் அன்னையைப் பேணிடும் பொருட்டு அவன் தன் தாயகத்திலேயே தங்கிவிட்டான். அழகு மலிந்திட்ட ரோமாபுரி - ஆற்றல் மிகுந்திட்ட அகஸ்டஸ் சீசர் - இவர்களைப் பிரிவதிலே எத்துணைத் துயரம் உண்டாயிற்றோ அதற்குச் சற்றும் குறைந்திடாத வேதனையே இனிய நண்பன் சிப்பியோவைப் பிரிவதிலும் செழியனுக்கு ஏற்பட்டது. முன்பு தமிழகத்திலிருந்து ரோமாபுரிக்கு வந்திட்ட பொழுது அந்தக் கப்பற் பயணத்தைக் கலகலப்பானதாக - களிப்பு நிறைந்ததாக ஆக்கிய வன் சிப்பியோவே அல்லவா?

இப்போதோ, ரோமாபுரியைப் பிரிந்துவரும் துயரத்தோடு பெருவழுதிப் பாண்டியர் என்ன ஆனாரோ என்ற துக்கமும் செழியனின் நெஞ்சுக் கூட்டை நெரித்துப் பிசைந்திட்டது.

இந்த வேளையில் அவனைக் கவலை இருளினின்றும் கரையேற்றி மகிழ்ச்சி வெளிச்சத்திற்கு இட்டுச்செல்ல வேண்டியது யார்? ஜூனோதான் அல்லவா?

ஆனால் அவளோ...?

கடலிலே மரக்கலம் மிதக்கத் தொடங்கி நெடுநேரங்கடந்திட்ட போதிலும் ஜூனோ அவன் கண்ணிலேயே தென்படவில்லை. அவளும் முத்துநகையும் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட தனி அறையில் என்னதான் இரகசியங்களைப் பரிமாறிக் கொள்வார்களோ? ஏன்தான் அப்படிக் ‘கலீர் கலீர்’ என்று சிரிப்பலைகள் எழுப்புவார்களோ?

இரண்டொரு தடவை முத்துநகையாவது அவன் அறைக்கு வந்து எட்டிப் பார்த்து ‘‘ஏதேனும் கொண்டு வரச் சொல்ல வேண்டுமா அண்ணா?’’ என்று கேட்டுவிட்டுச் சென்றாள்.

ஜூனோவோ அம்மாதிரி வந்திடவும் இல்லை. அவன் எப்படி இருக்கிறான் என்று பார்த்திடவும் இல்லை.

'அவள் எங்கே இருக்கிறாள்? என்ன செய்கிறாள்?' என்று முத்துநகையை உசாவிடவும் செழியனுக்குத் தயக்கமாக இருந்தது. பிறகு அவள் ஏதேனும் கேலி செய்திட மாட்டாளா?

பொழுது போகாமல் தனிமையில் புழுங்கிக் கொண்டிருந்த செழியன், கதிரவன் எப்போது மேற்கு வானிலே சரிந்திடுவான் என்று காத்திருந் தான். வெயிலின் வெம்மை நன்றாகத் தணிந்துவிட்டது என்று தெரிந்த தும், மரக்கலத்தின் மேல்தளத்திற்குச் சென்றிட்டான்.

சிறிது நேரத்தில் முத்துநகையும் வந்து சேர்ந்தாள்.

''என்ன அண்ணா உங்கள் முகம் ஒரு மாதிரியாக இருக்கிறது? உடம்புக்கு ஏதாவது முடியவில்லையா?'' - ஏளனம் இழைந்திடும் மெல் லிய முறுவலுடன் கேட்டாள் அவள்.

''உடம்புக்கு ஒன்றும் இல்லை; நன்றாகத்தான் இருக்கிறேன்''

''அப்படியானால் உள்ளந்தான் சரியாக இல்லை என்கிறீர்களா?''

''அது போகட்டும்; ஏதோ இரகசியங்களைச் சொல்லப் போவதாக நேற்று செனேட் மண்டபத்தில் என் வாய்க்குப் பூட்டுப் போட்டாயே! இந்த நேரம்வரை அதைப்பற்றி வாயையே திறக்காமல் அந்த ரோமாபுரிக்காரியோடேயே அரட்டையடித்துக் கொண்டிருக்கிறாயே! இப்போதாவது அந்த இரகசியங்களைச் சொல்லலாமே?''

''ஓ! தாராளமாகச் சொல்லலாம்; அதற்காகத்தானே நான் இங்கே மேல்தளத்திற்கு வந்திருக்கிறேன். ஆனால் என்மீது உங்களுக்கு நிரம்பக் கோபம் போல் இருக்கிறது!''

''உன் மீது சினம்கொண்டு இனிமேல் எனக்கு என்ன ஆகப் போகிறது? எப்படியோ அகஸ்டஸ் அவர்களுக்கு உடந்தையாக இருந்து ஜூனோவை என் தலையிலே கட்டி வைத்துவிட்டாய்! ஏன்தான் அப்படிச் செய்தாய் என்று இன்னமும் எனக்குப் புரியவில்லை.''

''ஐயோ பாவம்! கீழ்த்தளத்திற்குச் சென்றிடும் வாசல் பக்கத்தைத் திரும்பிப் பார்த்தீர்களானால் எல்லாம் புரிந்து விட்டுப் போகிறது!'' என்று 'களுக்' கென்று சிரித்திட்டாள் முத்துநகை.

செழியன் உடனே திரும்பி நோக்கினான்.

அங்கே தலை சாய்த்து நின்றிட்ட தளிர்க்கொடியைக் கண்டதுமோ...

பூவரசங்காயைச் சுழற்றி விட்டமாதிரி இந்தப் பூமிப் பந்தே சுற்றுவதுபோல் இருந்தது செழியனுக்கு!

''அவள் யார், தாமரைதானா... இல்லை?'' தன் அருகில் நின்றிருக்கும் முத்துநகையிடம் பரபரப்புடன் வினவினான் தமிழகத் தூதுவன்.

''சரிதான் போங்கள்! அதற்குள்ளே அவளுடைய முகத்தையே மறந்து விட்டீர்களா? இதுதான் நீங்கள் தாமரையிடம் கொண்டிருப்பதாகக் கூறிய ஆறாக்காதலுக்கு அழகா?... அர்த்தமா?''

''நீ என்ன சொல்கிறாய் முத்துநகை? நனவா கனவா என்று என்னால் நம்பவே முடியவில்லையே! அசல் ஜூனோ மாதிரியே இருக்கிறாளே!''

''ஜூனோ மாதிரி என்ன? அசல் ஜூனோவேதான்?''

''என்ன புதிர் போடுகிறாய்? தாமரையைப் போய் ஜூனோ என்கிறாயே?''

''நீங்கள் தான் ஜூனோவைப் போய்த் தாமரை என்கிறீர்கள்?'' -கலகலவென்று கேலியாக நகைத்திட்டாள் முத்துநகை!

அவள் இப்படி விடுகதை போட்டுச் செழியனைத் திணற அடிப்பதைக் கண்டு பொறுக்கவில்லை போலும் புதிதாக வந்து நின்றிட்ட அந்தப் பூவைக்கு.

''ஏண்டி இன்னும் அவரைப் போட்டு வாட்டி எடுக்கிறாய்? விரைவாகத்தான் உண்மைகளையெல்லாம் விடுவித்துத் தொலையேன்!'' என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள் அவள்.

''அடி, அம்மாடி! அதற்குள்ளே அவர் கடுகளவு வாடுவது கூட உனக்கு மலையளவாக வாட்டம் தருகிறதா? அப்படியானால் நீ நடித்திருக்கும் நடிப்பையெல்லாம் நீயே உடைத்துக் கூறு; அப்போதுதான் அவருக்கும் இனிக்கும்; இனிமேல் நான் இங்கே இருந்திடவும் கூடாது!'' என்று மொழிந்தவாறே கீழ்த்தளத்தை நோக்கி முத்துநகை பிடித்தாளே ஓட்டம்.

தனித்துவிடப்பட்ட அந்த இளம் காதலர்களுக்கு முதலில் எப்படி, யார் பேச்சினைத் துவக்குவது என்றே தெரிந்திடவில்லை.

வேட்கை தரும் வெப்பத்தால், விம்முகின்ற நெஞ்சத்தால் அவர்கள், ஒருவரையொருவர் விழிகளாலேயே விழுங்கிக் கொண்டனர். உணர்வுகளாலேயே தழுவிக் கொண்டனர்.

தன்னை விட்டுப் பறந்து போய் விட்டதாகக் கருதப்பட்ட - கிட்டாதென்று எண்ணப்பட்ட ஆசைக்கிளி இப்படித் திடீரென்று திரும்பி வந்து தன் தோளிலேயே தொற்றிடக்கூடும் என்று செழியனால் எண்ணிப் பார்த்திடவே முடியவில்லை.

இந்தத் தாமரையென்னும் தளிர்க்கொடிக்காக - தமிழ்ச் சிட்டுக்காக - அவன் எத்தனை எத்தனை இரவுகள் இமைக்கூடுகளை மூடிட முடியாமல் உறக்கமே இன்றித் தவித்திருக்கிறான், ஏங்கி ஏங்கிப்

பொருமியிருக்கிறான் - புலம்பியிருக்கிறான்! ஏன் இந்த ஜூனோவையே எப்படி எப்படியெல்லாம் புறக்கணித்திருக்கிறான்.

ஆனால் அதே ஜூனோவாக இந்தத் தாமரைதான் நடித்துக் கொண்டிருந்தாள் என்பதனை இன்னும் அவனால் நம்பிடவே முடியவில்லை. நனவா கனவா என்னும் திகைப்பும் அவனைவிட்டு முழுமையாக நழுவிடவும் இல்லை.

பூம்புகார் அரண்மனையை விட்டுத் தப்பிய இந்தப் பூங்கொடி இந்த ரோமாபுரிக்கு எங்ஙனம் வர முடிந்தது? இங்கே உள்ளவர்களுடன் எவ்வாறு இத்துணை ஈடுபாட்டுடன் இரண்டறக் கலந்து பழகிட முடிந்தது போன்ற ஐயப்பாடுகளும் அவனுள் எழாமல் இல்லை.

தொலைவில் நின்றவாறே தன் பார்வையினால் தாமரையின் சந்தனமுக எழிலைப் பருகித் திளைத்திட்ட செழியன் தன் வலக்கரத்தினை மேலே தூக்கி ஆள் காட்டி விரலினால் தன்னருகே வந்திடுமாறு அவளுக்குச் சைகை காட்டினான்.

புன்னகையை வழிய விட்டவாறே அவளும் அவனை நோக்கி அன்னம்போல் அசைந்து வந்திட்டாள். அவள் அருகினில் நெருங்கியதும் -

''நீ எவ்வளவு பொல்லாத கள்ளி! என்னை எப்படியெல்லாம் ஏமாற்றிவிட்டாய் இந்த ரோமாபுரியிலே'' என்று அவளது மிருதுவான காது மடலைப் பற்றித் திருகினான் செழியன்.

''ஐயோ, வலிக்கிறது! விடுங்கள்!'' என்று அவனுடைய விரல்களை விடுவித்துத் தன் கைகளில் ஏந்திக் கொண்டே அவள், ''நீங்கள் மட்டும் என்னை ஏமாற்றவில்லையா?'' என்று கொஞ்சலாகக் கேட்டாள்.

''நான் எங்கே உன்னை ஏமாற்றினேன்?''

''ஆமாம், ஆமாம். இப்போது இப்படித்தான் சொல்வீர்கள்! உங்களுக்குத்தான் எல்லாமே மறந்து போயிருக்குமே! ஆனால் பழைய நிகழ்ச்சிகளை - அப்போது நீங்கள் அளித்திட்ட வாக்குறுதிகளை - என்னால் இவ்வளவு விரைவில் மறந்திட முடியுமா?''

''அப்படியென்ன நான் உனக்கு வாக்குறுதிகளை அளித்துவிட்டு அவற்றை நிறைவேற்றாமல் தவறிவிட்டேன்?''

''ஏன் தவறிடவில்லை? கரிகாலரைக் கொல்ல முயன்று புகார் அரண்மனயிலே சாவினைத் தழுவிவிட்ட என் அண்ணியாருடைய, ஏன் உங்கள் அக்காளுடைய சவத்தினைக் காணப் புறப்பட்டோமே நினைவிருக்கிறதா? அந்தப் பயணத்திற்கு முன்னர் இருட் சிறையிலே கிடந்திட்ட உங்களைச் சந்திக்க வந்தேனே. அப்போது என்ன சொன்னீர்கள்? 'நீ பூம்புகாருக்குப் புறப்படும்போது உன்னோடு நானும் வருகிறேன்.

உன்னுடைய பாதுகாப்புப் படை வீரனாக வருகிறேன். உன்னை ஏமாற்ற மாட்டேன்! உன்னுடனேயே வந்து உன்னுடனேயே திரும்புகிறேன்!' என்றெல்லாம் உறுதியளித்தீர்களே! ஆனால் பிறகு எப்படி நடந்து கொண்டீர்கள்? என்னைவிட்டு அந்தப் பக்கம் இந்தப் பக்கம் அசைந்திடாத பாதுகாப்பு வீரராகத்தான் இறுதிவரை என் அருகிலேயே இருந்தீர்களா? என் கண்ணிலே மண்ணைத் தூவிவிட்டுக் கரிகாலரைக் காப்பாற்றுவதிலேயே நீங்கள் குறியாகிச் செயல்படவில்லையா?'' தாமரை இவ்வாறு மடக்கியதும்,

''ஓ, அதைச் சொல்கிறாயா?'' என்று கூறுவதைத் தவிர வேறு எந்த மறுப்பினையும் எழுப்பிட இயலாமல் அசடு வழிந்திடச் சிரித்திட்டான் செழியன்.

'நான் மட்டும் அவ்வாறு மாறுவேடம் பூண்டு இருங்கோவேளின் சூதுவலையினைக் கிழித்தெறியாமல் போயிருந்தால் இந்நேரம் கரிகாலரின் வாழ்வும் சோழமண்டலத்தின் ஆட்சியும் எப்படி எப்படியோ திசைமாறியிருக்காதா?' என்று எண்ணிக் கொண்டான் அவன்.

...ம் அது போகட்டும். நீ எப்படி இந்த ரோமாபுரிக்கு வந்து சேர்ந் தாய்? அதைச் சொல்! கேட்போம்'' என்றான் சிந்தனை வலையினின்றும் மீண்டவனாக.

''அதை ஏன் கேட்கிறீர்கள்? அது பெரிய கதை.இங்கு வந்து சேர்வதற் குள் நான் பட்டபாடுகள் கொஞ்ச நஞ்சமல்ல. முதலில் புகார் அரண்மனை யிலிருந்து நான் எப்படித் தப்பிச் சென்றேன் தெரியுமா?''

''எப்படி''

''என்னுடைய அண்ணன் இருங்கோவேளின் ஆட்கள்தான் என்னை அப்படித் தந்திரமாகக் கடத்திச் சென்றார்கள்.''

''அவர்கள் ஏன் உன்னைக் கடத்திச் சென்றிட வேண்டும்?''

''என்னை வீராங்கனையாக்கிக் கரிகாலரோடு பொருதச் செய்து, மீண்டும் வேளிர்குல அரசினை நிறுவிட வேண்டும் என்பதற்காகத்தான். ஆனால் என்னுடைய உள்ளம் அதற்கு இடம் தந்திடவில்லை. கரிகால ரைப் போன்ற கருணை, பெருந்தன்மை, பேராற்றல் படைத்த பேரரசர்கள் தாம் நம்முடைய தமிழ் மண்ணுக்கு உருவான திட்டங்களை வழங்கி உயர்வான வாழ்க்கை வளத்தினைப் பெருக்கிட முடியும் என்று எனக்கு உறுதியாகப்பட்டது. எனவே எங்களுடைய வேளிர்குல ஆட்களின் சதித்திட்டங்களுக்கு நான் இசைந்திட மறுத்துவிட்டேன். அதனால் அவர்களுக்கு என் மீது அடங்காத ஆத்திரம். ஆனால் அவர்கள் தங்கள்

ஆத்திரத்தின் விளைவாக என்னை ஏதும் செய்வதற்குள்ளேயே நான் அவர்களுடைய பிடிப்பிலிருந்து தப்பியோடி விட்டேன். சோழ மண்டலத்திலேயே நடமாடினால் என் தலைக்கு என்றைக்குமே ஆபத்துதான் என்று தோன்றியது. எனவே சில உழவர்பெருங்குடி மக்கள் உறுதுணையோடு பாண்டிய நாட்டுக்கு ஓட்டம் பிடித்தேன். அப்போதுதான் பசுமலையில் உள்ள 'அஞ்சினான் புகலிட'த்தில் நான் தங்கிட நேர்ந்தது. எனக்கு அடைக்கலம் அளிக்கப்பட்டதாலேயே அங்கே கலவரம் விளைந்திடும் போல் செய்தி எட்டியதால் பின்னர் அங்கிருந்தும் வெளியேறினேன்.

''ஓர் அறச்சாலையின் திண்ணையில் ஒருநாள் இரவு நான் 'அறிதுயிலில்' புரண்டிட்டபொழுது பாண்டியநாட்டு இளவரசர் இளம்பெருவழுதி என்மீது அளவற்ற காதல் கொண்டிருப்பதாகவும், என்னைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காகத் தீவிரமாக அலைகிறார் என்றும் இரு மறவர்கள் உரையாடியது என் செவியிலே விழுந்தது. அதைக் கேட்டதும் எனக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது!''

''அப்படியானால் இளவரசரை உண்மையிலேயே நீ காதலிக்கவில்லையா?''

''நான் எப்போது காதலித்தேன்? ஓர் ஆடவருடன் ஒரு பெண் பாசத்தோடு பழகினாலே அது காதலாகி விடுமா? என்னுடைய கண்ணியமான நட்புறவை அவர் தவறாக எடுத்துக் கொண்டு தடுமாறினால் அதற்கு நான் எப்படிப் பொறுப்பாளி ஆகிட முடியும்? மேலும் நான் காதலித்ததெல்லாம் ஒரே ஒருவரைத்தான்...

''அவர் யார் என்று தெரிந்து கொள்ளலாமா?'' - கண்ணைச் சிமிட்டிய வண்ணம் குறும்பு நெளிந்திடக் கேட்டான் செழியன்.

''ஊம்.. அவர் யார் என்று இனிமேல் தான் என் வாயினால் வேறே சொல்ல வேண்டுமாக்கும்!'' என்று தன் மோவாயைத் தோளிலே இடித்துக் கொண்டு, முறுவலித்த தாமரை மேலும் தொடர்ந்தாள்.

''அப்புறம் கேளுங்கள். இந்த இளவரசரின் வேட்டையிலிருந்து இனி எப்படித் தப்பிக்கப் போகிறோம் என்னும் பெருந்துயரத்தோடு அலைந்திட்ட நான் எப்படியோ மேற்குக் கடற்கரையிலுள்ள முசிறித் துறைமுகப் பட்டினத்திற்கு வந்து சேர்ந்தேன். அங்கே பசிக்களைப்பினால் மயக்கமுற்று விழுந்துவிட்ட என்னை ஒரு யவனக் கிழவர் வந்து காப்பாற்றினார். அவர் முன்பே எனக்கு அறிமுகமானவர்தான். என்னுடைய அண்ணனிடம் நெருங்கிய நட்புறவு கொண்டிருந்தவரே அவர். எங்கள் மரமாளிகைக்கு அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்த அவரிடம்தான் இத்தாலி மொழியினைக் கொஞ்சம் கொஞ்சமாக நான் கற்றுக் கொண்

டது. என்னுடைய அவல நிலையினைக் கேள்வியுற்ற அவர், 'சிறிது காலம் என்னுடன் ரோமாபுரியில் வந்து தங்கிவிடேன்.உன்னுடைய மன நிலை சரியானவுடன், தமிழகத்திலும் அரசியல் கொந்தளிப்புகள் அடங்கியவுடன் நீ உன் தாயகத்திற்குத் திரும்பி வரலாம்'- என்றார். அவருடைய வற்புறுத்தலினால்தான் நான் ரோமாபுரிக்கு வந்து சேர்ந்தேன்.''

''ஆமாம், இங்கே வந்ததும் ஜூனோவாக எப்படி மாறினாய்?''

''ம் அதுவும் ஒரு சுவையான கதைதான்! யவனக் கிழவர் இல்லத்திற்கு அந்த உண்மையான ஜூனோ ஒரு முறை வந்தாள். முதற் சந்திப்பிலேயே நாங்கள் இணை பிரியாத தோழிகளாகிவிட்டோம். எங்களுடைய உருவ ஒற்றுமையோ, எங்களை இரட்டைப் பிறவிகள் என்றே சொல்லும்படியாக அமைந்துவிட்டது! அந்தச் சமயம் அகஸ்டஸ் பெருமகனாருக்குத் தம்முடைய ஆட்சிப்பொறுப்பினுக்கு மேசனஸ் போன்ற நயவஞ்சகர்களால் இடையூறு உண்டாகலாமோ என்கிற அச்சம் முளைவிட்டுக் கொண்டிருந்த நேரம். மேசனஸ் என்பவர் இலக்கியப் புலமையில் ஆர்வங்கொண்டவரே தவிர, ஆட்சி நடத்துவதற்குத் தேவையான கூர்மை மிகுந்த தொலைநோக்கோ,அலுக்காமல் உழைக்கக் கூடிய சுறுசுறுப்போ, புதிய புதிய திட்டங்களை உருவாக்கிடும் சுய சிந்தனையோ, அந்தத் திட்டங்களை விரைந்து நிறைவேற்றிடும் செயலாற்றலோ அவருக்குக் கிஞ்சித்தும் கிடையாது. அகஸ்டஸ் அவர்கள் வெளிநாடுகளில் எதிரிகளோடு பொருதிக்கொண்டிருந்த வேளையில் சிறிது காலம் ரோமாபுரி நகரின் நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டார் என்பதைத் தவிர, வேறு பெருமிதப்படத்தக்க அளவுக்கு ஆட்சி அனுபவம் உண்டு என்றும் கூறிட முடியாது. ஆனாலும் அவருக்கும் ஆட்சித் தலைவராக ஆகிட வேண்டும் என்று அடக்கவொண்ணாத பேராசை. அதனால்தான் அகஸ்டசைத் தந்திரமாக வீழ்த்துவதில் தம் சிந்தனையைச் செலவிட முனைந்திட்டார். அவருடைய நடவடிக்கைகளை உளவு அறிவதற்குத் தகுதியான - நம்பிக்கைக்கு உரிய ஆட்கள் சிலர் அகஸ்டசுக்கு அப்போது தேவைப்பட்டார்கள். மற்றவர்களைவிட ஜூனோவை அந்த ஒற்றுவேலையில் ஈடுபடுத்துவது நல்லதாயிற்றே என்று அவர் எண்ணிக் கொண்டிருந்திருக்கிறார். அந்த வேளையில் தான் ஜூனோ ஒரு நாள் என்னை அவரிடம் அறிமுகப்படுத்தி வைத்தாள். என்னைக் கண்டதுமே எங்கள் இருவருடைய உருவ ஒற்றுமையையும் பயன்படுத்தி உண்மையான ஜூனோவை நம்முடைய முத்துநகையைப் போல ஆணாக உலவவிடத் திட்டமிட்டு விட்டார்.''

''நீ சொல்வதைக் கேட்கக் கேட்க எனக்கு ஒரே வியப்பாக இருக்கிறதே! ஆமாம். என்னை முதன்முதலில் ரோமாபுரியில் வரவேற்றுக் கை குலுக்கியது நீதானா? அந்த உண்மையான ஜூனோவா?''

''அவள்தான் உங்களை வரவேற்றவள். பெரும்பாலும் செனேட் கூட்டங்களுக்கும் அரசியல் விழாக்களுக்கும் அவள்தான் வருவாள்; நான் வரமாட்டேன். அதேபோல் உங்களுடன் தனித்து இருக்கக்கூடிய சூழ்நிலைகளில் எல்லாம் நான்தான் வந்திருக்கிறேன். அவள் வந்ததில்லை!''

''ஆமாம், மேசனசின் குடும்பத்தைப் பற்றிய சில விவரங்களைக் கேட்டபோது நீ என்மீது எரிந்து விழுந்தது கூட இதனால்தானா?''

''பின்னே எரிந்து விழாமல் அப்போது நான் என்ன செய்திடமுடியும்? உண்மையான ஜூனோவானால் எல்லா விவரங்களையும் அறிந்து வைத்திருப்பாள்!''

''தமிழகச் சமையலை கிளியோபாத்ராவிடம் இருந்த போதே ஒரு யவனக் கிழவர் மூலம் கற்றுக் கொண்டதாகக் கூறியதெல்லாம்கூடப் பொய்தானே?''

''முழுக்க முழுக்கப் பொய்தான்! அதிலே வேறு சந்தேகமா!'' என்று சிரித்திட்டாள் தாமரை.

''அது சரி, அந்த ஆடை அலங்காரங்களையெல்லாம் எப்படி அவ்வளவு கச்சிதமாக உன்னால் செய்துகொள்ள முடிந்தது? அதுவும் செம்பட்டையான சுருட்டை முடியை எப்படி உன்னால் வைத்துக் கொள்ள முடிந்தது?''

''இந்த ஒப்பனைக் கலையெல்லாம் தமிழகப் பெண்டிருக்கு பெரிய கடினமான காரியமா? ஆனால் என்னுடைய நீண்ட கூந்தலைக் கத்தரித்திட நேர்ந்ததே என்பதுதான் எனக்கு மிகுந்த வருத்தம் அளித்திட்டது. என்ன செய்வது? அகஸ்டஸ் பெருமகனாருக்குச் செய்திடும் ஒரு தியாகமாக இருக்கட்டுமே என்றுதான் அதற்கும் துணிந்திட்டேன்''

''ஆமாம், இப்போது நீ ஜூனோ வடிவத்திலேயே தமிழகத்திற்குத் திரும்பிவிட்டாயே. இனிமேல் அந்த உண்மையான ஜூனோ எப்படிப் பெண்ணுருவிலே நடமாட முடியும்? எந்தக் காலத்திற்கும் அவள் இனி ஆணுடையில் தானே இருந்தாக வேண்டும்?''

''அது ஒன்றும் தேவையில்லை. ரோமாபுரிப் பெண்கள் மணவிலக்குச் செய்து கொள்வதுதான் வாடிக்கையான காரியமாயிற்றே? ஆகவே, சிறிது காலம் சென்றதும் தமிழகத்துத் தூதுவரைப் பிடிக்காமல் மணவிலக்குச் செய்து கொண்டு திரும்பிவிட்டதாக அவள் அங்கே மீண்டும் தலையெடுத்துவிடுவாள்!'' என்று சிரித்திட்டாள் தாமரை.

''நீ சொல்வதைப் பார்த்தால் ரோமாபுரியிலே எதையுமே எளிதாக எடுத்துக் கொண்டு நினைத்ததை முடித்து விடுவார்கள் போல்

இருக்கிறதே! அப்பப்ப! பொல்லாத மூளை!'' என்று தானும் நகைத்தவாறே தன் வியப்பினை வெளியிட்டான்.

''ஆமாம்; இன்னும் உங்கள் கதை முடிந்திடவில்லையா?'' என்று முத்துநகை குரல் கொடுத்துக் கொண்டே வராமல் போயிருந்தால் , இருட்டிப் போனது கூடத் தெரியாமல் அந்த இளங்காதலர்கள் இன்னும் எத்தனை நாழிகைதான் தங்கள் இதயங்களை பரிமாறிக் கொண்டே இருந்திருப்பார்களோ!

கடற்பயணத்திலேயே இவ்வாறு நெடுநாட்கள் கழிகின்றனவே என்னும் மாளாக் கவலையில் ஆழ்ந்திட்டான் நம் மறத்தமிழன் - ரோமாபுரிப் பாண்டியன்.

'தமிழ்த் தாயைப் பேணிக் காத்திடும் தலைமகனை, பாண்டியகுலக் கோமகனை தந்தையினும் மேலாகத் தன்மீது பாசமழையினைப் பொழிந்திடும் பெருவழுதிப்பாண்டியனை 'எப்போது சந்தித்திடு வோமோ, எப்போது சந்தித்திடுவோமோ?' என்று அவனது உள்ளம் துடியாய்த் துடித்திட்டது.

எனினும் அந்த வாட்டத்தினை மறக்கடிக்கச் செய்து அவ்வப்போது அவனை உற்சாகத்தில் - கிளர்ச்சியூட்டும் உவகைப் பெருக்கில் - ஆழ்த்தி வந்தது தாமரையின் கனிமுகமே!

ஆம்; இரவிலே முத்துநகையோடு உறங்கிய நேரம் தவிர, பகலிலே அவள் பெரும்பாலும் செழியனின் அருகினில் அமர்ந்தே பொழுதினைக் கழித்திட்டாள். ரோமாபுரியில் நிகழ்ந்திட்ட விந்தைகளையும், விளை யாட்டுகளையும், சதிகளையும், சண்டைகளையும், காட்சிகளை யும், ஆட்சி நெறிகளையும் அவர்கள் ஒவ்வொன்றாக நினைவு கூர்ந்து உரை யாடித் திளைத்திட்டனர். வரம்பினை மீறிடாத வகையினில் சிற்சில சமயம் ஓரங்கச் சிறு நாடகங்களையும் நடத்திக் களித்திட்டனர் யாரும் அறிந்திடாமல்!

காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்ட அந்த இன்பப் புனலுக்குக் குறுக்கே மாமியார் வேலையை செய்திடாமல் முத்துநகை யும் கண்டும் காணாதவளாக ஒதுங்கிக் கொண்டாள்.

ஆனால், ஒரு நாள் காலை -

தாமரையின் தாழம்பூ மேனியெழிலையே செழியன் தன் விழிகளால் பருகிக் கொண்டிருக்கும் வேளை.

''ஆமாம், அகஸ்டஸ் அவர்கள் அளித்திட்ட எத்தனையோ பரிசு களில் ஒன்றை மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தால் போதுமா? மற்ற பொருள்களுக்கும் தங்களை யாரும் பார்த்திடவில்லையே என்கிற ஏக்கம் இராதா?'' என்று கேலியாக நகைத்திட்டவாறே, தன் கையிலே ஓர்

அழகான நீண்ட பெரிய பேழையுடன் அவனுடைய அறையினுள் நுழைந்திட்டாள் முத்துநகை.

''நீ சொல்வது சரிதான் முத்துநகை! எனக்கும் அவற்றையெல்லாம் கண்டு களித்திட வேண்டும் என்று ஆசைதான். ஆனால் உன்னுடைய வாயாடித் தோழி அதற்கு இடம் தந்தால்தானே?'' என்று கண்களைச் சிமிட்டினான் செழியன்.

''பார்த்தாயா, பார்த்தாயா? எவ்வளவு அபாண்டமான பழியை என்மீது போடுகிறார்? நானா அவற்றையெல்லாம் காணவேண்டாம் என்று இவருடைய கண்களைக் கட்டிப் போட்டேன்? இவர்தான், 'இரு... இரு... போகாதே! நீ பக்கத்தில் இல்லாவிட்டால் பொழுதே போக மாட்டேன் என்கிறது' என்றெல்லாம் பல்லைக் காட்டிப் பசப்பிவிட்டு இப்போது என்னை வாயாடி என்கிறார்;... வாயாடி!'' செல்லமாகச் சிணுங்கியவாறே சரியாகச் சூடு கொடுத்திட்டாள் தாமரை.

அவளது சிணுங்கலைக் கண்டு மேலும் சிரித்திட்ட முத்துநகை, குரலைச் சற்று இழுத்தாற்போல் இப்படிக் கூறினாள்;

''செழியன் அண்ணா! உங்கள் மீது எனக்கு இப்போது மிகுந்த இரக்கம் ஏற்படுகிறது!''

''ஏனோ?''

''அவளை வாயாடி என்று சாதாரணமாகச் சொல்லப் போய், நீங்களே இப்பொழுது வாயாடிப் பட்டம் வாங்கிக் கட்டிக் கொண்டீர்களே, அதை நினைத்துதான்! அதனாலேதான் பெண்களிடம் பேசும்பொழுது எந்த வார்த்தையையுமே அளந்து பேசிடவேண்டும், இல்லையோ...?''

''போதும், தங்கச்சி! போதும். இனிமேல் உன் தோழியோடு பேசும்பொழுது, படி - மரக்கால் எல்லாவற்றையுமே பக்கத்திலே வைத்துக் கொண்டு நன்றாக அளந்து பேசுகிறேன். இப்போது அந்தப் பேழையை இப்படிக் கொண்டுவந்து திறந்து காட்டுகிறாயா? அகஸ்டஸ் என்னென்ன பொருள்களையெல்லாம் வழங்கியுள்ளார் என்று நாம் நம் கண்ணாலே அளந்து பார்ப்போம்!'' - செழியன் இவ்வாறு செப்பிடவும் அவன் அமர்ந்திருந்த அகலமான கட்டில் மெத்தையிலேயே பேழையினைக் கொணர்ந்து வைத்திட்டாள் முத்துநகை, அதனைத் திறந்திட்டவாறே.

''நீ ஏன் எட்டியே நிற்கிறாய் தாமரை? நீயும் அருகில் வந்து பார். என்னென்ன விந்தையான பரிசுகளையெல்லாம் அகஸ்டஸ் அள்ளிக் கொடுத்திருக்கிறார் என்று உனக்கும் தெரிந்திட வேண்டாமா?'' என்று அழைத்திட்டாள்.

''எனக்கொன்றும் அவற்றைப் பற்றித் தெரிந்திடத் தேவையில்லை'' - அலட்சியமாகப் பகர்ந்திட்டாள் தாமரை.

''என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்!''

''அந்தப் பொருள்களையெல்லாம் இந்தப் பேழையில் அடுக்கி வைத்தவளே நான்தானே?''

''அப்படியா? ஆமாம்; நான் குறிப்பிட்டேனே அந்தப் பொருளும்'' என்று முத்துநகை கேட்டு முடிப்பதற்குள் திறக்கப்பட்டுவிட்ட பேழையினுள் இருந்தவாறே 'பளிச்'சென்று மின்னி மூவருடைய கண்களையும் ஈர்த்துவிட்டது அது!

அதனைக் கண்டதுமே ''ஆமாம், இது எப்படி அகஸ்டசுக்குக் கிட்டியது?'' - என்று துள்ளிக் குதித்து எழுந்து நின்றுவிட்டான் செழியன்.

''அது மிகப் பெரிய கதை, அண்ணா! மிகப்பெரிய கதை! இதிலே வேடிக்கை என்ன தெரியுமா! ரோமாபுரிக்குச் சென்றிடத்தக்க தமிழகத் தூதுவர் மூலமாகவாவது இந்தப் பொருளினை அடைந்திட மாட்டோமா என்று கரிகால் சோழர் எத்துணையோ ஏக்கம் ஏங்கியிருக்கிறார். ஆனால், பல்வேறு சூழ்நிலைகளின் நெருக்கடியினாலும், யார் தூதுவராகச் செல்வாரோ என்று கடைசிவரை தெரியாததாலும் அவரால் உங்களிடம் இதுபற்றி நேரடியாகக் கலந்துரையாடிட முடியாமற் போய் விட்டது. உங்களை அழைத்து வருவதற்கு என்னை அனுப்பவதென்று பெருவழுதிப் பாண்டியர் முடிவு செய்த பின்னரே கரிகாலர் இதயத்தை அரித்துக் கொண்டிருந்த ஏக்கத்தைப் பற்றியும், அதனை நீக்கிடுவதற்காக நான் நிறைவேற்றிட வேண்டிய பொறுப்பினைப் பற்றியும் என் தந்தையார் மூலம் நான் அறிந்துகொண்டேன். எப்படியோ என் எண்ணம் ஈடேறிவிட்டது.'' - மகிழ்ச்சியிலே நீராடியவளாகப் பெருமூச் செறிந்திட்டாள் முத்துநகை.

செழியனுக்கு வியப்பினையும், முத்துநகைக்குப் பெருமிதத்தையும் அளித்திட்ட அந்த அற்புதமான பொருள் தான் என்ன? அதன் பின்னே ஒளிந்திருந்த ஒரு வரலாறு தழுவிய கதைதான் என்ன?

கரிகாலன் காலத்திலேயே தமிழக மாந்தர்க்குக் குறிப்பாகச் சோழமண்டலத்தைச் சார்ந்தவருக்கு தாங்கவொண்ணாத தலையிடியைத் தந்தவண்ணமே பாய்ந்திருக்கிறது காவிரியாறு!

ஆனால் அதனுடைய முரட்டுத்தனமான வெள்ளப் பெருக்கிற்கு முதல் பலி ஆகிக் கொண்டிருந்தவர்கள் குடகு நாட்டினைச் சார்ந்திட்ட பெருமக்களே! அங்கே 'பாகமண்டலா' என்னும் இடத்தருகேயுள்ள ஒரு நெடிய குன்றிலே இருக்கின்ற நீண்ட சுனையொன்றினைத் தேர்ந்தெடுத்து,

'இங்கேதான் காவிரிக் கன்னி பிறந்தாள்' என்று கூறி அதற்கு 'தலைக் காவிரி' என்றும் பெயர் சூட்டி இன்று பேசி மகிழ்ந்திட்டாலும், பொன்னி கருக்கொண்டது அந்த மலைச் சுனையிலே மட்டுமா? இல்லை, குடகு நாட்டிலுள்ள 'மெர்க்காரா' - பாகமண்டலா முதலான எல்லாப் பகுதிகளிலுமே பசுமையான புல்வெளிகளையும் உயரமான காற்றாடி மரங்களையும் போர்வையாகப் போர்த்துக் கொண்டு, விண்ணைத் தொட்டிடும் அளவுக்கு நெடுநெடுவென்று ஓங்கிநின்றிடும் குன்றுகளுக்கும், அவற்றைத் தழுவிக் கொஞ்சிடும் மேக நங்கைக்கும் பிறந்திடும் மழைக் குழந்தையே பொன்னிச் செல்வி!

அந்த நாளில் இந்தக் காவிரி, யாருக்குமே அடங்கிடாத ஆண்மை மிகுந்த பெண்ணாக - ஏன், மூக்கணாங் கயிறு போடப்படாத முரட்டுக் காளையாகவே - தறிகெட்டுத் திரிந்திருக்கிறது.

அதனுடைய கட்டுக்கடங்காத போக்கினால் குடகையும் அதனை ஒட்டியுள்ள பகுதிகளையும் சார்ந்திட்ட மக்கள் பட்டபாடுகள் கொஞ்சநஞ்சமல்ல. கடைசியில் அக்குறுநில மன்னர்களில் ஒருவன், அதற்கு ஏதேனும் ஒரு வழி கண்டு துணை புரிந்திடுமாறு சோழப் பேரரசரை அணுகியிருக்கிறான்.

கரிகாலன் குடகு போன்ற மேற்கு மலைத்தொடர்களைச் சார்ந்திட்ட இடங்களுக்கு ஓரளவு வடிகால் பகுதியாக விளங்குகின்ற சோழ மண்டலத்திலே, காவிரியின் போக்கினை ஒழுங்குபடுத்தி, உறுதியான கரைகளை அமைத்துவிட்டால் திடீர் திடீர் என்று திசை தடுமாறிப் பொங்குகின்ற வெள்ளத்திற்கு இரையாகின்ற குடகு நாட்டு மக்களையும் காப்பாற்றிடலாம்; அதே சமயம் சோழ மண்டலத்தையும் சோற்றுக் களஞ்சியம் ஆக்கிடலாம் என்று எண்ணிடலானார். அதற்கேற்ப காவிரியாற்றின் சீரான ஓட்டத்திற்கென்று ஓர் அருமையான திட்டத்தினையும் அவர் உருவாக்கினார்.

அந்தத் திட்டத்தின் ஒரு தலையாய அங்கமே 'கல்லணை'

தாம் எழுப்பிட விழைந்த கல்லணை எவ்வாறு அமைந்திடவேண்டும் என்பதனை விளக்குவதற்காக முதலில் நெட்டித் தக்கைகளைக் கொண்டு தாமே ஒரு சிறு சின்னத்தினை வடித்துக் காட்டினான் சோழப் பேரரசன். அது மிக நன்றாக அமைந்திடவே அதனையே பொற்கொல்லர்களைக் கொண்டு பசும்பொன்னிலே வைரங்களையும் பதித்து, அற்புதச் சிற்பமாகப் படைத்து மகிழ்ந்திட்டான் அவன்!

சந்தனம் மணக்காது, செந்தேன் இனிக்காது என்று சாதிப்பதன் மூலமே தங்களை மேதாவிகளாகக் காட்டிக் கொள்ளும் மேட்டுக்குடியினர் எந்தக் காலத்திலும் இருந்து தான் வந்திருக்கிறார்கள் அல்லவா?

அத்தகைய அறிவாளிகள் கரிகாலன் காலத்திலும் குடகு நாட்டிலே வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுக்குக் கல்லணைத் திட்டத்தின் மூலம் கரிகாலன் வரலாற்றுப்புகழ் பெற்றிடப் போகிறானே என்னும் எரிச்சலும், அழுக்காறும் ஏற்பட்டுவிட்டன. எனவே அந்தத் திட்டம் 'இனிக்காது; கசக்கும்! மணக்காது; நாறும்!' - என்றெல்லாம் ஏளனம் செய்ததோடு அவர்களுடைய வஞ்சக வலையின் காரணமாக கரிகாலர் கண்ணிலும் மேலாகப் போற்றிப் பாதுகாத்து வந்த அந்த கல்லணை அமைப்புச் சின்னம் - பசும்பொன்னில் வார்க்கப்பட்டது - சில நாட்களிலேயே திடீரென்று காணாமற் போய்விட்டது.

சில ஆண்டுகள் சென்றதும், குடகு நாட்டைச் சார்ந்திட்ட அழுக்காற றின் தலைப்பிள்ளைகள் சிலர் கொள்ளை அடித்துச் சென்றிட்ட அந்தக் கல்லணைச் சின்னம், அவர்களுடைய கையைவிட்டுத்தப்பி, மேற்குக் கடற்கரையிலுள்ள முசிறித் துறைமுகப்பட்டினத்திற்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்த யவனர்கள் மூலம் ரோமாபுரி அரண்மனைக்குச் சென்றுவிட்டது என்னும் இரகசியச் செய்தி கரிகாலனுக்கு எட்டிற்று. அதனை எவ்வாறேனும் அடைந்திட மாட்டோமா என்னும் ஏக்கம் ஒவ்வொரு நாளும் மன்னனை வாட்டிற்று.

யாரை அனுப்பி அதனை ரோமாபுரியிலிருந்து மீட்டு வருவது என்று கரிகாலன் குழம்பிக்கொண்டிருந்த வேளையில்தான்... தாம் சிறைப்பட்டி ருந்த நிலையிலும் ரோமாபுரிக்குப் பாண்டிய வேந்தன் தூதுவர் ஒருவரை அனுப்பவிருப்பதையும், மன்னர் குலத்தினில் பிறந்திட்ட அந்த இளைஞ னான தூதுவனைக் கொண்டே, கல்லணைச் சின்னத்தைப் பெற்றிட வாய்ப்புண்டு என்றும், வேறு சில இரகசியச் செய்திகளையும் உட் பொருள்களாக இணைத்து மறைத்துப் புலவர் காரிக்கண்ணனார் ஓலைச் சுவடிகளில் எழுதி முன்பு செழியன் மூலம் கரிகாலனுக்கு எட்டிடுமாறு செய்திட்டார்.

செழியனிடமிருந்து அச்சுவடியைப் பறித்துக் கரிகாலன் கண்ணில் படுமாறு மெய்க்காவலன் வைத்துச் சென்றதையும், கடியலூர் உருத்திரங்கண்ணனார் அருகிருக்க அவற்றைப் பின்னர் சோழப்பேரரசன் படித்துவிட்டுக் காரிக்கண்ணனாரின் நல்லெண்ணத்தினைப் புரிந்து கொண்டு அவரைச் சிறையினின்றும் விடுவிக்க ஆணை பிறப்பித்ததை யும் முன்னே கண்டோம்.

ஆனால் தூதுவராக யாரை அனுப்புவது என்பதில் சிக்கல் ஏற்பட்டு, எதிர்பார்த்தவாறு இளம்பெருவழுதி செல்லாமல், செழியனே புறப்பட்டுச் சென்ற நிலையில் அவனிடம் நேரடியாகத் தம் உள்ளக் கிடக்கையினை வெளிப்படுத்திடக் கரிகாலனுக்குச் சூழ்நிலை வாய்த்திடவில்லை!

எனினும், அவனுடைய ஏக்கத்தைப் பற்றி - அதனாலேயே சில காலம் அவன் இரவு நேரங்களில் உறங்காமல் தவித்ததுபற்றி - புலவர் காரிக்

கண்ணனார் நன்கு அறிந்தவர் அல்லவா? ஆகவேதான் செழியனை அழைத்து வருவதற்குப் பெருவழுதிப் பாண்டியன் தன்னுடைய மகள் முத்துநகையை அனுப்ப முடிவு செய்ததும், அவளிடம் கல்லணைச் சின்னம் பற்றிய கதையினைக் கூறிச் செழியனின் செல்வாக்கினைப் பயன் படுத்தி அதனைத் திரும்ப பெற்றிட முயலுமாறு மொழிந்தனுப்பினார் புலவர்.

ரோமாபுரிக்கு வந்த பின்னரோ செழியனிடம் அந்தச் சின்னத்தைப் பற்றி விவாதிப்பதற்கெல்லாம், முதல் நாளில் முத்துநகைக்கு நேரம் கிட்டிடவில்லை. அடுத்த நாள் ஜூனோவுடன் அகஸ்டசைச் சந்தித்த பொழுது கல்லணைச் சின்னம் பற்றி அவரிடம் பேச்சினை எடுக்குமாறு அவளையே தூண்டிவிட்டாள் முத்துநகை.

கரிகாலனிடம் பெருமதிப்பு வைத்திருந்த அகஸ்டசும் அட்டியேதும் சொல்லிடவில்லை.

...நானே எவ்வாறோ என் கையில் வந்து சிக்கிவிட்ட கல்லணைச் சின்னத்தினைக் கரிகாலனிடம் யார் மூலம் சேர்ப்பிப்பது என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். செழியன் மூலமே அனுப்பிடலாம் என்றும் பின்னர் முடிவு செய்தேன். ஆனால் இங்கு புகைந்துவிட்ட பல்வேறு சிக்கல்களின் காரணமாகத் தூதுவரிடம் அதைப்பற்றிக் கலைந்துரையாடிட இயலாமற் போயிற்று. இப்போது நம் நம்பிக்கைக்குரிய இந்தப் பெண்ணிடமே அதனைக் கொடுத்தனுப்பினால் போகிறது!'' என்று உடனே இசைவினை அளித்துவிட்டார் ரோமாபுரி ஆட்சித் தலைவர்.

இவ்வாறாகக் கல்லணைச் சின்னத்தின் கதையினை முத்துநகை கூறி முடிக்கவும் செழியன் எங்கோ ஓர் விந்தையான உலகிலே தான் சஞ்சரிப்பதாகவே உணர்ந்திட்டான்.

தன்எதிரே மின்னிப் பளிச்சிடும் அந்தப் பசும்பொன் பரிசுப் பொருளையே இமை கொட்டாமல் பார்த்து மகிழ்ந்திட்டான்.

''என்னதான் நானும் பற்றுதல் உள்ளவன்தான் என்றாலும், கரிகாலரின் ஏக்கத்தினை உன் ஒருத்தியால் தான் தீர்த்து வைத்திட முடியும் என்பதையே சூழ்நிலைகள் மெய்ப்பித்துள்ளன பார்த்தாயா?'' என்று தன் உடன் பிறவாத் தங்கையினைப் பெருமிதத்தோடு நோக்கினான் நம் ரோமாபுரிப் பாண்டியன்.

திடீரென்று அவனுக்கு ஓர் அச்சம் கலந்த ஐயப்பாடு தோன்றிவிட்டது.

''ஆமாம் முத்துநகை. நம்முடைய இளவரசரோ தாமரையின்மீது மோகம் கொண்டு திரிகிறார் என்று கூறினாய். இவளோ அவரைக் காதலிக்கவில்லை; இவள் இப்படித் தன்னைக் காதலிக்காமல் என்னைக்

காதலிக்கிறாள் என்று அறிந்ததும், அவருக்கு என் மீது ஆத்திரம் வராதா? நான் அவருடைய பகைமையினைத் தேடிக் கொண்டால் அது பாண்டிய மன்னருக்கு நன்றியில்லாமல் நடப்பதாகப் பொருள் ஆகாதா? அதற்கு என்ன வழி செய்யலாம்?'' என்று கவலையோடு வினவினான்.

''அதற்கு ஓர் அருமையான திட்டம் வைத்திருக்கிறேன் செழியன் அண்ணா! கலக்கம் அடையாதீர்கள்!'' என்று முறுவலுடன் விடை பகர்ந்தாள் முத்துநகை.

''என்ன திட்டம்?''

''ஊம். அதை இப்போது சொல்லமாட்டேன். நாம் செல்லும் இந்த மரக்கலம் பாண்டிய நாட்டை நெருங்கிடும் பொழுதுதான் கூறுவேன்!''

இளம்பெருவழுதியின் எரிச்சலுக்கும் பகைமைக்கும் இலக்காகிடா வண்ணம் முத்துநகை எத்தகைய திட்டத்தினைத் தந்திடக்கூடும் என்று செழியன் தன் மூளையைப் போட்டு குழப்பிக் கொண்டிருக்கும் பொழுதே, அவளோ இன்னோர் அதிர்ச்சியளித்திடும் அரசியல் செய்தி யினை அவனிடம் வெளிப்படுத்தினாள்.

''செழியன் அண்ணா, நீங்கள் என்னவோ இளவரசரின் பகைமை யினைத் தேடிக்கொண்டால் நமது பாண்டிய வேந்தருக்கே நன்றியில்லா மல் நடந்ததாக ஆகிவிடுமே என்றெல்லாம் அஞ்சுகிறீர்கள்! ஆனால், தமக்கு ஒரு தகுதியை - பதவியை - ஏன், வாழ்க்கையையே வழங்கிய அதே பாண்டியப் பேரரசருடைய உள்ளம் உடைந்திடும் வகையினில், தளபதி நெடுமாறர் எத்துணை நன்றி கொன்ற முறைகளில் எல்லாம் நடந்து கொள்கிறார் தெரியுமா? பெருவழுதிப் பாண்டியர் எப்போது கண்ணை மூடுவார், எப்போது தாம் அரியணையைக் கைப்பற்றலாம் என்று அவர் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறார். இது நானாக அளக்கின்ற கதையில்லை. பாண்டிய வேந்தரே தம் வாயினால் உரைத்திட்ட உண்மை!''

''நீ சொல்வதை என்னால் நம்பவே முடியவில்லையே! நெடுமாற ருக்கு என்மீதுதான் கோபம் என்று நினைத்திருந்தேன். அவருக்குப் பாண்டிய வேந்தரிடமே உள்ளூர பகைமை இருந்திருக்கிறதே! அவர் ரோமாபுரித் தூதுவர். பாண்டிய மண்டலத்துக் கொற்றவராகப் பட்டம் சூட்டிக் கொள்வதிலும் அவர் குறியாக இருந்திருக்கிறாரே! ஆமாம், அவரது உள்நோக்கங்களை மாமன்னரால் எவ்வாறு உணர முடிந்தது முத்துநகை?''

''பாண்டிய மன்னரின் உப்பைத் தின்று வளர்ந்த ஒரு நிமித்திகன்தான் இந்த உண்மையைக் கொண்டுவந்து போட்டு உடைத்திருக்கிறான். அவர்

எப்போது இறப்பார் என்றும், நெடுமாறன் எவ்வளவு விரைவில் ஆட்சிக் கட்டிலை அடைந்திட முடியும் என்றும் அவனிடம் குறி கேட்டிருக் கிறார்கள்!''

''நெடுமாறரா இப்படிக் குறி கேட்டிடும் அளவுக்கு கீழே இறங்கி விட்டார்? அவருக்குத்தான் அறிவுக்குப் பொருந்திடாத இந்த நிமித்திகம் - சோதிடத்தில் எல்லாம் நம்பிக்கையே கிடையாதே!''

''அவருக்கு அதிலே நம்பிக்கை இல்லாமல் இருக்கலாம். எதற்கும் ஆசைப்படாதவராகவும் கூட இருக்கலாம். அவரைப் போலவே அவ ரைச் சார்ந்துள்ளவர்களும் இருக்கவேண்டும் என்று என்ன நியதி? அவரு டைய மிக நெருங்கிய ஒருவர்தான் இப்படிப்போய்க் குறி கேட்டி ருக்கிறார்!''

''இவ்வாறு தம்முடைய உறவினர்கள் தடம் புரண்டு நடப்பதற் கெல்லாம் நெடுமாறர் எப்படி இடம் கொடுத்தார்?''

''அவர் இடம் கொடுத்தார் என்பதைவிட அவர்கள் அந்த இடத்தை எடுத்துக் கொண்டு விட்டார்கள் என்பதுதான் பொருத்தமானது. நானும் ஒரு பெண்தான். ஆனால் இந்தத் தாமரையே என்மீது சினம் கொண்டாலும் சரி; நான் சொல்வதை நன்றாகப் பதிய வைத்துக் கொள் ளுங்கள் உங்கள் மனத்தில். மனைவி சொல்வதற்கெல்லாம் தலையை ஆட்டுகின்றவர்கள் - மற்றவர்களிடம் போய்க் கடன் கேட்டுக் கையை ஏந்துகின்றவர்கள் - மற்றவர்களைப் பார்த்துத் தேவையில்லாத நேரங் களிலும் தம்மைத் தாழ்வாகவே எண்ணிக் கொள்கின்றவர்கள் - என்றைக் குமே தலை நிமிர்ந்து நடந்திட முடியாது.''

''ஆனால் நெடுமாறரை அப்படித் தாழ்வு மனப்பான்மை கொண்டவ ராகக் கருதிட முடியாதே! அவ்வாறு தாழ்வு மனம் படைத்தவர் என்றால் பாண்டிய நாட்டு அரியணையையே கைப்பற்றிட வேண்டும் என்கிற அளவுக்கு அவருக்கு துணிச்சல் உண்டாகி இருக்குமா?''

''இந்தத் துணிச்சல் அவருக்கு இயல்பாக அமைந்த துணிச்சல் என்று எண்ணுகிறீர்களா?''

''பிறகு?''

''அவரை ஒட்டி நிற்பவர்கள் - உறவுக்காரர்கள் - தங்களை உயர்த்திக் கொள்வதற்காக அவருக்கு ஊட்டிக் கொண்டிருக்கும் செயற்கைத் துணிச்சலே இது!''

''அப்படியா?''

''இல்லையென்றால், சோழ நாட்டிற்கு அனுப்பி வைக்கப்பட்டாரே, அப்போது அவர் அங்கே என்னதான் செய்திட்டார்? கைகளைக் கட்டிக் கொண்டு பேசாமல்தானே இருந்தார்? இருங்கோவேளின் தளபதியான வில்லவன் போன்றவர்கள் சோழப் பேரரசரின் உயிரினைப் பறித்திட முயன்றிட்டபோது உங்களைப் போலத் தலையைக் கொடுத்துக் காத்திடத் தயங்காமல் தான் முன் வந்தாரா? அதனாலேயே அந்தக் குறுநில மன்னரின் மரமாளிகையிலே தனிமைச் சிறையில் வாடினாரா? பின்னர் வெட்கப்படாமல் வேடங்கள் பல புனைந்து எதிரிகளின் சதிகளையெல் லாம் முறியடித்தாரா? அவர்கள் மண்ணோடு மண்ணாகப் பூண்டற்றுப் போகுமளவுக்கு அவர்களை வீழ்த்தினரா? அதற்காக விரைந்துதான் செயல்பட்டாரா?

அப்போது அவர் கையாண்ட அமைதியைக்குறித்துச் சோழப் பேர ரசர் எவ்வளவு மனம் புழுங்கினார் தெரியுமா? அவருடைய அந்தச் செயலற்றப் போக்கினைக் கேள்வியுற்றுப் பெருவழுதிப் பாண்டியர் எத் துணை வேதனைக்கு இலக்கானார் தெரியுமா? அத்தகையவர்தான் இன்று அரியணை ஏறிடவே ஆசைப்படுகிறார். இல்லை, அவ்வாறு ஆசைப்படுமாறு தூண்டப்படுகிறார். அவருடைய முயற்சிகளை முறியடித்திட உங்கள் ஒருவரால்தான் முடியும் என்று கருதித்தான் உங்களை அழைத்து வரும் பொருட்டு என்னைத் தேர்ந்தெடுத்திட்டார் பாண்டிய வேந்தர். வரும் வழியிலேயே நாட்டிலே நடைபெற்றிடும் அரசியல் நிலைமைகளையெல்லாம் நன்கு விளக்கிக் கூறி உங்களை எதற்குமே ஆயத்தமாக வருமாறு எச்சரிக்கை செய்திட வேண்டும் என்றும் என்னிடம் அவர் வற்புறுத்தினார். அப்புறம் இன்னொன்றையும் என்னிடம் கூறினார்.''

''என்ன?''

''அதுவா!'' என்ற முத்துநகை, செழியனின் செவியில் மட்டுமே விழுந்திடுமாறு மிக மெல்லிய குரலில் கிசுகிசுத்தாள்.

அந்தச் செய்தியினைக் கேட்டதும் அவனுடைய இரத்த நாளங்களே செயலற்று நின்றுவிடுமோ என்னும்படியான திகைப்பு- வியப்பு- பதைபதைப்பு-படபடப்பு!

''ஆமாம், இது தாமரைக்கும் தெரியுமா?'' என்று தணிந்த குரலில் கேட்டான் செழியன்.

''அவளுக்குத் தெரிவித்திடாமல், நான் அகஸ்டசிடமும் எப்படி இந்த உண்மையை எட்டவிட்டிருக்க முடியும்? எனக்கென்ன இத்தாலி மொழியா தெரியும்!''

''அப்படியானால் அகஸ்டஸ் வரைக்கும் இந்தச் செய்தி தெரிந்து விட்டதா?''

''இல்லையென்றால், உங்கள் மீது உயிரையே வைத்திருக்கும் அவர் இவ்வளவு எளிதில் நீங்கள் ரோமாபுரியை விட்டுக் கிளம்பிட இசைந்திருப்பாரா?''

''அந்த மனிதர் இதைப்பற்றி எதுவுமே என்னிடம் கேட்டிடவும் இல்லை; கூறிடவும் இல்லையே?''

''நான்தான் அப்படி அவருக்கு வாய்ப்பூட்டுப் போட்டு வற்புறுத்திக் கேட்டுக் கொண்டேன்; மேலும், தாயகம் புறப்படுகிற பரபரப்பில், அவருடன் நீண்டபொழுது உரையாடிட உங்களுக்குத்தான் நேரம் ஏது? அவருக்குத் தான் நேரம் ஏது?''

''பார்க்கப் போனால், அந்த மாபெரும் ஆட்சித் தலைவர் நீயும் தாமரையும் என்னவெல்லாம் சொன்னீர்களோ அப்படியெல்லாம்தான் ஆடி இருக்கிறார் என்று தெரிகிறது! நீங்கள் இருவரும் என்னதான் அப்படிச் சொக்குப்பொடி போட்டீர்களோ?''

''எல்லாம் உங்களுடைய நன்மைக்காகத்தானே அண்ணா?''

''நான் இல்லை என்று மறுக்கிறேனா? அது சரி, முத்துநகை! ஜூனோவைக் கண்டதுமே இவள் தாமரைதான் என்பதை நீ கண்டுபிடித்து விட்டாயா?''

''ஊகூம், இவள் இருந்த கோலத்தில் நான் எங்கே இவளை அடையாளம் கண்டுகொள்வது? இவளோடு நான் அகஸ்டசின் இல்லத்திற்குப் படுக்கச் சென்றேன் இல்லையா? அப்போது இவளாகத் தான் தாம் யார் என்கிற உண்மையை வெளிப்படுத்தினாள்; 'தன்னை எப்படியாவது உங்களுடைய பரிசுப் பொருளாக்கித் தமிழகத்திற்குக் கூட்டிச் செல்ல வேண்டும்' என்றும் கெஞ்சினாள்.''

முத்துநகை இவ்வாறு மொழிந்திடவும் உடனே தாமரை குறுக்கிட்டாள். 'ஏய், நான் ஒன்றும் உன்னைக் கெஞ்சிடவில்லை. நீதான், ''எங்கள் அண்ணனை இப்படியெல்லாம் ஏமாற்றலாமா? அகஸ்டஸ் அவர்களிடம் கூறி எப்படியாவது உன்னைத் தாயகம் கூட்டிப் போய் விடுகிறேன்' என்று சொன்னாய்.''

''அடிப்பாவி! முழுப் பூசணிக்காயையும் சோற்றில் மறைக்கிறாளே! பார்த்தீர்களா செழியன் அண்ணா! எப்படிப் பொய் பேசுகிறாள் என்று? அது இவள் குற்றம் இல்லை; எங்கள் பெண்ணினத்திற்கே உரிய அகங்காரத்தின் அழியாத சின்னம் அது. பெண் என்பவள் தானாக ஓர் ஆடவனை நாடிச் செல்வது இழுக்காம்; அதனால் ஆடவன் மீது என்னதான் அன்பிருந் தாலும் அனைத்தையும் மனதுக்குள்ளே மறைத்துக் கொண்டு, அவன் தானே தன்னை நாடி வரும்படி நடிப்பதுதான் சிறப்பாம்? என்ன மாய்மாலமான எண்ணங்கள்!''

''போகிறது! நீ ஒருத்தியாவது ஒப்புதல் வாக்குமூலம் அளித்தாயே!'' என்றான் செழியன்.

''ஆணாக வேடம் போட்டு என்னையே ஆலாய்ப் பறக்க வைத்தவள் இல்லையா? அதனால்தான் ஆடவர்களுக்குச் சார்பாக நீ பேசுகிறாய்! உன்னை அப்பொழுதே ஏதாவது செய்து மடக்கி இருக்க வேண்டும்; தப்பித்துக் கொண்டாய்?'' என்று செல்லமாக சினந்திட்ட தாமரை, முத்துநகையின் கன்னக் கதுப்பினை அழுத்தித் திருகி அவளைத் தண்டித்திடவே முனைந்துவிட்டாள்.

அந்தப் பெரிய மரக்கலம் முசிறித் துறைமுகப்பட்டினத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

தன்னுடைய அறையிலே தனியாக அமர்ந்திருந்த செழியன், பழங்கால நிகழ்ச்சிகளையெல்லாம் மனத்திற்குள்ளேயே அசை போட்டு மகிழ்ந்திட்டான்; அடுத்துத் தன் அருமைத் தாயகத்தினை அடைந்தவுடன் தான் எடுத்துக் கொள்ள வேண்டிய அரசியல் நடவடிக்கைகளைப் பற்றியும் தன்னுடைய சிந்தனைப் பறவையைச் சிறகடித்துப் பறக்க விட்டான்.

சிறிது நேரத்தில் பெண்கள் இருவரும் அவன் எதிரே வந்து நின்றனர்.

''என்ன முத்துநகை, இது? மறுபடியும் அந்த ஜூனோ எப்படி இங்கு வந்து முளைத்தாள்?'' என்று வியப்புடன் வினவினான் செழியன்.

''இந்த மரக்கலத்திலிருந்தேதான் இப்போது வந்து முளைத்திருக்கிறாள்'' என்று நகைத்தவாறே விடை பகர்ந்திட்டாள் முத்துநகை.

''ஆமாம்; பழைய ஜூனோ மாதிரிதான் இப்போதும் தெரிகிறேனோ?'' - கொஞ்சலாகக் கேட்டாள் தாமரை.

''அசல் அவள் மாதிரியேதான் இருக்கிறாய்! ஆமாம்; ஏன் இந்தப் புதுக்கோலம்-இல்லை, பழங்கோலம்?''

செழியனின் இந்தக் கேள்விக்கு முத்துநகைதான் மறுமொழி கூறினாள்:

''இளவரசன் இளம்பெருவழுதி அவர்களுடைய பகைமையைத் தேடிக் கொள்ளாமல் இருக்க உங்களுக்கு ஓர் அருமையான திட்டம் வைத்திருக்கிறேன் என்று முன்பு கூறினேன் இல்லையா?''

''ஆமாம்.''

''அந்தத் திட்டத்திற்கு அடித்தளந்தான் இந்த இத்தாலிய நாட்டு எழிற்கோலம்!''

''உன்னுடைய திட்டம்தான் என்ன? அதை முதலில் சற்று விளக்கமாகத்தான் சொல்லிவிடேன்.''

''இவள்மீது பைத்தியமாகவே அலைந்திடும் இளவரசருக்கு இவள் தன்னைக் காதலிக்கவில்லை, உங்களைத்தான் காதலிக்கிறாள் என்ற கசப்பான உண்மையினை எந்த வகையிலும் செரித்துக் கொள்ளவே முடியாது. உங்களோடு இவள் தாயகம் திரும்பிடுவதைக் கண்டாலே அவருக்கு ஆத்திரம் சீறிக்கொண்டுதான் வரும். தம்முடைய அரசியல் ஆதிக்கத்தினைப் பயன்படுத்தி இவளை உங்களிடமிருந்து பறித்துக் கொள்ள முயற்சி செய்தாலும் செய்திடக் கூடும். அத்தகைய நிலைமை களுக்கு இடம் ஏற்படாமல் இருக்க வேண்டுமானால் எனக்கு ஒரு வழிதான் புலப்படுகின்றது.''

''என்ன வழி அது?''

''நாம் பாண்டிய நாட்டை அடைந்தவுடனேயே இளவரசருக்குத் திருமணம் நிகழ்ந்திட நாமே எவ்வாறேனும் ஏற்பாடு செய்திட வேண்டும்.''

''அதற்கு அவர் இசைந்தால்தானே?''

''அவரை இசைய வைப்பதில்தான் நம்முடைய திறமையே இருக்கிறது!''

''தாமரை, யவனக்கிழவர் ஒருவரோடு ரோமாபுரிக்கே ஓடிவிட்டாள் என்றும், அங்கே இத்தாலிய வீரன் ஒருவனை மணந்து கொண்டு இன்பமாக வாழ்கிறாள் என்றும் கூறி விட வேண்டும்!''

''அய்யய்யோ! அந்த அவமானத்தையெல்லாம் என்னால் தாங்கிட முடியாது; நான் எதற்கு அப்படியெல்லாம் 'ஒழுக்கங்கெட்டவள்' என்று பெயர் எடுத்திட வேண்டும்?'' என்று கொதிப்புடன் சீறினாள் தாமரை.

''சரி! அப்போது இப்படிக் கூறலாம்; நீ யவனக் கிழவரோடு ரோமாபுரிக்குத் தப்பிச் சென்றதாகவும், வழியிலே நடுக்கடலிலே விழுந்து தற்கொலை புரிந்து கொண்டதாயும் கதை கட்டி விடலாம்.''

''ஆனால் இந்தக் கதையை அவர் நம்பிட வேண்டுமே?'' என்றான் செழியன்.

''அவர் நம்பும்படியாகத்தான் நாம் சில தந்திரங்களைச் செய்திட வேண்டும். யாராவது ஒரு யவனக்கிழவரைப் பிடித்துத் தாமரை தற்கொலை புரிந்து கொண்டதைத் தாம் கண்ணாரக் கண்டதாக இளவரச ரிடமே நேரில் வந்து சொல்ல வைத்திடத்தான் வேண்டும். அப்போது தான் அவர் தாமரையைப் பற்றிய ஆசைக் கனவுகளை அறுத்தெறிவார்.

இன்னொரு பேரழகியை அவருடைய தலையிலே கட்டிவிட வேண்டிய துதான். அவளுக்கு ஒரு குழந்தை பிறந்துவிட்டால் பிறகு தாமரை யைப் பற்றிய மோகத் தீ அவரிடம் தானாகத் தணிந்துவிடும் - அவிந்துவிடும். அதுவரைக்கும் இவள் ஜூனோவாகத் தான் நடமாடிட வேண்டும்.''

''அடி அம்மா! அத்துணை நெடுங்காலத்திற்கு இந்த இத்தாலிய உடையிலேயேதான் நான் சிறை இருந்திட வேண்டுமா? முடியாது!'' என்று எதிர்ப்பினை எழுப்பினாள் தாமரை.

''வேறு என்ன மாற்றுவழி இருக்கிறது? நீ உன் உண்மையான உருவத்தில் - தாமரையாகவே பாண்டிய நாட்டில் அடியெடுத்து வைத் தால் இளவரசர் வாளா விடுவாரா? பிறகு செழியன் அண்ணாவுக்கும் அவருக்கும் தீராப்பகையே கொழுந்துவிட்டு எரியாதா? அதனைப் பயன்படுத்திக் கொண்டு தளபதி நெடுமாறர் குறுக்கே புகுந்து கொலு வேறிட முற்பட்டுவிட்டால் என்ன செய்வது? எல்லா விளைவுகளையும் எண்ணிப் பார்த்துத்தான் நான் இப்படித் திட்டமிடத் துணிந்தேன்.''

முத்துநகை இவ்வாறு அழுத்தமாக மொழிந்திடவும் தங்களுக்கும் வேறு வழியெதுவும் தோன்றிடாத அந்த இளங்காதலர்கள் ஒருவரை யொருவர் இரக்கத்தோடு பார்த்துக் கொண்டனர்.

அந்த நெடிய கடற்பயணம் முடிவுற்று, அவர்கள் மூவரும் கொற் கைத் துறைமுகத்தினை மிதித்திட்டபோது அங்கே அவர்களுக்காக முர சங்கள் முழங்கிடவில்லை; முழவுகள் அதிர்ந்திடவில்லை; குயில்கள் கூவிடவில்லை; கொம்புகள் பிளிறிடவில்லை; ஒரு வாழ்த்துப்பா இல்லை; வரவேற்பு மாலை இல்லை.

பாண்டிய நாட்டின் தலைநகரமான மதுரையம்பதியினை அவர்கள் அடைந்திட்ட பொழுதோ-

அங்கே இன்னும் பயங்கரமான இடுகாட்டு அமைதியே இழையோடிற்று!

அரண்மனைக்குள் நுழைந்திட்ட செழியன் நொடிப் பொழுதில், தன்னை - தன் வயதை - தூதுவனாகச்சென்று திரும்பிடும் தன் பொறுப்பை, மதிப்பை - எல்லாவற்றையுமே மறந்துவிட்டான். ஏன்? தனக்குப்பின்னால் இரண்டு இளங்காரிகைகள் வந்து கொண்டிருப் பதையுங் கூட மறந்தே விட்டான். அவனுக்கு எங்கிருந்து வந்ததோ அந்தத் துயரத்தின் வெறி - ஆவேசம்! பல நாட்கள் தன் தாய்ப் பசுவினைக் காணாமல் தவித்திட்ட பச்சிளங் கன்றினைப் போல, ஒரே துள்ளலாக, அவன் ஓட்டம் பிடித்திட்டான், பாண்டிய வேந்தன் படுத்துக் கிடந்திட்ட கூடத்தினை நோக்கி.

அங்கோ-

யவனர்களால் பரிசாக வழங்கப்பெற்ற அழகான பாவை விளக்கு ஒன்று அமைதியாக ஒளியை உமிழ்ந்த வண்ணம் இருந்தது.

வாழைப் பூவிலே முதிர்ந்து தடித்த மடல்களையெல்லாம் உரித்தபிறகு இறுதியிலே எஞ்சி நிற்குமே, முக்கோண வடிவமான மஞ்சள் வண்ணப் பூமொட்டு, அப்படித்தான் அசையா ஒளிப்பிழம்பாய், அந்தச் சுடர்கொழுந்து எரிந்தது.

பெருவழுதிப் பாண்டியனின் தலைமாட்டுப் பக்கத்திலே ஏற்றி வைக்கப் பெற்ற அந்த விளக்கின் சந்தன வெளிச்சம் அவனை எட்டிப் பார்த்திட்ட போதிலும் அதனையும் மீறி அவனது சாவின் நிழலே படர்ந்து கிடந்தது.

இமைக்கதவுகளோ கவிழ்ந்து கிடக்கும் பழுப்பேறிய கிளிஞ்சல் களைப் போல, மூடியே இருந்தன. வாயிதழ்களோ, செத்துப்போன கெளுத்திமீன் குஞ்சுகளாக வெளுத்துத் தொங்கும் மீசைகளுக்குக் கீழே சற்றே கிளர்ந்திருந்தன.

எனினும் ஓடி ஒடுங்கிடப் போவது இப்போதோ இன்னுஞ் சற்று நேரங்கழித்தோ என்று அறுதியிட முடியாதவாறு மூச்சு மட்டும் மிகுந்த அடக்கத்தோடு இழையோடிற்று.

மன்னன் படுத்துக் கிடந்திடும் கட்டிலை ஒட்டி, ஒரு பக்கத்தில் சோழப் பேரரசன் கரிகாலனும், மறுபக்கத்தில் புலவர் காரிக்கண்ணனாரும் கவலை தோய்ந்த முகத்துடன் இருக்கைகளில் அமர்ந்திருந்தனர்.

கரிகாலனுக்குப் பின்னால் உள்ள பெருந்தூணுக்குத் தன் வலக் காலை முட்டுக்கொடுத்திட்டவாறு அதனோடு சாய்ந்து தலை கவிழ்ந்து நின்றிருந்தான் இளவரசன் இளம்பெருவழுதி. அவனுடைய விழிகள் அருவிகளை வழியவிட்ட சுவடுகள் அவனது கன்ன மேடுகளில் நன்கு தெரிந்தன.

கூடத்தில், ஆங்காங்கே அமைச்சர்கள், அரையர்கள், படைத் தளபதிகள், நாடு வகை செய்வோர், வரியியலார், மருத்துவர், புரருரித் திணைக்களத்தார், திருமுகம் எழுதுவோர் - துயரங்கப்பிய முகத்தோடு நின்றிருந்தனர்.

தளபதி நெடுமாறன் மட்டும் ஓரிடத்தில் நில்லாமல் பொறுமை இழந்தவனாக - அமைதி அழிந்தவனாக - அங்குமிங்குமாக நடை பழகிக் கொண்டிருந்தான்.

கண்ணீரும் கம்பலையுமாக, அந்தக் கூடத்தினுள் ஓடி வந்திட்ட செழியன், தன்னையும் மீறி, ''அரசே! அரசே!'' என்று கூவிவிட்டான்.

அந்தத் தழுதழுத்த குரலைக் கேட்ட அளவிலேயே அங்கிருந்த அத்தனை பேருடைய உடலுமே சட்டென்று சிலிர்த்து விட்டன; அவர்களுடைய கண்களும் குளமாகி விட்டன.

ஆனால் நெடுமாறன் மட்டும் அத்தகைய சலனம் எதற்கும் ஆட்பட்டுவிடாதவனாக, பாய்ந்து வந்திட்ட செழியனின் குறுக்கே போய் மறித்துக்கொண்டு, ''இப்படியெல்லாம் கூச்சல் போடாதே! மன்னர் அமைதியாக உறங்கிக் கொண்டிருக்கிறார்; அவரது அமைதியைக் கெடுத்திடலாமா?'' என்று தணிந்த குரலில் தனக்குரிய அதிகாரத்துடன் பகர்ந்திட்டான்.

''நெடுமாறரே! செழியனைச் சற்று அருகே வரவிடுங்கள்! எவ்வளவோ தொலைவிலிருந்து வந்திருக்கின்ற அவன் இந்தக் கடைசி நேரத்திலாவது தனக்கு வாழ்வளித்திட்ட அரசனின் முகத்தினை ஆசை தீரப் பார்த்திட வேண்டமா?'' சற்று அழுத்தமான குரலிலேயே அறைந்திட்டான் கரிகாலன்.

உடனே ஒதுங்கி நின்று செழியனுக்கு வழிவிடுவதைத் தவிர, நெடுமாறனுக்கு வேறு வழியில்லை.

கட்டிலின் அருகே சென்று, கரிகாலனை ஒட்டி நின்றிட்ட செழியன், பற்றி உலர்ந்திட்ட பெருவழுதிப் பாண்டியனின் முகத்தினைக் காணக் காணத் துயர் தாளாமல், சிறு குழந்தைப் போல் தேம்பித் தேம்பி அழ முற்பட்டுவிட்டான்.

எத்தனையோ போர்க் களங்களிலே எதிரிகளை முறியடித்து வெற்றி மங்கையினைத் தழுவி, வேப்பம்பூ மாலையினைச் சூடிக் களித்திட்ட வீரத் திலகம் - பாண்டியப் பேரரசன் இப்படிப் பிணியென்னும் களத்திலே 'இறப்பு' என்னும் கொடும்பகையோடு இறுதிப் போர் நிகழ்த்திடும் அவலக் காட்சியினைக் கண்டிடும்பொழுது செழியனால் அழாமல் எப்படி இருந்திட முடியும்?

கரிகாலன், தன் முகத்தைச் சற்றுத் தாழ்த்தி, ''இதோ செழியன் வந்துவிட்டான்! செழியன் வந்துவிட்டான்!'' என்று உரக்கவே குரல் கொடுத்திட்டான்.

பின்னர், பெருவழுதியின் செவி மடலிலே தன் உதடுகளைப் பொருத்தி ஏதோ ஒரு சொல்லினை உரைத்திட்டான்.

அந்த ஒரு சொல்லுக்கு என்னதான் மந்திர சக்தியோ, மாய வித்தையோ?

உடனே, பாண்டிய வேந்தனின் இமைக்கூடுகள் மெல்லத் திறந்தன. நிலம் பார்த்திட்ட வெளிறிய விழிகள் செழியனின் முகத்தினைத் துழாவிப் பிடிக்க முயன்றன.

சட்டென்று அவரது பார்வையிலே மின்னித் தெறித்திட்டது ஓர் ஒளி வீச்சு!

முன்பொருநாள், ''நெடுந்தூரத்திற்கு அப்பால் உள்ள செழியனை எவ்வாறு கடிதில் கொணர்ந்திட முடியும் என்பதுதான் கவலையினை அளிக்கின்றது...'' என்று புலவர் காரிக்கண்ணனார் தயக்கத்துடன் மொழிந்திட்ட போது -

''ஏன்? அவன் வருகின்றவரை இந்த உடம்பிலே என் உயிர் தங்குமோ என்னவோ என்று அஞ்சுகிறீர்களா?... ஆனால், புலவர் அவர்களே! நான் இப்பொழுது கூறுவதை நன்றாக உங்கள் மனத்திலே பதிய வைத்துக் கொள்ளுங்கள். செழியனின் முகத்தினைக் கடைசியாக ஒரு முறையேனும் கண்டிடாமல் என் கண்கள் கண்டிப்பாய் மூடிட மாட்டா...'' என்று பெருவழுதி உயிரோடு இயம்பினானே அந்தப் பெருநம்பிக்கை நிறைவேறிவிட்ட பெருமிதம் சுடர்விட்டது, அவனுடைய அந்த ஆழமான பார்வையில். அடுத்த கணமே-

''அய்யோ! அரசே!'' என்று அலறியவாறே அவன் மார்பு மீது விழுந்திட்டான் செழியன்.

'மலைசாய்ந்த(து) அய்யோ! எம்
மாத்தமிழின் உள்ளீரல்

குலைசாய்ந்த(து) அய்யோ! செங்
கோலோச்சும் செயல் வீரத்
தலைசாய்ந்த(து) அய்யோ ! இத்
தாரணியே புகழ்நட்புக்
கலைசாய்ந்த(து) அய்யோ!' - என்றே
கதறல் வெடித்ததுவே!

ஊமைகளும் ஆமைகளும்
உயர வைத்த சீரேணி!
பூமாதின் பொறுமையெலாம்
பொலிந்திட்ட திருமேனி!
ரோமாபுரி வரைக்கும்
தமிழ்மணக்கச் செய்த மலர்!
பூமாதின் வயிற்றினுள்ளே
புகல்தேடி மறைவதுவோ?

வடிக்காத மழையையெலாம்
வடித்தனவே விழிமுகில்கள்!
துடிக்காத அலைகளெல்லாம்
துடித்தனவே மனக்கடலில்!
பிடிக்காத அழுக்காற்றுப்
பிள்ளைகளும் குமுறினவே!
வெடிக்காத இதயமுண்டோ
பெருவழுதி இறந்ததனால்?

'வெள்ளியம்பலம்' என்னும் மதுரை மாநகரிலே துஞ்சிய அந்தப் பெருவழுதியின் மறைவினைக் கேட்டுப் பாண்டிய மண்டலம் மட்டுமா, பழந்தமிழகம் முழுவதுமே துயர இருளிலே புதைந்தது; அழுகைக் கடலிலே அமிழ்ந்தது!

ஆனால், அந்தத் துயரத்தின் வடுக்கள் மறைந்திடுவதற்கு முன்பே - அழுகையின் ஓலம் அடங்கிடுவதற்கு முன்பே...ஏன், பெருவழுதிப் பாண்டியனின் சவ அடக்கம் முடிவுற்றதுமே - தலைநகரிலே கொம்பு சுற்றிக் கொடூரமாக வீசத் தொடங்கி விட்டது அரசியல் புயல்.

ஓர் அரசர் இறந்துபட்டதும் எல்லா நாடுகளிலுமே ஏற்படக்கூடிய வாடிக்கையான நெருக்கடி நிலையே மதுரை மாநகரிலும் ஏற்பட்டது என்றாலும், அரியணை ஏறுவதற்குத் தளபதி நெடுமாறன் வெளிப்படுத்திட்ட அடங்காத பேராசை பொதுமக்கள் அனைவர்க்கும் அதிர்ச்சியினையே அளித்திட்டது.

பொதுவாக, ஒரு மன்னர் இயற்கை எய்தியதும் அவரது பிள்ளை பட்டம் சூட்டிக் கொள்வதே அக்காலத்தில் மரபு. மன்னருக்கு வழித் தோன்றல் - வாரிசு யாரும் இல்லையென்றால்தான் பிற ஏற்பாடு களுக்கு இடம் உண்டாகும்.

இங்கோ, பெருவழுதியின் பிள்ளை, இளவரசன் இளம் பெருவழுதி மலைபோல இருக்கிறான். அவனை நெட்டித் தள்ளிவிட்டுத் தானே அரியணையில் ஏறுவதற்கு நெடுமாறன் அடம்பிடிப்பதைக் கண்டிடும் பொழுது யாருக்குத்தான் அதிர்ச்சியும் ஆத்திரமும் உண்டாகமாட்டா?

ஆனால், குழப்பநிலை மிகுந்த உச்சக் கட்டத்தை எட்டிட, கடைசி நேரத்தில் கரிகாலன் - காரிக்கண்ணனார் முன்னிலையில் தன் பேரா சைக்கு அவன் காட்டிய காரணங்கள் எல்லாரையும் வியப்படையச் செய்ததோடு திடுக்கிடவும் வைத்துவிட்டன!

...பெருவழுதிப் பாண்டியர் உயிரோடு இருந்தவரையில் நான் அவருடைய நிழலாகவே தொடர்ந்திருக்கிறேன் - துணை புரிந்து வந்திருக்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்னர் தென் வெள்ளாற்றங் கரையினை ஒட்டிய 'முத்தூர் கூற்ற' த்தினை ஆண்டிட்ட வேளிர்குலக் குறுநில மன்னன் நம்முடைய பாண்டிய வேந்தரின் உயிரினைப் பறித்திட முயன்றதை இன்று பலர் மறந்திருக்கலாம். அப்போது அவருக்கு அரணாக, கேடயமாக, தற்காப்பு அளித்துக் காப்பாற்றியவர் யார்? நானேதான்... என்னுடைய தீரச் செயலையும், அரசரிடம் நான் கொண்ட ஆழ்ந்த பற்றுதலையும் மெச்சிய அவர், 'நெடுமாறா! உன்னைப்போல் உற்ற துணை இந்த உலகிலே எனக்கு எவருமே இல்லை. ஆகவே, என் அருகிலேயே நீ எப்போதும் இருந்திட வேண்டும். அதற்குத் தக்கவாறு உன்னை உரிய நேரத்தில் தளபதியாக உயர்த்தி விடுகிறேன்; அது மட்டும் அல்ல: என்னைச் சாவு வந்து நெருங்கிடும்பொழுது நீ தான் இந்த பாண்டிய மண்டலத்தை எனக்குப் பின்னர் ஆள்கின்ற அருகதை படைத்தவன் என்று 'இறுதிமுறி' எழுதி வைத்துவிடுகிறேன்' என்று வாக்கு அளித்திட்டார்.

ஆனால், அவருக்கு முடக்குவாத நோய் வந்து, கைகளிலே நடுக்கம் ஏற்பட்டுவிட்டதால் கடைசிக் காலத்தில் தாம் சொன்னவாறு ''இறுதிமுறி'' எழுதிவைத்திட முடியவில்லை. மற்றபடித் தாம் இயம்பியவாறே அவர் என்னைத் தளபதியாக உயர்த்தி வைத்ததை எல்லாருமே அறிவார்கள். ஆகவே மறைந்த மன்னரின் எண்ணப்படி இந்த மாமண்டலத்தை இனிமேல் ஆளவேண்டியவன் நானே என்பதில் எத்தகைய ஐயப்பாட்டிற்கும் இடம் இருக்கவே தேவை இல்லை; நீங்கள் எல்லாருமே இளவரசன் இளம்பெருவழுதிதான் அரியணைக்கு உரியவர் என்று

எண்ணிக் கொண்டிருப்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால், மிகச் சிறிய கொற்கைப் பட்டினத்தையே சரியாக நிர்வாகம் செய்ய முடியாத அவர், இந்த மாபெரும் பாண்டிய நாட்டையே எங்ஙனம் கோலோச்சிட இயலும்? மேலும், கவிதைகள் புனைவதிலும், கடற்பயணம் போவதிலும் காலங்கழித்திடுகின்ற அவர், அரசியல் கலையிலே எவ்வாறு அரிமாவாகத்திகழ்ந்திட முடியும்? போதாதற்குக் காதல் நினைவுகள்- இருங்கோவேளின் தங்கை தாமரையின் மேலுள்ள தணியாத மோகம் வேறு அவருடைய சிந்தனையைச் சிதற அடித்த வண்ணம் உள்ளது. இந்த நிலையில் அவரே அரியணை ஏறுகிறார் என்று வைத்துக் கொண்டாலும் பிறகு இந்நாடும் மக்களும் நலம் பெற்றிட முடியுமா? அத்தோடு, இளம் பெருவழுதியைப் பற்றிய இன்னோர் உண்மையும் அண்மையில்தான் என் செவிக்கு வந்து எட்டியது. அதனைக் கேள்வியுற்றால் நீங்கள் அத்தனை பேருமே அதிர்ச்சியால் மயங்கி விழுந்திட்டால் கூட நான் வியப்படைந்திட மாட்டேன்'' என்று பெரும் பீடிகையோடு நிறுத்தினான் நெடுமாறன்.

அவனுடைய கூற்றினைக் கேட்டுக் கரிகாலன் மெல்ல நகைத்திட்டான். ''உண்மையானதோ பொய்யானதோ ஒரு செய்தியினைக் கேட்ட மாத்திரத்திலேயே அதிர்ச்சியோ மயக்கமோ அடைகின்ற அளவுக்கு எங்கள் இதயங்கள் அத்துணை பலவீனமானவை என்று நீங்கள் நினைக்கிறீர்களா? வேடிக்கைதான்! அத்தகைய உள்ளத்தொய்வினை -பக்குவப் படாத மனச் சோர்வினை எப்போதோ கடந்து வந்திருப்போர் என்பது முதுமை ததும்பும் எங்கள் முகத்தினைப் பார்த்தாலே தெரிந்திடவில்லையா? ஆகவே, என்ன உண்மையானாலும் நீங்கள் தாராளமாகத் தயக்கமின்றி வெளியிடலாம்'' என்றார் அவர்.

உடனே தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு நெடுமாறன் இவ்வாறு உரைத்திட்டான்.

''இளம்பெருவழுதி, மறைந்த பெருவழுதிப் பாண்டியரின் உண்மையான மகன் இல்லை; ஆகவே அரியணைக்கு உரிமை கோரிட அவருக்கு எந்தவித தகுதியும் இல்லை!''

திடுக்கிட வைத்திடும் என்னும் கணிப்போடு வெளி வந்திட்ட இந்தச் சொற்கள் சோழப் பேரரசரின் முகத்திலோ, புலவர் காரிக்கண்ணனாரின் முகத்திலோ எத்தகைய சலனத்தையும் ஏற்படுத்திடவில்லை; மாறாகப் பொருள் செறிந்த பெரிய முறுவல் ஒன்றினையே விரிந்திடச் செய்தன.

புலவர் காரிக்கண்ணனார் இப்போது தாம் எண்ணுவதை இயம்பிட முற்பட்டார்;

''தளபதியாரே! எங்களுடைய நோக்கம் எல்லாம், பெருவழுதிப் பாண்டியரின் இறுதி ஆசை என்னவோ அதனை நிறைவேற்றிட வேண்டும் என்பதுதான். ஆகவே, எங்களுக்கு மிகவும் வேண்டியவர்களான நீங்கள் அரியணை ஏறினால் என்ன? இளவரசன் இளம்பெருவழுதி அரியணை ஏறினால் என்ன? எல்லாம் எங்களுக்கு ஒன்று தான்!''

ஆனால் புலவர் விடுவாரா?

''எழுத்து மூலமாக அப்படி ஏதேனும் ஆதாரம் வைத்திருக்கிறீர்களா? ஓலைச்சுவடி இருக்கிறதா?''

''அதைத்தான் அவரால் எழுத முடியவில்லை என்று முன்பே சொன்னேனே! ஆமாம், நீங்கள் மட்டும் எப்படி அவரது இறுதி ஆசையைத் தெரிந்து கொள்ள முடியும்? அதற்கு என்ன ஆதாரம் காட்டிட இயலும்?''

''எங்களிடம் ஆதாரம் ஏதும் இல்லையென்றால் உங்களிடம் வீணாக வாயைக்கொடுப்போமா? பெருவழுதிப் பாண்டியர் தம் கைப்பட எழுதி வைத்துள்ள 'இறுதி முறி'0 ஓலைச்சுவடி எங்கள் கைக்குக் கிட்டியுள்ளது'' என்று சிரித்தவாறே மொழிந்திட்டார் காரிக்கண்ணனார்.

''அவர்தாம் எழுதியிருப்பாரா, இல்லை வேறு எவராவது பொய்யாக வரைந்திருப்பார்களா என்கிற ஐயப்பாடு உங்களுக்கு இருக்குமானால் நீங்கள் அந்த ஓலைச்சுவடிகளை உங்கள் கண்ணாலேயே நன்றாகப் பார்த்து தெளிவடைந்து கொள்ளலாம்; ஆனால், இன்றைக்கல்ல; நாளை அரண்மனை மண்டபத்தில் பொதுமக்கள் முன்னிலையில் பெருவழுதி யாரின் 'இறுதி முறி' ஓலைச்சுவடி படிக்கப்படும். அதிலே எவ்வாறு குறிப்பிட்டுள்ளதோ அவ்வாறே அரியணைக்குரியவரைத் தேர்ந்தெடுத் துக் கொள்வோம். அது தானே முறை!'' என்று முத்தாய்ப்பு வைத்திட்டான் கரிகாலன்.

புலவர், புரவலர் - இருவரும் புகன்றதைக் கேட்ட தளபதி நெடுமாறனுக்குப் பொறியே கலங்கினார்போல் தலைசுற்றிக் கொண்டு வந்தது.

மறுநாள் காலை உதயசூரியனின் ஒளிக்கதிர்களிலே ஒரு தனிக் களையே சுடர்விட்டது!

பாண்டியப் பெருநாட்டுத் தலைநகரமே பரபரப்போடு சுறுசுறுப்போடு - சுழன்றிட்டது. தங்களுடைய அடுத்த மாமன்னர் யார் என்று அறிந்திடுவதற்கு ஆர்வம் கொண்டிட்ட பொதுமக்கள், அணைகடந்த வெள்ளமென அரண்மனைக்கு உள்ளேயும் வெளியேயும் நிரம்பி வழிந்திட்டனர்.

வண்ண விளக்குகளாலும் வகைவகையான மலர்ச்சரங்களாலும் எளிமையான முறையிலே அலங்கரிக்கப்பட்டிருந்தது, அந்த அரண் மனைக் கொலுமண்டபம்.

ஆயினும் -

முத்தனைய விண்மீன்கள் எத்தனை கோடிதான் மோகப்புன்னகை வீசிடினும் நிலவில்லா வானுக்கு நெஞ்சினைக் குளிர வைத்திடும் பொலிவேது? - வலுவேது? பெருவழுதிப் பாண்டியன் இல்லாத அந்த எழிலார்ந்த பெருமண்டபமும் துயரமூச்சினைச் சுமந்திட்டதாகக் களையிழந்தே காணப்பட்டது.

விளக்கில்லா மாடம் என வெறுமையுற்றுக் கிடந்திட்ட அரியணை யைப் பார்த்திடும்பொழுது சிலருக்கு அழுகையே பீறிட்டுக் கொண்டு வந்துவிட்டது. மீண்டும் ஒரு புதிய விளக்கு அங்கே புத்தொளி வீசிடத் தான் போகிறது - அதற்காகத்தான் குழுமியிருக்கிறோம்... என்கிற உணர்வுகூட அவர்களை விட்டுச் சற்றே விலகிவிட்டது.

முதல் நிகழ்ச்சியாகக் கரிகாலனும் மற்றவர்களும் எழுந்து நின்று மறைந்த மாமன்னனுக்குச் சிலநொடிப் பொழுது தங்கள் இறுகி மூடிய உதடுகளால் இரங்கலைத் தெரிவித்துக் கொண்டனர்.

பிறகு சோழப் பேரரசன், அவையோர்களை முறைப்படி விளித்து வணக்கம் செலுத்திவிட்டுத் தன் உரையினைத் தொடங்கினான்:

...பாண்டியப் பெருநாட்டின் வரலாற்றிலேயே இன்று பொன்னாள் என்று சொல்வதைவிட ஒரு திருப்புமுனை நாள் என்று சொல்வதே சாலப் பொருந்துவதாகும். ஒரு நெருக்கடியான நிலையினை நேசக்கரங் கொண்டு - பாசப் புனல்கொண்டு - தணிக்கவும் தவிர்க்கவுமே நாம் இங்கே குழுமியுள்ளோம். காழ்ப்புக்கோ கசப்புக்கோ துளியேனும் இடமின்றி, எவ்வளவுக்கெவ்வளவு பொறுப்புடன் கடமை ஆற்றுகின் றோமோ அவ்வளவுக்கவ்வளவு என் இனிய நண்பருக்கு - உங்கள் மறைந்த பேரரசருக்கு - நாம் செய்திடும் சிறப்பு மட்டும் அல்ல; கைம் மாறும் ஆகும். நம்மை அச்சுறுத்துகின்ற இன்றைய அரசியல் சிக்கலை அவிழ்ப்பதற்கு அவரே ஓர் அருமையான கருவியையும் படைத்து விட்டுப் போயிருக்கின்றார். அதுதான் இந்த இறுதி முறி.

இதிலே வரையப்பட்டுள்ள ஒவ்வோர் எழுத்தினையும் நிறைவேற்றி டுவதே நமது நீங்காக் கடமை என்பதை நான் நினைவூட்டிடத் தேவை யில்லை. ஆனால் இது பெருவழுதிப் பாண்டியரால்தான் எழுதப்பட்டதா என்னும் ஐயப்பாடு சிலருக்கு எழுந்திடலாம். அதனை அகற்றிட வேண்டும் என்பதற்காக அவரோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த

அமைச்சர்கள், திருமுகம் வரைவோர் - அரையர் - முதலான அரசு அதிகாரிகள், அறங்கூறு அவையத்தினர், தளபதி நெடுமாறர், இளவரசர் இளம்பெருவழுதி ஆகியோரது பார்வைக்கு இந்த இறுதி முறி அனுப்பி வைக்கப்படுகின்றது. மேலோட்டமாக விழிகளை ஓடவிட்டாலே இதிலே உள்ள எழுத்துக்களும் சரி, கையொப்பமும் சரி, மன்னருடையவை தானா என்பதைக் கண்டுபிடிப்பது கடினம் இல்லை. பார்வையிட்ட பின்னர் எவருக்கேனும் மறுப்பு இருக்குமானால் உடனே தெரிவித்திடலாம்.''

- கரிகாலன் இவ்வாறு இயம்பியவாறே முதலில் தளபதி நெடுமாறனிடமே அந்த ஓலைச்சுவடிகளை அளித்திட்டார். அவற்றை அப்படியும் இப்படியுமாகத் திருப்பித் திருப்பிப் புரட்டிப் பார்த்திட்ட அவனுக்கு எத்தகைய மறுப்பினை எழுப்பிடுவது என்றே புரிந்திடவில்லைபோலும்! நொடிக்கு நொடி வெய்யில் பட்டு வெம்பிய மாம்பிஞ்சாக அவனது முகந்தான் வெளிறியதேயன்றி வாயிலிருந்து எந்த ஒரு வார்த்தையும் வந்திடவில்லை.

இயல்பாகவோ தூண்டப்பட்டோ, ஒருவருடைய உள்ளத்திலே பேராசைத் தீ என்னதான் கொழுந்துவிட்டு எரிந்திட்ட போதிலும், மனச்சாட்சி என்னும் கருங்கல் பாறையினை அதனால் கரியாக்கிட, இரையாக்கிட முடிந்திடுமா?

அத்தகைய ஓர் உண்மையினைத்தான் நெடுமாறனின் அமைதி, கூறாமல் கூறியது.

தான் பார்த்து முடித்திட்ட பிறகு அந்த ஓலைச்சுவடிகளை இளம்பெருவழுதியிடம் அவன் நீட்டினான்.

இளவரசனுக்கும் தன் தந்தையின் கையெழுத்தினைப் பற்றி எத்தகைய ஐயப்பாடும் எழுந்திடவில்லை. அமைச்சர்கள், அறங்கூறு அவையத்தார் முதலான மற்றையோரும் அது பெருவழுதியால் எழுதப்பட்டதே என்று உறுதி செய்தனர்.

இறுதிமுறி இவ்வாறு சோதனை செய்யப்படும் பொழுதே முத்துநகையின் நெஞ்சத் திரையிலே என்ன நிழலாடிற்று தெரியுமா?

''...என் தந்தையார் தந்திட்ட தகவலின் அடிப்படையில், ரோமாபுரி ஆட்சித் தலைவர் அகஸ்டஸ் அவர்களிடமும், கப்பலில் வரும்பொழுது செழியன் அண்ணாவிடமும் நான் தெரிவித்திட்ட அந்த இரகசியச் செய்திக்கு இந்த இறுதிமுறி ஒப்புதல் முத்திரை அளித்திட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்'' என்னும் கவலையே கொண்டாள் அவள்.

இறுதிமுறியினைப் பார்வையிட்டவர்களிடமிருந்து எத்தகைய எதிர்ப்பும் வராமற்போகவே கரிகாலன் எழுந்து, ''அறிவு சான்ற அவையோரே! இனி நானே இதனைப் படித்திடலாம் என்று கருதுகிறேன்'' என்றான்.

சோழப் பேரரசனின் மிடுக்கான குரல் சட்டென்று அந்த அரண்மனை மண்டபத்திலே அமைதியைக் கொணர்ந்திட்டது. எல்லாரும் செவிகளைத் தீட்டிக் கொண்டு உன்னிப்பாகக் கேட்டனர்.

பெருவழுதிப்பாண்டியர் தமது கடைசிக்கால விருப்பமாக மட்டுமின்றித் தம் வாழ்க்கை வரலாற்றின் சுருக்கமாகவும் அந்த இறுதி முறியினை எழுதியிருந்தார். சில குறிப்பிடத்தக்க பகுதிகள் மட்டும் இங்கே கொடுக்கப்படுகின்றன.

''-இளமைத் துடிப்பிலே நம்மை அறிந்தோ அறியாமலோ நாம் இடறி வீழ்கின்ற காலங்களும் உண்டு. அத்தகைய இடறல் என் வாழ்விலும் ஏற்பட்டிருக்கிறது. ஒருமுறை முத்துக் குளிப்பு விழாவினைக் கண்டுகளித்திடுவதற்காக நான் என் மனைவி பெருங்கோப்பெண்டுடன் கொற்கைப் பட்டினத்திற்குச் சென்றிருந்தேன்; அப்போது தென்வெள்ளாற்றங் கரையினை ஒட்டிய முத்தூர்க் கூற்றத்தினை ஆண்ட குறுநில மன்னனின் குடும்பத்தினரும் அங்கே வந்திருந்தனர். அவர்களிடம் என் மனைவிக்கு அளப்பரிய பாசம் உண்டாகிவிட்டது. எங்கள் சிறிய அரண்மனையிலேயே அவர்களும் தங்கிக்கொள்வதற்கு இவள் ஏற்பாடு செய்துவிட்டாள். அவர்களில் அந்தக் குறுநில மன்னனின் தங்கை முல்லைக்கொடியாள் ஒரு முழுநிலவு; கட்டழகியான அவள் ஒரேயொரு பெண் மகவைப் பெற்ற அளவிலேயே கைம்பெண்ணாகித் தான் பிறந்த அரண்மனைக்கே திரும்பி வந்துவிட்டாள். ஒரு நாள் மாலை, என் மனைவியும் மற்றவர்களும் கடற்கரைக்கு வேடிக்கை காணச் சென்றிருந்தனர். காய்ச்சல்கண்டிட்ட தன் பெண் மகவைக் கவனித்துக் கொண்டு, தனித்து இருந்திட்ட அத்தளிர்க் கொடியாளை நான் என் இளமைக்குப் பலியாக்கிக்கொண்டு விட்டேன். ஆனால், அதுகாறும் பிள்ளை ஏதும் இல்லாதிருந்த நான் அவளை இரண்டாந்தாரம் ஆக்கிக் கொள்வதாகவும் உறுதி அளித்திட்டேன். அதனை நம்பித்தான் அவளும் எனக்கு இணங்கினாள். ஆனால், என் மனைவியிடமோ மறுமணத்தைப் பற்றிய பேச்சையே என்னால் எடுத்திட முடியவில்லை. தானும் அப்போது கருத்தரித்திருப்பதாக அவள் கூறியதே அதற்குக் காரணம். பின்னர் முல்லைக்கொடியாள் தன் அண்ணியின் துணையோடு எவருக்கும் தெரிந்திடாமல் ஒரு முத்துக்குச் சிப்பியானாள். எனினும் கூட, அவமானத்தைத் தாங்கிட முடியாமலும், அண்ணன் என்ன செய்திடுவானோ

என்னும் அச்சத்தினாலும் அவள் எங்கோ ஓடி மறைந்து விட்டாள். அவளுக்குப் பிறந்த அந்த இரண்டு குழந்தைகளையும் தன்னுடைய கண்மணிகளாகவே கருதி வளர்த்திடலானாள் அக்குறுநில மன்னனின் மனைவி. இதற்கிடையில், முல்லைக் கொடியாளைக் கெடுத்தவன் நான்தான் என்கிற உண்மை அவளது அண்ணனுக்கு எட்டிவிட்டது.

என்மீது தீராப் பகைமை கொண்டுவிட்ட அவன் எப்படியேனும் என்னைப்பழி தீர்த்துக்கொள்ள முனைந்திட்டான். அந்த நேரத்தில், எனக்கு உறுதுணையாய் இருந்து உயிரைக் காப்பாற்றியவன் நெடுமாறனே. அந்த நன்றிக் கடனைக் கழித்திடவே அவனைத் தளபதியாக உயர்த்தி வைத்திட்டேன்!''

கரிகாலன் இவ்வாறு படித்திடும்பொழுதே நெடுமாறன் குறுக்கிட்டான்:

''பார்த்தீர்களா, பார்த்தீர்களா! நான் உங்களிடம் உரைத்தவையெல்லாம் உண்மையே என்பதற்குப் பாண்டிய வேந்தர் குறிப்பிட்டுள்ள இந்த நிகழ்ச்சியினை விட வேறு என்ன ஆதாரம் வேண்டும்?'' என்று உற்சாகம் பொங்கிடக் கூவினான்.

''சற்றுப் பொறுங்கள் தளபதியாரே, இன்னும் எஞ்சியுள்ள சுவடிகளையும் படித்து விடுகிறேன். பிறகு நீங்கள் உங்கள் கருத்தினைத் தெரிவித்திடலாம்'' என்ற அவர், மேலும் தொடர்ந்திட்டார்.

''காலப்போக்கிலே, முத்தூர்க்கூற்றக் குறுநில மன்னனின் சதி என்னைச் சாய்த்திடவில்லை; அவனையே மாய்த்திட்டது. என்னுடைய படைவீரர்களால் அவனுடைய கொற்றம், கொடிமரம், அரண்மனை, அந்தப்புரம் எல்லாமே தகர்த்தெறியப்பட்டன. அந்த அமளியிலே தப்பியவர்கள் முல்லைக்கொடியாளின் பிள்ளைகளே! ஆனால், அந்த இருவரும் திசைக்கு ஒருவராகத் தெறித்து ஓடிவிட்டனர். வயதில் பெரியவளான அந்தப் பெண் தங்கள் கூற்றத்தினை அடுத்த 'மிழலைக் கூற்ற'த்தினை ஆண்டு வந்த இருங்கோவேளிடம் அடைக்கலம் புகுந்து விட்டாள் என்பதனை அப்போதே நான் கேள்வியுற்றேன். அவள்தான் பின்னர் இருங்கோவேளின் பட்டத்தரசியான பெருந்தேவி ஆனாள். அவளுடைய தம்பியும் முல்லைக் கொடியாளுக்கும் எனக்கும் பிறந்தவனுமான சிறுவன், தன் தமக்கை என்ன ஆனாள் என்பதே தெரியாத நிலையில் ஒரு மீனவர் குடும்பத்தினால் காப்பாற்றப் பட்டிருக்கிறான்; அவனே பாண்டிய நாட்டுப் படைவீரனாக மாறிய செழியன்!''

- சோழப் பேரரசன் இவ்வாறு படித்திடும்பொழுதே மண்டபத்தில் குழுமியிருந்த அத்தனை பேருடைய உடலுமே புளகமுற்றுச் சிலிர்த்திட்டது.

அதே சமயம் தாமரையின் நினைவு வானிலும் பழைய நிகழ்ச்சி யொன்று மின்னலாய்ப் பளிச்சிட்டது.

தன் அண்ணன் இருங்கோவேளின் இருட்சிறையிலே செழியன் சிக்கியிருந்த வேளையிலே, கரிகாலனைக் கட்டாரியால் மடித்திடச் சென்ற பெருந்தேவி, தானே மடிந்திட்ட செய்தியினைக் கேட்டவுடனே செழியன், 'அக்கா !அக்கா!' என்று அலறினான் அல்லவா? அதற்கான விளக்கத்தினை கேட்டபொழுது, 'தாமரை! என்கதையில் நீ இதுவரை கேட்டறியாத புதுமையும் பயங்கரமும் நிறைய உண்டு. தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்யாதே. ஒரு காலம் வரும். அந்தக் காலம், நாமிருவரும் பேசக்கூடிய சூழ்நிலையொன்றை வகுத்துத் தருமானால், அப்போது விளக்குகிறேன். உன் அண்ணி என் அக்காள் என்பது மட்டும் உண்மை...!' என்று அவன் கூறியது அவளுடைய காது மடல்களிலே மீண்டும் மீண்டும் இப்போது வந்து எதிரொலித்தது.

...அப்படியானால், எங்கள் மரமாளிகைக்குச் சிறைப்பட்டு வந்த செழியனைத் தன் தம்பிதான் என்று அண்ணி ஏன் கூறிடவில்லை? இவரும் தம் தமக்கை அரசியாக இருந்திட்ட பொழுது அப்படியெல்லாம் ஏன் சாதாரண மறவராக அவதிப்பட்டிருக்க வேண்டும்?' என்று தாமரை யால் எண்ணாமலும் இருந்திட முடியவில்லை. ஆனால் அவளது ஐயப்பாடுகளுக்கு அவளுடைய மனமே மறுமொழி அளித்திட்டது.

...சின்னஞ்சிறு வயதிலே எப்போதோ தன்னை விட்டுப் பிரிந்திட்ட தன் தம்பியை, வளர்ந்துவிட்ட நிலையில் அத்துணை எளிதாக அண்ணி யால்தான் எப்படி அடையாளம் கண்டிருக்க முடியும்? மேலும் நோயாளி யாகப் பெரும்பாலும் படுக்கையிலே கிடந்திட்ட அவளுக்குச் சிறைப்பட் டிருந்த செழியனைத் தனித்துச் சந்தித்து உரையாடிடும் வாய்ப்புத்தான் ஏது?.. செழியனுக்கும் பல ஆண்டுகள் கழித்துத் தன்னை வளர்த்து ஆளாக்கிய அந்த மீனவக் குடும்பத்தாலோ, பிறராலோ இருங்கோ வேளின் மனைவி தன் தமக்கைதான் என்கிற உண்மை மட்டும் தெரியவந் திருக்கலாம். ஏழை மீனவப் பையனாகவே வறுமையில் வாடி பழக்கப் பட்டு விட்டதால் தாழ்வு மனப்பான்மைக்கு இடம் கொடுத்துவிட்ட அவனுக்கு அரண்மனைக்காரர்களிடம் உறவு கொண்டிடும் ஆசையினை அவனுடைய தன்மான உணர்வே தடுத்திருக்கலாம். அத்தோடு, பாண்டிய வேந்தரின் நம்பிக்கைக்குரிய படைவீரனாகத் தான் மாறி விட்ட பிறகு, அவருடைய நண்பரான கரிகாலரின் உயிரையே பறித்திடச் சதி புரிந்து, நாடோடி வாழ்க்கை வாழ்ந்திட்ட என் அண்ணியிடம் வந்து பழைய உறவு முறைக்குத் தான் உயிர் கொடுக்க முனைவதால் பாண்டிய மன்னரின் நல்லெண்ணத்தை இழந்திட நேருமோ என்னும் அச்சத்தாலும் செழியன் ஒதுங்கி இருந்திருக்கலாம்'

- இவ்வாறெல்லாம் முத்துநகையின் திட்டப்படி ஜூனோ வடிவத்திலுள்ள தாமரை சிந்தனை அலைகளிலே மிதந்திடும்பொழுதே, இன்னொரு முக்கியமான உண்மையினைப் பெருவழுதியின் இறுதி முறியினின்றும் அவிழ்த்து விட்டான் கரிகாலன்.

கரிகாலன் இறுதி முறியினைத் தொடர்ந்து படித்தான்;

''அங்ஙனமாயின் இளம்பெருவழுதி யார் என்கிற கேள்வி எழுந்திடு வது இயற்கை. அவன் எனக்குப் பிறந்திட்ட மகனே அல்லன். இந்தப் பேருண்மையினை - அவன் கொற்கைப் பட்டினத்து இளவரசனாக ஆக்கப்பட்ட பின்னர் - தான் இறந்திடும் தறுவாயில்தான், என் மனைவி பெருங்கோப்பெண்டு என்னிடம் தெரிவித்தாள். பிள்ளை பெறாத மலடி என்னும் காரணம் காட்டி, நான் எங்கே இரண்டாந்தாரமாக அந்த முல்லைக்கொடியாளையோ வேறு எவளையோ மணந்திடு வேனோ என்னும் அச்சங்கொண்டிட்ட அவள், தான் கருத்தரித் திட்டதாகப் பொய்யே புகன்றிருக்கிறாள். தாழ்த்தப்பட்ட குடியொன்றின் பஞ்சம் பட்டினியைப் பயன்படுத்தி நிறையக் கழஞ்சுப் பொன்களை அவர் களுக்கு வாரி வழங்கி இளம்பெருவழுதியை எனக்குத் தெரியாமல் தத்து எடுத்துத் தன் பிள்ளையாகவே வளர்த்திருக்கிறாள் அரசி. சாவினைத் தழுவிடும்பொழுது, அவளது மனச்சாட்சி விழித்துக் கொண்டு உண்மை களைக் கக்கிட வைத்துள்ளது. செழியனைப் பற்றிய உண்மைகளை அவனைப் பாசத்தோடு வளர்த்திட்ட மீனவ மூதாட்டியே என்னிடம் வந்து வெளிப்படுத்திவிட்டாள். அதுவும் அண்மைக் காலத்தில்தான், நிலைமைகள் இவ்வாறிருக்க நெடுமாறனோ எனக்குப் பின்னர், தானே அரியணை ஏறிட வேண்டும் என்னும் ஆசையினை வளர்த்துக் கொண்டு, அதனை நேரடியாகவும் என்னிடம் கூறிவிட்டான். அவன் இச்சைப்படி இறுதிமுறி - எழுதக்கூடாது என்பதற்காகவே, என் வலக்கரம் முடக்குவாத நோய்க்கு இலக்காகிவிட்டதாக நான் நடித்திட நேர்ந்திட் டது. உண்மையில் என்னை வாட்டியது எலும்புருக்கி நோய் ஒன்றுதான். மேற்கூறியவற்றால், இந்த பாண்டியநாட்டின் மன்னனாக எனக்குப் பின்னர் பட்டஞ் சூட்டிக் கொள்ளும் உரிமை எனக்கும் முல்லைக்கொடி யாளுக்கும் பிறந்திட்ட செழியனுக்கே உண்டு என்பதனை இதன் மூலம் தெளிவுபடுத்திட விழைகின்றேன்...''

-கரிகாலன் இவ்வாறு இறுதிமுறியினைப் படித்து முடித்திடப் போகும் சமயம் தளபதி நெடுமாறன் எழுந்து குறுக்கிட்டான்;

''செழியனைப் பற்றிப் பெருவழுதிப்பாண்டியர் குறிப்பிட்டுள்ளவை எல்லாம் வெறுங்கதைகளாகத்தான் தோன்றுகின்றனவே அன்றி

உண்மையாக இருக்கக்கூடும் என்று என்னால் நம்பவே முடியவில்லை!'' என்றான்.

உடனே,''இளம்பெருவழுதி, இறந்த பாண்டிய வேந்தருக்குப் பிறந்தவர் இல்லை என்பதை மட்டும் நம்புகிறீர்களா?'' என்று 'கணீர்' என்று ஒரு குரல்எழுந்து அவனைத் தாக்கிற்று.

''அதனை நான் நம்புகிறேன்'' என்றான் நெடுமாறன்.

''ஏன், அது உங்களுக்குச் சாதகமாக இருப்பதனாலா?''

''இல்லை; இளம்பெருவழுதியை பெற்றெடுத்த தந்தையே என்னிடம் வந்து உண்மையைக் கூறியிருக்கிறார்''

சில விநாடிகள் அந்தக் கொலுமண்டபத்திலே பயங்கரமான இடுகாட்டு அமைதியே நிலவிற்று.

பின்னர், வெள்ளைச் சேலை அணிந்து தன் தலையினை முக்காடிட்டிருந்த மூதாட்டி ஒருத்தி எழுந்து நின்றாள். அவளைக் கண்டதும் அமைச்சர்களுக்குப் பின்புற வரிசையில் அமர்ந்திருந்த செழியன் அவள் அருகினில் ஓடினான்;

''நீ ஏனம்மா இந்தத் தள்ளாத வயதிலே நம் ஊரை விட்டு இவ்வளவு தூரம் வந்தாய்?'' - என்று பரிவோடு கேட்டு அவளது கரத்தினைப் பற்றினான்.

''உன்னைப் பற்றிய உண்மைகளை இங்கே உரைத்திட வேண்டாமா? அதற்குத்தான்!'' என்று தன் பொக்கை வாயினைத் திறந்து அந்த மூதாட்டி நகைத்திட்டாள்.

''உன்னுடைய வார்த்தைகள் எல்லாம் இங்குள்ள பெரிய மனிதர்களிடம் எடுபடுமா? உன்னை யார் நம்பிடப் போகிறார்கள்?''- செழியன் இவ்வாறு சலித்தாற்போல் கூறியது, நெடுமாறனைத் தவிர மற்ற எல்லோரிடமும் ஒருவித உருக்கத்தினை விளைத்திட்டது.

''என்ன செழியா! அப்படிச் சொல்லி விட்டாய்? ஆமாம், அந்த மூதாட்டி யார்?'' என்று வினவினான் கரிகாலன்.

''என்னுடைய தாய்!'' என்றான் செழியன்.

''சோழப் பேரரசே!'' இவன் புகல்வது பொய். நான் இவன் தாய் இல்லை; வளர்ப்புத் தாய்தான்!'' என்றாள் அக்கிழவி.

''அப்படியா? சரி. பெருவழுதிப் பாண்டியர் எழுதி வைத்துச் சென்றதைச் சற்றுமுன் படித்தேனே. அதனைக் கேட்டீர்களா''

''ஓ! நன்றாகக் கேட்டேனே! கண்கள் தான் எனக்குப் பஞ்சடைந்து விட்டனவே தவிரக் காது இன்னும் செவிடாகி விடவில்லை. பாண்டிய

வேந்தர் எழுதியிருப்பது வரிக்கு வரி - எழுத்துக்கு எழுத்து உண்மை. இந்தச் செழியன் பிறந்திட்டபொழுது இவன் தாய் முல்லைக்கொடி யாளுக்குப் பிள்ளைப்பேறு பார்த்தவளே நான்தான்! முத்தூர்க் கூற்றத்துக் குறுநில மன்னனாகிய இவனுடைய அம்மான் இறந்திட்ட பிறகு, திக்குத் தெரியாமல் தேம்பி அழுதிட்ட இவனை என்பிள்ளையாகவே வளர்த் திட்டவளும் நான்தான்! என்னுடைய வறுமைநெருப்பு இவனையும் ஏன் வாடிட்ட வேண்டும் என்பதற்காக அந்த நாளில் இதே அரண்மனை அந்தப்புரத்திற்கு வந்து, அரசி அவர்களைச் சந்தித்து 'மன்னனின் மகன் என் மண் குடிசையில் வாழ்கிறான்; அவனைக் கொண்டு வந்து இங்கே விட்டுவிடுகிறேன்' என்று கூறியவள் நானே! பெருவழுதியின் மேலிருந்த பாசப்பெருக்கினால் அவனுக்குப் போட்டியாகச் -சற்று முறைதவறிப் பிறந்திட்ட செழியனை ஏற்றுக் கொள்ள உடன்படாததால், அவனை நன்றாக ஆளாக்கிப் பாண்டிய நாட்டுப் படையிலே சேர்த்துவிட்டவளும் நான்தான். கரிகாலனின் வைரியான இருங்கோவேளைத் தானே கொன்றிடுவதற்குச் சூளுரைத்துக் கொண்டிருந்த இவன், எங்கே அவன் தன் மைத்துனன்தான் என்பதை அறியாமல் தன் கையாலேயே அவனைக் கொன்று விடுவானோ என்று அஞ்சி, பெருந்தேவி இவனுடைய தமக்கைதான் என்கிற உண்மையினை வெகுகாலம் கழித்து அவனிடம் வெளிப்படுத்தியவளும் நான்தான். அதேசமயம், பாண்டிய மன்னர்தான் இவன்தந்தைஎன்று சொன்னால் தன் தாயைக் கெடுத்தவர் என்கிற ஆத்திரத்தில் அவரை இவன் வேம்பாக வெறுத்திடுவானோ என்று எண்ணி, அந்த உண்மையை இதுகாறும் இவனிடம் சொல்லாமல் மறைத்தவளும் நான்தான். ஆனால் கடைசிக் காலத்தில் பாண்டிய வேந்தரிடம் வந்து இவனுக்காக வாதிட்டவளும் நான்தான்! ஆகவே, செழியன்தான் இந்த நாட்டின் மன்னனாக வேண்டியவன். இவனுக்குத் தான் மணிமுடி சூட்டிட வேண்டும் என்று உங்கள் எல்லாரையும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.''

மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கிட, அந்த மூதாட்டி இவ்வாறு மொழிந்து முடித்திட்டது தான் தாமதம்!

''பாண்டிய மன்னர் செழியன் வாழ்க! ரோமாபுரிப் பாண்டியன் செழியன் வாழ்க!'' என்னும் வாழ்த்தொலிகளாலும் கரவொலிகளாலும் அந்த அரண்மனைக் கொலு மண்டபமே அதிர்ந்திட்டது.

உற்சாக வெறியினால் உந்தப்பட்ட இளைஞர்கள் பலர் செழியனை நோக்கி ஓடிச்சென்று அவனை அப்படியே அலாக்காகத் தூக்கி தலைக்கு மேல் வைத்துக் கொண்டு கூத்தாடினர். பின்னர் அரியணைக்கு அருகே அவனைப் பொத்தென்று கொண்டு போய்ப் போட்டனர்.

**துணிவுக்குப் பெயர் பெற்றோன் - துயர் உறுவார் தமைத் தூக்கும்**
**கனிவுக்குப் பெயர் பெற்றோன் - கற்றடங்குஞ் சான்றோரின்**
**பணிவுக்குப் பெயர் பெற்றோன் - பாண்டிவள நாடாளும்**
**மணிமுடிக்கு உரிமை பெற்றோன் - மறத்தமிழன் செழிய னன்றோ!**

-அவனோ,

அரியணைதான் கிட்டிவிட்டதே என்று உடனே ஓடிப்போய் அதிலே அமர்ந்திடவில்லை; பதவிச் செருக்கோடு தலை நிமிர்ந்திடவும் இல்லை. தனக்கு இரு புறங்களிலும் எதிரிலேயும் உள்ள பெரியார்களையும், பேரறிஞர்களையும், பொதுமக்களாகிய உடன்பிறப்புகளையும் நோக்கிப் பணிவோடு வணக்கம் புரிந்திட்டான்; பின்னர், தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு இவ்வாறு உரைக்கலுற்றான்;

''பெரியோர்களே, நண்பர்களே! பெருவழுதிப்பாண்டியரின் பேரன்பும், உங்கள் அத்தனை பேருடைய பாசவெள்ளமும் என்னைப் பேசவிடாமல் திணற அடிக்கின்றன; இன்பவேதனையிலே என் இதயத்தை விம்ம வைக்கின்றன.

பெரியோர்களே! நான் மணிமுடியினைத் தரித்துத்தான் ஆக வேண்டும் என்பதில்லை. சாதாரண மனிதனாக நடமாடியும் எத்தனையோ அருஞ்செயல்களை எல்லாம் இயற்றிடலாம். ஆம்; அந்த முடிவுக்குத் தான் நான் வந்துவிட்டேன். இதுகாறும் கொற்கைப் பட்டினத்து இளவரசராகப் பட்டம் சூட்டப் பெற்றவர்களே இங்கே பாண்டிய வேந்தராகக் கொலுவேற்றிருக்கிறார்கள். பெருவழுதிப் பாண்டியர் என்னதான் எனக்காக எழுதியிருந்தபோதிலும், அந்த அருமையான மரபினை நான் அழித்திடலாமா. அதன் மூலம், இளம்பெருவழுதிதான் மறைந்த மாமன்னரின் மகன் என்றும், அதனாலே அவர்தான் அடுத்த பேரரசராக அரியணை ஏறிடுவார் என்றும் பெரும்பாலான பொதுமக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையை நான் தகர்க்கலாமா? இளவரசர் அவர்களின் ஏக்கத்திற்கும் நான் இடம் அளித்திடலாமா? ஆகவே அவரே இப்போது மணிமுடியினைச் சூடிக் கொள்ளட்டும். ஓர் எளிய தொண்டனாக அவருக்கு எல்லாவகையான ஒத்துழைப்பும் நல்கிடுவதற்கு நான் என்றுமே காத்திருக்கிறேன். என்னுடைய இந்த முடிவிலிருந்து மாறிடுமாறு வற்புறுத்த வேண்டாமென்று சோழப் பேரரசர் அவர்களையும், மற்ற பெரியவர்களையும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.'

- என்று உறுதியான குரலில் உரைத்திட்ட செழியன், அரியணை மேடையினைவிட்டுக் கிடுகிடுவென்று கீழே இறங்கித் தன் இருக்கையினை நோக்கி நடந்திட்டான்.

அவனுடைய அந்தத் துறவுப் போக்கினைக் கண்டு அரண்மனை மண்டபமே திடுக்கிட்டுப் போய் ஆறாத்துயரில் ஆழ்ந்துவிட்டது. பதவி மோகத்தினைத் தூசென உதறித் தள்ளிடும் அவனுடைய தன்னல மறுப்பு - திண்ணிய உள்ளம் - திடீரென்று அவனுடைய புகழொளியை விண்ணளவு வீசிடச் செய்துவிட்டது.

கரிகாலனும் காரிக்கண்ணனாருமோ பொதிகை மலையினும் உயர்ந் துவிட்ட செழியனின் விரிந்த நெஞ்சினுக்குத் தலை வணக்கம் செய்கின் றவர்களைப்போல அப்படியே வாயடைத்துப் போய்விட்டனர்.

'மலைவாழைத் தமிழுக்கும்
மாண்புமிகு திராவிடர்க்கும்
தலைகொடுக்கத் தயங்காதவன்;
தாரணியின் புகழ் சேர்த்தான்;
கொலுவேறும் வாய்ப்பிருந்தும்
கொள்கையொன்றே உயிர் மூச்சாய்
நிலைகுலையா நெஞ்சோடு
நெடும்பயணம் தொடர்ந்திடுவான்;
பெரியாரைத் துணைக்கொள்வான்;
பேரறிஞர் வழிசெல்வான்
பெருமறவன் செழியனைப்போல்
பிறிதொருவன் காண்போமோ?'

- என்று நம் 'ரோமாபுரிப் பாண்டியன்' அருஞ்செயலைக் கேட்டுப் பாண்டிய மண்டலம் மட்டுமின்றித் தமிழகம் முழுவதுமே அகங் குளிர்ந்து மனம் மகிழ்ந்து - வாழ்த்துப்பா இசைத்திட்டது.

பாண்டிய வேந்தனாக ஆவதற்கு முன்பே பாவேந்தனாகப் புகழ் குளித்திட்ட இளம்பெருவழுதியோ உணர்ச்சிப் பிழம்பாகவே மாறி, செழியனின் பரந்த உள்ளத்தினைச் சிறந்த நயத்துடன் உள்ளடக்கி, அடியிற் காணும் ஓர் அற்புதமான - ஆழ்ந்த தத்துவம் உள்ள - அழ கெலாம் ஒளிர்கின்ற - ஒரு தமிழ்ப்பாவினைப் பாடிக் களித்திட்டான். அதனைச் செழியனின் காலங்கடந்த புகழ்க் கோவிலுக்குக் காணிக்கை என்றும் நாம் போற்றிடலாம்.

'உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமிய ருண்டலும் இலரே; முனிவிலர்
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழ் எனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்

உலகுடன் பெறினுங்கொள்ளலர்; அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே!'

(புறநானூறு - 182)

வாழ்க 'ரோமாபுரிப் பாண்டியன்' புகழ்!

வணக்கம்.

